வோம். இந்தச் சக்தி பரம ஹம்ஸருள் நிலவியது; அருட்சோதி வள்ளலாரிடம் பாடியது; விவேகானந்தரிடம் கர்ச்சித்தது. ஆனால் இந்தச் சக்தி இன்னும் தனது வேலையை நிலையாகச் செய்யத் தொடங்கவில்லை. ஒவ்வொருவரும் அதைப் பெற்று இன்புற வேண்டும். எல்லாரும் பரம ஹம்ஸர்களாக வாழ வேண்டும். மொட்டை யடித்துக் காவி யுடுத்தித் திருமடங்களி லிருப்பதினால் மட்டும் பயனில்லை. உலகவாழ்வின் ஒவ்வோரணுவிலும் அந்தச் சக்தி நிலவச் செய்தல்வேண்டும். உழவு, நெசவு, அச்சு, விற்பனை, ஆட்சி, புலமை எல்லாம யோகமாக வேண்டும். இதுதான் உலகம் புத்துயிர் பெற்று வாழும் வழி. இது தான் மேற்கையும் கிழக்கையும் இணைக்கும் வழி. **மேனாட்டின் சடவிளக்கமும், பாரதநாட்டின் ஆன்ம விளக்கமும் திருமணம் புரிந்து சக்தியும் சிவமும் போல் பொருந்த வாழும் இரகசியம் இதுவே!**

ஆனால் உலகிலேயே கடவுள் வாழ்வைக் கொணர மனிதனின் மனவலிமை மட்டும் போதாது; ஹடயோகத்தால் உடலுயிர் வலிமை யெய்தும்; ராஜ யோகத்தால் மனவலிமையும் குண்டலி சக்தியும் பிறங்கும். இது போதாது; இந்த யோகத்தால் உலக வாழ்வனைத்தையுமே யோகமாக்க முடியாது. பக்தி, ஞான கர்ம யோகங்களும் தற்காலத்தில் உலகைத் தப்பி விண்ணிற் குதிக்கும் பரலோக விருப்புடனேயே கருதப்படுகின்றன. இவ்வுலகில், எல்லாத் தொழில்களையும், எல்லா மக்கள் வாழ்வையும் யோகவுணர்வில் ஊன்றி, வானுலகின்பத்தை உள்ளும் புறமும் நாட்ட வேண்டும். உடம்பினில் உத்தமனைக் காணவேண்டும் என்று உறுதிகொள்ள வேண்டும். அதற்கு வேண்டியது தீவிரமான கடவுளன்பு, உண்மையான ஆர்வம், முற்றிலும் அகந்தையை வேரோடு களைதல், ஆண்டவனுக்கு மீளாவாளாகச் சரணடைந்து விடுதல், அவனன்றி யானில்லை, எதுவுமில்லை, அவனிச்சை அனைத்தையும் நடத்துகிறது என்று அவனைத் தூய வெள்ளத்தோடன் தியானித்தல். (தினம் ஒருமணி நேரமாவது தனியிடத்து அமைதியாயிருந்து தியானித்தால் நாளுக்கு நாள் நலமெய்துவாம்;) செய்யும் தொழில்கள் யாதாயினும், அதன் பலனில் பற்றறல், அத்தொழிலையும் அவனுக்கே நிவேதித்தல், அனைத்துயிர்களையும், அவன் மயமாகக் காணல், அருள் எதிலும் பாசவுறவு கொள்ளாதிருத்தல், வீண்மை பொழித்தல், அடக்கமும் அமைதியும் பழகல், நல்லோர் கூட்டம், நல்லோர் பணி, உலகம் யாவும் வாழ்வடைதல் வேண்டும்.

அறமும், அறவோர், அறச்செயலும் பூவில்
உறவுற்று வாழ்க வுவந்து

என்று எப்போதும் எல்லோர் நலத்திற்காகவும் ஆண்டவனை ஆர்வமுடன் வழுத்துதல்—இவையே.

உலகில் வேற்றுமை, இரோமை, இடர், துயர் எல்லாம் எதனால் உண்டாவன? அகங்காரத்தால்—நான், எனது, எனக்கு என்னும் அகங்காரத்தால். மனமே இவ்வகங்காரத் தாயு. வேற்றுமை யல்லலுக் கிடமான இம்மனத்தையும் நாம் ஆண்டவன் கையிற் கொடுத்து விடுவோம். அவன் அதன்மேல் திருநடமாடி அதன் கொழுப்பை யடக்கிவிடுவான்.

மனிதன் மகேசுவரன். மனிதன் எப்படி மகேசுவரனாவான்? எல்லையற்ற காலமாக எத்தனையோ ஆலை, வீரியமொருவாக மாறி மாறி இப்போது மனிதனானான்.

“புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய்மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்”

என்றபடி எத்தனையோ பிறப்புப் படிகளைத் தாண்டித் தாண்டி மனிதனாகிறான். ஒவ்வொன்றிலும் ஈசுவர சைதன்யமும, கடவுளுணர்வும் சிவசக்தியும் உள்ளன; அஃதின்றி எதற்கும் நிலைப்பில்லை. தனது சக்தியின் மூலம் ஒரு பரம்பொருள் அனைத்துமாக விளங்காவிடில் தோற்றமுமில்லை; மாற்றமுமில்லை. அந்தச் சக்தி கல்லில் உறங்கு

கிறது; புள்ளில் துளிர்க்கிறது; விலங்கில் ஐயறிவுடன் விளங்குகிறது; மனிதனில் ஆறறிவுத் தெளிர்கிறது. அறிவின் விளக்கமே அதன் விளக்கப் பெருக்கம். மனிதன் இப்போது மனதின் எல்லையில் வந்துளான்; மனம் பேதபுத்தியுள்ளது; மனக் கண்ணாடியின் மூலம் மனிதன் உலகைக் காணலால், அது வேற்றுமைக் காடாகத் தோன்றுகிறது. மனதிற்கு மேலுள்ளது விஞ்ஞான வுணர்வு. இதுவே அருட்சோதி வள்ளலார் புகன்ற அருட்பெருஞ்சோதித் தனிப் பெருங்கருணை. இதையே அவர் அனுபவித்தார். இவ்வனுபவமே உலகுயிர்களனைத்தையும் ஒன்றுபடுத்தவல்லது; இதுவே ஏறாத மலை; இதன்மீதே கிறிஸ்துநாதர் புகன்ற வானரசுள்ளது. அதை நமது யோகிகள் **சச்சிதானந்தம், சதாசிவம், துரிய வளநாடு** என்பர். இதிலேயே சோதி நடராசன் எல்லாத் தொழில்களையும் நடத்தி விளங்குகிறான்; இவ்வரசைப் பெற்றாலே உண்மையறிவின் பயனிலகும். தன்னுள் அதைப் பெற்றால், தன் வாழ்வில் பெறலாம். உலகமனைத்தும் அவ்வாறே முயன்று பெற்றால் உலகே சோதி வளநாடாகும். இவ்வளநாட்டின் பெருமையைக் கண்டே வள்ளற் பெருமான் வேதவேதாந்தத் திருமறையான தனது அருட் பெருஞ்சோதி யகவலில் பல யோக ரகசியங்கள் இலக விரித்துள்ளார். அதுவே சுத்த நிலையம்; சித்த நிலையம்; சக்தி நிலையம்; சத்திய ஞான நிலையம்; சாவறு நிலையம்; நோவறு நிலையம்.

"சோதிமலை மேலீட்டி தூய திருவமுதம்
மேதினிமேல் நானுண்ண வேண்டினேனே-
[ஓதரிய
ஏகா அனேகா எழிற்பொதுவில் வாழ்ஞான
தேகா கதவைத் திற."

என்று விஞ்ஞானக் கதவைக் கடவுளார்வத்துடன் தட்டித் திறந்து வள்ளலார் அனுபவித்த சுதந்திர சமரச சுகநிலயம் அதுவே! சாதி, சமயம் மேல்வருணம், தோல்வருணம், சாத்திரம், கோத்திரம், நீ, நான், எனும் வேற்றுமை யனைத்துமின்றி எல்லாம் இறைவனே, அவனுக்கே யான் உரிமை, எனக்கு எச்சுதந்திரமுமில்லை,

"சுதந்திர முனக்கே கொடுத்தனம் உனது
தூயநல் லுடம்பினிற் புகுந்தேம்!
இதந்தரும் உளத்தில் இருந்தனம் உனை
இன்புறக் கலந்தனம் அழியாப் [யே
பதந்தனில் வாழ்க அருட் பெருஞ்சோதிப்
பரிசுபெற் றிடுகபொற் சபையுஞ்
சிதந்தரு சபையும் போற்றுக வென்றாழ்
தெய்வமே வாழ்கநின் சீரே!"

என்று அடைக்கலமாவதொன்றே வழி! கடவுட் சக்தியே காக்க வல்லது; இடர் நீக்கவல்லது; இன்பம் ஆக்கவல்லது; துவக்கனலை ஊக்கவல்லது! உலகின் இருளைப் போக்கவல்லது! அதனாலேயே யேசு பெருமான், **"கடவுட் பூரணம் பெறுக! வானரசடைக!"** என்று அழுந்தக் கூவினார். அந்த யாழொலியை மேளொடு போர்ப்பறையால் மூடிற்று! அமைதி தேடி உலகெலாம் பாரத சக்தியை யடையுங் காலம் வந்துவிட்டது! பாரதசக்தி உலகனைத்தையும் யோக சக்திக் கோயிலாக்கும் பொன் யுகம் புன்முறுவல் காட்டுகிறது! அதுவே நவசக்தி; வாழ்வை யோகமாக்கி, உலகை விண்ணாக்கி, மனிதனை அமரனாக மாற்றும் பொன்னொளிர் விஞ்ஞான சக்தியே நவயுக சக்தி, சத்ய யுகசக்தி, அந்தி சக்தி யுதயத்திற்கே உலகின் நள்ளிருள் போர், போட்டி, வேற்றுமை யிடர்களுக்கு தள்ளாடிச் செல்கிறது! அந்தச் சக்தி யுதயமாவது உறுதி; யோகியருளத்தில் அது உதித்துவிட்டது! உலகமென்பது யோகக் காட்சியே (**The turn of existence is the Vision of the Seers**) புலவர் காட்சியே புவி வாழ்வாகும்! ஆதலின் எழுமின், அறிமின், உழைமின், தழைமின்!

# நாட்டில் வழங்கும் பழங் கதைகள்

[இலக்கண விளக்க ஆசிரியர் பரம்பரை - திரு. சோமசுந்தர தேசிகர்]

ஒவ்வொரு நாட்டிலும் சிறுவர் சிறுமியர் பொருட்டு நயமும் பயமும் நன்னெறியு முடைய பல கதைகள் வழங்குகின்றன. பொதுத் தன்மையுடைய ஒரே செய்தி பலவிதமாகப் பல நாடுகளிலும் வழங்கி வருகின்றது. ஐரோப்பிய நாடுகளில் அவற்றைச் சேர்த்துப் புத்தக உருவில் வெளியிட்டிருக்கின்றனர்.

நம் நாட்டில் அப்படிப்பட்ட சிறுவர் கதைகள் பல உண்டாயினும், அவை அச்சு வாகன மேறியதாகத் தெரியவில்லை. காலஞ்சென்ற பண்டித நடேச சாஸ்திரிகள் **தெக்கணத்துப் பூர்வகால கதைகள்** என்றொரு புத்தகம் வெளியிட்டிருப்ப துண்மையே யாயினும் அப் புத்தகம் எவரும் எளிதிற் கண்டு பெற்றுப் படிக்கத்தக்க நிலையிலில்லை.

இக் கதைகளெல்லாம் நாட்டிலே நீண்ட நாளாக வழங்கினும் அவை எவ்வாறுண்டாயின வென அறிதற்குரிய நிலை கிட்டவில்லை. வடநாட்டில் புத்தமதத்தினருள்ளே புத்தரெடுத்த பல பிறவிகளைக் கூறும் புத்த ஜாதகக் கதைகள் என ஒரு கதைத்தொகுதி வழங்குகின்றது. அக்கதைகளுள் சில இந் நாட்டில் வழங்குங் கதைகளோடு ஒருவாறு ஒற்றுமையுடையனவாகக் காணப்படுகின்றன. அவற்றுள் சிலவற்றை யீண்டு வரைகிறேன்.

முதலில் ஜாதகக் கதைகளைக் குறித்துப் பின்னர் நாட்டுக் கதைகளை எழுதுவேன்.

## சீகால ஜாதகம்

காசியிலே பிரமதத்த னென்றொரு அரசன் அரசாண்டுகொண்டிருந்தான். அவன் அரசாளுகையில் போதி சத்துவர் சிங்கவுருவுடன் இமயமலைச்சாரலில் வாழ்ந்துவந்தார். அவரோடு பல ஆண் சிங்கங்களும் ஒரு பெண் சிங்கமும் பிறந்தன. இவைகளிருந்தவிடத்திலே ஒரு நரி, கண்ணுடிக் குகையிலே வாழ்ந்துவந்தது. நாளடைவில தாய்ச் சிங்கமும் ஆண் சிங்கமும் இறந்துபட்டன. மற்றைய இளஞ்சிங்கங்கள் தம் தங்கையைக் குகையில் வைத்துவிட்டு இரை தேடச் செல்வது வழக்கம். கிடைத்த இரையில் சிங்கங்க ளெல்லாம் ஒரு பகுதியைப் பகுத்துத் தம் தங்கைக்குக்கொண்டுவந்து கொடுக்கும். அவ்வாறிருக்குநாளில் ஒருநாள் கண்ணுடிக் குகையிலிருந்த நரி இளம்பெண் சிங்கத்தைக் கண்டு, அதனழகில் ஈடுபட்டது. நுழைவாயிலில் நின்றுகொண்டு தன்னுடைய பிரதாபங்களை யெல்லாம் எடுத்துக் கூறித் தனக்கு மனைவியாகித் தன்னுடன் வாழும்படி வேண்டிற்று. சிங்கக்குட்டியோ நரியை அற்பப்பிராணி யென்று நினைத்து அலட்சியமாயிருந்ததாலும், அதற்குண்டான கோபம் மாத்திரம் அடங்கவில்லை. நரி,பெண் சிங்கத்தினின்று விடையொன்றும் கிடைக்காததால் தன் குகைக்குத் திரும்பிவிட்டது. பெண் சிங்கம் தன் சகோதரர்கள் வந்தவுடன் நடந்ததைத் தெரிவித்து முறையிட்டது. முதலில் வந்து கேட்ட எல்லோருக்கும் இளமையான கடைக்குட்டிச் சிங்கம் இச்செய்தியைக் கேட்டவுடன், நரியிருக்கு மிடத்தைக் காட்டச் சொல்லி, அங்குச் சென்று நரியைக் கண்டு, கோபங்கொண்டு ஆகாயத்தில் கிளம்பி நரியின்மேற் பாய்ந்தது. பாய்ந்த அது, கண்ணுடியில் வீழ்ந்து இடிபட்டு உயிர் துறந்தது. இப்படியாகச் சிங்கமாகப் பிறந்த போதி சத்துவர் நீங்க, மற்றைய குட்டிகளெல்லாம் இறந்தன. இவர் வந்தபின்னர் நிகழ்ந்த செய்தியைக் கேட்டு, அவசரக் காரனுக்குப் புத்தி மட்டென்றெண்ணி, ஆய்ந்தோய்ந்து பாராத காரியம் பாழாக முடியுமென்று கூறி, நரியிருக்குமிடத்தைச் சென்று சுற்றிப் பார்த்தார். நரி கண்ணுடிக்குள்ளிருப்பதைக் கண்டு, அதன் வாயிலிற் போய்

நின்று கர்ச்சித்தது. இந்தப் பேரொலியைக் கேட்டு நரி இறந்தது. இதனாலே எட்டாப் பழத்துக்குக் கொட்டாவி விடக்கூடாது என்று அறிகிறோம்.

## நம் நாட்டில் வழங்குங் கதை

ஓர் ஊரிலே ஆறுபேர் அண்ணன் தம்பி வாழ்ந்து வந்தனர். அவர்களுக்கொரு அருக்காணித் தங்கையிருந்தாள். அவர்களுடைய இளமையிலேயே பெற்றோர் இறந்துவிட்டனர். அப்பெண்ணை அவ்வாறுபேரும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வந்தனர். அவ்வூர்க்குப் பக்கத்தில் ஒரு பெரிய காடிருந்தது. அதனிலொரு புலி வாழ்ந்து வந்தது. ஒருநாள் அது கல்யாணம் பண்ணிக்கொண்டு வாழவேண்டுமென்ற விருப்பங் கொண்டது. அது காட்டை யடுத்த ஊருக்குள் நுழைந்து பார்த்தது. இந்தச் சகோதரர் அறுவரின் தங்கை அழகாக விருந்தபடியால் அவளைத் தூக்கிக்கொண்டு காட்டிற்குள் போய்விட்டது. அங்குச் சென்று ஓரிடத்தில் இந்தப் பெண்ணை வைத்துவிட்டுத் தான்போய் ஆகாரம் கொண்டு வந்து கொடுக்கும். இவ்வாறு பலநாள் சென்றன. அப்பெண் சில புலிக் குட்டிகளையும் பெற்றாள்.

தமது அருக்காணித் தங்கையை இழந்தபின் சகோதரர் வருந்துவாராயினர். ஐந்து தமயன்மாரும் தங்கையைத் தேடித்திருப்பிக்கொண்டுவர அஞ்சினராயினும் எல்லோரினும் இளையவன் தான் தைரியமாகச்சென்று தங்கையை அழைத்து வருவதாகவும் சகோதரர் ஐவரும் தன் சொற்படி கேட்கும்படியும் வேண்டிக் கொண்டான். அவர்களும் அவ்வாறே ஒப்புக் கொண்டனர். அவர்கள் புறப்பட்டுச் செல்லுகையில் வழியில் ஒரு கழுதையைக் கண்டனர். அதனையும் உடன் ஓட்டிச்சென்றனர். அவ்வாறே வழியிற்கண்ட எறும்பு, வண்ணான்சால், பனைமரத்துண்டு இவைகளையு மெடுத்துச்சென்றனர். இவைகளை யெடுத்துக்கொண்டு காட்டில் இரண்டுநாள் அலைந்து திரிந்து தன் தங்கை யிருக்குமிடத்தைக் கண்டுபிடித்தனர். அப்பொழுது புலி ஆகாரத்தின் பொருட்டு வெளியே போயிருந்தது.

தன் அண்ணன்மாரைக்கண்ட தங்கை தமயன்மாருக்குவெகுவிமரிசையாக விருந்து செய்தாள். பின்னர் புலிவந்தால் அடித்துக் கொன்றுவிடு மென்று பயந்து அனைவரையும்வீட்டிலிருந்த பரண்மேலேற்றி விட்டாள். அவர்கள் தாங்கள் ஓட்டிவந்த கழுதை முதலானவற்றோடு பரணியிருந்தனர். புலியும்திரும்பிற்று. வரும்போதே "ஆண்காற்றடிக்கிறது; பெண்காற்றடிக்கிறது; ஆரடி கதவைத்திற" என்றது. பெண் கதவைத் திறந்து 'ஆணுமில்லை, பெண்ணுமில்லை; நீசாப்பி' டென்று உணவிட்டாள். அது உண்டு கொண்டிருக்கும் போது இளையவன் பரணில் ஆரவாரஞ் செய்தான். "அது என்ன குரல்" என்று புலிகேட்கப்பெண், குரலிடுவது வீட்டுத் தெய்வமென்றும் வெகுநாளாக வீட்டுத் தெய்வத்துக்குப் படைக்காததால் அது குரலிடுகிறதென்றும் கூறினாள். புலி அவ்வாறானால் வீட்டுத் தெய்வத்தின் காலைக் காட்டும்படி கேட்டது. உடனே சிறுவன் தைரியமாகப் பனைமரத்தைத் தூக்கிக் காட்டினான். பின்னர் வயிற்றைக் காட்டும்படி வேண்டிற்று. வண்ணான்சாலைத்தூக்கிக் காட்டினான். குரலைக் காட்டும்படி கேட்டது. கழுதையின் காதில்கட்டெறும்பை விட்டான். கழுதை நெடுங்குரலிட்டது. அதனைக் கேட்ட புலி பயந்தோடிவிட்டது. பின்னர் சகோதரர் அறுவரும் கீழிறங்கித் தன் தங்கையை அழைத்துக்கொண்டு ஊர் திரும்பினர்.

# மெய்யின்பத் துறைகள்

[ஜேம்ஸ் ஆலன் (James Allen) என்னும் பேரறிஞர் ஆங்கிலத்தில் எழுதிய "By ways of Blessedness" என்ற நூலின் மொழிபெயர்ப்பு.]

(தொடர்ச்சி)

உண்மையான புத்தியுள்ள நல்ல மனிதன் எல்லோரிடத்திலும் நன்மையையே காணுவான்; தீமையைக் காண மாட்டான். மற்றவர்களைத் தன் போல் நினைக்கும் பெருமையும் விருப்பும் மூடத்தனத்தை அவன் விட்டுவிட்டான். ஏனெனில் மனிதர்கள் வெவ்வேறாக உண்டாக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதும், தங்கள் பாரமார்த்திகப் பரிணாமத்தில் பலவேறு இடங்களில் இருக்கிறார்கள் என்றும், ஆகவே கட்டாயமாய் விதம் விதமாக நினைப்பார்கள் என்றும் செய்வார்கள் என்றும் அவனுக்குத் தெரியும். வெறுப்பு, நிந்தனை, அகங்காரம், முன் அபிப்பிராயப்படல் ஆகிய இவைகளைத் தள்ளிவைத்துவிட்டதால் அவன் அறிவுள்ளவனாகிறான்; அதனால் பொறுமை, அன்பு, தயை, சாந்தம், பொறுமை, அடக்கம், சுயநலமின்மை உண்டாகி அவன் ஒளியையும் அறிவையும் வெளிப்படுத்தும் என்று அறிவான்; அதுபோலவே பரிசுத்தமின்மை, வெறுப்பு, கொடுமை, காமம், கோபம், கர்வம், சுயநலம் என்பவை இருட்டு, அறியாமையின் தோற்றங்கள் என்பதையும் அறிவான். ஆகவே, இருட்டில் அல்லது வெளிச்சத்தில் இருந்தாலும் மனிதர்கள் ஒரே மாதிரிதான் தங்களுக்கு அவசியமாகத் தோன்றுவதையே செய்கிறார்கள் என்றும், தங்கள் அளவுக்குத் தக்கபடி இருட்டு அல்லது வெளிச்சத்தின் பிரகாரம் நடக்கிறார்கள் என்பதையும் அறிவான். ஞானி அறிகிறான்; அறிவதால் அதிருப்தி, தூஷணைகளினின்றும் நீங்குகிறான்.

ஒவ்வொருவனும் தன் இயற்கைக்குத் தக்கபடியும், சரி தவறு என்று தனக்குத் தோன்றியபடியும் நடந்து தன் அனுபவத்தின் பலன்களை உண்மையாகவே அடைகிறான். ஒவ்வொருவனும் தன் இஷ்டப்படியே நினைக்கவும் செய்யவும் சுதந்திரம் பெற்றிருக்கிறான். அவன் மற்றவர்கள் சுதந்தரத்தை நினைக்காமல் தன் சொந்த சுதந்தரத்தையே தன் சுயநலப்படியே நினைத்தாலும், நடந்தாலும் காரணகாரிய ஒழுங்கு நியதியின்படி தான் போதித்து நடக்கும்படி செய்யும் அல்லல்களை அவன் சீக்கிரம் அடைய நேரிடும்; ஆகவே, வேறு மேலான வழியுண்டா என்று பார்ப்பான். அனுபவம்போல சரியான உபாத்யாயர் இல்லை. மனிதர்கள் தவறுகளை எப்போதும் தாமாக விதித்துக் கொள்ளும் தண்டனைகளைப்போல திருத்தக் கூடியதும் துயரமே செய்யக் கூடியதுமானது வேறொன்றில்லை. சுயநலம் உள்ளவன் முட்டாள்தனம் உள்ளவன். அவனே தன் வழியைத் தேர்ந்தெடுக்கிறான்; ஆனால் கஷ்டத்திற்கு அது கொண்டு போய் விடுகிறது; பிறகு அக் கஷ்டத்தி லிருந்து அறிவுக்கும் ஆனந்தத்திற்கும் கொண்டு போகும். நல்ல மனிதன் புத்தியுள்ளவனே. அவனும் தன் வழியைத் தேர்ந்தெடுக்கிறான்; ஆனால் அறியாமை வருத்தம் ஆகிய நிலைகளைக் கடந்து அறிவு ஆனந்தம் அடைந்தவன் ஆதலால், அறிவின் பூரண ஒளியில் தன் பாதையைத் தேர்ந்தெடுக்கிறான்.

ஒரு மனிதன் மற்றவர்களைக் குறித்துத் தான் தீர்மானிப்பதை விசாரியாமல் அவர்களைப் பற்றி அவர்கள் கொண்டுள்ள எண்ணப்படி பார்த்து அவர்கள் செய்கைகளைப் பற்றித் தன் அளவுக்குத் தக்கபடி பாராமல் அவர்கள் அளவின்படி தீர்மானம் செய்தால் கெடுதியில்லாமையைப் பார்ப்பது இன்னதென்று அறிவான். நன்மை தீமையைக் குறித்து மனிதர்கள் தமக்கிஷ்டமான அளவை ஏற்படுத்தி அதற்குத் தக்கபடி எல்லோரும் வரவேண்

டும் என்று கவலைப் படுவதால் தான் ஒருவர்க்கொருவர் கெடுதியைப் பயக்கிறார்கள். ஒரு மனிதனை நம அளவைப்படி தீர்மானிக்காமல் அவன் அளவைப்படி தீர்மானித்து அதற்குத் தக்கபடி அவனை நடத்துவதுதான் சரியான முறை. அது தீர்மானம் அல்ல, அன்பு முறை. அருவமான அன்பு மூலமாய் நாம் பார்த்தால்தான் நாம் அறிவுள்ளவர்கள் ஆகிறோம்; அவர்கள் உண்மையில் உள்ளபடி அவர்களைப் பார்க்கமுடியும். "மற்றவனைப் பற்றி தீர்மானிக்க நான் யார்" என்று தன் மனதில் ஒருவன் சொல்லக்கூடுமானால், அப்போது தான் அவன் அன்பை அடைந்தவனாகிறான். நான் மற்றவர்கள் கெட்டவர்கள் என்று தீர்மானிக்கத் தக்க தூய்மையுடையவனா பாவம் இன்மையுடையவனா? நான் என்னைத் தாழ்த்திக் கொண்டு என் தவறுதலைத் திருத்திக் கொண்டு தான் மற்றவர்கள் நடத்தையைப் பற்றித் தீர்மானிப்பேன் என்று சொல்லக் கூடிய நிலையை ஒருவன் அடைய வேண்டும்.

ஓர் அதிக கெட்டபாவத்தைச் செய்யும்போது பிடிக்கப்பட்ட ஸ்திரீயை மற்றவர்கள் கல்லால் அடிக்கப் போனபோது "பாவம் செய்யாதவன் முதல் கல்லைப் போடவேண்டும்" என்று ஒருவர் சொன்னதாகவும், அவர் பாவமற்றவராயிருந்தும் அவர் கல் எடுக்கவில்லை என்றும் அவர் அவளைப்பற்றித் தீர்ப்புக் கொடுக்கவில்லை என்றும் அவளை அதிக சாந்தத்துடனும் பச்சாதாபத்துடனும் பார்த்து "நானும் உன்னைக் கண்டிக்கவில்லை நீபோ, இனி பாவம்செய்யாதே" என்று சொன்னதாகவும் சரித்திரவாயிலாய் அறிகிறோம்.

ஒரு பரிசுத்த உள்ளத்தில் மற்றவர் நடத்தையைப்பற்றிய தீர்மானங்களும் வெறுப்புகளும இரா. ஏனெனில் அதில் பட்சமும் அன்புமே ததும்பி நிற்கும். அது கெடுதியை நோக்காது, மற்றவர்கள் பால் உள்ள கெடுதியை நோக்காமலிருக்க ஒருவன் சக்திபெற்றால் அன்றி பாவம், வருத்தம், துன்பங்களினின்று அவன் விடுதலையடைய முடியாது.

ஞானம் அடைபவன் தான் தன்னிடத்திலாவது தன் செய்கைகளிலாவது கெடுதியைப் பார்க்க முடியும். அப்போது அவன் தனக்கு தப்பு என்று தோன்றிய செய்கைகளை விட்டுவிடுகிறான். தான் செய்ததைச் சரி என்றே ஒவ்வொருவனும் சொல்லுவான். மற்றவர்கள் தன் நடத்தையை எவ்வளவு கெடுதியாக நினைத்தாலும் தான் அது நல்லதென்றும் அவசியமென்றுமே நினைக்கிறான்! அல்லாவிட்டால் அவன் அதைச் செய்ய முடியாது. ஒரு கோபமுள்ளவன் தன் கோபத்தைச் சரி என்றே நினைக்கிறான். லோபியும் அவ்வாறே தன் லோபத்தைப் பற்றி நினைக்கிறான். காமியும் தன் காமத்தைப் பற்றி அவ்வாறே கருதுகிறான். பொய்யன் தன் பொய் அவசியம என்று நினைக்கிறான். தான் வெறுக்கிற நபர்களைப் பற்றிப் புறங் கூறுபவனும் அவர்கள் கெட்ட சுபாவத்தைப்பற்றி மற்றவர்களுக்கு எச்சரிக்கை செய்யும் போது தான் செய்வது சரி என்றே நினைக்கிறான். ஏராளமான செல்வம், சௌக்கியம், சுகம் அடைய சரியான வழியும் தவறான வழியும் திருடுவது தான் என்று திருடன் நினைக்கிறான். கொலைஞனும் தன் செய்கைக்குச் சரியான காரணம இருக்கிறதென்றே நினைக்கிறான்.

ஒவ்வொருவன் செய்கைகளும் தன் ஒளி அல்லது இருள் அளவுக்குத் தக்கபடி இருக்கின்றன. எவனும் தான் இருப்பதற்கு மேலாகவாவது, தன் அறிவுக்கு மீறியாவது நடக்க முடியாது. ஆனால் அவன் தன்னை விருத்தி செய்து கொள்ள முடியும்; அதன் மேல் தன் ஒளியை அதிகரிக்கச் செய்து தன் அறிவை விசாலப்படுத்தக்கூடும். கேலி செய்வதும் திட்டுவதும் ஒரு கோபமுள்ளவன் கையாள்வது அவன் பொறுமையும் மன்னிப்புத் தன்மையும் காட்டும்அளவுக்கு அவன் அறிவு இல்லாமையாலே. சாந்தத்திற் பழகாததனால்,

அவன் அதைத் தெரிகிறதில்லை; அதைத் தேர்ந் தெடுக்கிறதில்லை. சாந்தத்தின் ஒளியொடு கோபத்தின இருளை ஒத்துப் பார்க்கும் அறிவு அவனுக்கு இல்லை. பொய்யன், புறங்கூறுபவன், திருடன் விஷயத்திலும் அப்படியே. தன் முதிராத அறிவு அநுபவம் கொண்டு மனதிலும் செய்கையிலும் இருட்டான நிலைமையிலேயே இருக்கிறான்; வினையில் மேலான நிலைமைகளில் பழகாததால், அவைகளின அறிவு அவனுக்கில்லை; அவைகள் அவன் வரைக்கும் இல்லாமைபோலவே. "இருட்டில் ஒளி பிரகாசிக்கிறது; ஆனால் இருட்டுக்கு அதை அறியும் சக்தி இல்லை." தான் வசிக்கிற சந்தர்ப்பங்களையும் அவன் அறியமாட்டான்; வினையில் அவை இருட்டாயிருப்பதால் அவைகளுக்கு அறிவு என்பதே இல்லை. —"நோன்பி"

# இடியேறு

## நோன்பின் நோக்கம்

மகாத்மா காந்தி எரவாடா சிறைக் கோட்டத்தில் உண்ணா நோன்பிருந்தது உலகறிந்த தொன்று. அதன் நோக்கம் என்னை? அந் நோக்கத்தை இருகூறுபடுத்திக்கொள்ளலாம். ஒன்று புறநோக்கம்; மற்றொன்று அகநோக்கம். புறநோக்கம் முதன் மந்திரி மக்டானல்ட் பிறப்பித்த அறிக்கையிலுள்ள தாழ்த்தப்பட்டோர்க்குத் தனித் தொகுதி என்னும் பகுதியில் மாறுதல் ஏற்படவேண்டுமென்பது. அகநோக்கம் தீண்டாமை தொலைதல் வேண்டுமென்பது. காந்தியடிகள் நோன்பிருந்தவேளையில் பண்டித மாளவியர் உள்ளிட்ட சில அன்பர்கள் முயற்சியால் புறநோக்கம் ஒருவாறு முற்றுப்பெற்றது. முதன் மந்திரி பூனா உடன்படிக்கைக்கு இசைந்து நடக்க ஒருப்பட்டனர். இனி அகநோக்கம் நிறைவேறுதல் வேண்டும். இன்னும் ஆறு திங்களில் தீண்டாமை தொலைதல்வேண்டுமென்றும், இல்லையேல் தாம் மீண்டும் நோன்பு துவங்க நேருமென்றும் அடிகள் அருளியுள்ளார். ஆறு திங்களில் தீண்டாமை தொலைய நாட்டவர் முயலுதல் வேண்டும். நிலைமை எவ்வாறிருக்கிறது!

வடஇந்தியாவில் நல்வழியில் முயற்சி துவங்கப்பட்டிருக்கிறது. வடஇந்தியா காந்தியடிகள் வழியைப் பற்றிக் கடனாற்றுமென்று துணிந்து கூறலாம். நமது 'ஆரிய' தென்னிந்தியாவைப் பற்றிக் கவலைப்படவேண்டியதாயிருக்கிறது. தீண்டாமை தொலைத்தற்கென இங்கே இன்னும் எவ்வகை முயற்சியுங் கருக்கொள்ளவில்லை. பத்திரிகைகளில் பட்டைகள் வெளிவரும் அளவில் தென்னிந்தியரிற் சிலர் முயன்று வருகிறார். இவ்வேளையில் எதிர்ப்புகள் நாலுபக்கங்களிலும் புற்றீசல்போல் புறப்பட்டவண்ணமாயிருக்கின்றன. தென்னிந்திய வைதிகர்கள் தங்கள் பழஞ் சுவடிகளைத் தாங்கிக் கிளம்பிவிட்டார்கள். எங்கணும் அவர்கள் கூட்டம்! எங்கணும் அவர்கள் பேச்சு! எங்கணும் அவர்கள் சாத்திர முழக்கம்! ஆகவே தென்னிந்தியா தீண்டாமையை எளிதில் தொலைக்க விரும்பாது என்று தெரிகிறது. இதற்கென் செய்வது?

முதலாவது சீர்திருத்தக்காரர்கள் அனைவரும் ஒருமைப்படுதல் வேண்டும். அவர்கள் தம் முயற்சிகள் பலவாறு சிதைந்துபோதல் கூடாது. தீண்டாமையை ஒழிப்பதில் எல்லா அரசியல் கட்சியிலுள்ள சீர்திருத்தக் காரர்களெல்லாம் ஒன்று சேர்ந்து உழைக்க உளங்கொள்ளல் வேண்டும். இதில் தத்தம் அரசியல் கட்சி வேற்றுமைகளைப் பாராட்டுவது தேச நலத்தை நாடுவதாகாது.

தீண்டாமை விலக்குக்கெனப் பல சங்கங்கள் ஆங்காங்கே காணப்படுகின்

றன. ஒவ்வொரு சங்கத்துக்கும் ஒவ்வொருவித பெயர் அமைக்கப்படுகிறது. அததற்குத் தனித்தனி நிர்வாக சபை அமைக்கப்படுகிறது. அச்சங்கங்களின் நோக்கம் ஒன்றாயிருந்தாலும் வேலைத் திட்டத்திலும் பிறமுறைப்பாடுகளிலும் அவைகளிடைக் கருத்து வேற்றுமை தோன்ற நிற்கும். இக்கருத்து வேற்றுமைப்போரே பெரும போராக நிகழ்ந்து கொண்டிருக்கும். இப்போரிடைத் தீண்டாமை தீண்டாமையாகவே கிடக்கும்.

தீண்டாமை விலக்குப் பிரசாரம் என்னும் பெயரால் தத்தம் தேர்தலுக்கு ஆக்கந்தேடச் சிலர் முயல்கிறார். எவ்வேடந் தாங்கியாதல் தேர்தலில்வெற்றி பெற வேண்டு மென்பது அவர் தங் கருத்து. அந்நியர்கள் செல்வாக்குப் பெற்றுவரும் எவ் வியக்கத்திலுஞ் சேரத் தயங்குவதில்லை. அவர்கள் கூட்டுறவுபெறுமம இயக்கம் எதுவும் வெற்றி பெறுவதில்லை.

தென்னிந்தியாவில்தீண்டாமை விலக்குச் சங்கமென ஒன்றே யிருத்தல் வேண்டும். அதில் சேர்வோர் அவ்வொரு நோக் குடையரா யிருப்பது சிறப்பு. வேறு கருத் துடையவர்களும் அச் சங்கத்தில் சேரலாம். சேர்ந்து அவர்கள் தங்கள் கட்சி வழியில் அச் சங்கத்தை ஈர்க்க முயலா திருத்தல் நலம்.

தென்னிந்தியாவி லுள்ள சீர்திருத்தக்காரர்க ளெல்லாம் ஒன்றுபட்டு ஒரு சிறந்த திட்டம் வகுத்துத் தொண்டாற்ற முயல்வார்களாக. பிரிந்துபிரிந்து தொண்டாற்றுவதால் பயன்விளையாது. எல்லாரும் ஒன்றி முயன்றால் காந்தியடிகள் கொண்ட உண்ணா நோன்பின் அகநோக்கம் நிறைவேறுவதாகும். இல்லையேல் காந்தியடிகள் மீண்டு மொரு முறை நோன்பிருக்க நேரும். அந்நிலை நேராதவாறு காப்பது தென்னிந்தியர் கடமை.

வகுப்பு ஒற்றுமைக்கெனக் காந்தியடிகளை அடிக்கடி உண்ணா நோன்பு கொள்ளுமாறு தேசத்தார் செய்வது அழகன்று. முதல் மந்திரியின் அறிக்கை பிறப்பதற்கு முன்னரே தாழ்த்தப்பட்டோரிடை ஒருவித ஒற்றுமை காணத் தேசபக்தர்கள் முயன்றிருத்தல் வேண்டும். காந்தியடிகள் உண்ணா நோன்பில் இறங்கிய பின்னைத் தாழ்த்தப்பட்டோர் தனித் தொகுதியில் ஒருவித மாறுதல் ஏற்படலாயிற்று. அடிகளின் நோன்பால் ஒற்றுமை காண நேர்ந்தமை போற்றக்கூடியதாயிற்று. அது போக. இப்பொழுது தீண்டாமை விலக்குத் திட்டம் நம் முன்னே நிற்கிறது. ஆறு திங்களில் அத்திட்டத்தை நிறைவேற்றப் பொதுவாகத் தேசத்தாரும் சிறப்பாக ஹிந்துக்களும் முயலக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

அடிகள் குறிப்பிட்ட கால எல்லைக்குள் தீண்டாமை தொலையாதிருப்பின், அவர் உண்ணா நோன்பில் உளங்கொள்வது உறுதி. அடிகள் மீண்டும் தீண்டாமையின் பொருட்டு உண்ணா நோன்பிருக்கும் ஒரு நிலையைச் சாதி ஹிந்துக்கள் உண்டுபண்ணுவார்களே யானால், அவர்கட்குச் சுயராஜ்ய வேட்கையில்லை என்பது உள்ளங்கை நெல்லிக் கனி போல் நனி விளங்கிவிடும். இத்துணை நாள் சுயராஜ்யக் கூச்சலிட்டு அதற்குரிய சமயம் நேரும்போது அதற்கு மாறுபட்டு நிற்றல் அறமாகாது.

தீண்டாமை விலக்கில் சிறந்த சுயராஜ்யப் பேறு இருத்தலை நன்குணர்ந்தே காந்தியடிகள் தீண்டாமை விலக்கவில் இப்பொழுது தனி நாட்டஞ் செலுத்தியிருக்கிறார். இதற்குப் பல எடுத்துக் காட்டுகள் வேண்டுவதில்லை. பூனா உடன்படிக்கை ஒன்றே சாலும். காந்தியடிகளின் உண்ணா நோன்பின் பயனாகப் பூனா உடன்படிக்கை நிறைவேறிற்று. அதன் அடிப்படையில் பலதிறத் தத்துவங்களிருக்கின்றன. சாதி ஹிந்துக்கட்கும் தாழ்த்தப்பட்டவர்க்கு மிருந்த பிணக்கு ஓரளவில் தீர்ந்தமை சிறப்பாகக் குறிக்கத்தக்கது. அதனால் வேறு பல நலன்கள் விளையுங் குறிகளுந் தோன்றி யிருக்கின்றன. மௌலானா ஷாக்கத்தாலி பூனா உடன்படிக்கை பிறந்த நாள் தொட்டுத் தனித் தொகுதிப்

பற்றை மாற்றத் துவங்கி, ஹிந்து முஸ் லீம் ஒற்றுமை காண முயன்று வருதல் கண்கூடு. ஹிந்து-முஸ்லீம ஒற்றுமை, சீக்கிய - கிறிஸ்துவர்களோடும் ஒற்றுமை யுறச்செய்யும். இவ்வளவு நலன்களுடன் பூனா உடன்படிக்கையினின்றும் பிறந் தன என்பதைச சாதி ஹிந்துக்கள் கவ னித்து நடப்பார்களாக.

பூனா உடன்படிக்கை இவ்வளவு நலன் களை விளைத்து வருகிறதெனில், முழுத் தீண்டாமைவிலக்கு எவ்வளவு நலன்களை விளைக்கும் என்பதை விளக்கவும் வேண் டுமோ? தீண்டாமை விலக்கு, சுயராஜ் யத்துக்கு இன்றியமையாத வகுப்பு ஒற்றுமை, சகோதர நேயம், சுதேசிய வேட்கை முதலியவற்றைப் பெருக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இத் துணை நலன்களை நாட்டுக்கு விளைக்க வல்ல தீண்டாமையை விலக்க வொட்டா பதும், அதனை இருக்குமாறு செய்ய முயல்வதும் தேசபக்தி யாகுமா என் பதை வைதிகர்கள் உன்னுவார்களாக.

வைதிக நண்பர்கள் காலதேசவர்த்த மான நிலைமையைக் கூர்ந்து சிந்தித்துத் தீண்டாமை விலக்குக்கு ஆதரவு தேடு வது சிறப்பு. அது ஹிந்துமதப் பக்தியு மாகும். இந்நேரத்தில் வைதிகர்களிற் பலர் எதிர்ப் பிரசாரஞ் செய்வதால் தேசத் திருப்பமது சுயராஜ்ய முயற்சிக்குக் கேடு சூழ்வதாக முடியும். வைதிகர் எதிர்ப் பிரசாரம், காங்கிரஸின் நீண்ட கால சேவை, தேசபக்தர்களின் அரிய தியா கம் முதலியவற்றை நிர்மூலப்படுத்துவ தாகும். தீண்டாமைக்கு எதிர்ப்பிர சாரம் நாட்டில் நடைபெறுகிறது என் னுஞ் செய்தி இந்நாளில் உலகிடைப் பரவுவது இந்தியாவின் மதிப்பைக் குறைத்துவிடும். “தீண்டாமை பாராட் டும் ஒரு நாட்டுக்கா சுயராஜ்யம்” என்று எளிதில் சர்ச்சில் கூட்டத்தார் பேசித் தங்கட்சிக்கு ஆக்கந்தேடுவர். பொது வாக உலக அநுதாபத்தையே இந்தியா இழக்க நேரும். ஆகவே எதிர்ப்பிரசாரஞ் செய்யாமலும் செய்விக்காமலு மிருக்கு மாறு வைதிகர்களைக் கேட்டுக்கொள் கிறோம்.

“தீண்டாமை வேண்டாம்” என்று காந்தியடிகள் சொன்னதற்காக, நாம் “தீண்டாமை வேண்டும்” என்று சொல் லிருக்கப் போவதாகக் குரல் கொடுக்கும் வைதிகர்களிற் சிலர் பேசியிருக்கிறார். இஃதென்ன பேச்சு? இஃதென்ன பிடி வாதம்? இதுவா ஹிந்து மதம்? இது பிடிவாத மதமாகும். வைதிகர்கள் போராட்டத்தை விரும்புவது நியாய மன்று.

ஹிந்து மதத்தில் தீண்டாமையுண்டா மாயின் அது சாத்திரங்கள் மதமாகுமே யன்றித் தெய்வமதமாகாதென்பதை நேயர்கள் உணர்வார்களாக.

## “ஜஸ்டிஸ்” கட்சி

ஜஸ்டிஸ்கட்சி தோன்றி ஏறக்குறைய பதினைந்து ஆண்டுகளாகின்றன. அக் கட்சி வகுப்பு வாதத்தை அடிப்படை யாகக் கொண்டே நடைபெற்று வருகிறது. அக்கட்சி பிராமணரல்லாதார் கட்சி என்று சொல்லப்படுகிறது. பிராமண ரல்லாதார் எல்லாரும் அக்கட்சியில் சேர்ந்தாரில்லை. வகுப்பு வாதத்தை விரும்பாத பிராமணரல்லாதார் பல ரிருக்கின்றனர். இவ்விரு சாரார்க்கும் பல திறப் போர்களும் நிகழ்ந்திருக்கின்றன. வகுப்புக் கட்சியால் ஒற்றுமைப்பாடு உண் டாதல் அரிது. அதனால் பிளவுபிணக் குமே பெருகிக்கொண்டே போகும். இதற் கு வேறு சான்று வேண்டுவதில்லை. ஜஸ்டிஸ் கட்சியின் பதினைந் தாண்டைய அனுபவமே சிறந்த சான்றாக நிற்கிறது.

ஜஸ்டிஸ் கட்சி தோன்றிய நாள் தொட்டுத் தென்னிந்தியாவில் வகுப் புப் பிணக்கு நாளுக்குநாள் பெரு கலாயிற்று என்று எவரும் கூறு வர். இப்பொழுது நாட்டில் பல இடங் களில் சாதி மகாநாடுகள் கூடிய வண்ண மாயிருக்கின்றன. ஒவ்வொரு சாதி யாரும் தத்தம் இனத்தவர்க்குச் சட்ட சபையில் பிரதிநிதித்துவம் அவாவித் தீர்மானஞ் செய்கிறார். இதற்கு அடிப் படையான காரணம் ஜஸ்டிஸ் கட்சியில் வகுப்புரிமை நிலவிக்கொண் டிருத்தல் என்று கூறுதல் மிகையாகாது. ஜஸ்

டிஸ் கட்சிச் சகோதரர்கள், தங்கள் கட்சியின் நடை முறையைப் பற்றித் தாங்களே ஆய்ந்து ஓய்ந்து பார்ப்பார்களாக. சிலர் அதன் நிலையை ஆய்ந்து ஓய்ந்து பார்த்து அதைத் தேசியக் கட்சியாக்க முயன்று வருவது போற்றற்குரியது. உலக நிலையும், காலப் போக்கும் அக்கட்சியின் நிலையை நாளடைவில் மாற்றுமென்றே நினைக்கிறோம்.

ஜஸ்டிஸ் கட்சியின் நோக்கங்களுள் ஒன்று சாதி வேற்றுமையைத் தொலைக்கவேண்டுமென்பது. அந்நோக்கம் விழுமியது; பொன்னே போல் போற்றத்தக்கது. ஆனால் அவ்விழுமிய நோக்கத்தை நிறைவேற்றவல்ல அரசியல் திட்டம் ஜஸ்டிஸ் கட்சியில் மலர்வதில்லை. காரணம் அக்கட்சியின் அரசியல், வகுப்புவாதத்தை அடிப்படையாகக் கொண்டிருப்பதேயாகும். அரசியலில் வகுப்புரிமையையும், சீர்திருத்தத்தில் சமரசத்தையும் விரும்புவது பொருளற்றதென்று சொல்ல வேண்டுவதில்லை.

அக்கட்சியைத் தோற்றுவித்தவருள் ஒருவராகிய டாக்டர் நாயர் சிறந்த தேசியவாதியாக இருந்தவர். ஏதோ ஒரு காரணம்பற்றி அவர் வகுப்புக் கட்சியைக் காண்பதற்குத் துணை நின்றார். டாக்டர் நாயர் வகுப்புக் கட்சியால் நாட்டிற்கு நலமில்லை என்பதை நன்குணர்ந்தவராதலான், "ஜஸ்டிஸ் கட்சி வகுப்புவாதங் கொண்டு பத்தாண்டு நிலவலாம். அதற்குமேல் அஃது அக் கொள்கையுடன் நிலவுதலாகாது" என்று அடிக்கடி அவர் சொல்லிவந்தார். அப் பத்தாண்டுங் கடந்து மேலே ஐந்தாண்டாகிவிட்டன. இனி வகுப்புக் கட்சியாக ஜஸ்டிஸ் கட்சி நிலவுதல் கூடாது. அது தேசியக்கட்சியாக மாறுதல்வேண்டும்; இல்லையேல் அது மாய்தல்வேண்டும்.

ஜஸ்டிஸ் கட்சி இனி வகுப்புக் கட்சியாக இருத்தற்கு இடமில்லை என்பதைத் தஞ்சை உணர்த்தி விட்டது. இனிக் கூடப்போகும் ஜஸ்டிஸ் கட்சி மகாநாட்டில் வகுப்புவாதம் தொலையுமென்று எதிர் பார்க்கிறோம்.

## ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை

இந்திய சுயராஜ்யத்துக்கு ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை இன்றியமையாதது என்று காந்தியடிகள் அடிக்கடி பேசியும் எழுதியும் வந்தது நேயர்கட்குத் தெரியும். ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை சுயராஜ்யத் தூண்களுள் ஒன்று என்றுங் காந்தியடிகள் கூறுவது வழக்கம். அவ்வொற்றுமை குறித்து அடிகள் உழைத்த உழைப்பு அளவிடற்பாலதன்று. அடிகள் உழைப்பு நல்ல பயனையுந் தந்து வந்தது. நேரு அறிக்கை பிறந்தநாள் தொட்டு ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை படிப்படியாகக் குலையலாயிற்று. ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்குக் காந்தியடிகள் செய்த முயற்சிகளுக்கெல்லாம் உயிர்த்துணைவர்களாக நின்ற அலிசகோதரர்கள் நெஞ்சிலும் ஒருவகை மாறுதலுண்டாயிற்று.

காந்தியடிகள் 1921-ம் ஆண்டில் துவங்கிய ஒத்துழையாப்போருக்கு ஆக்கந் தேடினவர்கள் அலி சகோதரர்கள் என்பது உலகறிந்ததொன்று. அத்தகை அலி சகோதரர்கள் 1930-ம் ஆண்டில் துவங்கப்பெற்ற போரில் கலந்துகொண்டார்களில்லை. இவர்கள் கலப்பின்மை ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையின்மைக்கு ஓர் அறிகுறியாகவும் விளங்கிவந்தது. வடஇந்தியாவில் பெரும் பெருங் குழப்பங்களும் நிகழலாயின. கான்பூர், சிட்டகாங், பம்பாய் முதலிய இடங்களில் நடந்த ஹிந்து - முஸ்லிம் குழப்பங்கள் நாட்டைப் பல வழியிலும் அல்லற்படுத்திவிட்டன. இப்பொழுது தெய்வத் திருவருளால் ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை மலர்ந்து வருவது குறித்து மகிழ்வெய்துகிறோம். இதற்குப் பெருந்துணை புரிந்துவரும் மௌலானா ஷாக்குத்தலிக்கு நமது வாழ்த்து உரியதாக.

மௌலானா ஷாக்குத்தலி ஒரு பெரிய வீரர். அவர்தந் துணை, காந்தியடிகள் முயற்சிக்கு வேண்டற்பாலது. "ஒற்றுமை இந்தியாவை விரைவிற் காணலாம்" என்று அவர் கூறி வருவது மகிழ்ச்சியூட்டுகிறது. மௌலானா முயற்சியால் நிகழ்ந்து வரும் ஹிந்து-

முஸ்லிம் ஒற்றுமை, முதன் மந்திரி பிறப்பித்த அறிக்கையில் பெரும் மாறுதல் செய்யும் என்பதில் ஐயமில்லை.

இவ்வேளையில் காந்தியடிகள் சிறைக் கோட்டத்தி லிருத்தலை மௌலானா விரும்பாது, அடிகள் விடுதலை குறித்து முயன்று வருவதும் பாராட்டத்தக்கது. அடிகளின் விடுதலை அவசியந்தானென மௌலானா, இராஜப் பிரதிநிதியினிடம் வலியுறுத்தி யிருக்கிறாரென்று அறிகிறோம். இராஜப் பிரதிநிதி ஆழ்ந்த சிந்தையில் இருக்கிறாரென்று தெரிகிறது.

“சட்டமறுப் பியக்கத்தை நிறுத்துமாறு காங்கரஸைக் கேட்பேன்” என்று மௌலானா ஷாக்கத் அலி கூறியிருப்பதாகச் செய்தி கிடைத்திருக்கிறது. காந்தியடிகளின் விடுதலை சட்டமறுப்பு நிறுத்தத்தைப் பொறுத்திருக்கிறது என்று ஊகித்தல் கூடும். ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை குறித்து உழைத்து வரும் மௌலானா விருப்பத்துக்குக் காந்தியடிகள் இணங்குவரென்றே கருதுகிறோம்.

சிறையி னின்றும் வெளிப்போந்துள்ள பெருந் தலைவர்களிற் பலர் மீண்டும் சிறைபுக எண்ணாது தீண்டாமை விலக்கு முதலியவற்றிற் கருத்திருந்தி யிருப்பது கவனிக்கற் பாலது. அவர்கள் மனம் சட்டமறுப்பிற் சற்றேனும் பாய்ந்து கிடக்கவில்லை என்பது அவர்களின் நடைமுறையால் தெரிகிறது. காந்தியடிகளுடன் ஒற்றுமை நாடிய தாழ்த்தப்பட்ட தலைவர்களும் சட்டமறுப்பு நிறுத்தப் படுதல் வேண்டுமென்னுங் கொள்கை யுடையவர்களாகவே இருக்கிறார்கள். சட்டமறுப்புடன் தீண்டாமை விலக்குப் பிரசாரமும் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைப் பிரசாரமும் நடைபெறுதல் அரிது.

ஆகவே மௌலானா வேண்டுகோளுக்குக் காந்தியடிகள் இணங்குவரென்றே நம்புகிறோம். தீண்டாமை விலக்கும், ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையும் சுயராஜ்யத்துக்குத் தூண்கள் என்பதை நன்குணர்ந்த மகாத்மா காந்தி அவைகளின் பொருட்டுச் சட்டமறுப்பை நிறுத்த இணங்குவரென்றே பல இடங்களிற் பேசப்படுகிறது. மௌலானாவும் காந்தியடிகளும் ஒரு நன்முடிவுக்கு வருவார்களென்று நம்புகிறோம். எல்லாம் ஆண்டவன் செயல்.

# நவசக்தி

'எவ்வுயிர்க்கும் அன்பாயிரு' 'என்கடன் பணிசெய்து கிடப்பதே'

சிலம்பு ௧௫ ஆங்கீரஸ௵ கார்த்திகை௴ பரல் ௧

## நெல்விடு தூது

வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்தே வீற்றிருப்பள்—வெள்ளை
யரியா சனத்துள் ளரசரோ டென்னைச்
சரியா சனத்துள்வைத்த தாய்.

சீர்கொண்ட வெள்ளிச் சிகரமும் பொற்சிலம்பும்
வார்கொண்ட கந்தரந்தேர் மந்தரமும்—பேர்கொண்ட
வெவ்வேறாய் நின்றால் விடையேறு மெங்கோனுக்
கவ்வேறு சிந்தனையுண் டாமென்று—வெவ்வேறாய்
மூன்று மலையுங் கொடுமுடிகள் மூன்றாகத்
தோன்றுந்திரி கூடமெனுந் தூயமலை—ய[ா]ன் றபற்ப
சிங்கா சனமாகச் செண்பகப்பூங் காவனமே
கொங்க[ா]ர் பதியாய்க் கொலுவிருப்போன்—மங்கை
குழல்வாய் மொழிபாகன் குற்றாலத் தெம்மா
னிழல்பாய் குறும்பலவி னித்தன்—அழகை...
செங்கமலத் தாள்பரவச் செய்யசடை மேலிருக்குங்
கங்கைகுலத் தேயுதித்த காராளன்—தங்கப்
பொருப்புச் சிலையானைப் போற்றுதற்கா யந்தக்
கருப்புச் சிலையொளித்த காமன்—விருப்பமுடன்
முன்னா ளரனை முனியாய் வணங்குமலை
மன்னாகி நித்தம் வணங்கவென்றும்—அந்நாளில்
செண்டா லடித்துத் திருப்பியொரு சேலெழுதிக்
கொண்டா னவனுடு கொள்ளவென்றும்—தண்டாமல்
அத்தம் படைத்ததனை யாதுலர்க்கெல் லாங்கொடுத்து
நித்தம் புகழ்படைக்க நேமித்துச்—சித்தமுற
அன்புந் தயவு மறிவு பொறையுடைய
வின்பமு மாறா விரக்கமும்—நின்பொருட்டால்
சந்ததமும் பொன்மேருத் தன்பேர் மறைத்துலகில்
வந்த புருஷ மகாமேரு—[1]முந்துகுட
வேலைதனிற் கொள்ளாமல் மேலமலை யேறுமற்
காலமென்றுங் கோடையென்றுங் காட்டாமல்—நாலுகலை

(பிரதி) 1முந்தகடகு.

பேசு தமி ழோர்க்குப் பெருகுநிதி மாரிபெய்யக்
காசினியில் வந்துதித்த கார்மேகம்— 1தேசுபெறு
கல்விக்குக் கம்பன் கவனப் பரிநகுலன்
வில்லுக்கு வாய்த்த விறல்விசையன் —பல்லுயிர்க்குத்
தந்தைபோ லாதரவுந் தாய்போற் றயவுடைய
சிந்தையுமாய் வந்துதித்த சீவரத்னம்—விந்தைமணிப்
பொன்னின் முடிகவிக்கும் போர்வேந்தர் வாள்வேலிச்
செந்நெல் முடிகவிக்குஞ் சென்னியான்—இந்நிலத்தோர்
காதல் மதிகுளிரக் கண்குளிரக் காட்சிதருஞ்
சீதமதி போலுந் திருமுகத்தான்—போதில்
அருணமலர்க் கஞ்ச[ம]முதம்விளைந் தென்னக்
கருணை கொழிக்குமிரு கண்ணான்—ஒருமலஞ்சேர்
முன்பாரச் சேடன் முடிப்பார மத்தனையும்
தன்பாரங் கொண்ட தடம்புயத்தான்—இன்பாதப்
போர்விசைய பாணத்தைப் பொன்மலைமேல் வைத்ததெனத்
தார்புனைய நீலத் தடமார்பன்—போர்விசும்பைத்
தப்பவிட்டு வந்ததொரு தாரு[வ]னை யான்றருவிற்
கப்புவிட்ட தானதடங் கையினன்—செப்பமிடுங்
காரியத்திற் சொல்லிற் கணக்கிற் றமிழ்த்தெலுங்கில்
ஆரியத்தின் மீறு மவதானி—போராடித்து
நீணித் திலங்கொழித்து நெற்பொலிக்குக் குப்பையென்று
மாணிக்கந் தூ[ர்]த்தொதுக்கும் வாசலான்—ஆணிப்பொன்
கொத்தளக்குஞ் செல்வக் கொலுவினன் செந்நெலொடு
முத்தளக்குங் கோலமணி முன்றிலான்—இந்நிலத்தோர்
கன்மநெறி தப்பிக் கடல்வரம்பு தப்பினுந்
தன்மநடிச் சொல்வரம்பு தப்பாதான்—வன்மம்
வருத்துவார் மிண்டன் மலைகலங்கி னாலுங்
கருத்துக் கலங்காத கண்டன் —அரிச்சந்த்ர
மன்னன்மொழி பொய்த்தாலும் மாமறைநூல் பொய்த்தாலுஞ்
சொன்னமொழி பொய்யாத் துரந்தரிகன்—முன்னமே
சூலி முதுகிற் சுடுசோ றுவந்தளித்து
2நீலி பழிகழுவும் நீதிமான்—ஞாலமெய்க்கப்
பண்டோர் கலத்திற் பறையனையும் பாலிருத்தி
யுண்டோ னுபய கு[லோ]த்துங்கன்—மண்டலத்தில்
பாலான கோடி பலசனமாம் 3பட்சிகட்கோ
4ராலார் விருட்சநிக ராகினோன்—மாலேறு
நவ்விப் படைவிழியார் நாடோறுந் தீட்டுமடல்
செவ்விக் கடங்காத் திருவழகன்—தவ்வரியில்
ஓரெழுத்தைச் சொல்லி யுலகில்வரு வோர்க்குதித்த
மீரெழுத்தாய் நல்கு மியல்பினன்—பாரில்
அரியென் றெழுதுவிக்கு மன்றே லகர
வரியென் பதுமறந்த வள்ளல்—5திரைவளர
வட்டமிட்ட தென்சீமை 6வட்டமெல்லா மொற்றைவரிச்
சட்டமிட்ட நாள்மணியச் சட்டமிட்டோன்—துட்டமிட்

(பிரதி)—1தேசப்பெரு. 2நீதி பனிகழுவும். 3பட்சிகற்குக். 4கோலார். 5திரைவாள, 6ட்டமெல்லா.

வாதெடுத்த சத்துருவும் வந்தடுத்துந் தம்பமென்றால்
ஆதரிக்குங் கீர்த்தி யபிராமன்—பார்தலத்தில்
வெய்யோனை தீண்டியர[ா] விட்டதுபோற் புற்றிலொரு
கையோச்சி நாகரத்னங் காண்பித்தோன்—செய்யகன
புத்தியிலே யூகி பொறையிலே தன்மதுரை
யுததியிலே யப்பாசி யொப்பானோன்—பத்தி
முறையுடைய கோமான் முழுதுலகங் காக்கும்
நிறையுடைய கீர்த்தி நிபுணன்—குறையிரநதோர்
சோளியலின் முன்கிடந்த கொம்புதள்ளித் துன்றுதார்
சாளியலின் [1]முன்கிடத்துந தாட்டீகன்—[2]வாழியதன்
காலாலே யூன்றினதைக் கையாலு மன்னவர்செங்
[3]கோலாலு மேயசைக்கக் கூடாதான்—மேலெதிர்ததோர்
[4]வில்வாங்க விட்டெறிந்து மெல்லணையில் மாதர்சொன்ன
சொல்வாங்க வில்வாங்குஞ் சூரத்தான்—மல்வாங்கு
போர்காட்டுந் தெ[வ்]வர் புறங்காட்டித் தமமகவைப்
பேர்காட்டிக் காணும் பெருஞ்சமுகன்—பாருலகில்
வானேத்த சக்ர மலைதான் றவறுகினுந்
தானேத்த வாரந் தவறாதான்—மேனாளில்
மட்டறவே செய்துசெய்து வாய்ததசிவ புண்ணியத்தின்
விட்டகுறை யாய்ப்பிறந்த மீனவன்போற்—சிட்டர்
திரிகூட நாதர் திருப்பணியே செய்ய
வரிசைபெறற தென்குடிகை வந்து—திரிகூட
மண்டபமுஞ் சிதாசபை மண்டபமுந் தேரடியில்
மண்டபமு மீசர்கொலு மண்டபமும்—அண்டர்பிரான்
ஆலயஞ்சூழ் மண்டபமும் ஆறுகட்டு மண்டபமு
மாலைதிருப் பூம்பலகை மண்டபமும்—பால்சுரக்குங்
கோவா லையமுங் குவலயததில் மற்றுமுள்ள
தேவா லையமுஞ் சிவாலயமும்—மேவுநடை
சாலைகளு மன்னசத்ர சாலைகளுந் தென்னைமரச்
சோலைகளுஞ் செண்பகப்பூஞ் சோலைகளும்—மாலைகளும்
நந்தா வனங்களு ந[ா]றுமலர் வாவிகளும்
நநதா வனம்பயிலு நன்னகர்க்கும்—நநதாத
தட்டொடு தூவிகளுஞ் சந்தன தித்தயிலக்
கட்டளை பூசையறைக் கட்டளையும்—இட்டமுள்ள
தேருந் திருநாளுந் தெப்பமும் வாகனமும்
பாருலகங் கொண்டாடப் பாலித்துத்—தார்சடையோன்
மெய்யபர மானந்த வீதிக்கு நேர்வடக்காய்த்
துய்யபர மானந்தத் தோப்புவைத்துப்—பொய்[ய]மரா
அப்புநெடும் பாற்கடலி னன்றுநடு மநதரம்போல்
தெப்பநடு வேசிகரஞ் செய்வித்துத்—தப்பாமல்
தன்மகன்பூ சித்தலிங்கந் தாயும்பூ சிப்பதுபோல்
[5]பொன்மஞ் சனக்குடமும் பூரித்து—முன்முடித்த
வாலமதி யைத்தொடர்ந்து வட்டமதி வந்ததுபோல்
தாலமிசை வெள்ளித் தளிகைசெய்து—மேலை

(பிரதி)—1முன்கிடந்த. 2வாளியதின். 3கோலாழும். 4வில்வாங்கு. 5பொராளனமஞ்.

அரிதேடச் சித்ரசபை யம்பலங்கொண் டாற்குந்
திரிகூட வம்பலமுஞ் செய்து—[1]பரிவாகிக்
குற்றாலந் தன்னிற் குடிகையர்கோன் செய்தபணி
முற்றாக நானுரைக்க முற்றுமோ—பற்றாகக்
காணவென்று லாயிரங்கண் கண்டுவகை யாய்ப்புகழ
வேணுமென்று [2]லாயிரநா வேணுமே—நாணுவக்குச்
செய்தபடி யேயிலஞ்சித் தேவசே னாபதிக்குக்
கைதவர்கோன் [3]முன்முகிந்த கற்பணியில்—நொய்துபடா
மண்டபமுஞ் சாயாமல் வாழ்கிணறுஞ் சாயாமல்
விண்டபெருங் கற்றூணும் வீழாமல்—தொண்டர்குழாஞ்
சற்றுமலை யாமற் றரியிட்டா னம்மம்மா
கொற்றமுடிப் பாண்டியனாற் கூடுமோ—முற்றுஞ்
சரவணை மண்டபமோ சக்ரகிரி போலத்
திருமலை [4]தன்சித் திரமோ—பெருகுசாரிழுக்
காசிவிசு வேசர் கனத்தகொலு மண்டபமோ
மாசிலாத் தென்புலியூர் மண்டபமோ—பேசும்
வரகுணன்றன் கோவில் வளமாக்கிப் பூசை
[5]விரகுபண்ணிக் கொண்ட விதமோ—திரமாகக்
கட்டளைகள் வைத்ததோ கட்டளைக்கெல் லாநிலங்கள்
விட்டசம்ப்ர தாய விதங்களோ—சிட்டனிவன்
சென்ம [வ]ைதராச் [6]சித்தனெனக் கொண்டாடந்
தன்ம மொருவடிவாய்த் தானவந்தான்—தொன்மையாய்
ஆதியுல காளை அகிலே சனைப்பரவி
நீதியுல காள நெறிபெற்றோன்—வீதிபெறுந்
தென்காசி [7]நாடனைத்துஞ் சின்னணைஞ்ச பூபாலன்
தன்காசு மாணையுமே தான்செலுத்திப்—பொன்காசு[ம்]
உண்டென்று வாழ்குடியை யூர்மணிய காரர்செய்யுந்
தெண்டம் பருமபிடிகள் தீர்ப்பித்துப்—பண்டைநாட்
காட்டுவரி யானகொடுங் காடுகா வல்வரியை
வீட்டுவரி போலே விலக்குவித்து—நாட்டில்
இடையிடைஞ்ச லாய்ச்சனங்க ளேழுமலை யேறிப்
படைபடையென் றோடுபயந் தீர்த்துக்—கொடைநீதிச்
சோழவள மாக்கினன் சுக்ரீபன் வந்தானென்
றேழைச் சனங்களெல்லா மேத்தெடுப்பத்—தாழாது
நன்குடிகை தாங்கி நடத்துமனு நீதிகொண்டு
தென்குடிகை யூராளுஞ் சீராளன்—என்கோன்
அனந்தபற்ப [8]நாபனரு ளாரமுத வாரி
சினந்தவர்கள் [9]பீடறுக்குஞ் சிங்கம்—முனஞ்சேர்
தயித்திய[ன்]முன் மூவடிக்காய்த் தான்வடிவாய்ச் சென்ற
வயித்திய நாதமகி பாலன்—செயித்தபெருந்
தென்பாண்டி ராச்சியமும் [10]செஞ்சிதஞ்சை கோளமுந்
தன்பாற் கவிக்குந் தனிக்குடைக்கீழ்ப்—பொன்சேர்

(பிரதி)—1பரிவாக்கி. 2லாயிரநாள். 3முன்முகிர்த்த. 4தான்முகிர்த்த சித்திரமோ. 5விரவு. 6சிததனெனவே. 7நாடனைத்துந் துரைச். 8நாதனரு. 9வீடறுக்குஞ். 10தெஞ்

வடகரைக்குள் ளேயிருந்து [1]வற்கீழ் கரைக்குங்
குடகரைக்குஞ் சீட்டெழுதுங் கோமான்—அடல்பெருகுந
தென்மதுரை ராச்சியத்திற் செங்கோல் செலுத்துமொரு
தன்மதுரை செய்சுமுக [2]தானபதி—சொன்னபதி
சேதுபதி மெச்சுந்த்ரி கூடபதி காத்தமண்ட
லாதிபதி தென்கிழவை யாதிபதி—நீதிபதி
செம்புலிக்கு மாராதுரைச் சின்னணைஞ்ச பூபதியாம்
நம்பெரிய சாமி நரபதிக்குப்—பமபுமிசைச
சீர்நாட்டி யெங்குஞ் செயத்தமப நாட்டியொரு
பேர்நாட்டும் வாசற் பிரதானி—போர்நாட்டும்
மண்டலிகர் கண்டன் மருதூர் வயிததியப்பன்
பண்டைநாட் செய்தபெரும் பாக்கியத்தாற்—கொண்டாடுஞ்
சங்கநிதி பற்பநிதி தானிரண்டு பார்புரக்கு
மங்கலமாய் வந்துதித்த வண்மைபோற்—பொங்குபுகழ்த்
தந்தச் சிவிகைச் சவரிப் பெருமாள்முன்
வந்தபிசசப் பிள்ளை மகிபதிக்குச்—சொந்தம்
உரிமைக் குரித்தா யுரியகிளை தாங்கு
மருமைத திருமருக [3]ஞேஞன்—பெருமையிட்டுப்
பாவேந்த ரைப்புரக்கும் பாங்காய்த் தமிழ்நாட்டு
மூவேந்தர் வநத முறைமைபோல்—ஆவல்
பெயரா ருடைப்பெருமாள் பிள்ளைப் பெருமாள்
செயராக் கதப்பெருமாள் தீரன்—நயகுணவான்
குற்றால நாதனென் னுங் கொண்டலிரு பேர்தமக்கும்
பற்றாக முன்னுதித்துப் பார்புரப்போன்—பெ[ா]ற்றாரு
வென்னுங் கொடையா ளிருளப்ப பூபதிக்கு
முன்னுதித்து வந்த முகிர்த்தவான்—நன்னகர்க்கோன்
பொங்குமுச்சிக் கட்டளையும் பூஞ்சப்ர முஞ்சமைத்த
சங்குமுத்து ராயர் தயாநிதிக்கும்—எங்குமுன்
தேசந் திறையளக்கத் தென்மருதூ ராளவநத
போசன் வயிததியப்ப பூபதிக்கும்—பேசுகன
வாகன் விவேகன் மதுரகவி யுத்தண்டன்
நாகரிகன் குற்றால நாதனுக்கும்—மோகமாய்
மால்பெரிய மின்னார் மடலெழுதுஞ் சங்கராம
மால்பெரிய நாயகம தீபதிக்கும்—சா[ல்]புடைய
நண்பு மறிவு நயகுணமும் நீங்காத
செண்பகக் குற்றால தீரனுக்கும்—பண்பாகக்
கைத்திறஞ்சேர் பாண்டவர்க்குக் [4]கண்ணன்போ லன்புடைய
மைத்துனப்ர தாப மகராசன்—முததுமுததாய்
நாவியலுஞ் சொற்புலவோர் நாட்டுபுரா ணங்களொடு
காவியத்தின் முன்பதிக்குங் காப்புப்போல்—[5]மேவியதான்
ஆற்றுந் திருப்பணிக ளாயிரங்கோ டிக்குமுன்னே
போற்றும் விநாயக பூசைபோல்—ஏற்றமாய்
நம்பலவி ளுயகராம் நம்பர்திருச் [6]சன்னிதிக்கோ
ரம்பலவி நாயகனுண் டாக்கிஞேன்—சமபு

(பிரதி)—1வற்கரைக்குங் கீழ்கரைக்குங். 2தாளுபதி. 3ஞகிஞேன். 4கன்னன்போ. 5மேவியதின். 6சன்னதி.

பண்பன் சுகீர்த்திப் பரிபாலன் பூமடந்தை
நண்பன் வயித்திய நாதமன்னன்—முன்றிலொடு
வீடெங்கும் பொன்னுற வீதிதமிழ் நாறுமுள்ளி
நாடன் வயித்திய நாதமன்னன்—நீடாளுந்
தேசத்துக் காரியமுஞ் சீமைவழிக் காரியமுங்
காசினியி லோங்குகுடிக் காரியமும்—பேசும்
அரண்மனைக் காரியமு மங்கங்கே யுள்ள
கரைமணிய காரர் கருத்தும்—துரைகிழவைச்
சின்னணைஞ்ச ராய செயபெரிய சாமிமன்னன்
தன்னுடைய காரியம்ப்ர தானமாய்—மன்னுஞ்
சிவகாரி யக்கணக்குந திட்டவட்டங் கேட்டு
விவகாரஞ் செய்திருக்கும வேளை—யவரவரே
என்கரும முன்கருமமென்றுசில மன்னியர்கள்
தங்கருமங் கேட்குஞ் சமுகத்தில்—சிங்கேறு
போவிருநத கோனைப் புகழ்வயித்ய நாதனையித்
தாலம் புகழ்துரையைச் சந்தித்தேன்—மேவிரவி*

* * *

மெய்யாக நான்முகத்தோன் வெள்ளையன்ன மேறுவது
மய்யாவுன் பேரி லருமைகாண்—பொய்யாமல்
மண்ணி விரவொழிய வான்கதிர்கள் வீசுமுனை
விண்ணி விரவியென வேண்டாமே—தண்ணமுதாற்
சந்திரனும் நீயே தரைமேல் மகவானென்
றிந்திரனுர் பேருமுனக் கேற்குமே—மந்திரிநீ
யில்லாத நாடு மிருட்டுநா டல்லவோ
செல்லா தொருகருமஞ் செல்லுமோ—வல்லாளா
மேகததி லேபிறந்தாய் மேதினியி லேவளர்ந்தாய்
லோகத்தை நீவளர்த்தா யுத்தமா—மாகத்தில்
கற்கோட்டை யிட்ட கடல்சூ ழுலகமெல்லாம்
நெற்கோட்டை யிட்டதுரை நீகண்டாய்—வற்கான
காசியிம சேதுமுதற் கன்னியுமபொன் னித்துறையும்
தேசமெங்கு முன்றனாணை செல்லுமே—வாசமாய்ச்
சொல்லு மராடங் துலுக்காண ராச்சியங்கள்
வல்லகிளைக் கெல்லாம் வகுப்புவைத்தாய்—அல்லாமற்
கோதும்பை யென்னுமொரு கோட்கார னைக்குறியாய்ப்
போதென்று தாணையமும போடுவித்தாய்—வீதி
வடவேங் கடந்தொடுதது வாழ்குமரி மட்டுந்
திடமாக நீயிருக்குஞ் சீமை—கடலோடி
மூங்கிரிசு சீமைமுத லேழுதீ வாந்திரமும்
பொங்குகப்ப [1]லேபவனி போய்வருவாய்—ஙங்கண்மேல்
வாரந் தவமுன் வயித்தியநா தன்குடிகை
பாரம் பரைபெருகு பாக்கியவான்—பேருழவால்
ஆண்டிருக்கும் பண்ணை யரசிருக்கு மாஸ்த்தான
பாண்டிவள நாடுனக்குப் பட்டணங்கா—ணீண்டவயற்

---

* ஏட்டுப்பிரதியில் இதன்பின் மூன்றுபக்கம் எழுதப்பெறவில்லை ; சுமார் 18 கண்ணிகள் இங்கே விடுபட்டிருக்கலாம். (பிரதி)—1லெப்பலெறிப்.

காடெல்லாம் வீடு களமெல்லா மூடையங்கள்
நாடெல்லாஞ் செங்கோல் நட[ா]த்துமிடம்—நீடுபொலி
செய்யும் பொலிமுகமுஞ் சேருங் களஞ்சியமும்
அய்யன் கொலுவிருக்கு மாசாரம்—வையகத்திற்
பாவீடு பள்ளியறை பட்டடையு மொப்பரிக்கை
கோவேயுன் பெருந்தரிக்கங் கொஞ்சமோ—[1]சேவே
கனகுதிரை யேறிமொட்டைக் காளைமே லேறி
[2]மனகுதிரை யேறுவாய் மன்னா—தினமுமறை
சொன்னவெல் லாமுனக்குச் சொல்லும் புரோகிதர்கள்
மன்னவரெல் லாமுனக்கு மந்திரிமார்—உன்னுடைய
சேனை பதிகள்பயிர் செய்வாருங் காராளர்
தானை பதிகள்செட்டிச் சந்திரிமார்—ஆனை
சூழிக் கலப்பை நுகையேயுன் [3]மந்திரவாள்
மேழிக் கொடியுனது மேல்விருது—மேழிகொடு
கையுடைய மள்ளர் கனபடைக்குஞ் காலாட்கள்
செய்யுழவு கோலுனக்குச் செங்கோலே—வெய்யபெருங்
கம்புதினை சோளமென்று காடெலக் கேகிடக்கும்
வம்பருனைப் போற்றுகுறு மன்னியர்கள்—அம்மையென்றும்
வாய்வருக்குஞ் சாமியென்றும் வன்குதிரை வாலியென்றும்
காய்வருத்த புன்காடைக் கன்னியென்றும்—பேய்வரகு
நீதியற்ற [4]கேப்பையென்றும் நித்தமுனக் கேவல்செய்யுந்
தாதிமக்கள் மூப்பிமக்கள் தான்கண்டாய்—சீதவயல்
மட்டடங்காத் தீங்கரும்பு மஞ்சளிஞ்சி வாழையெல்லாம்
அட்டதிக்குங் காத்தநலை யாரிமார்—எட்டயறு
மொச்சை கடலை மூதுவை துவரையெல்லாங்
கச்சைகட்டு மூழியக் காரர்காண்—இச்சைதரும்
மாங்காய் பலாக்காய் மழுதலைங்காய் மற்றுமுள்ள
தேங்காயு முன்னேடுஞ் [5]சேவகர்காண்—பாங்கான
வெண்கலமா யீயமாய் வெள்ளிசெம்பு பித்தளையாய்
மண்கலமாய்ப் பொன்கலமாய் வந்தேத[ா]ரு—[6]முன்கவரு
போசனமாய் நீவருத்த புண்ணியவா னைத்தினமு
மாசனமாய்த் தாங்கிநிற்பா ரல்லவோ—நேசனே
நெல்லென்ற வுன்பேர் நிகழ்த்தமுடி யாதெனினுஞ்
சொல்லென்ற வுன்னருளாற் சொல்லுவேன்—நல்லநல்ல
கோடைக் குறுவை குளவாளை செங்குறுவை
காடைக் கழுத்தான் கருங்குறுவை—நீடிய
மொட்டைக் குறுவை முழுத்தநெடு வாற்குறுவை
மட்டுப் படாதகுறு வைக்கிளையான்—கட்டையன்
மூக்கன்சம் பாச்சிறிய முள்ளுச்சம் பாமிளகி
காக்கைநிற மான கருஞ்சம்பாத்—தாக்கான
நேரிய சம்பா நிறைந்த புழுகுசம்பா
சீரகச்சம் பாவழகு செஞ்சம்பாப்—பேரா[ன]

(தொடரும்)

---

(பிரதி)—1சேவேறிக். 2மனகுதிரை. 3மந்திரிவாள். 4கெற்ப மென்றும். 5சேவிகர் காண். 6முன்கவெரு.

# சமரச சன்மார்க்க போதம்

(தொடர்ச்சி)

66. பெண்மையினின்றும் தாய்மையும், தாய்மையிலின்றும் இறைமையும் மலர்கின்றன.

67. பெண்மையில் பிள்ளைப் பேற்றிற்குரிய காதலும், தாய்மையில் பயன் கருதா அன்புத் தொண்டும், இறைமையில் பிறர்க்கென வாழ்தலும் திகழும்.

68. பெண் வெறுங் காமக்கூடமன்று.

69. பெண்ணை வெறுங் காமப்பொருளாகக் கருதி வாழ்வது மடமை. பெண்ணிடத்துள்ள 'பெண்மை தாய்மை இறைமை' என்னுந் தன்மைகளை உணர்ந்து நடப்பவர் பெண் பிறவியின் விழுப்பம் உணர்ந்தவராவர்.

70. பெண் ஆண் பிறவியில் உயர்வு தாழ்வு என்பது கிடையாது. இருபாலுள் உயர்வு தாழ்வு கற்பிப்பது இயற்கை நுட்பத்தை உணராமையேயாகும்.

71. ஒரு நாட்டின் நாகரிகம் அந்நாட்டின் பெண் மக்கள் நிலையைப் பொறுத்து நிற்கிறது.

72. பெண்ணுரிமையுள்ள நாடு நாகரிக நாடு. அவ்வுரிமையில்லா நாடு அநாகரிக நாடு.

73. உரிமை என்பது பெண் ஆண் இருபாலார்க்கும் பொதுவாயிருப்பது. இயற்கையில் ஆணுக்குள்ள உரிமை பெண்ணுக்கும் உண்டு; பெண்ணுக்குள்ள உரிமை ஆணுக்கும் உண்டு.

74. ஒருவன் ஒருத்தியையும், ஒருத்தி ஒருவனையும் மணந்து வாழ்வது நாகரிகம். ஒருவன் பல மகளிரையும், ஒருத்தி பல ஆடவரையும் மணந்து வாழ்வது அநாகரிகம்.

75. ஒருத்தி தன்னியலுக் கியைந்த ஒருவனையும், அவ்வாறே ஒருவன் தன்னியலுக்கியைந்த ஒருத்தியையும் காதலித்து மணந்து கொள்வது இயற்கைக்கு அரண் செய்வதாகும்.

76. காதல் மணம் நலந் தருவது. காம மணமும், கட்டுப்பாட்டு மணமும், இன்ன பிறவும் நலந்தருவனவாகா.

77. காதல் மணததில் பிரிவு நிகழ்தல் அரிது. மற்ற மணங்களில் பிரிவு நிகழ்தல் கூடும்.

78. பெண் ஆண் கூட்டுறவு என்பது தெய்வத்தன்மை வாய்ந்தது. அதனினுந் தெய்வத்தன்மையை எழுப்பவல்ல அன்பு தியாகம் தொண்டு முதலிய நறுங்குணங்கள் வளர்தல் வேண்டும்.

79. உளங்கலந்த கூட்டுறவு அழுக்காறு அவா வெகுளி முதலிய தீக்குணங்களை ஒழித்து, அன்பு தியாகம் தொண்டு முதலிய நறுங் குணங்களை வளர்க்கும்.

80. நறுங் குணங்களை வளர்க்கும் ஆற்றல் காதல் மணத்துக்கு உண்டு.

81. பெண் ஆணையும், ஆண் பெண்ணையுங்காலமுழுவதும் நீத்துத்தனித்து வாழ்வது இயற்கை வாழ்வாகாது. அவ் வாழ்வினர் அன்பின் தன்மையையுங் காணாது பிறவியைப் பாழ்படுத்திக் கொண்டவராவர்.

82. மண்ணையும் பொன்னையும் வெறுப்பதும் துறவு என்று சில இடங்களில் கருதப்படுகிறது. இக் கருத்து இயற்கை வாழ்விற்கு முரண்பட்டது.

83. மண்ணும் பொன்னும் உயிர்களின் வாழ்விற்கென இயற்கை அன்னையால் வழங்கப்பட்டன. மண்பொன் முதலியன வாழ்விற்கு இன்றியமையாதன.

84. ஒவ்வொருவரும் தத்தம் இயல்புக்கியைந்த ஒவ்வொருவித முயற்சியில் தலைப்பட்டு அறவழியில் பொருளீட்டுதல் வேண்டும். முயன்று பொருளீட்டி வாழ்வு நடாத்தாது, சோம்பித்திரிந்து பிறர் கையை எதிர்பார்த்து நிற்பது வாழ்வாகாது.

85. பிறர்க்குப் பயன்படாத முறையில் பொருளைச் சேர்த்து வைப்பது பாவம்,

86. குடும்பச் செலவுக்குப் போய்ப பொருள் எஞ்சி நிற்குமாயின், அதனைக் கல்விச்சாலை, தொழிற்சாலை, வைத்தியச்சாலை முதலிய அறச்சாலைகட்குப் பயன்படுத்தல் வேண்டும். இதுவே மண்பதைக்குத் துணைபுரியும் முறைமை.

87. உழைத்துப் பிழைக்கத் தக்க உடல் நலம் வாய்க்கப் பெற்றோர்க்குச் சோறு கூறை அளித்து உதவிபுரிவது பாவம். அவர்களைச் சோம்பேறிகளாக்குவது பெரும்பாவம்.

88. உழைத்துப் பிழைக்க இயலாத முடவர்கட்கும், குருடர்கட்கும், தீராப் பிணியாளர்கட்கும், திக்கற்ற குழந்தைகட்கும் இவரனைய பிறர்க்கும் சோறு கூறை அளித்து உதவி புரிவது புண்ணியம்.

89. வட்டிக்குக் கடன் வாங்குதலுங் கூடாது; வட்டிக்குக் கடன் கொடுத்தலுங் கூடாது.

(புறம் அகம்)

90. இயற்கை, ஒன்று. அதன் காரியம் பலவிதம்.

91. இயற்கை பலவிதமாய்க் காரியப்பட்டு ஆங்காங்கே தட்பம் வெப்பம் முதலியவற்றை வேறுபடுத்தலால், உலகில் பலவித மொழி நிறம் வழக்க ஒழுக்கங்கள் முதலியவற்றைக்கொண்ட நாடுகள் பலவாகப் பிரிந்து கிடக்கலாயின.

92. நாடு என்பது வெறும் நிலப் பரப்பன்று.

93. கல்வி தொழில் அரசு வழக்க ஒழுக்கம் நாகரிகம் முதலியவற்றாலாகிய ஒன்று நாடு (Nation) என்பது.

94. இயற்கை அன்னையின் கருணை வழிக் காரியப்பட்ட அவ்வந் நாட்டுக்குரிய தன்மைகளுக்கேற்ற வண்ணம் அவ்வந்நாட்டார் வாழ்வு நடாத்துவது சிறப்பு.

95. ஒரு நாட்டார் தம் வழக்க ஒழுக்கங்களை மற்றொரு நாட்டாரிடை வலிந்து புகுத்துவதும், இவர்கள், அவர்கள் வழக்க ஒழுக்கங்களை ஆராய்ச்சியின்றி ஏற்று நடப்பதும் இயற்கையின் பாற்பட்ட செயல்களல்ல.

96. தாய்மொழிவழிக் கல்வி பயில்வது இயற்கைக்கு அரண் செய்வதாகும். இயற்கை அறிவு விளங்கியபின்னை மற்ற மொழிகளைப் பயில்வது நலந்தரும்.

97. அவ்வந்நாட்டு மொழியில் அவ்வந்நாட்டுக்கு வேண்டப்படும் கலைகள் இயற்கை அன்னையால் அருளப்படுகின்றன.

98. நாட்டுக் கலைகளை அழியவிடின் நாடு பல நலன்களை இழந்து வாட்டமுறும்.

99. நாட்டுக் கலைகள் நாட்டின் உயிர். அவைகளை ஓம்புவது இயற்கை அன்னையின் அருள் நாடுவதாகும்.

100. இயற்கையில் அமைந்த நாடு மொழி கலை முதலியவை அழியுமாறு எந்நாடு இடந்தருகின்றதோ, அந்நாடு இயற்கை இன்பம் நுகர்தல் அரிது.

101. அவ்வந்நாடு தன்தன் இயற்கை வழி இயங்குகிறதா என்று பார்த்துக்கொள்ள அரசு என்பது ஏற்பட்டது.

102. அரசுகள் இயற்கைச் சட்டத்துக்கு மாறுபட்டு நடந்தால் உலகில் அமைதி நிலவாது.

103. இயற்கைஇறை பேரரசு. அவ்வரசின் உறுப்புக்களாக அரசுகள் இயங்குதல் வேண்டும். பேரரசை மறக்கும் அரசு மண்பதைக்கு நலஞ்செய்வதாகாது.

104. இயற்கைச் சட்டத்தின் வழி இயங்கும் அரசே அரசாகும்.

105. ஒரு நாட்டார் மற்றொரு நாட்டாரைப் பற்றுவதும், இவர்கள் அவர்கட்கு எளிவருவதும் இயற்கைச் சட்டத்தை மீறுவதாகும். நாளடைவில் இரு சாரார்க்கும் கேடு நேரும்.

106. நாடுகளின் பிரிவுகள் இயற்கையால் உண்டாக்கப்பட்டன. பிரிவுகள் இயற்கையின் காரியப்பாடுகளால் நிகழ்வன. காரியப்பாடுகளுக்குக் காரண

மாக நிற்பது ஒன்றே. அவ்வொன்றை உயிராகவும் காரியப் பாடுகளை உடலுறுப்புகளாகவும் கொள்ளுதல்வேண்டும்.

107. நாடுகள் ஒன்றோடொன்று பிரிவுற்றிருந்தாலும், அவைகள் ஒன்றுடன் ஒன்று பிணங்குதல் கூடாது. அப்பிணக்கம் நாடுகளையும் நாட்டின் வழி உலகையும் துன்பஞ் செய்வதாகும்.

108. உயிர் ஒன்று. அதன் போர்வையாகிய உடல் பல உறுப்புக்களைக் கொண்டது. உடலின் உறுப்புக்கள் ஒன்றோடொன்று பிணங்கினால் உயிர் வாழ்வு என்னாகும்? உயிர் வாழ்வுக்கு உறுங்கேடு உடலின் உறுப்புக்கட்கெல்லாம் நேர்தல் இயல்பன்றோ? ஆகவே நாடுகள் ஒன்றோடொன்று பிணங்காது, இணங்கி வாழ்தல்வேண்டும். அப்பொழுதே மன்பதை இயற்கையோடியைந்த இன்ப நுகர்தல் கூடும்.

109. நாடு நிறம் மொழி முதலியவற்றை யொட்டி மக்களுக்குள் காணப்படும் வேற்றுமைகள் புறத்தோற்றத்தின் பாற்பட்டன. மக்கள் அகநிலையில் எவ்வித வேற்றுமைத்தோற்றமுமில்லை.

110. அக அமைதிக்குப் புற ஒற்றுமை இன்றியமையாதது.

111. நாடு நிறம் மொழி முதலிய புற வேற்றுமைகளைக் கொண்டு மக்களுக்குள் உயர்வு தாழ்வு கற்பிப்பது அறியாமை.

112. பிறப்பில் உயர்வு தாழ்வு சில விடங்களில் கருதப்படுகிறது. இக்கருத்து ஆன்ம நேயத்தை அழிப்பதாகும்.

113. பிறப்பில் உயர்வு தாழ்வு கருதுவது ஜீவகாருண்யமாகாது.

114. பிறப்பில் உயர்வு தாழ்வு கருதும் இடம் நரக பூமியாகும்.

115. பிறப்பில் மக்களெல்லாரும் சமத்துவமானவர்கள். எல்லார் உடல்களும் பூதங்களால் ஆக்கப்பட்டன. நிலம் நீர் நெருப்பு காற்று ஒளி முதலியன எல்லார்க்கும் பொதுவாகவே துணை செய்கின்றன. இன்பதுன்பங்கள் எல்லார்க்கும் பொது.

116. உயிரில் எவ்வித வேற்றுமையுமில்லை.

117. எல்லா உயிர்களினும் வீற்றிருக்கும் பரம்பொருள் ஒன்றே. அது பொதுவாக எல்லாரிடத்திலும் வீற்றிருக்கிறது. ஒரே பரம் பொருளைத் தாங்கியுள்ள உயிர்களுக்குள் உயர்வு தாழ்வு கற்பிப்பது அஞ்ஞானம்.

118. எல்லா உயிர்க ளிடத்திலும் வீற்றிருக்கும் பரம்பொருளைஉணர்ந்து தெளியும் ஒருவன் தனக்கும் மற்ற உயிர்கட்கும் உள்ள தொடர்பை உணர்தல் கூடும். பிற உயிர்கட்குத் தீங்கு செய்வது தன்னுயிர்க்கே அத்தீங்கு செய்வதாவது அவனுக்கு நன்கு விளங்கும்.

119. தன்னுயிரைப் போல மன்னுயிரைப் பார்க்கும் தெய்வநிலை எப்படிக் கூடும்? அக நோக்கைப் பெருக்கப் பெருக்க அந்நிலை கூடும்.

120. அக நோக்கைப் பெருக்காது புற நோக்கைமட்டும் பெருக்கப் பெருக்கப் பிளவு, பிணக்கு, போர், கொலை, கொள்ளை, பொய், நிந்தனை, ஏமாற்றம், இன்ன பிற பெருகி உலகை இடர்ப்படுத்திக்கொண் டிருக்கும்.

121. அகநோக்கில் கருததுச்செலுத்தாது, புறநோக்கிலேயே கருத்துச் செலுத்திக்கொண்டு, சகோதர நேயத்தைப்பற்றிப் பேசப்படும் பேச்சுக்களாலும், எழுதப்படும் எழுத்துக்களாலும் சிறிதும் பயன் விளையாது.

122. அக நோக்கு எனில், பெண் ஆணையும், ஆண் பெண்ணையும் துறந்து, வீட்டைவிட்டுக் காடு மலைகட் கோடித் தனித்திருந்து மூச்சைப்பிடிப்பதன்று. துறவு நுட்பம் மேலே சொல்லப்பட்டது.

123. பெண் ஆணுடனும், ஆண் பெண்ணுடனும் வாழ்தலால், தீயகுணங்கள் தேய்ந்து அன்பு வளர்கிறது. அன்பு அகநோக்குப் பெருக்கத்துக்கு உறுகருவி.

124. அகநோக்கு விரியவிரியப் புற வேற்றுமை பொன்றும். அந்நிலையில்

உயிர்க்கும் இறைக்குமுள்ள தொடர்பு தெளியப்படும். அத் தொடர்பைத் தெளியத் தெளிய உயிர்களிடத்து அன்பு என்னும் சகோதர நேயம் பெருகும்.

125. உயிர்க்கும் இறைக்கு முள்ள தொடர்பு இயல்பாயிருப்பது. அதைத் தெளிவது அநுபூதி (Realisation) எனப்படும்.

126. உயிர்க்கும் இறைக்கு முள்ள தொடர்பைத் தெளிவது ஞானம்; அதைத் தெளியாதிருத்தல் அஞ்ஞானம். இத்தெளிவிற் கென்றே தநு கரண புவன போகங்கள் இயற்கையில் ஏற்பட்டன. இவைகளை வெறுத்துத் துறந்தால் அநுபூதி உண்டாகாது. ஆதலால் அவைகளை வெறாது அவைகளுடனிருந்து கொண்டே நீக்குணங்களைப் போக்கி அன்பைப் பெருக்கிப் பெருக்கி அநுபூதி பெறுதல் வேண்டும்.

(சமயம்)

127. அன்பைப் பெருக்கி அநுபூதி பெறுதற்குரிய மார்க்கம் சமயம் என்பது.

128. சமயம் என்பது சத்தைத் தெளிதற்குரிய மார்க்கம்.

129. சத்துக்குரிய மார்க்கம் இயற்கை என்பது மேலே சொல்லப்பட்டது. ஆகவே இயற்கை நெறி சமயம் என்க.

130. இயற்கையோடியைந்த வாழ்வு சமய வாழ்வாகும்.

131. சமய வாழ்வு வேறன்று; இயற்கை வாழ்வு வேறன்று.

132. உலகியல் வாழ்வினின்றும் சமயம் பிரிந்து நிற்கும் ஒன்று என்று நினைப்பது தவறு. வாழ்வின் ஒவ்வொரு கூறிலும் சமயம் உண்டு.

133. 'உலக வாழ்வினின்றும் பிரிந்து நிற்பது சமய நெறியில் நிற்பது' என்று கருதுவது, கானற் சலத்தை நாடி ஓடுவது போன்றதாகும்.

134. வாழ்வின் ஒவ்வொரு கூறிலும் தூய்மையாயிருப்பது சமய நெறி நிற்பதற்கு அறிகுறி.

135. சமயம் என்பது, வெறும் புறக் கோலம் என்றும், சம்பிரதாயக் கட்டு என்றும் பல இடங்களில் திரிபாகக் கொள்ளப்பட்டிருக்கிறது. சமயம் வெறும் புறக்கோலமுமன்று; சம்பிரதாயக்கட்டுமன்று.

136. புறக்கோலங்களும், சம்பிரதாயக் கட்டுகளும், அவைகளையொட்டி எழுந்த வழக்க ஒழுக்கங்களும் சமயத்தின் பெயரால் புரோகிதர்களால் நுழைக்கப்பட்டன. இவைகள், உயிர்க்கும் இறைக்கும் இயல்பாயுள்ள தொடர்பைத் தெளியப்படுத்தும் மார்க்கமாகிய சமயம் ஆகா.

137. புறக்கோலங்களும் சம்பிரதாயக்கட்டுகளும் இவைகளையொட்டி எழுந்த வழக்க ஒழுக்கங்களும் புரோகித மதங்களின் பாற்பட்டன.

138. புரோகித மதங்கள் பல. அவை ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு விதமாக விளங்கும்.

139. புரோகித மதங்களில் கட்டுப்பாடுகளிருத்தலால், அவை உயிர்க்கும் இறைக்குமுள்ள தொடர்பைத் தெளியப்படுத்தத் துணை செய்யா. அத்துணை செய்யாமையால் அம்மதங்களால் சகோதர நேயம் வளர்வதில்லை. அவைகள் சகோதர நேயத்தைக் குலைத்துக் கொண்டிருக்கின்றன என்றுங் கூறலாம்.

140. புறக்கோலங்கள் தொடக்கத்தில் சுகாதாரத்துக்கெனக் கோலப்பட்டன. நாளடைவில் அவைகள் சமயப் பெயரில் குடிபுகுந்தன.

141. சுகாதாரத்துக்கு முரண் செய்யும் கோலங்களும் இந்நாளில் வாழ்வில் புகுந்துள்ளன. அவை, களையப்படல் வேண்டும். சுகாதாரத்துக்கு அரண் செய்யும் புறக்கோலங்களால் தீங்கில்லை.

142. புறக்கோலங்களைப் பூண்பது கடவுள் நெறி நிற்பது என்று எண்ணுதல் தவறு. புறக்கோலங்கள் இறையை உணர்த்தா. இறையை உணர்த்துவது இயற்கை.

143. சம்பிரதாயங்கள் சமூக (Society) நலன் கருதித் தொடக்கத்தில் வகுக்கப்பட்டன. அவைகளில் மூடப் பழக்க வொழுக்கங்கள் நாளடைவில் குடி புகுந்தன. இவைகட்கும் கடவுள் நெறிக்கும் தொடர்பில்லை.

144. சமூக நலனுக்குத் துணை செய்யும் சம்பிரதாயங்களால் தீங்கு கிடையாது.

145. புறக்கோலங்களும் சம்பிரதாயங்களும் மதங்களாக நாளடைவில் புரோகிதர்களால் அறிவுறுத்தப் பட்டன.

146. புரோகித மதங்கள் புரோகிதர்களால் காணப்பட்டன.

147. சத்துக் குரிய மார்க்கமாகிய சமயம் ஒருவரால் காணப்படாதது; அஃது என்று மிருப்பது. எங்கே அது மக்களால் திரிபாக உணரப்படுகிறதோ அங்கே குருமார்களில் எவராவது ஒருவர் தோன்றி, அதன் நுட்பத்தை அக்கால தேசவர்த்தமானங் கட்கேற்ற முறையில் அவர் விளக்கிச் செல்வர்.

148. புரோகிதர்கள் குருமார்களல்ல. புரோகிதர்கள் காமக் குரோதங்களால் பீடிக்கப்பட்டவர்கள். குருமார்கட்குக் காமக் குரோதங்களில்லை. குருமார்கள் யார் என்பதும், அவர்கள் இயல்கள் இன்ன என்பதும் மேலே சிறிது விளக்கப்பட்டன.

149. புரோகித மதங்கட்கும் கடவுள் நெறியெனுஞ் சமயத்துக்கும் எவ்வித தொடர்புமில்லை.

150. சமயமென்பது என்ன? சமயமென்பது உயிர்க்கும் சத்துக்குமுள்ள தொடர்பைத் தெளியப்படுத்தும் மார்க்கம்; சத்துக்குரிய மார்க்கம் என்று சுருங்கச் சொல்லலாம். சத்+மார்க்கம்-சன்மார்க்கம்.

151. சமயமென்பது சன்மார்க்கம்.

152. சமயம் என்பது ஒன்றா? பலவா? சமயம் ஒன்றே.

153. உலகில் பல சமயங்கள் பேசப்படுதற்குக் காரணம் என்னை? சமயங்கள் பலவில்லை. சமயப் பெயர்கள் பல உண்டு.

154. உலகில் மொழிகள் பலவாயிருத்தலான், சமயத்துக்கும் பெயர்கள் பல வழங்கப்படுகின்றன. உலகில் மண்ணுக்கு எவ்வளவோ பெயர்கள் வழங்கப்படுகின்றன. பெயர் பலவாயிருப்பினும் பொருள் ஒன்றேயன்றோ?

155. சமயத்தின் புறப் பெயர்களை நீக்கி, அதன் அகத்தை நோக்கின், பொருள் ஒன்றாயிருத்தல் புலனாகும்.

156. பல சமய உணர்ச்சிக்குச் சில புறக்கோலங்களும் காரணமாக நிற்கின்றன. அவரவர் புறக்கோலங் கொண்டு அவரவர் இச்சமயத்தவர் இச்சமயத்தவர் என்று சொல்லப்படுகிறார். புறக்கோலங்கள் செயற்கையா இயற்கையா என்பது கவனிக்கப் படல் வேண்டும். புறக்கோலங்கள் பிறப்பில் அமைவதில்லை. உலகில் பிறந்த பின்னை மற்றவர்கள் சேர்க்கையால் ஒருவன் ஒருவித புறக்கோலந் தாங்குகிறான். புறக்கோலங்கள் இயற்கைச் சின்னமாயின், அவைகள் படைப்பில் அமைதல் வேண்டும். அவைகள் படைப்பில் அமையாமையால் அவைகளைச் செயற்கை என்று விளக்கவேண்டுவதில்லை. புறக்கோலங்களைக் கொண்டு சமயப்பாகுபாடுகள் செய்யப்படுதலால், அப்பாகுபாடுகள் இயற்கை யின்பாற் பட்டன அல்ல என்பது வெள்ளிடைமலை. ஆகவே புறக்கோலச் சமயங்கள் உயிர்க்கும் இறைக்குமுள்ள தொடர்பைத் தெளிவிக்கும் அநுபூதி நிலை கூட்டும் இயற்கைச் சன்மார்க்க மெனுஞ் சமயம் அன்று என்பது உணரத்தக்கது.

157. குருமார்கள் ஆங்காங்கே தோன்றி அறிவுறுத்திய சமயம் ஒன்றே. அதுவே சன்மார்க்கமென்பது. சன்மார்க்கம் ஒவ்வொரு மொழியில் ஒவ்வொரு பெயர் பெற்றிருக்கிறது. ஒவ்வொரு பெயரையும் ஒவ்வொரு சமயமாகக் கருதுவது திரிபேயாகும். அத்திரிபு நீண்ட காலமாக உலகில் படிந்து

கிடக்கிறது. ஆனால் அதனால் பெருந் தீமை விளையாது. தமது சமயம் தமது சமயம் என்று அவரவர் கருதுமாறு அவரவர் தமதம் சமயத்தில் நின்று ஒழுகுவாராயின், அவரவர் முடிவில் அடையும் அநுபூதி ஒன்றேயாகும். இதனால் தாந்தாம் பற்றுஞ் சமயவுறுதியினை நெகிழ்க்காது "என் சமயம் மெய்; உன் சமயம் பொய்" என்று வாதத்தில் இறங்கினால் தீமையே விளையும்.

158. சமயத்துக்குஞ் சமய வாதத்துக்கும் எவ்வித தொடர்புமில்லை. இது வேறு; அது வேறு.

159. சமய வாதம் பொல்லாதது. அஃது எரிபகைமுதலிய கொடுமைகளை வளர்ப்பது. எரிபகை முதலிய தீக்குணங்கள் அன்புக்கு வழி எங்ஙனம் உணர்த்தும்?

160, சமயவாதம் சன்மார்க்கத்தை விளங்கச் செய்யாது. சமயவாதம் இழிந்தது; மிகஇழிந்தது.

161. துன்மார்க்கத் துறைகள் பல உண்டு. அவைகளுள் தலையாயது சமய வாதம். சமயவாதிகளே துன்மார்க்கர்களில் தலையாயவர்கள். சமயவாதம் மக்களை விலங்காக்கும்.

162. எக்காரணம் பற்றியும் மக்கள் சமயவாதத்தி லிறங்கலாகாது.

163. மக்கட்குச் சமயம் இயற்கை; சமயவாதம் இயற்கையன்று.

164. பலமொழி பேசுவோர் ஒரு காட்டின்வழியே போதல் நேர்ந்தது. அவர்கள் நெடுந்தூரம் நடந்தமையால் அவர்கட்கு நீர்வேட்கை எழுந்தது. நீர் நிலை சமீபத்திலில்லை. "நீர் எங்கே கிடைக்கும்" என்று ஒருவரை ஒருவர் அவரவர் மொழியில் வேட்கை மிகுதியால் விரைந்து கேட்டனர். ஒருவர் மொழி ஒருவர்க்குத் தெரியவில்லை. ஒருவரை ஒருவர் கேட்பது நீர் என்பதை யுணராது ஒருவரை ஒருவர் திட்டுவதாகக் கருதி ஒருவரோ டொருவர் அறைந்து கொண்டே ஓடினர். இடையிடை அறைஅடியாகவும் உதையாகவும் முதிரலாயிற்று. பலர்க்குக் காயங்களும் உண்டாயின. இவ்வாறு போரிட்டு ஓடினோர் எதிரில், ஓர் அழகிய நீர் நிலை திடீரெனத் தோன்றியது. அதைக் கண்டதும் எல்லாரும் போரை மறந்து, அதனிடம் விரைந்து ஓடி, நீர் அருந்தி இளைப்பாறச் சாய்ந்தனர். அங்கே பல மொழி பயின்ற ஒரு பெரியார் போந்தனர். அவர், நீர் அருந்திப் படுத்துக் கிடக்கின்ற கூட்டத்தினைப் பார்த்தார். "இவர்கள் உடல்களில் காயங்கள் காணப்படுகின்றன. இவர்கள் உறக்கத்திலிருக்கிறார்கள். உண்மை யுணர்தல் வேண்டும்" என்று கருதி ஒரு மரத்தடியில் அமர்ந்து சாதாரிப்பண் பாடினர். அப்பாட்டு, உறங்கிய பலரை எழுப்பி விட்டது. அப்பலரும் அவரைச் சூழ்ந்து கொண்டனர். அவ்வேளையில் அவர் பாட்டை ஒருவாறு முடித்து, அவர்களை நோக்கி "நீங்கள் யார்? உங்கள் உடல்களில் காயங்கள் படுதற்குக் காரணமென்ன?" என்று கேட்டார். நடந்ததை அவரவர் தத்தம் மொழியில் சொற்றனர். பெரியார் உண்மை உணர்ந்துகொண்டு அவரவர் மொழியில் அவரவர் விரும்பிய பொருள் ஒன்றென்று விளக்கிக் காட்டினர். அவர்கள் தங்கள் அறியாமை உணர்ந்து வருந்தினார்கள். சமய வாதிகள் இக்கதை நுட்பத்தை உணர்வார்களாக.

165. பசுக்களிற் சில வெண்மையாக இருக்கின்றன; சில செம்மையாயிருக்கின்றன; சில கருமையாயிருக்கின்றன; இன்னும் வெவ்வேறு நிறமுள்ள பசுக்களுமிருக்கின்றன. சில பசுக்களுக்குக் கொம்புகள் நீண்டிருக்கின்றன; சில வற்றிற்குக் கொம்புகள் வளைந்திருக்கின்றன; பற்பலவாறு கொம்புகளுள்ள பசுக்களுமிருக்கின்றன. இப் பல திறப் புற வேற்றுமைகளுள்ள பசுக்களைக் கறந்தால், இவைகள் யாவும் அளிக்கும் பால் எந்நிறமுடையது? எல்லாப் பசுக்களும் வெண்ணிறப் பாலையே தருகின்

றன. சமயவாதிகள் இவ்வெடுத்துக்காட்டின் நுட்பத்தை யோர்வார்களாக.

165. புறப்பெயர் வேற்றுமைகளிற் கருத்தைச் செலுத்தச் செலுத்தப் பன்மை விகாரமே தோன்றும். புறப பெயர்களை நீக்கி அகத்தை நோக்கினல் ஒருமை இன்பத்தை நுகரலாம்.

166. சத்தொன்றே. அதற்குரியமார்க்கமும் ஒன்றே. அவ்வொன்றை எம்மொழியால் எப்பெயரால் அழைத்தால் என்ன ?

திரு. வி. கலியாணசுந்தரன்.

(தொடரும்)

# தாவீது மன்னரின் தனிக் கோள்

[திரு. T. R. சாரங்கபாணி, M. A.,]

(உரிமை ஆக்கியோர்க்குரியது)

## தோற்றுவாய்

இறைவன் றன் பேரருளை இரந்திரந்து, ஓயாது அழுதழுது கொண்ட மெய்யடியார்களுள் தாவீது மன்னரும் ஒருவராவர். இற்றைக்குச் சுமார் நாலாயிரம ஆண்டுகளுக்கு முன்னர் வந்நிருந்த அவ்வடியாரின் அகதருதுநித்த பக்திமணங் கமழும் இனிய கீதங்கள், மெய்யன்பின் திறனைக் காட்டி, பாவவுணர்வின் பான்மையை நாட்டி, புறவேடத்தை வீட்டி, அகத்தூய்மையை வலியுறுத்தி, அவருக்கு ஆயிரம் ஆண்டுகளுக்குப்பின்னர் உதித்த இரக்ஷகரின் தூய மதத்தின் அடிப்படையாகவும், துணைக்காரணமாகவும் இலங்கும் பேருண்மையைச் சிறிது ஆராய இனிது விளங்கும்.

"கர்த்தராகிய ஆண்டவரே! நீரே என் நோக்கமும் என் சிறு வயது தொடங்கி என் நம்பிக்கையுமாயிருக்கிறீர்" (71 : 5)

"தேவனே ! என் சிறு வயது முதல் எனக்குப் போதித்து வந்தீர் " (71 : 17) என்னும் அவருடைய மெய்புரைகளே இளமைப் பருவத்திலேயே அவர் இயற்கையாகவே இறைவன் மாட்டுக் கொண்ட பேரன்பை வலியுறுத்துகின்றன. ஈசாயின் கடைப் புதல்வராகிய, ஆடுமேய்த்து நின்ற, அவரை ஆண்டவனின் ஆணைக் கேற்பச் சாமுவேல் அபிடேகஞ் செய்தலும இவ்வுண்மையையே ஓதுகின்றது. (I சாமுவேல் 16 : 1-13)

போர்க்கோலங் கொண்டு, போர்க்கவசம பூண்டு, கரத்தில் கொடும வேல் தாங்கி, ஏலா சமவெளியில் "உங்களுள் ஒருவனை என்னுடன் பொருத ஏவுங்கள்" என்று இறுமாபபுடன் இஸ்ரவேல் வீரர்களை, கோளியாத் வீரன் நிந்தித்தலைச் செவி மடுத்து இஸ்ரவேல் மன்னனுகிய சவுலும், இஸ்ரவேல் வீரருங் கலங்க, அதுகாலை உடன் பிறநதவர்களுக்கு உண வெடுத்துச் சென்ற தாவீது "இவனிமித்தம ஒருவருங் கலங்க வேண்டுவதில்லை........சிங்கத்தின் கரத்தி னின்றுங் கரடியின் கையி னின்றுங் காத்த ஆண்டவன் என்னை இப்பெலஸ்தியனின் கரத்தினின்றும மீட்பது திண்ணம்". என்றறைந்து, கோலொன்று தாங்கி, கோளியாத்தை யணுக, இடையர்க் கோனான்றிவரும் இளைஞனைக் கண்ட கோளியாத் வெகுளி விம்ம, அங்கம் அதிர, "அடே! என்னை நாயென மதித்துக் கோல்கொண்டு வந்தனையோ ?.... உன்னுடைய ஊனை ஆகாயப் புள்ளினங்களுக்கும் கானுறை விலங்குகளுக்கும் பகிர்ந்திடுவேன்,"என்று இறுமாப்புடன் அறைய, "நீயோ கவசம் பூண்டு வேல் தாங்கி வருகிருய், நானே இறைவனின் நாம வன்மையான் உன்னை அணுகினேன் " என்று விடையீந்து தாவீது, கோளியாத்தைச் சிறு கல் கொண்டு கலக்கியதை நோக்குழி (I சாமுவேல் 17,) ஈண்டும் இளமையிலிருந்தே தாவீ

துக்குத் தயாபரன் மாட்டிருந்த அன்பே போதருகின்றது.

கோலியாத் இறந்துபட்டதுணர்ந்ததும், பெலஸ்திய சேனை மருண்டு புறங்காட்டி யோடிய வெற்றியுடன் திரும்பிய சவுலையும் இஸ்ரவேல் வீரனையும் எதிர் கொண்டு வரவேற்ற பெண்ணணங்குகள் "சவுல் கொன்றதாயிரம் தாவீது கொன்றது பதினாயிரம்" (I சாமுவேல் 18 : 7) என இசைப்பாடி அழைப்ப கேட்டுத் சவுல் மன்னன், அவன் அகத்துறைந்த கடவுட்டன்மை யகல, ஆங்கு மிருக நீர்மை யடைய, அழுக்காறு மிகுந்து, பாவமறியாப் பக்த சிகாமணியாகிய தாவீதின் உயிரைக் கவர எண்ணினான்; தாவீது மரித்தாலல்லால், தன்னுடைய அரச பதவிக்கே ஹானி நேரிடுமென உன்னினான். அழுக்காற்றால் அறிவிழந்த சவுல் அரசன் இருமுறை தன் ஈட்டியால் தாவீதைக் கொல்ல முயன்றும் தாவீது தப்பியது கண்டு, அச்சமும் அழுக்காறும் ஒருங்கே பொங்கியெழ, பெலிஸ்தியர் கரத்திலேயே தாவீது மடிவது சாலவும் நன்றெனக் கொண்டு, இருநூறு பெலஸ்தியர்களைத் தாவீது கொன்றிடின், தன்னுடைய இரண்டாம் புதல்வியாகிய மீகாளை அவருக்கு மணவினை செய்விப்பதாக வாக்களித்தான். "அரசனின் மருகனாக யான் அருகனல்லேன்" எனத் தாவீது முதலில் மறுத்தும், பின் ஒருவாறிசைந்து, பெலஸ்தியருடன் பொருது, இருநூறு பெலஸ்தியரைக்கொன்று, அச்சின்னங்களுடன் சவுலையண்மி மீகாளை மணந்தார். தன்னுடைய சூழ்ச்சி அவலமாகியதுணர்ந்த சவுல் தயாபரன் தாவீதின் தோன்றாத் துணைவனாக இருக்கின்றாரேயென ஏங்கி, மற்றொரு முறை அவரை ஈட்டியால் கொல்ல முயன்றுந் தப்பியது கண்டு மனம் புழுங்கி, எவ்வகையானும் அவரை ஒழித்தல் வேண்டுமெனத் துணிந்து, அவரை அவருடைய இல்லத்திலேயே அடுத்த நாட்காலை கொன்று வருமாறு தன்னுடைய ஏவலரை ஏவ, தாவீது சவுலின் சூழ்ச்சியை ஓர்ந்து மீகாளின் உதவியால் அன்றிரவே தம் அகத்தை விட்டோடி 59-வது கீதத்தைப்பாடிப் பரமனை வேண்டினார்.

இவ்வாறு இல்லம் நீத்துச் சென்ற தாவீது ராமாவையண்மி ஆங்குச் சாமுவேலிடம் நடந்தன வியம்பி, அவருடன் நயோதிக்குச் சென்றார். தாவீது தன்னை மாற்றித் தப்பிச் சென்றதோர்ந்த சவுல், ஒற்றர் வாயிலாகத் தாவீது நயோதியிலிருப்பதறிந்து, அவரைக் கைப்பிடிக்கத் துடித்து, காவலர்களுடன் நயோதியை யடைந்து, ஆங்குக்கடவுள் தன்மை மிகுந்து விளங்கினான். பின்னர் தாவீது யோனத்தானின் உதவியால் சவுல் தம்மை எவ்வகையானுங் கொல்லத் துணிந்திருப்பது தேர்ந்து, நோபியிலிருக்கும் அகிமெலக் என்னும் ஆசாரியனிடம் பொய்யுரைத்து பரிசுத்த அப்பமும், கோலியாத்தின் பட்டயத்தையும் வாங்கிக்கொண்டு கத்தின் அரசனாகிய ஆகீசிடஞ் சென்றார். தாவீதைக் கண்ட பெலஸ்தியர்கள் "தாவீதுகொன்றது பதினாயிரம்" எனப் பெயர் பெற்ற தாவீது மன்னவன்றோ இவர் எனப் பேசுவது கண்டு, தாவீது அஞ்சிப் பித்தேறியவர் போலும் வேடந்தாங்கி உயிர் தப்பி அதுல்லாம் என்னுங் குகையை யடைந்தார். அதுகாலையே அவர் 56-வது கீதத்தை யோதினார். கோலியாத்தின் பட்டயத்தையும் பரிசுத்த அப்பத்தையும் தாவீதுக்கு அகிமெலாக் அளித்ததை ஒளிந்திருந்த தேவோக் என்னுஞ் சவுலின் பணியாளன் ஒருவன், அச்செய்தியை சவுலுக்கியம்பி, அவன் கட்டளைக் கிணங்க நோபியிலிருந்த ஆசிரியர்களை யெல்லாம் கொன்றான். அவர்களுள் அபியத்தார் என்னும் ஒருவன் தப்பிச்சென்று தாவீதினிடம் நடந்தனவியம்ப, தாவீது 52, 120 முதலிய கீதங்களைப்பாடி இறைவனை இரந்து நின்றார். பின்னர் பெலஸ்தியர் கேகிலாவைக் கொள்ளையடிப்பதறிந்து, கடவுளின் உத்தரவான் தாவீது பெலஸ்தியரை வாட்டி யோட்டிக் கேகிலாவை மீட்டார். தாவீது கேகிலாவைக் காத்த

தோர்ந்த சவுல், கெடுமதி மிகுந்து, அவரைக்கொல்லமுயல்வதுணர்ந்து, தாவீது சீப் என்னும் வனாந்தரத்தில் தம்முடையநண்பர்களுடன் ஓடியொளித்தார். (ரண்டே யவர் 63-ங் கீதம் ஓதினர்) இதனை ஒற்றர்கள் வாயிலாக ஓர்ந்த சவுல் தாவீதைக் கோற வெண்ணி சீப் வனாந்தரம் நண்ணுதலையறிந்து தாவீது பணியாளர்களுடன் மாகோன் வனாந்தரத்தை யணுக, ஆங்கும் சவுல் அவரைப் பின் தொடர இடையில் பெலஸ்தியர் தேயத்தின் மேல் படையெடுத்து வந்ததை யறிந்த சவுல், தாவீதை விட்டுச்சென்று, பெலஸ்தியருடன்பொருது அவர்களை முறியடித்து மீண்டும் 3000 வீரர்களுடன் தாவீதைத் தொடர்ந்து என் கேதியின் வனாந்தரத்தில் தேடி வருங்கால் ஆங்கிருந்த ஒரு குகையில காலைக்கடனைக் கழிக்கச்சென்றான். அக் குகையிலேயே தாவீது தம்முடைய நண்பர்களுடன் பதுங்கி நின்றுரெனினும தம்முடைய நண்பர்கள் வேண்டியும் சவுலைக்கொல்ல மனமெழாது "கர்த்தர் அபிடேகஞ் செய்த என் ஆண்டவனைக் கொல்லா மனதைக் கர்த்தர் எனக்கருள்க" எனவறைந்து சவுலுடைய சால்வையின் ஒரு நுனியை அறுத்துக்கொண்டு, சவுல் குகையை நீத்துச்சென்றதும், பின்போந்து "என் தகப்பனே! ........உம்மைக் குகையுள் கொல்ல எனக் சமயம வாய்த்தும் நான் அவ்வாறு செய்தேனல்லை....நீரோ என் பிராணனை வாங்க அதை வேட்டையாடுகிறீர்... கர்த்தர் எனக்கும உமக்கும் நடு நின்று நியாயம்விசாரித்து, என் காரியத்தில் உமக்கு நீதியைப் போதிப்பாராக" எனவும் சவுல், அழுக்காறழிய, அறியாமை விலக, அறிவுதுலங்க, "என்குமாரனாகிய தாவீதே....நீ என்னைப் பார்க்கிலும் நீதி நிறைந்தவன். நான் உனக்குத் தீமை இழைத்தேன். ஆனால் நீயோ எனக்கு நன்மையை நல்கினுய்" என வருந்தி தாவீதை நீத்துச் சென்றான் (i: 24: 6)எண்டும். தாவீதின்மெய் யன்புந் தெய்வ பக்தியும் இனிது புலனாகின்றன. அதுகாலை அவர் 34-ம் கீதத்தைப் பாடி இறைவனைப் போற்றினர்.

உண்மையை யோர்ந்த சவுல் மீண்டும் சீப் ஊராரின் சதியாலோசனைக் கிணங்கி (இது சமயம் தாவீது 54-வது கீதம் பாடிவருந்தினர்)தாவீதையொழிக்க ஆகிலா மேட்டை யடைந்து இரவில் உறங்குகையில் தாவீதின் கையில் சிக்கியும் அவர் அவனைக் கோற உன்னாது "கர்த்தர் அவரை அழைத்தாலல்லது, அவருடைய காலம் வந்து அவர்மரித்து அல்லது யுத்தத்தில் மாண்டாலல்லான், நான் என் கரத்தைக் கடவுளால் அபிடேகஞ் செய்யப் பட்டவரைத் தீண்டா வண்ணம ஆண்டவர் அருள்புரிக" என இயம்பிய மெய்யுரைகள் அவருடைய மெய்ப்பக்தியையே ஓதுகின்றன. இத்தகைய அகத்தூய்மையோடியைந்த தெய்வபக்தியன்றோ தாவீதின் உயிரைவேட்டையாடி நின்ற சவுலையும "என்குமாரனாகிய தாவீதே....நான் பாவஞ் செய்தேன்....இனி உனக்கொரு பொல்லாப்புஞ் செய்யேன்" என்று இயம்புமாறு தூண்டியது. (I: 26.)

கி. பி. 1056-ம் ஆண்டு செருக்களத்தில் சவுல் இறப்ப, இடிப்புண்ட வாழ்க்கையான் ஏழாண்டுகள் நெருக்குண்டு, கதறிக் கதறிக் கீதங்கள் பாடிப்பாடி இறைவன்றன் தோன்றாத் துணையை வேண்டி வேண்டி நின்ற உத்தமராகிய தாவீது அரசராயினர். (அதுகாலை அவர் 18-ம் கீதம் பாடிப் பரமனைப் பணிந்தேத்தினர்) அவர் நாற்பதாண்டுகள் நீதி வழுவாது இறைவனருளான் அரசாண்டு நின்றார் (II: 5: 4) தீருவின் மன்னனாகிய ஈராம் தாவீதுக்கு ஓர் அழகிய மாளிகையை அமைத்திடுங்கால் அவர் 30-ம் கீதம ஓதி இறைவனுக்கு நன்றியைச் செலுத்தினர். தம்மையெதிர்த்தெழுந்த சீரியரை உப்புப் பள்ளத்தாக்கில் முறியடித்து ஏதோமியருள்ளத்தைக் கொள்ளை கொண்ட காலத்தில் 60-ம்கீதம் இசைத்து இறைவனுக்கு நன்றி கூறினர். (II: 8 13)

இவ்வாறு இளமையிலிருந்து இறைவன் மாட்டு மாறு அன்பு நெறிபற்றி

யொழுகிய தாவீது ஒருமுறை காமப் பேயராகி நீதிவழுவினார். ஒருநாள் ஏத்தியனான உரியாவின் மனைவியாகிய பத்சேபாளின் பேரெழிலைக் கண்டு மயங்கி நீதி வழுவி, அவளுடன் கூடி, சூதால் உரியாவைக் கொன்று, உரியா இறந்த பின்னர் பத்சேபாளை அவருடைய மனைவி யாக்கிக் கொள்ள, காமப் பித்தால் அறிவிழந்து தாவீது ஆற்றிய பாவம் அளவைக் கடந்தது. (II : 11) ஆண்டவர் தாவீதுக்கு உண்மையை யறிவுறுத்த நாத்தானை ஏவினார். தம்முடைய பாவத்தை யுணர்ந்த தாவீது "நான் கர்த்தருக்கு விரோதமாகப் பாவஞ்செய்தேன்" (II : 12 : 13) என்று அலறி 51-ங் கீதம் பாடிப் பரமனை இரந்தார்.

பல வாண்டுகள் கழிய, தாவீதின் மைந்தனாகிய அப்சலோம் தாவீது மன்னரிடமிருந்து அரசபதவியைக் கவர, சூழ்ச்சி செய்வதறிந்த தாவீது தம்முடைய மெய்யன்பர்களுடன் எருசலேமிலிருந்து புறப்பட்டு, மூப்பு ஒருபுறம் வாட்ட, துயரம் மறுபுறம் வருத்த, கண்கள் நீரரும்ப 3-ங் கீதம்பாடி யழுது ஒலிவ மலைமேலேறினார். (II : 15) அதுகாலை பென்யமீனனாகிய சீமேயி என்பான் தாவீதை "இரத்தப் பிரியனே! பேலியாளின் மனிதனே! தொலைந்து போ தொலைந்து போ" என நாவில் நரம்பில்லாது நிந்தித்தான். (II : 16: 7.) சீமேயின் புன்மொழிகளைச் செவிமடுத்த அபிசாய் அவனைக் கொல்ல அனுமதி யளிக்கத் தாவீதை வேண்ட தாவீது "என் குமாரனே என் உயிரைக்கவர முயலுங்கால், இந்தப் பென்யமீனன் என் செய்யான்? அவன் நிந்திக்கட்டும். அவன் அவ்வாறு செய்ய ஆண்டவன் அருளிட்டான் போலும்" எனக் கூறி 7-ங் கீதத்தைப் பாடினர். என்னே அன்பு நெறியின் மாண்பு.

அப்சலோம் இறந்து எட்டாண்டுகளுக்குப் பின், மூப்புத் தம்மை வந்தெய்தமையான் தாம் தம் ஆசைக் கிழத்தியாகிய பத்சேபாளுக் கீந்த உறுதிமொழிக்கிணங்க, அவள் பெற்றெடுத்த தமக்குப் பிறந்த சாலோமோனுக்கு அரசீந்து (இராஜா i : 1 : 29 –34.) இறக்குந் தருவாயில் சாலோமோனை விளித்து "உலகியலுக்கேற்ப நான் மறைவேன். நீ திடங்கொண்டு புருஷனாயிரு" எனவுறுதிமொழி யோதி ஆண்டவன் அடிநிழலடைந்தார்.

மேலே கூறிய சரிதக் குறிப்புகளின் வாயிலாய் தாவீதின் வாழ்க்கை, இளமைப் பருவத்தும், இடர்ப்பட்ட காலத்தும், அரசாண்ட காலத்தும், அருந்தநயனுக் கஞ்சி யோடி யொளிந்த சமயத்தும், சீமேயி பழித்த காலத்தும் சாலோமோனுக் கரசீந்த சமயத்தும், இறைவன் அன்பில் திளைத்தெழும் வாழ்க்கையாகவே இலங்குதல் கண்கூடு. இன்பம் நுகர்ந்த காலத்திலும் அவர் அமலனை நாடினார்; துயரமண்டிய சமயத்திலும் அவர் ஆண்டவன் கருணையைத் தேடினார். அத்தகைய மாறா நம்பிக்கையன்றோ மெய்ப் பக்தியின் அடிக்கோள்; தனிக் கோளின் தனிக்கோள்! இறைவன் பேரன்பு அவருடைய அகத்தையும் புறத்தையும் பற்றி நின்றதற்கு அவருடைய உயரிய சரிதமே போதிய சான்றாம். உள்ளொன்று வைத்துப் புறமொன்று நாடும் போலிமதத்தர், போலி மதம், போர்வையராகும் தாவீதரசரின் மதமன்று. அகத்தூய்மை என்னும் விதையான் முளைத்தெழும், நம்பிக்கை யெனுஞ் செடியில் பூத்து, அன்பெனும் மலரில் காய்த்திடும் அருள் என்னுங் கனியையன்றோ தாவீது இளமையிலிருந்து நாடினார்; வாழ்க்கைமுழுதும் பாடினார்; இடர்ப்பட்ட காலத்திலும் தேடினார்; இன்பவாழ்க்கையிலும் ஓதினார். அவர் பற்றிநின்ற தூயமதம், அவருக்கு ஆண்டவனின் பேரருளை யீட்டிய தனிக் கொள்கை, அவருடைய கீதங்களிலன்றோ இனிது போதருகின்றது. அவருடைய கீதங்களையே யடிப்படையாகக் கொண்டு அவர் நாட்டிய சமயத்தைக் காட்டிய கொள்கையை இனியாராய்வோம்.

# உண்மை இன்பத்திற்குரிய வழி

## சுவாமி விவேகானந்தர் சொற்பொழிவின் மொழிபெயர்ப்பு

[திரு. சி. உருத்திரபதி, பீ. ஏ.]

**நா**ன் இன்றிரவு வேதங்களினின்றும் ஒரு கதை உங்களுக்குக் கூறுகிறேன். வேதங்கள் இந்துக்களின் தூய நூல்களாகும். அவைகள் இலக்கியத்தின் ஒரு தொகுதியாம். அவைகள் இறுதிப்பாகமே வேதாந்தமெனப் பெறும். அது நமக்குத் தொடர்புடைய தத்துவத்தைப் பற்றிக் கூறுவது; வட மொழியில் எழுதப் பெற்றுள்ளது. பல்லாயிர மாண்டுகளுக்கு முன்னர் அது எழுதப்பட்டதென்பதை நீங்கள் நன்கு நினைவில் கொள்ளவேண்டும்.

ஒருவர் ஒரு பெரும் வேள்வி புரிய விழைந்தார். இந்த மதத்தில் வேள்வி மிகவும் முக்கியமானது. பல் வேறு வேள்விகள் உள. இந்துக்கள் பலிபீடங்கள் கட்டிப் பின் தீ வளர்த்து அதில் ஆகுதி வழங்குவார்கள்; பல மந்திரங்கள் பகருவார்கள். வேள்வி முடிவில் அந்தணர்களுக்கும் எளியவர்களுக்கும் தானம் வழங்குவார்கள். ஒவ்வொரு வேள்விக்கும் தனித்தனி மாதிரியான தானம் உண்டு. ஒருவன் தனக்குரியவற்றையெல்லாம் தானமாய் வழங்கும்படியான ஒரு வேள்வியுண்டு. அத்தகைய வேள்வியைத்தான் மேலே கூறியவர் செய்ய விரும்பினார்.

இவர் நிரம்பிய செல்வராயினும் உலோப குணம் வாய்ந்தவர். ஆனால் செயற்கரிய இவ் வேள்வி புரிந்து அதனால் வரும் புகழை மாத்திரம் அடைய விரும்பினார். அவர் இவ் வேள்வி யாற்றிய பின்னர் தம்பாலுள்ள எல்லாவற்றையும் வழங்காது, மலடும் குருடும் கால் ஊனமுள்ள பசுக்களை மாத்திரம் வழங்கினார். ஆனால் அவருக்கு நசிகேதன் என்ற ஓர் அறிவிற் சிறந்த மைந்தன் உண்டு. அவன் தன் தந்தைக்கு வரும் இழிவு கருதி தன்னையே தானமாக வழங்கத் துணிந்து, தன் தந்தை வழங்காமையால் வருங் குறையைத் தீர்க்க எண்ணினான். பிறகு தன் தந்தையை யணுகி "யாருக்கு என்னை வழங்கப் போகிறீர்?" என உசாவினான். தந்தையோ பதிலிறுத்தாரில்லை. சிறுவன் மீண்டுங்கேட்டான். தந்தையார் வாளாவிருந்தார். மீண்டுமொருமுறை கேட்டான். தந்தை மனம் வருந்தி "உன்னை யமனுக்குக் கொடுக்கிறேன்" என்றார். உடனே அச்சிறுவன் யமபுரிக்குச் சென்றான்.

சிறுவன் சென்ற ஞான்று கூற்றுவன் வீட்டிலிருந்தானில்லை. அதனால் ஆங்கே அவன் காத்துக்கொண்டிருந்தான். மூன்று நாட்களுக்குப் பின்னர்க் கூற்றுவன் வந்தான். வந்ததும் "ஓ! மறையவ! நீ யென் விருந்தினன். ஆகாரமின்றி இவண் மூன்று நாட்களிருந்திருக்கிறாய். உனக்கு வணக்கஞ் செலுத்துகிறேன். நீ பட்ட துன்பத்திற்கு உனக்கு மூன்று வரங்கள் அளிக்கிறேன்" என்று கூறினான். அதற்குச் சிறுவன் "எந்தை என்மீது கொண்ட சீற்றந் தணியவேண்டும்" என்று முதல் வரங் கேட்டான். ஒரு வேள்வியைப்பற்றி யுணர வேண்டுமென்று இரண்டாவதாகக் கேட்டான். மூன்றாவதாக "ஒருவன் இறந்தபின் என்னாகிறான்? அவன் உயிர்போய் விடுகிறதெனச் சிலர் கூறுகின்றனர். அவன் வசிக்கின்றான் என ஏனையர் புகல்கின்றார். இதற்கென்ன விடை" என்றான். கூற்றுவன் கீழ்வருமாறு மறுமொழி பகர்ந்தான்: "முற்காலத்தில் கடவுளரும் இந்த அரிய விஷயங்களைப்பற்றி உணர முயன்றனர். அவை மிகவும் அரிய விஷயங்களாதலால், அதை விடுத்து வேறொன்று கேட்பாயாக. நூறாண்டு உயிருடன் வாழ்வதற்கு வரங்கேள்; அளிக்கிறேன். மாடுகளும் குதிரைகளும் வேண்டு

மென்று கேள். பெரும் அரசாங்கங்கள் வேண்டுமென்று கேள். மனிதன் தனது இன்பநுகர்ச்சிக்கு எவ்வெவ்வை வேண்டுகின்றானோ அவற்றையெல்லாம் அளிக்கின்றேன். ஆனால் இந்த இரகசியத்தைப்பற்றி மாத்திரம் கேளாதே" என்றான். அதற்கு சிறுவன் கூறியதாவது: "மனிதன் வெறுமே செல்வத்தில் மகிழ்வதற்கில்லை. செல்வம் வேண்டுமானால் கிடைக்கும். இவ்வுலகில் அழியுந் தன்மையுடைய மனிதன் இறவாப் புகழ் எய்தினார் கூட்டுறவு கிடைத்திருந்தும் நீண்ட ஆயுள்பெற்று இவன் பாட்டாலும் களியாட்டாலும் அடையும் மகிழ்ச்சி நிலையற்றதென்பது நாம் அறிந்ததே. ஆகையால் இப்பிறப்பின் உண்மை யறிய ஆவல் மிக்குண்டு. வேறொன்றும் வேண்டாம்; இதுவே யான் வேண்டும் வரம்" என்றான். இந்தகைய மறுமொழி கேட்டதும் கூற்றுவன் அளவிலா மகிழ்ச்சி கொண்டான். கடந்த இரண்டு மூன்று சொற்பொழிவுகளில் இந்த ஞானம் மனதைப் பக்குவப்படுத்துகின்ற தென்பதை நாம் கவனித்தோம். உண்மை யின்னதெனக் காண விழைதலே முதல் பக்குவ நிலையாம். கூற்றுவன் வழங்குவதாய்க் கூறிய பொருட் செல்வம், நீண்ட ஆயுள் முதலியன அவன் வெறுத்தொதுக்கிய தன்மையைக் கூர்ந்து நோக்குங்கள்.

உண்மையறியவேண்டி யனைய வெல்லாவற்றையுந் தியாகஞ் செய்யத் தயாராயிருந்தான். இம்மாதிரிதான் உண்மை வெளிப்படும். கூற்றுவன் மகிழ்ந்தான். பின்வருமாறு புகன்றான் "உலகவின்பம்நுகர்தற் கொருவழியும், உண்மையின்ப நுகர்தற்கு மற்றொரு வழியும் ஆக இருவழிகள் உண்டு. இவ்விரண்டில் உண்மை இன்பம் அடையும் வழியைக் கடைப்பிடிப்பவன் தான்ஞானியாவான். உலக வின்பங்களைக் கருதி யதனையடையும் வழி நாடுபவன் கெடுகின்றான் "நச்சிகேத! நீ இன்பங்களை விழைந்தாயில்லை. உன்னைப் புகழ்கின்றேன். உன்னைப் பலவழியில் உலக இன்பத்திற்குத திருப்ப முயன்றேன். அவற்றை யெல்லாம் நீ பொருட்படுத்தவில்லை. நீ ஞானமே, இன்பம் நுகரும் மார்க்கங்களிலும் சிறப்புடையது என்று கருதினாய். அறியாமை வாய்ப்பட்டு உலக இன்பங்களையே நுகர்ந்து கொண்டிருப்பவன் விலங்கினும் வேறானவனல்லன் என்பதை நீ புணர்ந்திருக்கிறாய். எனினும் அறியாமையில் மூழ்கி சிலர் இறுமாப்புக் கொண்டு தாங்கள் பெரிய ஞானிகள் என்று நினைத்துக்கொண்டு குருடன் குருடனை யழைத்துச் செல்வது போலப் பல குருட்டு வழிகளைப் பின்பற்றுகின்றனர். மண்ணுலகப் பிலகட்டுகளில் மயங்கி அறியாக் குழந்தைகள் போலிருப்பவர் நெஞ்சில் இவ்வுண்மை தோன்றுவதில்லை. அன்னோர் இகலோக சாதனத்தையாவது பரலோக சாதனத்தையாவது அறிந்தாரில்லை. இம்மை மறுமை இருமையுமில்லை யென மறுத்து மீண்டும் மீண்டும் என்னுடைய சிக்குள் வந்து மடிகின்றனர். பலருக்கு இதைப்பற்றி யறிதற்கு சந்தர்ப்பம் வாய்ப்பதில்லை. வாய்த்துக் கேட்பினும் அதைப் புரிவதில்லை. இந்த வுண்மையைப்பற்றிப் போதகர் நன்கு புணர்ந்தவரா யிருந்தாலொழிய அவர் போதனையைப் பன்முறை கேட்பினும் கேட்டதைச் சிந்திப்பினும் கேட்போர் உளத்தில் உண்மை விளங்காது. நசிகேதா! வீண்வாதங்களால் உன் மனதைக் கெடுக்காதே! தூய நெஞ்சில் தான் இவ்வுண்மை சுடர்விட்டொளிரும். எவன் இலகுவாய்க் கட்புலனாகானோ, எவன் மறைந்துளனோ, எவன் நெஞ்சமெனுங் குகையின்கண் ஒளிந்துளனோ, பழமையோனாகிய அவன் புறக் கண்களுக்குப் புலப்படான். அவனைக் கண்கொண்டு பார்க்க விரும்புவோன் இன்பதுன்பம் இரண்டையும் விடுகின்றான். இவ்வுண்மை புணர்ந்தோன் வீணான ஆசைகளைத் துறக்கின்றான்.

இந்த ஞானக் கண் பெற்றான் என்றும் உண்மையின்பந் துய்க்கின்றான். நசிகேதா! இதுதான் உண்மையின்ப மெய்வழி. அவன் புண்ணிய பாவங்களுக்கப்பாற்பட்டவன். கடமை கட

மையின்மைக்கும், வாழ்கின்றவை, இனி வாழ்பவை யாவற்றையுங் கடந்தோன். இதை யறிந்தோனே யறிந்தோன் ஆவன். எவனை யெல்லா மறைகளுந் தேடுகின்றனவோ, எவனைக் காண்பான் வேண்டி மாந்தர்கள் நானாவித தவங்கள் புரிகின்றனரோ, அவன் பெயர் கூறுகின்றேன். "ஓம்" என்று கூறுவர். என்றுமுள இவ் "ஓம்" பிரமமாம். பிரமம் அழியாத் தன்மை யுடைத்து. இவ் வுண்மை யறிந்தோன் எதை விரும்பினும் எய்துவான். மனிதனிடையுள்ள ஆன்மா, ஒரு பொழுதும் பிறப்பது மில்லை; இறப்பது மில்லை. ஆதியந்த மற்ற இப்பழையோன், உடல் சிதையுங்கால், சிதைக்கப் படுவதில்லை. கொல்பவன் தான் கொல்வதாய் நினைப்பதும் கொல்லப் படுவதாய் நினைப்பதும் தவறு. ஏனெனின், ஆன்மா தன்னைத் தானே கொல்லமுடியாது. ஆன்மாவைப் பிறர் கொல்லவும் இயலாது. அணுவுக்கணுவாயும், பெரும் பொருளினும் பெரிதாயும், எல்லாப் பொருளினும் யாவருடைய நெஞ்சினும் அது வதிகின்றது.

பாவ மற்றவர்கள் அவனருளால் அவனைக் காண்கிறார்கள். கடவுளை யறிதற்கு அவன் தண்ணருளும் பல காரணங்களுள் ஒன்று. உட்கார்ந்தவண்ணம் வெகு தூரஞ் செல்கின்றனன். படுத்தவண்ணம் எங்குமுளன். தூய தெளிந்த அறிவினர் தவிர வேறு யார் தாம் கடவுளை யறியற்பாலர்? உடலின்றி, உடலில் வதிந்து, தொடர்பற்றதாய், வெளித்தோற்றத்திற்குச்சம்பந்த முடையதாய், எங்கும் வியாபகமாயிருக்கும் ஆன்மாவை யுணர்ந்த பெரியார் துன்பத்தி னின்றும் விடுபடுகின்றனர். உயர்ந்த அறிவாலும், மிகுந்த கல்வித் திறத்தாலும், வேத முணர்ந்தமையாலும், இவ்வான்மாவை யடைய முடியாது. எவனை யான்மா தேடுகின்றதோ, அவன் ஆன்மாவை யடைகின்றான். அவனுக்குத் தன் மகிமையை ஆன்மா காட்டுகின்றது. எவன் இடைவிடாது தீச் செயல்களை புரிந்துகொண்டிருக்கிறானோ, எவன் மனம் அமைதியற்றிருக்கின்றதோ, எவன் தியானிக்க வியலாதோ, எவன் சஞ்சலத்தோடு கூடிய நிச்சய மில்லா புத்தி யுடையவனோ, அவன் நெஞ்சக் குகையின்கண் உள்ள ஆன்மாவை அறிதலும் முடியாது; அடையவும் முடியாது.

ஓ நசிகேதா! இவ்வுடல் ஒரு தேராகும். புலன்கள் அதிற் கட்டிய குதிரைகளாகும். மனம் கடிவாளமாகும். அறிவு தேரோட்டி யாகும். ஆன்மா அதில் ஊர்ந்து செல்பவன். ஆன்மா தேரோட்டியாய அறிவுடன் சேர்ந்து, பின் அதன் மூலம் கடிவாளமாய மனத்துடன் சேர்ந்து, பின் அதன் மூலம் குதிரைகளாய பொறிகளுள் சேர்ந்தால் அவன் நுகருபவன் என்றுரைக்கப்படுவான். அவன் தான் காண்பவனுவான். அவன் உழைக்கிறான்; செய்கிறான். எவன் மனம் கட்டுப்பாட்டில் இல்லையோ, எவனுக்குப் பகுத்துணரும் தன்மை யில்லையோ, ஓட்டுபவன் கைப்பட்ட பொல்லாக் குதிரைகள் போல அவன் பொறிகளை யடக்கவொண்ணுது. ஆனால் எவன் பகுத்துணருந் தன்மை யுடையவனோ, எவன் மனங் கட்டுப்பாட்டிற் குட்பட்டதோ, ஓட்டுபவன் கைப்பட்ட நற் குதிரைகளைப் போல அவன் தன் புலன்களை யடக்கமுடியும். எவன் பகுத்தறிவுடையவனோ, எவன் அறிவு உண்மை யறிதலையே நாடுகின்றதோ, எவன் என்றுந் தூயனுயிருக்கின்றானோ அவன் உண்மையை எய்துகிறான். அதை யடைந்த பின் மறுபிறப்பற்றுப் போகின்றான். ஓ நச்சிகேதா! இதை யடைதல் மிகவுங் கஷ்டம். வழி மிகவும் தூரம். மிகக் கூர்ந்த மதிக்கண் உடையார் தாம் அதைப் பார்க்கமுடியும்; அறியவுங் கூடும். எனினும் அஞ்சற்க; எழுந்திரு. உழைத்திடுவாயாக. உன் நோக்கம் நிறைவேறும் வரை நிறுத்தாமல் உழைத்திடுவாய். இத்தொழில் ஒரு கத்தியின் முனையில் நடப்பது போலும் என்று பெரியோர் கூறுகின்றனர். எவன் பொறிகளுக் கப்பாற்

சரீரத்திலும் நல்ல சரீரத்திலும் புகும் போது என்னுகின்றது? எங்ஙனம் ஒரு குறையுமின்றி யிருத்தல் இயலும்? "ஒரே சூரியன் ஒவ்வொரு கண்ணின் ஒளிக்குக் காரணமாயிருக்கிறது. எனி னும் யாராவது ஒருவருடைய கண்களின் கெடுதியால் சூரியன் பாதிக்கப்படுவ தில்லை" ஒருவன் மஞ்சக் காமாலை யெனும் நோயுடையவனு யிருந்தால் அவன் பார்க்கும் பொருளெல்லாம் மஞ் சள் நிறமாய்த் தோற்றுகின்றன. அவன் பார்த்தலுக்குக் காரணம் சூரி யன். ஆனால் ஒவ்வொரு பொருளையும் மஞ்சள் நிறமாக்காண்டல் சூரியனைப் பாதிப்பதில்லை. அதேமாதிரி இத்தனிப் பொருள், ஒவ்வொருவரிடத்தும் விளங் கினும், புறத்தின்கண் உள்ள நல்லவை யாலோ கெட்டவையாலோ பாதிக்கப் படுவதில்லை. "நிலையற்ற இவ்வுலகில் மாறுதலற்ற அவனை எவன் அறிகின் ருனே, ஞான வொளியற்ற இவ்வுலகில் ஞான வுருவாகிய ஒருவனை எவன் உணர்கின்றனே, பல பொருள் நிறை ந்த இவ்வுலகில ஒரு பொருளை யெவன் உணர்கின்றனே, அவ் வொப்பற்றவ னைத் தன்னுள் எவன் காண்கின்றனே, அவனுக்கே முடிவிலா இன்பமுரித்து; வேறு யாருக்குமில்லை. அங்கே சூரியன் பிரகாசிப்பதில்லை. வான்மீன்களும் அங் ஙனே யொளிவிடுவதில்லை. மின்னலும் மின்னுவதில்லை. தீயும் அவ்வண்ணமே. அவன் பிரகாசித்தால் எல்லாம் பிரகா சிக்கும். அவன் ஒளியால் ஒவ்வொன் றும் ஒளியுடையதாகின்றது. நெஞ்சத் தைத் துன்புறுத்தும் எல்லாப் பற்று களையும் ஒழித்துவிட்டால், அநித்தியன் நித்தியனுகின்றன். அவன் பிறகு பிர மத்தையெய்துகின்றன். நெஞ்சிலுள்ள குருட்டுத் தன்மையும் அதன் தளைக ளெல்லாமும் அறுபட்டால்தான் அநித் தியன் நித்தியனுகின்றன். இதுதான் வழி. இத்தகைய ஆராய்ச்சி நமக்கு நன்மை பயப்பதாக. நமக்குணவாகுக. நமக்கு வன்மை யளிப்பதாக. நமமிடை யுள்ள சக்தியாக. ஒருவரை யொருவர் வெறு திருப்போமாக. யாவர்க்கும் சாந்தியுண்டாக."

இந்த மாதிரி முறை நீங்கள் வேதாந்த தத்துவத்தில் காணலாம். உலகில் வேறிடத்தில் காண்பதினின்றும் இந்த விஷயம் வேறுபட்டதா யிருக்கிறது. வேதங்களின் பழைய பாகங்களில், இதர நூல்களில் பரமபொருளை யுணர முயற்சிக்கும் வழிபோலத்தான் பார்ப் பது வழக்கம். அந்த ஆராய்ச்சியும் வெளிப்புறத்தேதான். "ஆரம்பத்தில் என்ன இருந்தது? ஒன்றுமின்றிபிருள் சூழ்ந்திருந்த ஞான்று இவற்றையெல் லாம படைத்தது யார்?" என்ற வினுக் கள் மிகப பழைய நூல்களில் எழுந் தன. அப்பொழுது தான் உண்மை காண ஆரம்பித்தது. அவர்கள் முத லில் தேவர்களைப்பற்றியும் வேறுபல விஷயங்களைப் பற்றியும் பேச ஆரம் பித்தனர். அந்நாளில் ஆராய்ச்சி யெல் லாம் வெளி விஷயங்களைப்பற்றி நின்று விட்டன. ஆனதால் அவர்கள் ஒன்றுங் கண்டுபிடிக்க வியலவில்லை. ஆனல் பிற் காலத்தில், வேதங்களில் படித்தது போல், ஆன்மாவை யறிய உள்நோக் கிப பார்க்கவேண்டியதா யிருந்தது. வேதங்களில் இஃதொரு அடிப்படை யான கருத்தாகும். நட்சத்திரங்களில் ஆராய்ச்சி செய்தல், இவ்வுலகில்வெளிப் பொருள்களில் ஆராய்தல், ஒன்றுக்கும் பயனில்லை. வாழ்க்கையின் நிலையைப் பற்றி யொன்றுந் தெரிவியாது, உள் ளே யமைந்து கிடக்கும் அற்புதயந் திரத்தை நன்றுய்ப் பிரித்துப் பார்க்க நேர்ந்தது. வையகத்தின் உண்மை தோன்றிற்று. நட்சத்திரமாவது சூரிய னுவது அவ்வுண்மையை விளக்கவொண் ணுது. மனிதனைப் பாகுபடுத்திப் பார்த் தல் வேண்டும். சரீரத்தையல்ல. ஆனல் மனிதனிடமுள்ள ஆன்மாவை யிங்ங னம் பார்த்தல் வேண்டும. அந்த ஆன் மாவில் அவர்களும் ஒன்று கண்டுபிடித் தனர். அவர்கள் கண்டதென்னை? சரீ ரத்தைத் தவிர, மனதையுந் தவிர, தன்னந்தனியா யிருக்கும் ஒருவன் இருக்கிறுன் என்பதை யோர்ந்தனர். அவன் இறப்பதுமில்லை; பிறப்பது மில்லை. தானே விளங்குபவனுகிய அவன் எங்குமுளன், ஏனெனின் உருவ

மில்லாதவன். எது உருவமற்றதோ, எது காலத்தாலும் இடத்தாலும் வரையறுக்கப்படாததோ, அது ஒரே யிடத்தில் இருக்க முடியாது. எங்ஙனம் இருக்கமுடியும்? நம் வழியாக யாண்டும் எங்கும் இருக்கின்றது.

மனிதர்கள் உள்ள ஆத்மா என்பது தான் என்னை? கடவுள் ஒருவர் உண்டென்பதும், தனிய எண்ணிறந்த ஆன்மாக்கள் உருவ முதலியவற்றால் கடவுளினின்றும் வேறுபட்டுள்ளன என்றுங் கூறும் ஒரு கட்சி யிருந்தது. இதுதான் துவைதம் எனப்படும். இஃதொரு பழைய கொள்கை. எல்லையில்லாத் தெய்வத் தன்மையுடைய பொருளின் ஒரு பாகந்தான் ஆன்மாவென்று மற்றொரு கட்சி கூறிற்று. இந்தச் சிறு சரீரந் தன்னளவில் ஒரு சிற்றுலகமாயிருந்து தன்னிடத்தே மனதையும், ஆன்மாவையும் கொண்டு விளங்குவதுபோல, இப்பரந்த வுலகம் ஓர் உடலாகவும், உலக முழுதும் பரந்த மனதையும், ஆன்மாவையுங் கொண்டு விளங்குகின்றது. எங்ஙனம் இச்சரீரம் உலகமெனும் உடலில் ஒரு பகுதியோ, இம்மனமும் உலக முழுதும் பரவியுள்ள மனதில் ஒரு பகுதியாம். இஃதொரு கட்சி. உலக முழுதும் ஊடுருவி நிற்கும் ஆன்மா எல்லையற்றது. எல்லையற்ற பொருளையெங்ஙனம் தனித்தனி பாகங்களாய்ப் பிரித்தல் இயலும்? அதை எங்ஙனம் தகர்க்கமுடியும்? எங்ஙனம் வகுக்க முடியும்? எல்லையற்ற பொருளில் நான் ஒரு சிறு பாகம் என்று கூறுதல் கற்பனை சக்தி வாய்ந்ததாக இருக்கின்றது. ஆனால் அதை யூன்றிக் கவனிப்பார்க்கு அது குற்ற முடைத்தென்பது புலனாகும். எல்லையற்றதொரு பொருளைப் பகுத்தல் என்பதென்னை? நாம் பிரிக்கவும் ஒன்று படுத்தவும்படியான ஒரு சாமானிய பொருளா? எல்லையற்ற பொருளை யொருகாலும் பகுக்க முடியாது. அஃது பகுக்க முடியுமேல் அதை யெல்லையற்ற பொருள் என்று கூறவியலாது. பின் முடிவுதான் என்னை? உலகமாய ஆன்மா நீதான். நீ யொரு பாகமல்ல. அதுவே நீ; நீயே கடவுளின் முழுவடிவு. பின் இவ்வேறுபாடுகள் என்னை? கோடிக் கணக்கான தனி ஆன்மாக்களைக் காண்கின்றோம். அவை தாம் என்னை? சூரியன் எண்ணிலடங்கா நீர்த்துளிகளில் பிரகாசிக்கும் போது ஒவ்வொரு நீர்த்துளியிலும் ஓர் உருவம், சூரியன் பிரதி பிம்பம் தோன்றுகின்றது. ஆனால் அவைகள் பிரதி பிம்பங்களே தவிர சூரியனல்ல. சூரியன் ஒன்றுதான். அதேமாதிரி ஒவ்வொருவரிடமும் காணப்படும் ஆத்மா கடவுளின் பிரதிபிம்பமே தவிர வேறல்ல. உண்மைப் பொருள் அந்த ஒரே கடவுள்தான். நாமெல்லாம் அங்கு ஒன்றுதான்.

ஆன்மாவைப்போல் உலகில் ஒன்றுதான் உள்ளது. அப்பரம்பொருள் எவ்வாறுள்ளது. உங்களிடமு முண்டு. அது ஒன்றே. ஒரே பரமான்மா பல் வேறு உடல்களில் பல்வேறு ஆன்மாக்களாகப் பிரதி பலிக்கின்றன. ஆனால் நமக்கு இது தெரியாது. நாம் ஒவ்வொருவரும் வெவ்வேறு என்று நினைக்கின்றோம். பரமாத்மாவினின்றும் வேறு பட்டவர்கள் என்று நாம் கருதுகின்றோம். நாம் அங்ஙனம் நினைக்கும் வரை உலகில் துன்பம் நிலவும். இது ஒரு மாயக்கேடே. துன்பத்திற்கு மற்றொரு காரணம் அச்சமேயாம். ஏன் ஒருவன் மற்றொருவனைத் துன்புறுத்துகின்றான்? வனெனில் தனக்குப் போதுமானபடி அனுபவிக்க முடியாதென்று கருதுகின்றான். தன் பாலுள்ள பணம் ஒருகால் போதாதென்று அஞ்சுகின்றான். அதனால் பிறரைத் துன்புறுத்தி யவர்கள்பா லுள்ளவற்றைக் கொள்ளை கொள்கின்றான். உலகில் ஒரே பொருளிருப்பின் பயம் எங்ஙனந் தோன்றும்? ஓர் இடி யென் தலைமீது விழுந்தால், அவ்விடியும் நானே. வனெனில் உலகில் நான் ஒரே பொருள் தான். ஒரு நோய் வரின் அதுவும் நானே. ஒரு புலிவரின் அதுவும் நானே. இறப்புவரின் அதுவும் நானே. பிறப்பு இறப்பு இரண்டும் நானே, உலகில் இரண்டுண்டு

என்று எண்ணும்போது பயம் தோன்றுகின்றது. "ஒருவருக்கொருவர் அன்பாயிரு" என்று அடிக்கடி பெரியவர்கள் போதித்துள்ளனர். எதற்காக அந்தக் கொள்கை பரப்பப் பெற்றது ? அதன் பொருள் இதுவே. நான் ஏன் ஒவ்வொருவனிடத்தும் அன்பாயிருத்தல் வேண்டும் ? ஏனெனில் அவர்களும் நானும் ஒன்றுதான். நான் ஏன் என் சோதரனிடம் அன்பு காட்டவேண்டும்? ஏனெனில் அவனும் நானும் ஒன்றுதான். அங்கு இவ்வொற்றுமையுள்ளது. வையத்தின் ஒற்றுமையுள்ளது. நமது காலடிகளில் ஊர்ந்து செல்லும் புழு முதல் மிக வுயர்ந்த பொருள்களிறுதியாகவுள்ள எல்லா வுயிர்களும் பல்வேறு உடல்கள் பெற்றுள்ளன. ஆனால் ஆன்மா ஒன்றே. எல்லா வாய்களின் வழியாய் நீ உண்கின்றாய். எல்லாக் கைகளாலும் நீ வேலை செய்கிறாய். எல்லாக் கண்களாலும் நீ காண்கின்றாய். கணக்கற்ற சரீரங்களெல்லாம் சௌக்கியமாயிருக்கும்போது நீ சௌக்கியமாயிருக்கின்றாய். கணக்கற்ற சரீரங்கள் உடல் மெலிந்து வாடுங்கால் நீயுந் துன்புறுகிறாய். இவ்வெண்ணந் தோன்றுங்கால் அதை நாம் உணர்கின்றோம்; பார்க்கின்றோம். பின் துன்பம் ஒழிகின்றது. அச்சமும் நீங்குகின்றது. நான் எப்படியிறக்கின்றேன் ? என்னைத் தவிர வேறொன்றுமில்லை. அச்சம் ஒழிகின்றது. ஒழிந்த பின்புதான் பூரண மகிழ்ச்சியும் பூரண அன்பும் ஏற்படுகின்றன. யாவரிடத்தும் இரக்கம், யாவரிடத்தும் அன்பு, மாறுதல் அடையாத மகிழ்ச்சி, எல்லாவற்றையும்விட மனிதனை உயர்த்துகின்றன. அந்நிலைக்கு மாறுபட்டநிலை ஏற்படுவதில்லை. துன்பந் தொடருவதில்லை. ஆனால் இவ்வுலகில் சிறிதளவு உண்ணலும் பருகலும் என்றுமுள்ள நிலைக்குமாறுபட்ட நிலையைக் கொணர்கின்றன. இவ்வையம் வேறு, நான் வேறு என்றும், கடவுள் வேறு தான் வேறு என்றும் எண்ணுகின்ற துவைத புத்திதான் இத்தனை துன்பத்திற்கும் காரணம்.

"நானே அவன், நான் இவ்வுலகில் ஆன்மா, நான் என்றும் மகிழ்ச்சியுடையன், என்றும் சுதந்திரன்" என்கிற நிலையடைந்ததும் உண்மை யன்பு தோன்றுகின்றது ; அச்சம் மறைகின்றது. எல்லாத் துன்பங்களும் ஒழிகின்றன.

# காவிரியின் கவின்

[திரு. இ. சிவகுருநாதன்]

சோலைகளை விரிக்கும் ஆறு ஆகிய காவிரி ஆற்றின் அழகு என்பது பொருள்.

காவிரிக்குப் பொன்னியாறு எனவும் பெயருண்டு. பொன் மணலைக் கொழிப்பதால், அப்பெயர் பெற்றது போலும். இதனைக் "தண்டமிழ்ப்பாவை" எனப் புலவர் போற்றுவர்.

காவிரியாறு, தன் பெயரினாலே, தன் வளத்தைத் தெரிவிக்கின்றது. சோலைகளை விரிக்கும் யாறு ஒன்று மற்றைப் பொருள்களையும் மாண்புற விளக்கும்; மிக்க வளங்கொண்டும் மிளிரும். இதில் ஐயமில்லை.

மிக்கவளங்கொடுக்கும்யாறு, மேதக்க கவினகொண்டு இலங்குவதும் இயற்கையே. இயற்கை யழகு இனிய இன்பம் நல்கும். அவ்வின்பம் உடலை நன்றே ஓம்பும்; வாழ்க்கையைச் செம்மைப் படுத்தும். ஆதலின் அவ்வழகை ஆய்ந்து அறிவாம்.

காவிரியின் கவின் கண்ணுற் கண்டு மகிழ்வுறுதற்கு அல்லது, வாயாரப் புகழ வாய்ப்ப தொன்றில்லை. காவிரி நங்கை ஒருவகை இருவகையிலா தன்

கவினைக் காட்டுகிறாள்? இல்லை. பல வகையில் அவள் தன் கவினைக்காட்டிக் காட்சி அளிக்கிறாள். ஆதலின் பல்வகையிலும் அவள் கவினை ஆய்வோம்.

காவிரியின் அமைப்பழகு, நடையழகு, நீரோட்டத்தி னழகு, காலை மாலையழகு, ஆகிய இவ்வழகினை ஆய்ந்து, அதனாலடையும் பயனையும், அவ்யாற்றைப்பற்றிக் கூறிய அறிஞர்களின் செம்மொழிகளையும், அது சிறப்பாக நம் கல்லூரிக்குச் (அரசர் கல்லூரி; திருவையாறு) செவிலித் தாயாம் சிறப்பையும் ஆய்ந்து அதனை வாழ்த்துவோம்.

## காவிரியின் அமைப்பழகு

அன்பர்களே! "ஆறில்லாவூருக்கழகு பாழ்" என்ற தொன்மை மொழியை உன்னுங்கள். ஆற்றின் மேன்மை தெற்றென விளங்கும். அதற்குச் சான்றாக ஆறுள்ள ஓர் ஊரையும், ஆறில்லா ஓர் ஊரையும் சீர்தூக்கிப் பாருங்கள். ஆறுள்ள ஊர், அழகுடன் இலங்குவதை யறியலாம். அழகுக்கு மட்டுமா ஆறு? இல்லை. பின் எதற்கு? நாட்டை வளம்பெறச் செய்வதற்கு அன்றோ! "நாடா வளத்தது நாடு" என்ற தெய்வப் புலவர் திருமொழியை உன்னுங்கள். நாடா வளந்தருவதற்கு நற்றுணையாவது யாது என எண்ணுங்கள். அதற்குத் துணையாவது ஆறு என அறியலாம்.

இங்ஙனம், நாடாவளமும் நல்லழகும் நல்கும் ஆறு, நம் நாட்டிடைப் பலவுள. அவைகளுள், செந்தமிழ் நாட்டைச் செம்மைப்படுத்தி, சீர்பெறச் செய்வது காவிரியாறு. சோழ வளநாடு சோறுடைத்தாயது காவிரியின் பயனைக் கவர்வதாலன்றோ? ஆதலின் அவ்யாற்றின் தோற்றம், ஓடுமிடம் முதலியவற்றை உணர்வாம்.

இவ்யாறு யாண்டுப் பிறக்கின்றது? எஞ்சாத சீர்த்தியுடன் இலங்குவது குடகுமலை. அது கடகளிறு முதலிய காட்டுவாழ் விலங்குகளையும், சந்தனம், தேக்கு முதலிய சிறந்த மரங்களையும் மலைக்காய் முதலிய இன்பண்ட விளைவுகளையும், தளக்கலான நிலையினையுந் தோற்றத்தினையும் உடையது. அது தான் காவிரியை ஈன்ற தாய்.

காவிரியாறு தன்மையொடு மென்மையும், அமைதியொடு அழகும், உயிர்களைக் காக்கும் வன்மையும் உடைத்தாகி இலங்குவதால் நங்கையென்றுத் தக நவிற்றுவர் வாணர்கள். ஆதலின் இவ்யாற்றை நாம் நங்கையென அழைப்போம்.

உருவுங் குணனும் நலனும் ஒருங்கமைந்த நங்கை ஒரு தலைவனை நாடிச் செல்வதும் தக்கதேயாகும். அதுபோல நங்காவிரியாம் நங்கையும், தன் பெருமைக்குத் தக்காங்கு, கடலாம் கணவனை நாடிச் சென்றடைகிறாள். காவிரி நங்கை, கடலுக்கு எவ்வழியாகச் செல்கிறாள்? தமிழ் நாவலத்தையும் நலமுடன் கடந்து செல்கிறாள். அவைகளைக் கடக்குமாறு யாங்ஙனம்? முதலில் நறுஞ்சுனைகள் பலவுடைய குறிஞ்சியிற் றோன்றுகிறாள்; குடகுமலையிற் கடகட வென்று குதிக்கிறாள்; பின் முல்லை நிலத்தை நண்ணுகிறாள்; ஆங்கு முல்லைவளம் நல்கி மருதத்தை நோக்குகிறாள்; ஆண்டும் பல்பெரும் வளமும் பல்கச் செய்து நெய்தல் நிலத்தை நோக்கிச் சென்று நெடுங்கடலொடு கலக்கிறாள்.

இக்காவிரி நேராகக் கடலுக்குச் செல்கிறாளா? இல்லை. பின் எப்படிச் செல்கிறாள்? மைசூர் மன்னவன் வணக்கங் கொண்டு மட்டற்ற உயிர்களை ஓம்புகிறாள்; கொள்ளிடமாகப் பிரிந்து கோடிக் கணக்கான மக்களைக் காப்பாற்றுகிறாள்; இன்னும் பற்பல பெயர்களுடன் பல ஆறுகளைத் தன்கண் தோற்றுவிக்கிறாள்.

இங்ஙனம் இவ்வன்னை, தன்னாலும் தன் மகவாலும் மருமக்களாலும் பேரராலும் பெரு நன்மையைச் செய்து நம் செந்தமிழ் நாட்டைச் செழிக்கச் செய்கிறாள்.

இங்ஙனம் இவ் யாறு நலன் நல்கிக் கடலொடு கலக்க வழி காட்டியவன்

யாவன்? காந்தமன் என்னும் காவலன் என்பர் ஆராய்ச்சி அறிஞர். மேலும் இவ்வான் யாறு வரம்பு கடவா வண்ணம் கரை கட்டியவன் கரிகாற் பெருவளத்தான் என்பர். இவ்வரசர்கள் காவிரிக்கு அமைத்த வடிவு யாது என்பதையும் அறிவாம். அவள் வடிவு முந்நூற்று முப்பது மைல் நீளம். மலையடியில் அவள் பாட்டெனப்பாய்ந்து வருகிறாள்; பின் அலைகடலொடு குறுகிக் குறுகிக் கூடுகிறாள்; இடையில் வளைந்து வளைந்து வருகிறாள். இஃது ஆற்றின் இயற்கையன்றோ! இங்ஙனம் இவ்வமைப்பின் அழகு அளவிடற்பாலதன்று.

## காவிரியின் கரை யழகு

இனி, இங்ஙனமமைந்த காவிரிக் கரையின் கவினைக் காண்பாம். காவிரிக்கு இரு பெருங்கரைகள் உள்ளன. ஆண்டு ஆண்டுச் சோலைகள் மிக்கு விளங்குகின்றன. சோலைகளின் கவினைச் சொல்லல் இயலாது. சோலை இல்லையேல், பண்டைப் பனுவல்களில் உள்ள பாடல்களிற் பல பாடாது விடப்பட்டிருக்கும். சொல்லேரு உழவர்கள் சோலைச் சிறப்பையே முன்னணியில் சொல்லிப் போகின்றார்கள். இக் காலத்தும் செயற்கைச் சோலைகள் ஏற்படுகின்றன. அவை எற்றுக்கு ஏற்படல் வேண்டுமெனின், சோலைகள் காட்சிக்கு இனிய; எண்ணத்திற்கு இனிமைய; உடல் நலத்திற்கேற்றன; நறுங் காற்றுக்குப் பெருந்துணை யாவன; இளங் குழந்தைகள் விளையாடற் கேற்றன; இன்னும் பலவற்றிற்கும் ஏற்புடையன. ஆதலின் அவற்றினை மக்கள் உண்டாக்குகிறார்கள்.

பண்டைத் தமிழ் மக்களைப் பாருங்கள். அவர்கள் சோலைகளாலுற்ற பயன் யாது? மகளிர்கள் மகிழ்ச்சியுடன் விளையாடினார்கள். அன்பொத்த காதலர் இன்புடன் கூடி மகிழ்ந்தனர். நறுங் காற்றைப்பெற்று அவர்கள்பெருவாழ்வு நடாத்தினர்கள்; சோலைகளிலுள்ள பறவைகளின் இனிய ஒலி கேட்டு மகிழ்ந்தார்கள். இவைகளினால் சோலைகளாலை பெருநலம் புலப்படுகின்றதல்லவா? இக் காவிரி யன்னையும் இயற்கைச் சோலைகளை இரு புறத்திலும் உண்டாக்குகிறாள். அதனால் அனைய நலனையும் அளிக்கிறாள். அவ்வியற்கைச் சோலையின் அழகு எழுதுந் திறத்ததன்று. கண்ணுற கண்டு களிப்புறுவதற்கேற்றது. ஆயினும் என்னறிவிற் கெட்டியதை எடுத்துரைக்கிறேன்.

கரையிலுள்ள கழனிகள் தோறும் வாழைகள் வளர்ந்திருக்கின்றன. இங்ஙனம் தழைத்து வளர்ந்த வாழைகள் காய்ந்த சருகினையும், பச்சைக் குருத்தினையும் தம் பாங்கர்கொண்டு இலங்குகின்றன. இதுஉலகவாழ்க்கைஇன்பமும் துன்பமும் இணங்கியது என்பதை எடுத்துக் காட்டுவதுபோல் தோன்றுகிறது. பெரிய வாழைகளைச் சுற்றிலும் சிறு வாழைகள் செறிந்திருக்கின்றன. குலைகளை யுடைத்தாகிய வாழைகள் பல நிலைத்திருக்கின்றன. அகன்று நீண்ட இலைகளை அவைகள் தம்மகத்தே கொண்டு இலங்குகின்றன.

செந்தளிரீன்று,பசுந்தழை தழைத்து வெண் பூ பூத்து, பழுப்புத் தழையோடு செழித்து வளருந் தேமா,குடைபோல் குவிந்து, வானுற வளர்ந்து மெல்லிய காற்றை வீசும் மேன்மைதான் என்னே! என்னே!!

ஓங்கி வளர்ந்த தெங்கின் தோற்றத்தையும், நெருங்கி வளர்ந்த மூங்கிலின் பச்சையையும்என்னென்றெடுத்துரைப்பது! இங்ஙனமே இன்னும் பல பச்சை மரங்களைத் தன் பாங்கர் கொண்டுளது. இப்பச்சை மரங்களிடையில், காவிரி பரந்து செல்லுதலைப் பார்ப்பவர்க்கு, அவ் யாறுங் கரையும் அழகை அளியாதிருக்குங்கொல்? கண்டவர் மனத்தைக் கவராதிருக்குங் கொல்?

கரையில் பச்சை மரங்கள் மட்டுமா கவினைச் செய்கின்றன? இல்லை. பின் இன்னும் எவை கவினைச் செய்கின்றன. செல்வர்கள் அமைத்துள்ள திரு மாளிகைகள். அம்மாளிகைகள் பல ஓவியங்களமைந்துமிளிர்கின்றன. அவைகள்

கட்டியவர்களுடைய நுண்மைஅறிவைப் புலப்படுத்துகின்றன; காவிரியின் பெரு வளத்தை அறிவிக்கின்றன. பூந்தோட்டங்கள் பல பொருந்தி யிருக்கின்றன. அவைகள் பல நிறப் பூக்களைக்கொண்டு பார்ப்பவர்க்கு அழகைச் செய்கின்றன; மணம் பல விரிந்து மகிழ்ச் செய்கின்றன.

இனி இங்ஙனம் கவினுற அமைந்த கரையினுட்பட்டு ஓடும் நீரினது அழகை நோக்குவாம்.

காவிரி நங்கை மலையினின்றும் வெள்ளிய நிறத்தோடு விரைவுடன் வீழ்கின்றாள்; நிலத்தியல்பால் நீரைத் திரித்துக் கொண்டுவருகிறாள்; விரைவுடன் இழிவதால் வெள்ளியநுரை பலவற்றை விளைத்துக்கொண்டு வருகிறாள்; மலையிலுள்ள வான் பொருள்களை வாரிக்கொண்டு வருகிறாள்; விளை பொருள்களை யாம் பெற விளைந்தற்குரிய வண்டல்களையுங் கொண்டு வருகிறாள். இங்ஙனம் வருமவள் விரைவுடன் சென்று வேலையில் விழுவாள். இடையறாது ஓடுங் காலத்து எண்ணற்ற பொருள்களை நமக்கு எடுத்துக் காட்டுகிறாள். இங்ஙனம் காட்டும்போதே அவள் கவினையுஞ் செய்கிறாள். அவள் காட்டுங் கவினையுங் கட்டுரைத்து ஆராய்வாம்.

அவள் சலசல என்ற ஒலியை ஓய்ந்து ஓய்ந்து உண்டாக்கி ஓடுகிறாள். ஏன் இங்ஙனம்ஓடுகிறாள்? நம்மை நோக்கி, மாண்பு மிக்க மாணவரீர்! நீவிர் ஓயாது படியாதீர்கள்! ஓய்ந்து ஓய்ந்து படியுங்கள்; 'ஓயாது படிப்பின் உடலுக்குக் கெடுதி' என்ற உண்மையை உணர்த்தவன்றோ அங்ஙனம் அழகு செய்து காவிரி ஓடுகிறாள்.

காவிரி கிழக்கு நோக்கி ஓடுவாள்; மேற்கு நோக்கி ஓடாள். இது எதைத் தெரிவிக்கின்றது? சென்ற நாள் மீளா! கொன்னே காலங்கழியன் மின்! கால நேமி விரைவிற் செல்கின்றது. நன்றே செய்யுங்கள். நன்றும் இன்றே செய்யுங்கள். இன்றும் இன்னே செய்யுங்கள் என்பதை எடுத்து இயம்புவாள் என்றெல்லாந் தெரிவிக்கின்றது.

காவிரியில் இன்று ஓடிய நீர் நாளை ஓடாது. புதிய புதிய நீர் இடையறாது ஓடும். புதிய பொருள்களையும் விளைவிக்கும். இஃது உலகம் ஒரு நிலையில் நில்லா (பழைய நெறியிலேயே நில்லா); ஒவ்வொருநாளும் புதிய தோற்றங்காணும்; புதிய வாழ்க்கை முறை கோலும்; புதிய திட்டத்தை ஆக்கும்; புதிய நம்பிக்கை பிறக்கும்; மக்களைப் புதிய மக்களாக்கும்; கடந்த காலங்களினின்றும் புதியமுறைத் தோன்றலாம்; புதிய கொள்கைகொண்டு வலியும் புகழும் பெறலாம் என்பதைப் புலப்படுத்துகிறது.

ஆழ்ந்து படியுங்கள்; மேலொடு படியாதீர்கள்; அறிவு பெற இயலாது; என்பதை அறிவிப்பான், நிலத்தின் மேல் நங்கை ஓடுவாள். ஆழ்ந்த பூமியில் தன் நீரை ஊற்றின் மூலமாக அவள் உட் செலுத்துகிறாள்; அது நிறைந்தவுடன் பூமியின்மேல் ஓடுகிறாள்; மேனீர் அற்ற விடத்தும், கீழ் நீரால் தொண்டு செய்கிறாள்.

'அடக்கமுற்று அறத்திற்கு வணங்கியோர் அகமகிழ்ந்து வாழ்வர்; செருக்கி நின்றோர் நிலையழிவர்' என்ற பொன்மொழிகளைத் தெரிப்பான் போன்று காவிரி தன் வழி நோக்கி வணங்கிய சிறுகொடிகளைச் செழிக்கச் செய்கிறாள்; வணங்கா மரங்களை வேரற வீழ்த்தி வதைக்கிறாள்.

அறிவு நிறைந்த சான்றோர் அடக்கமுற்று வாழ்க்கை நடாத்துவர். அதேபோல் காவிரி கல்வி சான்ற கற்புடையாள்போல், நிறைந்த நீருடன் செல்லுங்காலத்து அடக்கமுறலும், அமைதியுடனும், விரைந்து செல்லுதலைநோக்கி விளங்குகிறாள். குறைந்த அறிவுடையர் ஒரு கொள்கையை விரைந்து பற்றலும், அங்ஙனே தள்ளலும் போல், குறைந்த நீருடைத்தாகிய காலத்து, விரைந்து சென்று காவிரி வேலையில் விழுகிறாள்.

சாந்துணையும் தீயவை செய்வாரையும் ஆந்துணையுங் காத்தல் அறிவுடை

யர் செய்கையன்றே. அதுபோலக் காவிரி தன் மாட்டு சாக்கடை நீர் கலத்தல் முதலிய கெட்ட செய்கை செய்வாரையும் ஆநதுணையுமா காககிறுள். அக்குற்றங்களைத்தன் நறுநீரால் அவள் மாற்றுகிறுள்.

" நண்ணிய கயவர் செய்யும
நலிவினை ஒறுதலொறுத்துப்
புண்ணியா துலங்க மெய்திப்
புகழினை அடைவரன்றே"

அது போல காவிரியும் புகழினை அடைகிறுள்.

" சிறியோர் பெரும்பிழை செய்தனராயின்
பெரியோ ரப்பிழை பொறுத்தலு மரிதே"

என்பது முன்னோர் கூறிய பொன்னேர் மொழி யன்றே! அம்மொழிபபடி, தன் மாட்டுப் பிழை செய்வாரை ஒறுறு நோய் முதலியவற்றால ஒறுக்கவுஞ் செய்வள். தீநெறி செல்லுவாரை ஒறுத்து நன்னெறி செலுத்தலுமா அறமன்றே! அவ்வறத்தை அம்மையுஞ் செய்கிறுள் போலும்.

பொன் மண் கொழிக்கும் காவிரி, பச்சை மணி கொழிக்கும் பண்புடையாள் போன்று, கால்வழியாகக் கழனியிற் சென்று பச்சைப் பயிர்களைப் பாங்குடன் கொழிக்கிறுள்.

எல்லா உயிர்கள் மாட்டும் அன்புடையார் குற்றமுள்ள தீவினையாளரிடமும் அன்புகொண்டு அவரையுமா ஓம்புவது போல, வான்பொருளை வாரிவருவாள் இழிபொருளையும் ஈர்த்து வருகிறுள்.

ஆற்றில் தவறி விழுவோர்க்கு, கைப்பிடியாக நின்று கரையேற்ற, கரைக்கண் மிக்க புற்களைக் கொண்டு காவிரி மிளிர்கிறுள். என்னே! அம்மை அறிவுறுத்தும் ஆற்றல்! இதைப்பாருங்கள். புற்களும் பிறர்க்கு உதவிஉற்றுழிஉதவுகின்றன. அதுபோல 'நீங்களும் பிறருக்கு உற்றுழி உதவுங்கள். பெருந்தகைமையொடு பிறர்க்குதவி வாழுங்கள்' என்ற வான் பொருளை அம்மை காட்டுகிறுள்.

இளைஞர் இன்பொடு குதித்து விளையாடவும் உடற் பயிற்சிக்காக, நீந்தி நீராடவும், நிறைந்து நீரொடு செல்கிறுள்.

கடலைக் காணும் முயற்சியொடு செல்வாள் இடையே எவ்வளவு தடை நேரினும, அதைத்தாண்டிக் கடலொடு கலக்கிறுள். இது "முயற்சி திருவினையாக்கும்" எனபது போன்ற முதுமொழிகளை மொழிவாள் போன்று இருக்கிறதல்லவா?

'வீணே உண்டு உறங்காதீர்கள். உறுதிப் பொருளைத் தேடுங்கள. மக்கள் வாழ்வை மாண் பெறச செய்யுங்கள். ஏனெனில் இளமை நிலையாதது' என்று இயம்புவாள் சுழி சுழித்துக் காட்டி உடனே மாற்றிக்கொண்டு காவிரிநங்கை ஓடுகிறுள். அவள் செல்வ நிலையாமையைச சொல்லுவான் மேடும மடுவுமிட்டு மிளிர்கிறுள். உயர்ந்த வாழ்வும் ஊழ்வலியால் ஒழியும் என்பதை உணர்த்துவாள், ஓளிபெற வளர்ந திருந்த ஒரு பெருமரத்தினை வீழ்த்தி விரைவுடன் செல்கிறுள். இங்ஙனம் பான்மை பெறப் பல் பொருள்களையும் உணர்த்திச் செல்வது ஒரு பெருங் கவினைக் காட்டுகிற தல்லவா?

காவிரி நீரற்ற காலத்துக்கவினை யிழக்கின்றுள். ஏன்? மக்கள் செய்யும் குற்றத்தினுல். அவள் மாட்டு யாதொரு குறையுமா இல்லை. ஆதலின் அவள் மாட்டுக் குற்றமா செய்யன்மின்; அவள் கவினைக் காண்மின்! கவினைக் காண்மின்; கழிபேருவகை கொண்மின்.

இனி இங்ஙனம் அழகொடு ஓடும்நீர், காலையும் மாலையும் காட்டும் கவினை நோக்குவாம்.

காலையில் செஞ்சட்டைப் போர்த்த செஞ்ஞாயிற் றொளியும், வானிடைச் சிதறுண்டு கிடக்கும் முகிலின் கருமையும், ஆற்றங்கரைச் சோலைப் பச்சையும் காண்பார்க்குக் கவினைச செய்யும். அதுபோது தண்ணீரிற் படிந்து வரும் தண்மை மிக்க சோலையில் காற்று, உடலுக்கு இன்பம் கொடுக்கும். பறவைகளின் ஒலிகள் செவிக்கு இன்பம் ஈனும்.

இங்ஙனமே மாலைக்கவினையும் நோக்குவாம். காலைக் கவினினும் மாலைக் கவின் சிறந்து விளங்கும். நீல நிறவானம் செஞ்சட்டை அணிந்ததே போன்று செக்கச் செவேலென சிவந்து விளங்கவும், செஞ்சுடர்க் கதிரவன், சிறிது சிறிதாக மேற் றிசையில் மறையத் தொடங்க, பறவைகள் பல இன்னிசை பாடி இன்புற, பூம்பொழிலிடைப் புகுந்து மெல்லென அசைந்து வரு தென்றல், காவிரி நீரொடு கலந்து வீசுதலை ஆராப் பேரின்பம் அளிக்க வல்லது. அதுகாலை பச்சைப் புல்லின் மெச்சத்தக்க நிறம் பாராட்டுந் தகைத்து. மேட்டுத் தவளையின் பாட்டொலி, தண்ணீர்த் தவளையின் தாளவொலி, மழைக் காலத்து மடாத்தவளையின் முழவொலி இவைகள் சேர்ந்து இசைக் குழுவினைப் போன்று இசைபாடி, செவியின்பம் சிறக்கச் செய்கின்றன. வெண்மணி போன்ற விண்மீன் நடுவே தண்மதி தவழும் தோற்றமும், வெண்ணிலவின் சாயல் தண்ணிழைக் காணுந் தன்மையும், காவிரியின் சலசலவென்ற ஒலியும், நள்ளென்ற இருளொலியும் எல்லாங் கலந்து இன்பம் நல்கும். இத்தகைய எழில் எழுதுந் திறத்ததோ?

இனி, இக்காவிரியின் பயனை ஆய்வாம். வெறும் அழகு மட்டும் இருப்பின் பயன் என்னை? அழகொடு அருளும் பெரும்பயனும் இருப்பினன்றோ சிறக்கும். ஆதலின் அதன் பயனை ஆய்வாம்.

காவிரி தன் பயனை அளிக்குங்கால் இன்னாரென உன்னாள்; இனையரென்று நினையாள்; எமரென்று எண்ணாள்; பிறர் என்று வெறாள்; நல்லாரென நோக்காள்; அல்லாரென அகற்றாள். 'எல்லோரும் ஒரு குலம். எல்லோரும் என் மகவு' என எண்ணுவள்; புல்லென நினைத்து அல்லது செய்யாள்; தேமாவெனச் சிறப்பையுஞ் செய்யாள்; சிங்கமெனவும் எண்ணாள்; சிற்றெறும்பெனவும் ஒறுக்காள்; இலங்கு உடல் அனைத்தும் ஈசனில் என்பாள்; எறும்பு முதலா இறைவன் ஈறு மனைத்துயிர்க்கும் நன்மை செய்கிறாள்.

இங்ஙனம் காவிரி சோழநாட்டை வளநாடு ஆக்குகிறாள்.

'சோழ வளநாடு சோறுடைத்து' என்ற சிறப்பு மொழியைத் தோற்றுவித்தவள் காவிரியல்லவோ! 'உண்டி முதற்றே உலகம்' என்பர் உயர்ந்தோர். உண்டியில்லையேல் உடல் இயங்காது. உடல் நலம்பெறவும் உண்டியைக் கொடுக்கிறாள் அன்னை. உண்டிமட்டுமா கொடுக்கிறாள்? இல்லை. உடல் நலத்திற்கு வேண்டிய மருந்தையும் அவள் கொடுக்கிறாள். எங்ஙனமெனில், இயற்கை வழி பிறழ்ந்தோர் நோயுறுவர். அந்நோயைமீண்டும் போக்க வல்லது இயற்கைப் பொருளே. இயற்கை யெல்லாம் நிறைந்துள்ளது இவ்வன்னையிருப்பிடம். ஆண்டுப் பசுமை மூலிகைகள் படர்ந்திருக்கின்றன. அம்மூலிகைகளினால், பெரும்பயனை எய்தல்கூடும். அம்மூலிகையிடையிலே, நம்மன்னை மூழ்குகிறாள். ஆண்டு மூழ்குபவருக்கு அம்மூலிகையின் குணம் பொருந்தியிருக்குமன்றோ? "தந்தை யறிவு மகனறிவு" என்பதும் முன்னோர் மொழியன்றோ? அக்குணங்கொண்ட காவிரி தன்மாட்டுக் குளிப்பவர் நோயைக் கெடுப்பாள். இவற்றைக் கருதியே போலும் காவிரி மூழ்குதலை முன்னோர்கள் கடமையுள் ஒன்றாகச் செய்தார்கள். இக்கால அறிஞர்களும் இதைப்பற்றிச் சிறப்பித்துச்சொல்லுகிறார்கள். இவள் அளிக்கும் பயன்களை முன்னமே ஆய்ந்தாம்.

இனி, இக்காவிரி ஒரே நிலையில் பயனளிக்கிறாளா, கால நிலைக்கு ஏற்பப் பயனளிக்கிறாளா என்பதைப் பார்ப்போம். பார்ப்பதற்குத் துணையாவது பண்டைப் பாவலர் மொழிகளே ஆதலின் அவைகளை ஆராய்வாம்.

சிலம்பின் கதையிசைத்த சேரர் பெருமான் சிறப்பிப்பதை நோக்குவாம். 'விளை பொருள்களை அளவிலாது விளைக்கும் வளமுடையது. உலகத்து உயிர்களையுங் காக்கும் அரசு தலைக் கொண்

டது. கடல் வளனுக்கு எதிரியது' என்பதை முறையே,

"தாஙகாவிளையுட் காவிரி நாடு"

"மாயிரு ஞாலத்து மன்னுயிர் காக்கும்"
—சிலப். 6-ம் காதை 30-ம் அடி.

"ஆயிரத் தோரெட்டரசு தலைக்கொண்ட
தண்ணறுங் காவிரி"
—சிலப். 5-ம் காதை 14, 15-ம் அடி.

"குடமலைப் பிறந்த கொழும்பல் குறா
மொடு கடன்வள னெதிர்"
—சிலப். 10-ம் காதை 166-ம் அடி.

என்று சிறப்பித்து அதனை வாழ்த்து கிறார். அவர் வாழ்த்தும் முறையைக் கவனியுங்கள். காவிரியின் கவின் தெற்றெனப் புலப்படும்.

"வாழியவன்றன் வளநாடு
மகவாய் வளர்க்குந் தாயாகி
யூழியுய்க்கும் பேருதவி
யொழியாய் வாழி காவிரி"
—(7 - கானல் 27)

என அவர் வாழ்த்துகிறார்.

இனிக் கல்வியிற் பெரிய கம்பரை நோக்குவாம். அவர்கங்கைக்கு உவமை யாகக் காவிரியைக்கொடுத்து, தன்னுட் டுப்பற்றினை நனிவிளக்குகிறார்.

"பொங்கு கொன்றைசார்த் தொழுகலாற்
பொன்னியைப் பொருவும்
கங்கை யென்னும் அக்கரை
பொரு நதிக் கண்டார்"

என்கிறார்.

தெய்வத் திருநாடாகிய தமிழகத் தில் நீர்வளம் நிறைந்த சோழ நாட்டில் பிறந்த பெருங் கவிஞர், அந்நாட்டைப் புனல் நாடாக்கும் பொன்னியைப் புகழ்ந்து போற்றுவது இயல்பன்றோ! கங்கை காவிரியை ஏற்குமென்றால் கங் கையினும் பெரிது காவிரி என்பது தெரிகிறதல்லவா?

இங்ஙனமே மிதிலையின் வீதியை அழகு செய்வார், 'பொன்னி அள்ளி கொழிக்கும் அழகிய பொருள்களைப் போன்றிருந்தது அவ்வீதி' என்கிறார்.

திருஞான சம்பந்தப் பெருமான் குரங்காடுதுறைப் பதிகத்தில் காவிரி யைப் பற்றியும், அது ஈர்த்து வரும் பொருளகளைப்பற்றியும், ஓவியம்போல் எடுத்துச் சொல்லுகிறார். அவற்றை யெல்லாங் கூறின் விரியும். ஒன்றைமட் டும் கூறுகிறேன். அது காவிரி யீர்த்து வரும் பொருள்கள்.

"முத்துமா மணியொடு முழைவளர்
ஆரமும் முகந்துந்தி
எத்துமா காவிரி"

என்பது.

"தண்ணீருங் காவிரியே
தார்வேந்தன் சோழனே"

என்கிறார் ஒரு புலவர்.

"பொன்னி பொன்கொ ழிக்குங் காவிரி"

என்கிறார் பிள்ளைப் பெருமாள் ஐயங் கார்.

"காவிரி தோய்ந்து போர் தோய்வரோ
சிறுகாற் புனலே"

எனத் துறைசைக் கோவை ஆசிரியர் சொல்லுகிறார்.

"கங்கை நதிப்புறத்துக் கோதுமைப் பண்டம்
காவிரி வெற்றிலைக்கு மாறுகொள்ளுவோம்"

எனப் பாட்டிசைக்கும் பாரதியார் வீரங் கொண்டு தீரமுடன் செப்புகிறார். இயற்கை யெழிலை எழுதும் இவர் காவிரியின் கவினைக் கண்டே போலும், செந்தமிழ் நாட்டு யாறுகளைச் செப்பு முனனணியில்,

"காவிரி தென்பெண்ணை பாலாறு"

என்கிறார். இங்ஙனம் இன்னும் பல புலவர்கள் எடுத்துக் காவிரியைச் சிறப் பிக்கின்றார்கள். அதனை விரிக்கிற் பெருகுமெனச்சுருக்கி வரைகிறேன்,

இங்ஙனம் புலவர் பலரால் போற்றப் பட்டவள் உயிரனைத்தையும் ஒருங்கு காப்பவள் நமக்கு சிறப்பாக நலனைச் செய்து செவிலித்தாயாய சிறப்பினை ஆய்வாம்.

அன்புள்ள நண்பர்களே !

நங்கல்லூரி கட்டிய காவலன் யார்? விஞ்சிய புகழுடைத் தஞ்சை மன்னவன். அக்காவலனுக்குக் கல்லூரி கட்ட இருந்த பொருள் யாது? காவிரி பயனை கொழித்த பொன்னன்றோ? காவிரி யில்லையேல் அவன் பொருள் பெறுவது யாங்ஙனம்? கல்லூரி கட்டுவது யாங்ஙனம்? அதற்குப் பொருள் கொடுத்த பெருமை காவிரிக்கு உரித்து. நம நற்றாயாய காவலனுக்குப் பொருள் கொடுத்த தோழி யாவாள் காவிரி. காவிரி வளமின்றின் கல்லூரி யாண்டிருக்கும்? நாடொறும் நம்மைக் காப்பவள் காவிரி யல்லளோ? இங்ஙனம் நம் நற்றாயாய மன்னவற்குத் தோழியாகி, அவன் மகவு ஆகிய நமக்குக் கல்லூரி வழியாக அவலம் போக்கி, அறிவும், ஒழுக்கமுங் கொடுத்து, நம்மை வளர்க்கும் செவிலித்தாயாய்ச் சிறப்புடன் விளங்குகிறாள். ஆதலின் அவ்வன்னையை வாழ்த்தி வணங்குவோம்.

## முடிவு

காவிரி குடமலையிற் பிறப்பதென்பதும், நிலத்தையுங் கடந்து கடற்குச் சென்று அழகு செய்கிற தென்பதும், 'இவ் யாற்றைக் காந்தமன் என்னுந் சோழன் தோற்றுவித்தான்; கரிகாற் பெருவளத்தான் கரை கட்டினான்' என்பர் ஆராய்ச்சி யறிஞர் என்பதும், இவ்யாற்றின் கரை பசுஞ் சோலைகளை யும் மரங்களையும் தன் பாங்கர்கொண்டு கவினைச் செய்கிறது என்பதும், யாறு நீர் பல உண்மைப் பொருள்களை புணர்த்துவதுபோல ஓடுவதும் பல திறநீரோடு ஓடுவதும் அழகை அளிக்கின்றன என்பதும், காலையும் மாலையும் இதன் கரையமர்ந்து கவினைக்காணின், இயற்கை யழகு மிக்கது இன்பம் நல்கும் என்பதும், இவள் அழகு செய்வதோடு அனைத்துயிர்க்கும் பயனையுங் கொடுக்கிறாள் என்பதும், இவளைப்பண்டைப் புலவர்கள் போற்றிய முறை இவையென்பதும், நமக்குமட்டும் சிறப்பாக இவ்வாறு செய்யும் நலன் இவை யென்பதும் ஆய்ந்தோம். இனி இவளை வாழ்த்தி வணங்குவோம்.

வாழ்க காவிரி, வாழ்க தமிழகம்
வாழ்க தமிழ்மொழி.

## காவிரி வாழ்த்து

காவிரி போற்றுதும் காவிரி போற்றுதும்
பாவிரி தமிழ்த்தாய் பாங்குடன் வளரத்
தஞ்ச மென்றவர்க் கஞ்சலென் றருளும்
விஞ்சிய புகழுடைத் தஞ்சை மன்னற்கு
வானது பொய்ப்பினுந் தானது பொய்யாது
வான்பொருள் நல்கும் வள்ளற் றன்மையால்
வேற்றுமை களைந்த ஒற்றுமை வேண்டுமின்
ஈண்டிலங் கியாக்கை ஆண்டவ னிருப்பெறு
மாண்டகு மறையைக் காண்டக விரித்து [ம்
ஏர்பெற இயங்குநின் சீர்மைத் தாயன்னே!
மன்றுறை வுலகத்து மன்னிய புகழோ
டின்னல் களைந்தும் இன்பம் ஈந்தும்
கண்ணினிற் கினிய காட்சி யளித்தும் [தே
'அஞ்சையுங் கவர்ந்தே நெஞ்சையுங் கவர்ந்
ஒருமையி னிறுத்துநின் பெருமை தானென்
புன்மர முதலா மன்னுயிர் கட்கும் [னே'!
நன்னர் செய்து நன்றே யியங்குவை
நீயெனின் யாரோ நின்னை ஒப்பார்
ஞாயிறு திங்கள் ஆயிரு சுடரும்
மாயிரு ஞாலத்து மன்னு ஞான்றெலாம்
வாழிய ! காவிரி வாழி !! வாழியரோ !!!

# நமது நாட்டில் வழங்கும் பழங்கதைகள்

## சிகண்டி கதை

[திரு. சோமசுந்தர தேசிகர்]

(உரிமை ஆக்கியோர்க்குரியது)

ஓர் ஊரிலே ஒருவனுக்கு ஒரு பெண் மகள் இருந்தாள். அவளுக்குச் சிகண்டி யென்றுபெயர். அவளைப் பெற்றோர் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வந்தனர். அவ்வாறு வளர்த்து வந்ததனால் அப்பெண் சொற் பேச்சு கேளாமல் தன்னிஷ்டம்போல் நடக்கலானாள். அவள் உற்ற வயது அடைந்தபொழுது பெற்றோர் ஒருவனைத் தேடி அவளுக்கு மணஞ் செய்வித்தனர்.

ஒரு பெண் ஒருவனுக்கு வாழ்க்கைப்பட்டால் அவள் கணவனோடு இருந்து வாழ்ந்து வரவேண்டு மென்பது நாட்டு வழக்கம். அந்த வழக்கப்படி அந்தச் சிகண்டியும் அவள் கணவனும் தனிப்பட வாழ ஆரம்பித்தனர். சிகண்டி ஒருவருக்குக் கட்டுப்பட்டு இதுவரை வாழ்ந்து வந்தவ ளல்லளாதலால், கணவன் சொற்படி கேட்க அவள் மனம் இடங்கொடுக்க வில்லை. ஆயினும் கணவன், தான் ஆண்பிள்ளை யென்பதைக் காட்ட முயன்றான். காலையிலெழுந்ததும் அவளால் யாதொருபிழை நேராவிட்டாலும் அவளுக்குப் பத்துப் பதினைந்துஅடி கொடுத்துவிட்டு 'இன்று சமையல் செய்ய வேண்டிய தில்லை' என்று சொல்லி விட்டுப் போய்விடுவான். சிகண்டி ஏறுக்குமாறாக நடப்பவளாகையால் உடனேஎழுந்து நீராடி நல்லாடையுடுத்துப்பக்குவமாகச் சமைத்து வைப்பாள். இவ்வாறேநடப்பது வழக்கமாக விருந்தது.

ஒருநாள் அவளது உறவினர் சிலர் விருந்தாக வந்திருந்தனர். கணவன் அன்றும் வழக்கம் போலச் செய்வது தவறென்று எண்ணி வெளியே போய் விட்டான். சிகண்டிக்கு அது தகுதியென்று படவில்லை. மேலும் அவளுக்கு வழக்கமாக நடப்பது நடந்தாலொழிய காரியங்கள் செய்தல் இயலாது. பார்த்தாள் சிகண்டி, 'தங்களவர் வந்தால் தானே நடக்கும், எங்களவர் வந்தால் ஏனென்று கேட்பாரா?' என்று சொல்லி ஓர் அம்மியைத் தூக்கிக் கூரையின் மேல் வைத்து மேலே தள்ளிக்கொண்டு 'அப்படா ஐயடா' என்று சிறிது நேரம் வருத்தப்பட்டு விட்டு, உடனே எழுந்து சமையல் செய்தாள். அது முதல் அப்பெண் நல்வழிக்கு வந்தாளென்று சொல்வது வழக்கம். அது முதல் ஏறுமாறாக நடக்கும் பெண்டிரைச் சிகண்டி யென்றும், அச் செய்கையைக் குறிக்கச் **சிகண்டி கதை** யென்றுங் கூறுவது வழக்கமாயிற்று.

இதனை யொருவாறு ஒத்து ஜாதகக் கதையொன்று காணப்படுகிறது. அது வருமாறு :—

ஒரு காலத்திலே காசியம் பதியை ஒரு துஷ்ட அரசன் ஆண்டு கொண்டிருந்தான். அவன் தன் பெண்டு பிள்ளைகளையே யன்றி வேலைக்காரர், ஜனங்கள் முதலாயினோரையுந் துன்புறுத்தி வந்தான். அவன் இறந்ததும் அவன் மக்கள் அவனை யெரித்துச் சாம்பராக்கி விட்டனர். மக்கள் அந்தத் துஷ்ட அரசனுடைய மகனுக்குப் பட்டங்கட்டி மகிழ்ச்சி கொண்டாடினார்கள். அப்பொழுது வாயிற் காப்போன் மட்டும் சந்தோஷ மில்லாமல் துக்கக் குறியோடிருந்தான். இதனைக் கண்ட இளவரசன் அவனைக் கூப்பிட்டு அவன் மாத்திரம் மகிழ்ச்சி யின்றி யிருப்பதற்குக் காரண மென்ன வென்று விசாரித்த போது, அவன், 'அரசே! பெரிய அரசர் உயிரோடிருந்த காலத்தில் அவர் அரண்மனையிலிருந்து புறப்பட்டு வெளியிற் போகும்போது எட்டுக்

பொருந்தவைக்கப்பட்ட "உரிமை உறையு"வின் நந்தவனத்திலுள்ள அழகிய மேடையின் மீது இரு பெண்மணிகள் அமர்ந்து வாடிய வதனங்களுடன் வார்த்தையாடினார்கள்.

"சாரதா! என்னுயிரினு முயர்ந்த என்னக முரியார் எங்குச் சென்றனரோ? என்னிடமுங் கூறாது வழக்கத்திற்கு மாறாக அவர் மறைந்ததற்கொருகாரண மிருத்தல் வேண்டும். அவர் சென்னையிலிருந்து வரும்போதே வாடிய வதனத்துடன் இருந்ததை நீ கவனித்தாயா? நேற்று மாலை என்னுடன் இங்கு அவ்வளவு அன்புடன் வார்த்தையாடி நின்ற அவர் இவ்வாறு திடீரென மறையக் காரணமென்ன?"

"சுலோசனா! அறிவும், அறிவுக்கேற்ற அழகும், அழகுக்கேற்ற ஒழுக்கமும் நிறைந்த அண்ணா இவ்வாறு திடீரென மறைந்ததற் கொரு காரணம் இருந்தே தீரவேண்டும். எனினும், அவர் ஒருவரிடமுங் கூறாது மறைந்ததே பெரும விந்தையாக இருக்கின்றது. எனக்கொன்றும் விளங்கவில்லை. காலையிலிருந்து தந்தையின் முகமும் வாடியே இருக்கின்றது."

"சாரதா! என் காதலர் மறைந்த விந்தையே நம தந்தையையும் வாட்டி நிற்கின்றதென்பதற் கோரையமுமில்லை. இளமையிலிருந்து வளர்த்த பாசமும் அவரை விட்டு நீங்கிடுமோ?"

"சுலோசனா! மாலை ஐந்து மணிக்கு வெளியிற் சென்ற தந்தை, மணி ஏழாகியும் ஏன வரவில்லை?"

# இடியேறு

## பதின்மூன்றும் ஆண்டு

"நவசக்தி" தனது பன்னிரண்டாம் ஆண்டைக் கடந்து பதின்மூன்றும் ஆண்டையெய்தியிருக்கிறாள். கடந்த பத்தாண்டுகளாக "நவசக்தி" வாரந்தோறுந் தவறாது வெளிப்போந்து உலாவிய திருக்கோலப் பொற்பினை நேயர்கள் மறந்திருக்கமாட்டார்கள். பதினோராம் ஆண்டில் அரசாங்கத்தார் ஈடு காணங் கேட்ட நாள்முதல் "நவசக்தி" ஏறக்குறைய ஆறுதிங்கள் வெளிவராது நின்றது நேயர்கட்குத் தெரியும். அவ்வாறு திங்கள் நிறுத்தத்தால் "நவசக்தி" நிலையத்துக்கு நேர்ந்த கட்டமும் நட்டமும் "நவசக்தி" வாழ்வையே குலைத்து விட்டன என்று கூறல மிகையாகாது. "எல்லாம் ஆண்டவன் செயல்" என்று நெஞ்சில் நிறைவுகொள்வது எமது வழக்கம. இப்பொழுது "நவசக்தி" திங்கள் வெளியீடாக மாறியது பற்றி நாம் சிறிதுங் கவல்கின்றே மில்லை. சந்தாதாரர்களிலும் பலர் மனங் கவலாதிருப்பது "நவசக்தி"யின் அதிர்ஷ்டமே யாகும். திங்கள் வெளியீடு இனிச் செய்யப்போகும் ஆக்க வேலைகள், நாட்டிற்கு இன்றியமையாதன என்பது நாளடைவில் விளங்கும். அவ்வாக்கத்துக்கு ஊக்க மூட்ட வேண்டிய பொறுப்பு, சந்தாதாரர்களுடையதென்று சொல்ல வேண்டுவதில்லை. ஏழை "நவசக்தி"க்கு ஆதரவு நல்குமாறு பொதுவாகத் தமிழ் மக்களையுஞ் சிறப்பாகச் சந்தாதாரர்களையுங் கேட்டுக் கொள்கிறோம்.

## மந்திரி மாறுதல்

சென்னை அரசாங்கத்தின் மாற்றப் பட்டபகுதியின் நிர்வாகத்தில் ஸ்ரீமான் முனிசாமி நாயுடு அவர்களைத் தலைமை கொண்டு 'ஜஸ்டிஸ்' கட்சியார் மந்திரிப் பதவிகளை வகித்திருந்தனர். 'ஜஸ்டிஸ்' கட்சிக்குள்ளாக மந்திரிப் பதவியை யொட்டிப் பிணக்கு ஏற்பட்டது. அப்பிணக்குப் பெரிதும தலைமை மந்திரிப் பதவியை யொட்டியே எழுந்தது. அதைப்பற்றி ஒருவித முடிவு காணத் தஞ்சையில் 'ஜஸ்டிஸ்' கட்சி

மகாநாடு ஒன்று கூடிற்று. அம்மகாநாடு குழப்பத்தில் முடிந்தது. மீண்டும் அம்மகாநாடு கூடித் தன் கருத்தைத் தெரிவிப்பதற்குள் மந்திரிக்கூட்டத்தில் மாறுதல் ஏற்பட்டது. அம்மாறுதலால் முதன் மந்திரியாக இருந்த ஸ்ரீமான் முனிசாமி நாயுடு அவர்கள் தமது பதவியை இழந்திடல் நேர்ந்தது. அவர் பீடத்தில் பொப்பிலி ராஜா முதன் மந்திரியாக அமர்ந்தார். இம்மாற்றத்தால் மாகாணத்திற்குப் பெருநலமேனும் பெருந்தீமையோ நேர்ந்து விடாதென்பது திண்ணம். இதனால் ஒழுங்கு முறையில்லை யென்பது மட்டுமே சிறப்பாக விளங்குகிறது. அண்மையில் குழப்பத்தில் முடிந்த மகாநாடு மீண்டுங் கூடித் தன் கருத்தை வெளியிடுதற்கு முன்னர், சென்னைக் கவர்னர் மந்திரிக் கூட்டத்தில் மாற்றஞ் செய்யப் புகுந்தது பெருந்தவறேயாகும். 'ஜஸ்டிஸ்' கட்சிக்குள் இனியாதல் தலைமைப் போராட்டம் நிகழாதிருக்குமாறு அக்கட்சியார் நடந்து கொள்வது சிறப்பு. அவர்கள் அவ்வாறு நடப்பார்களா?

## சங்கர பாஷ்யம்

ஸ்ரீமான் கடலங்குடி நடேச சாஸ்திரியார் அவர்கள் சங்கர பாஷ்யத்தைத் தமிழில் மொழிபெயர்த்து உதவி வருவதைக் குறித்து நாம் பன்முறை எழுதியுள்ளோம். ஆகவே ஸ்ரீமான் சாஸ்திரியார் அவர்களைப் பற்றியும், அவர்களது மொழி பெயர்ப்புத் திறத்தைப் பற்றியும் புதிதாக ஒன்றுஞ் சொல்ல வேண்டுவதில்லை. இப்பொழுது மூன்றாவது அத்தியாயம் நமது பார்வைக்கு வந்தது. அதன் பெயர் "சாதனாத்தியாயம்" என்பது. அவ்வத்தியாயத்தில், ஈஸ்வர பிராப்திக்குரிய சாதனம் சொல்லப்பட்டிருக்கிறது. அதன்கண் நான்கு பாதங்கள் அடங்கியிருக்கின்றன. சாதன முறைகளும், பாவ புண்ணிய விளக்கமும், நிர்க்குண சகுண ஆராய்ச்சியும், ஆத்மாக்கள் மண்டலங்களை அடைவதும், அவை மீண்டும் தோன்றும் முறையும், ஜீவ இயல்புகளும், இன்ன பிறவும் கடாவிடைகளான் நிறுவிக்காட்டப்பட்டிருக்கின்றன. இதுகாலை, சர் ஆலிவர் லாட்ஜ் உள்ளிட்ட அறிஞர்கள் கண்டு வரும் 'மரணத்தின் பின் மனிதர் நிலை' யென்பதுபோன்ற பொருள்கள் இம்மூன்றாம் அத்தியாயத்தில் பல இடங்களிற் காணப்படுகின்றன. புற முயற்சியால் இப்பொழுது விளங்கப் பெறும் சில நுட்பங்கள், ஆதிசங்கரர் அகமுகத்தில் விளங்கினமை கண்டு குறிக்கத்தக்கது. ஸ்ரீமான் நடேச சாஸ்திரியார் அவர்கள் மிக ஊக்கங்கொண்டு உழைத்து வருகிறார்கள். அவர் தம் ஊக்கத்துக்கு ஊக்கமூட்ட வேண்டியது பொறுப்பு, தமிழ் மக்களுடையது என்று சொல்லவும் வேண்டுமோ? தமிழ்மக்கள் இம்மொழி பெயர்ப்பு நூலை ஆதரிப்பார்களாக. விலை ரூபா ஆறு. விலாசம்: கடலங்குடி நடேச சாஸ்திரிகள், 72, பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை; அல்லது 'கஸ்தூரி ரங்க விலாஸ்', நடேசஐயர் தெரு, மாம்பலம், சென்னை.

## தேவீ மகாத்மியம்

இப்பெயர் வாய்ந்த நூலொன்று நமது பார்வைக்கு வந்தது. தேவீமகாத்மியம் வடமொழியில் மார்க்கண்டேய புராணத்தி லிருப்பது. வடமொழியி லுள்ள அப் பகுதியைத் தமிழில் பெயர்த்து உதவிய பலாசூர் - பண்டித நா. இராமநாத சாஸ்திரியார் அவர்கட்கு நமது நன்றியறிதல் உரியதாக. இந் நூற்கண் தேவிவரலாறு, அசுரர்கள் வதம், தேவர்கட் கருள்புரிதல், தேவர்கள்வாழ்த்து முதலியன அடங்கியிருக்கின்றன. தேவியின் மகிமை ஆங்காங்கே மிக அருமையாக விளக்கப்பட்டிருக்கிறது. மொழிபெயர்ப்பு இனிய எளிய நடையில் அமைந்திருக்கிறது. தேவிபக்தர் ஒவ்வொருவரும் இந்நூலை ஆதரிப்பாராக. விலை அணா எட்டு. விலாசம்: பண்டித த.நா. இராமநாத சாஸ்திரி, 'நாகேஸ்வர விலாஸம்', மயிலாப்பூர், சென்னை.

# நவசக்தி

‘ எவ்வுயிர்க்கும் அன்பாயிரு ’ ‘ என்கடன் பணிசெய்து கிடப்பதே ’

சிலம்பு கரு ஆங்கீரஸஞு மார்கழிமீ பரல் உ

## நெல்விடு தூது

(தொடர்ச்சி)

தென்னரங்கன் சம்பா திருக்குறுங்கை நம்பிசம்பாப்
புன்னைவனச் சம்பாப் புழுகுசம்பா—வன்னவன்ன
சம்பாக்க ளென்றுந் தனியானைக் கொம்பனென்றுஞ்
செம்பாளை யென்றும் [1]சிறகியென்றும்—செம்பாய்ப்
பறக்குஞ் சிறுகுருவி பாற்கடுக்க னென்றும்
நிறக்கும் [2]பனைமூக்க னென்றும்—கறுத்தநிற
வாலன்சிறை மீட்டான் வளர்பூசைப் பாடிவெள்ளை
மீளுஞ்சிறை மீட்டான் மலைமுண்டன்—வாணன்
கருஞ்சூரை சூரை கறுத்ததிக்க ராதி
விரும்புகன வெள்ளையதிக் ராதி—பெருங்கடல்போற்
கத்தும் பொலிவீர கஞ்சுகன் போலவெள்ளை
முத்துச் சொரிகுரும்பை முத்துவெள்ளை—யித்தனையோ
போரிறங்கல் மீட்டான் புழுதி புரட்டியென்றும்
நேர்பெருகு சொக்கன்சம்பா நெல்லென்றும்—மாராச
வாணனென்றும் வாள்சுறுணை வாலனென்றுஞ் சீராம
பாணமென்றுங் கீர்த்தி படைத்ததல்லாற்—சேனுலகில்
ஆதிதில்லை நாயகனென் றுறகுரு மைபேரும்
வீதி விடங்கனென்ற மெய்ப்பேரும்—நீதிதிருக்
குற்றால மென்றுலகங் கொண்டா டியபேரும்
பெற்றாயுன் பேரொருவர் பெற்றாரோ—வுற்றபிரான்
தன்பேர் படைக்கத் [3]தவம்படைத்தா யாகிலுமோ
உன்பேர் படைத்தவற்கே யோகங்காண்—நின்பேரஞ்
செஞ்சாலி [4]மீன்பார்க்குஞ் செல்வமணப் பெண்களுக்கோர்
அஞ்சாலி யோயருமைக் கல்லவோ—மஞ்சாலே
நீலியிட்ட மூங்கில்வனம் நெல்வேலி யானதனை
வேலியிட்டுக் காதத விசேஷமோ—ஞாலமெல்லாஞ்
சொல்லுகின்ற வுன்பேர்த் துணிவன்றோ சாக்கியனார்
கல்லுண்டை சாத்திக் கதிபெற்றார்—மெல்லமுதத்

(பிரதி)—1சிறுதியென்றும். 2பனைமூக்க னதிக்கிராதியென்றும். 3தவறப்படைத்தா, 4பொனறுவதும்.

குள்ளமெனு மீன்படுக்கு மொண்டொடியார் மாயவலைக்
கள்ளவிழி மான்படுக்குங் கண்ணியே—துள்ளுதிரை
யூற்றுக் கடலி லொ[வி]த்த பரவரெல்லார
தூற்றுக் குடியிலவந்து சூழாமல்—ஏற்ற
கரைதுறைக ளேழிலுள்ள கண்கார ரெல்லாம்
[1]நிரைதோணி விட்டுநில் லாமல்—ஒருதோணி
மண்டைக்க னேறாமல் வந்துகுளி யாளாகக்
குண்டைக்கன் போய்ப்போய்க் குதியாமல்—அண்டைக்கே
சங்குசிப்பி வாழுமிடந் தான்தேடித் தேடியவன்
முங்கிமுங்கிப் போய்மூச்சு முட்டாமல்—பைங்கொடியார்
தேன்மொழிக்குஞ் செவ்வாய்ச் சிவந்தபவ ளத்துறைக்கே
தான்கொழிக்கு முத்துச் சலாகமே—வான்செழிக்குஞ்
சந்திரனைக் கீழே தறிநாட்டிப் பின்னையொரு
மந்தரத்தைத் [2]தந்திரமாய் மத்தாகி—அந்நாத்தோர்
பாம்புகயி றாய்ப்பிணித்துப் பாற்கடலைக் கிண்டாமல்
தேம்பியம ரேசர் திகையாமல்—தாம்புதொட்டு
வண்ணமுகில் மேனியான் மத்தெறிந்து காட்டாமல்
தண்ணமுதங் காட்டுஞ் சமுத்திரமே—எண்ணினர்க்கு
மின்னைவிளை விக்குமொரு மேகம்போல் வேணபடி
பொன்[னை]விளை விக்குமொரு பூமியே—உன்னையினிப்
பொன்னென்றோ தங்கமென்றோ பூவென்றோ மாலையென்றோ
யென்னென்றோ வாழ்த்திடுவே னென்கோவே—பொன்னுசகுத்
தோழனுமாம நல்ல துணைவனுமாம் நீங்காத
கேள்வனுமா மென்பதுநான் கேட்டிருந்தேன்—தோழனைநீ
அண்ணா னென்று கோட்டிகொண்டாய் ஆசாரக் கள்ளாவுன்
னிண்ணையங்க ளென்னவென்று நேமிப்பேன்—மண்ணுலகோர்
நாடுகுடி யேறுதற்கு நாட்கால்கள் நாட்டுதற்கு
வீடு குடிபுகுதும் வேளைக்கும்—ஏடுபிடி
[3]கல்விக்குப் போவார்க்குங் கன்னியுங்காப் புநதொலையச்
செல்வக் கலியாணஞ் செய்வார்க்கும்—நல்லதுதிக்
கையாரைப் போற்றியிரு கையால் நிறைநாழி
வையாமல் தெட்சணைமுன் வையாரே—தையலார்
வாசமணப் பெண்பேசி வாரவரு முன்பேரைப்
பேசியல் லோபணத்தைப் பேசுவார்—ஆசைமனு
நின்னைவிடப் பேசினபேர் நெல்லுடையார் வீடுதொறும்
பொன்னலையக் காதலையப் போயலைவார்—பின்னையுநீ
அந்தரங்க மாக அடுக்களையிற் போய்ப்பணத்தைப்,
பந்தலிலே யாடவிட்டுப் பார்த்திருப்பாய்—எந்தவிதம்
ஆனாலும் பொன்னா லமையாத காரியமும்
தானாக நின்று தரியிடுவாய்—நீநாட்டிப்
போகாத காரியத்திற் [போவாரார்] பொன்னாலே
யாகாத காரியத்துக் கண்ணனென்பாய்—ஓகோகோ
நேயவித்தை போலுலகில் நீயாடும் வித்தைவெகு
மாயவித்தை கண்டாய் வகைகாரா—தாயாக

(பிரதி)—[1]நிரைநிரையே தோணிவிட்டுநில்லாமல். [2]தந்தரமாய். [3]கல்விக்கும்.

கண்டனைய சொல்லாரைக் கண்டாலு மேதுசெய்வார்
உண்டவர்க ளெல்லாம் உரஞ்செய்வார்—மண்டுபெருங்
கற்பூசை போல்நடத்துங் [1]காமகுரு பூசையுன்
[2]னுட்பூசை யில்லாம லோடாதே—நட்புடையார்
பூணழகு கொங்கை புடைத்தழகு காட்டுவதும்
ஊணழகு கண்டா யுடையோனே—வீணழகாய்க்
கொங்கை யிருந்தென் குழலிருந்தென் கோப்பிருந்தென்
மங்கையரில் மோக வடி விருந்தென்—சங்கையாய்க
கண்ணிருந்தென் மூக்கிருந்தென் கட்டழகா நீயில்லாப்
பெண்ணிருந்த வீடு பிழையன்றோ—கிண்ணமுலை
காவிவிழி மாதருன்னைக் காணாத கண்ணிலந்தச்
சீவகனைக் கண்டாலுஞ் சீயென்பார்—ஐவாயன்
கண்ணறைய னானாலுங் காதறையன் மூக்கிழந்த
பண்ணறைய னானாலும் பாரரோ—வண்ணமற்ற
ஊமனே யானாலும் உன்பெருமை கண்டபெண்கள்
காமனே யென றடப்பங் கட்டாரோ—கோமளமாய்
அத்தையார் நாணேரா அங்கனே நாலாறு
மைத்துனிமார் வட்டமிட்டு வாராரோ—மூத்தனையார்
மஞ்சட் குளியழகோ மையழகோ பொட்டழகோ
கொஞ்சத் தலைகவிழ்ந்த கூச்சமோ—கெஞ்சியவன்
வீசுகலை தொட்டவுடன் மெல்லணையி லேறுவதோ
கூசுதலைப் பேச்சோ குணலமோ—பே[ை]சயிலே
சேலைத தலைநெகிழுஞ் சித்திரமோ கொத்துமலர்
மாலைக் குழல்சரியும மாற்கமோ—மேலுமவர்
கட்டு[ெ]மட்டுங் காணவிரு கண்கொளுமோ கண்பகட்டி
வெட்டிவிட்ட பார்வையிலே மெய்சோர்ந்தால்—கெட்டிகெட்டி
எங்கே நினைந்தீர் எவள்மேலே சிநதைவைத்தீர
அங்கே யுமக்கவள்மே லாசையோ—மங்கையர்சொற்
பொய்யென் றிருந்தேன் புருஷரையும் நம்புவரோ
மையல்கொண்ட கள்ளிக்கு வாயினியேன்—அய்யய்யோ
உண்டோ வி[ை]நப்பா ருடனே கண் ணீரும்வருங்
கெண்டையங்கண் சொன்னபடி கேட்குமே—ஒண்டொடியீர்
தாபமோ தந்தமனத் [3]தாபமெனுங் கன்னியிதழ்
கோபமே தந்தாற் குணங்கண்டீர்—பாவமோ
பன்னீர்த் தடமிரு[க்]கப் பச்சிளநீ ரஙகிருக்க
வெந்நீர் கொடுத்தால் விடாய்போமோ—[4]மின்னார்கள்
தேர்முந்தக் காண்பதொரு செந்தமிழ்க்கோ னைநதுறைக்குக்
கார்முந்தக் காண்பதுண்டோ காரிகையீர்—நீரினித்தான்
பார்த்தருளீ ரென் றவுடன் பாசாங்கு மாய்க்குடில
வார்த்தையுமா யங்கே மனந்திரும்பச்—சேர்த்ததுடை
காலோடு கால்பிணையக் கைகள்முடி மேற்பிணைய
மேலோடு வண்டால் விளக்கணையச்—சேலையொரு
தட்டவிழ வச்ரமணி தைக்குமரை யிற்கொடிகள்
கட்டவிழ வட்டமுலை கச்சவிழ—விட்டமதன்

(பிரதி)—1 காமங்குரு பூசையுன்னுடைய. 2 யுயிர்ப்பூசை. 3 தாபமெனுங். 4 முன்னார்கள்.

பத்திபத்தி யாகப் பகல்வத்தி நின்றிலங்க
முத்துமுத் தாய்க்கொளுக முன்னிலங்க—வுத்துங்கா
செய்யா வரிசை யிடசெப்பு மாநிக்கம
அய்யாவுன் றுநிரக மல்லவோ—வையகத்தோர்
கும்பிடுவார் மன்னரிலே கோவேயுன் னன்னமெனுந்
தம்பிதனைக் [1]கும்பிடா தாருண்டோ—சொமபாக
நெற்கணக்குக கேட்டு நிலவழியு மாணிபமும்
[2]சொற்கணக்கும் தீர்வைத் துகையுங்கேட்—டெற்குளசொன்
னதாயங் கூட்டு பருக்கை யனுசரிதது
மிதாம் விசேள வகைகூட்டு—மாதாநதம
தன்தவணை கூட்டு தலத்துச் செலவுதன்னுப
பின்தவணை கூட்டிப் பிசகுதன்னு—முன்றவணைக்
குத்தார மென்ன வொடுக்கென்ன தண்டலென்ன
சுற்ற நிலுவையென்ன சொல்லென்று—மொத்தத
தவணையாய்க் கூட்டித் தலமணிய கார
ரவரவரை யெல்லா மதட்டி—யிவரவரே
யென்மணிய முன்மணிய மென்பார் மணியமெல்லா
முன்மணியங் கண்டா யுடையோனே—நன்மணியச்
சம்பிறுதி யென்றுந தலத்துக் கணக்கென்றும
அம்பலஞ்செ யத்தாந் தரமென்றும—வமபளக்கும்
எத்துவழி யென்றும் எதிாகணககுங் கைவளையும்
அததகங் கூட்டமிடு மங்கணத்தில்—ஒதமெழுததும்
அட்டவணை யோவிரசோ ஆயக்கட் டோவொழுகோ
பட்டோலை யோதீர்வைப் பஞ்சரிப்போ—கெட்டோடே
ஆயிரம்பொன் கூட்டுவதோ ஆயிரம்பொன் பிள்ளையும்நீ
போயிருநதா வில்லையெனப் போவதோ—நீயிகழ்நதால்
அததனையுங் கூட்டுவதோ ஆறிவார் உன்னுடைய
சித்து விளையாட்டார் சீமானே—மெத்தவுனைக்
கொண்டுகட்டுஞ் செட்டிகளும் கோட்டைக்குக் கால்வாசி
கண்டுவட்டி வாங்குகன வர்த்தகரும்—மண்டுகடற்
கப்பல்வியா பாரிகளும் காசுபடைக கும்பெருமை
யப்பனே யுன்பெருமை யல்லவோ—ஒப்பனைக்குச்
செப்பாடல் வட்டமென்றுஞ் சித்தறுதல் வட்டமென்றும்
வைபபா பிடைக்குறைச்சல் வட்டமென்றும்—*ஒப்பாத

*       *       *

பிள்ளலுக்கு வட்ட[ம்] பிடுங்கலுக்கு வட்டமென்றும்
கள்ளனென்றுஞ் சேர்வைக் களியென்றுங்—கொள்ளையாய்
எண்கோடி சொல்லி யிரைக்குநோட் டக்காரர்
கண்கூ வியுமுனது கைக்கூலி—பண்கூட்டுந
தித்தி யடக்கிச் சிறுமத தளமடக்கி
கைததாள மென்றுசற்றே கைகாட்டி—எத்து

(பிரதி)—1கும்பிட்டார். 2சொற்கணக்குமயுத் தீருவைத்துகைகேட்டு வெற்குளசொன்.

*இதனை யடுத்து மூன்று பக்கங்கட்குமேல் வெற்றேடு காணப்படுகின்றது; சுமார் 20 கண்ணிகள் விடுபட்டிருக்கலாம். ஆனால் பொருளின் தொடர்ச்சியை நோக்கும்போது ஒரு சில கண்ணிகளே விடுபட்டிருக்கவேண்டுமென்று தோன்றுகிறது.

# சமரச சன்மார்க்க போதம்

(தொடர்ச்சி)

167. 'சமயங்கள் பல' என்று கொண்டு, மெய்ச் சமய பொய்ச் சமய வாதங்களைத் தொடுத்து, ஒரு சமயம் விடுத்து மற்றொரு சமயம் புகுதலும், அதற்கெனக் கிரியைகள் முதலியன செய்தலும் உலகில் பல விடங்களில் நடந்து வருகின்றன. அவை இயற்கையின் போக்குக்கு அரண் செய்வன அல்ல.

168. இறை ஒன்று. அஃது எங்கும் நீக்கமற நிறைந்திருப்பது. அஃதில்லா இடம் இல்லை. எங்கே போனாலும் எங்கே வந்தாலும் அங்கங்கே இருப்பது ஓர் இறையே. உண்மை இவ்வாறாக எதை விடுத்து எங்கே போதல் என்பதும், எதைக் கொண்டு எங்கே வருதல் என்பதும் விளங்கவில்லை !

169. உலகில் சமயங்கள் பலவாயிருந்து, அவைகளில் மெய்பொய்ச் சமயங்களிருக்குமாயின், இயற்கைப்படைப்பில் 'இது மெய்ச் சமயம்' என்னுங் குறி எம்முறை யிலாதல் பொறிக்கப்படும். இயற்கைப் படைப்பில் அத்தகைக் குறி ஒன்றையுங் காணோம். இதனால் இயற்கைச் சமயம் ஒன்றே என்பது தேற்றம்.

170. மக்கள் பிறந்த பின்னரே மற்றவர்கள் சேர்க்கையால் தங்களை அம்மதத்தார் இம்மதத்தார் என்று சொல்லிக் கொள்கிறார்கள். பிறக்கும் போது அவர்கள் எச்சமயக் குறியுடனும் பிறப்பதில்லை.

171. மதவாதம், மதமாற்றம், மாற்றத்துக் கெனக் கிரியைகள் முதலியன புரோகிதர்களால்நிறுவப்பட்டன. இயற்கைச் சன்மார்க்கத்துக்கு மத வாதமோ மதமாற்றமோ கிரியையோ ஒன்றும் வேண்டுவதில்லை.

172. பல சமய உணர்வு கொள்வது தவறு. அவ்வுணர்வு ஒருசமயம் விடுத்து மற்றொரு சமயம் புக இடம் பெறுதலால், அஃது ஒரு கடவுளைப் பல கடவுளராகப் பாவிக்கவும், இயற்கைப் படைப்பை அவதூறு செய்யவும் தூண்டுவதாகிறது.

173. மனந் திரும்புதற்கு மத வாதமோ மதமாற்றமோ அதற்கெனக் கிரியைகளோ வேண்டுவதில்லை. மதவாதம் முதலியன மனந் திரும்புதற்குத் துணை செய்யாமல் பிடிவாதத்துக்கே துணை செய்யும்.

174. மக்களிடத்தில் பொதுவாக இருவித நிலைகள் இருக்கின்றன. ஒன்று பேய் நிலை; மற்றொன்று தெய்வ நிலை. பேய் நிலை தீயகுணங்களின் உறைவிடம்; தெய்வ நிலை நல்ல குணங்களின் உறைவிடம். பேய் நிலையை ஜீவ போதம் என்றும், தெய்வ நிலையை ஜீவபோதம் அற்றது என்றும் சுருங்கச் சொல்லலாம். பேய் நிலையினின்றும் தெய்வ நிலை அடைவது மனந் திரும்புவதாகும். இதற்குச் சன்மார்க்க மெனும் ஒரு சமயம் இயற்கையில் அமைந்திருக்கிறது. உள்ள அவ்வொன்றில் போதல் எங்கே? வருதல் எங்கே?

175. மதவாதமும், மத மாற்றமும், கிரியைகளும், இன்ன பிறவும் பேய்நிலையை நீக்கித் தெய்வ நிலையை நல்குகின்றனவா என்பது கவனிக்கத் தக்கது. இவைகளால் அம்மாறுதல் நிகழ்வதில்லை என்பது வெளிப்படை.

176. கல்வி கேள்வி ஆராய்ச்சிகளாலும், நல்லோர்சேர்க்கையாலும், இன்ன பிறவாற்றாலும் மனம் படிப்படியாக மாறுதல் அடைந்து கொண்டே போகும். மனமாற்றமாவது அறிவுப்படி ஏறுவது. இஃது உள்நிகழ்ச்சி.

177. உள்நிகழ்ச்சி நொடிக்கு நொடி மாறுவதும் உண்டு. இது மதம் மாறுதல் என்று சொல்லப்படின், உலகில்

எத்துணை மதங்கள் தேவையாயிருக் கும்? ஒவ்வொருவனுக்கு ஒவ்வொரு போது ஒவ்வொரு மதம் வேண்டு மன்றோ? இதைக் கொண்டே சமயம் பலவாக இருத்தல் அரிதன்று ஊகித்து உய்த்துணரலாம்.

178. மதங்களைப் பலவாக் கொண்டு, மத வாதத்திலும் மத மாற்றத்திலும் தலைப்படுவதால் விளையுந் தீங்குகள் பல. அவ்வம் மதத்தார் தம் தம் மதத்தின் ஜனத்தொகையைப் பெருக்கவே முயல் வர். அம் முயற்சியால் மக்களிடை எழும் எரி, கொலைவரை போய் முடி வதை உலகம் பன்முறை அறிந்திருக்கிறது. எரியைத் தூண்டும் மத வாதமும் மதமாற்றமும் கடவுள் நெறி யாகா. எரியற்ற இடத்தில் நிகழ்வது கடவுள் நெறி.

179. மத வெறியால் கொலை செய் யப்புகுவோன், தன்னை வேறாகவும், தன் னால் கொலை செய்யப்படுவோனை வேறாக வும் நினைக்கிறான். தன் உயிரிலும் மற்ற வன் உயிரிலும் ஈசன் ஒருவனே இருக் கிறான் என்னும் உணர்வு மதவெறியனிடத்தில் விளங்குவதில்லை. தன்னுயி ரைப்போல் மன்னுயிரைப் பார்க்குஞ் சகோதர நேயமே கடவுள் நெறியில் நிற்பதற்கு அறிகுறி யாகும். மத வெறியை எழுப்பும் மதவாதமும், மத மாற்றமும், இன்ன பிறவும் சகோதர நேயத்தை வளர்த்தல் அரிது. ஆகவே, மதவாதம் மதமாற்றம் முதலியவற்றில் தலைப்படாது பேய் நிலையினின்றும் தெய்வநிலைக்கு மனதைத் திருப்பவல்ல கடவுள் நெறியெனுஞ் சன்மார்க்கத்தில் நிற்க மக்கள் முயலல்வேண்டும்.

180. மனந் திரும்புதல் ஒருநாளில் இருநாளில் புறக்கிரியைகளால் நிகழ்ந்து விடாது. மனம் மாறிமாறி வளர்ந்து போகும் இயல்பினது. அவ்வளர்ச்சி மெய்யறிவு விளங்கும்வரை செல்லும்.

181. மக்கட்கு மெய்யறிவு விளங் கும்வரை இடை இடையே ஒன்றைப் பற்றிய நம்பிக்கையும் அவ நம்பிக் கையும் மாறிமாறித் தோன்றித் தோன்றி மோதிக் கொண்டே யிருக் கும். அவ் வப்போது உற்றவைகளும் மாறுதலால், அவரவர் மனோ நிலைக் கேற்ற வண்ணம் நம்பிக்கைகள் பல திறத்தனவாய்ப் பிறத்தல் இயல்பு. அவரவர் நம்பிக்கை வழி அவரவர் நடக்க அவரவர்க்கு உரிமை இருத்தல் வேண்டும். அவ்வுரிமையைப் பலாத் காரத்தாலோ சூழ்ச்சி தந்திரங்களாலோ இன்ன பிறவற்றாலோ இடர் செய்தல் தகாது.

182. இறைவன் அப்பன் உரிமையோ டிருக்கிறான்; இயற்கை அன்னை உரிமை யோடிருக்கிறாள்; ஆகவே உயிர்களும் உரிமையோடு உலகில் வாழ்தல் வேண் டும்.

183. மெய்யறிவு விளங்கும் வரை ஒருவன் நம்பிக்கை இன்னொருவனுக் கும், இவன் நம்பிக்கை அவனுக்கும் மாறுதல் கூடும். இம்மாறு பாட்டால் ஒருவன் ஒருவனைத் தன் தன் வழியில் திருப்பும் முயற்சியும் அவன் அவன்பால் எழுதல் கூடும். இவன் தவறான வழியில் செல்கிறானென அவன் இயம்பும், அவன் தவறான வழியில் செல்கிறானென இவன் இயம்பி யும் ஒருவனை ஒருவன் திருப்ப முயல் கிறான். இதற்குப் பலாத்காரம் அநா வசியம். உண்மை இரக்கம் பலாத்காரத் தில் இறங்கச் செய்யாது. பலாத்காரம் எழுமிடத்தில் நியாயமிராது. பலாத் காரத்தால் ஒருவனை ஒருவர் திருப்ப முயல்வது காட்டுமிராண்டிச் செயலா கும். அன்பில் நின்று ஒருவன் தான் உண் மை யென்று நம்புவதை மற்றவனுக்கு அறிவு கொளுத்த முயல்வது நாகரிகம். அன்புப் போதனையால் திரும்புவோர் திரும்புக; திரும்பா திருப்போரிருக்க. எதற்கும் எவர்க்கும் உரிமையிருத்தல் வேண்டும். உரிமை, பலாத்காரத்தால் பாழ்படலாகாது.

184. மத வெறியால் விளையுங் கேடு களைக் காணுஞ் சிலர், கடவுள் நெறியே இக்கேடுகளுக்குக் காரணமாக நிற்ற

லான், அந்நெறியே வேண்டாம என்று சொலவதுண்டு. மதவாதிகளின் செயல்கள் இவர்களை இவவாறு சொல்லவும் நடக்கவும் செய்கின்றன. கடவுள் நெறி இயற்கை என்று மேலே சொலலப்பட்டிருக்கிறது. இதை உணர்வோர், மத வெறிக்கும் கடவுள நெறிக்கும் எவ்வித தொடர்புமில்லை எனபதை எளிதில் தெளிவர்.

185. மத வெறியை வெறுத்து ஒதுங்குவது விரும்பத் தக்கது. ஒதுங்கும் அளவுடன் நில்லாது கடவுள் நெறியெனுஞ் சன்மார்க்கத்தில் நிற்க உறுதி கொள்ளல்வேண்டும். தீமையை வெறுப்பது நன்மையைக் கடைப்பிடிப்பதாகாது. நன்மையைக் கடைப்பிடிப்பது தீமையை வெறுத்தொழிப்பதாகும். நன்மையைக் கடைப் பிடிப்பது சன்மார்க்கத்தில் நிற்பதாகும். சன்மார்க்கத்தில் நிலவாவாழ்வு சிறையுண்ட நீர் (Stagnant water) போன்றதாகும்.

186. சன்மார்க்கத்துக்கு நாடு மொழி முதலிய வேற்றுமைகளில்லை. அது மன்பதைக்குப் பொதுவா யிருப்பது.

187. சன்மார்க்கத்தில் நின்று நாடு மொழி முதலிய வற்றிற் பற்றுக் கொளளலாம். சன்மார்க்கத்தில நில்லாது வெறும் நாடு மொழி முதலியவற்றைத் தனிமைப்படுத்தி, அவைகளிடத்துப் பற்றுக்கொள்வது உலக சகோதர நேயத்தைக் கண்டப்படுத்துவதாகும். அதனால் மன்பதையில் போராட்டமே பெருகும்.

188. நாடு மொழி முதலியவற்றிற் பற்றுச் செலுத்தல் கூடாதென்பது சன்மார்க்கத்தின் கருத்தன்று. அப்பற்று மற்ற நாடு மொழி முதலியவற்றினிடத்துப் பொறாமை எழுப்பிப் பகைமை விளைப்பதா யிருத்தல் கூடாதென்பது சன்மார்க்கத்தின் கருத்து. சன்மார்க்கம் நாடு மொழி முதலியவற்றைக் கடந்து நிற்றலான், அதில் ஈடுபட்டு நாடுமொழி முதலியவற்றிற் பற்றுச் செலுத்தினால், உலக சகோதர நேயத்துக்குப் பங்கம் நேராது.

189. எல்லாநாட்டார், எல்லா மொழியார் முதலிய எல்லாரிடத்திலும் வீற்றிருக்கும் சத்தெனும் பொருள் ஒன்றே என்று உணர்த்தும் ஆற்றல் சன்மார்க்கத்துக் கிருத்தலான், அம்மார்க்கத்தில் நின்று, நாடுமொழி முதலியவற்றிற் பற்றுக் கொள்வதால் பிரிவு உணர்வு எழுதற்கு இடமில்லாமற்போகிறது.

190. எல்லா உயிர்களிலும் வீற்றிருக்கும் பரம்பொருள் ஒன்றே என்று உணர்த்துவது சன்மார்க்கமாதலின், உலகில் சமரச ஞானத்தை வளர்ப்பதற்கு அதுவே சிறந்த கருவியாகிறது. அச் சிறப்பு அதன் மாட்டிருத்தலான், அது ‘சமரச சன்மார்க்கம்’ என்று வழங்கப் படுவதாயிற்று.

191. சமரசம், வாழ்விற்கு இன்றியமையாதது. அது சகோதர நேயத்தை வளர்ப்பது. சமரச நோக்கு இல்லாவிடத்தில் சகோதர நேயம் பிறத்தலும் அரிது. சகோதர நேயத்துக்கு அடிப்படை சமரசம். அச்சமரச நோக்கை எளிதில் கூட்டவல்லது சன்மார்க்கம் ஒன்றே.

192. ‘எவ்வுயிரும் ஆண்டவன் கோயில்’ எனனுஞ் சமரசசன்மார்க்க உணர்வின்றிப் பேசும் சகோதரநேயம் பொருளற்றதொன்று. அது சிலரை நேசிக்கவும் சிலரைப் பகைக்கவும் தூண்டுவதாகும்.

193. உலகில் அமைதி வேண்டும். அமைதிக்குச் சகோதர நேயம் வேண்டும். சகோதர நேயத்தை நாடு, மொழி நிறம், வகுப்பு, பல மத உணர்வு, முதலிய பிரிவுகள் குலைத்து விடுகின்றன. ஆகவே நாடு மொழி முதலியவற்றைக் கடந்த ஒன்று சகோதர நேயத்துக்கு அவசியத் தேவை. அஃது எல்லா நாட்டார் எல்லா மொழியார் முதலிய எல்லார்க்கும் பொதுவா யிருத்தல்வேண்டும். அஃது எது? அஃது எல்லா உயிர்களிலும் வீற்றிருக்கும் சத் ஒன்றே

அதை உணர்த்தும் இயற்கைநெறி சன்மார்க்கம் என்பது. அச்சன்மார்க்கம் ஒன்றே நாடு மொழி முதலிய பேதங்களை நீக்கி, அபேதத்தை நிலை பெறுத்தி, சகோதர நேயத்தை வளர்த்து, அமைதி இன்பத்தை வழங்கவல்லது.

194. எல்லா உயிர்களிலுமுள்ள சத்தெனும் இறைமையைக் கலை ஞானத்தால் அறிவது ஒரு வழி; மெய்ஞ்ஞானத்தால் தெளிவது மற்றொரு வழி. கலைஞானத் தளவில் நின்று விடுவது வாழ்வின் நோக்கத்தை நிறைவேற்றுவதாகாது. மெய்ஞ் ஞானந் தெளியப் பெறுவதே வாழ்வு நோக்கத்தை நிறைவேற்றுவதாகும்.

(தியானம்)

195. மெய்ஞ்ஞானத் தெளிவுக்குப் பல முறைகள் அமைந்திருக்கின்றன. அவைகள் யாவும் நாட்டின் இயல்பு மக்களின் இயல்பு முதலியவற்றிற் கேற்ற வண்ணம் அமைந்துள்ளன. அவைகள் எல்லாவற்றிலும் ஊடுருவிப் பொதுவாக நிற்பது தியானம்.

196. ஒளி உடலுக்கு எங்ஙனம் இன்றி அமையாததோ, அங்ஙனமே தியானம் உயிருக்கு இன்றி அமையாதது.

197. தியானத்தின் முதிர்ச்சியில் ஒருவித அமிழ்தம் பிறக்கும். அஃது உயிரையும் உயிர் வழி உடலையும் ஓம்பும். அவ் வமிழ்தம் பிறத்தலும் தெரியாது; உண்ணலுந் தெரியாது. அஃது உயிருக்கும் உடலுக்கும் வழங்கும் ஆறுதலால் அதன் தன்மையைமட்டும் உணர்தல்கூடும். தொடக்கத்திலேயே தியானம் எளிய முறையில் ஒருவித ஆறுதலளிப்பது வெள்ளிடைமலை.

198. உடல் நலனுக்கும் உயிர் நலனுக்கும் தியானம் இன்றியமையாதது. அலையும் மனதுக்கும், அதன் வழியுழலுங் கருவி கரணங்கட்கும், பிற உறுப்புக்கட்கும் தியானம் உதவும் நலனை அநுபவத்தில் உணரலாம்.

199. தியானம் தியானயோகம் என்றுஞ் சொல்லப்படும்.

200. யோகம் என்பதற்கு ஒன்றல் என்பது பொருள்.

201. யோகம் என்பது 'மூச்சை அடக்குவதுதான்' என்று சிலர் கருதுவ துண்டு. மூச்சைப் பிடிக்கும் முறைகள் எல்லாம் யோகங்கள் ஆகா. வழிதுறையின்றி மூச்சைப் பிடிப்பதால் பலஇடர்கள் விளைவதுமுண்டு.

202. யோக வகைகள் பல. அவைகளை இரண்டு இனமாகப் பிரிக்கலாம். ஒன்று மலயோகம்; மற்றொன்று அமலயோகம்.

203 மலயோகம் உடல் நலன் கருதி முயன்று வலிந்து செய்வது. மூச்சை ஈர்த்தல் நிறுத்தல் விடுதல் முதலியன மலயோகத்தின் பாற்பட்டன. இவைகளில் தவறுதல் நேரின் உடலுக்கே ஊறுநேரும். ஊரை ஏமாற்றவுஞ் சிலர் மலயோகம் பயில்வ துண்டு. தீயொழுக்கத்துக்குஞ் சிலர் அவ்யோகம் பயில்வதுண்டு. மலயோகம், தக்கார் மாட்டுக் கேட்டுப் பயின்று ஒழுங்காகச் செய்யப்படின், அதனால் உடலுக்கு நலனில்லாமற் போகாது. மலயோகத்தால் ஆத்மஞானம் கைகூடாது. மலயோகிகள் ஆத்மஞானிகளல்ல.

204 அமலயோகம் வலிந்து முயன்று செய்வதன்று. அஃது இயற்கை வழி இயங்குவது. அதற்கு மூச்சைப் பிடித்தல் முதலியன வேண்டுவதில்லை. அதனால் உடலுக்கோ உயிருக்கோ தீங்கு விளையாது. அஃது உடலையும் உயிரையும் ஓம்பும்; ஆத்மஞானத்தைக் கூட்டும். அமலயோகம் எழுத்தால் எழுதிக் காட்டக்கூடியதன்று.

205. தியானம் முதிர முதிர அது பருவத்தில் இயல்பில் அமல யோகம் படிப்படியாகக் கூடும். ஆகவே அமல யோகத்தைப் பற்றிச் சிந்திக்கவும் வேண்டுவதில்லை. தியானத்துக் குரிய அடிப்படையான துறைகளில் வாழ்

வைப் பண்படுத்தித் தியானத்தில் தலைப்பட முயல்வது ஒழுங்கு.

206. மேலே குறிப்பிட்ட உடலோம்பல், கல்வி, இல்லறம் முதலியவற்றினின்றும் பரிணமிப்பது தியானம். தியானம் உயிர்; அதற்குரிய உடலுறுப்புகள் உடலோம்பல் முதலியன. இவைகளுடன் குறித்த ஒன்றைக் குறித்தகாலத்தில் செய்து பண்படல், அகப்புறத் தூய்மை, வாய்மை, தன்னலம் பாராட்டாமை, பிறர் பொருளை இச்சியாமை, உயிர்களிடத்து இரக்கம், உள்ள நிறை, அடக்கம், பொறை, நடுநிலை, எரிபகை எழாமை, மன்னிப்பு, செய்த தீங்குகட்கு வருந்தி வருந்தி அழுதல், அவ்வழுகையால மீண்டும தீங்குகட்கு ஆளாகாத உறுதியும் ஆற்றலுமபெறுதலஆகிய இயல்புகளும்வேண்டற்பாலன. தியானம் என்னும நிலையம் எழுதற்கு இவைகள் சாரங்கள் போன்று துணை செய்வன. இவ்வியல்புகளை வாழ்வில் பெறுமல் தியானத்தி லமர்வதால், தியானம் சித்தியாது; அத்தியானம குலைந்து குலைந்து போகும். ஆகவே அவ் வியல்புகளைப் பெறும் முறையில் வாழ்வு நடாத்திப பண்படல வேண்டும்.

207. தியானத்தில் அமரும் முறையிலும் தியானத்திற்குத துணைசேரும். இதற்குப் பலதிற ஆசனங்கள் சொல்லப்படுகின்றன. அவைகளில் பத்மாசனம்சாலப்பொருநதியது. பத்மாசனம் நாடி நரமபுகளை ஒழுங்கில் நிறுத்தித் தியானததுக்கு அரண் செய்யும்.

208. தியானத்துக் குரிய சிறந்த இடம் இயற்கை வெளி. காற்றும ஒளியும் அமைதியும் குறைபடாத வேறிடங்களும் தியானத்துக்கு உரியனவாம்.

**திரு. வி. கலியாணசுந்தரன்.**

(தொடரும்)

# சுந்தர சுலோசனு

[திரு. டி. ஆர். சாரங்கபாணி, எம். ஏ.]

(உரிமை ஆக்கியோருடையது)

(தொடர்ச்சி)

"ஒரு வேளை அவர் என் நாதரைத் தேடித் திரிகிறுர்போலும். சாரதா! உலகிடை இன்பமுந் துன்பமும் மாறி மாறி வரும் என்னும் மெய்யுரை என்பால் மெய்த்தது. இளமையில் அன்னையை இழந்தயான் அன்னையின் அருமையை யறியேன். ஆதலான், அவ்வளவாக வருந்தினேனில்லை. அண்ணுவுடனும், என் அன்பருடனும் உத்தமத் தோழியாகிய உன்னுடனும் தந்தையின் பேரன்பு உடன் சூழ இன்பத்தில் திளைத்து நின்ற எனககு, அண்ணு அன்றிரவு ஒருவரிடமுங்கூறுது மறைநதது பெருநதுயரையே யளித்தது. அதுகாறும் இன்பத்தையே நுகர்ந்த யான் துன்பச் சுவையை உய்த்துணர்ந்தேன். சென்ற ஓராண்டாக அத்துயரம் நம்மை வாட்டியும், என உயிரினுமுயர்ந்தோர் நமக்கிருந்தது பெரும் ஆறுதலாகவே இருநது வந்தது. சாரதா! என் காதலர்க் கேதாகிலுந் தீங்கு நேரிட்டதோ? ஒருகால் அவர் என்மீதும் வெறுப்புற்றுரோ ? ஆ! ஈச! அவர் என் மீது வெறுப்புற யான் சகியேன். அந்நிலையில் அவருக்கு வெறுப்பை மூட்டி, அவரை வாட்டி இருத்தலினும யான் இறத்தலே சாலவும்நன்றுகும. சாரதா! அவருடைய வெறுப்பையான் சகியேன்.

றெனக் கூடா வொழுக்கத்தான் கள்ளுண்ணவும், வேசியருடன் கூடவும் துணிந்தது நம்முடைய இன்ப வாழ்வையே இடிபடுண்டு வருந்திடச் செய்தது.

“அறிவை யழிக்குஞ் செயலழிக்கு
மழியா மானந்தனை யழிக்குஞ்
செறியு மறிஞர் மறியாத
செருக்கை விளைக்கு மீன்றாரு
மறியும் வெறுப்பு மிகவிளைக்கு
முனிவு விளைக்கும் பகையஞ்சாக்
குறிகள் விளைக்கு நகைவிளைக்குங்
கொள்ளேல் கள்ளுண் டலைமைந்த.”

—விநாயக புராணம்.

என்று அறிஞர் அநுபவ வாயிலாகக் கண்டு முடிவு சுட்டி யோதிய இப்பாடலே கள்ளுண்ணலால் விளையுந் தீங்குகளை யோதவில்லையா? அறிவை யழித்துச் செயலை முறித்து, மானத்தை யொழித்து, செருக்கை யளித்து, பெற்றவர்களுக்கும் வெறுப்பை விளைத்து, வெகுளியை மிகுத்து, பகையை அழைத்து, அனைவரும் எள்ளி நகையாடும் இழிய நிலையை அடைந்திடத் துணைக் காரணமாக அண்ணாவுக்குச் சிறக்க விளங்கியது இப்பாழுங் கள்ளுண்ணலேயன்றோ? இக்கொடும் பழக்கத்தைக் கொண்டதுடன்,

“இழிபவ ருயர்ந்தோர் முதியோர்
இளையவர் கழியா நோயாற்
கழிபவர் யாவ ரேனுங்
கண்வலைப்பட்டு நெஞ்சம்
அழிபவர் பொருள்கொண் டெள்ளுக்
கெண்ணெய்போ லளந்து காட்டிப்
பழிபடு போகம் விற்பார்.”... .....

—திருவிளையாடற் புராணம்.

என இழித்துரைக்கப்படும் பொது மகளிரின் உறவையும் அவர் நாடியது என்ன கோலமோ! இறைவனிடத்து இடையறா அன்பு கொண்டு வாழ்க்கையை நடாத்திய உத்தமராகிய அண்ணா இவ்வாறு திடீரெனக் காமப் பேயராக மாறியது கோள்களின் செயலெனக் கூறினும் ஒவ்வும். கல்லாக் கயவர்களைப் போலும், காதலையுங் காமத்தையும் பகுத்தறியுந் திறன் ஒடுங்கிய குடி நிலையில் அண்ணா மதியிழந்து மயங்கியது உண்மையேயாகும்.

“கொலையஞ்சார் பொய் நாணார்
மானமு மோம்பார்
களவென்றோ வேனையவுஞ்
செய்வார்—பழியோடு
பாவமிஃ தென்னா
பிறிதுமற் றென்செயார்
காமங் கதுவப்பட்டார்”

—நீதிநெறி விளக்கம்.

என்னும் மெய்யுரையும் பொய்யாமோ? அந்நிலையில் களவுங் காமமும் பிடர் பிடித்துந்த, சகவாசதோஷத்தான் முற்றும் மாறிய அண்ணா, கடன் வாங்கவும் கண்மூடிச் செலவழிக்கவும் துணிந்தமையா லன்றோ தந்தையும் அவரைக் கடியலாயினர். காமக் கிழத்தியருடன் கூடிக் காமப் பேயராக அண்ணா மாறியது பெரும் விந்தையாகவே இருக்கின்றது.

“உள்ளினுஞ் சுட்டிடு முணருங் கேள்வியிற்
கொள்ளினுஞ் சுட்டிடுங் குறுகி மற்றதைத்
தள்ளினுஞ் சுட்டிடுந் தன்மை யீதினாற்
கள்ளினுங் கொடியது காமத் தீயதே”

—கந்தபுராணம்.

என்று காமத்தின் இயல்பை யோர்ந்து அனைவருக்கும் அக்காமத்தால் விளையுந் தீங்குகளை யெடுத்தோதி யறிவுறுத்தித் திரிந்த அண்ணாவே இவ்வாறு காமப் பேயராக மாறியது எனக்குப் பெரும் வியப்பையே யளிக்கிறது.”

“சாரத! எண்ணி யெண்ணி யேங்கிப் பயனென்? அண்ணாவின் விதிவசம் அவ்வாறிருந்தது. பிறர்க்கு நல்வழியையும் அன்பு நெறியையும் அறிவுறுத்திய அவரே கண்மூடி அறிவிழந்து துச்சில் விழுந்து அல்லலுறுதல் அவருடைய ஊழ்வினைப் பயனென்றே கூறவேண்டியிருக்கின்றது.

"என்பினை நரம்பிற் பின்னி
உதிரந்தோய்த் திறைச்சிமெத்திப்
புன்புறந் தோலைப் போர்த்து
மயிர்புறம் பொலிய வேய்ந்திட்
டொன்பது வாயிலாக்கி
யூன்பயில் குரம்பை..."
—சீவக சிந்தாமணி

யின் இயல்பையும் நிலையாத்தன்மையையும் இனிதோர்ந்து,

"பண்டம் பொய்க்கூரை பழகி விழுதலால்
உண்டஅப்பெண்டிரும்மக்களும்பின்செலார்
கொண்ட விரதமும் ஞானமு மல்லது
மண்டிய வருடன் வழிநடவாதே"
—திருமந்திரம்.

என்னும் முதுமொழிக் கிணங்க உயி ரொடுங்குங்கால் உடன் போந்து, இன்பத்தையுந் துன்பத்தையும் விளைக்கப் பெற்றிடும் உடலியல்பை யுணர்ந்து, பிறப் பிறப்பென்னும் கடல் கடந்து, முத்திச் செல்வமாகிய பேரின்பத்தில் திளைத் தெழுந் துணைக் காரணமாக இருக்கும் அற வழியையும், அன்பு நெறியையும், காதல் மாண்பையும், உயர் தொண்டையும் பேணுது, அறிவிருந்தும் கள்ளுண்ணவுங் காமப் பேயாகவும் மாறிய அண்ணு பித்தராயினு ரெனக் கூறவே வேண்டியிருக்கின்றது. சாரதா! அவரை நாம் மீண்டும் பெறுவோமா? இறைவனுடைய பேரருளை அவர் மீண்டும் பெற்றிடுவாரா? அவர் இளமையிலிருந்து பற்றி நின்ற அன்பு நெறியும் இன்ப வாழ்வும் அவருடைய வாழ்க்கையை இனியும் செப்பமிட்டுக் காதலுடனும், உரிமையுடனும் விளங்கிடச் செய்திடுமோ? அவரைப் பிரிந்த வாட்டம் மூராண்டாக நம்மை வாட்டி நின்றிட, திமோன மகன் காதலரும் மறைந்தனரே. சாரதா! நான் என் செய்வேன்? எவ்வா றுய்வேன்?"

"பேலோசனு! இறைவனை நம்பினோர் கைவிடப்படார். நீ சிறிதுங் கலங்காதே. தந்தை யாருந் தாயுமாகிவிட்டனர். நாம் இல்லத்துள் செல்வோம். துயருதலை நீத்து இறைவனைப் போற்றி நில். அவனருளால் அவனடியை வணங்கி நின்றிடுவோரைப் பற்றிய துயரம் சூரியனைக் கண்ட பனி போலும் மறைந்தொழியும். ஆதலால் கவலை யற்றிரு. அதோ தந்தை வருகின்றார். நம்முடைய மோட்டார் வண்டியும் மாளிகையும் நுழைவதுகாண். உன்னுடைய காதலரின் செய்தி யாதேனும் அவர் கொண்டு வந்திருந்தாலும் இருத்தலாகும். வா! விரைந்து மாளிகையுள் செல்வோம்."

சாரதா!

"என் செயலா லாவதியா
தொன்று மில்லை இனித்தெய்வமே
உன் செயலே யென்று
ணரப் பெற்றேன்..."
—பட்டினத்தடிகள்.

என்னை வாட்டும் இவ்வாட்டத்தை இறைவன் திருவடியில் சூட்டிவைத்து விட்டனம். வா போகலாம்."



# சிவனடியார் சிறப்பு

[திரு. சி. சதாசிவனார்]

சிவன் மாட்டு, என்றும் மாறாஅன்போடு ஒழுகி, அவனது தூய இயற்கை நெறியில் நின்று, அவன் கட்டளையை ஆற்றி முடிப்பதே தமது வாழ்வின் முக்கிய நோக்கமாகக் கொண்டு உழைப்பவரே சிவனடியார் எனப்படுவர். அவர் தமக்கெனவாழாது உலகிற்கு நற்றொண்டு ஆற்றுவதற்கே வாழும் பெற்றியாளர். மக்களுக்கு என்று ஞான்றும் கெடாத நன்மை பயப்பது சிவஞானம். ஆதல் பற்றி இவ்வறிவை அவர்க்கு ஊட்டுவதே யாவற்றினும் சாலச் சிறந்ததொரு நன்மையெனக் கொள்ளப் படுகின்றது. சிவானுபூதிமான்களே அவ்வறிவூட்டும் திறன் மிக வாய்ந்தலான், அவர்களே மெய்ச்சிவனடியாராவர். இவ்வறிவு சிறக்குமிடம் இப்புவனமே என்பது தெளிந்தோர் முடிபு. நன்மை தீமை எனும் அனுபவ வாயிலாக, உள்பொருளைத் தேர்ந்து தெளிதற்கே, மனிதர் இவ்வுலகிற் போக்கு வரவு புரியா நிற்கின்றனர். இந்த இருவித அனுபவங்களான், ஆன்மா, அரனை அறியும் ஆற்றல் அடையட்டும் என்று ஆண்டவன் அருள் அலர்ந்ததே மக்களது உடலம் ஆகும். மெய்வழி நின்றே அறிவு சிறத்தலால், சரீரங்களும் சிறந்தன ஆகும். ஆக உடல் நலத்திற்காகவேனும், பிறர்க்கு உண்டி உதவுவோர், பிணி களைபவர், கல்வி புகட்டுவோர், அன்ன பிறரும் அறிவு சிறத்தற்கு உதவும் முறைமையான் ஒவ்வொரு துறையில் தொண்டாற்றும் அடியார்கள் ஆவர்.

ஒருமனிதனைத் தெள்ளாரமுதாறும் தூய சிவநெறிப்படுத்துவதற்கோ, நிலையற்ற உலக இன்பத்துறை இறக்குதற்கோ காரணமாயுள்ளது அவனது சித்தமே என்பது தெளிந்த தொன்று. உள்ளத்திற்கு உணவூட்டுவது மனமாகும். மனம் புலன் வழி புறம் புறந் திரிந்து, இன்ப துன்பங்களை நுகர்ந்து, அவ்வனுபவங்களை அகத்தே அனுப்ப, சித்தமானது அவற்றைப் பதனம் செய்து கொள்கின்றது. இச்சன்மத்தில் மட்டுமல்ல, சென்ற பிறப்புகளில் அறிந்த அனுபவங்களின் தொகுதியாக நின்று, அவ்வாறு பயின்ற துறைகளில் மனத்தைச் செல்லும்படி சித்தம் தூண்டா நிற்கின்றது. மனம் எதைப்பற்றி நிற்கிறதோ அதைச் சித்தம் பதிவு செய்து கொள்கின்றது. காலம் வாய்க்குங்கால் அது மனதின்வழி மனிதனை அத் துறைகளில் இறக்குகின்றது. உலக இன்பிலேயே நாட்ட முடையவன் தவறி அதை மறந்தாலும், சித்தம் ஞாபக மூட்டிவிடும். எண்ணிறந்த பிறவிகள் பிறந்திளைத்து, உலகில் உழன்று உழன்று, பின் மனிதனது மனம் இவ்வுலகவின்பம் நிலையற்ற கானல்நீர் எனத்தோந்து தெளியுங்கால் அவனருளால் அவன் நினைவு உதித்து அவனை வழுத்தி அவன்நெறியைப் பற்றலே உண்மை இன்பந்தரும் நற்கருமமென்று மனிதன் தெளிகின்றான்.

உண்மை ஓர்ந்து, சிவ நெறியைச் சார்ந்து மனிதன் செயலாற்ற ஆரம்பிக்குங்கால் அவனது உள்ளம் தெளிந்து, மாறுதலடைகின்றது. உண்மையில் துன்பம் என ஒன்று இங்கு இல்லவே இல்லை என்றும், கட்டிடை அறிவிற்குத் துன்பமெனத் தோன்றுவது, அவனை நல்வழித் திருப்பவந்த ஓர் அனுபவம் என்றும் ஓர்கின்றான். துன்பம் உள்ள பொருளாயிருந்தால், அதினின்றும் ஒருகாலும் நன்மை தோன்றாது; துன்பம் எக்காலும் துன்பமாகவே இருக்கும். துன்பம் எப்போதும் நிலை நிற்பதை நாம் காண்கிலோம். ஆக, துன்பம் இல்பொருள்எனும் உண்மைஓர்ந்து தீமை எனத்தோன்றும் அவ்வனுபவத்தினின்றும் அஃது ஊட்டும் பாடத்தை உணர்ந்தவுடன் மனிதனுக்குப் பின் அவ்வனுபவம் இன்றாகும். ஓர் எடுத்

காத அரும்பொருள்; அங்கு இங்கு என்னாதபடி எங்கும்நிறைந்த, கட்டற்ற ஒரு செம்பொருள்; அண்டினோரை ஆதரித்து அருவினை அகற்றும் பரம்பொருள்; அச்சங்கரனது தொண்டர் யாம். அவனறிவு பெருகி, "நாம்" குறுகி - அருகி - அவனது இணையடி நாம்குறுகி - மருவி - என்றும் மீளா அடிமைகள் ஆகியநாம் எங்ஙனம் உமது அரசனது ஆணைக்கு அடங்கி அவன அழைக்க அவ்விடம்வர இயலும்? நமக்கு ஆண்டவன் ஒருவனே.

நாம் எக்குற்றம் செய்தோம்? கவர்ந்தோமா? வஞ்சனை ஏதும புரிந்தோமா? நடலை - குற்றம - யாதும் இல்லோம. நெஞ்சில் வஞ்சனை மிஞ்சிய மாந்தரல்லவோ அஞ்சி அரையனைக் கெஞ்சித் தஞ்சம அடையவேண்டும? நாம் அவனை அஞ்சுதல் எற்றுக்கு? அவனிடம் நமக்கு யாதும் வேலை இல்லை.

முற்செய்தவினையினைச் சங்கரன்எரித்தான. இப்பொழுது எம்மிடம் வஞ்சம கொஞ்சமும் இலலை; குற்றம் இல்லை; தீயன செயலும் அற்றோம்; துகள் அற்றோம்; தீயன ஆற்றலால் வரும் தீதும் அற்றோம்; ஆண்டான் அடிமை ஆகிய நாம் அவன் அருள்வழி அமைந்து அவன் சொறபடி செயலாற்றி வருகின்றோம். ஆதலான் கூடாதன செயல ஆற்ற இயலோம்; இடாற்றோம்; நரக மெனும் நிலை அற்றோம.

துகள் அற்றோம்; முன்தோன்றிய பிணியும் அற்றது; ஒளி தோன்ற இருள் கெட்டது; சுகந்தோன்றிப் பிணிகளைந்தது; நரம்புகளின் உணர்ச்சியாக, குருதியின் வளர்ச்சியாக, உடம்பின் சுகமாக, ஏகமாக எங்கும் விரவிய சிவனார் நெஞ்சில் உற்றார்; பிணியார் அற்றார்; பிணியறியோம்.

வினையற்றோம; வினையால்வரும் உடலற்றோம்; அறிவுற்றோம; என்றும் உள்ள பொருளுடன் ஒன்றுபட்டு, காலக்கட்டற்றோம்; இனி, பிறபபெய்தோம்; சாவில்லை; நமனை யஞ்சோம்.

வஞ்ச நெஞ்சத்தால் வரும் பிணித்துனபம, இறததற் றுன்பம் ஆதிய யாவும இடக்கட்டு காலவரை யறறு விரிநத எமக்கு இல்லை; எந்நாளும எமக்கு இன்பமே.

ஒரு தளையும் இல்லாதொழிந்த நாம் கட்டுற்ற ஒரு சிற்றரசனது மாற்றம் செவியுற்று அவன்மாட்டு வருவோ மல்லோம; அவனைப் பணிவோ மல்லோம்; அவ்விடம் வாரோம்."

"நாமார்க்குங் குடியல்லோம்
நமனை யஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம்
நடலை இல்லோம்
ஏமாப்போம் பிணியறியோம்
பணிவோ மல்லோம்
இன்பமே எந்நாளும்
துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத
தன்மை யான
சங்கரனற் சங்கவெண்
குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்றும்
மீளாவாளாய்க் கொய்ம்
மலர்ச்சே வடியிணையே
குறுகி னோமே."

தமை மறித்துச் செலவந்த மாறலர் மனிதற்கு மறுமாற்ற மளிக்கும் இத் திருததாண்டகம் ஒன்றில் எத்துணை வீரச்சுவை, பொருட்சுவை, உண்மைச் சுவை பொங்கி வழிகின்றது? எவ்வளவு மகத்தான உண்மையை அழகாக அமைதது அடியார் அவனிக்கு அளித் துள்ளார்? மதங்கள் யாவும் உலகந் தோன்றியது முதல் வாதிட்டு வாதிட்டு முயன்றும் கண்டுகொள்ள முடியாத ஓர் உண்மை இவ்வொரு பாவில் அடங்கிக் கிடக்கின்றது என்று கூறினும் பொருந்தும். "சொற்கோ" என் வழங்கும பெயரும் அவருக்குப் பொருத்தமுடையதாகும் என்று எண்ணுக்கூறுவது மிகையாகாது.

ஆண்டவன் எங்கும் நிறைந்தவன். அவனை யறிய வேண்டில் வஞ்சம் நீக்குதல் அவசியம். அடிமை ஆகி அவனிடம் எல்லாவற்றையும் ஒப்புவிதது அவன்

வழி நின்று ஒன்றுதல், மூன்று பட்டு அமையும் துன்பம் ஓடல், இன்பம் நிலைத்தல், பிறவியறுதல், அவன் குணங்களும் ஆன்மாவையடையப் பெறுபவன் அறிகுறிகள் இப்பாவில் அடங்கியிருக்கின்றன.

முன்னாட்களில் ஒரு சமயத்திலிருந்து மற்றொரு மதத்தைத் தழுவும் மனிதர்களை அரசன் துன்புறுத்துவது வழக்கமாயிருக்க, முக்கிய அறிவாளியாயிருந்த அப்பரை அரசன் எல்லாவிதத் துன்பமும் ஆற்ற விழைவான் என்பது சொல்லாமலே விளங்கும். அதற்காகவே ஒற்றர் வந்திருந்தனர். அப்பர் "நாம் அவனது குடியல்லோம்" என்று ஒரு விடையிறுத்தார். இவ்வளவு மனோ பலம், தைரியம் எங்கிருந்து வந்தது?

அப்பர் நன்மைக்கு இருப்பிடமாயுள்ள ஊற்றுக் கண்ணைக் கண்டு பிடித்து விட்டார். நிறைவு கோலைப் போட்ட உடன் ஊற்றிலிருந்த ஜலம் மடமட என்று கிளம்புவதைப் போல அவருக்கு நன்மை பொங்கியது. அண்டவனிடத்து நீங்காத நம்பிக்கையும் தியானமுந்தான் இந்நிறைவு என்று சுருங்கச் சொல்லி விடலாகும். அவனது எங்கும் நிறைந்த தன்மை, அளவிடற்கரிய அறிவு, குறைவுபடாத அன்பு இன்பு, இவற்றை இடைவிடாது எண்ணி எண்ணி ஒருவன் தியானத்தில் ஆழ்வானாயின், காலக்கிரமத்தில் அவனது அறிவு கட்டுவிட்டு, அண்டவனோடு ஒன்றுபடுவான். தியான பலத்தினால் மட்டும் மனிதன் மேலோங்கி உயரிய நிலை அடையலாம் என்பது உண்மையாகும்.

இத்தியானத்திற்கு இடையூறாக நிற்பது மாசு. அதற்குக் காரணம் ஆசை. உலகில் காசாசையினால் மனிதன் எவ்விதச் செயலையும் செய்ய முற்படுவது கண்கூடு. காசைச் சாமி எனப் பூசை செய்வது இன்னொரு கடவுளை வணங்குவதாகும். இவ்வித மாசு அகன்றால் தான் தியானம் கைகூடும்.

மாசும் பாசமும் அற்றகாலை உண்மையைப் பற்றிய தியானத்தால் மனது வெளுத்து, ஜோதி அரனது அகண்டாகாரம் தோன்றுகிறது. மனிதனது உள்ளம் திகைத்திட்டு உருகி அவ்வகண்டத்தில் ஒன்றி இணைபிரியாது கலந்து சித்தம் போக்கு சிவன் போக்காக ஆகிவிடுகிறது. 'நாமார்க்குங் குடியல்லாத் தன்மை'யான சங்கரனோடு ஒன்றியதால், 'நாமார்க்குங் குடியல்லாத் தன்மை' உண்டாகி விடுவதை நாம் உன்ன வேண்டும்.

இப்படி ஒன்றியவுடன் இடையறாப் பூரண வாய்மையான ஒரு மகிழ்ச்சி மனிதன் அடைகிறான். மேகங்கள் குமுறிக் கொட்டட்டும்; பெரும்பெரும் புயல்கள் உழலட்டும்; பெருந் தண்டங்கள் நிகழட்டும்; வான்முகடு தோய்ந்த மலைச் சிகரத்திற்கு இத் துன்பங்கள் எம்மாத்திரம்?

ஒற்றர் அழைத்த போது இவர் தியானத்தில் அமர்ந்தார் என்று கூறுதல் பொருந்தும். அப்போது அவர் உள்ளத்தில் எழுந்த எண்ணங்கள் பாக்களாக வெளிப்போந்தன என்று கூறுவோம். அவைகளே ஒற்றர்க்கு விடையாயின. அவைகளே மறையாக இப்போது நமக்கு நிற்கின்றன.

நம்பிக்கையால் உண்டாவது தியானம். தியானத்தினால் உண்டாவது ஒன்றுதல். பின், ஓடுவது தீமை; வருவது இன்பு. இவைகளுக்கு அடிப்படையாக உள்ளது ஆகையால்; சித்தந்தெளிதல். மற்றொரு பெரியார் சொல்லுவதை ஈண்டுக் கவனித்தல் அவசியம்.

"சித்தந் தெளியீர்காள்
அத்தன் ஆரூரைப்
பத்தி மலர் தூவ
முத்தி யாகுமே"

அறிவு தெளிந்து, உண்மை யறிந்து, ஒரு நவசக்தி யடைந்து, உலகைவென்ற பெரியார் சிறப்பை எடுத்துப் புகல்வது நம்மா லியலுமோ?

# புதிய கல்வியும் புராதீன ஆசிரமங்களும்

## பேரறிஞர் வாசுவானி அவர்கள் பொறித்த ஆங்கிலக் கட்டுரையின் தமிழாக்கம்

[திரு. கி. சுப்பிரமணியனார்]

மேனாட்டில் பூத்துள்ள புதிய கல்வி இயக்கமானது இளைஞர்க்குச் சீரிய பயன் தரும் என்பது ஒருதலை. பகுத்தறிவும் விவேகமும் தம்முட்சில உட்பொருளை உடையன. அவற்றின் பேதாபேதங்களை ஒப்புநோக்கி விரித்து முறைப்படி கூறப் புகுந்தால் அவை நம்நேரத்தைக் கொள்ளை கொள்ளும்.

> "விழுமிய கருத்துக்கள் உள்ளத்தினின்றும் உதிக்கின்றன. மனத்தினின்றும் ஆராய்ச்சி எழுகின்றது, கூர்த்தமதி அதை விளக்குகின்றது."
>
> —வாவனர்க்யூஸ்.

இற்றைநாள் மேனாட்டுப் பெரியோர் குழந்தைகட்கு உடல், மனோவுணர்ச்சி, இயற்கையாகிய இம்மூன்றின் வாயிலான் கல்வி போதிக்கப் படல்வேண்டுமென்பதை ஒப்புக்கொள்ளுகின்றனர். உடல் மூலமாய்க் கல்வி போதிக்கப் படல்வேண்டுமென்பது, உடல் நலமும் தேகபலமும் புலனடக்கமும் வேண்டுமென்பதைக் குறிக்கின்றது. மனோவுணர்ச்சியை இன்னிசைக் கருவிகளும் அழகிய சித்திரங்களும் கவருகின்றன. தற்போது மேனாட்டில் கிளைத்துள்ள இப்புதிய முறை, பண்டை இந்தியாவில் நம்முன்னோர்கள் கையாண்ட சீரிய முறையல்லவோ?

புராதீன ஆசிரமங்கள் இயற்கையழகு செறிந்து, இயற்கை மணங் கமழ்ந்து, கண்ணைக் கவரும் இனிய காட்சி நல்கவல்ல இடங்களி லல்லவோ நிறுவப்பட்டன? ஆனால், தற்போது நம் நாட்டிடைப் பரவியுள்ள கல்வியானது, பெரும்பொருளா லாக்கப்பட்டு வானளாவிய கல்விச் சாலைகளையே அவாவுகின்றது. பண்டைக் கல்வியோ, இன்பம் நிறைந்து, இயற்கை மணங் கமழும் கூட்டுறவையும், ஞானாசிரியனையும் தன்னகமுடைத்தாய் மக்கட்கு இயற்கையான எளிய ஆரோக்கிய வாழ்வையும் உடலுரத்தையும் பயந்தது.

முற்காலத்தில், கல்வி ஆன்ம வளர்ச்சிக்கும் சுயநலமற்ற தொண்டாற்றவும் பெரியோர்களால் மாணவர்க்கு ஊட்டப்பட்டது. அதனையே சீரிய அறமாக யாவரும் போற்றினர். தற்போது இரண்டும் நம்நாட்டில் இல்லை. இயற்கையழகைப் பொறித்த ஓவியங்கள் ஒவ்வொன்றும் ஒரு நல்லாசிரியனாகும். நம் நாட்டிடைக் கல்விச் சாலைகளில் இத்தகைய ஓவியங்கள் வைத்து அழகுபெற நிறுவப்பட்ட 'வீரர் நிலையங்கள்' யாண்டும் பொலிதல்வேண்டும். அவற்றின்கண் ஐம்புலனடக்கிய மாதவரும், போர் முனையஞ்சா வீரரும் பொறிக்கப் பட்டுள்ள உருவப்படங்கள் திகழ்தல் வேண்டும். இத்தகைய ஓவியங்களே குழந்தைகளின் மாசற்ற மனத்தைக் கவருந்தன்மைய.

பண்டைப் பாரதநாடு ஊட்டிய கல்வியானது வெறும் புத்தகப் படிப்பன்று. அது பொதுமக்களின் வளர்ச்சிக்கும், வாழ்விற்கும் அடிகோலிற்று. இதயத்தையும் தலையையும் போன்று கையானது அவ்வளவு புனிதமான உறுப்பல்லவோ? செய்ய கையாலாக்கப்பட்ட பணியின் சிறப்பியல்பை நாடு நன்கு உணரவேண்டும். நம்தாய் நாட்டுப் பள்ளிகளில், குடிசைத் தொழில்களும், கைப்பணிகளும், ஓவியம் வரைதல், இன்னிசைக் கருவி செய்தல், நாடகக் கலை பயில்தல், போன்ற நற்பணிகளும் பல ஆக்கம் பெற அமைத்தல் வேண்டுமென்பது எனது வேணவா. மாணவர் உடல் நலன்பேணும் முறையிலும் கருத்தூன்றுவார்களாக. அதுவே மாணவர்க்கு ஆக்கந் தருவது. ஆனால், தற்போது மாணவர் கையாளும்

என்னும் பேரார்வத்துடன் கூடிய ஆயர் பாடிப் பசுக்கள் 'அம்மா!'' அம்மா!' என்று கத்தி நின்றன.

எப்பொழுதும் தங்களை இன்பக் கடலுள் ஆழ்த்தும் தங்களது தலைவனும் தோழனுமான கண்ணனைக் கண்ட அளவில், சீர்த்த காம்புகள் பற்றி வாங்கக் குடம் நிறைக்கும் 'நந்தினி' 'கபிலை' 'சுரபி' என்னும் வள்ளற் பெரும் பசுக்கள் மூன்றும் தம்மடியின் கீழ்க் கலங்களைப் பிடித்த அளவில், கனைத்துக் களித்துக் காம்புகளின் வழியே இனிய பாலைப் பெருகவிட்டன. அக்காம்புகளில் கண்ணன் திருக்கைகள் பட்ட அளவில், அப்பசுக்கள் அடைந்த ஆனந்தம், வானுலகத்துக் காமதேனுவுக்கும் வாய்த்தற்கரிய ஆனந்தமாகும். அப்பெருமான் பால் கறந்த அவ்வற்புதக் காட்சி, பிற்காலத்தில் அவன் நல்லறிவாளர் எல்லோரும் நுகர்ந்து அளப்பரிய ஆனந்தம் அடையும் வண்ணம் உபநிடதங்களாகிய பசுக்களின் மடியிலிருந்து 'கீதாமிருத'மாகிய பாலைக் கறந்தருளப் போவதைக் குறிப்பது போன்று விளங்கியது. கலங்களை வீட்டிற்கு எடுத்துக் கொண்டு செல்லுமாறு தனது தோழர்களுக்குக் கட்டளையிட்ட கண்ணன், அப்பசுக்களின் முகத்தில் அன்போடு முத்தங்கள் பல தந்து முதுகில் தட்டிக் கொடுத்து விட்டுத் தனது சிந்தைக் கினிய மித்திரவிந்தையின் வீட்டுக்குச் சென்றான்.

தங்களது எண்ணங்கள் அனைத்தும் கண்ணனிடத்தில் செல்ல — தாங்கள் விரும்புமளவு தங்களை விரும்பாதவன் போல் காணப்படும் அம்முகில் வண்ணனை வெறுக்கவும் கூடாமல் - தங்களது ஆர்வம் தீர இன்பம் தருவன் என்று மகிழவும் கூடாமல் - அல்லும் பகலும் அவனது திருவருளைப் பெறுவதிலேயே ஆர்வம் மிகுந்தவர்களாய் அகம் கரைந்து உருகி நிற்கும் ஆயர் பெண்களிடையில், கோவலர் கொழுந்தாம கோவிந்தன் சென்று நின்றான். பல வழிகளிலும் தன் உள்ளத்தைப் புண்படுத்தும் காதலனிடம் ஊடல் கொண்ட மித்திரவிந்தை, அவனது ஒப்பற்ற வடிவழகைக் கண்டு விட்டால் தனது பிணக்குகள் அனைத்தும் மறைந்துவிடும் என்று எண்ணியவளாய் - தனது இணைவிழிகளாகிய கணைகளை ஏவின், அவை அவனது மாயப்பழகில் மயங்கித் தம் வலி இழந்து அவனுக்கு அடிமைப்பட்டு விடும் என்று உன்னியவளாய், நிலத்தைக் குனிந்து நோக்கியவாறே நின்றாள். அப்பொழுது, மெய்யன்பர்கட்குப் பேரின்பம் ஊட்டும் கண்ணன் கழலழகு அவளது கருத்தைக் கவர்ந்து விடவும்; அவ்வழகோடு காதலிகளைக் கட்டித் தழுவிக் களிப்பெருங் கடலுள் ஆழ்த்தும் அவனது திருக்கைகளின் அழகை ஒப்பிட்டு நோக்க ஆர்வம் மிகுந்தவளாய் நிமிர்ந்து நோக்கினள். அவ்வளவே! அப்பெருமானது இந்திர நீலம் ஒத்த இருண்ட குழலும், சந்திர வதனமும், உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் தந்திரம் வல்ல இணைவிழிக்கணைகளும், சிந்தையை மயக்கும் செங்கனி வாயும், சுந்தர மணிவரைத் தோள்களும், எப்பொழுதும் அவனது எழிற் கழுத்தைத் தழுவி நிற்கும் இன்பத்தைப் பெற்ற மணி மாலைகளும், என்றும் அவனது மார்பகத்தைத் தனக்கு உரிய இடமாகக்கொண்ட கவுத்துவம் என்னும் கவின் பேரணியும், வனத்தில் அவன் மனத்தில் பெரு மகிழ்ச்சி பெருகுந்தோறும் அவனது செங்கனிவாயின் இன்சுவையை நன்கு அனுபவிக்கும் தனிப் பெரும்பேறு பெற்றுத் திருக்கரத்தில் திகழும் குழலும், கொண்டல் வண்ணமும், குளிர்ந்த நோக்கமும் மித்திரவிந்தையின் உள்ளத்தினின்றும் ஊடலை வெருட்டி ஓட்டிவிடவே, அவள் தன்னையும் மறந்து தனது ஆருயிர்க் கரசனாகிய ஆர்வலனை இறுகத் தழுவிக் கொண்டு விட்டாள்.

அவ்விடத்தில் கூடியிருந்த ஏனைய ஆயர் பெண்கள், மித்திரவிந்தை கொண்டிருந்த ஊடல் இருந்தவிடம் தெரியாமல் மிக்க விரைவில் மறைந்து விட்ட

தைக் கண்டு பெரிதும் வியந்து நின்றனர். தங்களது ஆலோசனைகள் யாவும் கண்ணனிடத்தில் பயன்படாதொழிந்து விடுமென்பதை உணர்ந்து கொண்ட அப்பெண்மணிகள், பெரிதும் வாட்டமடைந்து நிற்கிறார்கள். அவர்களுள் ஒரு நங்கை, கண்ணனை நோக்கிப் பின்வருமாறு பேசலானாள்: --

"எமது சிந்தையில் குடிகொண்ட செல்வரே! விண்மீன்களினிடையில் விளங்கும் வெண் திங்கள் போலும் விளங்குபவரே! எம்மவர் எல்லோரையும் இணைபூட்டி நிற்கும் தனிச்சுடர் மணியே! உமது மந்திரச் செயல்களையும் பெண்களின் மருக்கும் உணராத பெற்றிமையும் பன்முறைகளில் கண்டறிந்திருக்கிறோம்; எங்களது நெஞ்சம் என்றும் உம்மையே தஞ்சமாக அடைந்து விட்டது. எம்மிடம் உண்மை யன்பில்லாத உம்மிடம், மீண்டும் மீண்டும் வெட்கம் இழந்து தன் மதிப்பைத் தவிர்த்து சென்று விடுகின்ற எமது பேதை நெஞ்சை, அவ்வாறு செல்வதினின்றும் தடுத்து எங்களிடமே நிறுத்திக்கொண்டுவிட எவ்வளவோ முயன்று பார்த்தும், இன்றளவும் அம்முயற்சியில் நாங்கள் வெற்றி பெற்றோமில்லை. 'தன்னை நினையாதாரைத் தான் நினைந்து உருகுவது பெரும் பேதைமையாகும்' என்பதைப் பன்முறைகளிலும் எமது நெஞ்சுக்கு அறிவுறுத்தி வந்திருந்தும், எமக்கு உரியதாக இருக்கவேண்டிய அது, எம்மை விட்டு நீங்கி உம்மிடமே சென்று விடுகின்றது! எமது நெஞ்சமே எமக்குத் துணையாகா தொழிந்தால், வேறு எங்களுக்குத் துணையாவார் யார்? கண்டவர் சிந்தை கவரும் கட்டெழில் மேனிக்கு இந்திர நீலத்தை இணையாகக்கொண்ட நீர், இமைப் பொழுதில் எம்மவரை உமக்கு அடிமைப்படுத்திக் கொண்டுவிடும் இந்திர ஜாலத்தைத் துணையாகக் கொண்டு எத்தகைய பிணக்குகளையும் எளிதில் ஒழித்துவிட வல்லவராக விளங்குகின்றீர்! மாயவரே! உமது மாயம் எவராலும் அறியவொண்ணாதது! எவரையும் எளிதில் வென்றுவிடக் கூடியது! உமது மாயையும் உம்முடனேயே நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாக வளர்ந்துகொண்டு வருகின்றது!

எப்பொழுது எமது நெஞ்சை அடிமை கொண்டு விட்டீரோ, அப்பொழுது முதல் அதன் கவலையை அகற்றியருள வேண்டியது உமது முதற்பெருங் கடமையன்றோ? உமது மந்திர வினைகளால் எமது நெஞ்சம் படும் சஞ்சலத்தைக் கண்டும், அதன் மேல் திருவுளம் இரங்கி அதற்கு 'அஞ்சல்' 'அஞ்சல்' என்று அருளாத உம் ஆண்மை என்ன ஆண்மை! கருவுற்றிருந்த காலத்தில், நான் பெற்றெடுக்க விருக்கும் குழந்தை, பெண் குழந்தையாகவே இருக்கும் என்று சோதிட வல்லுநர் கூறக் கேட்ட அசோதை, பிரசவ காலத்திற்கு முன்னரே பெண் குழந்தைக்கு உரிய சிறந்த நகைகளை எல்லாம் செய்து வைத்துக்கொண்டிருந்து, இறுதியில் நீர் ஆண்குழந்தையாக இருந்தது கண்டும் அந்நகைகளையே உமக்கு அணிந்து வளர்த்து வந்ததனால், நீரும் ஆண்மையை இழந்து விட்டீர் போலும்! பெண்மணிகளின் பொருட்டுப் பண்டைய வீரர்கள் தங்கள் உயிரையே வழங்கியிருக்க, எம்போன்ற ஏழையராகிய பெண்களின் உயிரையே கவர்ந்துகொண்டுவிடும் உமது வீரம் மிக அழகாக இருக்கிறது! நீர் கடியீர்! கொடியீர்! அறிவரிய பெருமாயத்தீர்! அதிலும், கொடிய எம் நெஞ்சம் உம்மையே எப்பொழுதும், எந்நிலையிலும், தஞ்சமாகக்கொண்டு விடுகின்றது!

உம்மிடம் நாங்கள் கொண்டு விட்ட கபடறியாத தூய மெய்க்காதல் எத்தகையதென்பதைக் கேவலம் வாய்மொழிகளால் விரித்துரைத்து விளக்கிக் காட்டக்கூடிய ஆற்றல் எனக்கு இல்லை. அனைவர் மனத்தையும் அறிந்து வைத்துள்ள தனிப்பெருங் கள்வராகிய தமக்கே, எமது காதலின் தன்மை எத்தகையதென்பது இனிது தெரியும். இத்தகைய எமது சீரிய காதலைச் சிறிதும் மதியாது புறக்கணித்து விட்டு, உம்

மைப் பிரிந்திருக்கும்போது அப்பிரிவுக்கு ஆற்றுமைப்பட அறியாத பசுக்களின் மேல அளவிறந்த அன்பு கொண்டவராய், எங்களை இங்கே தவிக்கவிட்டு விட்டு அவற்றின் பின் ஓடிப் போய் விடுவதும உமக்குத் தருமந்தானோ? ஆருயிர்களைக் காப்பது உமது தொழிலானுல், ஆநிரையைக் காப்பதோடு எங்களையும காத்தருள்வது உமது கடனன்றோ? குறிப்பிட்ட இடத்தில் வளைத்து வைத்த கோக்களைக் காக்கும திறத்தைக் காட்டிலும், பல மனைகளில் வசித்திருப்பினும் சிந்தையை உம்மிடமே செலுத்தி நிற்பவர்களான எங்களைக் காக்கும் திறம் பன்மடங்கு சிறந்ததன்றோ?

உமது கமல மலரைப் பழித்த திருவடிகளின் பெருமையையும் மென்மையையும் நாங்கள பெரிதும் போற்றுகின்றோமே யன்றி, நீர் சிறிதும் நினைப்பதாகக் காணோம்! நாங்கள் ஆராக் காதலோடும் பேரார்வத்தோடும் வருடும்படியான கோமள மலரடிகளை, காட்டிலும் மேட்டிலும் கற்களிலும் முட்களிலும் நீர் வருந்தச் செய்து வருவதை நினைக்க நினைக்க எமது நெஞ்சு பெரிதும் நெக்குருகுகின்றது! உமது திருவடி மலர்களின் அருமையை உணராது அவற்றைத் தினமும் சிவந்து வருந்தித் திரியச் செய்வித்து வரும் பசுக்களை யெல்லாம், திருவாய்ப்பாடியினின்றும் துரத்தி விட்டாலும் எங்களது சஞ்சலம் நீங்கிவிடும். எங்களது நெஞ்சத் தாமரையில் வைத்துக் கொண்டு இன்புற்றிருக்க விரும்பி நிற்கும் உமது செங்கமல வன்ன மென் மலரடிகளை, அன்பின் பசையற்ற வன்கண்ணரது நெஞ்சம் போலும் வெப்பம் மிகுந்த காட்டில் வீணில் வருந்தச்செய்யப்போகிறீரே என்று நீர் வனத்திற்குப் புறபபடுவதைக் காணுந்தோறும், எமது நெஞ்சம் அனலிடைப்பட்ட மெழுகென உருகா நிற்கும். மேலும, வீட்டில் விளையாடிக் கொண்டிருந்த போதே உம்மைக் கொல்ல எண்ணி வந்த அசுரர்களைப்போலவே, காட்டிலும் மாயம் வல்ல பற்பல அசுரர்கள் வஞ்ச நெஞ்சக கஞ்சனுல் ஏவப்பட்டவர்களாய்த் தக்க சமயம் பார்த்திருந்து உமக்குக கேடு சூழ முயலுதல்கூடும் என்னும பேரச்சம் இன்னும் எங்களது நெஞ்சினின்றும் நீங்கிய பாடில்லை. எங்களது இன்னுயிர்க்கு இன்பூட்டக்கூடிய இணையற்ற துணைவராகிய நீர எம்மை விட்டுப் பிரிந்து பசுக்களின் பின் சென்றுவிட்டால், எமது அகத்துயரை ஆற்றக்கூடிய துணைவர் வேறு எவர்? எங்களுக்கு நீர துணையாகவும் உமக்கு நாங்கள் துணையாகவும இருப்பதாகவே எங்களது எண்ணம். 'துணை' என்னும் சொற்பொருளுக்கு நீர் ஒருவரே யல்லவோ தனி உரிமை உடையவராவீர்! தோழிமாரும ஏனையோரும் எமது துயரை நீக்கக் கூடிய துணைவர் ஆவரோ?

எவ்விடத்தில், எச்சமயத்தில், எந் நிலையில் இருந்தாலும், எத்தொழிலில் தலைப்பட்டிருந்தாலும் உம்மையே உன்னி உன்னி உருகும் உள்ளத்தை உடையவர்களாகிய எங்களைப் புறக்கணித்து நீர் ஆநிரை பின் சென்று விட்டீராயின், எமது கருவிழிகளென்னும் ஊற்றினின்றும் எழும் நீர்ப் பெருக்கு, மார்பகங்களின் வழியே இழிவதாகி உடலையும் உயிரையும் ஒருங்கே சுடத் தொடங்கி விடுகின்றதே! இங்கிருந்து இவ்வளவுநேரம் எங்கட்குக் காட்சி யளித்தருளிய தன் பயனை இன்பம் அனுபவித்தற்கு உரிய சிற்சில கணங்களிலும், 'எப்பொழுது எழுந்து சென்று மறைந்து விடுகின்றீரோ' என்று எங்களது நெஞ்சில் மிகும் சஞ்சலம் அக்கொஞ்ச நேர இன்பத்தையும் அனுபவிக்க வொட்டாமற் செய்து விடுகின்றதே! உம்மைப் பிரிந்திருக்க நேரும் ஒரு பகல் நேரம், எமக்கு ஊழிக்காலம் போலல்லவா தோன்றுகின்றது! உமது பிரிவால் விளையும் துயரைப் பொறுக்க இயலாமல் இவ்வளவு பாடுகள் படும் எங்களை இங்கே தவிக்க விட்டுவிட்டு, வனத்திலே உம் எதிரிலேயே உமக்கு வெகு

கப்போதி !, பழுத்த நல்லமுதினின சாற்று வெள்ளம் பாவியேன மனமகநதோறும உள் புக்(கு), அழுதத - நின் செங்கனி வாயின் கள்வப் பணிமொழி நினைதொறும் ஆவி வேமால் ''—

என்று கண்ணபிரான் பக்கலில மிருநத சீரிய காதலின் பயனாக, தன்னை விட டுந் தனது ஆருயிர்க் காதலன ஆநிரை பின் சென்றுவிடுவதைச் சகிக்கவொண் ணாது, 'யான் நின்னைப் பிரிநதிருக்க ஆற்றேன் ; எமபெருமான் ! பசு மேய்க கப் போகேல் !' என்று பெரிதும் வேண்டி நின்றும, அக்காதலியின் வேண்டுகோளுக்கு இணங்காதவனாய் ஆநிரையினபின் அரசுதன் சென்ற தன் நுட்பத்தை உன்னுங்கள் ; உண ருங்கள். 'பரம பதத்தில் இருப்பைக் குலைத்தன்றே, பசுநிரை மேய்க்கப் போந்தது !' என்னும பெரியார மொழி யைக் கருதுங்கள். சாநதத்தை நினை ஷூட்டும பசுக்களைப் போற்றி வளர்த்து, சாநத மயனை இறைவனது இன் னருளை எய்த முயலுங்கள்.

---

# தாவீது மன்னரின் தனிக் கோள்

[திரு. T. R. சாரங்கபாணி, M. A.,]

(உரிமை ஆக்கியோர்க்குரியது)

(தொடர்ச்சி)

## தாவீதின் கடவுளுணர்வு

தாவீது மன்னரின் திருவுளத்தை அவருடைய கீதங்களின் வாயி லாக ஆராயுங்கால், யாக்கையின் நிலையாமை அவருக்கு இளமைப பருவத்திலேயே இறைவன் மாட்டுப் பேரன்பை மூட்டியதெனக் கூறலும் ஒவ்வும். கர்த்தாவே! நான் எவ்வளவாய் நிலையற்றவன் என்று உணரும்படி என் முடிவையும் என் நாட்களின் அளவு இவ்வளவென்பதையும் எனக்குத் தெரி வியும்'' (39-4) என்று அவர் வேண்டு வதே இதற்குப் போதிய சான்றாகும். உலகிடையுதித்த மக்கள் நீரிடைப் பிறந்த குமிழி போலும் மறைதலைக் கண்டு கண்டு கலங்கிய அவர் தனியாக ஆடு மேய்த்து நிற்கையில் யாக்கையின் நிலையாமையை யுன்னி யுன்னி, ஆறறி வின்ரின் அறியாமையை எண்ணி யெண்ணி, தமக்கு இளமையிலிருநது ஊட்டப்பட்ட சமய போதனையை யாராய்ந்தாராய்ந்து, தாம் அதுகாறும் ஆராயாது ஆற்றிய பாவங்களுக்காகக் கண்ணீர் விட்டு வருந்தி வருநதி ''என் இருதயம் எனக்குள் வியாகுலப் படுகின் றது. மரணத்திகில் என் மேல் விழுந் தது'' (55 : 4) என்று அலறுவதை நோக்க யாக்கையின் நிலையாமையே தாவீது மன்னரின் கடவுளுணர்வின் முதற் காரணமாக இலங்குகின்ற தெனக் கூறினும் முரணாகாது.

பிறப்பிறப்பெனும் பேரிருளை அழித் தற்கு இறைவனே தோன்றாத் துணை வனென தாவீது உணர்ந்தார். இம் மையிலும் மறுமையிலும் இடையறா யின்ப வெள்ளந் தேக்கும் வாழ்க்கை யை நல்கிடும் அன்புரு வப்பனையே தாவீது துணையாக நாடினார் ; வாயாரப் பாடினார் ; மனமாரக் கூடினார். 'மரணத் திகிலி'னின்றுந் தம்மை மீட்டற்கு, 'மரணத்திகி'லான் மடியும் மானிட வுதவியை அவர் நாடினாரில்லை. ''கர்த் தாவே ! உம்மை நம்பியிருக்கிறேன்'' (71 : 1) ''நானோ கர்த்தாவே உம்மை நம்பி யிருக்கிறேன் '' (31 : 14) என் னும் மெய்யுரைகள் ஆண்டவர் தம்மை யண்டினவர்களைக் கைவிடுவதில்லை என் னும பேருண்மையைத் தாவீது உய்த் துணர்நதாரென்பதையே வெள்ளிடை மலை யென இனிது விளக்குகின்றன.

என்று ஓர்ந்து "காத்தாவே! உம்மில் அன்பு கூறுவேன்" (18 : 1) "நானே நீதியில் உமது முகத்தைத் தரிசிப்பேன். நான் விழிக்கும்போது உமது சாயலால் திருப்தி யாவேன்." (17 : 15) என்று ஆநந்த மிருந்து அறைவது அவருடைய மெய்ப் பக்தியை யன்றோ ஓதுகின்றது.

இன்பம் நுகர்ந்த காலத்தில் இறைவனைப் போற்றியதுபோலும் துன்பம் நுகர்ந்த காலத்திலும் சவுலுக் கஞ்சியோடி, பல்லாண்டுகள் நிற்க நிழலின்றி இடிப்புண்ட காலத்திலும், தாவீது இறைவனை மறந்தாரில்லை. தமக்கு ஆண்டவன் உதவி செய்யவில்லை யென்று தற்கால நாகரிக தடப்புடலுக கிணங்க "பாழுந் தேய்வத்திற்குக் கண்ணில்லை' என அவர் மறந்தும் நினைந்தாரல்லை. மாறாத் துன்பம் அவரை யணுகிய சமயத்திலும், மனத்துயரம் அவரை யண்டிய சமயத்திலும், ஓயாக் கவலை அவரை வாட்டிய காலத்திலும், தோனாறுத் துணைவனுகிய எல்லாம்வல்ல ஆண்டவன்மாட்டு அவருக்கிருந்த நம்பிக்கை எள்ளளவுங் குறைந்திற்றில்லை. இளமையிலிருந்து இறைவன்மீது அவர் கொண்ட மாறா நம்பிக்கையே துன்பமெய்திய காலங்களிலும், துயர மணுகிய சமயங்களிலும் அவரை "எனக்கிரங்கும் தேவனே எனக் கிரங்கும்" (57 : 1) "தேவனே! என்னைக் காப்பாற்றும்" (16 : 1) "என்மேல் இரக்கமா யிருங் கர்த்தாவே" (6 : 2) "கர்த்தாவே ஏன் துயரத்தில் நிற்கிறீர்? ஆபத்து நேரிடுகிற சமயங்களில் நீர் ஏன் மறைந்திருப்பீர்" (10 : 1) "*என் தேவனே! என் தேவனே!! ஏன் என்னைக் கைவிட்டீர்? எனக்கு உதவி செய்யாமலும் நான் கதறிச் சொல்லும் வார்த்தைகளைக் கேளாமலும் ஏன் தூரமா யிருக்கிறீர்? என் தேவனே! நான் பகலிலே கூப்பிடுகிறேன். ஏன் தூரமா யிருக்கிறீர்? இரவிலே கூப்பிடுகிறேன். எனக்கு அமைதலில்லை." (22 : 1) "கர்த்தாவே! என்னைக் கைவிடாதேயும். என் தேவனே! எனக்குத் தூரமா யிராதேயும். என் இரட்சிப்பாகிய ஆண்டவரே எனக்குச் சகாயஞ்செய்ய தீவிரியும்" (38 : 21-22) எனறு அழுதழுது ஆண்டவன் அருளை வேண்டுமாறு தூண்டியதே யல்லான் அவரை ஆண்டவரை மறக்குமாறும் பழிக்குமாறும் தூண்டிற்றில்லை. இஃதன்றோ மெய்ப்பக்தியின் இயல்பு. கடவுளை நம்பினோரை இறைவன் கைவிடலாகாதெனற அவருடன் வாதாடுவது போலு மன்றோ இவ்வுரைகள் இலங்குகின்றன.

மாறில்லா நம்பிக்கை யெனும் படகேறி பாவவுணர் வெனுங் கோலூன்றி இறப்பெனுங் கடல் கடந்து ஆண்டவனருள் என்னுங் கரைநாடி அன்பெனும நெறிபற்றிய மெய்யடியார்களுள் ஒருவராகிய தாவீது தாம் அநுபவ வாயிலாக அழுதழுது இரந்திரந்து பற்றிய பரமன் "கர்த்தா என் கன்மலையும் என் கோட்டையும் என்னுடைய இரட்சகரும் என் தேவனும் நான் நம்பியிருக்கிற என் துருகமும்,என் கேடகமும் என் இரக்ஷணியக் கொம்பும் என் உயர்ந்த அடைக்கலமுமா யிருக்கிறார்"(18 : 1-2) என்றறைவது அடியானுக்கும் ஆண்டவனுக்கும் உள்ள நெருங்கிய சம்பந்தத்தையே எடுத்தோதுகின்றது.

வேதத்தைத் துருவித்துருவி ஆராய்ந்து அதிற்பதிந்து கிடக்கும பேருண்மைகளை யோர்ந்து அவ்வுண்மைகளுக் கிணங்க ஒழுகி, பேரின்ப நுகர்ந்து "யான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையக" மென ஆண்டவன் இயல்பை, தான் பற்றிய சமய நெறியை, நாடிய அன்பு வழியை, "கர்த்தர் எனக்கு நன்மை செய்தபடியால் நான் அவரைப் பாடுவேன்" (13 : 6) என பக்தி மனங் கமழும் கீதங்களின் வாயிலாக நமக்குத் தாவீது அருளினர். இதுகாறும் அவருடைய கடவுளுணர்வை ஆய்ந்தறிந்தயாம், இனி அவருடைய கடவுளின் இயல்பை ஆராய்வோம்:

*உலகின் பாவங்களுக்காக உயர்ந்த ஆட்டுக் குட்டியைப்போல் சிலுவையில் அறையப்பட்ட இரக்ஷகர் ஆங்கு அருளிய அறிவுரைகளுள் இவ்வுரையும் ஒன்றென்பது நோக்கற்குரியது.

# நமது நாட்டில் வழங்கும் பழங்கதைகள்

[திரு. சோமசுந்தர தேசிகர்]

(உரிமை ஆசிரியருக்குரியது)

நாம் சிறுபிள்ளைகளாகப் பள்ளிக்கூடத்தில் வாசித்துக்கொண்டிருக்கும்போது அந்திரோகிளிஸ் சிங்கமும் என்ற ஒருகதையைப் படித்திருக்கிறோம். அக்கதை அனைவருக்கும் ஞாபகமிருக்கலாம். இருந்தாலும் அக்கதையைப் படியாத சிலரின்பொருட்டுச் சுருக்கமாகக் கீழே வரைகின்றேன்.

முன்னாளிலே ரோமர் தாங்கள் கைப்பற்றிய மக்களை அடிமைகளாக்கி அவ்வாறே நடத்தி வந்தனர். துன்பம் சகிக்க முடியாமையால் அவர்கள் ஓடிப்போவார்களானால் அவர்களை யானையின் காலில் இடறுவதும், சிங்கம்புலிபோன்ற துஷ்ட மிருகங்களுக்கு இரையாக்குவதும் வழக்கம். அவ்விதமாகவே ஒரு பிரபு வீட்டிலிருந்த அந்திரோகிளிஸ் என்ற அடிமை, துன்பம் சகிக்க முடியாமல் காட்டுக்கு ஓடிப்போய் விட்டான். காட்டில் ஒரு சிங்கம் எதிர்ப்பட்டது. அதனைக்கண்டு இவன் பயந்தானாயினும் அது நடக்கமுடியாமல் நொண்டிக்கொண்டு வருவதைக் கண்டான். சிறிது தைரியங்கொண்டு அதனருகிற் சென்று காலை மெல்லத் தூக்கிப் பார்த்தான். காலில் முள்ளொன்று தைத்து வீங்கியிருக்கக் கண்டு அதனை மெல்லப் பிடுங்கி சீழையும் பிதுக்கி விட்டுத் தன் இடுப்பிலிருந்த ஆடையிலொரு துண்டு கிழித்துப் புண்ணுக்குக் கட்டினான். சிங்கம் வலியினால் வெளியிற் செல்ல முடியாமல் அங்கேயே படுத்துவிட்டது. மறுநாள் அதன் வலி மாறிப் போகவே அன்றுமுதல் அந்த அடிமையான அந்திரோகிளிசுடன் நெருங்கிப் பழகி நாய்போலத் தொடர்ந்தலையத் தலைப்பட்டது.

இவ்வாறிருக்கும் போது சிங்கம் தனித்துப் பிடிக்கப்பட்டு அரசனுக்குக் காணிக்கையாகச் செலுத்தப் பட்டது. சிறிது காலத்திற்கெல்லாம் அடிமையும் பிடிபட்டான். முன்னரே சொன்னபடி அடிமை ஓடிப்போனவனானதால் சிங்கத்திற்கு இரையாகத் தீர்மானிக்கப்பட்டது. இந்த வேடிக்கையைப் பார்க்கப் பல ஜனங்கள் கூடியிருந்தார்கள். காவலாளர், அடிமையை நிறுத்திச் சிங்கத்தைக் கூட்டினின்றும் திறந்துவிட்டனர். சிங்கமோ ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து இரையைக் கவ்வுதற்கு மாறாக, நாய்போல் வந்து அடிமையின் கையை முகர்ந்துவிட்டு அவனோடு நின்றது! இதனைக் கண்ட ஜனங்களும் அரசனும் அதிசயமடைந்து, விஷயத்தை யறிந்து அவனை அடிமையினின்றும் விலக்கி அச்சிங்கத்தையும் அவனுக்கு வெகுமதியாக அளித்துவிட்டனர். இதனைப் போன்ற ஜாதகக் கதை வருமாறு :—

## அலீனசித்த ஜாதகம்

காசியிலே பிரமதத்தன் அரசாண்டு கொண்டிருக்கையிலே 500 பேர் கொண்ட ஒரு தச்சர்கூட்டம் இருந்தது. அக் கூட்டம் அருகிலுள்ள காட்டிற் சென்று மரங்களை வெட்டிக் கழித்து வீடுகட்டப் பிளந்துக் கங்கை வழியாகக் கொண்டுவந்து காசியிலே விற்பது வழக்கம். இவ்வாறு நெடுநாளாகச் செய்து வந்தனர். அக்காட்டிலே இருந்த யானை யொன்றின் காலிலே தற்செயலாக ஒரு மரத்துண்டு ஏறிவிட்டது. யானைக்குக் கால்வீங்கி நடக்கமுடியாமற் போயிற்று. பலநாள் துன்பப்பட்டுக் கொண்டிருந்த யானை அங்கு வேலைசெய்யும் தச்சர்கள் தனக்கு உதவிசெய்ய முடியு மென்று நினைத்து அவர்களிடம் சென்று காலைக் காட்டிப் படுத்துக்கொண்டது. யானையின்கால் வீங்கியிருப்பதைக் கண்ட தொழிலாளிகள் வீக்கத்தை நன்றாய்ப் பார்த்தபோது காலில் ஒரு மரச்சிராய் ஏறியிருக்கக் கண்டனர். மெல்ல புண்

ணைக்களைந்து சிம்பைப் பிடுங்கியெடுத்து விட்டுப் புண்ணையலம்பித் துணிகொண்டு கட்டிக் காயத்தை யாற்றினார்கள்.

இந்நன்றியை யறிந்த அவ் விலங்கு தச்ச வேலைக்காரர்களுக்கு உதவியாக மரங்களை இழுத்துக்கொண்டு வந்து வேலைசெய்யுமிடத்திற் சேர்த்தும் இன்னும் எந்தெந்த வகையில் உதவிசெய்யக்கூடுமோ அந்தவகையி லெல்லாம் உதவிசெய்தும் வந்தது. ஐநூறு தச்சர்களும் இவ்வேலைக்குப் பிரதியாகத் தங்களுணவில் சிறிது மிருந்துக் கொடுத்து வந்தனர். இவ்வாறு பலநாள் சென்றன. யானைக்குக்கிழத்தனம் மேலிட்டவே, தன் பிள்ளையைக் கொண்டுவந்து தச்சர்களிடம் ஒப்புவித்துத் தனக்குப்பதிலாக அதனை வேலை செய்யும்படி அமர்த்தித் தான் காட்டுக்குச் சென்றது. தச்சரும் முன்போலவே நடந்துவந்தனர். யானைக் கன்று இளமையுடைய தாதலால் வேலை செய்தநேரம் கழிந்தபின் தச்சர்களுடைய பிள்ளைகளோடு சேர்ந்து விளையாடுவதும் கங்கையில் நீராடுவதுமாக விருக்கும்.

ஒருநாள் அதனுடைய இலத்தி கங்கை வழியாகக் கீழே சென்று காசிக் கரையில் ஒதுங்கிற்று. அரசனுடைய யானைக் கூட்டம் வழக்கம்போலக் கங்கைக்கு வந்தது. நீரடிக்குச் சென்றவுடன் யானைகள் வீறிட்டுக் கொண்டு நீரிற் செல்லாமல் கரையேறிவிட்டன. பாகர்கள் எவ்வளவு முயன்றும் பயன்படவில்லை. இதனைக் கேட்ட மாவுத்தர்கள் கங்கைக் கரையைச் சோதித்த போது ஒரு புதரில் இந்த இலத்தி தங்கியிருக்கக் கண்டதோடு அது மிக்க நறுமணம் வீசுவதையும் கண்டனர். அந்த விட்டையையெடுத்துவந்து நீரிற்கரைத்து யானைகள்மேல் தெளித்துக் காயும்படி செய்தனர். இதனை யறிந்த அரசன் அந்த யானையைத் தச்சர்களிட மிருந்து பெற்றான்.



# இ டி யே று

## சுயராஜ்யம் !

இந்தியா சுயராஜ்யம் பெறுதல்வேண்டும்; பெற்றேதீர்தல்வேண்டும். இந்தியா சுயராஜ்யம் எப்படிப் பெறும்? இதைச் சிந்திப்பதற்கு முன்னர் இந்தியா சுயராஜ்யம் இழந்ததன் காரணத்தைக் கூர்ந்து சிந்தித்து உணர்தல் வேண்டும்.

காரணங்கள் பலபடத் தோன்றும். ஊன்றிச் சிந்திக்கச் சிந்திக்க இடைக்கால ஹிந்துமதமே இந்தியாவின் சுயராஜ்ய இழப்புக்குச் சிறந்த காரணம் என்பது நன்கு புலனாகும். பண்டைக்கால ஹிந்துமதம் என்று குறிப்பிடாமல் இடைக்கால ஹிந்துமதம் என்று குறிப்பிட்டதை நேயர்கள் கவனிப்பார்களாக.

பண்டைக்காலப் புனித வேதாந்தம் பின்னே ஹிந்துமதம் என்னும் பெயர் பெற்றது. அக்கால வேதாந்தம் மன்பதைக்கே உரியதொன்றாக விளங்கிற்று. வகுப்பு, நாடு, நிறம், மொழி முதலிய கட்டுகளை யெல்லாங் கடந்து அஃது ஒளிர்ந்துநின்றது. அத்தகைப் பெருமை வாய்ந்த புனிதக் கொள்கையை இடைக்காலத்தில் சாதிப் பாகுபாடு, பெண்ணடிமை, தீண்டாமை முதலிய கட்டுகள் பற்றிக்கலாயின. உரிமை ஒளிகான்றிக் கொண்டிருந்த ஹிந்துமதத்தில் அடிமையிருள் சூழ்ந்தது என்று சுருங்கச் சொல்லலாம்.

ஹிந்துமதம் அடிமைக் குழியில் வீழ்ந்தமையால், இந்தியாவும் அடிமைக் குழியில் வீழலாயிற்று. அடிமைக் குழியில் வீழ்ந்த இந்தியா மீண்டும் அதினின்றும் எழவேண்டுமானால், அஃது எம்முயற்சியில் தலைப்படுதல்வேண்டும்? தன்னை அடிமைப்படுத்திய சாதி, பெண்ணடிமை, தீண்டாமை முதலியவற்றைக்

களையும் முயற்சியில் அது தலைப்படுதல் வேண்டும். அம்முயற்சியில் சிறப்பாக வும், பிற முயற்சிகளில் பொதுவாகவும் இந்திய மக்கள் தலைப்பட்டு உழைப்பது ஒழுங்கு.

இந்திய சுயராஜ்யத்துக்காக எழுந்த கிளர்ச்சிகள் பல. அவைகளுள் காந்தியடி கள் எழுப்பிய சத்தியாக்கிரகக்கிளர்ச்சி யின் மாண்மையைச் சொல்லவேண் டுவதில்லை. அப்பெருங் கிளர்ச்சியால் இந்திய சுயராஜ்யம் பெற்றுவிடுமென் றெண்ணம் கருதியது. இப்பொழுது இந் திய சுயராஜ்ய நிலை யாதாயிருக்கிறது! அதைச் சொல்லவும் வேண்டுமோ? வட்டமேஜை மகாநாட்டில் சப்ரு-ஜெயக் கர் கூட்டம் திண்டாடுகிறது. ஸர் சாமி யல் ஹோர் தமது நிலையினின்றும் ஓர் இம்மியும் அசைகிறதில்லை. மகாணாதி பதிகட்கும் இராஜப் பிரதிநிதிக்கும் உள்ள அதிகாரங்களைப் பற்றிப் பேசு வார். சாமியல்ஹோர் விரும்புகிறாரில்லை. எல்லாவற்றிலும் ஜனப்பிரதிநிதிகளின் தீர்மானமே முடிந்ததாகக் கொள்ளும் உரிமை இந்தியா பெறுதற்கு இன்னும் எத்துணை நாளாகுமோ தெரியவில்லை.

ஸர்-சாமியல் ஹோரையும் மற்றவரை யும் பிடிவாதத்தி லிருக்கச் செய்வது எது? இந்தியாவிலுள்ள ஒற்றுமையே என்று அறை கூவலாம். ஒற்றுமைத்தி லுள்ள குறைபாடுகள் களையப்படுதல் வேண்டும். அவைகள் இன்று களையப் படின் நாளை பிரிட்டிஷார் நிலை வேறுபடு வது திண்ணம். ஆகவே, இந்திய சுயராஜ் யம் இங்கிலாந்தில், வட்டமேஜை மகா நாட்டில், ஸர். சாமியல் ஹோர்கையில் இருப்பதாகக் கருதவேண்டுவதில்லை. அஃது இந்தியாவில், ஒற்றுமைத் தெருவில் இருக்கிறது என்பதை நம்மவர்கள் உணர்ந்து நடப்பார்களாக.

இங்கிலாந்தில் வட்டமேஜை மகாநாட் டில், சப்ரு-ஜெயக்கர்கூட்டம் திண்டாடு வதுபோல, இந்தியாவில் ஒற்றுமை மகாநாட்டில் மாளவியர்-ஆச்சாரியர் கூட் டமும் திண்டாடுகிறது. இரு கிழவர் களும் வலிந்து வலிந்து ஈர்த்து ஈர்த்து ஒற்றுமை நாடுவதால் ஆன்ற ஒற்

றுமை ஏற்படாது; பின்னே உலுக் கும் ஒற்றுமையே ஏற்படும். ஆன்ற ஒற்றுமை, ஒற்றுமைத் தாய்மைப் பண்பி லிருக்கிறது என்று பண்முறை கூறவேண்டுவதில்லை.

காந்தியடிகள் யாதொன்றையும் மிகைக் கல்லோ ஒரு பெருங் கிளர்ச்சியை எழுப்பியும் என்ன ஆயிற்று? சட்ட மறுப்பு விலக்கு, பள்ளி விலக்கு, நீதிமன்ற விலக்கு, கள்ளுக்கடை மறி யல், பல்லாயிர மக்கள் சிறைவாசம் முதலியன என்ன செய்தன? காந்தி யடிகள் என்செய்வார்! அவர் சுயராஜ் யத்துக்காக அறவழியில் முயல்கிறார். சாதி ஒற்றுமை - பெண்ணடிமை ஒற்றுமை - தீண்டாமை ஒற்று மையும் குலைந்திட்டால் காந்தியடிகள்என் செய்வார்! மற்றவர்களும் என் செய்வார் கள்!

காந்தியடிகள் சிறைக் கோட்டத்தி லிருந்து கொண்டே தீண்டாமையைத் தொலைக்க இப்பொழுது முனைந்து நிற் கிறார். அவ்வுரிமையை அவருக்கு வழங் கிய அரசாங்கத்துக்கு நன்றி உரியதாக! காந்தியடிகள் சட்டமறுப்பு இயக்கத்தை முற்றும் நிறுத்தி, வெளிப் போந்து, தீண்டாமையை விலக்க முயன்றால் நலன் விளையும். சட்ட மறுப்பைப் பார்க் கிலும் தீண்டாமை விலக்கு மிகச் சிறந் தது என்பதைக் காந்தியடிகள் நன்கு உணர்ந்தே கடனாற்றி வருகிறாரென்று நாம் நம்புகிறோம்.

தீண்டாமையைப் பற்றிக் காந்தியடி கள் பல ஆண்டுகளாகப் பேசினார்; எழுதினார். அப்பேச்சையும் எழுத்தை யும் சாதிப்பூதம் விழுங்கி விழுங்கி ஏப்ப மிட்டது. இப்பூத முள்ளவரை காந்தி யடிகளின் சுயராஜ்ய முயற்சி பன்முகங் கொண்டெழினும் பயன் தாராது என் பது உறுதி. பேச்சாலும் எழுத்தாலும் பயன் விளையாமை கண்டே காந்தியடி கள் தீண்டாமை விலக்குக்கென்று ஓர் இயக்கத்தைச் செயலில் நடாத்தி வரு கிறார். அவ் வியக்கத்துக்குத் தோன்றி யுள்ள எதிர்ப்புகளை உலகம் கவ னித்தே வருகிறது.

இவ்விருபதாம் நூற்றாண்டில், சுதந்திரக் கூச்சலும், சமதர்மக் கூக்குரலும் வான்முகட்டையுங் கிழித்துச் செல்லும் இந்நாளில், மக்களுக்குள் தீண்டாமை கூடாது என்ற மூர்த்த ஓரியக்கத்துக்கு எதிர்ப்புகள், ஹிந்துமதத்தின் பெயரால் புற்றீசல் போல நாலுபக்கங்களினின்றுங் கிளம்பி வருகின்றன என்றால், இந்தியா சுயராஜ்யத்துக்கு உரியதாகுமா என்று நமக்கு நாமே நம்மனச் சான்றைத் தொட்டுக் கேட்போமாக.

வைதிகர்கள் என்று தங்களை நினைத்துக் கொள்வோர்களின் பேச்சுகளையும் எழுத்துகளையும் கண்டு ஆராயவேண்டுவதில்லை. அவர்கள் காட்டும் பிரமாணங்கள் தீண்டாமை வேண்டுமென்று தீண்டாமையை நாட்டியவர்களால் எழுதப்பட்டன. அவைகளைப் பற்றிய ஆராய்ச்சி தற்கால உலகிற்கு அநாவசியம்; முற்றும் அநாவசியம்.

வேதம் கீதை முதலியவற்றில் தீண்டாமை உண்டு என்று ஒரு சாராரும், இல்லை என்று மற்றொரு சாராரும் சொல்கிறார். இவ்வாதப் பிணக்குக்கு முடிவே ஏற்படாது. இப்பிணக்கில் சீர்திருத்தக்காரர்கள் தலைப்படாதிருப்பது சிறப்பு. வேதத்திலோ கீதையிலோ பிறவற்றிலோ தீண்டாமை இருப்பதாகவே வைத்துக் கொள்வோம். அந்நூல்களைக் கொண்டு மக்களுக்குள் தீண்டாமையை நிலை பெறுத்தப் பார்ப்பது அறமா என்று கேட்கிறோம். தற்கால இயற்கைத் தேவதை - தற்கால இயற்கை வேதம்-தற்கால இயற்கைக்கீதை தீண்டாமை கூடாது என்று சொல்கின்றன. அவைகளின்படி நடக்க வேண்டுவது அறிஞர் கடமை. உலகத்தில் எங்குமில்லாத தீண்டாமை, இந்தியாவில், ஹிந்து மதத்தில், இருந்தால் அதைப் பாதுகாக்கவேண்டும் போலும்!

வைதிகர்கள் என்று சொல்லப்படுவோர்கள் சார்பாக ஆங்காங்குள்ள சங்கராச்சாரியர்கள் குருவாயூர் ஆலயத் தருமகர்த்தருக்குத் தந்திச் செய்திகள் அனுப்பிய வண்ணமா யிருக்கிறார்கள்; "தீண்டாமையைக் கோயிலுள் பாதுகாத்து வாருங்கள்" என்று அவருக்கு அறிவு கொளுத்திய வண்ணமா யிருக்கிறார்கள். சங்கராச்சாரியர்களெல்லாரும் ஒன்றாகச் சேர்ந்து ஒருமகாநாடு கூடப் போகிறார்கள் என்றும் அறிகிறோம். இவர்கள் ஒன்றுபட்டுப்பேசுங்கால்எவர் ஆதிசங்கரர் பிரதிநிதியாயிருப்பர் என்பதைஅறியவிரும்புகிறோம். ஒருசங்கராச்சாரியர் எல்லையில் இன்னொரு சங்கராச்சாரியார் வருவாராயின், அவரை ஆண்டுள்ளார் சங்கராச் சாரியராகக் கொள்வதற்கு நியாயமில்லை. சங்கராச் சாரியார்கள் இப்பொழுது அநியாயத்தில் இறங்கியிருக்கிறார்கள் என்றே கூறுதல் வேண்டும்.

ஆதி சங்கராச்சாரியார், எல்லாம் பிரம சொரூப மென்றும், அதற்கு வேறாக ஒன்றுமில்லை யென்றும், பிரமத்துக்கு வேறாகக் காணப்படுவனவெல்லாம் கானற்சலமென்றும், மித்தைஎன்றுங் கூறிச்சென்றார். எல்லாம் பிரம சொரூபமாயிருக்கும்போது,தீண்டாமை எங்கிருந்துவந்து நுழைந்ததோ தெரியவில்லை! ஆதிசங்கரர் பெயரால் மடத்தில் வாழும் சங்கராச்சாரியர்கள், தங்கள் முதல்குரு அறிவுறுத்திய வேதாந்தத்தைப் பரப்ப முயலுந் துறையில் நண்ணுவது அறச்செயலாகும். அதை விடுத்துத் தீண்டாமைக்குத் துணை நின்று தந்திகள் கொடுப்பதும் மகாநாடுகள்கூடுவதும் அறச்செயல்களாகா. மடத்துச் சங்கராச்சாரியர்களை, ஆதி சங்கராச்சாரியார் பிரதிநிதிகளாக வாழுமாறும், சாதி சங்கராச்சாரியர்களாக வாழா திருக்குமாறும் கேட்டுக் கொள்கிறோம்.

காந்தியடிகள் இயக்கத்தைத் தொடங்கிவிட்டார். அது நாடுமுழுவதும் காட்டுத் தீப்போல் பரவி வருகிறது. இவ்வேளையில் வைதிகக் கூட்ட மொன்று எர்வாடா சிறைபுகுந்து காந்தியடிகள் முன்னிலையில் தனதுவாதங்களைக்கிளத்தப்போகிறதென்றும், அதற்குக் காந்தியடிகளும் இணங்கி யிருக்கிறாரென்றும் கேட்டு வருந்துகிறோம். தீண்டாமை

நாட்டியவர்களால் எழுதப்பெற்ற ஸ்மிருதிகளில் தீண்டாமை இருந்தேதீரும். அந்நூற்பிரமாணங்களை எப்படிக்கொள்வது? ஆதலால் ஸ்மிருதி வாதிகளின் வழக்குகளுக்கு அடிகள் செவி சாய்க்க இணங்காதிருப்பதே நல்லது.

பிராயச்சித்தப் பேச்சுகளும், புதுக்கோயில் பேச்சுகளும், இன்ன பிறவும் மெல்லமெல்ல புகைவிடத் தொடங்கியிருக்கின்றன. இவைகளுக்குக் காந்தியடிகள் இணங்கவில்லை என்று கேட்டு மகிழ்வெய்துகிறோம்.

தீண்டாமை விலக்கை முன்னிட்டு உண்ணாவிரதங்கொள்ளல், வாக்கெடுத்தல் முதலியவற்றில் காந்தியடிகள் இனித் தலைப்படாது, இயக்கத்தை அமைதி முறையில் நடாத்த அவர் முயலவேண்டுமென்பது நமது கோரிக்கை. முதலாவது காந்தியடிகள் விடுதலையடைதல் வேண்டும். இதற்கு அரசாங்கத்தார் உதவிதேவை. காந்தியடிகள் கருத்துப் பெரிதும் தீண்டாமை விலக்கு மீது படிந்து கிடப்பது அரசாங்கத்தார்க்கு நன்கு தெரியும். இந்நிலையிலுள்ள அடிகள்மீது அரசாங்கத்தார் நம்பிக்கை வைத்து அவரை விடுதலை செய்வதற்குத் தயங்குதல் வேண்டும்?

தீண்டாமைவிலக்கு இயக்கத்தை ஆங்காங்கே நடாத்தும் தலைவர்கள் சாதி ஹிந்துக்களாயிருத்தல் கூடாது. அவர்கள் சாதியில்லாத ஆதிஹிந்துக்களாகவேயிருத்தல் வேண்டும். அவர்களுக்குச் சாதிஹிந்துக்கள் பக்கத்துணையாயிருக்கலாம். செல்வாக்கு பெறும் எவ்வியக்கத்திலும் தேர்தல் வேட்டர்கள் புகுந்து தங்கள் நலனைப்பேணிக்கொள்வது வழக்கம். அவர்களுக்குத் தீண்டாமைவிலக்கு இயக்கமும் இரையாகாதிருக்கவேண்டுமென்பது நமது கருத்து.

இன்னோரன்ன முறையில் இயக்கத்தை ஒழுங்குபடுத்தி நடாத்தினால் சில லாண்டில் ஆசியாக்கடலில் சாதிப்புயலால் மோதுண்டு மோதுண்டு தத்தளிக்கும் இந்திய சுயராஜ்யக்கப்பல் விரைந்து துறை நண்ணும்.

தீண்டாமை நேயர்கள் மனந்திரும்பிப் பார்த்தநோக்கம்பெறுமாறு கிறிஸ்து பிறந்த இவ்வாரத்தில் ஆண்டவனை வழுத்துகிறோம். கிறிஸ்து பெருமான் அன்பு மன்பதையை ஆள்வதாக.

## குருகூர்ப் பள்ளு

இந்நூல் ஆழ்வார் திருநகரி சடகோபப் புலவரால் இயற்றப்பெற்றது. இதன் பதிப்பாசிரியர் பெரியன். வெ. நா. ஸ்ரீநிவாச ஐயங்காரவர். இந்நூல், ஓர் அரிய முன்னுரையை அணிந்திருக்கிறது. அது, சென்னை யூனிவர்ஸிட்டி தமிழ் லெக்சிகன் பதிப்பாசிரியர் S. வையாபுரிப் பிள்ளையவர்களால் எழுதப்பெற்றது. அம்முன்னுரைக்கண் பள்ளுப்பாட்டைப்பற்றிய ஆராய்ச்சி சுருங்கிய முறையில் திகழ்வது தமிழ் பயில்வோர்க்கு விருந்தாகும். "......'குருகூர்ப்பள்ளு' அவ்வகை நூல்களுள் ஒரு கௌரவமான ஸ்தானம் பெறுதற்குரிய தென்பது அதனைக் கற்போர் எளிதிலுணர்வர். பள்ளுப்பிரபந்தங்களுக்குரிய முக்கிய லட்சணங்களெல்லாம் அது பெற்றிருக்கின்றது; மிகச் சுருக்கமாகவும், நயமாகவும் அமைந்திருக்கின்றது. செய்யுட்களும் இனிமை முதலிய நலங்கள் பொருந்தியுள்ளன...." எனவரும் முன்னுரையாசிரியர் மொழிகளால் நூலின் இயல்பு நன்கு விளங்கும். விலை அணா 6. கிடைக்குமிடம்: பெரியன். வெ. நா. ஸ்ரீநிவாசய்யங்கார், திருஞான முத்திரைப் பிரசுராலயம், ஆழ்வார் திருநகரி.

தெரிந்து, யாண்டும் சுதந்திர தாகத்தால் மாறுதல் ஏற்பட்டுள்ள இந்நாளில் கல்விச் சீர்திருத்தத்திற்கும், சமூக நிர்மாணத்திற்கும், பிரமசரியமே சிறந்ததோர் நற்றுறை என்பதை இது போது, தீவிரமாய்ப் பிரசாரம் செய்ய இயலாததாகும்.

ஆன்ம வளர்ச்சியிலும், பொது மக்களிடத்திலும், அளவு கடந்த பக்தி மீதூரப்பெற்ற, பிரமசாரிகளிடத்தில் எனக்குத் தலை சிறந்த நம்பிக்கை உண்டு. சுதந்திரம் பெறும் இந்தியாவில் இளஞாயிறுகளாம் பிரம்மசாரிகள் யாண்டும் ஒளிர்வார்களாக. இதுவே எனது வேணவாவாகும். அந்நாள் அடுத்து வருவதாக. தற்கால நாகரிகம் சிற்றின்பங்களால் பெரிதும் கேடடைந்துள்ளது. இப்போலி நாகரிகமானது யாண்டும் பரவி, இந்தியாவிலும் பிரவேசித்துள்ளது. இப்போக நெறி, உயிர் போக்கும் மறலியாகும். இந்நெறியையா நம் தாய்நாட்டு வாலிபர்கள் விழைதல்வேண்டும்? ஒரு காலும் விரும்பவொண்ணாது. எனின், அவர்கள் விழையும் நெறி யாது? அதுவே சங்கங்கட்கும், சமூகத்திற்கும், போதிய சக்தியை - ஆற்றலை - வலிமையை - ஆண்மையை அளிக்கவல்ல தூய நன்னெறியாகும்.

---

# ஐக்கியம்

[நோன்பி]

"கடவுளுடன் ஒன்று படுதல்" (Oneness with God) என்னும் விஷயத்தைப்பற்றி Rev. லார்சன் எழுதியதில், கடவுளுடன் ஒன்று படுதல் என்பது நம் தகப்பனார் ஆகிய அவருடன் அவர் குழந்தைகளாகிய நாம் மனதில் ஒன்றும் ஒளியாமல் ஒழுகி அன்பினால் கட்டுப்பட்டிருத்தல் என்று குறிக்கிறார். ஆகவே, கிறிஸ்து மதப்படி ஜீவ பிரம ஐக்கியம் என்பது ஜீவன் கடவுளைத் துதித்து வணங்குவதுதான்.

புத்தர்கள் மனிதனுடைய முடிந்த நிலை நிர்வாணம் அடைவது என்பர்; அதாவது, மீண்டும் பிறப்பு வராவண்ணம் நம் தூல சூக்கும உடம்புகள் அழிவுறுதலே என்பர்; அவர்கள் ஜீவான்மா என்றும், பரமான்மா என்றும் இருப்பதாக எண்ணுவதில்லை. இந்துக்களில் வைணவர்களோ விஷ்ணு லோகத்தில் விஷ்ணு முன்பாக இருக்கும் நித்திய சூரிகள் நிலைதான் முடிந்த நிலை என்பர்; சைவசமயிகளில் சிவ சமத்துவ வாதிகள், ஆன்மா சிவனுக்கு சமானமாக எண் குணங்களை அடைவதே முடிந்த நிலை என்பர்; மாயா வாதிகளோ பொய்யான உடலையும் உலகையும் நாம் மெய் என்று எண்ணும்படி மாயை நம்மை மயக்குவதாக அறிவதே முடிந்த நிலை என்பர்; "ஒருபால் வேதாந்தத்து உச்சியில் பழுத்த சைவ சித்தாந்தத் தேன் அமுது அருந்தினர்" தான் சீவன் சிவனுடன் ஐக்கியமாகும், அதாவது இரண்டறக் கலக்கும் என்பர். அவர்கள் கொள்கையைக் கீழே ஆராய்வாம்.

"காகமான துகோடி"—என்னும்பாட்டில் தாயுமானார் "ஏகமாய்நின்னோடிருக்கு நாள் எந்த நாள்" என்று கதறுகிறார். அவரே, "ஆணவத்தோடு அத்துவிதம் ஆனபடி மெய்ஞ்ஞானத் தாணுவினோடு அத்துவிதம் ஆகும்நாள் எந்நாளோ" என்றும் வருந்துகிறார். திருப்புகழில், "அறுருநுனி பணிஅனைய....நீயும் நானுமாய் ஏகபோகமாய் இருக்கும் வகை பரமசுகம், அதனை அருள்" என்று அருணகிரியார் விண்ணப்பிக்கிறார். சிவஞான போதம் 10-வது சூத்திரம் "அவனே தானே ஆகிய அந்நெறி

ஏகனுகி'' என்று கூறுகிறது. ஆகவே, ஜீவன் கடவுளுடன் ஏகனுவது ஐகய நிலே என்று அறிகிரும. அதைததான் தட்சண மூர்த்தியின் சின்முத்திரை குறிக்கிறது ; கடவுளேக காட்டும் பெரு விரலும் சீவனேக காட்டும சுட்டுவிரலும சேர்நது ஓர் உருண்டை உருவமாக இருககும்போது இரண்டும வேருக இருப்பதாகவும் சொலல முடியாமலும், இரண்டும மீண்டும் பிரிக்க முடியாதபடி ஒன்ருய் விட்டது என்றும் சொல்லமுடியாமலும் இருப்பதால், இந்நிலே அதது விதநிலே (இரண்டு அறற நிலே) என்பா. அதனுல் தான், சுவாமி மலே திருப்புகழ் "நாவேறு பாமணத்த பாதார மே நினேதது. ..நீ வேறெனுதிருக்க நான் வேறெனுதிருக்க நேராக வாழ்வதற்கு உன் அருள் கூர'' என்று கூறுகிறது. சிவ வாக்கியரும "அவனும நானும் மெய்கலநது அனுபவிக்கும் அள விலே, அவனுமில்லே நானுமில்லே''என் கிருர். இராமலிங்க சுவாமிகள், "ஓங் கார அணேமீதே நான் இருந்த தருணம்... ஆங்காரம் ஒழி என்ருர்... அப் போது அவர் நானே நான் அவரோ அறிந்திலன்... ... உறைந்த அனுபவம் தோழி நிறைநத பரவெளியே'' என்று கூறுகிருர். ஆகவே, பரவெளியில நம் மனம் கலப்பதுதான் ஐக்கியநிலே. அநத பரவெளியைத்தான் நாம கடவுள் என் கிரும். "பெருவெளியைத தியானி'' என்று பாம்பன் சுவாமிகள் தகராலய ரகசியததில்(175-வதுபக்கம்)கூறியிருப் பதும் நோககத் தககது. "வெட்ட வெளிப் பெரும்பாழில் வீற்றிருக்கும பரம்பொருள நீ'' என்று சிவஞான வள்ளலார் கூறுகிருர். கிறிஸ்துவரோ அவர் சுவர்க்கததில் (Heaven) இருப் பார் என்பர். "வானததான் என்பார் என்க, மேல் தானததான் என்பார் என்க, என் இதயத்தான் என்பேன் யான்'' என்று காரைககால் அம்மை யார் "அற்புதத்திருவநதாதி''யில் கூறு கிருர். கடவுள் அண்டத்தில இருப்பது பொய், பிண்டத்தில் உளள இதய தக ராலயத்தில் பிரணவ ஆகாரமான ஒளி ரூபமாக இருப்பதாக யோகிகள் அறிந திருக்கிருர்கள்; அதனுல்தான் திருவாச கத்தில் "உய்யஎன் உள்ளத்தில் ஓங்கார மாய் நின்ற மெய்யா'' என்றும, பாம் பன் சுவாமிகள் செய்த குமார சுவாமி யததில் "ஓங்காரக் காமர் மெய்யா'' என் றும கூறபபட்டிருககின்றன. கடவுள்நம் முளளே 'நீவார தான்யத்தின (காட்டு நெல) நுனிபோல் நுண்ணிதும் பொன் போன்றதுமான ஒளி ஒன்றுண்டு ; அவ்வொளி சிகை மததியில பரமான்மா உளன்' (தகராலய ரகசியம் 105-வது பககம்); அணுவாய ஆனமா இதயத்தே தங்கி யிருககிருன் (தகராலய ரகசியம் 103, 150-வது பக்கம்). கடவுள் தன் தூல தேகமாகிய அண்டத்திலும் அகண்ட ஞானுகாசம் ஆக இருக்கிருர். (பரிபூரணுனநத போதம 18-வது பக் கம்) ஆகவே கடவுளேச சேர்வதற்கு வழி "இதய நடுவில் சோதி மயலிங் கததைத் தியானிப்பது என்று ஓர் ரிக் வேத உபநிஷத கூறுகிறது (தகராலய ரகசியம் 215-ம பக்கம்). இந்த லிங்கத்தைதான் சைவாகள்தம் கோயில் களில் பிரதிட்டை செய்துள்ளார்கள். திருஅண்ணுமலே குறிபபதும் இநத லிங்க வடிவைத்தான். இப்படிக் கடவுள் சொரூபத தன்மையை அறிபவர் அவ ருக்கு உருவம், அருஉருவம இருப்ப தாகச் சொல்லமாட்டார் (தகராலயரகசி யம் 246-ம பக்கம). முததியில ஜீவனேச் சேர்நதிருநத பாசம் ஆனந்த மயமாய் விடும் (பரிபூரணுனநதபோதம 124-ம் பக்கம). அப்போது ஜீவன் சிவனுடன் ஐககியமாவது என்னவென்ருல், அது தன் அகங்காரம் ஆகிய கண்டிப்பு நீங்கி அருளில் அழுந்தி ஒன்று இரண்டு என இயையா(த) சுத்தாத்துவித சித்தியில் நிற்றல் (பரிபூரணுனநதபோதம் 139). அப்போது காநததததில் ஊசி ஒன்றியிருப்பது போல், ஜீவன் சிவனேச் சேர்ந்திருப்பன் ; அதனுல்தான் "என் பெலாம்நெக்குருக... ஊசிகாந்தத்தினேக் கண்டு அணுகல போலவே ஓர் உறவை உன்னி உன்னி'' என்று தாயுமானர் கூறுகிருர். இது சீவன் முத்திநிலே. இதிலிருந்து முதிர்ந்து ஜீவன் பரமுத் தியை அடைநது அருவ மனமும் நீங்

கும் நிலையில் ஏற்படும் ஐக்யம் நான்கு வகைப்படும்:—சிவபோக ஐக்யம் (பெற்ருன் சாமபான் அடைந்தது), சிவ லிங்கஐக்யம் (அப்பர் அடைந்தது), ஞான ஆகாச ஐக்யம் (வாதவூரர் அடைந்தது) (தகராலய ரகசியம் 249-வது பக்கம்). இவ்வித ஐக்யங்களில் ஒன்றை அடைவதேமனிதப்பிறவியின் மேலான பயன் என்பதை உணர்ந்து "சேரக் கருதிசிந்தனையைத்திருந்தவைத்துசிந்தி மின்" (திருவாசகம்-யாத்திரைப்பத்து) என்ற அருண்மை வாக்குக்கிணங்க நடந்து, முதலில் உருவமனம் நீங்கிய சீவன் முத்திநிலையை அடைந்து, பிறகு அருவ மனமும் நீங்கும் பரமுத்தி நிலைப்படும் நிலையையும் அடைய நாம திருவருளை இடையறாது ஒருமி நாடி அறிவாகி நிற்க முயன்று உய்வோமாக.

---

# சுந்தர சுலோசனு

[திரு. டி. ஆர். சாரங்கபாணி, எம். ஏ.]

(தொடர்ச்சி)

"ஐயா! மன்னிக்கவேண்டும். நீர் மாத்திரம் திருடுந்தொழிலைக் கைக் கொண்டால், இவ்வாறு மாறு வேடம் பூண்டிடின், எந்தத் துப்பறிபவனுலும் உம்மைக் கண்டறிதல் ஒல்லாது. நீர் எனக்குக் கற்பித்த முறையிலேயே யானும் மாறு வேடம் பூண்டுள்ளேன். எனினும், உம்மைப்போல் வேடங் கொள்ள எனனுவியலவில்லை."

"முருக! நீ என்ன வேடம் பூண்டாலும் நான் உன்னைக் கண்டுபிடித்து விடுகிறேன் என்று நீ அஞ்சுகின்ருய். வேடம் பூண்டிருப்பினும் அதனைக் கண்டறியும் ஆற்றலை இறைவன் எனக்கு வழங்கியுள்ளான். ஆனல், நீ வேடமணியின் ஒருவரும் உன்னைக் கண்டறிதல் இயலாது."

"ஐய! இல்லத்தில் நீர் வேடம் பூண்டு வந்து நின்றதும் நானே அசந்து போய் விட்டேனே. வேடத்திற் கேற்றவாறு முகத்தையும் நடையையும் குரலோசையையும் நீர் மாற்றிக் கொள்கிறீர்."

"முருக! எத்தனைக் காதங்கள் வந்துள்ளோம்."

"அறுபது காதங்கள். இன்னும் பதினைந்து நிமிடங்களில் மங்களபுரியை அணுகி விடுவோம்."

"சரி முருக! நான் சில விஷயங்களைப்பற்றி யோசிக்க வேண்டும். நீ வேகமாக வண்டியை யோட்டு. சரியாக அரை மணிக்கு நாம் மங்களபுரியிலிருக்க வேண்டும்."

"அப்படியே ஆகட்டும் ஐய!"

மீண்டும் நிசப்தமே எங்கணும் சூழ்ந்தது. காரின் ஓடும் ஓசையல்லால் வேறோசைஅவ்விருளைக்கலக்கிற்றில்லை. இருள் ஒழியுஞ் சமயமும் நெருங்கி விட்டது. ஜயகுமாரன் காரில் பித்தேறியவனைப் போனும் விழித்துக் கொண்டு ஏதோ யோசித்துக்கொண்டிருந்தான். சந்திய நாதன் மிகவும் வேகமாக வண்டியை ஓட்டினன்.

## இதழ் 4.

### காரிருளில் கரிய உருவம்

சிற்றறிவைப் பேரறிவினிடத்து நின்றும் மறைத்து நின்றிடும் அறியாமையைப் போலும் காரிருள் உலகைச் சூழ்ந்து நின்றது. அதுகாலை "உரிமையுறையு"ளுள் நிசப்தமே குடிகொண்டிருந்தது. சுமார் மணி பன்னிரண்டிருக்கும். கீழ்க்கட்டிலுள்ள ஓர் அறையின் கதவு மெதுவாகத் திறக்கப்பட்டது. ஒரு கரிய உருவம் அக் கதவின் வாயிலாக மெதுவாக எட்டி இருபுறமும் நோக்கியது. சில விநாடிகளுங் கழிந்தன. உடனே அவ்வுருவம் அவ்வறையை விட்டு வெளிப்போந்து அவ்வறை

யின் கதவைச் சிறிதும் சந்தடி செய்யாது தாளிட்டுவிட்டுத் தன்னறைக்கு எதிர்ப்புறமாகப் பூட்டப்பட்டிருந்த ஓர் அறையை மெதுவாக அணுகியது. அணுகியதும் சிறிது நேரம் தயங்கி நின்றது. அரவம் ஒன்றுங் கேளாமையால், தன்னுடைய இடையிலிருந்து ஓர் ஆயுதத்தை யெடுத்துச் சிறிது நேரம் அவ்வறையின் கதவைத் திறக்கமுயன்றது. ஹாலில் மாட்டப்பட்டிருந்த கடியாரத்தின் ஓசை யல்லால் எங்கும் நிர்சப்தமே குடிகொண்டிருந்தது. மணியும் "டிங்-டாங்-டங்-டாங்" எனப் பன்னிரண் டரையைக் குறித்தது. மணியரவங் கேட்டவுடன் நமது கரிய உருவம் சிறிது திகைத்து வாளா நின்றது. சில நிமிடங்கள் கழிந்ததும்—"கிலிக்" என்ற சிறு சப்தங் கேட்டது. மீண்டும் அக்கரிய உருவஞ் சிறிது தயங்கியது. அடுத்த நிமிடம் அவ்வறையின் கதவு மெதுவாகத் திறக்கப்பட்டது. கரிய உருவமும் அவ்வறையுள் நுழைந்தது. நுழைந்தவுடன் அவ்வறையின் கதவு மீண்டும் உட்புறந்தாளிடப்பட்டது. உடனே கரிய உருவின் கரத்திலங்கிய ஒரு சிறு மின்சார விளக்கின் ஒளி அறையுள் பாய்ந்தது. அவ்வறையின் சாளரங்கள் மூடி உட்புறந்தாளிடப்பட்டிருந்தன. அச்சாளரங்களுக்கருகில் ஒரு மேஜையும் அவ்வறையில் நான்கு அழகிய நாற்காலிகளும் இருந்தன. மேஜைக்கெதிரில் இரண்டு அழகிய அலமாரிகள் விளங்கின. ஒரு சிறு மின்சார விசிறியும் இரண்டு அழகிய மின்சார விளக்குகளும் மேற்றலத்தில் இலங்கின. இயற்கை விநோதங்களை எடுத்தோதும் அழகிய சித்திரங்கள் ஆங்காங்குப் பொலிந்தன. இவைகளையெல்லாங் குறிப்பாலுணர்ந்த கரியவுருவம் முதன் முதலில் மேஜையை அணுகியது. அணுகியதும் மேஜையின் அறைகளை ஒவ்வொன்றாகத் திறக்க முயன்றது. ஆனால், அவைகள் எல்லாம் பூட்டப்பட்டிருப்பது கண்டு, மறுபடியும் தன் கரத்திருந்த ஆயுதத் தால் அவ்வறைகளைத் திறந்து மின்சார விளக்கினொளியால் ஆராய்ந்தது. அவ்வறைகளுள் எண்ணிறந்த புத்தகங்கள் அணியணியாக வைக்கப்பட்டிருந்தன. நம்முடைய உருவம் சிறிதும் சலியாது ஒரு நாற்காலியை அருகில் போட்டமர்ந்து அவைகளை யெல்லாந் துருவித் துருவி ஆராய்ந்தது; இறுதி அறையையும் அணுகியது. அவ்வறையிலிருந்த கடிதங்களையெல்லாம் ஆராய்ந்து முடிந்ததும், அக்கரிய உருவம் சிறிது நேரம் ஆழ்ந்த சிந்தனையிலிருப்பது போலும் வாளா நின்றது. உடனே இறுதி அறையிலிருந்த கடிதங்களை யெல்லாம் எடுத்து மேஜையின்மீது வைத்துவிட்டு மீண்டும் அம்மேஜை அறையுள் நோக்கியது. அறையுள் ஒரு பெரிய கடிதம் இடப்பட்டு அக்கடிதத்தின்மீதே மேலோதிய கடிதங்கள் வைக்கப்பட்டிருந்தன. அக்கடிதத்தைக் கண்டவுடன் நமது கரிய உருவம் அக்கடிதத்தையும் வெளியிலெடுத்தது. அப்பெரிய கடிதத்திற்கடியில் ஒரு சிறு உறையிருந்தது. அவ்வுறையை ஆவலுடன் நமது உருவம் வெளி யெடுத்துப் பிரித்து நோக்கியது. அதில் சில கடிதங்களிருந்தன. கரிய உருவத்தின் தலையும் ஆநந்தத்தால் ஆடியது. கை விளக்கினொளியால் ஒரு கடிதத்தைப் பிரித்துப் பார்த்தது. அதில் பின் வருமாறு வரையப்பட்டிருந்தது:—

o ச் வீ 2 பு டி உ ம் ட் 2 த செ தி.
"10"

மற்றொரு கடிதத்தையும் பிரிக்க, அதில்,

ன் யா ட கி வி போ ல் ன் ன் யா ரு
வா வா றே தி ளு டு ச. "5"

எழுதப்பட்டிருப்பது கண்டு மீண்டுமொரு கடிதத்தைப் பிரிக்க, அதில்,

ன் து ரு றி ளி போ றே கி ங் வ ன் ரு
ன் ச. "6"

எனவும், எஞ்சிய கடிதத்தில்,

சு ே ம ா அ ங் க ரு த ன ை ம ர ா
தி லா நீ க் ச உ க த்
ட வு தி னே ம் ல் கீ த எ ழ் வ ன் க்
ற ஊ க வே ச் ண் ண் ச ட டா ங் வி ம்
ண்கசமும்.

ரியு 6 மைள் O யுசா உ றையிலே. "3" எனவும் வரையப் பட்டிருப்பது கண்டு அக் கடிதங்களை யெல்லாம் மடித்து உறையில் வைத்துத் தன்னுடைய சட்டைப் பையிலிட்டுக் கொண்டு, தான் திறந்த அறைகளை யெல்லாம் மீண்டும் பூட்டி விட்டு அறையை நீத்து வெளிப் போந்து அறையின் கதவையும் முன் போல் பூட்டித் தன்னறை அடைந்து உட்புறந் தாளிட்டு நமது கரிய உருவம், அறையின் சாளரங்களை யெல்லாம் மூடிவிட்டு அறையுள்ளிருந்த மின்சார விளக்கை விசை யழுத்தியேற்றியது. அவ்விளக்க கொளியான் நமது கரிய உருவின் திருக்கோலம் இனிது விளங்கியது. உச்சி முதல் உள்ளங்கால் வரை கருநிறமே இலங்கியது. முகமும் கருவுறையான் மூடப்பட்டே கிடந்தது. கண்களுக் கெதிரில் இரு பெருந் துவாரங்கள் தோன்றின. விளக்கை யேற்றியதும் நமது கரிய உருவம் தன் உண்மை உருவைத் தன்னுடைய கரிய அங்கியைக் கழற்றி எறிந்து விளக்கியது. மதனகோபால் என்னும் பெயருடன், சந்திர சேகரப் பிரபுவின் பழைய நண்பராக "உரிமையுறையு"ளில் அன்று காலை வந்திறங்கிய ஐய குமாரனே அக் கரிய உருவமென அன்பர்கள் அறிவார்கள். மோகனசுந்தரம் திடீரென மறைந்ததும், வீரத்தின சின்னங்களாக அளிக்கப்பட்ட வாளும் மாலையும் களவு போனதும், சந்திர சேகரப் பிரபுவின் வேண்டுகோளான் ஐயகுமாரன் மிதுன புரி போந்ததும் வாசகர்கள் மறந்திரார்கள். "மோகன சுந்தரனே திருடன்" எனச் சந்திர சேகரப் பிரபு எண்ண, உண்மையைக் கண்டறிய மாறு வேடம் பூண்டு அங்குப்போந்த ஐயகுமாரன் அன்றிரவே தன்னுடைய துப்பறித் தொழிலைத் தொடங்கி விட்டான். தன்னைக் குறிப்பறியாக் கரிய உருவமாக மாற்றிய கரிய அங்கியை வீசியெறிந்ததும ஐயகுமாரன் அறையிலிருந்து தான் எடுத்து வந்த கடிதங்களை மறுபடியும் நோக்கினன். முதன் முதலில் அவனுக் கொன்றும் விளங்கவில்லை. அதுகாறும் கள்ளனைப்போலுங் கள்ளவேடம்பூண்டு இரவிலாராய்ந்து இறுதியில் கண்டெடுத்த கடிதங்கள் தமிழெழுத்துக்களில் எழுதப்பட்டிருப்பினும் அவைகள் இரகசியக் கடிதங்களேயா மென்னும் பேருண்மை அவனுக் கறுகாலே புலனாயது. தன்னுடைய துப்பறிதலெனா முன் முறையில் இத்தகைய இரகசியக் கடிதங்களைக் கண்டு உள்ளுறையை யோர்ந்து வெற்றியுடன் போந்த ஐய குமாரன இக்கடிதங்களைக் கரங்களில் தாங்கி ஆழ்ந்த யோசனையுடன் கடிதங்களை ஆராயலானன். சில நிமிடங்கள் கடந்தபின் ஒவ்வொரு கடிதத்திலும் இருகால்களுக் கிடையில் "10" "5" "6" "3" என்னும் எண்கள் பொலிவது கண்டான். ஒரு கால் அவ்வெண்கள் இரகசியக் கடிதத்தை வகுத்தறியும் வழியாக விருக்குமோ வென்றும் எண்ணினன். "10" என்பது பத்தாவது எழுத்தைக் குறிக்குமோவென்றும் எண்ணினன். முதல் கடிதத்தை முதலிலிருந்து பத்துப் பத்தெழுத்தாக எண்ணிவர, ஒரு கால் கடிதத்தின் இரகசியத்தையுணர ஒல்லுமோவென நினைந்தான். முதல் கடிதத்தின் எழுத்துக்களைப் பத்துப்பத்தாக எண்ணிவந்தான். அப்படி எண்ணி வந்த எழுத்துக்களை யெல்லாம் ஒரு கடிதத்தி லெழுதிய போது "2220 தம்புசெட்டிவீதி" என்னும உண்மை விளங்க, ஐயகுமாரனின் முகம் மலர்ந்தது. அடுத்த கடிதத்தை நோக்கினன். "5" என்னும் எழுத்தைக் கண்டவுடன அக்கடிதத்தில் வரையப்பட்டிருந்த எழுத்துக்களை யெல்லாம் ஐந்தைந்தாக எண்ணி வரைய "வியாதியால் வருந்துகின்றேன், பொருளுடன் வா ச" என்ற உண்மை யறிந்ததும் ஆனந்தக் கடலிலாட, ஐயகுமாரன் அதே முறையில் ஒவ்வொரு கடிதத்தையும, அவ்வக் கடிதத்தில் குறிக்கப்பட்டுள்ள எண்களின் உதவியால், இரண்டு இரகசியக் கடிதங்களை யோர்ந்து அவை முறையே "பொருளின்றி வருந்துகின்றேன்." எனவும், "அருமை மோகனசுந்தர! நீ உடனே கீழ்க்கண்ட விலாசத்தில் என்னைச் சந்திக்சவும்; தவற வேண்டாம். சண்முகம்,

60, உரிமையுறையுள் சாலை'' எனவும் வரையப்பட்டிருப்பதைக்கண்டதும் ஐய குமாரனுடைய முகம் மலர்ந்தது. உண்மையை உய்த்துணர ஏற்ற ஏதுக்கள் தனக்குக் கிடைத்தமையைக் கருதி மனமகிழ்ந்தான். இக்கடிதங்களை ஓர்ந்ததும் மோகனசுந்தரம் திடீரென மறைந்த தன் காரணத்தை யுணர்ந்தா னெனினும், அவன் உண்மையில் களவாடி யிருப்பனே வெனவும் சிறிதெண்ணினன். இனி அவனுடைய இருப்பிடத்தைக்கண்டறிதல் வேண்டுமெனவும், கள்ளனைக் கண்டதற்குரிய முறைகளை உடனே கையாளவேண்டுமெனவும் உன்னினன். கடிதங்களில் " சண்முகம் " என்ற பெயரை யறிந்ததும், சண்முகசுந்தரம், காந்தாவின முதற் கண்மணியாகிய சண்முகம், சுமார் ஓராண்டிற்கு முன்னர், தூர்த்தருடன் சேர்ந்து தூர்த்தனாக மாறிய சண்முகசுந்தரம், சந்திரசேகரப் பிரபுவின் பல் வேறு முயற்சிகளாலும் காணற்கியலாத சண்முகசுந்தரம், உயிருட னிருக்கின்றானென ஐயகுமாரன் உணர்ந்ததும் புன்முறுவல் கொண்டான். கடிதங்களின் போக்கையும் மோகனசுந்தரத்தின் செயலையுங் கருதி ஐயகுமாரன், மோகனசுந்தரமாயினும், இன்றேல் சண்முகசுந்தரமாயினும், விலை மதித்தற்கரிய வாளையும் வைர மாலையையும் களவாடியிருத்தல் வேண்டுமெனக் கருதினன். மணியும் இரண்டடித்தது. உடனே ஐயகுமாரன் அக்கடிதங்களை யெல்லாம் மடித்துத் தன்னுடைய மேஜையில் வைத்துப் பூட்டிவிட்டு, அறையுள் எரிந்து நின்ற விளக்கை அணைத்து விட்டு உறங்கச் சென்றான். எங்ஙனும் காரிருள் சூழ்ந்தது.

# காதல் அறியுமோ கட்டு

[திரு. B. C. லிங்கம்]

அயவணம் திரியும் அகன்ற பூமி
அயல்மனை யில்லா அறல்மணக் காடே
பாலை வனமதில் பரப்புறு மணலில்
காலை நேரம் கதிர்படு முகத்தோன்
ஓர்சிறை ஒதுங்கி ஒடுங்கா மனமொடு
காதலற் பிரிந்த கன்னிகை யொப்பச்
சீதமில் மணலிற் சிற்சில பொறிப்போன்
" வாளென விதிர்க்கும் வளிவழங் காரிடைப்
பாழாய் எழுதுவோய்! பாங்கனே! நானென''
என்றனை நோக்கி " என்கா தலியென ''
உன்கா தலியின் ஓர்பெயர் தானும்
சென்மமுள் ளளவும் செருக்கின் றுயா
" அதைநீ அறிந்திலை '' அம்மணி யாட்டியின்
உயர்வா யுள்ள ஒருபெயர் தானும்
நயப்புடைத் தான நால்மூன் பிறவியும்
பொறித்தே னுயினும் பொறுக்கும் தகையதோ
விருப்பிலா விருப்புடன் விளம்பிய காதலின்
வரம்பில் முறையினை விய்ந்திற் சென்றனன்.

# உடல் நுட்பம்

[சுத்தானந்த பாரதியார்]

## I

இவ்வுடல் ஓர் உலகம்; இது ஐம்பூத மாளிகை; நடமாடுங் கோயில். இதன் உள்ளத்தில் சிற்சபையும், உச்சியில் கைலையும் உள்விழிக்குத் தெரியும். உள்ளத்தில் தகராகாயம், சிதம்பரம் உள்ளது; அதில் அம்பலவாணன் இன்ப நடம் புரிகின்றான். இதில் மூலாதார சக்தி கனறுகின்றாள். உச்சித் தாமரையில் சிவசக்தி யொளிர்கின்றது. இதன் நாடிகளை மாசகற்றினால் என்றும் இளமையும், பொலிவும், ஆயுளும், வலிமையும் வளர்கின்றன. சூடு, ஒளி, காந்தம், மின்சாரம் எல்லாம் இவ்வுடலிலுள்ளன. இவ்வுடற் கோயிலின் வியன் காட்சிகளும் நுட்பங்களும் எண்ணிறந்தன.

### உ. ஐஞ்சுவர் மாளிகை

இக் கோயிலுக்கு ஐந்து மதிற்புறங்கள் உள்ளன. அதாவது நாம் உடலென்று கூறுவது ஊனுடல் மட்டுமன்று. உடலுக்குள்ளிட்டு ஐந்து உடல்கள் உள்ளன. (க) ஊனுடல் (உ) உயிருடல் (ந) நுண்ணுடல், மனோமய சரீரம் (ச) அறிவுடல் (ரு) இன்பவுடல். இவ்வைந்துஞ் சேர்ந்த வுடலையே கோயில் கொண்டு இறைவன் சக்தி, உயிருக்குயிராக எங்கும் உலவுகின்றாள். இறைவன் சக்தி (சிவசக்தி)யின் ஆடரங்கமே இவ்வுடல். உலகு அனைத்தும் சக்தி, அருள்; அருள் மயமாகவே இறைவன் எங்கும் பரவி அளவிலா விளையாட்டயருகின்றான். உணர்ந்தோ, உணராமலோ ஒவ்வோருயிரும் இறைவனுடலாக இணைந்துள்ளது. இவ் விணைப்பின்றி எதற்கும் இருப்பில்லை; அனைத்தும் சிவசக்தியால், சிவசக்தியில் இயங்கும் உண்மையைக் காணவே நீண்ட காலமாக அறிவுநூல் (Science) ஆராய்ச்சிக் கோல்பிடித்து எங்கெங்கோ தட்டுத் தடுமாறிச் சென்றுகொண்டிருக்கிறது. இதுகாறும் உடற் கோயிலின் புற மதிலையே அது எட்டிப் பார்த்துள்ளது. மனத்தை உள்முகப் படுத்தி, யோகவிழியாற் காணும் உத்தமர்க்கே உடல் மாளிகையின் ஐம் புறங்களும் அதன் நடுவே சிவசக்திக் காட்சியும் புலனாகும்.

### ந. சரீர யோகம்

உடலறிவும், உடலுறுதியும் ஒவ்வோர் ஆணும் பெண்ணும் எய்த வேண்டிய உரிமையும் கடமையுமாகும். உடலை ஏற்ற முறையில் போற்றுதல் ஒரு யோகமாகும். இந்தச் சரீரத்தின் நுட்பத்தையே இக் கட்டுரையில் ஆராய்வாம். மூலாதாரமே உயிர்மாளிகையின் அடிப்படை. உடலுறுதி உயிரின்பந் தரும்; உடல் நலிவு உயிருக் கின்னலாகும். "காயம்பொய், காற்றுப்பை," என்று எவரும் இதைப் பேணாது விட்டுவிடக் கூடாது. அப்படித் தற்போத மிழந்து, உடலை முற்றும் மறந்த நிலை எளிதில் எல்லாருக்கும் எய்தாது. ஆதலின் பெரும்பாலோர் உடலைப் பேணி உறுதியாக்கவே விரும்புவர்; இதைப்பற்றி விரிவு வேண்டுவதில்லை. ஆதலின் இவ்வூனுடல் எப்படிக் கட்டப்பட்டுள்ளதென்று முதலில் ஆராய்வாம்.

### ச. ஊனுடலமைப்பு

ஊனுடல் பலகோடி கண்ணறைகளால் (Cells) அமைந்தது. ஒவ்வொரு கண்ணறையிலும் வெண் கரு போன்ற உயிர்த்துளி (Proto plasm) நிரம்பியுள்ளது. இவ்வுயிர்த்துளி 1/500'' அங்குலத்திலும் நுண்ணியது. இது கரிக் காற்று (Carbon dioxide), நீர்க்காற்று (Hydrogen), உயிர்க் காற்று (Oxygen), உப்புக் காற்று (Nitrogen) முதலியவற்றால் ஆனது. ஐம் பூதங்கள் சேர்ந்து உடல் உருவாகிறது; ஐம்பூதப் பிரிவால் உடல் குலைகிறது. எதுவும் அழிவதில்லை. ஒன்றிய பூதங்கள் பிரிந்து அதது அததன் இனத்தொடு கலக்கிறது. அழிவது வடிவு; வடிவு, பொருளன்று,

எலும்பு, தசை, உணவுறுப்புகள் (Alimentary canal) குருதிக் குழாய்கள் (Blood vessels), காற்றுக் கருவிகள் (Respiratory organs), நரம்புக் கருவிகள் (Nerves) புலன்கள் (Senses) இவை உடலின் கூறுபாடாகும். இவையமைந்த ஒரு நீராவி யந்திரம்போன்றதுஉடல். இந்தயந்திரம் வேலைசெய்ய, நல்ல காற்று, நீர், உணவு, உட்புறத் தூய்மை வேண்டும். இந்த அற்புத யந்திரத்தின் கூறுகளைப் பகுத்துப் பகுத்து ஆராய்வாம்.

### ௫. எலும்புகள்

நம்முடலுக்கு வடிவைத் தருவது எலும்புகள். எலும்புகளில் சுண்ணம் (Calcium), ஒளிக்கட்டி (பாஸ்வரம, Phosphorous) ஆகிய மண்வகைப் பொருளும், ஒரு பசைப் பொருளும் (Geletine) உள்ளன. எலும்பில் 2/3 சுண்ணம. ஒரு மஞ்சளை எலும்பில் தடவினால் செந்நிறங் காட்டும். இது சுண்ணம் இருப்பதற்கு அறிகுறி. தலை, முண்டம, கைகால் என உடல் முப்பிரிவானது; இம்முப்பிரிவுகளிலும் 208 எலும்புகள் உள்ளன; பற்களைச் சேர்த்து 240. எலும்புகள் தசை நார்களால் (Ligaments) பிணைக்கப்பட்டுள்ளன. முதுகெலும்புத் தொடர்பே அனைத்திற்கும் ஆதாரம். பூச்சி, புழு, நத்தை முதலியவற்றிற்கு முதுகெலும்பில்லை. எலும்பின் வகை தொகை, விவரங்களை யறிக:—

எலும்பு வகை தொகை

| உறுப்பு | வகை | தொகை |
|---|---|---|
| 1 தலை ... | மண்டை (Cranium) ... | 8 |
| | முகம் (Facial) ... | 14 |
| | பல் ... | 32 |
| 2. முண்டம் ... | முதுகெலும்பு (Vertebral Column) ... | 33 |
| | மார்பெலும்பு (Sternum) ... | 1 |
| | விலாக்கூடு (Ribs) ... | 24 |
| | தோள்பட்டை (Scapula) ... | 2 |
| | இடுப்பு (Pelvis) ... | 2 |
| | இருப்பிடத்தெலும்பு ... | 2 |
| 3. கை ... | முண்டா எலும்பு (Humerus) ... | 1 |
| | முழங்கையெலும்பு (Radius, Ulna) ... | 2 |
| | மணிக்கட்டு ... | 8 |
| | புறங்கை ... | 5 |
| | விரல் எலும்பு ... | 14 |
| மற்றொரு கை... | | 30 |
| 4. கால் | தொடை யெலும்பு (Femer) ... | 1 |
| | முழங்கால் ... | 2 |
| | சிப்பி (Patella) ... | 1 |
| | கால் மணிக்கட்டு ... | 8 |
| | குதிக்கால் (Tarsals) ... | 5 |
| | விரல்கள் ... | 14 |
| 5. மற்றொரு கால்... | | 31 |
| | ஆகமொத்தம் ... | 240 |

### சு. தசை (Muscle)

அசைவெல்லாம் தசை வலிவால். தசை, எலும்பின்மேல் மூடிக்கொண்டிருக்கிறது. உறுப்பின் உழைப்பிற்கேற்றபடியே தசையின் தடிப்பும் இயல்பில் அமைந்துள்ளது. (உதாரணம் கைகால்கள்). நமது உடலில் 555 தசைகள் உள்ளன. உடலில் 41% தசை. தசையில் 1/4 குருதி; 3/4 நீர்ப் பண்டம். கைகால் தசைபோன்றன நமக்கு உட்பட்டவை (Voluntary muscles). நெஞ்சு, ஈரல் இறைப்பைத் தசைகள் தாமாகவே வேலை செய்வன; இவை நமக்கு உட்படாத் தசைகள் (Involuntary muscles). தலையில் 82, கழுத்தில் 71, முண்டத்தில் 174, கைகளில் 112, கால்களில் 116 தசைகள் உள்ளன. தசை வலிவு உடற்பயிற்சியால் பெருகும்; தசை வலுக்கக் குருதி விரைந்து பாயும்; சூடுபிறக்கும். கருமான், உழவன் முதலிய உடலுழைப்பாளிகள் தசைகள் பிடிப் பிடியாக உறுதியுற் றிருப்பதைக் காணுங்கள். தளுக்கு மினுக்குடன் மேனி வாடாமல் [illegible]யும் நாகரிக உடல்கள் தொந்தியும் தொப்பையுமாகத் தொங்கித் தொள தொளவென் றிருப்பதைப் பாருங்கள். ஒழுக்கம், உழைப்பு, போதிய உணவு, நல்ல உறக்கம், நல்ல சிந்தனை, தூய வாழ்வு இவையே உடலுறுதியும், தசை வலிவும் பயக்கும். கசரத்து, ஓட்டம், விறகு வெட்டல், ஏற்ற மிறைத்தல், நீச்சடித்தல், குஸ்தி, தோட்ட வேலை, பந்து விளையாட்டு, ஹடாஸனங்கள் முதலியவை தசைவலிவு தருவன.

### எ. தோல்

நமது தசையைக் கொழுப்பும், கொழுப்பைத் தொய்யலாகத் தோலும் மூடிக்கொண்டிருக்கின்றன. தோல் மூன்றடுக்குகளுள்ளது. (1) அடித்தோல் (Dermis) இதுவே உண்மைத் தோல். (2) நிறத்தோல் (Basement membrane) இதுவே தோலுக்கு நிறஞ் சேர்ப்பது. (3) உரிதோல் (Epidermis). உடல் நலமுள்ளவன் தோல் வழுவழுப்பும், ரசப் பசையுங் கொண்டு, பருசிரங் கற்றதாயிருக்கும். அடித்தோல் மயிரிழை, நரம்பு, நாடி நாளங்களை நிறைந்த நுண்ணிய வலை போன்றது. சிறிது காயம்பட்டாலும் இதினின்று குருதி கசியும். இதில் வேர்வை யுருண்டைகளும் (Sweat glands), நிணவுருண்டைகளும் (fat glands) உள்ளன. இந்த நிணவுருண்டையினின்று ஒரு கொழுப்புப் பண்டம் தோலை வறண்டுபோகாது பசப்புறச் செய்கிறது. நிணவுருண்டையில் கொழுப்பு மிகுந்தால் மேலே பருக்கள் வெடிக்கும். அவற்றைப் பிதுக்கினால் கொழுப்பாணி வெளிவரும். தலை, காது, கன்னம் மூக்கு இவ்விடங்களில் நிணவுருண்டைகள் மிகுதி. தோலில் பல குழல்களுள்ளன. நாம் தடவிக்கொள்ளும் எண்ணெய் அதன் மூலமாகவே குருதியிற் கலக்கிறது. அடித்தோலிலுள்ள சிறுசிறு பைகளினின்று மயிர் உண்டாகிறது. நிறத்தோல் மிக மெல்லியது; அதன்மேல் பல நிறமான ஒரு பொருள் படிந்துள்ளது. இது அமெரிக்கருக்கு சிவப்பாகவும், ஐரோப்பியருக்கு வெண்மையாகவும், சீனருக்கு மஞ்சளாகவும், ஆப்பிரிக்கருக்குக் கருமையாகவும் இருப்பதால் அவர்கள் தோல் வருணமும் அதற்கேற்றபடியுள்ளது. சோற்றுக் கற்றாழைமேல் உரிக்கத் தக்க மெல்லிய காகிதத்தகடு போன்றது மேல்தோல். சிரங்குகள் ஆறிய பிறகு உரிவது மேல்தோல். இதில் நாடி நாளம், உணர்வு முதலியன இல்லை. இது அடித்தோலுக்குக் காவல். நரம்புகளாற் பின்னலாயிருப்பதால் தோல் குளிர் வெப்ப முணர்கிறது. குருதியினின்று வேர்வை முதலிய கழிவுகளை வெளியேற்றி, சிறிய மயிர்க்காலின் வழியே உயிர்க் காற்றை வாங்கி இரத்தத்திற் கலக்கச் செய்வதே தோலின் வேலை. ஆதலின் தோலைத் தூய்மையாகவும், காற்றோட்டமாகவும் வைத்துக்கொள்ளுதல் இன்றியமையாதது. வேர்வை செந்நீர்க்கழிவு. வேர்வை யுருண்டை $\frac{1}{4}$" நீளமுள்ளது. ஓர் அங்குலத்திற்கு

500 முதல் 1500வரை வேர்வைத் துளைகள் உள்ளன. உடல் முழுதும் 2500000 வேர்வை யுருண்டைகளுள் ளன. அதன் வேர்வைக் குழாய்களை நீட்டினால் சுமார் 10 மைல்களை எட்டும். வேர்வை கசியச் சூடு தணியும். இல்லை யேல் மூத்திர கோளங்களுக்கு அதிக வேலை தரும். வெளிவந்த வேர்வை தூசி படர்ந்து உடலில் அழுக்குப் படிகிறது. இதை நன்றாகத் தேய்த்து நீராடி நாள்தோறும் தோலை மாசகற்ற வேண்டும். இல்லையேல் வேர்வைக் கண்கள் அடைபட்டு, சூடேறி, சொறி சிரங்குகள் வெடிக்கும். களிமண், பீர்க்கைப்பிற்றி, கடலைமா, நெய்க் கொட்டாங்காய், மஞ்சள், சண்பகப்பூ சேர்ந்த தூள், தேங்காய்ப் பால், வில்வப்பழம், அரைத்த ஆவாரை இலை முதலியவை மிகவும் நல்ல (சோப்பினும் பன்மடங்கு உயர்ந்த) அழுக்கு நீக்கிகளாகும். தேங்காயெண்ணெய், காஸ்டிக் ஸோடா (Caustic Soda), சோடா உப்பு, சுண்ணாம்புத் தண்ணீர் இவற்றைக் காய்ச்சிப் பாகுபதத்தில் மணங்கள் கூட்டி அச்சுகளில் வார்க்கப்பட்டதே சோப்பு. மிக உயர்ந்த சோப்புகள் கடலைப்பிண்ணாக்கு கலந்தவை. இரண்டு வேளை தேய்த்துக் குளித்தால், தோல் அழகுறும். பரு, சிரங்கு, இரத்தக் கட்டி, தேமல் எல்லாம் தோலை அழுக்குறுத்துவதால் வரும்பிணிகள்.

# இடியேறு

## காங்கரஸ்

காங்கரஸைக் கல்கத்தாவில் கூட்டுதற்குப் பண்டித மாளவியா உள்ளிட்டோர் செய்த முயற்சி பாழ்படுமென்று நாம் எதிர்பார்க்கவில்லை. அரசாங்கத்தின் ஐயம் இன்னும் நீங்கவில்லைபோலும்! சட்டமறுப்பு இயக்கத்தின் செல்வாக்கு இன்னும் நாட்டில் உண்டு என்று அரசாங்கம் கருதுவது தவறு. சட்ட மறுப்பை வெறுப்போர் தொகை நாளுக்குநாள் பெருகி வருதலை அரசாங்கம் உணர்ந்து நடத்தல் முறைமை. கல்கத்தாவில் காங்கரஸ் நடைபெற அரசாங்கம் இணங்குமாயின், அதன்கண் சட்ட மறுப்பு நிறுத்தத் தீர்மானம் நிறைவேறுமென்பதில் சிறிதும் ஐயமில்லை. லார்ட் விட்டன் கூறியவாறு சட்ட மறுப்பில் மக்களிடை ஒருவித சோர்வு ஏற்பட்டிருத்தல் உண்மை. அவ்வுண்மையை வெளியிடச் சிலர் அஞ்சுகிறார். காந்தியடிகள் இப்பொழுது விடுதலை அடைந்தாலும், சட்ட மறுப்பில் தலைப்படார் என்பதற்குப் பல அறிகுறிகள் தோன்றியுள்ளன. அவைகளை அரசாங்கத்தார் கவனித்தே வருவர் என்று நம்புகிறோம். உள்ள நிலையை அரசாங்கத்தார் நன்கு உணர்ந்து கல்கத்தா காங்கரஸ் நடைபெற இடந் தருவது நலம். காங்கரஸ் ஒத்துழையாமையை விடுத்து ஒத்துழைப்பில் தலைப்படுமென்பது உறுதி.

## தலைவர்கள் கடமை

காங்கரஸ் தலைவர்களில் சிலர் சிறைக்கோட்டத்திலிருக்கிறார்; சிலர் வெளியிலிருக்கிறார். வெளியிலுள்ள தலைவர்கள் நெஞ்சம் ஒத்துழைப்பு வழியே நடந்து கொண்டிருக்கிறது. அவர்கள் தங்கள் கருத்தை அந்தரங்க சம்பாஷணையில் வெளியிட்டே வருகிறார்கள். அந்தரங்கமாக வெளியிடும் கருத்துக்களைப் பகிரங்கமாக வெளியிடுவதால் என்ன முழுகிப் போய்விடும்? தற்போது நாடு சட்ட மறுப்புக்குச் சித்தமாயில்லை என்பது வெள்ளிடைமலை. நாட்டின் வழி நிற்கவேண்டுவது தலைவர்கள் கடமை. தலைவர்கள் தங்கள் ஒத்துழைப்பு நாட்டத்தைப் பகிரங்கமாக வெளியிட்டால் அரசாங்கம் காங்கரஸ் நடைபெற இடந் தருமென்று நம்புகிறோம்.

## வெள்ளைக் காகிதம்

வெள்ளைக் காகிதம் வெளி வந்துவிட்டது. அதைப்பற்றி அறிஞர்கள்

கருத்துக்களை வெளியிட்டு வருகிறார்கள். கவர்னர் ஜனராலுக்கும் கவர்னர்களுக்கும் வழங்கப்பட்டுள்ள அதிகாரங்கள் ஜன நாயக முறைக்குத் துணை செய்வன அல்ல என்றும், பாதுகாப்புகள் ஏராளமாக அமைக்கப்பட்டிருக்கின்றன என்றும் எங்கணும் பேசப்படுகின்றன. வெள்ளைக் காகிதம் வெளிவந்த பின்னைப் பேசுவதால் என்ன பயன்? அக்காகிதம் வெளி வருதற்கு முன்னரே ஒற்றுமைக் குறிகளைத் தேசத்தார் காட்டியிருத்தல்வேண்டும். வகுப்புப் போர்களும், தலைவர் போர்களும், பொறுப்பற்ற செயல்களும், பிறவும் நடமாடும் தேசம் இந்தியா என்பதைப் பிரிட்டிஷ் இராஜதந்திரிகள் நன்கு உணர்ந்து நடக்கிறார்கள். தேசத்தில் வகுப்பு வாதம் உள்ளவரை ஜன நாயகம் தாண்டவம் புரிதல் அரிது. பல திறக் குறைகளுடன் வெள்ளைக் காகிதம் வெளிவந்துள்ள இந்த நேரத்திலாதல் வகுப்புவாதம் ஒடுங்குகிறதா என்பது கவனிக்கத்தக்கது. வகுப்புவாதம் உள்ளவரை பொறுப்பாட்சி பெறுதல் அருமை என்பதை உணர்ந்து தேசத்தார் இனி யாதல் நடப்பாராக.

## “சுந்தர காந்தம்”

இப்பெயர்வாய்ந்த நூலொன்று நமது பார்வைக்கு வந்தது. இஃதொரு பெண்மணியால் எழுதப் பெற்றதைக்குறித்து மகிழ்வெய்துகிறோம். பெண்மணிகளால் எழுதப் பெறும் நூல்கள் பல நாட்டிடைப் பெருகுதல் வேண்டும். ‘சுந்தர காந்த’த்தின் கதைப் போக்கு நன்றாயிருக்கிறது. சம்பாஷணைகள் நன் முறையில் அமைந்திருக்கின்றன. மக்கள் இயல்புகள் சில விடங்களில் இயற்கையாகவே உருப் பெற்றிருக்கின்றன. காதல், வெற்றியுடன் முடிந்திருப்பது போற்றற்குரியது. நூல் எளிய நடையில் எழுதப் பட்டிருக்கிறது. தாய் மொழிப் பற்று மேலீட்டான் இந்நூலை எழுதி உபகரித்த ஸ்ரீமதி - ஞா. ப. சதானந்தம் அம்மாள் அவர்கட்கு நமது நன்றி உரியதாக. விலை : ரூபா. 1-8-0. விலாசம் : ஞா. ப. சதானந்தம் அம்மாள், காட்டிலாக்கா ரேஞ்சாபீசர் பங்களா, கிருஷ்ணகிரி, சேலம் ஜில்லா.

## ஜெர்மெனி நிலை

ஜெர்மெனியில் தோன்றிய கலைகளும், தொழில் முறைகளும், வேறு அதிசயங்களும் உலகத்துக்குப் பயன் பட்டு வந்தன. அத்தகைய ஜெர்மெனி ஐரோப்பாப் போருக்குப் பின்னைத் தன்னிலையினின்றும் குலையலாயிற்று. ஐரோப்பாப் போருக்கு முன்னே ஜெர்மெனி முடியாட்சியைப் பெற்றிருந்தது. அப்போருக்குப் பின்னே அது குடியரசை ஏற்றது. இப்பொழுது ஜெர்மெனி உள்நாட்டுக் குழப்பங்கட்கு இரையாகி வருதல் கண்கூடு. ஹெர் ஹெட்லர் என்பவர் பிரதம மந்திரியாக அமர்ந்து சர்வாதிகாரஞ் செலுத்தி வருகிறார். பொதுவுடைமைக் கட்சிக்காரர்கள் ஜெர்மெனியில் வேட்டையாடப்படுகிறார்கள் என்று சுருங்கச் சொல்லலாம். பொது உடைமைக் கூட்டத்தாரிடைச் சில நலங்களிருப்பினும் பல தீங்குகளுண்டு. அவர்கள் கடவுளுண்மையை மறுக்கிறார்கள்; மூர்க்கத்தில் உறைந்து நிற்கிறார்கள்; கருத்து வேற்றுமை யுடையவர்களைச் சுட்டுக் கொல்கிறார்கள். இக்கொடுஞ் செயல்களைப் பொது உடைமைக் கூட்டத்தார் முற்றுந் தொலைத்தாலன்றி அவர்கள் முன்னேற்றம் அடைதல் அரிது. பொதுவுடைமைக்காரர்கள் ஜெர்மெனி பார்லிமெண்டைக் கொளுத்தியதன் பயனை இப்பொழுது அனுபவித்து வருகிறார்கள். மூர்க்கத்தில் உறுதியுடைய கூட்டத்தாரை அடக்க ஹெர் ஹெட்லரும் அவரைச் சேர்ந்தாரும் மூர்க்கத்தையே கையாள்கிறார். அது தவறு. “கொலைகொலையையே பெருக்கும்; அன்பு அன்பையே பெருக்கும்” என்பதை உணர்ந்து ஹெர்ஹெட்லர் அன்பு வழியில் நடந்து ஜெர்மெனியின் பண்டைப் பெருமையைக் காப்பாராக.

# நவசக்தி

‘எவ்வுயிர்க்கும் அன்பாயிரு’ ‘என்கடன் பணிசெய்து கிடப்பதே’

சிலம்பு ௧௫ ஸ்ரீமுக ௵ சித்திரை ௴ பரல் ௪

## பூகோள விலாசம்

(தொடர்ச்சி)

துண்டப்புள் ளோடு தொடருஞ் சமவருத்தங்
கண்டமிவை யைந்தின்கீழ்க் காண்கிறது—கொண்டவழல்
போலிருக்குஞ் செங்கலுடன் பொன்னே யுழுதசை
மால்சேர் திரபுவுச்சு வாசமுமே—சாலவிவை
யஞ்சா மிதன்கீ ழடர்நிருச்சு வாசமுடன்
றுஞ்சுந் துருட்டஞ் சுடர்த்தீர்க்க—மிஞ்சுஞ்
சுழலழல்வாய் முள்ளிலவந் தோற்றுமிவை யைந்தாம்
பழகுமிதன் கீழும்பக ரக்கேள்—அழகாரு
தோகாய் குணுதமொடு சுப்பிறபா கம்மதன்பின்
வேகப் பிறவ்சனம் வேழமென்கோ—டாகவைந்தாம்
பின்கீ ழிடபம் பிலத்திடுமுட் பன்றிசிங்கம்
நன்காம் வியாக்கிரம்நால் வாயைந்தாம்—பின்கீழும்
நாய்சூ கரமாடு நல்லெருமை யேறிவ்வைநதாம்
ஏய விதன் கீழா டிருகானம—பாயும்
மதிகிரகங் கும்பீர மானநக்கி ராக்ய
மிதுவுமைந்து மற்றிதன்கீ ழேயும்—புதியதொரு
கட்டரவங் கூர்மங் கருங்காகங் கூகைகழு
கிட்டமுட னைந்தா மிதன்கீழ—மட்டைபுலி
காட்டுக் கவிகடகங் கண்டகமிவ் வைந்திதன்கீழ்
நாட்டுகின்ற சீயிரத்தம நற்பூதி—வாட்டுகின்ற
தூம மிருத்திகையுஞ் கொன்றையிவை யைந்திதன்கீழ்
ஆமப் புழுவு மமேத்தியமுந்—தாமும்
பிரதிகா மற்றிதற்குப் பின்னுண்ணீர்த் தான
வருவாய்நீர்ச் சீவனமைந் தாகுந்—தருமிதன்கீழ்
தன்னைத்தான் றின்னல் தருமிரத்தந தான்குடித்தல்
சென்னியினில் மூளையினைத தின்னலுடன்—பின்னுமொரு
தாருணமுஞ் சங்குடமுந் தானைந்தா மிங்கிதன்கீழ்
மேருநிகர் பூதமுடன் வித்தரமும்—போர்விகடம்
மாறு நெருப்பு வரையொடுதா னிவ்வைந்தா
மீறு மிதன்கீ ழிருப்பழலு—மீறுத
வைதரணி தாலவன மற்றேக பாதமுட
னெய்யாத பூரணமிவ் வைந்திதன்கீழ்—மெய்யான

கோரந் திற[ற்]செக்குக் கூறு மியந்திரமும்
பாரக் கருப்பாலைப் பாசமைந்தாம்—நேருமிதன்
கீழா மருத்தனம்பின் கேழ்பெரிய சல்லிய்யொடு
சூழ்சிறிய சுல்லி சுடர்ப்பாறை—நீளு
மிருப்புமய மீதைந்தா மிங்கிதன் றன் கீழே
பொருபபுயா மப்பொருப்பும பொஙகக்—கருப்புமொழி
முத்தே குரதார மூத்ரமலக கூபமைநதாரு
சத்தவிதன் கீழிருள்பின் சூழெரிவாய்க்—குத்து
முராலுக்கை யம்மி யுடனிவையைந் தாங்கீழ்
அரியசிலை வண்டி லயக்கலப்பைக—கரியநிறத்
தாலவனஞ் சம்மோகந தான்மசக மண்டபமு
மேலுமிவை யைந்தா மிதன்கீழுங்—கோலமுள்ள
மத்திபங்கந் தீச்சூல மற்று மிருப்புருண்டை
துய்த்தல் பலதுயரஞ் சூழ்துயர—மிக்கொாகையு
மோரஞ்சா மற்றிதன்கீ ழோங்குங் கசுமலம்பின்
ளுருஞ் சமலகல மாலகலம்—போரால்
மெதவிருபம் பிக்கிரக மேயோரைந தாங்கீட்
சிதைவிலிய மானுமபின் றேனே—முகலேக
பாதந திரிபாதம் பற்கொடிய தீவிரம்பின்
ஞேது மவீசியிவை யோரைந்தா—மாதரசே
சொல்லிவந்த ராசத் தொகையுமெழு பானிரட்டி
மெல்லியகீழ்த் தட்டினின்று மேலளவும்—நலமுப்பான்
கோடியின்மே லீரிலக்கங் கொண்டிருக்கும் யோசனையாம்
நீடுமிதன் மேல்வெளியில் நீட்சியுங்கேள்—கூடுமுப்ப

## கூர்மாண்டருத்திரர்

தாயிரமாம் யோசனையா மங்கதன்மேற் கூர்மாண்ட
நாயகனார் தானிருக்கும் நன்னகர—மீயுயரங
கோடித் தொகையிற் குறையுமே யோரிலக்க
மீடிலது மூன்றுகண்ட மாயிருக்கும்—நீடுமிதன்
மத்தி கனகமொளிர் மண்டபத்திற் கூர்மாண்டர்
மித்திரனைப் போலெரிக்கு மெய்யினரா—யெத்திசையுங்
கண்டோர் பயப்படமைக் காரிநிறம் போல்முகமுந்
துண்டப் பிறையெயிறுந் தோணன்குங்—கொண்ட
மழுவம்பு வில்பரிசை வாய்த்தகரத் தேந்தி
விழியுமொரு மூன்றுவட்ட மென்ன—வழகாருந்
தம்போலும் ருத்ரர் சதகோடி சூழ்ந்திருக்கக்
கும்பமுலைத் தேவமின்னார் கொண்டேத்த—வெம்புங்
கனித்திருக்கும் பூத கணமயுத கோடி
மனத்தினிதாய் நின்று வணங்க—நினைத்தற்
கரியநிரை யங்கட் கதிபராய்ச சோதி
விரியுமரி யாசனத்து மேவும்—புரியதற்கு
மீதுநவ லக்கம் வெளியாமி யோசனைமேற்
பூதரங்க ளெட்டும் பொருவிலதாய்—மாதிரத்தின்
அட்டகயந் தாங்கு மதலமுத லேழுலகின்
றிட்டமுமே சொல்லக்கேள் சேயிழையே—வட்டமுள்ள.

### அதல லோகம்

பாதாள மாமதலம் பத்திலக்க மேலுயர
மாதேகேள் மூன்றுகண்ட மாய்வதியுங்—கோதிலாப்
105 பொற்பிரபை யால்விளங்கும போகிசத கோடிசுற்ற
நற்புகழ்சே ருங்குளிக ராசேந்தரன்—சொற்பெரிய
கண்டமொரு மூன்றுநடுக் கண்டமதி லேசோதி
கொண்டவரி யாசனத்திற கூாநதிருப்பன்—விண்டதொரு
கீட்டிசையிற் கண்டமதிற் கீர்த்தியுள்ள சங்குமுடி
சூட்டுஞ் சுருதியெனுந் தொல்லசுரர்—கூடடமுடன்
வீற்றிருப்பர் பச்சிமமா மேற்றிசையிற் கண்டமதின்
மாற்றலர்க ளஞ்சும் வலியினனுய்க்—கூறறுநிகர்
மெய்யா னிருதருக்கு வேந்த னுலோகிதனு
மையார் நிருதருட னேவதிவன்—றய்யவிதின்

### விதல லோகம்

110 மேல்வெளியு மோரயுதம யோசனையின் மேல்விதல
மேனுயரம் பத்திலகக மேயாகும—சாலப்
பதுமரா கத்தொளியாற் பாறுமிரு ளந்த
விதமுமுக் கண்டமாய் மேவுங—கதமுடைய
வாசுகிமுக கண்டமதின் மத்தியினில மாநாகர்
தாசரெனச் சூழத் தரிததிருப்பன்—பேசுங்கீழ்ச்
சொற்பிரக லாதனெனத் தோன்றுமசு ரேசனுமேற்
கிற்பெரிய கண்டத் தியமனெனு—மற்புயனுஞ்
சேனைத் தலைவர் திரண்டுபுடை சூழமக
வானைப் பொருவ வதிந்திடுவர்—தேனைநிகர்
115 சொல்லா யிதன்மீது சுத்தவெளி யோரயுத
மல்லா விதன்மே லணிநிதலங்—கல்லாகு

### நிதல லோகம்

மிந்திரநீ லத்தா லிலங்குமொரு பததிலக்ச
முந்து முயரமது முக்கூறும்—வநதநடுக்
கம்பலனென் றேயுரக காவலனுந் தானிருப்பன்
சொம்பாங்கீழ்க் கண்டஞ் சுசுபால—னும்பர்புகழ்
மேற்கு விகடனுமே வீற்றிருப்ப ரிங்கிதன்மேற்
போர்க்கும் வெளியயுதம் போநததன்மே—லார்க்குஞ்

### சுதல லோகம்

சுதலதலம் பத்திலக்கஞ் சொற்புருட ராக
முதையனென வேபிரபை யோங்கு—மிதுவுமொரு
120 மூன்றுகண்ட மாயிருக்கு மொய்குழலே மத்தியினிற்
கான்ற விடவெயிற்றுக கார்க்கோடன்—றோன்றுமரி
யாசனத்தில் வீற்றிருப்ப னங்கதற்குக் கீழ்க்கூற்றிற்
காசாருங் கண்டமதிற் கற்கந்தன்—றேசார்
கராளனெனும் வல்லரக்கன் கண்டமதின் மேல்பால்
அராவிடம்போல் வீற்றிருப்ப னங்கு—பராவுமிதற்

### மகாதல லோகம்

கோரயுத மேல்வெளி யுன்னதமா மதுதிதன்மேற்
சேரு மகாதலமாந் தேனமொழியீர்—நேருமது
வெள்ளிநிற மாமதனின் மேலுயரம பத்திலக்க
முள்ளகண்ட மூன்றுரு முண்மையே—மின்னுமு
நடுக்கூற்றிற் காரளங்க நாக மிருக்கு
மடுக்குங்கீழ்க் கூற்றி னயினவே—லெடுக்குமு
பிரனரக்க னென்னும் பிலத்தவசு ரேந்தரன்
சுராருக் கதிபன றுதிகக—வாசுரிமை
செய்திருப்பன் வல்லரக்கர் சேனையொடு மேல்பாகம்
வைகிடுவென் வீமனெனுமு வாளரக்கன்—மொய்குழலீர்
இங்கிதனின் மேல்வெளியில் யோசனையு மோரயுதம
நங்கா யதன்மேல் ரசாதலமாம்—மங்காத

### ரசாதலலோகம்

முத்தி னொளியான் முழுதும் விளங்கியிடு
மொத்ததலம பத்திலக்க யோசனையா—மத்தலமுங்
கூறுமொரு மூன்றாகக் கூறுநடுக் கூறதனி
னூறுவிடத் துறமெரிசு னுற்றிருப்பன்—மாறுங்
குணபாற்ப்ர கற்பனுமேற் கூற்றி னிருகாத
னிணையோரும் வாழ்ந்திருப்ப ரென்று—மணமாகு

### பாதாள லோகம்

மின்னதல மேலே யிடைவெளியு மோரயுதம்
பன்னுமதன் மீதிருக்கும் பாதாளம்—இன்னும்
நவமணியிற் சோதியெந்த நாளும் விளங்கு
மவையுயரம் பத்திலக்க மாகும்—பவமகற்றும்
அன்னதுவு மூன்றுகண்ட மாயிருக்கு மங்கதனின்
மன்னுநடுக் கண்டமொளிர் மண்டபத்திற்—பொன்னமருஞ்
சிங்கா தனமதனிற் செம்பொன் முடிதிகழ
மங்காத வாளெயிற்று மாநாக—ரெங்கும்
புடைசூழ்ந்து பாதமலர் போற்றிநிற்கப் பின்னுமு
பிடிநடையுஞ் சிற்றிடையும் பெற்று—விடமருவு
கண்ணிணையி னார்நாக கன்னியர்க ளெட்டிலக்கம
பண்ணமரும் பாடல் பயின்றேத்தத—தண்ணளியால்
ஐநதருவு மேவல்செய்ய வாடரவத் தக்ககனுஞ்
சந்ததமு நித்தியனுய்த தானிருப்பன்—பிந்தவதன்
கீணிலையின் மாபெலியுங் கீண்டருட பாகமதில்
தாணெடிய பிங்கலனுந தானிருப்பர்—காணிதன்மேற்
பத்திலக்க வோரயுதம் பாழ்வெளியா மவ்வெளிமேல்
வைத்தநவ லக்கமுயர் வாம்பதியாஞ்—சுத்தமுள்ள
பொன்னு மணியும் பொலிந்தொளிரு மன்னகரா
மின்னகரி னுயிரவி யோசனையி—னுன்னதமாம்

### ஆடகருத்திரர்

மண்டபத்திற் செம்பொன் வியங்குமரி யாசனத்தி
னண்டர் முனிவ ரடிவருடக்—கொண்டவுரு

மின்போற் பிரபைதர வெண்பிறைதேர் செஞ்சடையு
முன்பாற் கறைமிடறு மூவிழியும்—நன்கான
கைகளொரு நான்குங் கதைகுலிச மான்மழுவுஞ்
செய்ய திருவடியுஞ் சேர்ந்திலங்கப்—பையரவ
கங்கணமுங் காதிற கவசகுண்ட லங்கண்மின்னச்
சங்கரனு மாடகருந் தானிருபப—ரிங்கிதன்மேற்
சண்டக ராதி தரைக்கி ணிரையமட்டுங்
கொண்டபில மொன்றுண்டங் கோதையே—கண்டவடடம
ஆயிரமாம் யோசனையா மன்னபில மொனறினுககு
மேயதல மேழினுக்கு மேன்மையுள்ள—நாயகரும

## பூலோக வரலாறு

ஆடகரா மப்பதிமே லாயிருக்கும் பூமிகனங்
கோடியி யோசனையாய்க் கொண்டிருக்கும—நாடியிங்கு
சொன்ன வுலகனைத்துந் தொன்றுதொட் டாயிரமாஞ்
சென்னியின்மேற் றங்கிநிறபன் சேடேநத்ரன்—இன்னுமிநதப்
பூமியின்மேற் பூவுலகம பூவுலகின் றன்பெருமை
தாமக் குழலணஙகே சாற்றக்கேள்—நேமியெனச்
சாகரங்க ளோரேழுந் தற்சூழுந் தீவேழி
ஞகரிக மாயிருக்கும் நாவலந்தீ—வாகுமதின்
சுற்றி னளவுத் தொகையுமொரு மூன்றிலக்கத
துற்ற விரண்டயுத யோசனையா—மற்றுமிதன்
கீழ்மே லளவின் கெணிதவி யோசனையுந்
தாழ்விலா வோரிலக்கந் தானுகுஞ்—சூழுகின்ற
தெற்கு வடக்குத் திசையளவு மோரிலக்கம்

## மகாமேரு

நிற்குமிதன் மத்தியினி னீண்மேருப்—பொற்கிரியின்
வித்தாரம் பூமியின்கீழ் வேர்பதி னயிரமா
மத்தூரி னின்று மதனுயர—முத்தேகேள்
எண்பத்து நாலா யிரம்யோ சனையாகுங்
கண்பற்றுங தாமரையின் காயினைப்போல்—விண்பற்றும்
மேலின் விரிவகலம் விள்ளிலெண்ணுன் காயிரமாம
சாலுங்கீழ்ச் சுற்றளவு தான்பாதி—வேல்விழியீர்
மேரு கிரியினுக்கு மேகலையு மூனமுங்கீழ்ச்
சாருமந்த ராளந் தருமுயரந்—தேரில்
இருபத்தய் யாயிரவி யோசனையீ தின்மேல்
வருமடியின் மேகலையா மற்றும்—பொருவிலொரு
மூவா யிரம்யோ சனையாகு மொய்குழலீர்
ஓவாமேல் வட்டவள வோரயுத—மேவுமிதன்
மேலினநத ராளம் விளம்பிலையஞ் சாயிரமா
மேலினடு மேகலையின் வித்தாரஞ்—சேலனைய
கண்ணு யுயரக் கணிதமுமூ வாயிரமா
மெண்ணும் விரிவீரே ழாயிரமாம்—நண்ணியமூன்
றுமந்த ராளந் தருமுயர முன்னளவே
யாமந்த ராள மதன்மீது—தாமந்த

மேகலையு மூன்மே கலையுயர மேல்விரிவு
மாகுமக லம்பதினெண் ணாயிரமா—மாக
165 விருமூன் றுயரமுமே யெண்பத்து நாலாய்த்
தருமா யிரயோ சனையாம—பொருவிலா

### இந்திரன்

மேல்விரிவி லாயிர தஞ்தண் டின்னா சிகரமதன்
பாறகீழ்ச சிகரமதிற் பண்ணவர்கோன் —சேலனைய
நாட்டத் தரமையர்கள் நட்டமிடத் தேவருடன்
கூட்டத் திருடியாகள் கொண்டேந்த—வாட்டமிலா
வைநதருவுந் தேனுவுஞ்சிந் தாமணியு மனபுடனே
வந்தேவல் கேட்டு மருங்கினிற்பச்—செந திருவாழ்
ஐம்பொனொடு வீதி யமரா பதிநகரிற்
செம்பொனொடு மண்டபத்திற் சீர்திகழப் —பைம்பொனரி
170 யாசனத்திற் செய்ய வயிராணி தன்னோடும்
நேசமுடன் வீற்றிருப்ப னேரிழையே—மாசிலாத,

### அக்கினி

தென்கீட் டிசையிற் சிறந்ததே சோபதியில்
டின்போற் பிரபைதரு மெய்யினராய்—நன்கான
சென்னியிரண் டுள்ளவராய்ச் செஞ்சிகைய ராய்நயனஞ்
சொன்னவொரு நான்கினராய்த் தொன்மையராய்ப்—பின்னமிலாத்
தாலமோ ரேழினராய்த் தக்ககர மேழினராய்
வால சொரூப வடிவினராய்ச்—சீலமுள
பாதமொரு மூன்றினராய்ப் பன்னுமச வாகனராய்ச்
சோதிச் சுவாகி சுதாகியெனுங்—காதலியர்
175 பக்கத் திருப்பப் பதுமமல ராசனத்தின்
மிக்க வழற்கடவுள் வீற்றிருப்பர்—மைக்குழலீர்

### எமராசன்

சொல்லரிய தென்றிசையிற் றேன்று சிகரமதிற்
பல்வளங்கா சையமினிப் பட்டினத்தில்—அல்லலிகர்
செய்யுஞ் சிவந்தெழுந்து மேலுயர்ந்த செஞ்சிகையுங்
கைகள்மூ வாறுங் கதைகுலிசம்—வைவேல்வில்
அம்புமழுத் தோட்டி யழற்சூலம் பாசமவசி
வெம்புபிண்டி பாலமுங்கை வேல்முசலம்—நம்புந்
திகிரிகழு வாள்முசுண்டி செந்தோளீ ரொன்பா
னிகலுமிரு பாலிலங்க வேந்திப்—புகலுகின்ற
180 வெள்ளைப் பிறையெயிறும் வெவ்வழல்கா லம்பகமுங்
கொள்ளுமரைச் சுத்திரத்த கோசிகமும்—விள்ளரிய
செம்மாலை செஞ்சாந்தஞ் சேர்ந்திலங்கு மார்பகமு
மைமால் பொருமயிட வாகனமுஞ்—செமமானை
நேர்நயனக் காளகன்னி நீலியிணை மாதரிரு
பாரிசமும் வைகப் பனற்கரிய—கோரமுள்ள
சண்டன்மகா சண்டனிவர் தானிருவர் வாய்புதைத்துக்
கொண்டேவல் கேட்கக் குலவரைபோற்—றண்டொருகை

யேந்திவரு கிங்கிரர்க ளெண்ணிறந்த பேர்சூழக்
காந்துகனல் கண்ணுடைய காலனொடுஞ்—சேர்நதிருக்கு
மேலா மவமிருத்தும் வேண்டுபணி கேட்டுநிற்ப
நாலா கலையுணர்நது நற்கணக்கின்—மூலமெல்லாஞ்
சித்திர குததர் செவிப்புலததிற் றானுரைக்கப்
பத்தியுடன் விஞ்சையர்கள் பாட்டொலிப்பச்—சித்திரக்கால்
மண்டபத்தி னுபயண் வயங்குமரி யாசனததிற்
சண்ட னினிதிருப்பத தையலே—யண்டர்புகழ்

நிருதி

தென்மேற் றிசையதனிற் சேர்கிருட்டி. ணுபுரியிற்
றன்மேனி சாமநிறந் தானுளதாய்—மென்மேற்
கராளமுகம வகரக் கடையெயிறு மின்போன்
றராவுமிழும் வெவ்விடமபோ லாகப்—பிரேதமெனும்
வாகனமுமங் கையிலொளிர் வாள்பரிசை தாங்கியொரு
பாகஞ் சுகேசினியோர் பாகமதின்—மேகநிகர்
தண்ணுளுமம பூங்கூநதற் சாதாயி யமமையுமே
விண்ணோர் மடநதையென வீற்றிருப்ப—வெண்ணி
லியக்கர் கணங்க ளிருபுறமுஞ் சூழ
வியக்கு நிருதியங்கு மேவும்—நயக்கவரு

வருணன்

மேற்றிசையிற் பாவதியின் மேன்மகர வாகனமுஞ்
சாற்றுகின்ற பாசந் தருங்கனமுங்—கூற்றுறழும்
வேலின்விழி லாதினியு மேவு மருடணியுஞ்
சால விருபுறமுந் தானிருக்கச்—சீலமுள்ள
சிங்கா தனமதனிற் சிந்துபதி வீற்றிருப்பன்
மங்கா ததற்கு வடமேற்குச்—சிங்காரக்

வாயு

கந்தபதி யென்னுங் கடிநகரிற் சூட்சுமமாய்
வந்த சரீரன் மகாபிலத்தன்—குந்தக்
கருநிறத்தன் மான்வா கனன்றோட்டிக் கையன்
வருமயிடி யம்மையொடு மற்றுந—திருவங்க
தாயியெனுந் தேவி யருகிருப்ப வாசனத்தில்
வாயுக் கிறைவன் மகிழ்ந்திருப்பன்—ஏயும்

சோமன்

வடதிசையிற் கீர்த்திமதி மாநகரிற் சோதி
விடுமரியி னுசனத்தின் மீது—மடவா
ரிரித்தி நிவிர்த்தி யிசைந்திருப்பச சோமன்
றரித்திருப்பன் வெண்மைச் சடலன்—தெரித்தவட

ஈசானிய மூர்த்தி

கீழி னெசோவதியிற் கீண்டமதிச் செஞ்சடையுஞ்
சூழுங் கொடுவரியின் றோலுடையும்—ஏழுலகும்

வந்தனைசெய் பொன்னின் மலரி னடியிணையுஞ்
சுந்தரஞ்சேர் மூன்றுகண் ணுந் தோளுன்கு—மந்தமுள்ள
மூரிக் கொடியு முழுநீற்றின் மெய்யொளியுங்
காரைக் கறுவு களத்தெழிலும்—பாரிக்குங
கொங்கைச் சுருபினியுங் கூறிரசு தாயியினை
மங்கையிரு பாலு மகிழ்ந்திருப்பச்—சங்கரனே
ரீசான மூர்த்தி யெழுந்தருளி யேயிருப்பர்

அட்டதிக்கினிடையின் சரித்திரம்

தேசாருந் தேவநகர்த் தென்றிசையிற்—காசாருங்
காமவதி யென்னுங் கடிநகரிற் காமுகிநற்
றுமக் குழற்பூ சுனிசுமுகி—நாமமிளி
ரூருவசி துன்முகிதி லோத்தமைநலம் பாணியொளிர்
தாரமர்கூந் தற்சிறு தாசுணியும—நாரியர்க
ளின்னோர் முதலாபெண் ணெண்கோடி வானவர்தம்
மின்னார்கள் மின்போல வீற்றிருப்பர்—பின்னனலின்
மேற்கினிலி ரேவதியா மேன்மையுள்ள மாநகரி
லாற்கும் விசுவகன்மா வங்குறைவன்—தீற்குமுள
சண்ட னுறைபதிக்குத் தானடுத்த மேற்றிசையி
லண்டர்நகர் நேர்திருந்த தாபுரியின்—கெண்டைவிழி
மாயே சொரிபிரமி வாராகி யிந்த்ராணி
தாயாங் கவுமாரி சாமுண்டி—வீயா
வயிணவியில் வேழ்மாதர் வைவச் சுதன்றன்
நயனமணி போலவங்கு நண்ணும்—வியனகர்க்கும்
பச்சிமத்தி லுற்ற பதியாஞ் சிரோசிதையின்
மெச்சு முருத்திரர்கள் வீற்றிருப்பர்—இச்சிகரம்
மேல்பாற் குணபதியின் மேநியூ ரந்தகன்றன்
பாலேவற் சுத்திகடாம் பாங்காகச்—சூல்மேகம்
போலவொளி மெய்யினராய்ப் பொங்கழலார் முத்தலைய
சூலமுறை கையினராய்ச் சூழ்ந்திருப்பர்—மேலுமொரு
பிங்கலையாம பொற்பதியிற் பேசு சிவோத்தமருஞ்
சங்கரார்க பாலீசர் தாமுருத்ரர்—செங்கைமழு
வீமரீ சானர் விசையரய வோற்பவர்பின்
னுமை மகாதேவர் நற்கடுக்கைத்—தாமமுள
நீல வுலோகிதர்தன் னேர்தேவ தேவரெனுஞ்
சால வுருத்திரர்க ளாமிருப்பர்—சீல
நிருதிதிசைக் குத்திரத்தி னேர்கிருட்ணை தன்னில்
வருமலகைக் கூட்டமுடன் வாழும்—புரியின்
வடதிசையிற் கைமையெனு மாநகரின் மித்ரக்
கடவுளர்கள் வீற்றிருப்பர் கண்டாய்—விடவடக்குச்
சித்த வதியிற் சிறந்தவித்தி யாதரராஞ்
சித்த புரிவடபாற் சேர்ந்திருக்கு—மத்திலுறை
கின்னரராம் வாயுக் கிளக்கிற்காந் தாரிபுரி
மன்னுமதிற் காநதிருவன் வாழ்ந்திருப்பன்—அன்னவன்றன்

(தொடரும்)

# சமரச சன்மார்க்க போதம்

(தொடர்ச்சி)

99. பல துறைகளுள்ளும் அரசியற்றுறை சீர்திருத்தம் பெறுதல் அவசியம். அதன் சீர்திருத்தம் பிறவற்றை எளிதில் ஒழுங்கு செய்யும். ஆனாலும் அச்சீர்திருத்தம் எளிதில் கைகூடப்பிறதுறைகளுஞ் சீர்திருத்தம் பெறுதல் நல்லது.

100. சாதி மதம் நிறம் மொழி நாடு முதலிய பித்துக்களால் எழும் வெறி, சன்மார்க்க வளர்ச்சிக்கு இழைக்கும் தீங்குகள் மேலே சுருங்கச் சொல்லப்பட்டன. அப்பித்தவெறி வாழ்வினின்றும் அகலுதல் வேண்டும்.

101. சாதிமத நிறம் முதலிய வேற்றுமைகளைக் களைதற்குரிய சீர்திருத்த முறைகளைப் பலபடக் கூறலாம். இங்கே பொருந்திய ஒன்று குறித்தல் சிறப்பு. அது கலப்புமணம் என்பது.

102. கலப்பு மணம் இயற்கையின் பாற்பட்டது. அது பலதிற வேற்றுமைகளைக் களையவல்லது.

103. மக்கள் அனைவரும் இயற்கையில் சமரச சன்மார்க்கத்தில் ஒருமைப் பட்டவர். அவ்வொருமைப் பாட்டை மக்கள் உணர்ந்து நடக்கின்றார்களில்லை. அவ்வொருமை யுணர்வை சாதிமத நிறம் முதலியன மறைக்கின்றன. இந்நாளில் மக்கள் ஒருவரோ டொருவர் உறவு கொண்டு வாழ்தற்குரிய சாதனங்கள் பெருகிக்கொண்டே யிருக்கின்றன. இஃது இயற்கை அன்னையின் கருணையே யாகும். இக்காலத்தில் கலப்புமணம் சமரச சன்மார்க்க ஒருமை யுணர்வை எழுப்புதற்கும் பெருந்துணை செய்வதாகும்.

104. சடங்குகளும், சம்பிரதாயங்களும், கண்மூடி வழக்க ஒழுக்கங்களும், இன்ன பிறவும் சன்மார்க்க வளர்ச்சிக்குத் தடை செய்கின்றன. இத்தடைகளும் நீக்கப் பெறுதல்வேண்டும்.

105. சடங்குகளும் சம்பிரதாயங்களும் முற்றும் முன்பதயை விடுத்து அகலுதல் அரிது. எவ்வளவு சீர்திருத்தஞ் செய்தாலும் அவைகள் ஒவ்வோரளவிலாதல் ஒவ்வொரு விதமாகக் காலமிடங்களுக் கேற்றவாறு தலைகாட்டிக் கொண்டே யிருக்கும். அவைகளை அவ்வப்போது பொருந்திய முறையில் சீர்திருத்தஞ் செய்துகொண்டே யிருத்தல் வேண்டும்.

106. கண்மூடி வழக்க ஒழுக்கங்கள் பலதிறத்தன. அவைகள் பலப் பல வடிவில் உலகை மயக்குறச் செய்யும்.

107. 'இது கண்மூடி வழக்க ஒழுக்கம்'; 'இது கண்மூடி வழக்க ஒழுக்கமன்று' என்று அறுதியிட்டு அறிஞர்களாலும் கூறுத முறையில் அவ்வழக்க ஒழுக்கங்கள் சாலவித்தை புரியும். ஒருவர்க்கு ஒன்று கண்மூடி வழக்க ஒழுக்கமாகத் தோன்றும்; மற்றொருவர்க்கு அஃது அவ்வாறு தோன்றுவதில்லை. இருவரும் அறிஞராக இருப்பர். கண்மூடி வழக்க ஒழுக்கங்களை மறுத்து வருவோரிடத்திலும், அவர் உணராத வகையில், அவைகளில் ஒன்றோ சிலவோ படிந்துகொண்டிருக்கும். கண்மூடி வழக்க ஒழுக்கங்களின் மாயை அளப்பரிது!

108. கண்மூடி வழக்க ஒழுக்கங்கள் இன்ன இன்ன என்று எப்படி அறுதியிட்டுக் கொண்டு சீர்திருத்தத்தில் இறங்குவது? இயற்கை நெறிக்கு மாறுபட்டன வெல்லாம் கண்மூடி வழக்க ஒழுக்கங்களெனக் கொண்டு சீர்திருத்தத்தி லிறங்குவது அறிவுடைமை.

109. கர்மம் நாள் கோள் ஆகியவைகளைப் பற்றி உலகில் பலதிறக் கருத்து வேற்றுமைகளுண்டு. இவைகளின் ஆதிக்கம் உயிர்கள்மீது தாக்குறுவதில்லை என்று சொல்லுதற்கில்லை. இத்தாக்குதலால் நல்லன விளைதலுமுண்டு; தீயன விளைதலுமுண்டு.

110. கர்மம் நாள் கோள் முதலியன இயற்கை இறைவழி இயங்குவன.

இவைகளை இயக்கும் ஒன்றன் வழி நிற்போரை இவைகள் என் செய்யும்?

111. இயற்கை இறைவழி நிற்குஞ் சன்மார்க்கர்கள், கர்மம் நாள்கோள் முதலியவற்றின் செல்வாக்கால் தாக்குறுவதில்லை.

112. கர்மம் நாள்கோள் முதலியவற்றின்மீது எந்நேரமுங் கருத்தை இருத்தித் துன்புறுவது மடமை. இவைகளை இயக்கும் ஒன்றன்மீது கருத்திருத்துவது அறிவுடைமை.

113. 'செய்த கர்மத்தை அனுபவித்தே தீர்தல்வேண்டும்' என்றொரு நம்பிக்கையும் சில விடங்களில் இருந்து வருகிறது. இதுவும் மூட நம்பிக்கையின்பாற்பட்டதே. இயற்கை இறைவனிடம் நெஞ்சைப் பதித்துத் தியானஞ் செய்யச் செய்யப் பழைய கர்மங்கள் செயலற்றுப்போகும்.

114. கர்மம் நாள் கோள் முதலியவற்றைச் சிந்திப்பதற்குப் பதிலாக இயற்கை இறையைச் சிந்திப்பது சிறப்பு.

115. மக்கள் தனித் தனியாகப் புறத்திலும் அகத்திலுஞ் சீர்திருத்தம் பெறுதல் வேண்டும்.

116. மக்களின் தனித் தனித் தூய்மை, வாழ்வுத்துறைகளை யெல்லாந் தூய்மை செய்யும்.

117. புறச் சீர்திருத்தம் இயற்கை வழி உடலோம்பலால் அமைவது; அகச் சீர்திருத்தம் சத்தியத்தால் அமைவது.

118. அகச் சீர்திருத்தத்துக்குச் சத்தியம் அவசியம். சத்தியம் இயற்கை வளர்ச்சிக்குரியது.

119. சத்தியம் ஒன்றுள்ள விடத்தில் எல்லா நல்லியல்புகளும் அமையும்.

120. சத்தியத்தை எப்படி நிலைக்கச் செய்வது? நல்லெண்ணங்களால் அதை நிலைபெறுத்தலாம்.

121. நல்லெண்ணங்கள் அகத்தூய்மைக்கு இன்றியமையாதன.

122. அகத்தூய்மைஅற்ற புறத்தூய்மையால் பயனில்லை.

123. நல்லெண்ணங்கள், உயிரையும், உயிர் வழி உடலையும் ஓம்பும் அமிழ்தம்.

124. தீய எண்ணங்கள், கூரிய அம்புகள்.

125. எண்ணமே மனிதன்.

126. நல்லெண்ணங்களால் தங்களைப் பண்படுத்திக் கொண்டவர்களிடம் தீயோரின் எண்ணங்கள் பாயின், அவைகள் கூர்மை மழுங்கி வீழும். மற்றவர்களிடம் அவைகள் பாய்ந்து துன்புறுத்தும்.

127. நல்லெண்ணங்களால் தங்களைப் பண்படுத்திக் கொண்டவர்களே தீயோர்களைத் திருத்த முயல்வது நலம்.

128. பிறரைச் சீர்திருத்தஞ் செய்யப் புகுவோர் முதலாவது தம்மைச் சீர்திருத்தஞ் செய்து கொள்ளல்வேண்டும்.

129. சீர்திருத்தத் தொண்டர்கள் கல்வி, அறிவு, அனுபவம், பொறுமை, இரக்கம், தீங்கு புரிவோர்பால் வனமங் கொள்ளாமை, மன்னிக்கு மியல்பு, பகைவரையும் நேசித்து நலஞ்செய்தல், தற்பெருமைக்கு இரையாகாமை முதலிய நற்குணங்களுடையவர்களாயிருத்தல்வேண்டும்.

130. சீர்திருத்தக்காரர்களிடம் நிந்தனை தலைகாட்டலாகாது. நிந்தனை சீர்திருத்த இயல்பன்று.

131. மக்கள் மூட வழக்க வொழுக்கங்கட்கு அடிமையாதற்குக் காரணமாக நிற்பது அவர்கள் மாட்டுள்ள அறியாமையேயாகும்.

132. அறியாமையைப் போக்குதற்குரிய வழி அறியாமையை நிந்திப்பதன்று; அறிவை விளக்குவதேயாகும். இருளை நிந்திப்பதால் இருள் நீங்காது. ஒளியைக் கொண்டுவரின், இருள் தானே ஓடும்.

133. சீர்திருத்தத் தொண்டுக்குரிய முறைகளைப் பலபடக் கூறலாம். அவரவர்கள் தங்கள் தங்கள் அறிவாற்றலுக்குத் தக்கவாறும், காலதேச வர்த்த

மானத்துக் கேற்றவாறும் முறைகளைக் கோலிக் கொள்ளலாம்.

134. சீர்திருத்தப் பணிகளைப் பிரசாரம் விரதம் தியானம் ஆகிய மூன்று வழியில் நிகழ்த்தலாம்.

135. இலட்சம் பிரசாரகர்கள் முயற்சியினும் ஒரு நல்லோன் விரதமும் தியானமும் பெரு நலஞ் செய்யும்.

136. பொருளாதாரம், ஒழுக்கம் முதலியன குறைவின்றி நிறைவு பெற்று, அவைகளால் எல்லாரும் இன்புற்று வாழும் ஒரு நிலை உலக முழுவதும் நேரின், அப்பொழுது சன்மார்க்கம் எற்றுக்கு என்று சிலர் கருதுவதுண்டு. இக்கருத்துத் தவறுதலுடையது.

137. சன்மார்க்கமென்பது உலக வாழ்வளவில் நின்று விடுவதன்று. அது மேலுங் கடந்து நிற்பது. தியானம் முதலியவற்றிற்குச் சன்மார்க்கம் வேண்டற்பாலது.

138. பொருள், ஒழுக்கம் முதலியவாற்றால் எல்லாரும் இன்புறும் நிலை, தியானம் முதலிய சன்மார்க்கத் துறைகட்குச் சாரம் போன்றது.

139. பொருள் முடையும், தீயொழுக்கமும், இன்ன பிறவும் மக்களிடை அமைதி நிலை பெறுத்தாமையான், அவர்கள் சன்மார்க்கர்களாக வாழ்தற்கு இடம் நேராமற் போகிறது. பொருள் நிலை முதலியன ஒழுங்குபட்டு, எல்லாருங் கவலையின்றி இன்புறுவார்களாயின், மக்கள் தியானம் முதலிய சன்மார்க்கத் துறைகளில் எளிதில் ஈடுபடுதற்கு வழி நேரும்.

140. பொருளாதாரம் முதலியவற்றைச் சீர் செய்ய உலகம் முனைந்து நிற்பதன் அடிப்படையான நோக்கம் என்ன? வாழ்வில் தியானம் முதலியன ஆக்கம் பெறுதல் வேண்டும் என்பதே.

141. உயிர்களின் அறியாமையை நீக்கி, அவைகளின் முழுஅறிவை விளக்கஞ் செய்யப் புகுந்த இயற்கை அன்னை, பொருளாதாரம் முதலியன செம்மை பெறும் அளவில் தன் முயற்சியை நிறுத்திக் கொள்ளாள். அங்ஙனம் நிறுத்திக் கொள்வது இயற்கையின் அறமன்று.

## VI. சங்கம்

1. சன்மார்க்க சங்கம், சமரச சங்கமென்றும், சமரச சன்மார்க்க சங்கமென்றும் அழைக்கப் பெறலாம்.

2. சன்மார்க்க சங்கம், கால தேச வர்த்தமானத்துக் கேற்ற முறையில் அவ்வப்போது ஒவ்வொருவிதப் பெயர் பெற்று வருகிறது.

3. சன்மார்க்க சங்கம் ஒருபோது ஒருவரால் காணப்பட்டதன்று; அஃது என்றும் இருப்பது.

4. சன்மார்க்க சங்கத்தின் நுட்பம் ஒவ்வொரு போது ஒவ்வொருவரால் விளக்கஞ் செய்யப்படும்.

5. சன்மார்க்க சங்கம் இறைமுதல் எல்லா உயிர்களையும் அங்கமாகக்கொண்டது.

6. சங்கத்தின் தலைமை - இறை; அமைச்சு - இயற்கை; நிர்வாகக்கூட்டம் - குருமார் திருக்கூட்டம்; உறுப்புகள் - எல்லா உயிர்களும்; சந்தா - இரக்கம்.

7. உறுப்புக்களாய உயிர்களிற் சிறந்தவர்கள் மக்கள்.

8. அம்மக்கள் நான்கு வகைப்படுவார்கள்.

9. முதல் இனத்தவர், இயற்கை வாழ்வு நடாத்தி, இயற்கைத் தியானத்தில் முதிர்ந்து, குருதரிசனம் பெற்று, இறையொளி கண்டு, தங்களுக்கென ஒன்றுமின்றி, மற்றவர் பொருட்டு உடல் தாங்கிக் குருமார்களுடன் உறவு கொண்டு வாழ்வோர்; இரண்டாம் இனத்தவர், இயற்கை வாழ்வில் நின்று, இயற்கைத் தியானத்தில் அமர்ந்து, உயிர்கட்குச் சேவை செய்வோர்; மூன்றாம் இனத்தவர், சன்மார்க்கத்தை அறிவால் உணர்ந்து, உணர்ந்தவாறு நடக்க முயல்வோர்; நான்காம் இனத்தவர் சன்மார்க்க ஒருமை புணர்வின்றிப்

பன்மை யுணர்வுடன் வாழும் மற்றவர்கள்.

10. இவ்வினத்தவர்களைப் படிப்படியாக உயர்த்தி மேம்படுத்த வல்லது தொண்டு.

11. தொண்டு என்பது முனைப்பில்லாவிடத்தில் நிகழ்வது. முனைப்புள்ள விடத்தில் நிகழ்வதுபோலித்தொண்டேயாகும். தன்னலச் செயலும் தொண்டாகாது. அதுவும் போலியின்பாற்பட்டதே. பயன் கருதாப்பணியே சிறந்த தொண்டாகும்.

12. தொண்டு, உயிர்களின் அறியாமைக் கட்டை அவிழ்த்து அவிழ்த்து, அறிவு விளக்கஞ் செய்து, இயற்கை அன்னை உயிர் வளர்ச்சிநாடிப் பொழியுங் கருணையை உயிர்கள் பெறத் துணை செய்வது.

13. உயிர் நலனுக்கும் வளர்ச்சிக்கும் தொண்டு இன்றியமையாதது.

14. தொண்டில்லா இடத்தில் இயற்கை அன்னையின் கருணை பாய்வதில்லை.

15. முதல் இனத்தவர் குருமார்களுடன் உறவு கொண்டவர்களாதலின், அவர்களைப்பற்றி இங்கு ஒன்றும் விரித்துக் கூறவேண்டுவதில்லை.

16. இரண்டாம் இனத்தவர், முதல் இனத்தவராவதற்கு முயல்வது இயல்பு. அம்முயற்சி ஆக்கம் பெறுதற்குத் தமக்குரிய தியானம் முதலியவற்றுடன் தமக்குக் கீழுள்ளவர்களைத் தங்கள் நிலைக்குக் கொணரத் தொண்டு செய்தல் வேண்டும். அத்தொண்டு அவர்களை மேன்மைப்படுத்தும்.

17. மூன்றும் இனத்தவரும் தாம் மேல் நிலை எய்துதற்குத் தமக்குக் கீழுள்ள மக்களைத் தங்கள் நிலைக்குக் கொண்டுவர அவர்கள் நலங் கருதி உழைத்தல் வேண்டும். அவ்வுழைப்பு அவர்களை உயர்த்தும்.

18. நான்காம் இனத்தவர்கள் ஒருமைச் சன்மார்க்க உணர்வு பெறாதவர்களாதலானும், தொண்டின் திறத்தை அறியாதவர்களாதலானும், அவர்கள் சிறக்கச் சன்மார்க்க வாயிலாகத் தொண்டு செய்து, தொண்டின் இயலை அவர்கட்கு அறிவுறுத்த வேண்டுவது மற்றவர்கள் கடமை. இவர்கள் நலங்கருதித் தொண்டு செய்யாதவர்கள் சன்மார்க்கராகார்கள்.

திரு. வி. கலியாணசுந்தரன்.

(தொடரும்)

---

# நமது சிந்தனை

[திரு. சி. சதாசிவனார்]

## III

### வெற்றி

**நா**ம் இவ்வுலகில் வாழ்க்கை நலன், உடல் நலன், உயிர் நலன் இவை யாவும் ஒருங்கே பெற்று, நமது நாட்களை இனிதாகக் கழிக்க விரும்புகின்றோம். வாணாள் இனிமையாவதற்குப் பொருள் பெரிதும் வேண்டும் எனவும் நம்புகின்றோம். வேண்டிய பொருள் மட்டும் இருந்துவிட்டால், இன்ப வாழ்வை வென்று, எல்லாக் காரியங்களையும் சாதித்து, வெற்றிக் கொடி நாட்டிவிடலாம் என்று மனப் பால் குடிக்கின்றோம். நாம் எண்ணியவற்றை அடைந்து, அதனால் வரும் இன்பத்தை நுகர்வதையே நாம் எல்லோரும் பெரிதும் விரும்புகின்றோம். இவ் "வெற்றி"யை அடைவதற்கே, எளிய தோட்டி முதல் உயர்ந்த அரசன்வரை உள்ளோர்கள், தாம் பிறந்தது முதல் சுடுகாட்டிற்குப் போகும்வரை உழைக்கின்றார்கள்.

எத்தனை பேர் இவ்வெற்றியை அடைகின்றார்கள்? உண்மையாக, வெற்றி யடைந்தவர்களை விரலால்

எண்ணிவிடலாம். மிக மிகச் சிலரே தொட்ட கருமம் முடித்து, அதனால் வரும் நலன் எய்துகின்றனர். உடல் வருந்தி உழைப்பவர்களைப்போல, இச்சிலர் தாம் ஆரம்பித்த காரியத்தை முடிப்பதில் அதிகமான சிரமம் எடுத்துக் கொள்வதாகத் தோன்றவில்லை. இவர்களுக்குச் சௌகரியமான காலம், நட்பு, தேகசுகம் இவை தாமாகவே வருவனபோல் தோன்றுகின்றன. இவர்கள் வெற்றியைத் தேடி அலைவதில்லை. அவைகள் தாமாகவே இவர்களை அடைகின்றன. எவ்விதமோ எண்ணியன செவ்வனே நடந்து, இவர்கள் அவைகளின்பயனாகிய இன்பத்தை அனுபவிக்கின்றனர். இத்தகையோர் மிகச் சிலரே யாவர்.

இதற்கு மாறாக, பெரும்பாலோர் எண்ணிய கருமம் கைகூடாது மனத்தாங்கலுறுகின்றனர். உடல் வருந்தி உழைத்தால் என்ன? நல்ல சந்தர்ப்பங்கள் கிடைத்தால் என்ன? அல்லது பொருள் வலி இருந்தாற்றான் என்ன? இவர்கள் தொட்டகாரியம் துலங்குவதில்லை. தங்கத்தை அணுகினாலும் அது இரும்பாக மாறி, பயனற்றதாகி விடுகின்றது. "பட்டகாலிலேயே படும்" எனும் மொழிக்கு இலக்காக இவர்களுக்கு இழுக்குகள் ஒன்றாக வருவன அல்ல. ஏன் இப்படிச் சிலர் தொட்டன தங்கமாகவும், மற்றும் பலர் செய்வன அவலமாகவும் ஆகவேண்டும்? நாம் எவ்விதம் ஒழுகினால் வெற்றியடையலாம்? என்று சிந்திக்குமுன் - வெற்றித் திறவைத் தேடத் தொடங்குமுன் - அது எங்குக் கிடைக்காது என்று அறிந்துகொள்வது நன்மையாகும்.

நல்ல சமையம் கிடைக்கவில்லை; என் செய்வது? என்றும், விதிப்பயன் என்றும், அதிருஷ்டம் இல்லை என்றும், சாதாரணமாக நாம் சொல்வது வழக்கமாக இருக்கின்றது. இது உலக இயல். சமையம், சந்தருப்பம் - என்பது ஒரு பொருள் அல்ல. அது காற்றில் மிதந்துகொண்டிருப்பதும் இல்லை; ஒருவனுக்கு அமைந்து வெற்றி அளித்தும், ஒருவனுக்கு அமையாது நிலையழிவை வழங்கியும் இயங்கும் ஒன்றல்ல. புறத்தே அமையும் ஒரு நிகழ்ச்சியால் மட்டும் சித்தி உண்டாவதில்லை. அதனால் நலன் உண்டாவதாயிருந்தால், அவ்வித அமையம் அடைந்தோர் அனைவரும் ஒருதிற நிலையையே முடிவில் அடைதல்வேண்டும். இவ்வண்ணம் நடப்பதை நாம் காணுவதில்லை. உடன் பிறந்தோர் இருவர் ஒரு தொழிலில் ஈடுபடுகின்றனர்; தொழில் முறிந்து இருவரும் நட்டமடைகின்றனர்; ஒருவன் "அந்தோ! அழிந்தேன்!", என்று மனமுடைந்து தன்னை மாய்த்துக் கொள்கிறான்; மற்றவன், மறுபடி சிறு தொழில் ஆரம்பித்து, கால அளவில், முன்னைவிடச் சிறந்த நிலையை அடைகின்றான். இருவருக்கும் வந்த சந்தருப்பம் ஒன்றே; ஆயினும் இருவரது மன நிலைமட்டும் வெவ்வேறாக இருந்தமையான், ஒருவன் தன்னை நொந்துகொண்டு உயிர் நீங்குகின்றான்; மற்றவனோ தைரியத்தைக் கைக்கொண்டு, நட்டத்திற்குக் காரணங்கண்டு, வேறு திட்டம் போட்டு, உழைத்து, சிறந்த நலன் எய்துகின்றான். சந்தருப்பம் ஒன்றாக இருந்தும் இருவரது முடிபு மட்டும் வெவ்வேறாகி விடுகின்றது. இத்தகைய நிகழ்ச்சிகள் பலப்பல. இவைகள் "புறத்தே உண்டாகும் சந்தருப்பங்களால் வெற்றி உண்டாகாது" என்னும் உண்மையை விளக்குகின்றன. இந்நடப்புக்களால் உண்மை வெற்றியளிப்பது "மன நிலை" என்பதும் தெளிவாக்கப்படலாம்.

அதிருஷ்டம் அல்லது விதியினால் ஒருவனுக்கு வெற்றி உண்டாவதில்லை. உலகில் கேடுற்றவனே விதியைப்பற்றிப் பேசுகின்றான். தனக்கு நல்ல அதிருஷ்டம் இல்லாததால்தான், கீழ் நிலைக்கு வந்துற்றதாக நினைக்கின்றான்; "விதி வலிது" என்றும் கூறுகின்றான். "இன்று நமக்கு உணவு கிடைக்கவேண்டிய விதி இருந்தால் கிடைக்கட்டும்" என்று நாம் வாளா உட்கார்ந்திருந்தால் சோறு வாயில்

யுண்டாவதில்லை. அகத்தே உள்ளத்தி லெழும் வெற்றி எண்ணமே புறத்தே நன்மையாகப் பரிணமிக்கின்றது. சித்தத்தின் மகத்தான வன்மை ஒன்றினுலேயே நாம நன்மை யடைதல்கூடும்.

உலகில் மகன வெற்றியடைதற்குரிய வன்மை - ஆற்றல் - ஒரு தெய்விக சக்தியாகும். இது அவன் அகத்திலேயே அடங்கிக் கிடக்கின்றது. வரம்புடைய புறமனதிற்கும் (Surface mind or conscious mind) அது எண்ணும் கட்டுடைய எண்ணத்திற்கும் இவ்வாற்றல் சிறிதும் இலலை. தொடக்குடை மனதினுல் எண்ணும் எண்ணம் ஒருவாறு முடிவடைந்தாலும் அது நீர் மேற்குமிழி எனக் கடிதில் அவமாகும். உள்ளே மறைந்து கிடக்கும் உள்ளம் தெய்வமனம (Super conscious) எங்கும் நீக்கமற நிறைந்து கிடக்கும். கட்டற்ற பரம்பொருளைத் தொட்டு நின்று, அவ்வகண்டத்தினின்றும் ஆற்றலை அடைகின்ற படியால், அதன் வன்மை இத்தகைமைத்து என்று சொல்லல் இயலாது. இவ்வாற்றலால் மட்டுமே மனிதன் உண்மை வெற்றி யடையலாம். இச்சக்தி எல்லோரிடமும் இருக்கின்றது. இதை உணர்ந்து, பெருகி அனுபவத்திற்குக் கொண்டு வந்து, சரியான துறைகளில் உபயோகப் படுத்தாத காரணத்தாலேயே மனிதன் வீழ்கின்றான்.

வெற்றி உணர்ச்சி சிலரிடம், முற்பிறப்பிலோ இப்பிறப்பிலோ செய்யப் பட்ட பயிற்சியால், அடைந்த அனுபவங்களது முதிர்ச்சியால், இயற்கையாகவே மனதில் அதிகமாக உறைந்து கிடக்கலாம. வெற்றி யடைவதே இவர்களது இயல்பு. தற்காலக்கல்வி முறையும், நாகரிகமும் இவரது தெளிந்த உள்ளததைக் கலக்குவதில்லை. இவர்களைப்பற்றி நாம் அதிகம் கவனிக்க வேண்டுவதில்லை. வெற்றியுணர்வு இயல்பாக இல்லாத மக்கட்கு இந்நாட் கல்வி முறை, அவ்வித நல்லுணர்வை நல்கும் தன்மையதாகவில்லை என்னலாம். புறமனதிற்கு மட்டும் ஏதோ சிறிது உணவு கிடைக்கின்றதே தவிர சக்தி நிலைக்களஞ்சியமாகிய உள்ளம் இக்காலப் படிப்பால் சிறிதும் தெளிந்து சிறப்படைவதாகத் தோன்றவில்லை. விலங்குமனதின் விலங்கை அறுத்துத் தெய்வமனதை ஒளிரச் செய்வதற்குக் கல்வி சிறிதும் உதவி செய்வதில்லை. சோதனைகளில் நன்கு தேறிய பலர், தேருத சிலரிடம் வேலை செய்ய நேருகின்றதே இதற்குத் தகுந்த சான்ருகலாம். பட்டங்களைப் பெற்றிருந்தும் மனிதனது அகத்தில், அவனது உண்மை நிலையை உணர்த்தும் தெய்விக உணர்ச்சி, அறிந்தவைகளை வாழ்வில் உபயோகிக்கும் திறன் இவை சிறவாமையே அவனை முன்னேற வொட்டாது தடுக்கின்றன. இன்னல் உணர்வைக்கிளர்ந்து பெருக்காத இக்கல்வியும், பொருள் மிகுதியாக உள்ளவனுக்கு மட்டுமே கிடைப்பதாக இருக்கின்றது. தன முடையோன் வாழ்வு அதிக துன்பமில்லாது நடக்கும்; துன்பமில்லாதபோது மனிதனுக்கு நல்லுணர்வு - உண்மை வன்மை- இவற்றைப் பெருக்க மனமும், அவகாசமும் அகப்படாமற் போவதியற்கை. இது பொருளால் - நன்னிலைமையால்- வரும பெருந்தீமை. துன்பந் தரும் அனுபவங்கள் எளியவனுக்கு - வேறு பற்றுக் கோடில்லாதது பற்றி - எண்ணும் சக்தியைக் கொடுக்கின்றது. யோசனையால் அறிவும் சக்தியும் பெருகி, அவனிடம உண்மை ஆற்றல் உண்டாகின்றது. கீழிறக்கும் தீக்குணங்கள் அவனிடம் அருகி அருகி, அவனது மனம் மேல்நோக்கியே நிற்க ஆரமபிக்கின்றது. தனது அகத்தில் ஒளிரும் ஊற்றுப் பெருக்கைக் கண்டு, உள்ளொளியைப் பெருக்கித் திறனடைகின்ருன்.

நாம் ஓரிடத்தில் உட்கார்ந்து ஊன்றி உன்னுவோமாகில் எக்காரியம் செய்யலாம் என்று புலப்படும். எவ்வழிகளில் உழைத்தால் நமக்கும் பிறருக்கும் நன்மை விளையும் என்று அறிந்துகொள்ள லாகும். அத்துறைகளில் உழைத்துத் தேறிக் கடைற்ற,

பின் அதனால் நமக்கு நன்மை விளைதலைக் காணலாம். நாம் நமக்கு நன்மை - லாபம் - உண்டாக வேண்டும் என்று மட்டும் எண்ணுகின்றோம். ஆனால் நம்மால் இயன்ற நன்மையைப் பிறருக்குச் செய்ய அஞ்சுகின்றோம். இது இயற்கைக்கு விரோதம். நமக்கு நன்மை உண்டாக வேண்டுமாகில் நாம் பிறருக்கு நன்மை செய்யவேண்டும். உள் நோக்கி, நவசக்தியை அடைந்து, அதனால் வரும் பயனை மற்றவரோடு பங்கிட்டு நாம் ஒழுகினால் மட்டுமே நமக்கு நன்மைமேன்மேலும் பெருகிக்கொண்டு போகும். நமக்கென வாழாது உலகத்திற்காக வாழ்தலே உண்மை வெற்றியை அளிக்கும்.

வெற்றி என்பது என்ன? நமது அகத்தில் ஆண்டவன் கற்பனையால் எழுந்த அவா நிறைவேறல். தெய்வ மனதில் ஆண்டவன் செயலால் எழும் ஒன்று நன்மையாகவே இருக்கும் என்பதற்கு யாதும் ஐயுறவில்லை. நமது மனதில் எழும் அவா பிறர்க்கு நன்மை நல்குவதாயிருக்குமாகில், அந்த எண்ணம் தெய்வ மனதில் இறை அருளால் அனுப்பப்பட்டது என்று அறிந்து கொள்ளலாம். இவ்வித எண்ணம் நிச்சயம் நிறைவேறும். அதுவும் நம்முள் இருக்கும் இறைவனது வன்மை ஒன்றினாலேயே நிறைவேற வேண்டும். புலன் பொறி அடக்கமிலான் உள்ளத்தில் இத்தகைய எண்ணம் உண்டாகாது. இவனது எண்ணங்களின் மேல் சுயநலப்பூச்சு பொலிந்து விளங்கும். சுயநலங் கலந்த எண்ணம் - மனிதனது எண்ணம் ஒருவாறு முடிந்தாலும் நிலை பெற்று நெடுநாள் நில்லாது.

உண்மை வெற்றிவேண்டில் இத் தெய்வ மனம் ஒளிரவேண்டும். அதன் வன்மை பெருகிய காலத்து நமது வாணாள் மாறும்; நமது நோக்கமும் மாறும். அப்போது உண்டாகும் எண்ணத்தைச் செய்துமுடிக்க நமக்குத் திறமையை ஆண்டவன் வைத்திருக்கின்றார் என்று உணர்வோம். முன் இடையூறாகத் தோன்றியவைகள் இப்போது கானல் நீராகின்றன. சக்தியின் ஊற்றுக்கண் நம்மகத்தே திறந்து விட்டபடியால் நாம் எவ்வித துன்பங்களுக்கும் அஞ்ச வேண்டுவதில்லை. அஞ்சுவது யாதொன்றுமில்லை; அஞ்ச வருவதுமில்லை. ஆற்றுப்பெருக்கை அணையினால் அடைக்கலாம். இவ்வூற்றுப் பெருக்கை அடைக்க யாராலும் இயலாது. அது நம்மை முன்னிழுத்துச் சென்றே தீரும்.

இத்தெய்வமனம் பெற்றவனே உண்மை வெற்றி - அழியாத - குறையாத - துன்பக் கலப்பில்லாத இன்பம் அடைபவன். இவன் வாழ்வில் உள்ள எல்லாத் துறைகளிலும் நன்மை அடைவான். தனக்கு இவ்வுலகில் இவ்வளவு பொருள்தான் வேண்டும் என்று எவன் வரையறுத்து, அதை அடைந்ததும், மனச் சமாதானம் அடைகின்றானோ அவனே சிறந்த வெற்றியடைகின்றவன். தனது குடும்பத்தில் சிறிதும் சச்சரவு இல்லாமல், ஒற்றுமையோடும், மகிழ்ச்சியோடும் தனது கடமையைச் செய்து எவன் வாழ்வு நடாத்துகின்றானோ அவனே உண்மை வெற்றி அடைகின்றவன். பின்னும் எவன், உலக வாழ்வில் அழுந்தித் தனது மனதைக் கல்லாக்கி விடாது, பிறர் வருத்தம் தனதாய் எண்ணி இரங்கும் இளகிய மனத்தோனாய், அவசியம் வேண்டியதற்கு மேல் பொருள் குவிப்பதில் மனம் வெறுத்தோனாய், தனது குணங்களைச் செம்மைப்படுத்தி, தீயன செய்தல் ஒழித்து, குடும்பத்தார் யாவரும் நல்லவன் என்று வாழ்த்த, தனது ஆட்களும் போற்ற, எல்லோருடனும் நலியாத அன்பு பூண்டு, தன்னலங் கருதாது, காலத்திற் கேற்பப் பிறருக்கு நன்மை செய்வதையே தனது ஒரு நோக்கமாகக் கொண்டு, பணிசெய்யும் பெற்றியாளனோ, அவனே உண்மையில் சிறந்த வெற்றி அடைகின்றவன்.

இவ்விதம் நமது வாணாளைப் பண்படுத்த முடியுமா? நாம் மனது கொண்டால் செய்யலாம். மனம் களைக்

காது விடா முயற்சியோடும், பொறுமையோடும், நம்பிக்கையோடும், உழைக்கத் தீர்மானம் செய்துகொண்டால் திண்ணமாக இவ்விதம் நடக்கும். பயிற்சியால் நமது மனதை மாற்றியமைக்கத் தீர்மானித்துக் கொண்டால் நிச்சயம் வாழ்வைச் சீர்திருத்தலால், நாம் பயிற்சியால் மனதை ஆண்டவன் வழிப் படுத்தா விட்டால், நாமே முயன்று மனதை மாற்றியமைக்கா விட்டால், துன்ப அனுபவங்களாய சாட்டிகள் நம் மேற்றாக்கி நம்மை "வழிபடு" என்று கட்டாயப்படுத்தும். நாம் ஏன் இவ்விதத் துன்பங்களுக்கு ஆளாக வேண்டும்? நாமே வழிப்படில் பின் எந்நாளும் இன்பமே; துன்பம் இல்லை. வெற்றியே; தோல்வி இல்லை.

முதலில் நாம் செய்ய வேண்டுவதென்ன? கட்டுடைய தீமை தரும் எண்ணங்களை (Negative thoughts) நமது சித்தத்திலிருந்து அறவே அகற்ற வேண்டும். அதனால் நமது சித்தம் தெளியும். பிறகு நன்மையான எண்ணங்களை (Positive thoughts) நமது உள்ளத்தில் ஊன்ற வேண்டும். இந்த மாறுதலை நாம் செய்து விட்டால், இந்த வெற்றியை நாம் அகத்தில் அடைந்து விட்டால், பின் நமக்குப் புறத்தில் வெற்றி தானாகத் தோன்றும்.

இந்த மன மாற்றத்தைச் செய்வதற்கு, சித்தம் தெளிவடையச் செய்வதற்கு, முக்கியமாக வேண்டப்படுவது ஆழ்ந்த சிந்தனை; தியானம்.

# இந்தியப் பொருளாதாரம்

## I. இந்திய மக்கள்

[திரு. A. முத்தையா, எம். ஏ.]
*(Lecturer in Economics, Pachaiyappa's College)*

நம் நாடு மிகப் பெரிய நாடு. இத்தேய மக்களின் தொகை 351, 450, 689. இத்தேயத்தினரின் எண் மிக அதிகமாயிருப்பினும் பொருளாதார நிலை மிகக் கேவலமானதாக இருக்கிறது. அதனை விருத்தி செய்யவேண்டுமென்பது அனைவரும் விரும்பும் விஷயம். எனவே, இந்த நிலையில் இந்நாடிருப்பதன் காரணங்களை ஆராய்தல் அவசியமாகும். அக்காரணங்கள் பலவற்றுள் முதலாவதாக இத்தேச மக்கள் நிலையைப் பொறுத்தவரை சில விஷயங்களைக் கவனித்தல் நன்று.

மிக்க நாகரிகத்துடன், செல்வச் செருக்கால் செம்மாந்திருக்கும் தேசத்தினர்களின் இயல்பை ஆராய்ந்தால், அத்தேசத்திலெல்லாம் இறப்பவர்களும், பிறப்பவர்களும், நூற்றுக்கு இத்தனை பேர் எனக் கணக்கிடில் மிகக் குறைவே. நம் நாடோ நாகரிகம் நிறைந்த நாடுகளெல்லாவற்றையும் விட அதிகமான இறப்பவர், பிறப்பவர் தொகையைப் பெற்றுள்ளது. இது மிகத் துக்ககரமான காரியம். சாதாரணமான நன்னிலையிலுள்ள மக்களிடையே, பொருள் நூல் வல்லுநர் முடிபின்படி, பிறப்பவர் தொகை ஆயிரத்துக்கு நாற்பத்தைந்துக்கு மேலும், இறப்பவர் தொகை பதினைந்துக்கு மேலும் சராசரி கணக்குப் பார்ப்பின் இராது. இந்த எண்கள் சிறிது அதிகமாகவே எடுத்துக்கொள்ளப் பட்டவை. இந்தியாவிலோ சராசரி பிறப்பவர் தொகை கிட்டத்தட்ட ஆயிரத்துக்கு 43·2. மிக உயர்ந்த எண்ணிக்கை 45 எனக்கொள்ளின் நம் நாடு இவ்விஷயத்தில் பின்னடைந்திருப்பதாகக் காணோம். இறப்பவரின் மிகக் குறைந்த தொகை ஆயிரத்துக்குப் பதினைந்தெனில், நமது தேசத்திலோ இரண்டரை மடங்குக்கு மேல் அதிகமாயிருக்கிறது. ஆகவே,

இந்தியமக்கள் மிக அதிக மக்கட் பேற்றாலும், மிக அதிக மரணத்தாலும் துன்புறுகின்றனர் என்பது வெளிப்படை. இந்தியாவில் மிகக் கொடிய நோய்கள் பல சமூகத்தை உண்ணுகின்றன என்பதை, பெரிய நகரங்களின் ஜனன மரணக் கணக்கிலிருந்து தெரிந்துகொள்ளலாம். சிறு குழந்தைகளின் சாவும் (சிசுமரணமும்) தாய்மார்களின் மரணமும இத்தேசத்தில் மிக அதிகமாயிருக்கின்றன. இறப்பவர், பிறப்பவர் இருவரின் தொகையும் அதிகமாயிருப்பதால் மக்களின் வாழ்நாள், தேகஆரோக்கியம் முதலிய பல இன்றியமையாச் சௌகரியங்களுக்கு இடையூறுகள் பல உண்டாகின்றன.

பல காரணங்களால் அநேக முன்னேற்ற நாடுகளில் இறப்பவர் பிறப்பவர் இருவர் தொகையும் மிகக் குறைவாயிருக்கிறது. நம் நாட்டினர் "பிள்ளைப் பேறு" என்னும் விஷயத்தில் போதிய அறிவுடையராக இருக்கவில்லை என்பது மிக வருந்தத் தக்கதொன்றாகும். ஆண் மகனெனின் 15 அல்லது 16 வயது ஆவதன்முன்னேயே அவனுக்கு மணவினை முடித்துவிடுகிறார்கள். பெண்ணெனிலோ பெரும் பாவம்! கலியாணமென்பதின் பொருள்கூடத் தெரியா இளம் பருவத்தே வாழ்க்கைத் தெப்பத்தில் பிணைக்கப்பட்டு விடுகிறார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் பட்டினத்துப் பிள்ளையார் என்னும் பேரறிஞரின் செய்யுளொன்று ஞாபகத்துக்கு வருகிறது. அச்செய்யுள் வருமாறு:—

"நாப் பிளக்கப் பொய்யுரைத்து
நவநிதியந் தேடி
நலமொன்று மறியாத
நாரியரைக் கூடி
பூப்பிளக்க எழுகின்ற புற்றீசல்போலப்
புலபுலெனக் கலகலெனப்
புதல்வர்களைப் பெறுவீர்
காப்பதற் கும்வகை யறியீர்
கைவிடவும் மாட்டீர்
கவட்டுத தொன்மரத் திடுக்கிற்
கானுழைத்துக் கொண்டே
ஆப்பதனை அசைத்திட்ட குரங்குபோல
அகப்பட்டீர் கிடந்துழல
அகப்பட்டீரே."

இச்சீரிய மொழியில் உலக அனுபவம் ததும்புவதைக் காணலாம். எவரேனும் இதைவிடச் செம்மையாக உலக நிலைப் படம் எழுதக் கூடுமோ?

இந்தியாவில் மிகச் சிறிய வயதிலேயே கலியாணமென்னும் கயிற்றால் கட்டுண்டு மீளாத துன்பத்துக்கு ஆளாய் வருந்தும மக்கள் எண்ணிலர். நீண்ட நாட்களாக நமது சமயங்களில் ஆண் மகவுப்பேறு அவசியமெனவும், தநயனில்லாத் தம்பதிகள் "புத்" என்னும் நரகில் விழுவரெனவும் கூறியுள்ள எண்ணங்கள் மக்களிடையே வேரூன்றி இருக்கின்றன. தான் ஒரு குடும்பத்தைக் காக்கத்தக்க சௌகரியமும், பொருள் வருவாயும், தேக நலனும் தனக்கு இருக்கின்றனவா என்பதை, விவாகம செய்துகொள்ளப்புகுவோன் சிறிதும் சிந்திப்பதில்லை. அன்றி எவரேனும இவ்விஷயங்களைப் பற்றிக் கேட்பின் "எல்லாம் எனையாளு மீசன் செயல்" "கரும பலன்படி நடக்கும்" "மரம் வைத்தவன் தண்ணீர் விடுவான்" எனப் போலி வேதாந்தம் பேசப் புகுகின்றார்கள். மணமகனுக்கு விருப்பமில்லையெனினும், வீட்டில் நமன் வருகையை நாடோறும் பார்த்திருக்கும் பாட்டி முதலியோருக்கு விளையாடுவதன் நிமித்தம் உயிர்ப்பொம்மை யொன்றைப் பெற்றுக்கொடுத்தல் அவசியமென எண்ணவேண்டிய சந்தர்ப்பங்கள் பல. கலியாண மென்பதன் வாசனையைக்கூட அறியாத, பால்மணம் மாறாப் பச்சிளம் பெண்களை, மனை வாழ்க்கைத் துணையாக இருக்கும்படி செய்து, குழந்தை பெறும் கருவிகளாக நம் நாட்டினர் செய்யின், அவர்களை அறியாதவர்கள் என்கோ? அன்றி அன்பிலிகளென்கோ? அல்லது பெரும் பாவிகளென்கோ?

ஆடவர்களும் பெண்களும் அதிபாலியர்களாய், காதலின் விசித்திரங்களை அறியாதவர்களாய், அறிவும் குறைவாக உடையவர்களாய் இருப்பின் "காதலிருவர் கருத்தொருமித்து ஆதரவு பட்டதாம்" இன்பம் பெறுவதெங்ஙனம்?

இக்காரணங்களால் நம் நாட்டுப் பெண் மணிகள் மிகச் சிறிய வயதிலேயே நோய்வாய்ப்பட்டுப் பேரின்ப வாழ்வை நாடிச் செல்லுகின்றனர். அநேக தாய்மார்கள் பல குழந்தைகளைப் பெற்று மறலி மடியில் வாரிக் கட்டிக்கொடுத்து விட்டுப் பெருந் துயருறுகின்றார்கள். பிறக்கும் மக்கள் தொகையும் இறக்கும் மக்கள் தொகையும் அதிகமாயிருப்பதை நோக்கில் எத்தனை தாய்மார் ஈரைந்து மாதம் வருந்திப் பெற்ற இன்னிளங் குழவிகளை இழக்கின்றனர் என்பது புலப்படும். பேதை அல்லது பெதும்பைப் பருவத் தாய்மார் பலர் குழந்தைப் பேற்றின்போது உயிர் துறக்கின்றனர்; அல்லது பிணியால் வருந்துகின்றனர்; தேக துர்ப்பல காலத்தில் குழந்தைகளைப் பெற்று பலஹீனமான பல ஜீவன்களை உலகில் பரப்புகின்றனர்.

உலக வாழ்க்கையை உள்ளபடி அறிந்துள்ள மேல் நாட்டினர் பலர் இவ்விஷயத்தில் மிக நன்றாக நடந்து கொள்ளுகின்றனர். அந்நாடுகளில் எவனும் தான் குடும்பத்தைச் சரியான நிலையிலிருத்திப் போஷிக்கச் சக்தனென நன்கு அறிந்த பிறகே மணம் செய்து கொள்ளுவான். பெரும்பாலும் மிகச் சிறிய வயதில் விவாகம் செய்து கொள்ளுவதில்லை. காலந் தாழ்த்து மணப்பதால் குழந்தைகளின் எண்ணிக்கையும் குறைவுபடுகின்றது. அந்நாட்டுப் பெண்மணிகளும் மேலும் மேலும் சமூகத்துறைகளிலும், அரசாங்கத்துறையிலும் பெரிய தொண்டுகள் செய்ய முற்பட்டு அதில் ஈடுபட்டு இருக்கிறார்கள். பல குழந்தைகட்குத் தாயாகி அவைகட்கான பல வேறு காரியங்கள் செய்யும் பொறுப்பை அவர்கள் பாராட்டுவதில்லை. மேலும் தம் குடும்ப வாழ்க்கையின் அமைப்பு நிலையை ஓர் அளவுக்குக் கீழே போகாமல் வைத்திருக்க வேண்டுமென்னும் ஆர்வம் அவர்கட்கு மிக அதிகமாக இருக்கிறது. அம்மாதிரியான வாழ்க்கை அமைப்பு நிலை (Standard of life) யைப்பற்றிய எண்ணங்கள் "கர்ப்பத் தடை முறைகள்" (Methods of Birth Control) பலவற்றைக் கையாளுமாறு ஊக்குகின்றன. இத்தியாதி காரணங்களால் அவர்கள் அதிக மக்களைப்பெறுவதுமில்லை; அவைகளைப் பறிகொடுத்து அலறித் துயருறுவதுமில்லை. எனவே, அவர்கள் மிக நல்ல தேக நலனுடன் நீண்ட நாள் இன்பமாக வாழுகின்றார்கள். எனனே! அவர் அறிவின் ஆட்சி! அறிவுடையார் எல்லாம் உடையர்.

இந்திய ஜனத்தொகை, உலக மக்களின் மொத்தத் தொகையில் ஐந்தில் ஒரு பங்காகும். சில நகரங்களிலும், சில விவசாய நாட்டுப் பகுதிகளிலும் ஜன நெருக்கம் (Density of population) மிக அதிகமாக இருக்கிறது. வேளாண்மைத் தொழிலினர், ஒரு சதுரமைல் பரப்புப் பிரதேசத்தில் 250 பேருக்கு மேலிருப்பின் கஷ்டப்பட வேண்டியிருக்குமென்பது மேல் நாட்டுத் தேச அநுபவ சித்தாந்தம். நம நாட்டிலோ சில விவசாய ஜில்லாக்களில் சதுரமைலுக்கு 600 பேருக்கு மேலிருக்கின்றனர். நாகரிக நாடுகள் எல்லாவற்றுள்ளும் நாம் நாட்டில்தான் பெரும்பாலான மக்கள் விவசாயத்தைத் தமது ஜீவாதாரத் தொழிலாகக் கொண்டுள்ளனர். வாணிபம், கைத்தொழில்கள் முதலிய தொழிலினர் மிகக்குறைந்த தொகையினரே.

வேளாண்மைத் தொழிலினர் நூற்றுக்கு 71 பேர். அதனுடன் வேட்டையாடல் முதலிய தொழிலினரைச் சேர்த்தால் நூற்றுக்கு 73 பேராகும். கைத்தொழிற்சாலையிலும், வேறிடங்களிலும் தொழில் செய்து பிழைப்பவர் நூற்றுக்குப் பத்துபேர். அதில் நூற்றுக்கு ஒருவர் வீதம் தான் கைத் தொழிற்சாலைகளில் (Organised industries) வேலை செய்வோர். வியாபாரத்திலீடுபட்டோர் நூற்றுக்கு ஆறுபேர். பண்டங்களை இங்குமங்கும் கொண்டுபோகும் தொழிலில் (Transport) உள்ளவர்கள் நூற்றுக்கு இருவர். அரசாங்க வேலை

_யம், நாட்டுப் பாதுகாப்புத் துறையிலும்,(Administration and protection of the country) இருப்பவர் நூற்றுக்கு ஒன்றரைப் பேர். ஏனையோர் பலர் விவசாய சம்பந்தமான பல வேலை செய்பவர்.

அதிகப்படியான மக்கள் மேல் நாட்டிலிருந்தால் அவர்கள் பலவேறு வகையாலும் அக்கஷ்டத்தை நிவர்த்தி செய்துகொள்ளுகின்றனர்; வேறு தேசங்களில் குடிபுகுகின்றனர்; அந்நிய நாட்டு வியாபாரத்தில் நுழைகின்றனர்; ஏழைத் தேசங்களின் பொருளெனும் உயிரை ஈர்த்துச் செல்லுகின்றனர். துர்ப்பாக்கிய வசமாக நம் நாட்டிற் பிறந்தோர் இங்கேயே இருந்து வருந்தி மடிய வேண்டுவது தான். வேறுநாடுகளுக்குச் செல்வோமென நினைக்கும் போதே துன்பங்கள் பல தொடருகின்றன. நம்மைப் படைத்த பிரமன் நமக்கு வெண்ணிற உடலைக் கொடாததே நாம் பல கஷ்டங்களுக்கு உட்படவேண்டுமென்பதைக் காட்டுகிறது. எனவே, மேல் நாட்டில் அதிகப்படியான மக்கள் செய்து கொள்ளும் சௌகரியங்கள் நமக்கு முயற் கொம்புகளாகின்றன. ஜனவிருத்தியோ மிக அதிகமாகிக் கொண்டே வருகிறது. பொருள் விருத்தியோ அல்லது சௌகரிய விருத்தியோ நமமைப் பகிஷ்காரம் செய்கின்றது. எனவே, நம் நாட்டு மக்கள் வேளாண் தொழிலிலேயே தமவாழ்நாளைச் செலவிட முயலுகிறார்கள்; ஓராண்டில் பலநாட்களில் செய்வதற்கொரு வேலையுமின்றி வீண்பொழுது போக்குகிறார்கள்; மிடிவாய்ப்பட்டு வருநதுகிறார்கள். நிலவருமானம் மிகக் குறைவு. அதை நம்பியிருப்போர் பலர். எனவே துக்க விருத்தி.

நமது நாட்டில் 'விசும்பிற்றுளி வீழினல்லான் மற்று ஆங்கே, பசும்புல் தலை காண்பரிது' நம் நாட்டுச் செழிப்பு மழை, ஜலவசதி இவைகளைப் பொறுத்ததாக இருக்கிறது. பருவப் பெயர்ச்சிக் காற்று சரியாக, இருப்பின் நாடு செழித்துப் பணம் மலிந்திருக்கும். இல்லையேல் பஞ்சம் ஏற்படல் நிச்சயம். பொய்யாமொழியார் "விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியன் உலகத்து, உள்நின்று உடற்றும் பசி" என்று கூறியுள்ளது நம் நாட்டின் சிறப்பணியாகும். எனவே, நம மக்களில் பெரும்பானமையோர் வேளாண்தொழிலில் ஈடுபட்டிருக்கின்றன ரெனின், அவாகளின் வாழ்க்கை நலன் எவ்வளவு அநித்தியம, நிலையற்றது, குறைநத காலவரை யறையுட்பட்டது என்பது தெள்ளிதில் புலனுகும். 1880-ம் வருஷததுப் பஞ்ச விசாரணைக் கமிட்டியார் இவ்விஷயத்தைச் சாங்கோ பாங்கமாகத் தெரிவித்துள்ளார். இந்திய மக்களின் வறுமைக்கும், சிறிய அசந்தர்ப்ப காலத்தும் பெரிதும வருந்த வேண்டிய நிலைமைகக்கும் பெரிய காரணம் பெரும்பாலான இந்திய மக்கள் விவசாயததையும், பருவகாலத்தையும் நம்பியிருப்பதுதான் என்பதை அக் கமிட்டியார் விவரமாகக் கூறியுள்ளார்.

இம்மாதிரியான தாழ்ந்த பொருளாதார நிலையை அறிய ஒரு கருவியுண்டு. பெரும்பாலும் நகரங்களும், பட்டணங்களும் கைத்தொழிலிலும், வாணிபத்திலுஞ் சிறந்துள்ளன. நம் நாட்டில் நூற்றுக்குப் பத்துபேரே பட்டணங்களில் வசிக்கின்றனர். ஏனையோர் கிராமங்களில் வசிக்கின்றனர். இதிலிருநது நம் நாட்டில்தொழில் துறைகளில் ஈடுபட்டவர் மிகக்குறைந்த தொகையினரே என்பது அறியக் கிடக்கின்றது. கிராமங்களிலேயே பெரும்பாலரும் இராமல் பட்டணங்களிலும கிராமங்களிலும் ஜனங்கள் விரவி வசிக்கவேண்டுமெனின் இந்நாட்டின் வாணிபம், கைததொழில் முதலியவை மிகவும் மேம்பட வேண்டும். சீக்கிரம் விருத்தியாக வேண்டும்.

## நமது நாட்டில் அமிதமான மக்கள் உளரா ?
## (Is India over-populated)

ஒரு நாட்டில் பொருள் உற்பத்தி (Production) விவசாயம் இவைக்

ளெல்லாம் மிக உன்னத நிலையிலிருப்பினும் ஓரளவுக்கு மேற்பட்ட மக்கள் இருப்பின சௌகரியமாக, வாழ்க்கை நலன்களுடன் இருத்தல் முடியாது. பொதுவாக மக்களின் எண் அதிகமானல் வேலைசெய்து பொருள் விருத்தி செய்பவர்கள் அதிகப் படுவார்கள்; பொருள் விருத்தி அதிகமாகும்; சுகம் அதிகரிக்கும் எனக் கொள்ளப்படும். ஆனல் ஒரு காலத்துக்குப்பின், பொருள் விருத்திசெய்யும் முறைகளும் சௌகரியங்களும் மாறும விருக்குமானல், ஜனங்கள் விருத்தியாகும அவ்வளவு அதிகம் பொருள் விருத்தியாகாது குறைவுபடும நிலைமை உண்டாகும். ஜனங்கள் விருததியாகி அதற்கேற்பப் பொருள் விருத்தியாகாத நிலைமை சில நாட்டில் உண்டு. பொருள் விருத்தியின் தொகை குறைந்த வேகத்துடனும் மக்கள் விருத்தித் தொகை அதிக வேகத்துடனும் போனல் இன்பம் குறைவுபடும். ஆகவே, ஒவ்வொரு தேசததிலும் மக்கள் விருததியைவிடப் பொருள விருத்திகுறைவுபடக்கூடாது. அப்படிக் குறைவுபட ஆரம்பிததால் அந்த நாடு அதிகப்படியான மக்களைப் பெற்றுள்ளது என முடிவுசெய்யவேண்டும. அதை அமித மக்கள் நிலை எனக் கூறலாம் (over popu lation.)

நம் நாட்டில் மக்கள் அமிதமாயிருக்கின்றனரா அல்லவா என்பதைப்பற்றிப் பல வேறுபட்ட அபிப்பிராயங்களிருக்கின்றன. சிலர் இந்திய ஜனத்தொகை அதிகமல்ல; நாட்டு வளத்தைச சீர்திருத்தினல், பொருள் உற்பத்தி முறைகளை மாற்றினல், இன்னும் அதிகமான ஜனங்கள் சௌகரியமாக இருக்கக் கூடும்; இப்போதைய கஷ்டங்களுக்கெல்லாம் காரணம் பொருளை மக்களிடம் செம்மையாய்ப் பகர்ந்திடாமையே (Distribution) என்றெல்லாம் கூறுகின்றனர். இறந்த காலத்தில் (In the past) பொருள் விருத்தி அதிகப்பட்ட விடங்களில், மக்கள் வாழ்க்கை முறைகள் விருத்தியடைந்து மேம்படவில்லை. பெரும்பாலும் அதிகப்படியான பொருள் வருவாய் ஜனதொகையை அதிகப்படுத்தி யுள்ளதே யொழிய மக்கள் வாழ்க்கை நலனை (Standard of life) விருத்தி செய்யவில்லை. பஞ்சாபில் கால்வாய்க் குடியேற்ற ஜில்லாக்களில் (Canal colonies) சிறிய தொகையினர் பெருஞ் சௌகரியஙகளுடன் ஆரமப காலத்திலிருந்தனர். இபபோது வருவாய் மிக அதிகமாகாவிடினும மக்கள் தொகை அதிகரித்து வருகிறது. கூடிய சீக்கிரம் மேட்டூர் அணைபபாசனப பிரதேசங்களில் இமமாதிரியான நிலையைக் காண்போம். எனவே, இநதியமக்கட்பான்மை பிழைப்பு வழிகளை வருத்துதலேயாகும். உயிரை உடலில் காப்பதற்கான ஜீவன வரும்படி வரும்வரை மக்கள் இந்தியாவில் விருத்தியாகி வருகின்றனர் என்பது அறியக் கிடக்கின்றது. புது நிலங்கள் சாகுபடிக்குக் கொண்டுவரப்படின் அந்தபபகுதிகளில் ஜனத்தொகை மிகத் துரிதமாக அதிகரிக்கின்றது. எல்லாரும் மணத்தாலும், பால்ய விவாகம் அதிகமாயிருப்பதாலும், அறிஞரின்முறைகளைக்கொண்டு ஜனப பெருக்கைத் தடுக்காததாலும், ஜனத்திரள் அதிகமாகி, விவசாய வரும படி விருததியைவிட வேகமாகப் பெருகி, கஷ்டததை உண்டாக்குகின்றது.

அதிக ஜன நெருக்கம் (முக்கியமாக விவசாயஜில்லாக்களில்) பணப்பெருக்கு, திடீரென அதிகரித்த இடங்களில் ஜனப பெருக்கும் துரிதமாயும் அதிகமாயும் இருககிற தென்னும் உண்மை, மற்ற தேசங்களின் அநுபவத்தால் பிறப்பவர் இறப்பவர் எண் அதிகமாக இருநதால் தாழ்ந்த வாழ்க்கை நிலைக்கு அறிகுறி என்னும விஷயம் இவைகளையெல்லாம் கவனித்தால், இந்தியாவில் பொருள் விருத்தி வேகத்தைவிட ஜன விருத்தி அதிக துரிதமாய் இருக்கிறது. இம்மாதிரியான கஷ்டமிரா விட்டால் ஜனங்களின் சுகம் இன்னும் அதிகமாக இருக்க முடியும் என்னும் விஷயங்கள்

உள்ளங்கை நெல்லிக்கனியெனத் தெள்ளிதில் தெரிகின்றன.

இயற்கையின் தன்மையைக் கவனிப்போமானால் எந்தச் சமூகத்திலும் ஜனங்கள் அறிவின் பாற்பட்ட முறைகளால் மக்கட் பெருக்கைத் தடுக்காவிட்டால் பிறப்பு அதிகமாகும். இயற்கையின் தன்மை சில விஷயங்களில் சிறந்ததாயும் சிலவற்றில் கொடியதாகவும் இருக்கிறது. இயற்கையின் முறைகள் இவ்விஷயத்தில் மிகப் பயங்கரமானவை. நாமே அவசியமானபோதெல்லாம் கர்ப்பத்தடை, இல்வாழ்க்கையிலும் மிதமான இன்ப நுகர்ச்சி, சரியான பிரமசரிய பாதுகாப்பு முதலிய முறைகளை அநுஷ்டிக்க வேண்டும். இல்லையேல் இயற்கையானது கொடு நோய்கள், பஞ்சம், யுத்தங்கள் முதலிய நிணவாய்க் கொடுங்கூர் ஆயுதங்களைச் சனங்களின்மேல் பிரயோகிக்கின்றன. அப்போதுதான் பிறப்போர், இறப்போர் எண் அதிகமாகிறது; துக்கம் மிகுகின்றது; நோய் அதிகரிக்கின்றது; சுகம் குறைகின்றது.

நல்ல தடை முறைகளை அநுஷ்டியாமையாலும், ஜனப் பெருக்குச் சக்தி (Fecundity) பலினத்துவம் அதிகமாயிருப்பதாலும், பொருள் விருத்தி அதிகமாக விருத்தியாகாமையாலும் இந்தியாவில் அமித ஜன மிருக்கிறதெனப் பேராசிரியர்கள் ஜாதார், பேரி என்பவர்கள் எண்ணுகின்றனர்.

பேராசிரியர் கேல் என்பவர் இந்தத் தேசத்தில் தற்போதுள்ள தொழில் முறைகள், நிலைமை இவைகளையும், ஜனத் தொகையையும் கவனித்தால் அமித ஜனமுண்டெனக் கூறவேண்டியிருக்கிறதென்கிறார். ஆனால் தொழில் முறைகளையும், பொருளுற்பத்தியையும் அதிகரிக்கச் செய்து ஜனவாழ்க்கை நலனையும் அதிகப்படுத்தல் கூடும் என்றும் அவர் கூறுகிறார்.

பேராசிரியர் ஜெவான்ஸ் (Prof. H. S. Jevons) என்பவர், இந்திய மக்களின் பொருளாதார நிலையை அதிகரிக்கச் செய்து, சராசரி தலைவீதம் வரும் வருமானத்தை விருத்தி செய்ய வேண்டுமானால், இந்தியக் கைத்தொழில்களெல்லாவற்றையும் கூடிய சீக்கிரம் மிகத் துரிதமாக விருத்தி செய்ய வேண்டும்; ஜனப் பெருக்கின் வேகத்தைவிட கைத்தொழில் விருத்தி, பொருள் நிலை விருத்தி முதலியவைகள் வேகமாகப் பெருக வேண்டும் என்று கூறுகிறார். இன்னும் அதிக மக்கள் கூட இந்நாட்டில் சௌகரியமாக இருக்கக்கூடும். அதற்குப் பொருள் வருவாய்கள் விருத்தி யடையவேண்டும். வேளாண்மையில் கூட பலவேறுபட்ட விருத்திகள் செய்யவேண்டும். வேளாண்மை முறைகளும் பாசனம் முதலியவைகளும் இன்னும் செம்மையுறவில்லை. பொருள் உற்பத்தியை அதிகரிக்கச் செய்வதோடமையாது, பலவேறு பகுப்பினரான மக்களிடையே அப்பொருள்கள் செம்மையாய்ப் பங்கிடப் படவேண்டும். அப்போது மக்களின் சுகம் சுரக்கும். சில ஜில்லாக்களில் அதிக ஜன நெருக்கமும், சில இடங்களில் மிகக் குறைந்த ஜனமும் இராமல், இப்போதிருப்பதைவிட சிறந்த முறையில் விரவிப் பரவி யிருக்கவேண்டும். அவசியமானபோதெல்லாம் அயல் நாட்டுக் குடியேற்றம் தலை யெடுக்கவேண்டும். அதற்கேற்ற சௌகரியங்கள் செய்யப்படவேண்டும். இவைகளும் இவைகளைப் போன்ற வேறு முறைகளும் அநுஷ்டிக்கப்பட்டால் இந்திய மக்கள் இன்னும் அதிகமாகச் சுகமாக இருக்கக் கூடும் என்பது அப்பேராசிரியரின் கருத்து.

இந்தியாவின் இம்பீரியல் கெஜட்டீரின் பதிப்பாளர்களுள் ஒருவரான திரு. இ. ஏ. கெய்ட் என்பார் கீழ்வருமாறு கூறுகிறார்: "விவசாயத்தை யல்லாத ஏனைத் தொழில்களின் முக்கியம் வலுத்து வருகிறது. எனினும் விவசாயத்திற்கூட இன்னும் எவ்வளவோ திருத்தங்கள் செய்யப்படவேண்டும்; செய்யக்கூடும். சாஸ்திரீய முறைகளை வேளாண்மையில் அநுஷ்டிக்க வேண்டும். தற்போதுகூட பர்மா முதலிய பிர

தேசங்களில்விருத்திசெய்யப்படவேண்டிய பாகங்கள் உள. மேற்புற ராஜபுதனம்போன்ற பக்கங்கள் பாசனவிருத்தி செய்யப்படின் பயிரிடற் கேற்ற நிலங்களாக மாறக்கூடும்'' என்பதே.

எனவே, இந்திய மக்களைப்பற்றி நாம் அறியும் விஷயங்கள் பல. அவர்களது பொருள் நிலை தாழ்மையாயிருக்கிறது; சுகம் குறைவாயிருக்கிறது; பிணி, சாக்காடு முதலியவை அதிகமாயிருக்கின்றன. இவைகளுக்குக் காரணங்கள் வாழ்க்கை முறைகள்; பெரும்பாலான மக்களின் அறியாமை; தொழில் துறைகள விருத்தியின்மை முதலியன. நம நாட்டு மக்கள் இக்கஷ்டங்களை உதறித் தள்ளி, வீரர்களாய், திடசரீரிகளாய், நீண்ட ஆயுளினராய், பெருஞ் சுக வாழ்க்கை பெறக்கூடிய காரியங்களைச் சீக்கிரம் தொடங்குவார்களாக. நன்றும் இன்றே செய்க; இன்றும் இன்னே செய்க.

“இரும்பைக்காய்ச்சி உருக்கிடுவீரே!
யந்திரங்கள் வகுத்திடுவீரே!
கரும்பைச்சாறு பிழிந்திடுவீரே!
கடலில் மூழ்கிநன் முத்தெடுப்பீரே!
அரும்பும் வேர்வை உதிரத்துப்புவிமேல்;
ஆயிரந்தொழில் செய்திடுவீரே!
பெரும்புகழ் நுமக்கே யிசைக்கின்றேன்
பிரமதேவன் கலையிங்கு நீரே!”

—பாரதியார்.

# அறிவியலும் சமயமும் — இவற்றின் தற்கால நிலை

[திரு - ஈ. த. இராஜேஸ்வரி அம்மாள், எம். ஏ., எல். டி.]

“ பூதலய மாகின்ற மாயைமுத லென்பர் சிலர்; பொறிபுல னடங்கு மிடமே
பொருளென்பர் சிலர்; கரண முடிவென்பர் சிலர்; குணம் போனவிடமென்பர் சிலபேர்;
நாதவடி வென்பர்சிலர்; விந்துமய மென்பர்சிலர்; நட்டநடு வேயிருந்த
நாமென்பர் சிலர்; உருவமா மென்பர்சிலர்; கருதி நாடிலரு வென்பர் சிலபேர்;
பேதமற உயிர்கெட்ட நிலயமென் றிடுவர்சிலர்; பேசிலரு ளென்பர் சிலபேர்;
பின்னு முன்னுங் கெட்ட சூனியம தென்பர்சிலர்; பிறவுமே மொழிவரிவையால்
பாதரச மாய்மனது சஞ்சலப் படுமலால் பரமசுக நிஷ்டை பெறுமோ!
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூர ணானந்தமே!”—தாயுமானார்.

மனிதராய்ப் பிறந்தவர்களுக்குச் சிறு வயதிலிருந்து இச்சை யென்பது உடன் பிறப்பாய், உயிர்த் துணையாய் இருந்து வருகின்றது. இச்சை இருவகை. ஒருவகை, உடலைப் பற்றியது; மற்றொன்று, உடலுக்கு அதீதமாகச் செல்லுவது. உடலைப் பற்றிய இச்சையே உணவு முதலிய விஷயங்களில் செல்லுவது. மற்றொன்று உடல் வருத்தம் பாராது பெருங் காரியங்களிற் செல்லுவது. இவ்விருவகை இச்சைகளும் சாதாரணமாய் மனிதருக்கு இன்றியமையாதனவாம்.

இவற்றுள் முதலாவதான, தேக வழிபாட்டைக் கருதிய இச்சையின் நற்குணப் பெருக்கே, அறிவியலுக்கு அடிப்படையாம். அது எவ்வாறெனில், நமக்குப் பல்வகை உணவுப் பொருள்களில் உண்ண இச்சை உண்டாகும். அவற்றைப் பக்குவப் படுத்துவதற்குப் பாகசாஸ்திரம் ஏற்படுகின்றது. பதார்த்தங்களின் சுகாதார குணத்தை வைத்திய சாஸ்திரம் காட்டும். அவற்றைத் தக்க காலத்தில் பயிரிட்டுச் சேமிப்பதற்கு விவசாய சாஸ்திரம் வந்து நிற்கும். விளைந்த பண்டங்களை வியா

பாரத்திற்கு ஏற்றுமதி இறக்குமதி செய்யவும், கடற் பிரயாணம் செய்யவும், வானசாஸ்திரம் முதலிய அறிவியல் விருத்தியாகும் பண்டங்களினின்று சத்துக்கள், திராவகங்கள், உப்புகள் முதலிய பொருள்கள் எடுக்க ரசாயன சாஸ்திரம் உண்டாகும். தாவரப் பொருள்களிலுள்ள உயிருள்ள ஜீவராசிகளையும் அவற்றின் தத்துவங்களையும் கண்டறியப் பல்பகை அறிவியல் நூல்களும் சாஸ்திரங்களும் உண்டாயிருக்கின்றன.

நாம் உடுக்கும் உடை அவசியமான தன்றோ? பஞ்சை நூலாக்குவதற்கும், நூலை ஆடையாக்குவதற்கும், ஆடையை வெட்டிப் பல்வகை உடைகளாக்குவதற்கும், ஏற்ற கைத்தொழில்களையும் அவற்றிற்குரிய சாதனங்களாகிய யந்திரங்களையும் நியமிப்பதற்கும் அறிவியல் சாஸ்திரங்கள் பல ஏற்பட்டிருக்கின்றன. நாம் கல்வி கற்பதற்கும் பல தொழில்கள் செய்வதற்கும் இன்றியமையாத தீபம் முதலிய மின்சார இயக்கங்களுக்கு ஒவ்வொரு துறையிலும் பல்வகை அறிவியற் கல்வி ஏற்பட்டிருக்கின்றன. இவற்றில் யாதேனும் ஒன்றைக் கற்பதற்கே ஒருவன் ஆயுள் முழுவதும் செலுத்துவானாயினும், அத்துறைக் கல்விக்கு அதுபோது மென்று சொல்ல இடமில்லை. நமது தேக சுகத்துக்குத் தேடும் எவ்வகை விஷய சம்பந்தமான அறிவியற் கல்வி ஒவ்வொன்றும், மிக அற்புதமாகவே காணப்படுகின்றது. நாம் தாகத்தை அடக்குவதற்கு ஒரு காலணு கொடுப்போமாயின் "சோடா புட்டி" ஒன்று கிடைக்கின்றது. ஜலத்திலுள்ள தோஷம் நிவாரணம் செய்வதற்கும், கரிமல வாயுவை அத்துடன் கலக்க வைத்து ஒரு சீசாவில் பந்தம் செய்வதற்கும் எத்தனை அறிவியல் நூல்களின் தேர்ச்சி அவசியமென்பதைக் காணலாம். சக்கரைக் காய்ச்சும் பாக சாஸ்திரத்தில் வீணாய் அசுத்தமென எறியப்பட்ட கரிமல வாயுவை, இரும்பு ஜாடிகளில் அழுத்தி அடக்கிப் பல மணங்களை வேண்டிய அளவு உபயோகிக்க அளவுக் கருவியுடன் மிகவும் சுலபமான விலைக்கு நமக்குக் கிடைக்குமென்றால் இத்துறையிலுள்ள அறிவியல் சாஸ்திர அற்புதத்தை நாம் என்னென்று புகழ்வது! இக்காலத்தில் ககனமார்க்கத்திற செல்ல விமானங்கள் ஏற்படுத்திய அறிவியல் இயக்கத்தை என்னென்போம்! இங்கிருந்த வண்ணமே பல்லாயிரம் யோசனைக்கு அப்புறம் பாடும் பாடல்களைப் கேட்கவும், பாடுவோனை அச்சமயத்திலே நேரே காணவும், அவன் ஆலாபனை செய்யும்போது உண்டாகும் முகக்குறிகளின் வேறுபாடுகளையும் நாம் காணவுங் கூடுமென்றால், அவற்றிற்குத் தக்க யந்திரங்களும் அவற்றில் ஒவ்வொரு பாகங்கள் செய்ய வேண்டிய கலைத் தொழில்களும் எத்தகையவென நாம் அளவிடக் கூடுமோ? இவ்வாறு இப்பிறவியில் நாம் இறவாது இத்தேகத்தையே ஓம்பத்தக்க அறிவியல் ஒன்றே இன்னும் வெளியாகாதிருக்கிறது. தற்கால இயக்கத்தை நோக்குங்காலத்தில் அதுவும் சில நூற்றாண்டுகளில் வெளியாகலா மென்பது திண்ணம். ஆகையால் வெளிமுகத்தில் இச்சை செலுத்துவது அறிவியல் இயக்கமாயின், நாம் அதைத் தகாதெனக் கூற இடமில்லை. நம்மாழ்வாரை, மதுரகவி "செத்தத்தின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்" என்றதற்கு, "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்று விடை தந்தாராம். அதாவது அசேதனமான ஜடப் பொருளிடத்தில் அறிவுப் பொருளான சிறிய ஜீவன் உதிப்பானாயின், அவன் இயக்கம் எவ்வாறிருக்கும் என்பது வினா. அப்பொருள்களின் சம்பந்தமான சுகதுக்கங்களை அநுபவித்து அவற்றினிடையே கிடப்பானென்பது அவர்விடை. ஆகையால் இவ்வளவு அலட்சியமாகக் கூறிய விடையை, உற்று நோக்கின் மனிதனுடைய செய்கை அவ்வளவு ஏளனமாகக் காணப்படவில்லை. செத்தன என்பன யாவையும் உயிருள்ளனபோ

னும் ஒளி உள்ளனபோலும் ஒழுக்கம் பெறவைப்பது மனிதன் இயக்கமாயி ருக்கின்றது. மூன்றுவகைக் குணங்க ளில் மனிதனுடைய குணம் இராஜசகு ணமாயிருக்கிறது. அது தொழிலில் உழல்வதே சிறப்பிலக்கணமாய்ப் பெற் றது. நித்திரையில் போகும்பொழுது ஒன்றே தாமசகுண சம்பந்தமான மூட சுழுத்தியில் வீணுகின்றதன்றி விழித் திருக்கும் பொழுதெல்லாம்,

> "உறுகயி றூசல் போல
> வொன்று விட்டொன்று பற்றி
> மறுகயி றூசல் போல
> வந்துவந் துலவு நெஞ்சம்"

என்னும் அப்பர் திருவாக்குப்போல வெகு வேகமாகப் பல்வகைக் காரியங் களை மனிதன் செய்கின்றான். ஆயி னும் எல்லாக் காரியங்களும் விணே? ஒவ்வோர் அறிவியலும் அநாவசிய மென்று சொல்லுவதற்கு இடமில்லை. உலகத்தில் இல்லறம் நடத்துவோர் இல்லையாயின் துறவிகள் துறவறம் நடத்த இடமிராது. ஆகையால் அறி வியலைப் பயன்படுத்துவது, ஆருயிருக் கும் இன்றி யமையாததேயாம்.

அறிவியல் துறையில் உழன்ற மன மோ சலனமற்று நிற்பதில்லை. வேதனை யில் ஆழ்ந்து வருந்துவதே காண்கின் றோம். உப்புநீர் குடித்தவனுக்குத் தாகம் மேலும் மேலும் எடுப்பதுபோல அறிவியல் துறையில் தாகம் அடங்குவ தில்லை; திருப்தியாவதற்கு மிடமில்லை. அறிவியல் துறையில் திருப்தி என்றால் சோம்பல் என்று பொருளாம். ஆயி னும் பெறக்கூடாத திருப்தி யுள்ள நிலையை அடையவேண்டு மென்பது எல்லா மனிதர்களுக்கும் உள்ள ஒரு வகை இயற்கை அபேட்சையாம். அவ் வபேட்சை நீங்க முயலுவதே சமய மாகும். இதைத் தாயுமானவர்,

> "மலைமலையாங் காட்சிகண்
> காணுமை யாதி
> மறப்பென்றும் நினைப்பென்றும்
> மாயா வாரி
> அலையலையா யடிக்கு
> மினபதுனப மென்றும்
> அதைவிளைக்கும வினைகளென்றும்
> அதனைத தீர்க்கத
> தலைபலவாஞ் சமயமென றாக
> தெய்வ மென்றாகு
> சாதகரென றும் அதற்குச்
> சாட்சி யாகக்
> கலைபலவா நெறியென் றாக
> தர்க்க மென றாங்
> கடலுறு நுண் மணலெண்ணிக்
> காணும் போதும்"

என்று விவரித்துக் காட்டி யிருக் கின்றார். சமயங்கள் தேசததுக்குத் தக்கவாறும ஜனங்கள் அறிவுக்குத் தக்கவாறும ஒழுக்கத்துக்குத் தகக வாறும் பல்வகையாய் ஏற்பட்டிருக்கின் றன. வடமகா சமுத்திரத்தில் உருகாப் பனிக்கட்டி யிடையே இல்லம் கட்டி வாழும் எஸ்கிமோ வகுப்பினருக்குக் கொல்லாவிரத சமயமான ஜைனமதம் பயன்படுமோ? அவர்கள், குழந்தைகள் பிறந்தபோது, நமது நாட்டில் முதல் முதலில் தேனைத் தடவுவதுபோல் அப் பனி நாட்டுக் குழவிகளுக்குக் கடற் சிங் கத்தின் கொழுப்பைச சுட்டு வைப்பார் கள். இத்தேசவாசிகளுக்கு மாமிச பட் சணமன்றி வேறு பட்சணமே தெரி யாது. இவர்களுக்குச் சைவ போதனை போதிப்பதில் யாதும் பயன் தரா தென்பது திண்ணம். அம்மாதிரி யாகவே தேசத்தாருக்குத் தக்கவாறு சமயகுரவர்கள் ஏற்பட்டனர். புராதன ஐரோப்பாவுக்குக கிறிஸ்தவமும; மத தியகால ஆசியப பிரதேசங்களுக்கு மகமதியமும், சீனர்களுககும் ஜப்பானி யருக்கும் பௌத்தமும் பொருந்தி உலக வாழ்க்கையினின்று மேல் நோக் கக்கண் கொடுததன. ஆயினும் அச்சம யங்கள் உலகலட்சணமாவது யாது? அதில் உழலும் ஜீவர்கள் இலட்சணம் யாது? உலகக் கட்டினின்று ஜீவர்கள் உய்யத்தக்க மார்க்கம் எது என்பது ஆராய்ந்து, உடலை ஓம்பும் அறிவியல் நூல் போல் உயிரை ஓம்பத்தக்க அறிவியல் நூலை எழுதப்புகவில்லை. வேதங்களும் ஆகமங்களுமே அவ்

வாறு செய்யப் புகுந்தன. உலகெது ? நானார் ? எனது தலைவன் யார் ? நான் துன்புற வேண்டிய காரணம் என்ன ? பிறப்பறுக்கும் வழியாது ? என்னும் ஆராய்ச்சி எடுததது வேத சம்பந்தமான மதங்களேயாம். இதை வைதிக நெறி யென்றும், அந்நெறி காட்டும் சமயததை வைதிக சமய மென்றும் கூறுவர். இதற்கும், உடலை யோமபும் உலகியலான அறிவியல் சாஸ்திரங்களுக்கும் உள்ள பேத மாவது முககியமாய் மூன்றும். வெளி முகத்தில் ஜடப் பொருளின் குணம் கண்டு ஆராய்வது விட்டு ஜடப் பொரு ளுக்கு நமது இஷ்டத்துக்கு ஏற்றவாறு குணம் பெறச் செய்வது ஒன்று ; இரண்டாவது பொருள்களின் பேதா பேதமும் அவற்றின் சேர்க்கையால் உண்டாகும் பயன்களைக் கண்டறியப புகாமல் பதார்த்தங்களையே ஒன்றை மற்றென்றுக்கத்தக்க மனோசக்தி விரு த்தியாககும மார்ககத்தைத தேடுதல் ; மூன்றுவது தமது துன்பம் நீங்கிய வாறு பிற ஜீவராசிகளின் துன்பத்தை யும் நீக்க முயலுதல். இம்மூன்றும் வேத நெறி சமயத்தின் மூன் நோக்க மாம். இதைத் தாயுமானவர்:—

“வேதமுடன ஆகம புராணம் இதிகாசமுதல்
வேறுமுள கலைக ளெல்லாம்
மிக்காக அத்துவித துவிதமார்க சத்தை
விரிவா எடுதது ரைக்கும் ; [யே
ஓதரிய துவிதமே அத்துவித ஞானததை
உண்டு பணு ஞானமாகும் ;
ஊகம்அனு பவவசன மூன்றுக்கும் ஒவவும்
உபயவாதிகள் சம்மதம் [ஈது
ஆதலி னெனக்கினிச சரியை யாதிகள் போ
யாதொனறு பாவிக்க நான [தும்
அதுவாத லாலுனனை நானெனறு பாவிக
அததுவித மார்க்க முறலாம [கின
ஏதுபா விததிடினும் அதுவாகி வநதருள்
எநதைநீ குறையு முண்டோ ? [செய்
இகபர மிரண்டினிலும் உயிரினுககு யிராகி
எங்கும் நிறைகின்ற பொருளே !”

துவிதம் அத்துவிதம் என்னும் இருவ கைத் தூயதத்துவ சமய வேறுபாட்டில் ஆரம்பததில் துவித பாவனையாக ஆரம் பிப்பதே ஞானவிருத்திக்கு. இன்றிய மையாதது என்பர்மேலோர். இதுசாயுஜ் யம் நீங்கலான ஏனைய பதவிகளை அளிக் குமவைணவ சித்தாந்தமாகும். வைணவ சமயததில் வைகுண்டத்தில் நித்திய சூரிகள் விஷ்ணுவடிவான பரம்பொருள் சமீபததிலிருநது அவரைப் போன்ற உருவம்பெறறுத் “தூராத மனக்காதல் தொண்டர்”களாய்க் குழுமிப் பேரின் பம் அநுபவிப்பது வைணவ மறைகளில் காணலாம. அகப்பொருளில், தலைவன் தலைவிச் சம்பந்தம் காட்டுவதுபோல் ஜீவாதமாவுககும் பரமாத்மாவுக்கும் என்றும் நீங்காத பேரின்ப வாழ்க்கை உருவகமாய் இதில் காணப்படும். என் தநதையார் எழுதிய “ஆண்டாள்” என் னும் கட்டுரையுள் இவ்வைணவப் பெருநதகையின் சித்தாந்தம மிகவும நன்ருக வெளியாகும். ஆழ்வார்கள் பன்னிருவரில் ஆண்டாளானவர், நமது சமய குரவர்களில் முதல்வரான சம் பந்த சுவாமிகளின் தேவாரக் கருத்துக் களை ஆங்காங்கு எடுத்துரைப்பது போல் திருமொழிகள் கூறியுள்ளார். இதன்றியும் ஆண் பிள்ளைகளாய்ப் பிறந்த நமது சமய குரவர்கள் தலைவி யாயும், இறைவன் தலைவனும் அகத் துறையில் பாடும் அழகினும், பெண் பிள்ளையாய்ப் பிறந்த ஆண்டாள் தலை வியாயும், நித்திய பிரமசாரியாகிய கிருஷ்ண பகவானைத் தலைவனும் பாவித்துப் பாடுதல அதிக சிறப் பாய் விளங்கலாம். துவிதமாவது தலைவன தலைவி என்கின்ற இரண்டு பாவனை. இதையே, “சிவன்,” “சக்தி” என்று நமது சமயத்தில் கூறப்படும். இவற்றின் மன ஒருமையே ஒருவகை அத்துவிதமாகும. முன்னிலை, தன்மை என்னும் பேதமற்று நின்ற மேன் மையே வீடென நமது சமயகுரவர்கள் விளக்கினுர்கள். இதுவே, கல்லாலின் நிழலில்,

“அந்தணர் நால்வர்காண
அருட்குரு வாகிவந்த
எந்தையே யெல்லாந்
தானென்று இயம்பினன்”

என்பது. இதுவே மேலான சமயநெறி. எனவே, சமயமானது அணுவுக் கணுவி னிற்சென்று நிற்பதும், மகத்திற்கு மகத்தில் சென்று நிற்பதுமாம். அறிவி யலோ இதில் சில பகுதிகளில் அளவை க்கு உட்பட்ட எல்லையில் உழைப்பதாம். ஆகையால ஒன்றுகொன்று விரோதம் ஒன்றுமில்லை. இவ்விரண்டையும்ஒருங்கு சேர்த்து உலகத்திற்குப் பயன்படுத்தி வைப்பதே ஆன்றோர் கடமை.

---

# சுந்தர சுலோசனா

[திரு. டி. ஆர். சாரங்கபாணி, எம். ஏ.]

(தொடர்ச்சி)

## இதழ் 5.

### கவலையற்றிரு

ஜயகுமார!

மதனகோபால் எனும் மாயப்பெயர் பூண்டு நீ ஈண்டு வந்திருப்பதை யான் அறிவேன். நீ எண்ணுவதுபோல் இது காலை நீ எடுத்துக் கொண்ட வழக்கு அவ்வளவு எளிதல்ல வென்பதை நீ யுணர்ந்திடு. நீ இவ்வழக்கில் தலையிடா திருத்தல் நினக்கு நலமாகும். உன்னு டைய மோட்டார் வண்டியின் எண்ணே உன்னைக் காட்டிக் கொடுதது விடும என் பதை நீ மறந்தனை போலும.

சண்முகசுந்தரம்.

இக்கடிதத்தைக் கையிலேந்தி, ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்து, காலை ஆறுமணிக்கு ஜயகுமாரன் தன்னுடைய அறையில் மீண்டுமொரு முறை இக் கடிதத்தை வாசித்தான். வாசித்ததும் புன்முறுவல் கொண்டான். தான் அமர்ந்த அறையின் கதவை நோக்கி ஞன். சென்ற இரவு கள்ளனைப் போலுங் காருருவம் பூண்டு மோகன சுந்தரத்தினறையில் கடிதங்களைக் கள வாடி அறையுள் போநததும தாளிடப் பட்ட அக்கதவு, தாளுடன் விளங்குதல் கண்டான். அந்நிலையில் தாளிடப்பட்ட அறையுள் இவ்வதிசயக் கடிதம் வந்த தெங்ஙனமென யோசித்தான். அவனுக் கொன்றும் விளங்கவில்லை.

இரத்தினத் திருடில், பெரும் பெய ரெடுத்த கருணாகரன் என்னும் பெருங் கள்ளனைபபோலும் அஞ்சாத நெஞ்சை சண்முகசுந்தரமும் பெற்றவனென்பது தெளிந்தான். (கருணாகரன்என்னும் மகு டநதாங்கிய எம்முடைய துப்பறி நாவலை வாசிக்க இவ்விவரம் நனி விளங்கும்) சநதிர சேகரப் பிரபுவின் மெய்க்காதலி யாகிய காநதாவின் மைந்தனாகிய சண் முகம இத்தகை அஞ்சா நெஞ்சுடைய களளனாக மாறியது ஜயகுமாரனுக்கு ஒருவகையில் வியப்பையே ஈந்தது.

துப்பறி வீரசிங்கமெனக் கற்றோரா லும மற்றோராலும் பெரிதும் போற்றப் பட்டதனக்கு, அறநெறி துறநது மற நெறிபறறிய ஒரு பேதை, உயர்குலத்து திததும், அக்குலத்துக்குரிய நனனெறி மறநது, தூர்த்தருடன் கூடித் தீய ஒழுக்கம் பூண்ட ஒரு புல்லியன், தன் னுடைய திறனை யோராது தனக்குப் புத்திபுகட்டும்கடிதம்வரைநததெண்ண, வெகுளிவிமம, "சண்முகசுநதர! என் னுடைய திறனை வெகுசீக்கிரம் நீயுணர் வாய்; அவசரப்படாதே." என்று ஜய குமாரன் தலையசைதது தியம்பினுன்.

மீண்டு மொருமுறை கடிதத்தை நோக்கினன். செனற இரவு தான் கள வாடிய கடிதங்களின் கையெழுத்தும், தன் கரத்திருநத கடிதத்தின் எழுத் தும் ஒரே மாதிரியாக இருப்பது காண அகமகிழ்ந்தான். தன்னுடைய மேஜை யின் அறையைத் திறந்து தான் களவா டிய கடிதங்கள் ஆங்கு இருக்கின்றனவா என நோக்கினன். அவைகள் வைத்த இடத்திலேயே இருப்பது கண்டு, தன் கரத்திருநத கடிதத்தையும் அவைக்கு

டன் சேர்த்து வைத்துப் பூட்டிவிட்டு அறையிலிருந்து வெளிச் சென்று உரிமை யுறையுளின் தோட்டததில் சிறிது உலவிவர எண்ணி நந்தவனத்துள் நுழைநதான்.

ஆங்கு ஓர் அழகிய மேடையின் மீது தனித்தோர் இளமாது அமர்ந்து, வாடிய வதனத்துடன் ஆழ்நத யோசனையிலிருப்பதை ஜயகுமாரன் கண்டான். ஜயகுமாரன் வனத்துள் நுழைந்ததை அவள் கவனிக்க வில்லை. அவளுடைய வாடிய வதனத்தைக் கண்டதும் ஜயகுமாரனுடைய இளகிய மனம் உருகியது. அவளுடைய முகஜாடையினின்றும், அவ்வணங்கே சந்திர சேகரப பிரபுவின் ஒரே புததிரியாகிய சுலோசனையென்பதோர்ந்தான். உரிமை யுறையுளை நண்ணியதிலிருநது, அவளை நேரில் கண்டு அவளுடன் தனிதது வார்த்தையாடிச் சிலஉண்மைகளை யுணர்தல் வேண்டுமென அவன் எண்ணிய தற் கேற்ப அவள தனித்திருப்பதைக் கண்டதும், அவளுடன் வார்த்தை யாடுதற்கு அதே எற்ற சமயமென எண்ணி அவளருகில சென்முன். ஜயகுமாரன் அருகில் நிற்பதையும் அவள் அறியவில்லை; திறந்திருந்த கண்களினின்றும் நீர் ஊற்றெனப் பெருகி வழிநதது; மேகத்தான் மறைந்த முழு மதி போலும் அவளுடைய மதிமுகம் துயரமெனும் மேகத்தான் இருண்டு வாடி நின்றது.

பகலவன் தன்பொற் கதிர்களை வனத்துள் பரப்ப, வண்டினம் காலை மதுவுண்டு மயக்க மிகுந்து இசைபாட, புல்லினங்கள், கதிரவனை வரவேற்ப தொப்ப, பண்ணிசைத்து, மரம் விட்டு மரம் ஓடியாட, குளிர்காற்று, இசைகளுடன் இயைந்து வீச, நன்மலர்ச் செடிகள் நறுமணம் கமழ, காலையின் பத்தை நுகராது, இயற்கைஎழிலை எண்ணியும் நோக்கியும அகமகிழாது, சுலோசனு துன்பக்கேணியி லாழ்நது, ஊனற்று உறக்கமற்று வாடுவதைக்கண்ட எக்கன்மனந்தான் கரைந்திடாது.

சுலோசனுவையணுகிய ஜயகுமாரன், "அம்மா சுலோசனு! நீ இவ்வாறு தனித்துஇருந்து வாடுவதற்குக காரணமென்ன?" என்று வினவினுன. ஜயகுமாரனுடைய குரலோசையைச் செவி மடுத்ததுமசுலோசனை திடுக்கிட்டெழுந் தாள். தன்முன்னர்த் தன்னுடைய தநதை சநதிரசேகரப் பிரபுவின் உயிர்த் தோழராகிய மதனகோபால் என்னும் வர்த்தகர் நிற்பது கண்டாள்: அவளுடைய நா பேச எழவில்லை. வருத்தமும் வியப்பும் ஒருங்கே வாட்ட மதனகோபால்எனும் மாறுபெயர்பூண்ட ஜயகுமாரனை நோககினுள். அவளுடைய உள்ள நிகழ்சசிகளை உற்றுணாநத ஜயகுமாரன்,

"அம்மா! உமமைவாட்டி நிற்கும் அல்லலை யானுணாவேன் எனக் கூறின் அஃதுனக்குப் பெரும வியப்பையளித்திடும். கல்விப்பேறு வாய்ககப பெற்ற நீ ஆபத்துற்ற காலததில் அளவு கடந்து இவ்வகையில் வாடிவதங்கல் நன்றன்று. வீரத் தாய்மார்கள் மலிந்த தமிழகத்தில் நீ பிறந்தவளல்லவா ? மனதைத் திடஞ்செய்துகொள்."

"மதனகோபலரே! என்னை வாட்டும் இடுக்கணை நீர் உணர்வீரா ?"

"ஆம் உணர்வேன்"

"தந்தை உம்மிடததி வியம்பினுர் போலும்."

"ஆம்."

"மதன கோபாலரே! என்னிலைமையில் நீரிருநதால் என்னை வதக்கும் துயரின் இயலபை யோர்நதுணாவீர்."

"அம்மா! சுலோசனு ! உன்னுடைய நிலைமையில் நில்லாமலே உன்னுடைய துயரை உய்த்துணரும்ஆற்றலை ஆண்டவன் எனக்கு அளித்துள்ளான். சிந்தித் தேழுவார்கள் சிந்தையுளே திகழ்ந் தேழுந் தயாபரன் உன்னுடைய துயரை யொழிக்கும் வன்மையையும் எனக் களிப்பன் என்பதற்கோர் ஐயமுமில்லை. ஆனுல சுலோசனு! நான் உனக்கு உதவி புரியவேண்டின், சில விஷயஙகளை நீ என்னிடம் ஒளியாது

கூறவேண்டும். அவை உன்னுடைய இரகசியமாக இருத்தலாகும். ஆனால் உன்னுடைய நலனைக் கருதி, வீண் பழி தாங்கும் ஓர் இளைஞருடைய நலனைக் கருதி உண்மையை ஒளியாது என்னிடத்தில் உரைத்திட வேண்டும். பெரிய வியாபாரத் துறையில் வாழும் யான் எம்முறையில் உனக்கு உதவி புரியமுடியும் என நீ எண்ண லாகும். ஆனால் நீ உண்மையை யுணர்ந்தால்....''

''மதனகோபாலரே! இத்தனை யாண்டுக ளில்லாது திடீரென நீர் என்னுடைய தந்தையின் பழைய நண்பராக ஈண்டு வந்து தங்கியதனைக்கு முதலில் சிறிது சந்தேகத்தையே விளைவித்தது. உம்மு டைய உரைகள் என்னுடைய சந்தே கத்தையே வலியுறுத்துகின்றன. நீர் கூறியதிலிருந்து நீர் உண்மையில் மதன கோபால் என்னும் வியாபாரியோவெனச் சந்தேகிக்கவும் இடமேற் படுகின்றது. நீர் எனக் கருளிய இதமொழிகளை எண் ணுந்தோறும் என்னுடைய தாள வொண்ணாத்துயர் உம்மால் ஒடுங்கி னும் ஒடுங்கு மென்னும் நம்பிக்கையும் எனக்கு வருகின்றது. நண்பரே! எனக் குத் தெரிந்தவைகளை ஒளியாது உமக் கியம்பிடுமாறு இயற்கை என்னைத் தூண்டுகின்றது. அன்பரே! நீர்யார்? உம்மை உற்று நோக்க உம்முடைய வத னம் இயற்கை வதனமாக எனக்குப் புலனாகவில்லை. அவ்வெண்ணம் தவறாக இருப்பினும் இருத்தலாகும்.''

''அம்மா சுலோசனா! வியந்தேன் உன்னுடைய நுண்ணறிவை. நீ எண்ணி யது ஒரு வகையில் உண்மைதான். யான் பொய் வேடம் புனைந்துளேன் என் பதும் மெய்ம்மையே. ஆனால் அவ் வேடங் களைந்திடின், நீ என்னையா ரென அறிந்திடுவையோ?'' என்று கூறிக்கொண்டே தன்னுடைய பொய் மீசையை எடுத்தான்.

''ஆ! ஜயகுமாரரே!! மதனகோபா லென்னும் பெயர் பூண்டெங்களை வஞ் சித்தவர் நீர்தானா? உம்மிடம் நேரில் வர யான் பன்முறை எண்ணியதுண்டு. உமக்குக் கடிதம் விடுத்தேனும் ஈண்டு வரவழைக்கப் பன்முறை யுன்னியதும் உண்டு. துப்பறி வீரசிங்கமே! என் னுடையதுயரை நீர் ஒழித்திடுவீர் என் பதற் கையமில்லை.''

''அம்மா சுலோசனா! அமைதியாக இரு. நான் ஜயகுமாரன் என்பதை ஒரு வரும் இன்று அறிதலாகாது. நான் இன்று மாலை சென்னைக்குச் செல்லும் வரையில் நான் மதன கோபாலன் என் பது உன்னுடைய நினைவி லிருக்கட்டும். இனி யான் சில கேள்விகளைக் கேட்க விரும்புகின்றேன். அவைகளுக்கு ஏற்ற பதிலை நீ இறுத்தல் வேண்டும். உன் னுடைய தோழி சாரதா ஈண்டு வருவ தன் முன்னர் யான் செல்லவேண்டும்.''

''ஜயகுமாரரே! எனக்குத் தெரிந் தவைகளை யெல்லாம் நான் கூறுகின் றேன் கேளுங்கள்''

''சுலோசனா! அன்று நீயும் சாரதா வும் மோகனசுந்தரமும் இருப்புப் பெட் டியுள்ள அறையில் வாளையும் மாலையை யும் பார்த்துக்கொண்டிருந்தது உன் னுடைய நினைவிலிருக்கின்றதா.''

''ஆம் இருக்கின்றது''

''இறுதியில் அப்பெட்டியின் சாவி யை சந்திரசேகரப் பிரபுவினிடத்தில் மோகனசுந்தரம் அளித்திடும் போது இருப்புப்பெட்டிப் பூட்டப்பட்டதா?''

''ஜயகுமாரரே! உம்முடைய கேள்வி எனக்குப் பெரும் வியப்பையே யளிக் கின்றது. அம்மாலையையும் வாளையும் இருப்புப்பெட்டியில் வைத்துப் பூட்டி விட்டே அவர் சாவியைத் தந்தையி னிடம் அளித்துவிட்டு எங்களுடன் வந் தார்.''

''அம்மா! தொழின் முறையில் நான் கேட்குஞ் சில கேள்விகள் உனக்குச் சிறிது துயரையளித்திடும் எனினும் நீயதனைப் பொருட் செய்யாது பதி லிறுத்தல் வேண்டும். இருப்புப் பெட்டி யைப் பூட்டியதார்?''

''மோகன சுந்தரப் பிரபுதான்.''

''அது சரியாகப் பூட்டப்பட்டதா?''

"ஜயகுமாரரே! நானே அதனைச் சோதித்துப் பார்த்தேன். அது சரியாகப் பூட்டப்பட்டே யிருந்தது."

"சுலோசனா! மோகனசுந்தரம் சாவியை உம்முடைய தந்தையினிடம் அளித்து விட்டு உன்னுடன் வந்து விட்டாரோ?

"ஆம்"

"அன்று மோகனசுந்தரத்தைக்காண எவரேனும் வந்திருந்தார்களோ?"

"இல்லை ; ஒருவருமில்லை."

"அன்றிரவு நீ அவரை எத்தனை மணிக்குப் பார்த்தாய்?"

"நாங்கள் அனைவரும் சுமார் பத்து மணிவரையில் பேசிக்கொண்டிருந்துவிட்டுப் பின்னர் உறங்கச் சென்றோம்."

"மோகன சுந்தரம் நேராகத தன்னுடைய அறைக்குச் சென்றாரோ?"

"ஆம"

"மறுநாட் காலையில் அவருடைய அறை பூட்டப்பட்டே இருந்ததோ?"

"ஆம் வெளியில் பூட்டப்பட்டிருநதது"

"அவர் எங்குச் சென்றார் என நீயறியா யன்றோ?"

"ஆ! ஜயகுமாரரே அதனை நீர் தான் அறிந்து அவரையெனக் களிததல் வேண்டும். அவருக்கு என்ன தீங்கு நேரிட்டதோ"

"அம்மா அவருக்கு ஒருதீங்கும்வந்திராது ; வருத்தமுறாதே. சண்முக சுந்தரப் பிரபு சென்ற ஓராண்டாக இருப்பிடந் தெரியாது மறைந்திருக்கின்றார் அல்லவா ?"

"ஆம்".

"அவர் எப்படிப்பட்டவர்?"

"ஜயகுமாரரே! என்னுடைய அண்ணாவைப்பற்றி எண்ணும்போதெல்லாம் என்மனம் புழுங்குகின்றது. தெய்வ பக்தியும், ஒழுக்க நீர்மையும், கல்வியறிவும் நிறைந்த அவர் தூர்த்தருடன் கூடினாரெனத் தந்தை அவரைக் கடிந்தமையைத் தாளவியலாது அவர் அன்றிரவு மறைந்தார். அவரைக் கண்டுபிடிக்கத் தந்தை எடுத்த முயற்சிகளெல்லாம் அவலமாயின".

"சுலோசனா ! அவருடைய குணம் எத்தகையது?"

"நற்குணக் குன்றென்றே யான் கூறுவேன். அவர் தீய ஒழுக்கம் பூண்டாரெனத் தந்தை ஓர் அநாமதேயக் கடிததத்தால் கண்டறிநதா ரென்பது ஒரு வகையில உண்மை யெனினும், இதில் ஏதோ சூதிருக்கின்ற தென்றே யான் எண்ணுகின்றேன்".

"அம்மா ! அவர் சென்ற அன்றிரவு யாரிடத்திலேனும் யாதாயினும் கூறிச சென்றாரோ?"

"ஜயகுமாரரே ! தநதையும அறியா ஒருண்மையை யான் உமக்கு இதுகாலைக் கூறுகின்றேன். என்னுடைய உயிர்த் தோழியாகிய சாரதாவும் சண்முக சுநதரப் பிரபுவும் ஒருவரையொருவர் காதலிதது வநதனர். இந்த உண்மையை யான் ஒருத்தியே உணருவேன். அன்றிரவு அவளுக்கு ஒரு கடிதத்தை வரைந்து அவளுடைய அறையுள் எறிந்துவிட்டு அவர் மறைந்தார்."

"சுலோசனா ! அக்கடிதத்தில் என்ன வரையப்பட்டிருநதது."

"பொதுவாகத் தான் குற்றமற்றவர் எனவும், தான் தன்னுயிரினும் உயிராகக் கருதுஞ் சாரதாவை எவ்வகையானும் போந்து மணப்பதாகவும் அதில் வரையப்பட் டிருந்ததெனச் சாரதா இயம்பினாள்".

"நீ அக்கடிதத்தைப் பார்க்கவில்லையா?

"இல்லை. அதை ஒருவரிடமுங் காட்டலாகாதென அதில் வரையப்பட்டிருந்ததாகச் சாரதா கூறினாள்."

"சுலோசனா ! அக்கடிதம் இதுகாலை சாராதாம்பாளிடத்தில் தானே இருக்

"ஆம."

"அம்மா சந்திர சேகரப் பிரபு இக் கடித விஷயத்தை யறியாரல்லவா ?

"அறியார்"

"சுலோசனு! மோகனசுநதரர் மறைந்ததிலிருந்து உனக்கொரு கடிதமும் வரவில்லையே"

"இல்லை"

"சண்முக சுந்தரர் சென்ற ஓராண்டிற் கிடையில் சாரதாவுக் கேதேனும் கடிதம் வரைந்திருக்கிருரோ"

"இல்லை".

"இல்லையென உறுதியாக நீ கூற ஒல்லுமா?"

"எனக்கும் சாரதாவுக்கும் இடையில் இரகசியங் கிடையாது. அவ்வாறு ஒருகடிதம் வந்திருபபின் அதனை அவள் எனக்குக் காட்டாதிராள்"

"காட்ட வேண்டாமெனச் சண்முக சுந்தரர் கட்டளையிட்டிருப்பின் சாரதா உன்னிடம் காட்டாமல் மறைப்பதற்கிடமிருக்கின்றதன்ருே?"

"ஆம். ஆனுல்....."

"சுலோசனு! நேரமாகின்றது. நான் செல்ல வேண்டும். நாம இதுகாறும் பேசியவைகளை ஒருவரும் அறியலாகாது. நான் சென்னைக்குச் செல்லும் வரையில் மதனகோபாலனே என்பதை நீ மறத்தலாகாது. கவலையற்றிரு. சில தினங்களில் நீ உன்னுடைய காதலரை மீண்டும் பெறுவது திண்ணம். ஆண்டவன் அருள்புரிக."

"ஐயகுமாரரே! உம்மையறிந்தவுடன் என் துயரம வாடி விட்டது. இறைவன் அருளால் நீர் என்னுடைய கொடுநதுயரைப் போக்குவது திண்ணம."

# உடல் நுட்பம்

[ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்]

## II

### அ. உணவுறுப்புகள்

ஆவிரதம் (Engine) கறி, நீர் உண்டு, கனலுயிர் பெற்று, இயங்கி, சாம்பலை வெளி யேற்றி, வேலைக்குத் தக்கபடி மீண்டும உண்கிறது. அது போலவே இநத உடல் யந்திரமும் உண்டுமிழ்நது அனல் பெருகி வாழ்கிறது. காற்று, கதிர், நீர், செடி வகை முதலியன மனித உணவு. குருதியைப் புதுப்பித்து, ஆற்றலை (Energy) வளர்த்து, உயிர்ககனலைப் பெருக்கவே உணவுகொள்கிருேம். உள்ளே உள்ள ஒரு கனல் "கொண்டா உணவு" என்னும். அப்போது உண்பது அமுதமாகும். கனலுக்காகவே, கனல் அழைக்கவே உண்கிருேம். கனவில்லா உணவு நஞ்சாகும். உணவுப் பொறியைப் பார்ப்போம்.

(1) நாக்கில் சுத்தமான எச்சில் ஊறுகிறது; அப்போது தூய உணவை (சுசி ருசியாய்) உட்கொள்ளுகிருேம். உணவைத் தோசைமா அரைப்பது போல நாக்கு தள்ளிக் கொடுக்கப் பற்கள் அரைத்துக் கூழாககி எச்சிலுடன் நன்கு கலந்து உணவுக்குழல் (Gullet) வழியாக இரைப்பைக்கு அனுப்புகிறது. உணவிலுள்ள சூட்டுப்பொருள், எச்சிலிற் கரைநதே இனிப்புப் பண்டமாகிறது. எச்சில் அமுதம். அது கலவாத உணவு செரியாது. வாயில் உணவை நன்கு மெல்லுவது உணவைக் காற்பங்கு செரிக்கச் செய்வதாகும். அதை ப்ளெச்சர் (Fletcher) என்பார் Head-digestion என்கிருர். தாடையில் ஆறு, நாக்கின் கீழ்ப் பல எச்சிலூற்றுகள் உள்ளன. எச்சிலை எவ்வகையிலும் விணுக்கக்கூடாது. புகையிலை போடுவோரும், நீண்ட நேரம் குச்சி போட்டுப் பல்விளக்குவோரும் எச்சிலாகிய உமிழ்நீரை வீணுக்குகின்றனர். இது தவறு.

உணவுக் குழல் 9 அங்-நீளமுள்ளது; வட்டமான தசை யடுக்குகள் அமைந்தது. இதற்கு முன்னே, காற்றுக்குழல் இருக்கிறது. உணவு காற்றுக்குழலில் தவறிப் புகாமல் உள்நாக்கு (Epiglottis) உண்ணும்போதெல்லாம் காற்றுக் குழலை மூடிக்கொள்ளுகிறது. ஒரு பருக்கை தவறிக் காற்றுக் குழலிற் புகுந்தால் புரையேறுகிறது; அப்போது தலையில் தட்டிக்கணைத்தால் அப்பருக்கை மீண்டும் உணவுக் குழலுட்புகும்.

இரைப்பை ஒரு செம்பு நீர் பிடிக்கவல்லது. அது வயிற்றின் இடது புறம் இடைச்சவ்விற்குக் கீழ் (Diaphragm) உள்ளது. இது நான்கு படைகளாக அமைந்துள்ளது. முதல் இரண்டும் தசையும், தசை நரம்புகளும்; மூன்றாவது நாடி, நாளம், நரம்புகள்; நான்காவதில் ஆறு சிறு குழல்கள் வழியே தீவன நீர் (Gastric juice) பொசிந்து, மென்ற உணவைப் பாகாக்கி அதிலுள்ள தசைப் பொருளைச் (Proteid) செரிக்கிறது. (இத்தசைப் பொருள் பால், கோதுமை, உளுந்து, கடலையில் மிகுதி). இரைப்பையில் உணவு நான்கு மணி நேரம் தங்குகிறது. உண்டு 1½ மணி நேரம் மூளைக்கும், உடலுக்கும் அமைதி கொடுக்க வேண்டும்.

இரைப்பைக்கு அடுத்தது துணை இரைப்பை (Duodenum). இரண்டிற்கும் நடுவே ஓர் இணைப்பு (Volve) உள்ளது. நான்கு மணிக் கொருதரமே அது திறந்து உணவுக் கூழை ஏற்கும். உணவுக் கூழ் (Chyme) துணையிரைப்பையில் பித்த நீர் (Bile), கணை நீர் (Pancreas) இரண்டுடனும் கலந்து கொழுப்பும, சூட்டுப் பண்டமும் கரைந்து, எச்சிலைப் போன்று உணவுச் சாறாகி (Chyle) சிறு குடலிற் புகும். [பித்த நீர், ஈரலில் (Liver) ஊறும். ஈரல் நான்கு இராத்தல் கனமுள்ளதாய் இரைப்பைக்கு வலது புறமுள்ளது. பித்த நீர் மஞ்சளாகப் பித்தக் குழாய் வழியே (Bileduct) துணையிரைப்பைக்குட் பொசியும். கணைநீர் (Pancreas) கணையத்தில் (Pancreatic glands) உண்டாகிறது. இது இரைப்பைக்குப் பின்னால் உள்ளது.]

சிறுகுடல் சுமார் 20 அடி நீளமும்-1¼ அங்குலம் குறுக்கும் உள்ளது. இதில் குடல்நீர் (Intestinal Juice) மீண்டும் உணவைக் கரைத்து அன்னஸார மாக்குகிறது. குடலின் உட்பக்கம் வெல் வெட்டுப்பட்டுப் போன்றது. அதை நொடியால் சிறுசிறு முளைகள் போன்று உணரலாம். இவற்றிற்குக் குடல்மணி (Villis) என்று பெயர். ஒவ்வொரு குடல்மணியும் பின்னற்குழாய்கள் (Lacteals)கொண்டன. இவையே அன்னஸாரத்தை உறிஞ்சி, அன்னஸாரக் குழாயில் (Thoracic duct) நிரப்புகிறது. இக்குழாயே உணவுச்சத்தைப் பெரிய நாளத்தின் வழியே (Sub - clavian Vein) குருதிப் பொறிக்குள் (Heart) செலுத்துகிறது; குருதிப் பொறிக்குள்ளே சுழன்று நுரையீரலுக்குச் சென்று அங்கு உயிர்க்காற்றின் வலிவால் செந்நீராகி (Blood) நாடிகள் மூலம் உடலெல்லாம் பரவுகிறது. உணவு இரத்தமாவதற்கு இத்தனை யந்திரங்கள் இவ்வளவு வேலை செய்கின்றன!

பெருகுடல் (Major Intestines) சுமார் 6 அடி நீளமும் 2 அல்லது 3 அங்குல அகலமும் உள்ளது. இது வயிற்றின் வலப்புறம் தொடங்கி, மேலே சென்று, இரைப்பையினடியிற் கீழிறங்கி, கடைக் குழாயில் (Rectum) முடிகிறது. இதன் வழியே கழிவு, கழிவுக் குழாய்க்கு (Bowels) வந்து வெளியேறுகிறது.

ஒருவனுக்கு ஒரு நாளைக்குச் சுமார் ஒரு விசை யுணவுபோதும். சுமார் 100 ராத்தல் நிறையுள்ளவன் தண்ணீர் நிறையை விலக்கி ஒரு ராத்தல் சாப்பிட்டால் போதும். இதில் ஓர் அவுன்ஸ் தசைப்பண்டம்(Proteid),12 அவுன்ஸ் கறிப்பண்டம் (Carbohydrate), 3/4 அவுன்ஸ் கொழுப்பு, 3/4 அவுன்ஸ் உப்பு இருக்கவேண்டும். வயதாக வயதாக

உணவு குறையும். சிறு குழந்தைகள் தங்கள் நிறையில் 1/25 உண்கின்றன. 25 வயதுள்ளவன் தனது நிறையில் 1/100 தான் உண்கிறான். கனிகள் கோதுமை, காய்கறிகள், கடலை, தயிர் முதலியன திறனளிக்கும் உணவுகளாகும். உழைப்பிற்கேற்ப உணவுறககம் அமையும். மிகைக்குறைகள் மெலிவுறுதலும். உணவுக்குடலின் மாசினைப் போக்குவது பட்டினியே.

## ௯. குருதி

இதயம் குருதிப்பொறி. அது தாமரை மொட்டுப்போல் கீழ்முகமாக இடது வாக்கில் காறறுப்பையினிடையே தொங்கிக் கொண்டிருககிறது. அது ஒவ்வொருவர் கைபபிடியளவாகும். இது, இதயச்சவ்வால் (Pericardinum) மூடப்பட்டு, நிமிஷத்திற்கு 70 தடவை "டக் டக்" என்று அடிக்கும். அது குருதிபாயும்போது இதயப் பைகள் சுருங்கி விரியும் துடிப்பே. இதயம் மேல் கீழாக நான்கு அறைகள் கொண்டது. [மேல் அறைகள் Auricles. கீழ் அறைகள் Ventricles] மேலும் வலம் இடமாக இதயம் இரு பிரிவுள்ளது. பெரிய நாளஙகள் (Vena cava) உணவுநீரை இதயததின் வலது மேல் அறையில் (Right Auricle) கொட்டுகிறது. அது கீழ் அறையின் வழியே நுரையீரற் குழாயில் (Pulmonary Artery)பாய்கிறது. அங்கு ஒவ்வொரு சிறு சிறு காற்றுப் பைகளிலுள்ள உயிர்க்காற்றால் தூய்மையுற்று மீண்டும் இதயத்தின் இடது அறைகளின் வழியே பெருநாடியில் (Aorta) பாய் கின்றது. பெருநாடி கிளை விரிந்து குருதியை எங்கும் பரப்புகிறது. மூளை, இரைப்பை,குடல்கள், கணையம்,மண்ணீரல் எங்கும்பரவித் திட்பவெப்பமளித்து இறுதியில் செந்நிறம் மாறி நுண்ணிய மயிரிழைக் குழாய்கள் (Capillaries) மூலம் நாளத்திற் கலந்து மீண்டும் தூய்மைபெற இதயத்திற்கு வரும். இரத்தத்திலுள்ள நச்சுப் பொருள்கள் சிறு நீராக வெளியேறும். சிறுநீர்க்காய்கள் (Kidneys) பாடவரைக்காய்போல 4"×2" அளவில் உள்ளது. இதுவே சிறுநீரைப் பிரிப்பது. இரததக் கழிவு வேர்வையாகவும் வெளியேறு கின்றது. மிடற்றுநாடி (Carstid Artery) வழியாக இரத்தம தலையிற் கிளை பிரிநது பாய்கிறது. நாடிகள் இதயத்தினின்று இரத்தத்தை உடலிற் பரப்பும். இவற்றின்குழலில்தடித்த தசைகள்உள்ளன; இவை எலும்பையொட்டி ஆழததிலுள்ளவை; இவற்றில் குருதி சிவந்து உயிர்க்காற்று நிரம்பியிருக்கும். இவற்றிற் சிறிது காயம்பட்டால் இரததம் பீச்சியடித்து அபாயம் நேரிடும். நாளங்கள் உடலினின்று இதயத்திற்கு உணவுச் சத்தையும், குருதிக கழிவையுங் கொண்டுசேர்க்கும். இவைமெலிதாய்த் தோலுக் கருகில உள்ளன. இவற்றில் இரத்தம மஙகல் நிறமாக உயிர்க்காற்றில்லாதிருககும. இவறறிற் பட்ட காயத்தை எளிதில ஆற்றலாம.

நமது குருதியின் நிறை சுமார் 12 பவுண்டு அல்லது 156பலம் இருக்கும். இயல்பில் இரத்தம் நிறமற்றுநீர்ப்பாங்கானது; இவற்றில் உயிர்க்காற்றுகள் நிறைநத செங்குருதிக கட்டிகள் (Red Corpuscles) மிதக்கின்றன. இவை ஒருசதுரஅங்குலத்திற்குப பல்லாயிரம் உளளன. ஒவ்வொன்றும 1/3000 " × 1/12000. " அளவுளளது. இவறறோடு வெண்குருதிக் கட்டிகளும் (White Corpuscles) மிதக்கின்றன. இவை குருதியிலுள்ள மாசை நீக்கும். இவையே இநதிரியமாகின்றன. இவற்றால் உடல் திண்மையுறும். கந்தகம (Sulphur), ஒளிக்கட்டி (Phosphorous), இருமபு, சோடியம் உப்பு, பொட்டிலுப்பு (Potassium), சுண்ணம் (Calcuim), க்ளோரைன் (Chlorine), மநத வாயு, (Nitrogen) கறிவாயு, நீர்க் காற்று எல்லாம் இரத்தத்திற் கலநதுள்ளன. இரத்தசுத்தி செய்வதுஉயிர்க் காற்று. ஆதலின் நல்லுணவும், நற் காற்றும், நன்னீரும் நல்ல இரத்தத் திற்கு வேண்டும்,

## ௧௦. உயிரி (Lungs)

நமது உயிரி (Lungs) தேனடை போன்றது. அதன் அறைகளைத் துணி போலப் பரப்பினால் சுமார் 100 சதுர அடிகள் இருக்கும். குரல்வளை, காற்குழல், காற்றுமைப்பைகள் இவையே இதன் உறுப்புகள். காற்றுக் குழல் சுமார் 4 அங்-நீளமுள்ளது. இது தடித்த வளையல்களால் ஆனது. பாகுபோன்ற தொண்டைத் தண்ணீர் (Mucus Phlegm) இதிலுள்ள சவ்வை (Mucus Membrane) மூடிக்கொண்டிருக்கிறது. இந்நீர் வற்றினால் தொண்டை கட்டிப் போகும். காற்றை வடிகட்டி உள்ளே யனுப்ப இதில் நுண்ணிய நூலிழைகள் (Cilia) உள்ளன. குரல்வளை அல்லது தொண்டைக்குழி (Larynx) மூன்று விளிம்புள்ளதாய் அடிநா வெலும்புடன் பொருத்தப்பட்டுள்ளது. அதன் வட்டமான அடிப்பக்கம் காற்றுக் குழலோடு பொருத்தப் பட்டுள்ளது. இத்தொண்டைக்குழியில் நான்கு சவ்வுகளுள்ளன. இவற்றிற்குக் குரல் நாண்கள் (Vocal Cords) என்று பெயர். காற்றுப் பையினின்று, காற்று இத்தொண்டைக் குழியில் மோதிக் குரல்நாண்களை அசைப்பதால் ஒலி பிறக்கிறது. இவ்வொலி திரள நா, பல், உதடு, அண்ணங்களின் இணக்கத்தால் எழுத்தாக உச்சரித்து, சொல்லாக விரிகிறது. காற்றுக்குழல் இருகிளையாகி இடது, வலது சுவாசப்பைகள் அல்லது உயிரிகளுடன் இணைகிறது. உயிரிக்கிளைகள் (Bronchus) பலபல நுண்ணிய கிளைகளாக விரிகின்றன. ஒவ்வொரு கிளை நுனியிலும் திராக்ஷைப்பழம் போன்ற காற்றுப்பை (Air Sac) உள்ளது. ஒவ்வொரு பையிலும் சுமார் 1700 காற்றறைகள் (Air Cells) உள்ளன. இவையே காற்றைத் தூய்மைப் படுத்திக் கழிவைக் கரிக் காற்றாக வெளியேற்றுகின்றன.

எப்போதும் மூக்கினால அளவுப்படி மூச்சுவிட வேண்டும். நிமிடிக்குக் குழந்தைகள் 40 தடவையும், முதியோர் 18 தடவையும் மூச்சு விடுகின்றனர். ஒருநாளில் 375 கனஅடியுள்ள காற்றை உட் கொள்ளுகிறோம். காற்றை உறிஞ்சும்போது இடைச் சவ்வு (Diaphragm) மேலே எக்குகிறது. விடும்போது தணிகின்றது. மூச்சை அதிகமாக வெளியிடாது காக்க வேண்டும். பேச்சு, நடப்பு, சண்டை, துயரம, ஓட்டம், புணர்ச்சியால் முறையே 4, 8, 12, 18, 27, 40 மூச்சுகள் வீணாகின்றன. தீய காற்று, தீய உணவைப்போன்றே தீமை செய்யும். காற்றோட்டமாக வசித்தல் உடல் நலத்தின் முதல் தேவையாகும்.

## ௧௧. மூளையும் நரம்புகளும்

இதுகாறும் சொன்ன உறுப்புகளை ஏவுவனவும், எல்லாவற்றையும் அறிவித்து அடக்கியாள்வனவும், நரம்புகள். ஆவிரதத்திற்கு நீராவி போன்றது நமக்கு நரம்பு. உணர்வு, அறிவு, நினைவு, சுவை, ஊறு, நாற்றம், காட்சி, கேள்வி, ஆட்டம், பாட்டம, எல்லாம் நரம்புகளின் செயலே. நரம்புக்களிற்றால், மனிதப்பாவை ஆடுகிறது. ஆட்டுவது மூளை. நரமபுகள் ஒரு தந்திச சாலை போன்றன.

நரம்புகள் இருவகை (1) அறிவிக்கும் நரம்புகள் (Motor Nerves). இவை மூளை யறிவிப்பதை உடல் உணரச் செய்யும். (2) அறியும் நரம்புகள் (Sensory Nerves) நமக்கு அறிவிப்பதும், மூளைக்குத் தெரிவிப்பதும் இவற்றின் செயல்.

# இடையாறு

## " ஞாயிறு "

" ஞாயிறு " எனனும் பெயரால் ஒரு தமிழ்த்தாள் ஈழத்தினின்றும் எழுதல் கேட்டு மகிழ்வெய்துகிறேன். தற்காலத் தமிழ் அகததுக்கு " ஞாயிறு " வேண்டற்பாலதே. பல கலைக் கதிர்களுடன் ஈழத்தமிழ் ஆழியினினறும் தோன்றும் "ஞாயிறு" உலக முவப்பப பலர் புகழ்வதாகும் என்பதில் ஐயமில்லை. ஈழ "ஞாயிறு" தமிழ்த் தாயின் இருளைக் கடிவதாக. தமிழ் " ஞாயிற் " றின் ஒளி தமிழ் நிலையநதோறும் காலுமாறு தமிழ் உலகம் முயல்வதாக. " ஞாயிறு " வாழ்க. தமிழ்த் தெய்வத்தின் திருவருள் ஓங்க.

திரு. வி. க.

## பெரியார் பிரிவு

திவான் பகதூர் கேசவப் பிள்ளை அவர்கள் இவ்வுலக வாழ்வு நீதது விண்ணுல கெய்தியமை குறித்து வருந்துகிறோம். ஸ்ரீமான் கேசவப் பிள்ளையவர்கள் ஏழையாகப் பிறந்து, ஏழையாக வளர்ந்து, ஏழைகளின் பிரதிநிதியாக நின்று, ஏழைமககட்குழைத்து, ஏழை பங்காளன் திருவடி சேர்நதார். அவர், ஸ்தல ஸ்தாபனங்களிலும், சட்ட சபையிலும் உழைத்த உழைப்புகள் யாவும் நேரிய முறையில் ஏழை மக்கட்குப் பயன்பட்டு வருதல் கண்கூடு. அவர்தந் தொண்டுகளில் சிறப்பாகக் குறிக்கத் தக்கன மூன்று. அவை, காட்டுச் சீர்திருத்தம், சிறைச் சீர்திருத்தம், தொழிலாளரியக்கத் தோற்றம் என்பன. பேர், புகழ் விரும்பாது பாடு பட்டவருள் ஸ்ரீமான் கேசவப் பிள்ளை அவர்களும் ஒருவர். அவர் பழைய காங்கிரஸ் வாதி; சிறந்த தேசபக்தர்; சீர்திருத்தக்காரர்; வகுப்பு வாததைத வெறுப்பவர்; பரந்த நோக்குடையவர்; தெய்வபக்தர்; "உயிர்கள் தொண்டே கடவுள் தொண்டு" என்னும் கொள்கையுடையவர். ஸ்ரீமான் கேசவப் பிள்ளை அவர்கள் தென்னாட்டில் ஒரு பெரும் மணி விளக்காயிலங்கியவர். அவர்தம் பிரிவால் நாட்டுக்குப் பெரு நஷ்டமே விளைநதுவிட்டது. அப்பெரியார் நல்லுயிர் இறைவன் ஒளியில் தங்கி அமைதி பெறுவதாக.

## மிதவாதிகள்

மிதவாதிகள் தந்திரத்தில் சமர்த்தர்கள் என்பது உலகறிநத தொன்று. மிதவாதிகள் இப்பொழுது வெள்ளைக் காகிதத்தைக் குறை கூறியவண்ணமாயிருக்கிறார்கள். குறை கூறி இவர்கள் என் செய்யப்போகிறார்கள்? வெள்ளைக் காகிதம் இந்நிலையில் வெளிவந்தமைக்குக் காரணர்கள் மிதவாதிகளே யாவார்கள். இவர்களிடத்தில் பிரிட்டிஷ் இராஜ தந்திரிகட்கு நம்பிக்கையுண்டு. மிதவாதிகள் வெள்ளைக் காகிதத்தைக் குறை கூறிக்கொண்டே தேசததைத் தங்கள் வழிப்படுததமுயன்று வருகிறார்கள். இவர்கள் சூழ்ச்சியை உணர்ந்து, காங்கரஸ்காரர்கள் ஒததுழையாமையை விடுத்து, ஒத்துழைப்பில் தலைப்பட்டுச் சட்டசபைகளைப் பறற முயல்வார்களாக. வகுப்புவாதம் ஒடுங்கும்வரை ஒத்துழையாமை வெற்றிபெறா தென்பதுபலவழியாலும் உள்ளங்கைநெல்லிக் கனிபோல் விளங்குகிறது. வகுப்புவாதம் முதலிய குறைபாடுகளைப் போக்குவதில் தேசபக்தர்கள் நாட்டஞ் செலுத்தல் வேண்டும். இதற்குச் சட்டசபைத் துணை இன்றியமையாதது. அச் சட்டசபையை மிதவாதிகள் பற்றிக் கொண்டால் வகுப்பு வாதம் வலுத்துக்கொண்டே போகும். ஆகவே காங்கரஸ்காரர்கள் சட்ட சபைகளைப் பற்றி, ஒத்துழைப்பால் நாட்டுக்கு நலஞ் செய்ய முந்துவார்களாக.

# நவசக்தி

'எவ்வுயிர்க்கும் அன்பாயிரு' 'என்கடன் பணிசெய்து கிடப்பதே'

சிலம்பு கரு ஸ்ரீமுகஞு வைகாசிமீ பரல் எ


## பூகோள விலாசம்

(தொடர்ச்சி)

பேர்சித்த சித்திதனும் பின்கிழக்குச் சித்திரையி
லேர்தும் புருநா ரதரிருப்பர்—நேர்கிழக்கு
மிக்காய் நிருமதையில் வீற்றிருப்பர் குய்யகர்தாந்
தக்கபுகழ்ச் சோமனுக்குத் தான்கிழக்குத்—துக்கமிலாச்
சித்தபதி யென்னுந் திருநகரிற் புட்பகமும்
வைத்த விருநிதியு மாடிருப்பச்—சுத்தநர
வாகனத்தான் ஞெங்கலொளிர் வாகனத்தான் போலவுமவ்
வாகனத்தா னத்தனத னங்குறைவன்—மாகனகம்
போன்ற நகர்க்குணபாற் பொற்குசையா மப்பதியி
லென்றதில தேவதைக ளேயிருப்பர்—தோன்றுமிதன்
நேர்கிழக்குச் சித்தி நிலைச்சித்தி வாயுவெனுஞ்
சார்நகரின் மேகவண்ணன் ருனுறைவன்—பாரிடஞ்சூழ்
ஈசானர் வாழு மிடத்தெதிருந் தென்றிசையிற்
றேசார் பதுமபுரி சேர்ந்திருக்கும்—பேசுமதின்
வேத னினிதிருப்பன் விட்டிடையின் றெற்காகச்
சோதிதருங் காமச் சுசுவதியிற்—கோதில்
அசுவனி தேமா வாவா ரதன்றென் றிசையின்
றிசையில்மக மேருபுரி சேருங்—கெசமுகமும்
ஐந்து கரமுமதி லங்குசமும் பாசமுடன்
முந்துமிடக் கோடிருகை மோதகமும்—வந்தவிழி
மூன்று மிருசெவியு மும்மதமு நால்வாயுந்
தோன்று மிருபதமுந் தோன்றமுகில்—போன்ருரு
வாகனமு முன்னிருக்க மன்னுமரி யாசனத்தில்
மேகநிக ரைங்கரனும் வீற்றிருப்பன்—தோகையரே
அப்பொருப்பி னுப்ப ணளவீரெண் ணுயிரமா
மொப்பில் மனோவதியா மோர்நகரின்—பொற்புடைய
மண்டபத்திற் பொற்ரு மரைப்பொகுட்டின் வாணியொடும்
புண்டரிகத் தேவன் புகழ்ந்திருப்பன்—ஒண்டொடியீர்
இந்நகரி மேற்கீரே ழாயிர யோசனைத்தாங்
மன்னுமொரு வைகுண்ட மாநகரம்—பொன்னு
மரதனமுஞ் சேர்ந்திலங்கு மாடக்கான் மாடத்

தூரக வணைமிசையி னோங்குஞ்—சுரிகுழலார்
பூமடந்தை யோடும் புயல்வண்ணன் வீற்றிருப்ப
ஞமடந்தை கேள்வனுறை நன்னகர்க்குத்—தாமெதிரக்
கீட்டிசையி னீரயுதங் கீண்மே லயுதமுமாய்
வாட்டமில்லாப் பல்கோடி மார்த்ததாண்டர்—கூட்டியபொற்
கண்கவருஞ் சோதிக் கதிரெறிக்கு மண்டபமும்
விண்டடருங் கோபுரமு மீயுயர்ந்து—பண்டமரும்
வன்னச் சிகரமுமேல் வைத்தொளிர்பொற் றாவியுமுன்
மின்னுகொடிக் கம்பமதன் மேல்விடையும்—பொன்னின்
திருமதில்க ளோரேழுஞ் சேர்ந்தபிர கார
மருவுமதிற் கோடிகான மாட—மருகெங்குஞ்
சிங்கார மாகச் சிறக்கு மசோவதியின்
சங்காரங் கையன் சதுமுகத்தோன்—மங்காத
திக்கதிபர் மாமுனிவர் தேவர்வித்தி யாதரர்கள்
தக்க வசுக்களெண்மா சாரணர்கள்—மிக்கான

(தொடரும்)

## சமரச சன்மார்க்க போதம்

(தொடர்ச்சி)

19. மக்கள், தங்களுக்குக் கீழ்ப்பட்டுள்ள அஃறிணை உயிர்களின் வளர்ச்சிக்குத் துணை நிற்றல்வேண்டும். இஃது இயற்கை அறம்.

20. அஃறிணை உயிர்களும் படிப்படியாக வளர்ந்து பகுத்தறிவுடைய மக்களாதல்வேண்டும். அவைகளை வளரவொண்ணுதவாறு அவைகட்கு இடையூறு செய்தல் பெரும்பாவம்.

21. அஃறிணை உயிர்களின் வளர்ச்சிக்குக் கேடு சூழ்வோரின் வளர்ச்சியும் தடைபடுதல் இயல்பு.

22. ஓருயிர்க்குத் தீங்கு செய்வது, தன்னுயிர்க்குத் தானே தீங்கு செய்வதாகும்.

23. எல்லா உயிர்களையும் தன்னைப் போல் கருதி வாழ்வது சிறந்த இயற்கை வாழ்வாகும்.

24. மேலே கூறப்பெற்ற நான்கு இனத்தவர்கட்கும் அமைப்புவேண்டுமா வேண்டாமா என்பது ஒரு கேள்வி.

25. முதல் இனத்தவர்கள் குருமார்களுடன் தொடர்பு கொண்டு வாழ்தலின், அவர்களைப்பற்றி ஒன்றுங் கூற வேண்டுவதில்லை.

26. குருமார்களுடன் தொடர்பு கொண்டவா இன்னார் என்று எப்படி உணர்வது? குருமாகளுடன் தொடர்பு கொண்டவர்களிடம் சிறசில சிறப்பியல்புகள் அமைந்திருககும. அவைகளை விரித்தல் இயலாது. சிலவற்றைமட்டும் சொல்லுதல் கூடும். அவை, தமகெனை ஒன்றின்மை, பிறர்க்கென வாழ்தல், பெரிதும் மலையில் வாழ்தல், சூரிய ஒளியிலுள்ள பிராண சக்தியைக் காற்று வாயிலாக எளிதில் பருகி நாடி நரம்புகளுக்கேற்றல், நரை திரை மூப்பு அணுகாமை, பிறர் நோய்களைத் தியானத்தாலோ, நோக்காலோ, பரிசத்தாலோ போக்கல், இன்ன பிற. இவ்வியல்புகளுடையவர்கள் குருமார்களுடன் தொடர்பு கொண்டவர்கள் என்று உணர்தல் வேண்டும்.

27. அமைப்புகள் பலவிதம். அவைகளைப் பணிக்குரிய அமைப்புக ளென்

றும், தியானத்துக்குரிய அமைப்புக ளென்றும் இருகூறு படுத்திக்கொள்ள லாம்.

28. பணி அமைப்புகள் பின் மூன் றினத்தார்க்கும் பொது. அவைகள் வாயிலாக உயிர்த்தொண்டு நிகழ்ந்து வரும்.

29. பணி அமைப்புகளாவன : பள் ளிக்கூடம், தொழிற்சாலை, வயித்திய சாலை முதலிய அறச் சாலைகள்.

30. தியான அமைப்பு முறையில் மூவருள்ளும் வேற்றுமையுண்டு.

31. இரண்டாம் இனத்தவர்க்குரிய தியான அமைபபுகள் இயற்கையின் கோலங்கள்.

32. மூன்றும் இனத்தவர்க்குத் தியான அமைப்புகள் கலைகள்.

33. நான்காம்இனத்தவர்கட்குவேறு வித அமைப்புகள் தேவை. அவை கோயில், மடம், சபை போன்றன.

34. இவ்வினத்தவர்கள் சமரச சன் மார்க்க உணர்வு அரும்பப் பெறுதவர் களாதலின், அவர்கள் நெஞ்சில் பன்மை யுணர்வு மிகுந்து விளங்குதல் இயல்பு. அவர்களின் பன்மை யுணர்வைப் படிப் படியாக ஒருமைப்படுத்த மற்றவர்கள் முயலுதல் வேண்டும்.

35. இவர்கள், தங்கள் பன்மையுணர் வுக் கேற்றவாறு பல திறக் கொள்கை யுடையவர்களா யிருப்பார்கள். இவர் கள் வழியே சென்று இவர்களைத் திருத் துவது நலம்.

36. இவர்கள் தங்கள் கொள்கைக்கு (மதத்துக்கு) ஏற்றவாறு அமைப்புகளை ஏற்படுத்திக் கொள்வார்கள். தொடக் கத்தில் எவர் எவர் எந்த எந்தக் கொள் கையில் பற்றுள்ளங் கொள்கிருரோ அவர் அவர் அந்த அந்த அமைப்பில் சேர்ந்து ஒழுகலாம.

37. ஒருவர் அமைப்புமீது மற்றொரு வர் பகைமை கொள்ளாதிருக்குமாறு அவர்கட்குப் படிப்படியாக அறிவு கொளுத்த வேண்டுவது சன்மார்க்கத் தெளிவுடையார் கடன்.

38. பின்னை ஒருவர் கொள்கையை மற்றொருவர் கொள்கையுடன் நடுநிலை யில் நின்று சீர்தூக்கிப் பார்க்குமாறு அவர்கட்குப் போதிக்கவேண்டும.

39. நாளடைவில் தங்கள் கொள்கை யே மற்றவர் கொள்கையாகப்பரிணமித் திருப்பது போல அவர்கட்குத் தோன் றும். அவ்வேளையில் அவர்களிடம் பன்மை யுணர்வுமாய்வதற்கும், ஒருமை யுணர்வு அரும்புவதற்கும் இயற்கை அன்னை அருள் செய்வாள்.

40. சன்மார்க்கத் தெளிவுடையார், நான்காம் இனத்தவர்களின் பலதிறப் பட்ட அமைப்புகளிலும் ஈடுபட்டுக் காட்டுதல் வேண்டும். இவ்வீடுபாடு, எல்லாக் கொள்கைகளும் சன்மார்க்கம் ஒன்றையே குறிக்கொண்டு நிற்பன என்பதை, ஒருமை உணர்வு இல்லாதவர் கட்கு அறிவுறுத்தும்.

41. நான்காம் இனததவர் அமைப்பு களின் பெயர்கள் பலபடத் திகழ்கின் றன. அப்பெயர்களை மாற்ற வேண்டு வது அநாவசியம். வெறும் பெயர் மாற் றத்தால் ஒன்றும் விளையாது. உள்ள பெயராலேயே அவ்வவ்வமைப்புகள் நடைபெற்று வரலாம். ஆனால் அவை களில் சமரச சன்மார்க்கக் கொள்கை படிப்படியே இடம் பெறச் செய்தல் வேண்டும். உடல் எதுவாயினுமாக. அத னுள் சன்மார்க்க உயிர் நிலவுதல் வேண் டும்.

42. எவ்வமைப்பும் இல்லாத இடங் களில் புதிதாகச் சமரச சன்மார்க்கப் பெயரால் ஓர் அமைப்பு உண்டாக்க லாம். அதற்கென நிதியுஞ்சேர்க்கலாம். செலவுபோக மிகுதியுள்ளதைப் பணி அமைப்புக்கு உதவிவிடுதல் வேண்டும்.

43. நான்காம் இனத் தவர்கட்கு, ஆடல், பாடல், கூத்து, உலா, விழா முதலியவற்றில் வேட்கை நிகழ்தல் இயல்பு. அவைகளை மறுத்தல் கூடாது. மறுப்பால் நலன் விளையாது. சமரச சன்மார்க்க சங்கத் தத்துவம் அமையும் முறையில் அவைகளை நடாத்திக் காட்ட வேண்டுவது அறிஞர் கடமை.

44. நான்காம் இனத்தவர் வழியே சென்று, அவர்களை நல்வழியில் திருத்தல்வேண்டும்; அவர்கள் எளிதில் ஏதற்கும் இணங்கிவரும் இயல்புடையவர்கள்.

45. நான்காம் இனத் தவர்களின் தியான அமைப்புகள் மிக எச்சரிக்கையாக நடத்தப்பெறல் வேண்டும். அவைகளில் பிணக்கு பிளவு முதலியன நிகழ்தல் ஆகாது.

46. பிணக்கு பிளவுகளைத் தோற்றுவிக்கும் பேய்கள் பல உண்டு. அவைகளில் சிறப்பாகக் குறிக்கத்தக்கன இரண்டு. ஒன்று தேர்தல்; மற்றொன்று நிதி.

47. பிளவு பிணக்குகள் நிகழாத முறையில் தேர்தல் நடைபெறுதல் சிறப்பு. அவைகள் நிகழ்வதாயின், தேர்தல் முறையை அறவே விட்டுவிடுதல் நல்லது.

48. நிதியுள்ள இடத்தில் பெரிதும் நீதி இருப்பதில்லை.

49. தியான அமைப்புகட்கு நிதி அநாவசியம். அவசியம் நேரின் வேண்டும் அளவில் நிதி திரட்டலாம். குறிப்பிட்ட ஒன்றற்குப் பயன்பட்டதுபோக மிகுந்துநிற்பதைப் பணிஅமைப்புகட்கு உதவிவிடுதல் வேண்டும்.

50. தியான அமைப்புகள் தூய்மைக்கும் ஒழுக்கத்துக்கும் நிலைக்களனாக இருத்தல் வேண்டும். இவைகட்குக் கேடு நிகழும்போதெல்லாம் அமைப்புகள் சீர்திருத்தஞ் செய்யப்பெறல் வேண்டும்.

51. பிளவு பிணக்குகள் நிகழும் வேளைகளில் அவைகளை மேலும் மேலும் வளர்க்கமுயல்வது தவறு. தியானத்தில் அமர்ந்தால் எல்லாம் ஒழுங்குபட்டுவிடும். இயற்கை - இறைத் தியானம் நலனே செய்யுந் தன்மையது.

52. ஒவ்வொருவரும் தம்தம் குறைபாடுகளை உணர்ந்து இயற்கை - இறையைத் தியானிப்பது நல்லது.

53. குறைபாடுகளை நினைந்துநினைந்து கசிந்து கசிந்து உருகி அழுவது, இயற்கை - இறையின் அருளைப் பெறுதற்கு வழி தேடுவதாகும்.

54. குறைகளை உணர்ந்து, அவைகளைப் போக்க முயல்கிறவன், சன்மார்க்கத்தில் நிற்க முயல்பவனாவன்.

55. தன் குற்றத்தை உணர்கிறவன், பிறர் குற்றத்தை நாடான்

56. பிறர், தங்குற்றத்தை யுணர்ந்து வருந்தும்போது, அக்குற்றத்தை மன்னிக்கும் மனம் பெறுதல் வேண்டும். அம்மனம் சன்மார்க்கத்தில் ஈடுபடுவதாகும்.

57. ஒவ்வொரு குடும்பமும் சன்மார்க்க சங்கமாகத் திகழ அறிஞர்கள் முயல்வது அழகு. இதற்குச் சன்மார்க்கக் கல்விச்சாலைகள் பெருகுதல் வேண்டும்.

58. தொகையில் நான்காம் இனத்தவரே பெருகியிருக்கிறார். இத்தொகை சுருங்கி, மற்றவர் தொகை பெருகின், உலகில் பலதிறத் துன்பங்கள் நீங்கும். இது சன்மார்க்கர்கள் தொண்டைப் பொறுத்திருப்பது.

59. சன்மார்க்கத் தொண்டர்கள், சன்மார்க்க சங்க நோக்கங்களைப் பரப்ப முயன்ற வண்ணமாயிருப்பார்களாக.

## VII இறுவாய்

1. சத்தெனும் இறை ஒன்றே.

2. இறைக்கு உடல் இயற்கை.

3. இறை அப்பன்; இயற்கை அன்னை.

4. இயற்கை கடந்த இறை நிலையை மனவுணர்வுடையோர் ஆராய வேண்டுவது அநாவசியம்.

5. மனவுணர்வுடையோர், இயற்கை-இறையை வழிபடும் அளவில் நிற்பது ஒழுங்கு.

6. சத்தெனும் இறையை அடைதற்குரிய மார்க்கம் இயற்கை.

7. இறையை அடைதற்கு, இயற்கை இன்பத்தைத் வெறுத்துக் காட்டுக் கோடி, பூசையைப் பிடித்தல் வேண்டு மென்று நினைப்பது தவறு.

8. இயற்கை நெறி, இறை நெறியாத லான, இயற்கை இன்பத்தை வெறுப் பது இறை இன்பத்தை வெறுப்ப தாகும்.

9. பெண் ஆணுடனும், ஆண் பெண் ணுடனும் வாழ்வது இயற்கை.

10. பெண் ஆணை வெறுப்பதும், ஆண் பெண்ணை வெறுப்பதும் துற வென்று சொல்லப்படுவது தவறு.

11. தீய குணங்களை நீப்பது துறவு.

12. பெண்ணும ஆணும் சம உரிமை யுடையவர்கள்.

13. ஒருவன் ஒருத்தியுடனும், ஒரு த்தி ஒருவனுடனும் வாழ்வது அறம்.

14. இயற்கை வழி நின்று, உட லோம்பிக், கல்வி பயின்று, இயல்புக் குரிய தொழின் முறைகளில் ஈடுபட்டு, இல்லற மேற்று, இயற்கைத் தியானத் தில் பயிற்சி பெறுதல், இறை வழி பாடாகும்.

15. இயற்கை நெறி நிற்பது இறை நெறி நிற்பதாகும். இதுவே சமயம் என்பது.

16. சமயங்கள் பல இல்லை. உள்ள சமயம் ஒன்றே. அது சன்மார்க்கம்.

17. இயற்கைத் தியான முதிர்ச்சி யால் குருதரிசனம் பெறலாம்.

18. குருமார்கள் மக்களுமல்ல; கட வுளுமல்ல. மக்கள் கடவுளை அடைவ தற்கு அவர்கள் துணை செய்பவர்கள்.

19. குருமார்கள் நெஞ்சத்தாமரை யில் என்றும் இறையொளி திகழ்ந்த வண்ணமா யிருக்கும். அவர்கள் நுண் ணுடலுடையவர்கள்; பொன்மேனியர் கள்; இயற்கைத தியான முதியோர் கட்கு நலஞ் செய்பவர்கள்.

20. சடங்குகள் செய்து, காசு பறிப் பவர்கள் குருமார்களல்ல; அவர்கள் புரோகிதர்கள்.

21. புரோகித மதங்கள் பலப்பல. அவைகள் வேறு; சன்மார்க்கம் வேறு. இரண்டுக்குந் தொடர்பில்லை.

22. சன்மார்க்கம எல்லாக்கும் உரி யது.

23. சன்மார்க்கததுக்குச் சாதி நிறம் மொழி நாடு முதலிய வேற்றுமைக ளில்லை.

24. சாதி நிறம் மொழி நாடு முதலிய வேற்றுமை யுணர்வைக் கலப்பு மணம ஒழிப்பதாகும்.

25. பிறப்பில் உயாவு தாழ்வு கருது வது அஞ்ஞானம்.

26. மக்கள் அனைவருஞ் சகோதரர் கள்.

27. எல்லா உயிர்களிலும் வீற்றிருப் பது சத்தெனும் இறை ஒன்றே. அவ் வுண்மையை உணர உணரச் சகோதர நேயம் பெருகும்.

28. கர்மம், நாள், கோள் முதலியன சன்மார்க்கரைத் தாக்குவதில்லை.

29. அறிவில் மேம பட்டவர்கள், அறிவில் கீழ்ப்பட்டவர்களை உயர்த்தத் தொண்டு செய்தல் வேண்டும்.

30. தொண்டு உயிர்கட்கு அழகு.

31. உயிர்களுக்குத் தொண்டு செய் வது கடவுளுக்குத் தொண்டு செய்வ தாகும்.

32. சமரச சன்மார்க்க சங்கம் இறை முதல் எல்லா உயிர்களையும் அங்கமாகக் கொண்டது. ஆகவே எல்லா உயிரும் சகோதரர்கள்.

33. எல்லா உயிர்களையும் சகோதரர் களாகப் பார்ப்பவர் சன்மார்க்கராவர்.

34. இயற்கையை உடலாக்கொண்டு, என்றும் மாறுதலின்றி, எங்கும் நீக்க மற நிறைநது நிற்கும் ஒன்றாய், அறி வாய், அன்பாய், இன்பாய், அழகாய் உள்ள இறை வாழ்க.

35. இறைககு உடலாய்நின்று, திரு விளையாடல் புரியும் இயற்கை வாழ்க.

36. இயற்கை - இறைவழி நின்று, உலகை நடாத்திவருங் குருமார்கள வாழ்க.

37. காலதேச வர்த்தமான நிலைக்கு ஏற்றவாறு, அவ்வப்போது குருமார்கள் வழிப் பிறந்த அருள் மொழிகள் வாழ்க.

38. அருள் மொழிகளின் பொருளாயுள்ள சமரச சன்மார்க்கம வாழ்க.

39. சமரச சன்மார்க்க சங்கம் வாழ்க.

## VIII கலம்பகம்

[இப்போதும் நூலாகும்போது கீழ் வருவன ஆங்காங்கே பொருந்திய இடங்களிற் சேர்க்கப்படும்.]

1. உணர்வு பல திறத்தது. அது, கண் உணர்வு என்றும், காது உணர்வு என்றும், மூக்கு உணர்வு என்றும், நா உணர்வு என்றும், உடல் உணர்வு என்றும், மன உணர்வு என்றும் பலபட்டு நிற்பது.

2. கண்முதலிய உணர்வுகட்கு அடிப்படை மன உணர்வு.

3. மனம் வெளிமனம் என்றும், உள் மனம் என்றும இருவகைப்படும.

4. வெளி மனம் உருவங்களைக் கொள்ளவல்ல தென்றும, உள் மனம் உருவங் கடந்தவைகளைக் கொள்ளவல்ல தென்றும, சாதாரண உலகஞ் சொல்வது வழக்கம். மற்ற உலகம் அங்ஙனங் கொள்வதில்லை.

5. உருவங்களில் பருமை நுண்மை உண்டு. பருமை உருவங்கள் கண்ணுக்கு புலனுவன; நுண்மை உருவங்கள் கண்ணுக்குப் புலனுகாதன.

6. பருமை உருவங்களைக் கொள்வது வெளிமனம்; நுண்மை உருவங்களைக் கொள்வது உள்மனம்.

7. நுண்ணுருவம், அருவம் என்று சொல்லப்படும்.

8. அருவம உருவ மற்றதன்று. அருவம் கண்ணுக்குப் புலனுகாமையால், அதை உருவ மற்றதென்று சொல்வது தவறு. அருவம் கண்ணுக்குப் புலனுகாத நுண்ணுருவ முடையது.

9. அருவம எண்ணம போன்றது. எண்ணத்துக்கும் உருவம உண்டு என்பது மனேதத்துவ நூலார் துணிபு.

10. சத உருவ அருவங்களில் கலந்து விளங்கி, அவைகட்கு மேலும் தனித்து விளங்குவது.

11. உருவ அருவ நிலைகளைக் கடந்து விளங்குந தனி இறை இருவித மன வுணர்வுக்கும எட்டாதது.

12. இருவித மன வுணர்வையும் பொதுவாக மனவுணர்வு என்று கொள்ளலாம.

13. மன வுணர்வுக்கும் மேற்பட்ட நிலைகள் பல உண்டு.

14. இயற்கைக்கும் - இறைக்கும் உள்ள பிரிவற்ற தொடர்பைக்கொண்டு, இறையை, இயற்கை - இறை என்று சொல்லலாம்.

15. இறை உயிராய், இயற்கையில எங்கும் நீக்கமற நிற்றலான், இயற்கை உடல் இயங்கித் தன் கடனாற்றுகிறது. இயற்கையின் இயக்கத்தைச சிந்திக்கச் சிந்திக்க இறை உண்மையை உணரலாம்.

16. 'இறை உயிர்; இயற்கை உடல்' என்னும் எண்ணததுடன் இயற்கை வழி நிற்போரும், அவ்வெண்ண மின்றி இயற்கை வழி நிற்போரும செயலில் ஒருமைப்பாடுடையவர். செயலில் ஒருமைப் பாடுடையவர்கள் ஒருவரோடொருவர் பிணங்க வேண்டுவதில்லை.

17. 'இறை உண்டு' என்பது ஆத்திக மென்றும், 'இறை இல்லை' என்பது நாத்திக மென்றும் சொல்லப் படுகின்றன. இறை உண்டு இல்லை என்னும் வாய்ப்பேச்சைக் கொண்டு ஆத்திக நாத்திக நிலையை அளந்து கூறுதல் இய

லாது. இயற்கை நெறி நிற்றல் நில்லாமை என்னுஞ் செயலைப் பொறுதது ஆததிக நாத்திக நிலை நிற்பது.

18. இயறகையோடியைநத வாழ்வு என்பது உயிர்கள் வழிபாட்டையும் உடனகொண்டது.

19. சத்தினைத் தனிப்படுத்தி மனவுணர்வால் ஆராய்நது ஆராய்நது காலம் போக்காது, அந்தச் சததினை அடைதற்குரிய மார்ககததில் நின்றொழுகுவது சிறப்பு.

20. சததினை அடைதற்குரிய மார்க்கம் எது?

திரு. வி. கலியாணசுந்தரன்.

(தொடரும்)

# நமது சிந்தனை

[திரு. சி. சதாசிவனார்]

## IV

### சுகம்

உடம்பா ரழியில் உயிரா ரழிவர்
திடம்பட மெஞ்ஞானஞ் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாய மறிநதே
உடம்பைவளர்ததேன் உயிர்வளர்த் தேனே.

இத்திருவாக்கு நமது யாக்கையினது சிறப்பை வலியுறுத்து கின்றதாகும். உயிர்சிறத்தற்கும், உண்மையறிவு ஒளிர்தற்கும் உடலம் அவசியம் வேண்டற்பாலது. இவ்வுலகு, அனுபவ வாயிலாக, மக்களது அறிவைத் துலக்கி வளர்க்கும் ஒரு கல்விச சாலையாகும். இசசாலையில் யாக்கை எனுஞ் சட்டைபுனைந்தே மனிதர் பயில இயலும். ஏண்டுப் பிறவாமல் மகன் சிறக்கமுடியாது. ஆக, உயிர்கூர்தற்கு மெய் அதிக ஆககம் அளிக்கின்றது என்பது அறிந்தோர் அறை. பிறப்பின் நலத்தைக் குறைவறப் பெறுதற்குச் சரீரம் நன்னிலையிலிருத்தல் மிக அவசியம் என்பது வெளிப்படை.

இன்னும் இவ்வவனி நாட்கள் இனிதே கழிதற்கும உடல் நலன் வேண்டும். பிணியாற் பீடிக்கப்பட்ட மகன் யாதும இயற்ற இயலாது ஏமாற்றமடைந்து, பிணமென இயங்குவதைக் கண் கூடாகக் காண்கின்றோம். நோயாளனுக்கு அகம் புறம் இரண்டினும் அடைதற்குரிய இன்பு, அநுபவம் இன்னவை இல்லையாகும். சிறையுண்ட நீரென அவன் முதிறசி யடையாது கட்டுண்டு உழிதருபவனுவன். அறவழி பொருளீட்டி, இன்ப வீடடைதற்கு அருந்துணை செயும் இச்சுகம் மக்கள் எல்லோர்மாட்டும் நிலவுகின்றதா? இம்மைப் பயன்றுய்த்தற்கும், மறுமைப் பேறு சிறத்தற்கும் இன்றியமையாத சுகம் எத்தனை பெயரிடம் காணப்படுகின்றது என்று விரல்களால் எண்ணிவிடலாம். உலகில் மிகமிகச் சிறுபான்மையோரே நல்ல இரும்புடல் பெற்றுப பிணியின்றி வதிகின்றனர். நாம எப்பக்கம் திரும்பினும நோயெனும் பேயையே மிகையாகக் காண்கின்றோமல்லவா?

உலகம் தோன்றிய நாள்முதலாக நோய்கள் இருந்து வருகின்றன. இப்போது அவை அதிகம என்று சிறப்பாகக் கூறலாம். இடம், காலம, நடப்புகட் குகந்தவாறு புதிது புதிதாகப் பிணிகள் கிளைக்கின்றன. இவைகளைக் களையு ஆக்கப்படும் அவிழ்தங்களோ எண்ணிலடங்கா. மன்பதையில் அளவிறந்த, மருத்துவத்திற் றேர்ந்த நிபுணர்கள், இரசாயன சாலைகளில், அல்லும் பகலும் ஒழிவின்றித தமது மண்டைகளை உடைத்துக் கொண்டு, நோய்களைச் சன்னல் பின்னலாக வெட்டிச் சோதித்து, அவைகளை யடக்கும் மருந்துகள் பல

கண்டு பிடித்து, மக்களுக்கு அளித்துக் கொண்டேயிருக்கிறார்கள். எலிகளையும் முயல்களையும் பிடித்து, அவைகட்கு முதலில் நோயைப் புகட்டி, பின் இவர்கள் கண்டு பிடித்த அவிழ்தங்களையும் அருத்தி, அவை சுகமடைதலைக் கண்டானந்தித்து, இந்நோய்க்கு இது கைகண்ட மருந்து என்று முத்திரை இடுகிறார்கள். சற்று காலத்திற்குப் பின் இம்மருந்துகளிலும் சிறு குறைகள் இருப்பதாக அனுபவத்தால் ஏற்பட, வேறு பல அவிழ்தங்கள் வெளி வருகின்றன. எத்தனை மாற்று நஞ்சுகள், எத்தனை டானிக்குகள் ஆவணங்களிற் குவிந்திருக்கக் காண்கின்றோம்? எத்தனைவித வைத்திய முறைகள்? அல்லோபதி, ஹோமியோபதி, பயோகெமிக், ஆயுர்வேதம், யுநானி, மாந்திரீக ஔஷதம், இன்னும் எவ்வளவு வேண்டும். இவைகளாலாய பயனென்?

நோய்மட்டும் அருகுவதாகத் தோன்றவில்லை. மருந்துண்டு ஒரு நோய் தீர்ந்ததும், வேறொன்று புதிதாகத்தோன்றி ஒறுக்கின்றது. அதுஅடங்கியதும் இன்னும் ஒன்று ஒன்று ஒன்றுஎனக் கிளைத்துக்கொண்டே செல்கின்றன. நோய் பெருக மருந்தும், மருந்து பெருக நோயும், ஒன்றற்கொன்று காரணமாகி வளர்கின்றன. பிணிதீர மருந்து விழுங்கும் பழக்கமுடையோர் தாமிறக்கும் வரை மருந்தைத் தின்றுகொண்டே இருக்க வேண்டியதுதான்; அவர்களது பிணிமட்டும் ஒழிவதில்லை.

மருத்துவர் கைபிடித்து நாடிபார்த்தும், கருவிகொண்டுதுடித்தல் சோதித்தும், இரத்தப் பரிசீலனைகள் செய்தும, எக்ரேயின் உதவியால் உட்கருவிகளைக் கண்டும் நோய்க்குக காரணத்தைக் கண்டு விட்டதாக மதித்து, அகமலர்கின்றனர். குருதியின் சுத்தம், இருதய ஓட்டை, எலும்புருக்கிப் பூச்சி எனச் சொல்லி அவைகளைப் போக்க மாற்றுக் கொடுக்கின்றனர். அந்நோய் சிறுபோது தணிந்து நிற்கின்றது; பின் அது வேயோ, அல்லது வேறொன்றோ கிளைத்து, இன்னும் அதிக கடுமையாக வாட்டி, அல்லல் விளைக்கின்றது.

குருதிக்கேடு ஆதியன நோய்க்குக் காரணமாகா. இவை பிணிக்காதையின் முதல் அத்தியாயமாகலாம். இரத்தம் கெடுவதால நோய்கள் பல எழலாம். குருதிககு உடம்பை வளர்க்கும் ஆற்றலும பிணிவர வொட்டாது தடுக்கும் வன்மையும இருக்கின்றன. இது கெட்டுப் போனபோது வளர்ச்சிகுன்றி பிணியும கடிதில பற்றுகின்றது. இஃது இவ்விதம் உலர்வதற்குக் காரணங்கள் பல. நோய்க்கு இரத்தத்தீங்கு ஆயவை தாமே முதற் காரணமல்ல.

உடம்பைக் காக்கும் இந்நீர், நாம் அருந்தும் ஊண், பருகும் நீர், உயிர்க்கும் கால் இவைகளினது ஆக்கம், நாம் உபயோகிக்கும் உணவு தண்ணீர், காற்று இவை இருககும் விதம் நமது விருப்பத்தைப் பொருத்த தாகும். நமது விழைவும் மனதில் எழுகின்றது. சித்தத்துளவர் தீய செய்வினை பலவும் செய்ய, மறுகும் உள்ளம் ஈர்த்த போக்கில் நாம ஒழுகும்போது, உடம்பிற்குத் தக்கனவும் தகாதனவும் குடரிற் புகுந்து, சரிவரக் கரையாது, புளிப்பேறி, உள்ளேயே நாட்படத் தேங்கி, செந்நீரை விடமாக்கி, அகக் கருவிகளையும் பாழாக்கும். இப்பிசகினால் வரும் நோய்கட்குக் காரணம் மனம், மனமே என்று சொல்லாமல் உணர்ந்து கொள்ளலாம். பிணி வநதுற்றபோது மருந்துதின்று, குணமாகும் வரை பத்தியங் கிடந்து, சுகமடைந்தும், முன் பழக்கங்களைப் பற்றி நடநதால், சிறிது காலந்தாழ்த்து அந்நோய் திரும்பவநது கலக்குகின்றது. மன நோக்கத்தை - விருப்பத்தைத் திருப்பாத எந்த அவிழ்தமும் பயனற்றதென்பது இதனால் அறியக் கிடக்கின்றது.

சுகத்திற்கு அடிப்படைக் காரணம் மனமாகும். மனதில் நினைத்தபடி நமது உடம்பு மலர்கின்றது. மனம் நோயுற்றிருந்தால் உடம்பும் கெடும். அதில் எழும் கோளாறுகளை நீக்கினால் மட்டுமே பிணி அழியும்; ஆதி காரணமாய மனஎழுச்சி

களுக்கு வழி செய்யாது, அதன் விகாசமாகியமெய்க்கு ஓட்டுப்போடுவது பனிநீராற் பறவை பணிக்கப் பாவிப்ப தொக்கும். மனதின் நீழலே மெய். மனதை அமைவாகஅமைத்தால் அதன் நீழல் அதுவே அந்தமடையும்.

மனதில் எழும் நெகிழ்ச்சிகள் அதி லுறும் பிணிகள் - இவை அனந்தம். காமம், குரோதம் இன்னபிற தீஎழுச்சி களான் உடல் கேடுறுகின்றது என் பதை மறுக்க இயலாது. காமத்தினுல் வரும் பிணிகளைச் சொல்ல வேண்டு வதில்லை. கோபம் மிகுதலால் குருதி தலைக்கேறி, கண் சிவத்தல், பின்எரிச் சல், தலைவலி முதலியன உண்டாகின் றன. அடிக்கடி கோபம் எழுவதால், நாளடைவில் இரத்தம் கொதிபபேறி, கெட்டுப் புளித்து, அதனுல் வாதசம்பந் தமான நோய்கள் உண்டாகின்றன என்று அறிவுடையோர் அறைகின் றனர். கவலை எனும்பேய் வாய்ப்பட் டோர் இரவில் துயிலுவதில்லை. நெடு நாள் உறக்கங் கெட்டவன் நோய்வாய்ப் படுகின்றுன். இச்சம்பவங்கள் மனதில் உறும் எழுச்சிகளாலும் நோய் வரலாம் என்பதை விளக்குவன.

விலங்கு மனதைத் திருப்திசெய்ய உண்ணும் தகாத உண்டி, மீதூண் இவைகளால் நோய் உண்டாகலாம். இரண்டாவது மனதில் எழும்பும் தீ எழுச்சிகள் பிணிகளைத் தரலாம். இன் னும் நாம் வழக்கமாக நோயைப் பற் றியே சிந்திதது்க் கொண்டிருப்பதும் பிணியை நல்கும். இது எப்படி என்று சிந்திப்போம்.

உடலம், மிகமிகச்சிறிய உயிரும் உணர்வு முடைய கண்ணறைகளின் கூட்டங்களால் ஆயது. இக்கண்ணறை கட்குத் (Cells) தாம் செய்யவேண்டிய தொழிலினது அறிவும், அதை நன்கு இயற்றவேண்டும் எனுமவாவும் இருக் கின்றன. மனித இயல்புகளாய அறிவு, ஞாபகம், பயம், ஆச்சரியம் ஆகிய உணர்ச்சிகளும் இவைகள் மாட்டு உள. இவ்வீட்டங்கள் நமது மனதிற்கு - சித் தத்திற்கு அடங்கித் தொழிற் படுகின் றன. இசசங்கத்திற்குச் சித்தம் தலைமை. அகக்கருவிகள் யாவும் இக்கண்ணறை களால் ஆக்கப்பட்டிருப்பதால், அவை கட்கும் சிததமே தலைமையாகும்.

இன்னும் இது உடலுள் இருக்கும் நீர் நிலைகளையும் அடக்கித் தொழிற் படுத்துகின்றது. பெரியபலகை யொன் றைத தராசுபோல் சமன்செய்து, அதன்மேல் ஒரு மனிதனைச் சமமாகப் படுக்க வைதது, அவனைத் தன்கால் களைப்பற்றிச் சிந்தனை செய்யச்சொல்ல, அதிக இரத்தம் கால்களுக்கு ஓடி அப் பக்கம்கனதது, பலகை சாய்ந்ததையும், தலையை நினைத்துச் சிந்திக்கக் கூறிய போது, தலைப்பக்கம் கனத்து அப்பக் கம் பலகை சாய்நததையும் கண்டு சித் தம் உடம்பிலுள்ள நீரோட்டத்தையும் அடக்குகின்றது என ஆராய்ச்சிசெய் வோர் நிறுவி இருக்கின்றனர்.

இவ்வுள்ளம் தனது உணர்ச்சியால் புறமனதின் உதவியின்றி - மிகச் சிக்க லான தனது கடமையை - உட்கருவி களாற்றும் தொழிலைக் கண் காணிப்ப தைச் செய்யா நிற்கின்றது. நாம் முயற் சியிலீடுபடும்போது, உடம்பு பிரதிகண மும் தேய்ந்து கேடுற்றுக் கொண்டும், பின் ஓய்வு எடுத்துக் கொள்ளும்போது அழிந்தபாகம் மறுபடியும் புதிதாக உண்டாகிக் கொண்டும் இருககின்றது. உடல் வண்ண நூற்கள் ஏழுவருடத்துக் கொருமுறை தேகம் முற்றிலும் புதி தாக ஆகிவிடுகின்றது எனக் கூறி வந தன. இப்போது, இன்னும் விரைவாக உடல் மாறிவிடுகின்றது என்று ஆராய்ச் சியால் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றது. தேய்ந்த பாகங்களை - கெட்ட உறுப்பு களை - புதுப்பித்து ஒழுங்குபடுததும் வேலைகளை எல்லாம் சித்தம் கவனித்துக் கொள்கின்றது. தலைவன் எவ்விதம் இருக்கின்றுனே அவ்விதமே கீழ் ஆட் களும் இருப்பதியற்கை. சித்தம் எந் நிலையி லிருக்கின்றதோ அந்நிலையில் தேகமும் ஆகின்றது.

புறமனமில்லாமலே உள்வேலைகளைச் சித்தம் கவனித்துக் கொண்டிருந்தா லும், புறமனதில் எழும் எண்ணங்கள்-

எழுச்சிகள் சித்தத்தைத் தனது கடமையினின்றும் பிறழச் செய்கின்றன. புறமன மடங்கியவனது உள்ளமே தனது கடமையை ஒழுங்காய்ச் செய்யும் திறனுடைத்து. விழிப்பில் நாம என்ன வழக்கமாய் உடலைப்பற்றி எண்ணுகின்றோமோ அது சித்தத்தினுறைத்து உடம்பினு முறைக்கின்றது. நோயைப் பற்றியே நாம் சந்ததமும் நினைத்துக் கொண்டிருந்தால் நோயையே எங்கும் காண்போம். இதனின்றும் - நமது ஞாபகமே உடம்பை ஆக்கும் சக்தி என்பது போதரும். முன் நினைத்த நினைப்புகளின் பயனாக இப்போது சுகத்தையோ, அல்லது பிணியையோ அடைகின்றோம். இனி நினைக்கும் நினைப்பால் வரும் நாட்களில் சுகமோ, பிணியோ அடைவோம்.

உடல் கண்ணறைகளாலாயது - இவை சித்தத்திற்கு அடங்கியவை; சித்தம் நமது எண்ணங்களால் மாறலாம. நாம் எண்ணத்தை அடக்குவதனால், சித்தத்தையும், கண்ணறைகளையும், உடம்பையும் வசப்படுத்தலாம். நமது வீட்டைச் சுத்தமாகவும், சுகமாகவும், அழகாகவும் அமைக்கலாம்.

"உறுகயி றூசல் போல
ஒன்றுவிட் டொன்று பற்றி
மறுகயி றூசல் போல
வந்து வந்துலவு நெஞ்சம்"

அடங்க - நமது நினைவு வழிப்பட - சுகம் அரும்பும்.

உறுதியுடன் நமது மனநோக்கத்தை மாற்றுதலால் - நல் எண்ணத்தால் - நெஞ்சறிவுறுத்தலால் நாம் நமது உள்ளத்தை அடக்க வேண்டும்; அதன் நோக்கத்தையும் மாற்றவேண்டும். அவ்விதம் மாற்றிச் செப்பனிட்ட பிறகு தான் நமதுடல், உண்மையில் நமதாகும். பிணியை நீக்க உடம்பில் மருந்தை ஏற்றுதலொழித்து, உடலின் முதலாய மனதிற்கு மருந்தூட்டுவது சாலச் சிறந்ததாகும். மத்துறு தயிர் போல் மருளும் சித்தத்தைத் திருத்திக் கருத்தினைச் செவ்வே நிறுத்துவதே சிறப்பளிக்கும்.

மனதை மாற்றும் சக்தி சிலருக்குத் திடீரென்று உண்டாதல் உண்டு. எதிர்பாராத ஒரு பெரிய நன்மை நோயாளிக்கு நேருமாகில், அதனால் ஏற்படும் இன்பு நல்கும் எழுச்சியினால், மனம் அதிர்ந்து, மாறி, அதனபயனாக அவன் நன்மை அடையலாம. எதிர்பாராது ஏற்படும் ஒருபெரிய விபத்தினாலும மனது குன்றி, அதுவே ஏக்கமாக மனிதன் உயிர் நீத்தலும உண்டு.

எண்ணங்களுக்கு அடிமையாயிருப்பவன் சுக்கானற்ற தோணியை ஒக்கின்றான். அது அலைகளான் அலைப்புண்டு, காற்று வீசிய பக்கமெல்லாம் ஓடி உழன்று, சுழல்களிற் சுழன்று, பாறைகளில் மோதி, உடைந்துபோகும். எண்ண அடக்கமறறவன் பற்பலநினைப்புகளால் நலிந்து, மற்றவரது எண்ணங்களால் மெலிந்து, நோய்களாலுலர்ந்து அல்லல் அடைவான்.

இத்துன்பம் துடைத்து, உடல்நலனடைய அவா உடையோன் பிணி என்று ஒன்று இருக்கின்றது என்பதைஅறவே தனது ஞாபகத்தினின்றும் ஒழித்தல் வேண்டும். கவலை - பயம் - குரோதம் - விரோதம் இன்னபிற தீ எழுச்சிகளைத் தள்ளி, சுகததையே - நன்மையையே மனதில் பதித்தல் வேண்டும். முதலில் நாம் எவ்விதம் இருக்கவேண்டுமென்று விழைகின்றோமோ, அவ்வித நிலையை மனதில் இருத்தி அதைப்பற்றியே சதா சிந்தித்தல் வேண்டும். இச்சிந்தனை முதிர்ச்சியால பிணி எண்ணம இல்லாமலே ஒழிதல் கூடும். "ஆண்டவன் திட்டத்தில் பிணி என்பதே இல்லை. அவனது பெயர் துன்பக் கலப்பே இல்லாத சுகம், இன்பு, அன்பு, ஆதியன ஆகும். அவன் எங்கும் விரவி நிறைந்திருப்பதால் நாம் சுகக்கடலில் ஊறித் திளைத்துக் கிடக்கின்றோம். ஆகையால் நம்மிடம் பிணியே இல்லை. முன்செய் தீவினையால் இப்போது

நோயுற்றிருந்தாலும் இறைவன் நம்மைக் காப்பாற்றுகின்றான். எம் செயலாலாவது யாதொன்று மில்லை. எல்லாம் அவன் செயலே என்று உணரப் பெற்றோம்" என்று எப்போதும் தியானம் செய்துகொண்டு இருப்போமாயின், அவ்வித உணர்வு, நாம் தியானம செய்வது உண்மை எனும் உணர்வு நமக்கு வந்துறும. அக்கால் ஈண்டுப் பிணியே இல்லை எனும் உண்மையை அனுபவமாக உணர்வோம்.

மருத்துவர்களிற் றலையாயவர் கடவுளே. அவருக்கு வைத்தியநாதர் என்று முன்னோர் இட்டிருக்கும் பெயரையும் கவனிக்க. அவர் சுகவாரி. யாவர் மாட்டும் இவ்வாரி இருக்கின்றது. நாம் இதை உணராததால் துன்பம் வருகின்றது. இதை உணர்ந்த மனம் ஒன்று "பிணியறியோம்" என்றது.

நமது வீடுகளில் யாராவது நோயுற்றிருந்தால், நிச்சயம் இறந்து படுவான் என்று கைவிட்ட நிலையில் இருக்கும் போது கடவுளை வேண்டிக் கொள்வதுண்டு. இவ் வழக்கத்தை நாம் பரிகசிக்கின்றோம். ஆனால் உண்மை விசாரிக்கப்புகின், இஃது இவ்விதம் இகழத்தக்கதல்ல என்பது விளங்கும். ஆண்டவனை வேண்டிக் கொள்ளும்போது, நாம் நிலைமையை அப்படியே அவனிடம் ஒப்படைத்து "எங்களால் இவனைக் காப்பாற்ற இயலாது. தெய்வமே!என்செயல் உன்செயலே என்று உணரப் பெற்றோம். இவனைக் காப்பாற்று. உன்னால் இது முடியும்" என்று நினைப்பதாகும். அச்சமயத்தில் ஆண்டவன் உணர்வு சிறிது நம்மிடம் இருக்குமாகில், மயிர் சிலிர்க்கின்றது. இது ஆண்டவனது செயலே என்று அப்போது உணர்கின்றோமாக. சில தினங்களில் நோயாளி சௌகரியமும் அடைகின்றான். இந் நிகழ்ச்சி யாவருக்கும் சாதாரணமான தொன்றாக விருக்கலாம்.

சில தினங்கள் மட்டும் - சற்றுநேரம் மட்டும் அவனை நினைப்பதால் இந் நன்மை உண்டாகுமாகில், எந்நேரமும் நாம் அவனது அருளையே சிந்தித்திருந்தால் எத்தகைய நன்மைதான் உண்டாகாது என்று நாம் நன்றாகச் சிந்திக்கவேண்டும். "நெஞ்சம உமக்கே இடமாக வைத்தேன். நினையாதொரு போதும் இருநதறியேன்" என்று சொல்லத் தருந்த பேற்றை நாம் எப்போது அடைகின்றோமோ அப்போது திண்ணமாகப் பிணி ஓடும்.

அவனன்றி ஒன்றில்லை என்றும், சுகவாரியில் அமிழ்நது, ஆழ்ந்து கிடக்கின்றோம் என்றும் நாம் சிந்தித்து அதே ஞாபகமாக ஒழுகுவதே நோய் போக்க நல்ல மருநது. மருத்துவர்களிடம் அலைந்து அல்லற்படும் அவலம் மிச்சம். அவர்கட்குத் தரவேண்டிய பொருள் தேடுவதில் உண்டாகும் முயற்சி - காலம்-மிச்சம். இதிற் செலவு செய்யும் காலததில் நூற்றிலொருபங்கு ஆண்டவனைச் சிந்திப்பதிற் செலவு செய்தால் அடையும் நன்மையோ, மருத்துவர் நல்கும் நன்மையைவிட நூறுபங்கு அதிகமாகவே இருக்கும் என்பதிற் சிறிதும் ஐயமில்லை. திருநாவுக்கரையர் எவ்விதம் சுகமடைந்தார்? அவருண்ட அமுதம் என்ன? மற்றும் பல பெரியார் நோயுண்டவர்களை எவ்விதம் சுகப் படுத்தினர்? அவர் கண்ட அவிழ்தம் தான் என்ன?

இப்பெரியார் சரிதம் வாசிப்பது, இவர்களது அருள் வாக்குக்களை உணர்ந்தோதுவது, உன்னுவது, இவர்கள் கையாண்ட வழிகளைப் பின்பற்றுவது ஆதியன நமது சித்தத்தைத் தெளிவிக்கும். இதோடுகூட, நாம் ஒவ்வொரு நாளும் குறித்த காலத்தில் தவறாது செய்யும் தியானத்தால் நமது மனத்தைச் செம்மைப் படுத்தலாம். அது அநதமாகியபோது,

"சித்தத் துருகிச் சிவனெம்
பிரானென்று சிந்தையுள்ளே
பித்துப் பெருகப் பிதற்றுகின்
றார்பிணி தீர்த்தருளாய்"

"துன்பக் கடலிடைத் தோணித்
தொழில் பூண்ட தொண்டர் தம்மை
இன்பக் கரைமுகந் தேற்றுந் திறத்தன"

"பிணியுடை யாக்கை தன்னைப்
பிறப்பறுத் துய்ய வேண்டிப்
பணியுடைத் தொழில்கள் பூண்டு
பத்தர்கள் பற்றினாலே"

இவை போன்ற அருள் மொழிகள் உண்மை என நாம் உணர்ச்சி யடைவோம்.

நாம் அவனியில் அடையும் சுகத்திற்கும் "சித்தந் தெளிதல்" காரண மாகும்.

---

# கடவுளுடன் ஒன்றுபடுதல்

[குமரதாசன்]

சென்ற மார்ச்சு 'நவசக்தி'யில 'ஐக்கியம்' என்ற தலைப்பின் கீழ் 'நோன்பி' வெளியிட்டிருக்கும் கட்டுரையில் கடவுளுடன் இரண்டறக் கலந்த நிலைமையின் தன்மையையும், அதை எவ்வாறு அடையக்கூடும் என்பதையும் அனேக மேற்கோள்கள் கொண்டு அருமையாக விளக்கியிருக்கின்றனர். கடவுளாகிய பரவெளியில் நம்மனம் கலப்பதுதான் ஐக்கிய நிலை யென்பதையும், ஓங்கார அணைமீதேயிருந்து, தன் இதயத்திலேயே கடவுளோடு சீவன் ஒன்றுபடும் என்பதையும், அப்போது சீவனுடைய அகங்காரமும் மனமும் இறந்துபட்டு அது பரமுத்தியை அடைந்து, சீவ போத ஐக்கிய நிலையில் அமர்ந்திருக்கிற தென்பதையும் 'நோன்பி' நன்கு விளக்கியிருக்கின்றனர்.

யோகாப் பியாசங்களில் ஓங்கார சிந்தனை, தியானம் முதலிய முறைகளைப் பற்றி மனதைத் தன்வயமாக்கி, உருவ மனத்தையும் அருவ மனத்தையும் நீக்கிச் சீவன் பரமுத்தியை அடையக் கூடும். ஆகையால் மேற்சொன்ன அப்பியாசங்களைக் கைக்கொள்ள வேண்டியது அவசியமென்று சாஸ்திர ஆராய்ச்சி வல்லுனர் எல்லோரும் உரைப்பர் என்பது வெள்ளிடைமலை. ஆயினும் மன்பதையில் பெரும்பாலோர் எந் நெறியைக் கைக்கொள்ள வேண்டும்? மேற்சொன்ன அப்பியாசங்களைச் செய்ய அவர்களுக்கு அவகாசமும், போதுமான கல்விப் பயிற்சியும், யோகாப்பியாசங்களில் நழுவி விழாமல் தடுக்க இடையறுது குருமார்களின்பாது காப்பும் இல்லாததால் அவர்கள் கடவுளுடன் ஒருமைப்பாடடைய எந்தப் பயிற்சியைப் பயிலவேண்டும் என்கிற விஷயமே நமக்கு மிகவும் அத்யாவசிய மான தொன்றும்.

விகாச முறையில் விலங்கினத்தினின்று மனிதவர்க்கத்தை அடைந்த கீழான நிலைமை முதலாக முத்தி நிலைமையடைகிற பரியந்தமுள்ள மானிடவர்க்கத்தை ஐந்து வகைகளாக வகுக்கலாம். அவையாவன :—

(1) விலங்கினத்தின் ஆசைகளைத் தவிரவேறொரு நோக்கமுமின்றி விவேக சூன்யராய், எவ்வழியிலும் ஆசைகளைப பூர்த்திசெய்ய அஞ்சாது வாழ்க்கை நடத்தும் மக்கள் ;

(2) சற்று நாகரிகமடைந்து பெரும்பாலும் சிற்றின்ப நோக்கத்திலேயே ஊக்கம் வைத்து ஏகதேசம் துன்மார்க்கங்களைத் தவிர்த்து வாழ்க்கை நடாத்துபவர்கள் ;

(3) பெரும்பாலும் சுயநல நோக்கங்கள் இருப்பினும், சிற்றின்ப ஆசைகள் சற்றுகுறையக் கிஞ்சித்துப் பிறருக்கு அநுகூலமாகவும் சிறிது கலைகள் பயிற்சியுடனும் உண்மை ஞானத்தில் சிற்சில சமயங்களில் சற்று வேட்கையும் உள்ளவர்களாய் இவைகளுக்கேற்ப மத்திய

மான கடவுள் வழிபாட்டையும் கைப் பற்றி வாழ்பவர்கள ;

(4) கடவுள் ஞானம் அல்லது வித்த கத்திலேயே அநேகமாய் முற்றிலும் ஆசைவைத்து, உலகவாழ்க்கையி லிருந் தாலும் சிற்றின்ப நோக்கம் அநேகமாய் நழுவிவிட உலக சம்பந்தமான வியவ ஹாரங்களையும் ஆன்மா கடவுளை அடைய வேண்டிய செநநெறிக்கு மூர ணாகாத முறையிலேயே பெருமபாலும நடத்திக்கொண்டு,

“ எத்துணையும் பேதமுறா தெவ்வுயிருந்
தம்முயிர்போல் எண்ணி யுள்ளே
ஒதுரிமை யுடையவராய் உவக்கின்றார்
யாவர் அவர் உளநதான,
சுத்தசித்துருவாய்எம்பெருமான் நடம்புரியும்
இடமெனநான தெரிநதேன் அநத,
விததகர்தம் அடிக்கேவல் புரிநதிடஎன
சிந்தைமிக விழைநத தாலோ ”

என்ற இராமலிங்க சுவாமிகளின் திரு வாக்குப்படி ஒரு குருநாதனுடைய கடாட்சம் எப்போது கிட்டும் என் கிற அவா சதாமனதில் குடிகொண் டிருக்க, அவன் நோக்கம் சிற்சில சமயம் அவர் பால் விழ, சன்மார்க்க வாழ்க்கை நடாத்துபவர்கள். சில கடினமான சம யங்களில் கடவுள் குருநாதன் மூலமாக இவர்களுக்கு அறிவு புகட்டுவார்; ஆபத் துகளினின்றும் நீக்கவும் செய்வார். இவ்வமயங்களில் இவ்வுதவியைப் பெறு கிறோ மென்கிறவிடயம் இவர்கள் மனத் தில் படாமலேயே இருக்கலாம். ஒரு கால் தெரிந்தும் பெறலாம் ;

(5) ஒரு குருநாதனுடைய கடாட்சத் தைத் தெளிவாகப்பெற்று அவன்கை யில் ஒரு கருவிபோன்று உழைக்கச் சதா பிரயத்தனம்செய்துகொண்டு, சிற் சில சமயம் தவறினும் நாளடைவில் அந்நிலையில் தவறாது நின்று தமக்கென வாழாது குருநாதன் முறையிலேயே பிறர்க்குரியாளராய் உடல் பொருள் ஆவியெல்லாம் கடவுளுககுரியவை, அல் லது குருநாதனுக்கே சொந்தமானவை என்ற பூரண எண்ணத்துடனும் தம் ஆன்மா கடவுளுடன் இரண்டறக் கலந்த பேரானநத நிலையை அடையக் கூடும் என்ற ஆழமான நமபிக்கையுட னும் வாழ்பவர்கள். முன்வகுப்பார் போலல்லாது இவர்கள் கடவுள் கருணை யையும், ஒளியையும், துணையையும் அடிக்கடி பற்பல சமயங்களில் பெருங் காரியங்களில் மாத்திரமின்றிச்சிறு விட யங்களிலுங் கூட அநுபவிப்பவர்கள். இங்கே பின்வரும் அருட்பாக்கள் சிந் திக்கற்பாலன :—

“ எனனுசை எல்லாந்தன
னருள்வடிவாந் தனக்கே
எய்திடச்செய் திட்டருளி
எனையும்உடன இருததித
தனனுசை எல்லாம்என
னுள்ளகததே வைததுத
தானும்உடன இருந்தருளிக்
கலநத பெருநதகையே
அனனுய்என் னுருயிரே
அப்பா என்னமுதே
ஆவாஎன் றெனைஆண்ட
தேவா மெய்ச்சிவமே
பொனனுரும் பொதுவில்நடம்
புரிகின்ற அரசே
புண்ணியனே என்மொழிப்பூங்
கண்ணியும்ஏற் றருளே ”

“களித்தென துடம்பிற் புகுநதனை
எனது கருத்திலே அமர்ந்தனை கனிநதே
தெளிதத என்னறிவில் விளங்கினை உயிரிற்
சிறப்பினுற் கலந்தனை உள்ளந்
தளிர்த்திடச் சாகா வரங்கொடுத தெனறுந
தடைபடாச் சிததிக ளெல்லாம்
அளிததனை எனக்கே நின்பெருங் கருணை
அடியன்மேல் வைத்த வாறென்னே.”

“பயததொ டொருபாற்
படுததிருநதேன என்பால்
நயததோ டணைநதே
நகைதது—வயத்தாலே
தூக்கியெடுத் தெனைமேற்
சூழலிலே வைத்தனை நான்
பாக்கியவா னானேன்
பதிந்து.”

"எனனுளே அரும்பி எனனுளே மலர்நது
என்னுளே விரிந்த எனனுடை யன்பே
என்னுளே விளங்கி என்னுளே பழுதது
என்னுளே கனிந்த என்னுடை யன்பே"

*　　*　　*　　*

"சிததிக ளனைததையும் தெரிவித தெனக்கே
சததிய நிலைதனைத தயவினிற் றநதனை"

*　　*　　*　　*

"கட்டமுங் கழனறேன் கவலைவிட் டொழிங்
கலக்கமுந தீர்நதனன பிறவிச் [தேன்
சட்டமுங் கிழிததேனதுக்கமுந துறநதேன
சாவையும் நோவையுந் தவிர்நதேன்
சிட்டமு மடைநதேன் சிற்சபை யுடையான
செல்வமெய்ப் பிள்ளையென் றொருபேர்ப்
பட்டமுந தரித்தேன் எனக்கிது போதும
பண்ணிய தவம்பலித ததுவே"

முடிவில் இவர்கள் கடவுளுடன் ஒன்று பட்டு ரிஷிகள் முனிவர்கள நிலைமையை யடைந்து மானிடர்களுக்கு ஈஸ்வர சங் கல்பத்தில் நிச்சயம் பண்ணப்பட்டிருக் கும் பேரானந்த முத்தி நிலையை அடை வார்கள். இவ் வகுப்புகளில் ஒவ் வொன்றிலிருக்கும்மனிதர்கள் அதற்கு மேற்படிக்குச செல்வதற்கு வேண்டிய முறைகளை அவர்களுக்குப் பரோபகார சிநதையுள்ள அறிவாளிகள் சொல்லி உதவவேண்டும். அதுவன்றி அதிக மேம்பாடான சமீபத்திற் கிட்டாத உன்னத நெறிகளையோ அப்பியாசங் களையோ முறை தவறி வற்புறுததுவ தால் பயனில்லை; நன்மை விளையாது போவதுமன்றி தீமையும் விளையலாம். இவ்வாறு நோக்குங்கால் கடவுளுடன் ஒன்றுபடுதல் என்ற முறை, மேற் சொன்னவைகளில் முதல் மூன்று வகுப்பிலுள்ள மானிடர்களுக்குப் பொருநதாத ஒன்று. ஐந்தாவது வகுப் பினர்கள் குருநாதர்களுடைய கடாட் சத்தைப் பெற்று அம் முனிவர்கள் கருணையில் திளைப்பவர்கள்; சதா அவர்களுடைய பார்வையி லிருநது கொண்டு யோகாப்பி யாசங்களையும் அபாயமின்றிப் பயிற்சி செய்து நன் னெறியில் வாழ்பவர்கள். தங்கள் மனமும் வாக்கும் செயலும் குருமார் களுடைய எண்ணங்களுடனும் வார்த் தைகளுடனும் செயல்களுடனும் ஒரு மைப்பட்டு நிற்க வேண்டுமென்ற பிர யத்தனத்தில் அவர்கள் சதா ஈடுபடு வார்கள். குருமார்களோ கடவுளுடன் ஒன்றுபட்ட நிலையை அடைநதவர்கள். ஆகையால் கடவுளுடன் ஒன்று படுவ தறகு இநத வகுப்பினர் செவ்வனே முயறசிப்பவர்களே. சாதாரண மத சம்பந்தமான கல்வி கேள்விகள் அவர் களுக்குத தேவையில்லை.

நான்காவது வகுப்பினராகிய சன் மார்க்க நெறியில் நின்று கடவுள் வழி பாட்டையும உலக வாழ்க்கையையும் ஒருங்கே நடத்த சதா முயற்சி செய்ய வேண்டிய மனிதர்களுக் குரித்தான முறையே இங்கு நாம் கவனிக்கற் பாலது.

இம்மக்கள் கடவுளுடன் ஒன்றுபட்ட நிலை எய்துவதற்காக யாது புரியவேண் டும் என்பதே நாம் ஆராயும் விடயம். பற்பல பகுதிகளாகவும் நுண்ணிதாக வும் இவ்விடயத்தை நோக்குங்கால் நம் அனுபவத்திற்கு அனுகூலமான வழி கள் தோன்றும். அவைகளைக் கடைப் பிடித்து நாம் நற்கதியின் மேற்படிகளில் செல்ல இயலும். அவற்றில் சில பகுதி களை இங்கே ஆராய்வாம.

## தொழில் முறை

இப்போது நம் நினைவிலிருக்கும் மக்க ளில துறவிகளானவரைத் தவிர அனேசமாய் எல்லோரும் தங்களுடை யவும் தங்களைச் சேர்நதவர்களுடைய வும் உணவு, உடை இருப்பிடம முத லியவற்றைச சேகரிபபதின் நிமித்தம் ஏதாயினும் ஒரு தொழிலில் உழைக்கத் தங்களுடைய பெருங்காலத்தைச் செல வழிகக வேண்டியவர்களாக வாழ்க்கை நடாததுகின்றனர். ஆகையால் இவர் கள் கடவுளுடன் ஒன்றுபடப் பயிற்சி செய்வது எங்ஙனம? இவர்களும் ஏதா வதுஓர் அப்பியாசத்தைக்கைக்கொண்டு கடவுளைச்சிந்தித்தல், ஜபிததல்முதலிய வழியில் முயற்சி செய்யலாம். ஆயினும் தினசரி பகற் பொழுது முழுவதும்

மனம், வாக்கு, காயம் இவற்ருல் புரியும் தொழில், கடவுளுடன் ஒன்றுபடும் முறைக்கு முரண்பட்டால் அரைமணி நேரம் செய்யும தியானம், ஜபம், நம்மைக் கடவுளுடன் ஒன்றுபடச்செய்யும் முறையில், அதாவது சன்மார்க்கததில், நமமை நிறுத்த எத்துணை பயன்படும்? ஆகையால் நாம வஞ்சகமின்றிக கடவுளுடன் ஒன்றுபடும் வழியில் செல்ல நமக்கு விருப்பமிருந்தால் நம் வயிற்றுப பிழைப்புத் தொழிலையும் சன்மார்க்க நெறியாகவே கைக்கொள்ள வேண்டும். ஒரு தொழிலில் அமருமுன் அதுகூடிய வரை சன்மார்க்கத்துக்கு முரண்படாத தொழிலா என்று ஆலோசித்து அமர வேண்டும். அமர்ந்தபின் அதில் ஒவ்வொருநாளும் மனம், வாககு, காயம மூன்ருலும் செய்பவைகளைக கடவுளுக்கு அர்ப்பணம் செய்யக்கூடிய வகையில் செய்து கடவுளுடைய நோக்கததை ஒட்டியே கடமையைச் செலுததவேண்டும். வயிற்றுப் பிழைப்புத் தொழிலுக்கும், சமயாசார நெறிக்கும் சம்பந்தமில்லை யென்ற மடமையை ஒழிக்கவேண்டும். உலக வாழ்க்கையில் காணப்படும் தொழில்களில் அனேகமாய் எல்லாம் கடவுள் நோக்கம் நிறைவேற அவசியமானவையே என்ற அருமையான அறிவு குடிகொள்ளவேண்டும். ஓர் உதாரணமாகப் பத்திரிகை இலாகாவைக் குறிக்கலாம் ; உன்னிப் பார்த்தால் ஒரு தினசரி பத்திரிகையின் மூலமாய் நல்லறிவு, தெய்வபக்தி, தேசபக்தி, பரோபகாரமான கைங்கரிய உழைப்பு, அழகுக் கலைகளில் ஈடுபடுதல் முதலிய அநேக முறைகளில் மக்கள் கடவுளுடைய நோக்கத்திற் கிணங்க நடப்பதற்கு எவ்வளவு உதவி புரியலாம் என்பது விளங்கும. அங்ஙனமாயின் கடவுளுடன் ஒன்றுபடும் நெறியில் பத்திரிகாசிரியர் நிற்கவில்லையா? அன்பு நெறிக்கு விரோதமான சாதிப் பிணக்கு, முதலிய பற்பல கொள்கைகளை சமயாசாரம் என்ற நோக்கமுடையவர்களாய்ச் சன்மார்க்கப் பற்று சற்றுமின்றி சடங்குகளை முக்கியமான கடவுள் வழிபாடென்றும் நம்பிய புன்னெறியில் ஈடுபட்டு அதற்கேற்ப உழைக்கும ஒருவர் பிறரிடம் பொருளுதவி சற்றுமே எதிர்பாராதவராயினும் அவர் கடவுளுடன் ஒன்றுபடும நெறியை யணுகினவரலலா. மேற்சொன்ன பத்திரிகாசிரியர் மாதம் ஒன்றுககு ரூபாய் 1000 சம்பளம பெற்ருயினும பததிரிகையை நன்னெறியில் நடததுபவராயின் இவரே கடவுளுடன் ஒன்றுபடும் வழியில நிற்பவர்; இவரே பகத சிரோமணி ; இவரே மஹாகர்மயோகி.

## இல்லறம்

இல்லறத்தை நடத்தும் ஒருவனும் ஒருத்தியும், தாங்கள் ஆனமாக்கள், கேவலம் தேகங்களல்லவென்றும, சன்மார்கக நெறியில நின்று தாங்கள் நாளடைவில கடவுளுடன் ஒன்று படும் வழியில் செல்ல வேண்டியவாகளென்றும, ஆன்மாக்களாகிய தங்கள் மக்களும் அதேநோக்கத்தில பயிலவேண்டுமாகையால் அவர்களுக்கு அளிக்கும் தேகப்பயிற்சி, கல்விப்பயிற்சி, ஒழுக்கப் பயிற்சி, தொழிற்பயிற்சி யாவற்றிலும அவ்வவற்றிற் கிணங்கிய முறைகளில்மக்களை ஈடுபடச் செய்யவேண்டும் என்றும், தங்கள் ஊரிலும், நாட்டிலும், உலகத்திலும் பொதுமககள் நன்மைக்கான ஏற்பாடுகளுக்கு இல்லறத்தார் இயன்ற அளவு உதவிபுரிய வேண்டும் என்றும சதா நினைவுகொண்டு வாழ்வாங்கு வாழ்பவராயின் அந்த ஒருவனும் ஒருத்தியும் செய்யும் காரியங்களெல்லாம கடவுளுடன் ஒன்று படுதற்குதவும் வழியில் நிற்பவையே. துறவுச் சின்னங்கள் பூண்டு, நெற்றியில் வெண்ணீறு முதலியவற்றை ஆடம்பரமாகவே அணிநது, அநுட்டானச் சடங்குகளை வெளிப் பார்வையில் முறையாகவே செய்தாலும், உலக ஆசைகள் உள்ளத்தினின்று அகலாமல், சன்மார்க்க நெறியில் தானும் மனபதையும் நிற்க வேண்டுமே என்ற கவலையும் அதற்கேற்ற உழைப்பும் இல்லாமல் வீணர்களாய்த் திரியும் வேடதாரிகளைவிட மேற்சொன்ன இல்லறத்தார் கட

வுளுடன் ஒன்றுபடும் வழியில் நிற்பவர்களல்லவா ?

## சமூக உழைப்பு

மனித சமூக நன்மைகளின் பொருட்டாக ஆசார சீர்திருதத முறைகளிலும், இராஜாங்க சீர்திருத்த வகைகளிலும், கல்வி கேள்விகளில் தேர்ந்தவர்களும, செல்வர்களும் ஆகிய அநேகர் தலைவர்கள் நிலைமையிலிருந்து தேசக் கடனாற்றி வருகின்றனர். ஜனஆட்சி பெருகிவரும் இக்காலத்தில் முற்காலங்களைவிட இம்மாதிரி பொதுஜன நன்மைகளுக்கு உழைக்க மனிதர்கள் தேவையென்பது உள்ளங்கை நெல்லிக்கனி போன்றது. ஆயினும் இந்த முறைகளில் உழைக்கச் செல்பவர்கள், நன்னோக்கமும், பரோபகார சிந்தையும், தெளிந்த அறிவும் பெரும்பாலும் உடையவர்களாக இல்லையாயின், இவர்கள் உழைப்பு போலிச சமூகஉழைப்பாகவும்,இவர்கள் ஆட்டின் தோலைப் போர்த்துத் திரியும் புலிகளுக்கொப்பானவரெனவுங் கருதப்படுவார்கள். சமூகத் தலைவர்களாக முன்வருவோர்கள், கடவுளின் ஆஞ்ஞையாகிய பெருந்தேரை இழுத்து முடிவுக்குக் கொண்டுவரப் போகும் பாக்கியத்தைப் பெற்ற பெருஞ் சேவகர்களாகவும் தமக்கெனப் பிரதிபலனையும் கீர்த்தியையும் எதிர்பாராமல் தேரை இழுப்பதிலேயே ஆனந்தமடையும் மனப்பான்மையுடையவராயு மிருத்தல்வேண்டும். இராஜாங்கத்தில் மநதிரி நிலைமை முதலிய பதவிகிடைத்தால் அதைக்கடவுளின் பிரதிநிதி நிலைமை என்ற ஞாபகத்துடன், தனக்கென வாழாது பிறர்க்குரியாளராய், கிடைத்த பதவியின் கடமைகளைப்புரியவேண்டும் என்றகருத்து சதா மனதில் இருக்கப்பெற்றால் சமூக உழைப்பை எடுத்துக்கொள்பவர்கள் கடவுளுடன் ஒன்றுபடும் முறையில் நிற்பவர்களே. சாதாரண வாழ்க்கையில் இருந்தாலும் சன்மார்க்கத்தில் ஆற்றலுள்ள மனிதர்கள் எவ்வாறு கடவுளுடன் ஒன்றுபடும் வழிக்கிணங்க வாழ்க்கையை நடத்தக்கூடும் என்பது மேலே மூன்று தலைப்பில் சுருக்கமாய்க்காட்டப்பட்டது. இன்னும் அநேக உதாரணங்களைக்கொண்டு அதையே விரித்து விளக்கலாம். இககட்டுரையை இன்னும் பெருக்க மனமில்லாது நிறுத்துகிறேன்.

தோட்டிமுதல் தொண்டமான் வரை எநதத் தொழிலில் அமர்வோரும், தாம் கொண்டவேலை விவசாயத் தொழிலாயினும், உபாத்தியாயர்கடைமையாயினும், நியாயாதிபதி நிலைமையாயினும, எழுத்துக்கூலிப் பிழைப்பாயினும், சங்கீதம், சிததிரம் எழுதல் முதலிய அழகுக் கலைகளில் ஈடுபடுவதாயினும், வாணிபமாயினும் சுயநலமே பெரிதாகக் கருதாது கடவுள் கைங்கரியமாக நினைத்து கடவுளுடன் ஒன்று படுதல் என்னும் மேலான மலை உச்சியைப் பார்த்துக் கொண்டே அதையணுகும் வழியில் செல்கிறோமா என்ற ஆராய்சசியைச சதா செய்துகொண்டு நடக்கப் பயிலுதல் அவசியம். இப்பயிற்சிக்குத் தேவையான உதவிகள் :—

சிறு சமயக்கல்வி, சத்சங்கம், தினசரி சற்றுநேரம் உள்ள ஆராய்ச்சி செய்தல, கடவுள் சந்நிதியில் தனக்குண்டாகும் இடையூறுகளையும், சந்தேகங்களையும் முறையிட்டு தெளிவுபெற முயற்சித்தல், சமயம் வாய்க்கும்போது சன்மார்க்க சம்பன்னர்களுடன் சம்பாஷித்து அவர்கள் சந்நிதியில் ஊக்கமும், தெளிவும் அடைதல் முதலியன. இம்முறைகள் அநேகமாய் எல்லோருக்கும் சுலபமானவையே ; யோகாப்பியாச முறைகள்போல் கடினமானவையல்ல.

'நவசக்தி'செய்துவரும் சன்மார்க்கத் தொண்டை ஒட்டினதாக எண்ணியே இக்கட்டுரையை நான் வரையத் துணிந்தேன். இதை வாசிப்போர்கள் மேற்கண்ட வழியில் அவர்கள் சிந்தனையைச் செலுத்தி எந்த நிலையில் இருப்போரும் அதற்கேற்ற சன்மார்க்க முறையைத் தெரிந்துகொண்டு கடவுளுடன் ஒன்றுபடுவதற் கேதுவான வழியில் தூய்மையுடனும் ஆற்றலுடனும் வாழக் கடவுள் அருள் புரிவாராக!

# விந்தையான ஒரு பந்தயம்

ஓர் ஐரோப்பிய ஆசிரியர் கட்டுரையைத் தழுவியது

[திரு. B. N. ராஜன், B. A. Hons.]
(*Research Scholar, University of Madras*)

கார்த்திகை மாதத்தில் ஓரிரவு காரிருள் சூழ்ந்திருந்தது. கிழவரான செட்டியார், 15 வருஷங்களுக்கு முன் இதுபோன்ற ஒரு கார்த்திகை மாதத்திலே தாம் செய்த விருந்தைப் பற்றி நினைத்துக்கொண்டு தமது அறைக்குள் அங்கு மிங்கும் நடந்துகொண் டிருக்கிறார். அந்த விருந்துக்குப் பெரும்பெரும் அறிவாளிகளெல்லாம்வந்திருந்தார்கள். பற்பல விஷயங்களைப் பற்றி உரையாடினதிலே, மரண தண்டனையைப் பற்றியும் பேச்சு வந்தது. பண்டிதர்களும், பத்திரிகாசிரியர்களுமதாராளமாக அடங்கியிருந்த அந்த விருந்தாளிகள் கூட்டத்தினுள்ளே பெரும்பாலோரும் மரண தண்டனையைக் கண்டித்துப் பேசினார்கள். மரண தண்டனை அநாகரிகமான தென்றும், ஒரு சிட்சை என்ற அளவில் அது எத்தகைய பயனுமற்றதென்றும், பெருங்குரூரமும் பாவமுமான செய்கை யென்றும் அவர்கள் நிறுவினார்கள். அவர்களுள் சிலர் மரண தண்டனைக்குப் பதிலாக ஜீவாந்தர சிட்சை மேலானது என்றார்கள்.

“எனக்கு அப்படித் தோன்றவில்லை” என்றார் உண்டியல் வியாபாரியான நம செட்டியார். “மரண தண்டனையிலோ, அல்லது ஜீவாந்தர சிட்சையிலோ— ஒன்றிலும் எனக்குச் சொந்த அனுபவம் கிடையாது. ஆனால் புத்தியைக் கொண்டு யோசித்து நடுவுநிலைமையாகப் பார்த்தால், மரண தண்டனையே ஜீவிய பரியந்தம் சிறைவைப்பை விட மேலானது என்பதுவிளங்கும். மரண தண்டனையானால் அந்தக்ஷணமே ஆள் மூர்ச்சை யடைந்துவிடுகிறான். ஆனால் ஜீவிய பரியந்தம் சிறைவைப்பு என்றால், அது ஆளை வதைத்துக் கொல்லாமல் கொல்வதாகும். இருவரில் யார் நல்லவன்— ஒரு நிமிஷத்தில் ஒரே அடியாகக் கொல்கிறவனா, அல்லது வருஷக் கணக்காக உயிரைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சித்திரவதை செய்கிறவனா?”

“அவருக் கிவர்மே லொன்றுமில்லை. இரண்டு பேரும் கெட்டவர்கள்தான்” என்றார் மற்றொருவிருந்தாளி; ஏனென்றால் இரண்டு பேருடைய நோக்கமும் ஒன்றுதான்,—உயிரை எடுத்து விடுவது—அரசாங்கம் கடவுளல்ல. தான் விரும்பும்பொழுது தன்னால் திருப்பிக் கொடுக்க முடியாத வொன்றை எடுத்துக்கொள்ள அதற்கு உரிமை இல்லை.

அந்தக் கூட்டத்திலே ஒரு வக்கீலுமிருந்தார்; 25 வயதுள்ள இளைஞரவர். தம்முடைய கருத்து என்ன என்று கேட்டதற்கு அவர் சொல்வார் :

“மரணதண்டனையும் மரண பரியந்த சிறை வைப்புமாய இரண்டும் கெட்டனவே. ஆனால் நான் ஒரு பெரிய குற்றத்தைச் செய்வேனாயின், அதற்குத் தண்டனையாக ‘இரண்டில் எதைப்பெறுகிறாய்’ என்று என்னைக் கேட்டால், கட்டாயம் நான் சிறைத் தண்டனையையே விரும்புவேன். உயிர் அடியோடு போவதைவிட, எப்படியாவது ஒருவிதத்தில் உயிரோடிருப்பது மேலாகும்.”

விஷயத்தைப் பற்றிக் கிளர்ச்சியான ஒரு பிரச்சனை உண்டாயிற்று. அக்காலத்தில் பாங்கி முதலாளியான நம் செட்டியார் நல்ல வாலிபமும், திடமும் வாய்ந்திருந்தவர். வாதம் மூளவே, செட்டியார் திடீரென்று பொறுமை இழந்து விட்டார்; மேஜைமேல் படீரென்று ஓர்அடிஅடித்தார்; அந்தவாலிப வக்கீலை விழித்துப்பார்த்தார். “வெறும் பொய், நீர் சொல்வது; ஓர் அறையில் ஐந்து வருஷம் நீர்சிறையிருக்க மாட்டீர் காணும். இரண்டு லக்ஷம் நான் பந்தயம் கட்டுகிறேன்.” என்றிரைந்தார் மிக வேகமாக.

"நீங்கள் உண்மையாகவே அது சொல்வதானால் 5 அல்லது 15 வருஷம நான் இருக்கிறேன். பந்தயம்" என்றார், வக்கீல்.

"பதினைந்தா! சரி! கனவான்களே! நான் 2 லட்சம் பநதயம் கட்டுகிறேன்" என்றார் பாங்கிக்கார்.

"சரி, சமமதம். நீங்கள் 2 லட்சத்தைப் பந்தயம வைககிறீர்கள்; நான் என்னுடைய உரிமையைப் பந்தயம வைக்கிறேன்" என்றார், வக்கில்.

இவ்வாறாக இந்த வேடிக்கையும், முரட்டுத்தனமும பொருந்திய பநதயம் நிகழ்ந்தது. அந்தக் காலத்தில் செட்டியாருக்கு அளவில்லாத கோடிக் கணக்கான பணமிருந்ததாலே தாம் செய்துகொண்ட பந்தயத்தை நினைத்து அவர் தலைகால் தெரியாமல் சநதோஷத்தில் மூழ்கியிருநதார். சாப்பாடு ஆகிக்கொண்டிருக்கும்போது வக்கீலிடத்தில் ஹாஸ்யமாக, "நீங்கள் நன்றாக யோசிததுப் பாருங்கள்; அப்புறம் வருந்துவதிற் பயனில்லை. இரண்டு லட்சமென்பது எனக்கு ஒன்றுமில்லை. ஆனால் உங்கள் வாழ்வில் 3 அல்லது 4 வருஷகாலம் - கட்டிளமைப் பருவகாலம்—வீணாகப் போகிறது. மூன்று அல்லது நான்கு என்கிறேன். ஏன்தெரியுமா? அதற்கு மேல் உங்களால் முடியவே முடியாது. இன்னொன்று பாருங்கள்; சுயேச்சையாகச் சிறையில் போயிருப்பது பலவந்தமாகக் காவலிலிருப்பதைவிடக் கடினமாகும். பாவம்! உங்களுக்கு அது தெரியவில்லை. நாம விரும்பினால் எநத நிமிஷம் வேண்டுமானாலும் நமக்கு வெளியேறலாம் என்ற எண்ணமானது நீங்கள் சிறைவாசஞ் செய்கிற கால முழுவதும் தோன்றி உங்களை அப்படி இப்படி என்று அரித்துத் தின்னும். நான் உங்களுக்காக வருத்தப் படுகிறேன்" என்றார்.

இப்பொழுது 15 வருஷங்களுக்குப் பின் செட்டியார் அறையின் மூலைக்கு மூலை அடியெடுத்து நடந்துகொண்டே இவைகளெல்லாவற்றையும் நினைத்துப் பார்த்தார்,

"எதற்காக நான் இந்தப் பந்தயம் வைத்தேன்? என்ன பயன்? அந்த வக்கீலுக்கு வாழ்வில் 15 வருஷம் பயனற்றுப் போயின. எனக்கோ 2 லட்சத்தை வக்கீலுக்கு வாரிக் கொட்ட வேண்டி யிருக்கிறது. இதனால் மரண தண்டனை ஜீவாநதரக் காவலைவிட மேலென்றாவது கீழென்றாவது ஜனங்கள் முடிவுகட்டி விடுவார்களா? சே! சே!! எல்லாம் வெறும் அநாவசியம. எனக்கு ஏதோ அன்று நன்றாகத தின்ற கொழுப்பினால் வந்தது பைத்தியம். வக்கீலுக்கோ வெறும பேராசையாற் பிடித்தது" என்று தனக்குள்ளேயே உசாவிக்கொண்டார்.

அந்த விருந்திற்குப் பின் நிகழ்ந்தன வற்றையும் அவர் ஞாபகப் படுததிப் பார்த்தார். செட்டியாரின் வீட்டில் தோட்டத்துப் பக்க மிருக்கும் அறையில் வக்கீல் சிறைவாசஞ் செய்ய வேண்டியது என்று முடிவு கட்டப்பட்டது. சிறைவாச காலததில் வக்கீலுக்கு வாசற்படியைத் தாண்டவோ, வெளியிலுள்ள ஆட்களைப் பார்க்கவோ, அவர்கள் குரலைக் கேட்கவோ, கடிதங்களையோ செய்தித் தாள்களையோ பார்க்க எவ்வித உரிமையு மில்லையென்று ஒப்பந்தம் செய்யப்பட்டது. ஓர் இசைக கருவி வைத்துக் கொள்ளலாம்; புத்தகங்கள் படிக்கலாம்; கடிதங்கள் எழுதலாம்; சுருட்டுப் பிடிககலாம்—இவ்வளவும் செய்து கொள்வதற்குச் சம்மதம் வழங்கப்பட்டது. உடன்படிக்கைப்படி வெளியிலுள்ளவர்களோடு ஏதாவது தெரிவிக்கவேண்டியதற்காகத் தனியாக ஒரு ஜன்னல் அமைக்கப்பட்டது. மௌனமாகவே தான் சிறையாளி தன் கருத்தை வெளியிட வேண்டும். புஸ்தகங்களோ, இசைக் கருவியோ, சுருட்டோ ஏதாவது வேண்டுமானால் விவரத்துக்கு அந்த ஜன்னல் வழியாக ஒரு சீட்டு எழுதிப் போட்டுவிட வேண்டியது. அவைகள் வேண்டிய மட்டும் அனுப்பப்படும். இன்னும் சிறை வாசம் எவ்வளவு தூரம் ஏகாந்தமாக யிருக்க வேண்டுமோ, அதன் விவு

ரங்களெல்லாம் ஒன்று விடாமல் அந்த உடன் படிக்கையில் தெளிவாகக் குறிப்பிக்கப்பட்டதோடு, அதன் காலவரையைக் குறித்தும்—அதாவது 1870ஹு கார்த்திகை மாதம் 14உ 12 மணி முதல் 1885-ம் வருஷம் கார்த்திகை மாதம் 14உ 12 மணி வரை—15 வருஷ சிறைவாசம செய்யவேண்டியது என்றும் சந்தேக மில்லாதபடி தீட்டப்பட்டிருந்தது. இந்த நிபந்தனைகளில் எதையேனும் சிறிதளவாவது சிறையாளி மீறுவதற்கு முயன்றால் உதாரணமாகத் தன் விடுதலைக்கால வரைக்கு ஒரு இரண்டு நிமிஷத்துக்கு முன்னுவது தப்பி ஓடப் பார்த்தாலும், செட்டியார் பநதயப் பணமான 2 லட்சத்தையும கொடுக்கக் கட்டுப்பட்டவரில்லை என்றும் எழுதப்பட்டது.

சிறைவாசத்தின் முதலாவது ஆண்டிலே வக்கீல் ஏகாந்தத்திலும், வேலையில்லாமையாலும் மிகுந்த துன்பமடைந்தார்.(அவர் எழுதிவைத்த குறிப்புக்களிலிருந்து நமக்கு ஊகிகக முடியும் வரை இவ்வாறு விளங்குகிறது) தோட்டத்துப் பக்கமிருந்து இராப் பகலாகச் சங்கீத ஒலி வநதுகொண்டேயிருந்தது. வக்கீல் மதுவையும் புகையிலையையும் வேண்டாமென்று சொல்லி விட்டார். "மது, இந்திரிய ஆசைகளை அதிகரிக்கச் செய்கின்றது. ஆசைகளே ஒரு சிறையாளியின் முக்கிய பகைவர்கள்.அன்றியும, நல்ல மதுவைத் தனியாகக் குடித்துக் கொண்டிருப்பதை விட வேறெதுவும் அவ்வளவு எரிசசலைக் கொடுப்பதில்லை" என்று அவர் எழுதியிருந்தார்.புகையிலை அவர் அறையின் காற்றைக் கெடுத்து விடுகின்றது. முதல் வருஷ முழுதும எளிய தினுசு புத்தகங்கள் வக்கீலுக்கு அனுப்பப்பட்டு வந்தன. அதாவது பெரிய காதல் ஒழுகும் நாவல்கள், கொலைகளும், துப்பறியும் ஆனநத மிகுந்த கதைகள், தமாஷ் நாடகங்கள் முதலியன போன்றவை.

இரண்டாவது ஆண்டிலே, இசைக் கருவியின் ஒலி நின்று விட்டது. புத்தகங்களிலும் வக்கீல் பழைய இலக்கியங்களையே கேட்டார்.

ஐந்தாவது வருஷத்தில் திரும்பவும இசை கேட்கப்பட்டது. சிறையாளி மதுவும் வேண்டுமென்றூர். அவரைக் கவனித்தவர்கள், அந்த வருஷ முழுவதும் தின்றுகொண்டும், குடித்துக் கொண்டும், படுத்துக்கொண்டுமே இருந்ததாகச சொன்னார்கள். அடிக்கடி கொட்டாவி விட்டார். தம்மோடேயே கோபததோடு உரையாடிக் கொண்டார். புத்தகங்களைத் தொடவே இல்லை. சில வேளை இராத்திரி வேளைகளில் உட்கார்ந்து எழுதுவார ; அதிக நேரமாக விடாமல் ஏதோ விரைவாக எழுதுவார். உடனே காலையில் அவ்வளவையும் கிழித்து எறிந்து விடுவார். அவர் வாய் விட்டு அழுததுகூட ஒன்றிரண்டு தடவையில் கேட்கப்படட துண்டாம்.

ஆறும ஆண்டின் பிற்பகுதியிலே, பற்பல பாஷைகள், தத்துவம், சரித்திரம் இவற்றை அதிக ஆர்வத்துடனே சிறையாளி கற்க ஆரம்பித்தார். இந்த விஷயங்களைச் சிறையாளி மிகுந்த விரகத்தோடு வாசிக்கவே, அவருககுவேண்டிய போதுமான புஸ்தகங்களை வரவழைததுக் கொடுப்பதற்குக் கூட பாங்கி முதலாளிக்கு நேரமில்லாதபடி வநது விட்டது. நான்கு வருஷகால வரைக்குள்ளே 600 புஸ்தகங்கள் அவருடைய தேவைக்காக விலைககு வாங்கப்பட்டுவிட்டன. இநதததாபம் மிகுந்திருக்கையில் தான் ஒருநாள் சிறையாளியிடமிருந்து செட்டியாருக்கு ஒருகடிதம் வந்தது. "என் அருமைக்காவலாளிக்கு: நான் இந்தக்குறிப்பை ஆறு பாஷைகளில் எழுதுகிறேன். அவற்றை அந்தந்தப் பாஷா பண்டிதர்களிடம் காட்டவும்; அவர்கள் அதைப் படிக்கட்டும். அதில் ஒரு பிழையாவது அவர்கள் காணுவிட்டால், தயவு செய்து தோட்டத்தில் ஒரு குண்டு கேட்கும்படி செய்யவும். அந்தச் சத்தத்திலிருந்து என்னுடைய முயற்சிகளெல்லாம் வீண்போகவில்லை யென்று அறிந்து கொள்வேன். காலநதோறும், தேசந்தோறும் பேரறிஞ ரெல்லாம்

வெவ்வேறு பாஷைகளில் மொழி கின்றார்கள். ஆனால் அவற்றின்யாவற்றி னூடும் எரியும் ஜோதி ஒன்றே. ஆ! அவர்களை ஆய்ந்து துய்ப்பதிலே எத்தகைய இன்பம் தெரியுமா?'' என்று எழுதப்பட்டிருந்தது. சிறை யாளியின் மனோரதம் பூர்த்தி செய்யப் பட்டது.—தோட்டத்திலே செட்டியார் உத்தரவுப் படி இரண்டு குண்டுகள் படீரென்று வெடிக்கப்பட்டன.

கொஞ்ச காலத்திற்கு அப்புரம அதா வது பத்தாவது வருஷத்திற்குப் பிறகு வக்கீல் தமது மேஜை முன் அசையா மல் உட்கார்நது கொண்டே கிறிஸ்துவப புது வேதத்தை மட்டும படித்துக் கொண்டிருந்தார். நாலு வருஷகாலத தில் மிககஷ்டமாக 600 பழைய நூற களைக் கற்ற ஒரு மனிதன், எல்லோருக் கும் எளிதில் விளங்கக் கூடியதும் அள வில் சிறியதுமான இந்தப் புத்தகததை மட்டும் எதற்காக ஏறக்குறைய ஒரு வருஷமாகப் படித்துக கொண்டிருக்க வேண்டு மென்று செட்டியார் ஆச்சரிய மடைந்தார். புது வேதத்திற்குப் பிறகு சமய சரித்திர நூல்களும சமய சித் தாந்தமும கற்கப்பட்டு வரலாயின.

இறுதி இரண்டு ஆணடு சிறை வாச காலததிலே, சிறையாளி இன்னது தானென்றில்லாமல் எல்லாவித நூல் களேயும் படிததார், சில்வேளை இயற்கை அறிவியல் நூல்களைப் புரட்டிப பார்ப் பார்;சிலவேளை பைரன் கம்பன் அல்லது ஷேக்ஸ்பியர் போன்ற புலவர்களைப்படிப் பார். ஒரே சமயத்தில் ரசாயன சாஸ் திரத்தில் ஒரு புஸ்தகமும், வைத்தி யத்தில் ஒரு புஸ்தகமும், வேதாநத தத்துவததிலோ, அல்லது சைவ சித் தாந்தத்திலோ ஒரு புஸ்தகமும, ஒரு நாவலும் வேண்டுமென்று சீட்டு வருவ துண்டு. அவர் படித்ததைப் பாரத் தால், தன் மரக்கலம் மோதுறப் பெற் றுத் துணையின்றித் தத்தளிக்கும் ஒரு வன் தன் உயிரைக் காப்பாறற ஒன் றன்பின் ஒன்றாக ஒவ்வொரு மரத் துண்டையும் பற்றிப் பிடிப்பது போலி ருந்தது.

## II

இவை யாவற்றையும் செட்டியார் ஓர்நதுவிட்டு யோசிபபார்.

"நாளைப பன்னிரண்டு மணிக்கு அவன் தன்னுடைய உரிமையைப பெறுகிறான். உடம்படிக்கைபபடி நான் அவனுக்கு 2 லக்ஷம் கொடுதது விட் டால் நமக்கு அதோடு கப்பல் கவிழ்ந தாய் விட்டது. அதற்குப பிறகு ஐ. பி. கொடுக்க வேண்டியதுதான்.''

பதினைநது வருஷங்களுககு முன் அவருககு எண்ண முடியாத பணமிருந் தது. இபபொழுது எது கூடுதல் - கடனா தனமா? என்ற கேள்வியைத தம்மையே கேட்டுக் கொள்ளவும் பய முண்டாகிறது என்ற நிலைக்கு வநது விட்டார். பட்டங்கள, குதிரைப பந தயஙகள், வழக்குகள், விருநதுகள், தேர்தல்கள், பொருளாதார நெருககடி கள், முதிர்நதுமபோகாத சில முரண் பிடிவாதங்கள முதலியவற்றால் நாளா வட்டததில் அவரது வியாபாரததிற் குப் பெரிய இடி வநதுவிட்டது. அஞ்சா நெஞ்சும், தன்னம்பிக்கையும, கர்வ மும பிடிதத ஒரு வியாபாரி கடைசியில கேவலம் மறற பாஙகி முதலாளிகள போலவே விலை இறஙகுவதையும, விலை ஏறுவதையும நெஞ்சடிகக எதிர் பாரதது நடுஙகிக கொணடிருநதார்.

"அந்த இழவுப் பநதயம்! ஏன சனி, அவன் இறந்து போகக்கூடாதா? அவ னுக்கு 40 வயசு தானாகிறது. என் னுடைய பணமெல்லாம் ஒரு காசு விடாமல் எடுத்துக்கொண்டு, கலி யாணம் பண்ணுவான; கார்வைப்பான். சுகமாக அனுபவிப்பான். நான், ஒரு பிச்சைககாரனாகி ஏமாறிப் பொறாமை யோடு பார்க்குமபோதெல்லாம அவன் என்னுடைய வாழ்க்கையின் சந தோஷத்திற்கு நான உனககுக கட மைப்பட்டிருககிறேன். ஏதோ கொஞ் சம் உதவி செய்கிறேன் என்று சொல்வதைத தினமும் கேட்க வேண் டும். இல்லையா? ஆ! அது முடியவே முடியாது! இந்த அவமானத்திலும்

பிச்சைக் காரத்தனத்திலு மிருநது தப்ப ஒரே வழிதானிருக்கிறது. அந்த ஆள் தொலையவேண்டும்.'' என்று தன் தலை மயிரை இறுகப பிடித்துக்கொண்டு முணுமுணுத்தான் கிழவன்.

மணி அப்பொழுதுதான் மூன்றடித்திருககிறது. செட்டியார் உறாறுக் கேட்டுக்கொண்டிருநதார். வீட்டில் எல்லோரும் உறஙகிவிட்டனர் ; வெளியில் மரஙகள மட்டும இரைவது கேட்கின்றது. எவ்வித சநதடியும் செய்யாமல் செட்டியார் தமது இருப்புப் பெட்டியிலிருந்து 15 வருடகாலம் திறககப்படாத அநதக் கதவின் சாவியை எடுத்தார்; போர்வையை எடுத்துப் போர்த்துககொண்டார் ; வீட்டைவிட்டு வெளியே இறங்கினா. தோட்டத்தில் இருளும குளிரும நிறைந் திருநதன. வானம் தூறிக்கொண்டிருநதது. கிவீரென்று குளிர்ந்து வீசிய காற்றானது, மரஙகளுககு ஓய்வே கொடாமல் வட்ட மிட்டு இரைந்துகொண் டிருநதது. கண்ணை எவ்வளவு இடுககிப் பார்த்தும் செட்டியாருககுத தரையோ, வெண்சிலையோ அல்லது தோட்டத்துப புற அறையோ ஒன்றும் புலனாகவிலலை. சிறைச்சாலை அறையிருநத பக்கம் அணுகிக் காவலாளியை இருமுறைக கூவினர். பதிவில்லை. "சரிதான். காற்றுககும் மழைக்கும் பயநது அவன் சமையலறையிலோ, அல்லது கூடத்திலோ போய் தூங்கிககொண்டிருக்கிறான். "என்னுடைய எண்ணத்தை நான் பூர்தது செய்துகொள்ளத் தைரியமிருந்தால், சந்தேகம முதலாவது காவலாளியின் தலைமேல்தான் விழும்'' என்று கிழவன் எண்ணினன்.

இருட்டில் தப்பித் தடவிப் படிக்கட்டை, கதவு முதலியனவற்றைக் கடநது ஒரு நீண்ட சநதுள அவன் நுழைநதான். தீககுசசி யொன்றை உரைததான். ஒரு குருவிகூட அங்கு இல்லை. ஏதோ ஒரு படுக்கை சும்மாக் கிடநதது. மூலையில் இரும்பு அடுப்பு ஒன்று கன்னங்கரேலென்று தெரிநதது. சிறையாளியின் அறையின் கதவிலிருந்த முததிரை உடைக்கப்படவில்லை.

தீககுச்சி தீரநது போனதும் உணர்ச்சியால் நடுககுற்றவனாய்க் கிழவன் சிறையின் சிறு ஜன்னல வழி உற்று நோககினன. அறைககுள ஒரு மெழுகுவர்த்தி மங்கலாக எரிந்துகொண்டிருநதது. சிறையாளியும் மேஜை முன்னே உடகார்நதிருநதார். அவருடைய முதுகும, தலை மயிரும கைகளுமே கண்ணுககுப புலனாயின. மேஜைமேலும், அங்கிருநத இரண்டு நாறகாலிகள் மேலும, அருகிலுள்ள பாயின்மேலும பல புஸ்தகஙகள் திறநது போடப்பட்டுத் தாறுமாறாயக கிடநதன.

ஐந்து நிமிஷஙகள் ஆயின : சிறையாளி அசையவே இல்லை. 15 ஆண்டைய நெடுஞ் சிறைவாசம் அவருக்கு அசைவின்மையைக கற்பிததுவிட்டது. செட்டியார் தமவிரலாலமெதுவாகப் பல கணியைத் தட்டினா. சிறையாளியிடமிருநது மூசசுப்பேச்சில்லை. உடனே செட்டியார் ஜாககிரதையோடு கதவிலிருககும் முத்திரைகளை உடைத்தார். பூட்டுக்குள் மெல்லத் திறவுகோலை நுழைத்தார். துருப்பிடிததிருந்த அநத பூட்டு ஒரு துயரககுழலை எழுப்புவதுபோலிருநதது. கதவு இரைநதது. ஓர் ஆச்சரிய விளியும், கால் அடிகள் வைககும் சத்தமும் உடனே உண்டாகுமென்று செட்டியார் எதிர்பார்த்தார். மூன்று நிமிடங்கள் கழிநதன. ஆயினும் கதவுக்கு உட்பககம முன்போலவே எப்பொழுதும சந்தடி இல்லாதிருநதது. உள்ளே நுழைவதற்கு அவர் தீர்மானிததார்.

மேஜையின் எதிராக ஓர் உருவம் உட்கார்ந்திருந்தது. பார்வைக்கு சாதாரண மனிதனைப்போல் காணப்படவில்லை.

உநதிய எலும்பும் ஒட்டிய தோலுமாக இருந்தது. தலைமயிர் பெண்களின் கூநதலைபபோலவே நீண்டு சுருண்டு சிக்கல் பிடித்துக் கிடந்தது. தாடி அடர்நது வளர்ந்திருநதது. முகம் மிக வெளுத்து உலர்ந்திருநதது. கன்னங்

கள் குழிந்திருந்தன. முதுகு நெருங்கி நெட்டுவிட்டுக் காணப்பட்டது. மயிரடர்ந்த தலையைத் தாங்கிக்கொண்டிருந்த கை மிகவும் வற்றி உலர்ந்து எலும்போடிருந்தது. அதைப்பார்க்கும் பொழுதே துயரமாக இருந்தது. மயிர் நரைத்து வெளுத்துக்கொண்டு வருகின்றது. வாடிவதங்கிய அந்த முகத்தைப் பார்க்கும்பொழுது 40 வயதுதானாயிற்றென்றால் யாரும் நம்பவே மாட்டார்கள். மேஜைமேல் அவருடைய குனிந்த தலைக்கு முன்னாக ஒரு காகிதத் துண்டு கிடந்தது; அதில மிக நுணுகிய எழுத்தில் ஏதோ எழுதப்பட்டிருந்தது. “ஐயோ, பாவம் பைத்தியக்காரன்! தூங்குகிறான். ஒருவேளை லட்சம லட்சமாகக் கனவு காண்கிறான்போலிருக்கின்றது. குற்றுயிராகக் கிடக்கும் இதைப்பிடித்து நான் படுக்கையிற தூக்கி எறியவேண்டியது; பிறகு தலையணையை வைத்து அமுக்கி நெருக்கி விடவேண்டியது; அவ்வளவு தான்; பிறகு எந்தச சீமை டாக்டர் வந்தாலும் விஷயம் இப்படி என்று கண்டுபிடிக்க முடியாது. ஆனால், அதற்கு முன்னால் அவன் என்ன இங்கு எழுதி இருக்கிறானென்று பார்ப்போம்” என்று தமக்குள்ளேயே செட்டி சொல்லிக்கொண்டான்.

முதலாளி மேஜைமேலிருந்து அந்தக் கடிதத்தை எடுத்துப் பின் வருமாறு வாசித்தான்.

“நாளை நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு நான் என் விடுதலையை அடைவேன்; உலகோடு கலந்துகொள்ளும் உரிமையைப் பெறுவேன்; ஆனால் நான் இந்த அறையைத் துறந்து ஒளியைப் பார்க்குமுன் உங்களிடம் சில வார்த்தைகள் சொல்லுவது அவசியம். என்னுடைய மனச சாட்சியின் பேரால், என்னைக் காணும் கடவுள் பேரால், நான் சுதந்திரம், வாழ்வு, ஆரோக்கியம், இன்னும் உங்கள் நூல்கள் கூறும் ஏதேதோ இவ்வுலக இன்பங்கள் யாவற்றையும் வெறுக்கிறேன் என்று உம்மிடம் அறிவிக்கின்றேன்.

“பதினைந்தாண்டுகளாக நான் உலக வாழ்வைப்பற்றி உலைப்பின்றிப் படித்துவிட்டேன். உண்மையே, நான் மண்ணையோ அன்றிப் பிற மக்களையோ பார்க்கவில்லை. இருப்பினும உங்கள் நூல்களிலே நான் இன்றும் மதுவை மாந்தினேன். கனியும கவி இசை பாடிக களித்தேன். கானினில வெம்மானொடும மாவொடும் பொருதினேன. கருவிழியாரோடு காதலில் திளைத்தேன். உங்கள கவிகளின் அற்புதக் கற்பனைத் திறத்தினாலே படைக்கப்பட்ட அழகே உருவன்ன மாதரார் - அரமபையன்ன அணங்கைமார்-என்னை இராப்பொழுதெல்லாம் கலந்தனர்; விந்தைக் கதைகளைக கிள்ளை மொழிகொண்டு மெல்ல விளம்பினர்; என் தலைக்கு வெறியேற்றினர். உங்கள் நூல்களிலே நான் மேருவினதும் கயிலையினதும மேற்கோடு ஏறினேன். அங்கிருந்து காலையிலே கதிரோன் எழுவதும், மாலையிலே ஊரும், கடலும், வரையும தங்கத் தழலால் திளைப்பதும் கண்டேன்; அங்கிருந்து மின்னல்கள் மேகக் கூட்டங்களை ஊடுருவிப் பிளப்பது கண்டேன். பசைசப் பசேலென்ற கானங்களையும், வயல்களையும் ஆறுகளையும ஏரிகளையும நகரங்களையும நான் கண்டேன; தெய்வ மாதர்கள தீங்குரல் கேட்டேன்; கண்ணன குழலொலி கேட்டேன்; கடவுளின் புகழை அறிவிக்கப் பறந்துவந்த வனப்புடைய கந்தருவர்களின சிறைகளைத் தொட்டேன்; உங்கள் நூல்களிலே நான் நீண்டாழ்ந்த பெருங் குழிகளிலே வீழ்ந்தேன்; சித்திகள் பல செய்தேன்; நகரங்களை எரித்துச சிதைத்தேன்; புதிய மதங்களைப் போதித்தேன்; எல்லையற்ற நாடுகளை வென்று புகழோச்சினேன்.

“உங்கள் நூல்கள் எனக்கு ஞானத்தைத் தந்தன; நூற்றாண்டுகளாக விடாது மனித சிந்தை படைத்தன யாவும் என் மூளைக்குள்ளே அமுக்கி அழுத்தி வைத்திருக்கிறேன். உங்களெல்லோரையும் விட நான் அறி

விற் பெரியவனென்று எனக்கு நன்கு தெரியும்.''

''எனினும் நான் உங்கள் புஸ்தகங்கள், உங்கள் உலக இன்பங்கள், உங்கள் அறிவுக் குப்பைகள் எல்லாவற்றையும் வெறுக்கின்றேன். எல்லாம் கானலின் நீர்போல வெறும் மாயை, பொய்த் தோற்றம், பித்தலாட்டம். பெரு ஏமாற்றம். நீங்கள் எவ்வளவுதான் ஆண்மையும் அறிவும், அழகும் பெற்றிருந்தும் காலன், வளைக்குள்ளிருக்கும் கேவலம் எலியைப் போல உங்களையும் தேய்த்து விடுகிறான். இறுதியில் உங்கள் பெயர், உங்கள் சரித்திரம், உங்கள் அறிஞரின் பொன்றாப் புகழ் யாவும் ஒடுங்கி இந்த அண்டத்தோடு எரிந்து சாம்பலாய் முடியும்.''

''உங்களுக்குப் பித்துப் பிடித்திருக்கின்றது. நீங்கள் முறை தவறி நடக்கின்றீர்கள்; பொய்யை மெய்யாகக் கொள்கின்றீர்கள். கோரத்தை அழகாகக் கொள்கிறீர்கள். ஏதாயினும் சில நிலை மாறுதல்களினாலே மாமரத்திலும், மாதுளை மரத்திலும், கனிகளுக்குப் பதிலாகப் பல்லியும் தவளையும் திடீரென்று காய்த்தால், நறு மணந் தந்த ரோஜா மலர் திடீரென்று கெட்ட நாற்றத்தை உமிழ்ந்தால் நீங்கள் ஆச்சரியப் படுவீர்கள். அதுபோலவே நானும் உங்களைப் பார்த்து ஆச்சரியப்படுகிறேன். நீங்கள் வானுலகை இழந்து மண்ணுலகைப் பெறுகின்றீர்கள். நான் உங்களைத் தெரிந்து கொள்ள விரும்பவில்லை.

''நீங்கள் எதனால் உயிர் வாழ்கின்றீர்களோ, அதன் பேரிலுள்ள வெறுப்பைச் செயலில் கண்கூடாகக் காட்டுவதற்காக, இதோ, நான் ஒரு காலத்தில் தேவலோக சித்தி என்று நினைத்திருந்த, இப்பொழுது அறவே வெறுக்கிற அந்த இரண்டு லட்சத்தையும் அலட்சியம் செய்கிறேன். எனக்கு அந்தப் பணத்தின் பாலுள்ள உரிமையை ஒழிப்பதற்கென்றே நான் உடம்படிக்கையில் குறிப்பிட்ட காலவரைக்கு ஐந்து நிமிஷங்களுக்கு முன் இங்கிருந்து வெளியேறி, அவ்வாறாக நானாகவே, உடம்படிக்கையிற் கண்ட நிபந்தனைகளை மீறிக் கொள்கிறேன்.''

இதைப் படித்ததும், செட்டி மேஜை மேல் கடிதத்துண்டைப் போட்டான். அந்த அற்பமனிதனின் பாதத்தைத் தொழுதான்; அழ ஆரம்பித்தான்; பின் அறையை விட்டு வெளியேறினான். தமக்கு எவ்வளவோ வியாபார நஷ்டங்கள் வந்த போதுங் கூட அவன் தன்னையே இம்மாதிரி இவ்வளவு, வெறுத்தது கிடையாது. வீட்டுக்குள் நுழைந்து படுக்கையில் தலையைப் போட்டான்; ஆனால் உணர்ச்சியும், கண்ணீரும் தூக்கத்தை நெடுநேரம் வரவொட்டாமல் தடுத்தன.

மறு நாட்காலை, பாவம், அந்தக் காவலாளி ஓடிவந்து தோட்டத்து அறையிலிருந்த மனிதன் ஜன்னல் வழியாக ஏறித் தோட்டத்துள் குதிப்பதைக் கண்டதாகவும், பிறகு கேட்டுப் பக்கம் ஓடி மறைந்து விட்டதாகவும் உடனே தன் வேலையாட்களோடும் செட்டி ஓடி வந்து சிறையாளி தப்பி ஓடி விட்டதை ருசுப்படுத்தினான்.

பின்னும் ஏதாவது வதந்தி உலவக் கூடுமென்பதை நினைத்து, மேஜை மேலிருந்த துறவுக் கடிதத்தையும் கையில் எடுத்துக் கொண்டான்; வீடு போனதும் அவனுடைய இருப்புப் பெட்டியிலே, மிகப்பத்திரமாகப் பூட்டி வைத்துக் கொண்டான்.

# கமலநாதன்

[திரு. எஸ். ருத்ரபதி, B. A.]

II

மரகதவல்லி தன் இன்னுயிர்க் காதலனை எப்படியுங் காணலாமென்னும் ஆசையால் ஒருவாறு துயர் நீங்கி எழுந்து உட்கார்ந்திருந்தாள். வெளியிற் சென்றிருந்த இராமசாமிப் பிள்ளையும் வந்து சேர்ந்தார்; தம் பெறலரும் புதல்வியின் திருமுகச் செவ்வியைக் கண்ணுற்றார். என்றும் மகிழ்ச்சியோடு விளங்கும்முகம் இன்றுவாடியிருப்பதற்குக் காரணம் என்னவென்று கேட்டார். மரகதவல்லி தானேதோ தீக்கனா முதல் நாளிரவு கண்டதாகவும், அந்தக் கனவில் தன்னூரை விடுத்து வெளியேறிப் போவதுபோலக் கண்டதாகவும் அதனால் வருத்தமாயிருப்பதாயுங்கூறினாள். இராமசாமிப்பிள்ளை தம் மகளைக் கனவின் பொருட்டு வருந்த வேண்டாமென்று கூறிவிட்டுத் தன்னூருக்குப் பக்கத்தேயுள்ள நச்சாந்து பட்டி யென்னும் கிராமத்திற்கு அவசர நிமித்தஞ் சென்று இரண்டு நாட்களில் வருவதாய்க் கூறிச் சென்றார்.

மரகதவல்லி தன் தாயிடம் போய்ப் பக்கத்து வீடுசென்று, அங்குள்ள தன் தோழியுடன் உரையாடியிருந்து வருவதாகக் கூறி வீட்டை விடுத்து வெளியேறிப் புதுக்கோட்டை வந்து சேர்ந்தாள். தஞ்சைக்குப் போகும் மோட்டாரொன்று தயாராக நின்றது. அதில் ஏறினாள். சில நிமிஷ நேரத்திற்கெல்லாம் கார்காரெனக் கடிது சென்றது. கந்தர்வ கோட்டை வந்ததும் மரகதவல்லி யிறங்கினாள். தன் ஆருயிர்க் காதலி வரும் வழிமேல் விழிவைத்திருந்த கமலநாதனை அவள் சந்தித்தாள். ஒருவரையொருவர் கட்டித் தழுவினார்கள். மரகதவல்லி கண்ணீர் விட்டழுதாள்.

**கமலநாதன்** :— "மரகதமே! ஏன் அழுகிறாய்! ஊரை விடுத்து வந்தமை கருதி வருந்துகின்றாயா?"

மரகதவல்லி :—காதல! தங்களுக்கு எதிர்பாராது நாட்டை விடுத்தேகக் கட்டளை பிறந்தமையை நினைத்தும்; அடியேனைச் சாலப்பரிந்தமு தூட்டி வளர்த்த தாயையும் அன்புடன் கல்வியறி வூட்டிய தந்தையையும் பிரிந்தமை கருதியும் என் உள்ளந் துடிக்கின்றது"

கமலநாதன் :—மரகதமே! கவலற்க! நாம் மீண்டும் புதுவைக்கு விரைவில் வந்து விடலாம். உன் தாய் தந்தையரையும் யாம் மீண்டும் சந்திக்கலாம்.

இம்மாதிரி வருந்திய மரகதவல்லியைக் கமலநாதன் ஒருவாறு தேற்றவே சற்று வருத்தம் நீங்கியிருந்தாள். அன்றிரவு இருவரும் கந்தர்வகோட்டையில் இருந்தனர்; மறுநாள் அதிகாலையில் துயில் நீத்துத் தஞ்சைசெல்லும் மோட்டாரில் ஏறித் தஞ்சை சேர்ந்தார்கள். மணி சுமார் 9 இருக்கும். 9-30க்கு ஒரு இருப்புத் தொடர் வண்டி சென்னைக்குப் புறப்படும் என்று அங்கொரு கரும் பலகையில் எழுதப்பட்டிருந்தது. அரைமணி நேரத்திற்குள் பக்கத்திருந்த சிற்றுண்டிச்சாலையில் நுழைந்து காலைப்பசிநோய் தணித்து மீண்டு ஸ்டேஷனில் சென்னைக்கு இரண்டு இரண்டாவது வகுப்பு பிரயாணச் சீட்டுகள் பெற்றுக்கொண்டு அவர்கள் வண்டியில் ஏறினார்கள். "ஹிந்து" பத்திரிகை யொன்று வாங்கி கமலநாதன் வாய் விட்டுச் சற்று உரத்த குரலில் படித்துக் கொண்டே வந்தான். அவர்கள் ஏறிய சிறிது நேரத்திற்கெல்லாம் வண்டி புறப்பட்டது. மரகதவல்லியும் ஆங்கிலப்பயிற்சி யுடையவளாதலால் கமலநாதன் படித்து வருவதைக் கவனமாய்க் கேட்டுவந்தாள். மாகாணச் செய்திகள் கடைசி பக்கத்தில் பிரசுரிக்கப் பட்டிருந்தன. அவைகளில் 'புதுக்கோட்டை'யென்று பொறித்திருந்தது. அஃதென்ன வென்று பார்த்தான். தண்ணீர்க் குறைவால் மக்கள் வாடுவதாகவும் அரசாங்கத்தினர் அது சம்பந்த

மாய் அதிகக் கவலே செலுத்த வேண்டு மென்றும் எழுதப்பட்டிருந்தது. அதற் கடியில "கமலநாதன் B. A. என்பார் அரசாங்கத்தைத் தாக்கிப் பேசிய கார ணத்தால் நாட்டைவிடுத் தப்புறப்படுத தப்பட்டார்" என்று எழுதப்பட்டிருந் தது. பிறந்த நாட்டை விட்டுப் போக நேர்ந்ததே என்னும் வருத்தம் பத்திரி கையில் இம்மாதிரி பொறித்திருந்ததை வாசிக்கும்பொழுது அதிகரித்தது. கண் ணீர் முத்து முத்தாகக் கமலநாதன் உகுத்தான்; மரகதவல்லி தேற்றத் தேறி யிருந்தான்.

இருவரும் சென்னை சென்று என்ன செய்வது என்பதைப்பற்றி ஆலோசித் துக்கொண்டே யிருந்தார்கள். வண்டி இரவு சுமார் 9-45க்கு எழும்பூர் வந்து சேர்ந்தது. ஒற்றை மாட்டு வண்டி யொன்றில் ஏறிக்கொண்டு வேப்பேரி நோக்கிச் சென்றார்கள். அவண் கமல நாதனதாருயிர்த் தோழர் சாந்த மூர்த்தி வீடு வல்லம் பங்காரு செட்டித் தெருவில் இருந்தது. சாந்தமூர்த்தியும் அவரது காதலி கோகிலாம்பாளும் கருத்தொருமித்து அன்புடன் வரு விருந்து வைகலும் ஓம்புந் தன்மையர். அவர்களில்லத்தில் கமலநாதனும் மர கதவல்லியும் சிலநாள் தங்கியிருந்தனர்.

இவர்கள் இங்ஙனந் தங்கியிருக்கப் புதுக்கோட்டையில் கமலநாதனது பெற் றோர்கள் தங்கள் பெறலரும் புதல்வன் பிரிவால் மனம் வாடினார்கள். மரகத வல்லியின் தாயார் அன்று மாலே, பக் கத்து வீடு சென்ற தன்மகள் வரவில் லையே யென்று அவ்வீடுற்றுப் பார்த் தாள். ஆங்கு மரகதவல்லியைக் காண வில்லை. யாவரையுஞ் சென்று உசாவி னாள். ஒருவரும் கண்டதாக வுரைக்க வில்லை. மிகவும் வருந்திய வண்ணம் அன்றிரவெல்லாம் தன் மகளைப் பற் றிய கவலையுடன் உறக்கமின்றி யிருந்த னள்.

மறுநாட் காலை நச்சாந்துபட்டிக்கு ஆள் போக்கினாள். ஆள்சென்று இராம சாமிப் பிள்ளையை யுடனே யழைத்து வந்தான். தம் மகள் வீட்டை விடுத் துச் சென்றுவிட்டாள் எனுஞ் செய்தி யைக் கேட்டதும் செவியிற் கனல் நுழைந்தாற்போல் அவர் ஆராத்துயர் உற்றார். ஒன்றுஞ் செய்வது புரியாது திகைத்தார். தன் மகளைத் தேடவும் நாணினார்; ஊராரெல்லாம் பழிப்பார் களே என்று அஞ்சினார்; தாம் மரகத வல்லியைக் கந்தசாமிக்குக் கொடுக்க நினைத்தது தவறென்பதை தெளிந் யோர்ந்தார். மரகதவல்லியும் நன்றாகப் படித்தவள். ஆகவே அவள் பிறர் பழிக்கு மாறு நடக்கமாட்டாள் என்னுந் துணிபு மாத்திரம் அவருக்குண்டு. அத்துடன் தம் மகள் முதல் நாள் கூறிய கனவு தம ஞாபகத்துக்கு வந்ததும் குறிப் பாகத் தாம வெளிப்பட்டுப் போதலைக் குறித்திருக்கிறாள் என்பதையறிந்தார். தவிரவும், மரகதவல்லி கமலநாதனுடன் நட்பு கொண்டிருந்தாள் என்பதையும் அவர் நன்குணர்ந்திருந்தார். கமல நாதனை நாடு கடத்திய செய்தி அவருக் குத் தெரியும். ஆகவே அவன்தான் தம மகளை அழைத்துச் சென்றிருக்க வேண்டும் என்று முடிவு செய்து கொண்டு எல்லாம் இறைவன் திருவுளம் போலும் என்று வாளா விருந்தார்.

இஃதிவ்வாறாக, சென்னை சென்றவர் களைப்பற்றிச் சிறிது நோக்குவோம். மரகதவல்லி:—"காதல! நாம இரு வரும் இந்நாட்டை விடுத்துச் சிங்கப் பூர் முதலான அயல் நாடுகள் சென்று இன்புற்றிருக்கலா மென்றெண்ணுகின் றேன். தங்களது திருவுளம் எப்படி யோ?"

கமலநாதன்:— "மரகதமே! பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும் நற்றவானி னும நனி சிறந்தனவே" என்று நம் பாரதி கூறியுள்ளார். ஆகவே நாம் பிறந்த நாட்டை விடுத்தேக மனம் புண் ணடைகின்றது"

மரகதவல்லி:—"அப்படியானால் நாம் சென்னையில் தங்கி என்ன செய்யலாம்? தாங்கள் B. A. பட்டம் பெற்றிருக் கிறீர்கள். ஏதேனும் ஓர் உத்தியோக மாவது தேடுவீர்களாக."

கமலநாதன் இளம் பிராயமுதற் கொண்டே காந்தியடிகளைப் பின்பற்றி வந்தவனுதலால் தீண்டாமை யொழிப் பதற்கு ஒரு பத்திரிகை ஆரமபிதது நடத்துதல் சாலசசிறப்புடைததென்று கூறவே, மரகதவல்லி, "இக்காலத்தில் பததிரிகைகள் மலிநதுள்ளன. இருக் கிற பத்திரிகைகளை ஆதரிப்பவர்களைக் கண்டிலமே. இங்கிலேயில் நாம் ஒரு பத் திரிகை யாரம்பித்தால் ஆதரிப்பார் கிடைப்பதரிது" என்முள். கமலநாதன் "வாரப்பத்திரிகையொன்று ஆரமபிதது குறைநத விலைக்குக கொடுததால் தென் றமிழ் நாட்டார்கள் நன்குக ஆதரிபபார் கள்" என்று கூறியதுடன் "அப்பத்திரி கைக்கு "பழந்தமிழர்" என்று பெயர் சூட்டி விரைவில் ஒன்று ஆரமபித்து விடலாம்" என்முன். பொதுவாக அர சியல் செய்திகளை வெளிப்படுத்தி வந தாலும் சிறப்பாகத தீண்டாமை விலக கைப பற்றித் தான்எழுதி வெளியிட வேண்டு மென்று தீர்மானிததான்.

பிறகு வேப்பேரியை விடுத்துத் திரு வல்லிககேணியுற்று அங்குளள ஹிந்தி பிரசாராலயத்தருகே ஓரிடம் வாட கைக்கு வாங்கிக்கொண்டு "பழந்தமி ழர்" என்ற பத்திரிகையை வெளியிட் டார்கள். இந்தப் புதுப பத்திரிகை யைப்பற்றி ஏனைய சிறநத பத்திரிகை கள் எல்லாம் சிறபபாக எழுதித தமிழ் நாட்டார் ஆதரிக்கும் வண்ணம் விண் ணப்பஞ செய்தனர். தீண்டாமையை யொழிப்பதில் நாடு முனைந்து நின்ற தால் இபபத்திரிகைககு ஏராளமான சந்தாதாரகள் சேர்நதார்கள். கமல நாதன் மரகதவலலியை இல்லக்கிழததி யாக்க மணம புரிய நிச்சயித்தான். தங்க ளது பெறறோர்களுக்குத தங்களமனப் போக்கைத தெரிவித்துக் கடிதங்கள் போக்கினுர்கள். அவர்களும தறகாலத் திற் கேறற மணநதான் என்று கருதி இநதக் கலப்பு மணத்திற்குச் சம்மதப் படடுச சென்னைவநது சேர்ந்தாரகள். திருமணம் ஒருநன்னுளில் நறுமணமாக நடைபெற்றது.

கமலநாதனும மரகதவல்லியும் கருத் துவேறுபாடின்றி இன்பவாழ்வை நடத் தியதுடன் நாட்டின் விடுதலை கருதி அரும்பாடு பட்டு வநதனா "பழந்தமி ழர்" என்னும பத்திரிகையும் சிறப்புற நாளொருமேனியும் பொழுதொரு வண் ணமுமாக வளர்ந்து வருங் குழவிபோல் நாட்டினர் ஆதரவுபெற்று வளர்ந்தோங் கியது. அவர்கள் என்றுஞ் சிறப்புற்று வாழ்வார்களாக.

"பொங்கும் மங்களம் எங்குந தங்குக"

---

# சுந்தர சுலோசனு

[திரு. டி. ஆர். சாரங்கபாணி, எம். ஏ.]

(தொடர்ச்சி)

## இதழ் 6

### பிரபுவே! மோகனசுந்தரங் குற்றமற்றவன்

"பிரபுவே! யான் இங்குப் போந்தது விருந்து உம்மிடந் தனித்துப் பேச இப்பொழுதே சமயம்வாய்த்தது. நீர் அன்றிரவு என்னிடமறைந்த விவ ரங்களினின்றும் பிறந்த சில சந்தேகங் களைக் களைய நினைநதே இதுகாலை உம் முடன் பேச விழைநதேன். யான் மாறு பெயருடன் உம்முடைய அரண்மனை யணுகியும என்னை, வழக்கில் சம்பநதப் பட்ட என்னுடைய அருமை விரோதி யர், யாரென அறிவார்கள் என இன்று காலை யுணர்நதேன்."

"ஜயகுமாரரே! நீர கூறுவது எனக் குப் பெரும் வியப்பையே மூட்டுகின் றது. மாறுவேடக் கோலத்துடன உம்

மைக் கண்டு யானும் மயங்கியதை நீரே அறிவீர். அந்நிலையில் உம்முடையவிரோதியர்கள் உமமை அறிநது கொண்டது பெரும வியப்பையே அளிக்கினறது.''

" என்னே அவர்கள் அறிநதுகொண்டமையான பெரும நஷ்டம ஒன்றும் விளைநதுவிடப் போவதில்லை. எனினும அவர்கள் என்னே அறியாமலிருப்பின், மிகவும நலமாகஇருக்கும். இனி அதனை எண்ணிக் கவலைப்பட்டுப் பயனென் ? பிரபுவே ! உம்முடைய இருப்புப்பெட்டி இருக்கும் அறையைநான் பார்க்கவேண்டும். ஆனுல் பார்ப்பதன்முன்னர் இரண்டொருவிஷயங்களை யான்அறிய விரும்புகின்றேன். பிரபுவே, உம்முடைய இருப்புப் பெட்டியிலிருந்து வைரமாலையும் வாளும ஏனைய நகைகளும், களவாடப்பட்டதை சுலோசனை அறிவாளா?''

" ஜயகுமாரரே ! சாதலின் இயல்பை யோர்ந்த யான் அவ் வுண்மையைச் சுலோசனைககுக் கூறின், அவள் பெரிதும் வருநதுவா ளென அறிவேனுதலின் யான் அதனை அவளிடம் இயம்பவில்லை. எனவே, அதனை அவள அறியாள் என்றே யான் கூறுவேன்.''

" களவாடப்பட்ட உண்மையை உரிமையுறையுளில ஒருவரும் அறியாகளா?''

"அறியார்கள்.''

" பிரபுவே ! யான் இப்போது கேட்க விருமபும் கேள்வி உமக்குச சிறிது சஞ்சலத்தை யளிப்பினும அளிததலாகும். ஆனுல், உம்முடைய நலனைக் கருதியே நான் உம்மை அவ்வினுவுக்குறற பதிலை இறுக்குமாறு வேண்டுகின்றேன். பிரபுவே! நீர் அவ்வைர மாலையையும் வாளையும் மோகனசுநதரப் பிரபுவுக்குக் காட்டுங்கால் சுலோசனையின் தோழியாகிய சாரதாவும் அதைக் கண்டார்கள் அல்லவா?''

" ஆம் ''

" சாரதாவின் ஒழுக்கம் எத்தகையதெனவே யான் அறிய விரும்புகிறேன்.''

"ஜயகுமாரரே ! சாரதாவின் ஒழுக்கத்தின் மணமை நீர் அறியீராதலின் அவள மீது சநதேகங் கொண்டீர். நண்பரே ! நல்லொழுக்கஙக ளெல்லாம் ஒருங்கியைநத மாண்பு சாரதாவுக்கே உரியது. நீர் அவளமீது சந்தேகங் கொள்வது பெருநதவறே யாகும்.''

" பிரபுவே! நான் சாரதாவின் மீது சந்தேகங் கொண்டேனென நீர் நினைப்பது தவறு. ஆனுல் இத்தகைய விஷயங்களை அறிவது என்னுடைய தொழிலுக்கு ஏற்ற உதவி புரியும். நீர் அவ்வளவு உறுதியாக சாரதாவின் நல்லொழுக்கததிற்குச் சானறு கூறுகையில் நான் அவளைச சநதேகிக்க இயலாது. பிரபுவே ! சண்முகசுநதரப் பிரபுவின் கடிதங்களில் ஒனறேனும் உங்களிடத்தி லிருக்குமா ?''

" எண்ணிறநதவை இருக்கின்றன. ஆனுல அவைகள் இருபபுப் பெடடியிலேயே பூட்டப்பட் டிருக்கின்றன. நாம அறையைக காணச் செல்லுங்கால் அவைகளை உமக் களிககின்றேன்.''

" பிரபுவே ! உம்முடைய பணியாளர்களில் ஒருவர் மீதும உமக்குச சந்தேகமில்லையல்லவா ?''

" ஜயகுமாரரே ! என்னுடைய பணியாளர்கள நன்றிமறவா உததமர்கள்; சமயம நேரின் தங்களுடைய உயிரையும் எனக்களிக்கததுணியும் தூயர். எனவே அவர்கள் தஙகளை மறந்தும் இக்காரியததைச் செய்யார்கள்.''

"பிரபுவே! உமமுடைய உறுதிவாக்கு என்னுடைய சந்தேகங்களெல்லாவற்றையும் இதனுள் மாறுசெய்துவிட்டது. அருக்கன் ஆழ்கடலாழுஞ் சமயமும நெருங்கிவிட்டது.உம்முடைய இருப்புப் பெட்டியுளள அறைக்குச் செலவோம் வாருஙகள் ''

'ஜயகுமாரரே வாருஞ் செல்வோம்.'

சநதிரசேகரப் பிரபு ஜயகுமாரனை அழைத்துக்கொண்டு அவ் வறைக்குச சென்ருர். வழக்கம்போல் அவ்வறை பூட்டப்பட்டே இருந்தது.

அவ்வறையின் இருப்புக் கதவைக் கண்டு ஐயகுமாரன் திகைத்தான். சந்திர சேகரப் பிரபு அவ்வறையின் கதவைத் திறக்க, ஐயகுமாரன் சந்திர சேகரப் பிரபுவுடன் அறையுள் நுழைந்தான். அறையுள் நுழைந்ததும் ஐயகுமாரனுடைய கூரிய கண்கள் அறையின் நாற்புறமும் ஒருமுறை நோக்கின. சுமார் பனிரண்டடி நீளமும் பத்தடி அகலமும் உள்ள அவ்வறையில் இரண்டு சாளரங்கள் இருந்தன. இடது பக்கத்தில் சுவரோரத்தில் ஒரு மேஜையும் அதனருகில் ஒரு சுழலும் நாற்காலியு மிருந்தன. சுவர்களில் இயற்கையெழில் மிகுந்த படங்கள் மாட்டப்பட்டிருந்தன. இருமின்சார விளக்குகளும், இடையில் மிளிர்ந்த ஒருசிறு மின்சார விசிறியும் அவ்வறையின் எழிலை மிகுத்தன. அவ்வறையின் வலப்பக்கத்தில் இருப்புப் பெட்டியொன்றிலங்கியது. அது சிறிது சுவரில் புதைக்கப்பட்டிருந்தது. இருப்புப் பெட்டியைக் கண்டதும் ஐயகுமாரன் அப்பெட்டியின் முப்புறமும் முதலில் ஆராய்ந்தான். பின்னர் அவ்வறையிலிருந்த இருசாளரங்களையும் ஐயகுமாரன் ஆராய்ந்தான். அவைகளின் இருப்புக் கம்பிகளையும் இருப்புக் கதவங்களையும் ஆராய்ந்ததும் அவைகளின் வாயிலாக ஒரு கள்வனும் அறையுள் வந்திட ஒல்லாதென்பது அவனுக்குத் தெற்றென விளங்கியது. அழகாகச் சிமிட்டியிடப் பட்டிருந்த அறையின் தரையை ஐயகுமாரனுடைய கண்கள் நாடின. அடுத்த நிமிடம் ஐயகுமாரன் தன்னுடைய சட்டைப் பையிலிருந்து ஒரு பூதக் கண்ணாடியை எடுத்தான். அக்கண்ணாடியை அணிந்துகொண்டு இருப்புப் பெட்டியின் மூடிக்கருகில் ஐயகுமாரன் குனிந்து நோக்கினான். கதிரவன் கடலாழுஞ் சமயமாதலான், போதிய வெளிச்சம் அறையுளில்லாமையான் ஐயகுமாரன் தன்னுடைய மின்சாரக் கை விளக்கை ஏற்றினான். அதனுடைய ஒளியில் அறையின் தரையைக்குழந்தையைப்போலும் முட்டிகளையுங் கரங்களையும் ஊன்றிக்கொண்டு ஐயகுமாரன் நெடுநேரம் தரையை உற்றுநோக்கிக் கொண்டிருந்தான். சிறிது நேரங் கழிந்தது முகமெல்லாம் வியர்ப்ப, அவ்வறையின் கதவையணுகி அதன் தாளை உற்று நோக்கினான். மற்றுமொரு முறை ஐயகுமாரன் அறையின் நாற்புறமும் உற்று நோக்கினான். அவனுடைய கண்கள் மேல்தலத்தை நோக்கின. அவனுக் கொன்றும் விளங்கவில்லை. அதுகாறும் வாளா அறையுள் சாய்வு நாற்காலியில் அமர்ந்து ஐயகுமாரனுடைய செயல்களை உற்றுக் கவனித்துக்கொண்டிருந்த சந்திரசேகரப் பிரபு, "ஐயகுமாரரே! இவ்வறையுள் மிகவும் அனலாக இருக்கிறது. மின்சார விசிறியைத் திருப்பி விடுவதால் உமக்கொரு இடைஞ்சலு மில்லையே?" என்று வினவினார்.

ஐயகுமாரன் சந்திரசேகரப் பிரபுவை ஒரு முறை உற்று நோக்கினான். அவனுடைய அகத்திலெழுந்த பல எண்ணங்கள் அவனுடைய முகத்தில் பெரும் மாறுதலை உண்டாக்கியிருந்தன. அவனுடைய கண்களின் ஒளி சந்திர சேகரப் பிரபுவை ஊடுருவிச்சென்றது. "பிரபுவே! விசிறியின் விசையைத் திருப்புங்கள். அறையுளிருக்கும் விளக்குகளையும் ஏற்றுங்கள்" என்றான். அதிகாரத்துடன் கூறிய ஐயகுமாரனுடைய மொழிகளைக் கேட்டு சந்திர சேகரப் பிரபு திடுக்கிட்டார். தான் அறிந்த ஐயகுமாரனுடைய கூரலாக அது தோன்றிற்றில்லை. விளக்கையேற்றிவிட்டு, விசிறியின் விசையையுந் திருப்பிவிட்டு அவர் ஐயகுமாரனை நோக்கினார். அவனுடைய முகத்தை நோக்கியதும் அவர் திடுக்கிட்டு நின்றார். ஒரு புதிய ஒளி அவனுடைய முகத்தில் விளங்கக் அவர் கண்டார். அவனுடைய கண்கள் விரிந்து ஒளி வீசி நின்றன. அவனுடைய உயர்ந்தகன்ற நெற்றியில் முத்து முத்தாக வியர்வை நீர் மலிந்து நின்றது. அவனுடைய கன்னங்களின் மேல் வியர்வை நீர் தாரை தாரையாக வடிந்து கொண்டிருந்தது. ஒரு கரத்

தில் பூதக் கண்ணுடியையும மறு கரத்தில் மின்சாரக் கை விளக்கையுந தாங்கி நின்ற ஜயகுமாரனுடைய உருவம சநதிரசேகரப் பிரபுவுக்கு அச்சத்தையும ஆச்சரியத்தையும் ஒருஙகேஅளித்தது.

சநதிரசேகரப் பிரபு தன்னைக கவனிதது நிற்றலை ஜயகுமாரன் ஒரு சிறிதுங் கவனித்தானில்லை. அவனுடைய கருத்து அவ்வறையின் மேல் தலததையே நாடி நின்றது. சில நிமிடஙகள் கழிந்தன. உடனே ஜயகுமாரன் பிததேறியவன் போலும் அறையின் சுவர்களை ஆங்காங்குத் தன்னுடைய விரலால் தட்டிப பார்த்துக கொண்டே வநதான். அசசெய்கை சந்திர சேகரப பிரபுவுக்குப் பெரும் வியப்பையே அளித்தது. ஒரு முறை சுவர்களை எல்லாந் தட்டி முடிநததும், ஜயகுமாரன் அறையின் தரையைச சிறிது சிறிதாகத தட்டிப் பார்ததுக கொண்டே வநதான். சநதிரசேகரப பிரபுவுககு ஒரு புறம் பெருஞ்சிரிபபும்மறுபுறம பெரும ஆச்சரியமும் மலிநதெழுநதன. தரையை ஆராய்ந்தவுடன் ஜயகுமாரனசிறிது நேரம் அறையின் இடையில் தயங்கி நின்றான். அறையின் நடுவில் நனிவேகத்துடன் சுழன்று கொண்டிருநத மின்சார விசிறியின் காற்று அவனதநகத்தின் மீது பாய்ந்தது. வியர்வையான் நனைந்திருந்த அவனுககு அக்காற்று பெருங்களிப்பையே ஊட்டியது. தன்னுடைய கைககுட்டையால் தன்னுடைய முகத்தை நன்றாகததுடைததுக் கொண்டு ஜயகுமாரன் சந்திரசேகரப் பிரபுவை நோககிப் புன்முறுவல் கொண்டான். சந்திரசேகரப் பிரபு என்ன கூறுவதெனத் தோன்றாது திகைதது நின்றார்.''

''பிரபுவே! சண்முகசுந்தரப் பிரபு உமக்கெழுதிய கடிதங்களில் ஒன்றிரண்டை இதுகாலை உம்மால் காட்ட ஒல்லுமா'' என வினவினான்.

''ஜயகுமாரரே! இதோ காட்டுகின்றேன்'' எனக்கூறி சநதிரசேகரப் பிரபு இருப்புப் பெட்டியைத் திறந்து சில கடிதங்களை யெடுத்து ஜயகுமாரனுக்குக் காட்டினார்.

ஜயகுமாரன் அக்கடி தங்களுள ஒன்றை யெடுத்து உற்று நோக்கினான். நோககியதும ஆசசரிய மெய்தினான். தான் சென்ற இரவு மோகன சுநதரப் பிரபுவின அறையினின்றுங் களவாடிய கடிதங்களில் கண்ட எழுத்தும் தன் கரத்திலிருநத கடிததநில் காணபபட்ட எழுததும் ஒருவர் எழுதிய எழுததாகவே இலங்கின. மீண்டுமொரு முறை அக்கடிதத்தை உற்று நோக்கினன். அவனுக்குச் சிறிது சநதேகம பிறநதது. தன்னுடைய சட்டைபபையிலிருந்து தான் களவாடிய கடிதங்களை எடுத்து, அவைகளுள ஒன்றை எடுததுத தன கரத்திலிருநத கடிததத்தின் அருகில் வைத்துக கவனித்தான். இரு கடிதங்களிலும், ஒரே வகை எழுத்துக களைக கண்டு மருணடான். பின்னர் தன்னுடைய பூதக கண்ணுடியை அணிநது இரு கடிதங்களையும் ஒப்பிட்டு நோக்கினன். அவனுடைய முகம் மலர்நதது. ''சண்முகம்'' என்ற வார்த்தையை இரு கடிதங்களிலும் உற்று நோக்கினன். உண்மை விளங்கியது. சநதிரசேகரப் பிரபு தனக்களித்த சண்முக சுநதரத்தின் கடிததநில் கையொபபமாக இலஙகிய ''சண்முகம்'' என்ற வார்ததைக்கும, அன்று காலை தன்னுடைய அறையின் மேஜையின் மேல் கண்ட கடிதத்தின் இறுதியில் இலங்கிய ''சண்முகம்'' என்ற வார்த்தைக்கும உளள சிறு விததியாசத்தை ஜெயகுமாரன் உற்றுணர்ந்தான். தனக்குக் கிடைத்த கடிததநில் கையொப்பமிட்டவன் சண்முக சுந்தரத்தைப் போலும் 'சண்முகம்'என வரைந்திருப்பினும அதை சண்முக சுநதரம் வரையவில்லை யென்பதை ஜயகுமாரன் தெளிந்தான். சண்முக சுநதரத்தின மீது ஜயகுமாரன் கொண்ட சநதேகங்கள் மறைநதொழிந்தன. அது காலையே ஜயகுமாரன் தன்னுடைய விரோதி சண்முக சுநதரத்தின் பெயரைக கையாளுமொரு கள்வனல்லால் சண்முக

சுந்தர மலலே என்பதை ஐயகுமாரன் உணர்ந்தான். உணர்ந்ததும இருகடிதங களையுமெடுத்துத் தன் சட்டைப்பையில் அவ்விரு கடிதங்களையும வைததுக் கொண்டு "பிரபுவே சண்முகசுந்தரப பிரவுவின் கடிதங்களில் இககடிதம் என்னிடத்திலேயே இருக்கட்டும. எஞ்சிய கடிதங்களை இருபபுப் பெட்டியிலேயே வைத்துவிடும்" என, சந்திரசேகரப் பிரபு அக்கடிதஙகளை யெல்லாம இருபபுப் பெட்டியில் வைத்துப் பூட்டினுர்.

"பிரபுவே! இவ்வறைககு மேலும் ஓர் அறையுணடோ?"

"ஆம."

"அவ்வறை யாருடையது?"

"அவ்வறையிலேயே சாரதா வதிநது வருகிருள்."

"அவ்வறையை யான் இபபொழுது பார்க்க வியலுமா?"

"ஆ!ஆ! அதற்கென்ன என்னுடன வாருங்கள. யானும்மை அவ்வறைககு அழைத்துச் செல்கின்றேன்."

சிறிது நேரஞ் சென்றதும ஐயகுமாரன் சநதிரசேககப பிரபுவுடன் சாரதாவின் அறையை அடைநதான். அடைநத வுடன், அவ்வறையின் தரையை உற்று நோக்கினுன். அவனுககொன்றும் புலனுகவில்லே. பின்னர்த் தன் கரஙகளைத் தரையிலூன்றி ஆங்காங்குத்தரையைத் தட்டிப் பார்த்தான். பார்த்தவுடன் அவன் எழுந்து "பிரபுவே! உமமுடைய அறையை யான் பார்க்க விருமபுகின்றேன்" என்ருன். ஐயகுமாரனுடைய திருவிளையாடல்களை யெல்லாங் கண்டு ஒன்றுந் தோன்ருது திகைத்து நின்ற சந்திரசேகரப் பிரபு ஐயகுமாரனைத் தன்னுடைய அறைக்கு அழைத்துச் சென்ருர். சந்திரசேகரப் பிரபுவின் அறையை அடைந்த ஐயகுமாரன் அறையுள் விளங்கிய பொருளகளை கவனிககவில்லே. நேராக அவருடைய கட்டிலேயணுகி ஆங்கிருந்த தலையணைகளை ஒவ்வொன்ருக எடுத்து முகந்தான். முகந்ததும் அவனுடைய முகம ஒருவாறு மலர்ந்தது. "பிரபுவே! உம்முடைய விலேயுயர்நத நகைகள் களவாடப் பட்ட அன்றிரவு நீர் இப்பஞ்சணையின மீது தானே துயின்றீர்?"

"ஆம்"

"அன்று இவ்வணையின் மீது விரிக கப்பட்டிருநத துப்பட்டி எங்கே?"

"ஐயகுமாரரே! அதனைக் கொண்டு வரச சொலகின்றேன." "சரி. நாம்செல்வோம. பணியாளனை அததுப்பட்டியைககொண்டுவரச சொல்லுங்கள" என வியம்பி ஐயகுமாரன மாடியை விட்டுக கிழிறஙகினுன. சிறிது நேரத்தில் ஒரு பணியாளன் ஒரு துபபட்டியை எடுததுக கொண்டுவநதான். அநதத் துப்பட்டியை ஐயகுமாரன் முகந்து கொண்டே வர, ஓரிடததில் தான் தலையணையில் நுகர்நத அதே மருந்தின் வாசனையே வீசக்கண்டான். கண்டதும் அவனுக்கு ஓர் உண்மை விளங்கியதெனினும அதனைக்கொண்டு ஒருமுடிவுக்கும வரவியலாதவனுய் ஐயகுமாரன் சிறிது நேரந தயங்கி "சநதிரசேகரப் பிரபுவே! உம்முடைய இருப்புப் பெட்டியிலிருநது பணத்தையும் நகைகளையுங் களவாடிய வர்கள், நீர் அவைகளை மோகன சுந்தரத்திற்குக் காட்டிய அன்றிரவே நீர் உறஙகிக் கொண்டிருக்கையில், உம்முடைய சாவியை உமமிடததிலிருநது களவாடியே களவாடி யிருககிருர்கள். நீர் எண்ணு மாபபோல் அவைகள் நீர் இயமபிய தருணத்தில் களவாடப் படவில்லே."

"ஐயகுமாரரே! நீர் கூறுவது எனக் கொன்றும் விளங்கவில்லே."

"அவைகளின் விவரததை யான் பின்னுரைககின்றேன். இனி நான் உங்களுடைய பணியாளர்களைத் தனியேபார்க்க எண்ணுகின்றேன். எத்தனைப் பணியாளர்கள் இங்கிருக்கின்ருர்கள்?"

"ஆறு பணியாளர்கள்."

"அவர்களை யெல்லாம் இப்பொழுது யான் பார்க்க வியலுமா?"

"தாராளமாகப் பார்க்க வியலும். அவர்களை ஒவ்வொருவராக இங்கு அழைக்கட்டுமா?"

"பிரபுவே! வீட்டுள் வேலை செய்கிறவர்களை யான் முதலில் பார்த்தல் வேண்டும்."

"வீட்டுள் நான்குபேர் வேலை செய்கின்றார்கள். அவர்களுள் ஒரு பையனும் ஒரு சிறு பெண்ணு மிருக்கின்றார்கள். அவர்களிருவரும் சுமார் இரண்டு வருடங்களுக்கு முன்னர், சில்லறை வேலைகளைச் செய்வதற்காக அமர்த்தப் பட்டவர்கள். எஞ்சிய இருவரில் ஒருவன் சமயல்காரன்; மற்றவள் எஞ்சிய வேலைகளைச் செய்பவள். அவ்விருவர்களும் எத்தனையோ ஆண்டுகளாக இங்கு, என்னுடைய அன்னை காலந்தொட்டு இருந்து வருகின்றார்கள்; மிகவும் யோக்கியர்கள்."

"பிரபுவே! இந்நால்வரைத் தவிர்ந்து எஞ்சியவர்கள் யார்?"

"காவற்காரனும், தோட்டக்காரனுமேயாவர்"

"தோட்டக்காரனுக்கு வீட்டுள் வர வேண்டிய காரியமொன்றும் இல்லையல்லவா?"

"இல்லை"

"ஆனால் காவற்காரன்........"

"ஐயகுமாரரே! அவன்தான் இரவில் கதவங்களை யெல்லாஞ் சாத்தித் தாளிட்டு இரவு முழுவதுங் காவல் புரிபவன்"

"அவன் எத்தனை யாண்டுகளாக இங்கு வேலை செய்து வருகிறான்?"

"சென்ற இரண்டு ஆண்டுகளாக"

"அவன் அதற்கு முன்னர் எங்கு வேலை செய்துகொண்டிருந்தான்?"

"சென்னையில் தயாநிந்தலால் என்னும் ஒரு பெரிய மார்வாடியிடத்தில். அவருடைய நற்சாக்ஷிப் பத்திரத்தைக் கண்டே நான் அவனை இங்கு அமர்த்திக்கொண்டேன். அவன் சென்ற இரண்டு ஆண்டுகளாக மிகவும் உண்மையாக இருந்து வருகிறான்."

"பிரபுவே! உமக்குப் பெரிதுங் கஷ்டமளித்தேன். இன்றிரவு நான் சென்னைக்குச் செல்ல எண்ணுகின்றேன். இன்று நான் உங்களிடம் பேசியவைகளை யெல்லாம் இரகசியமாகவே வைத்துக் கொள்ளுங்கள். நான் நாளை மாலை இயன்றால் உம்மைப் பார்க்கின்றேன். ஆனால், போவதன் முன்னர் ஓர் உண்மையை யான் உங்களுக்கியம்ப விரும்புகின்றேன் சந்திரசேகரப் பிரபுவே! மோகன சுந்தரம் குற்றமற்றவன்."

---

# உடல் நுட்பம்

[ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்]

III

நினைவு, அறிவு, புலனுணர்வு, இச்சை, விருப்பு வெறுப்புகளுக்குப் பிறப்பிடம் மூளை. மூளை அப்பளமா நிறமுள்ளது; மண்டையோட்டினுள் உருண்டை உருண்டையாய்த் தோன்ற மடங்கியமைந்தது. ஒவ்வோருருண்டையும் பலநாடி நாளங்கள் சூழ, ஒருதிட்டமான வேலையை முரணின்றிச்செய்கிறது. மூளைமிக மெல்லியது. அதனால் அதற்கு உரத்த மண்டையோடு மூடப் பட்டுள்ளது. வளர்ந்த மனிதன் மூளை சுமார் 3 ராத்தல் இருக்கும். தனது நிறையில் 1/40 மூளை மனிதனுக்கு; யானைக்கு 1/500; திமிலங்கத்திற்கு 1/300. அதனாலேமனிதன் அறிவிற்சிறந்தோன் (1) உச்சிமூளை (Cerebrum), (2) துணைமூளை (Cerebellum) (3) நடு முடிச்சு (Medulla Oblongata) என்று மூளையில் மூன்று வகை. உச்சிமூளை முழு மூளையில 7/8 பங்கு. இதிலேயே மனத்தின் இருப்பும், நினைப்பின் பிறப்பும். மூளையில் மடிப்பு மிகுதி, அறிவு மிகுதியைக்

காட்டும். விலங்குகளுக்கு மூளை ஏறக் குறைய வழுக்கையாயிருக்கும. மனித மூளையின் மடக்குகளை யெல்லாம உரித்தால் சுமார் 670 சதுர அங்குலம் இருக்கும. மூளையின்றி உயிர்க்கலாம்; மூளையை அறுதது நீக்கிய தவளை உயிர்க்கிறது; ஆனால் அறிவும உணர்வும் இரா. மூளை வறண்டு போகாது ஓர் ரசச் சவ்வு (Serous Membrane) மூடிக்கொண்டிருககிறது. துணை மூளை (Cerebellum) பிடரியிலுள்ளது. இதில வெண்ணிற நரமபுகள் நிரம்பியுள்ளன. இது பார்வைக்குக் கதர் நூற்கண்டு போலிருக்கும். ஆனால் உள்ளே செடிபோலக் கிளை ததிருக்கும். இது தசைகளை ஆளுகிறது. நடு முடிச்சு (Madulla Oblongata) நடு நரம்பை மூளையோடிணைக்கிறது. இது கோலிபோன்று மேலே வெளுதது, உள்ளே சாமபல் நிறத்தோடுள்ளது. இதன் மேற்பகுதி கேடுறின் அறிவிழக்குமம; கீழ்ப்பகுதி கேடுறின் மூச்சும், இதயமும் நின்று சாவு நேரிடும.

மூளையிலும, நடுமுடிச்சியிலு மிருந்து, 12 ஜோடி நரம்புகள் மூக்கு, நாக்கு, காது, கண், தோல் முதலிய புலனறி கருவிகளுக்கு, மண்டையோட்டினடியிலிருக்கும் ஒன்பது துளைகள வழியே செல்லுகின்றன. முதல் ஜோடி நரம்புகள் நாற்ற நரம்புகள் (Olfactory Nerves) இவைமூக்கில்நிறைநது, மணமறிவிக்கும்.

2-வது, ஒளி நரம்புகள் (Optic Nerves) கண்ணுக்குச்சென்று பார்வை தரும். 3, 4, 6, கண்ணியக்கும் நரமபுகள் (Movers of the Eye) இவற்றால் விழி சுழலும்; இமை கொட்டும. 5-வது ஜோடியில் ஒன்று தொண்டை நரம்பு. மற்றொன்று நாவில்பரவும் சுவைநரமபு. 7-வது முகநரமபு முகததசைகளை இயக்கும். 8-வது ஒலிநரமபு, செவியிற் பரவும். 10-வது நேநேரம்பு (Wandering Nerves) இது தொண்டை உயிரி, இதயம், இரைப்பை, ஈரல்முதலிய உறுப்புக்களிற் பரவும். 11-வது கழுத்து நரம்பு; கழுத்து முதுகுத்தசைகளையாளும். 9-வது அடிநாநரம்பு. இதில் ஒன்று அடிநாக்கிலிருநது சுவை யறிவிக்கும். மற்றொன்று உணவை விழுங்குந தசையிற் படரும. 12-வது பேச்சுநரமபு நாவிற்பரவிப்பேச இயலுவிககும.

நடுநரமபு (Spinal Cord) இது நடுமுடிச்சினின்று (Apex) தொடங்கி, முதுகெலும்பு அடுக்குகளூடு செல்லும். இது சுண்டுவிரல் பருமனில் 16" நீளமுள்ளது. இதை மூளையின் நீட்சி யென்றே சொல்லலாம். இதினின்று இருபுறமும் 31 ஜோடி நரமபுகள் பிரிகின்றன. ஒவ்வொன்றும இரண்டாக முதுகெலுமபின் முன்னும் பின்னும் பிரிந்தோடி, முடிவில் ஒன்று சேருகிறது. பினனரமபுகள் ஊறு (Feeling) அறிவிக்கும. இநநடு நரம்பின் எநத இடம் அறுந்தாலும் அதற்குக் கீழே யுணர்விராது; உறுப்புகள வணங்கா; தநதிக்கம்பி அறுபட்டாற்போலத்தான். இதனிடைப பிரியும் நரம்புகள் கூந்தலாக, உடலெங்கும் பரவி உணர்வை மூளைக்குத் தெரிவிக்கும். உயிர்ததல், இருமல், மூக்குச்சிநதல், முதலியஎல்லாக் கட்டாயஇயககங்களும் (Reflex actions) இந்த நரம்புகளால் ஆளபபடுகின்றன. இநத நடுநரமபுத தொகுதியுடன் (Central Nervous System) துணை நரமபுத் தொகுதிகள் (Sympathetic Nervous System) உள்ளன. இவை முளளந தண்டின முள்ளெலும்புகளுக் கிடையே முடிச்சு முடிச்சாகச் சங்கிலிக கோவைபோல எல்லா உறுப்புக்களிலும் பரவுகின்றன. இதயம, உயிர், குடல், இரைப்பை, நாடிககுழாய்கள் எங்குமபரவுகின்றன. இநநரம்புகளை இச்சாசக்தியால் (Will) எப்படிவேண்டுமெனினும் பயிற்றலாம. பயிற்சிக்கேற்ப உயர்ச்சி சுத்த ரததத்தில் 1/10 மூளைக்குச் செல்லுகிறது. ஓய்வும், உழைப்பும், அளவாயிருத்தல் மூளைவளர்சசிக்கு நல்லது. இயமநியம சாதனம் மூளையை ஒளிபெறச்செய்யும. ஜபம், தியானம், பிராணயாமம் இவை மூளையை ஒரு கூறுக்கி வலிவுறுத்தும்,

கவலை, தீயநினைப்பு, பொறாமை, சூது வாதுகளால் மூளை வலு விழக்கும்.

தட்பவெப்பம், மென்மை கடுமை யுணர்வை நரம்புகளே ஆங்காங்கிருந்து உடனுடன் அறிவிக்கின்றன. நரம்பே நாகஇற் சுவைககிறது ; மூக்கில் முகர் கிறது. மூக்கின் நீளத்திறகுத் தக்கபடி முகரும் ஆற்றல் மிகும். செவிப்பதும் நரம்பால். காற்றால் ஓசைகேட்கிறது. காற்றின்றி ஒலியில்லை. ஓர் இமைப்பில் 1100அடி 1/5 மைல் ஒலிபரவும். காதின் நடுவே செவிப்பறை (Drum of the Ear) உள்ளது. இதன்பின் நான்கு நுண்ணெலும்புகள் உள்ளன. இவையே பறை சாற்றுவன. இதில் ஒலி தாக்கிய வுடன் கேட்கிறோம். இவற்றிற் கப்பால் உருண்டு வளைந்து உட்காது உளளது. இதிலுள்ள நரம்புகளே ஒலியை மூளைக்கு அறிவிக்கின்றன.

உரு, நிறம், தோற்றங்களைக் காண்பது கண். ஒளியால் பார்வை இயலுகிறது. ஓர் இமைப்பில் 1915000 மைல் ஒளி செல்லுகிறது. கட்குழியில் (Socket) கண் உருண்டையாக வைக்கப்பட்டுள்ளது. கண், ஒளிப்படக்கருவி (Photographic Camera) போன்றது. கண் மூன்று சவ்வுகளுடைத்து (1) வெண்விழியும் கண்ணுடியும் இவைகளில் கண்ணீர் ஊறுகிறது. (2) இடைச்சவ்வு. இது கறுததது நாடி நாளம் நிரமபியது. கறுத்து வட்டமாயிருப்பது நிறங்களைப் பிரித்து அறிவிக்கும நிறவிழி (Iris). இதனடுவே கண்மணியுள்ளது. (3) உள் வழி. இது நரமபுகள் மல்கிப் பார்வை உணர்வை யுண்டு பண்ணுகிறது. இதில் பளிஙகு நீர் (Vitreous Humour) என்னும் தெளிநீர்உள்ளது. கண், உறுப்புகளில் முதன்மையானது. அதைக் கருத்துடன் தூய பழக்கங்களாற் காக்க வேண்டும்.

### கஉ. முடிவுரை

அன்பர்களே ! இத்தகைய அருமை யான வெகு நுட்பமான, அற்புதமான மாளிகையில் "நான்" எனும் நமது தத்துவம் கோயில் கொண்டுள்ளது. இவ்வுடல் வியப்பு அதன் புறக்கோட்டை. இதைத்தாண்டி உள்ளே சென்றால் இன்னும் நுண்ணிய அற்புதங்கள் பலப் பல. இவறறைப் படைத்த இயற்கையைப் பணிமின் ! இயற்கையை இயக்கும் இறைவனைப் பணிமின் !

உடலைப் போற்றுக உடலைப் போற்றுக!
கடவுட் கோயிலென் றுடலைப் போற்றுக!

---

# கற்றவர் மடமை

(வில்லியம் ஹாஸ்லிட் என்னும் ஆங்கிலப் புலவரின் கட்டுரையைத் தழுவியது)

[திரு. ர. சாரங்கபாணி]

I

மக்கட் கூட்டத்துள் மிகவுங் குறுகிய கருத்துரிமை யுடையவர்களே ஆசிரியர்களென்றும், கற்பவரென்றும் அழைக்கப்படுவர். மற்றொரு காரியத்தையுஞ் செய்ய இயலாது தவித்தலைவிட, எழுதவும் படிக்கவுந் தெரியாம லிருத்தலே மிகவும் நன்றாகும். ஒரு புத்தகத்தைக் கையிலேந்திச் சோமபித் திரிபவன், தன் கண்முன் இலங்கும் இயற்கை வனப்பையும், தனதுள்ளத்தில் பரிணமிக்கும் எண்ணங்களின் தன்மையையும், அறிதற்குரிய ஆற்றலற்றவனே யாவன். அத்தகையவன் தன்னுடைய அறிவை, தன்னுடை பையிலேனும் இன்றேல், தன்னுடைய விலையுயர்ந்த புத்தகங்கள் அணியணியாக வகுக்கப் பட்டுள்ள புத்தகக் கருவூலத்திலேனும் வைத்துளான் எனக் கூறலே அமை வுடைத்து. அவன் ஏதாவது ஒரு விஷயத்தைப் பற்றித் தர்க்கிக்கவும், தான் புத்தகத்தினின்றும் வாசித்தறி

யா ஒரு புதியவிஷயத்தைதப்பற்றிப் பேச வும் அஞ்சுகின்ருன் ; சிந்திக்க அவன் பின்னடைகின்ருன் ; பழக்க மின்மை யால் சிந்தனையின் உதவியையும் அவன் இழக்கின்ருன் ; அந்தமிலாச் சொற் களின் தொடர்ச்சிகளும், முறறும் அமைக்கப்பெருத உருவங்களும, அவ னுடைய மனவெளியில் ஒன்றன்பின் ஒன்ருக ஒன்றை மறைத்து மற்ருென் றெழ, அவன் அமைதியுடன் அமர்கின் ருன்.

கல்வி பெரும்பாலும் இயற்கை அறி விற்கு முட்டுக்கட்டையாகவும் மெய்ஞ் ஞானத்தின் பதிலாகவும் மாறி விடு கின்றது. புத்தகங்கள, இயற்கை எழிலை உய்த்துணர்ந்திடுவதற் கெனத் தோன்றிய கண்ணுடிகளாக உபயோகப் படுத்தப்படுவதினும், அதிகமாக அவ் வியற்கையின் ஒப்பற்ற வனப்பையும மாறிமாறிப் புலனுகும் காட்சிகளேயும் ஊனக் கண்களினின்றும் குறுகிய ஆற்றலினின்றும் மறைததிடுந் திறை களாக உபயோகிக்கப்படுகின்றன. புத் தப் புழு, பொதுமைப பொருள் என்னும் கூடால் தன்னை மறைததுக் கொண்டு மற்றவர்களின் உள்ளங்களி லிருந்து பரிணமிக்கின்ற பொருள் களின் சாயைகளேயே கண்ணுறுகின் றது. இயற்கையும் அவனே உதறித் தள்ளுகின்றது. மாறுபாடுடைய பதக் கோவைகளின் நூற்கப்பட்ட விரிவு கள் விலக்கிய, உண்மையான பொருள்களின் பிம்பங்களைக் காணுந் தோறும் அவன் நடுக்குறுகின்ருன் ; அவைகளின் பேதங்கள் அவனே மயக்கு கின்றன. அவைகளின் வேகம் அவ னுக்குக் களைப்பை மூட்டுகின்றது. எனவே, அவன் தன்னைச் சுற்றிலும் இலங்கும் உலகின் வேகம் என்னுஞ் சுழலினின்றும், அதன் ஓங்கார ஓசை யினின்றும், அதன் கடிவேக மாறுதல் களை ஓர்ந்துணரும் கண்களும், உணர்வு மின்மையால், இறந்து பட்ட பாஷை களையும், மயக்கில்லாது அறிவை யூட்டு கின்ற எழுத்துக்களின் தொகுதிகளை யும் நாடுகின்ருன். "என்னுடைய அமை தியில் என்னை விட்டுவிடு" என்பது இறந்து பட்டவர்களும் உறங்குகின்ற வர்களும் நாடும் முது மொழியாகும. முடக்கு வியாதியால் பீடிக்கப்பட்டவர் களை "நாற்காலியினின்று எழுந்திரு" என்னுந தெய்வீகத் தன்மை யில்லாது "உன்னுடைய ஊன்று கோலை எறிநது விட்டு உன்னுடைய படுக்கையை எடுத் துககொண்டு நட" என்று கூறினுலுங் கூறலாம், ஆனல், நூற்கல்விப் பயிலு பவரை "உன்னுடைய புத்தகத்தை யெறிநது விட்டுச சுயேச்சையாகச் சிந்தனை செய்" என்று கூறவே ஒல் லாது. அவனுடைய அறிவின் உதவிக காக அவன் அதனைப் பற்றித் தவிக்கி ருன். அதனுடைய உதவியல்லாது தனித்து நிற்றல் ஆகாயமுமற்ற அந்த ரம்போலுமம அவனுக்கு அச்சத்தை யளிககின்றது. கற்றவர்கள் சாதாரண வாயுவை சுவாசிப்பதைப போல அவன் கல்வியென்னுங் காற்றையே சுவாசிக்க இயலும். அவன் அறிவைக் கடன் வாங் குகிறவன். சுயேச்சையாக உய்த்துணர் ந்த எண்ணங்களை அவன் மறநதும அறியான். மற்றவர்களுடைய எண் ணங்களைக் கொண்டே அவன் வாழ் கின்ருன். வெளியூற்றுக் களிலிருந்து நமமுடைய எண்ணங்களைக் கொளளும் பழககம் நம் சிந்தனையின் வலிமையைக் குறைதது விடுகின்றது. மனமாகிய யநதிரம் பழககததினுலும, அந்தகாரத் தினுலும் துரும்பேறிவிடின், சிந்தனை செய்வதற்கும, தொண்டாற்றுவதற் கும் உபயோகப்படுத்த வியலாது மங்கி விடுகின்றது. அறியாத ஒரு பாஷை யைப் பயிலுவது போலும், ஊக்க மளியா வரிகளையும் வார்த்தைகளின் பகுதிகளையும கண்சோர்ந்து கையினின் றும் புத்தகம் நழுவிடுங்காலும், வாசித் தறியும் அறியாமையும் சோம்பலும் நிறைநத ஒரு வாழ்க்கையின் இயல் பைக் கண்டு வியக்கவும் ஒல்லுமோ? இவ்வாறு கனவிற்கும் விழிப்புக்கும் இடையில் இடிப் புண்டு வாழும் வாழ்க்கையினும், நாள் முழுமையும் வேர்வைமிக உழைத்து இரவில்

பேரின்ப வீட்டின் நுகர்ச்சியைப்போ விலங்கும் அயர்ந்த நித்திரையை அளிக்கும் கட்டைப்பெட்டியின் வாழ்க் கையை நான் விரும்புவேன். ஒரு படித்த ஆசிரியன், ஒருபடித்த மாண வனைவிட ஒரே விஷயத்தில் மாறுபடு கின்றான். ஆசிரியனே மாணவன் படித்த தற்குரிய விஷயங்களை மீண்டும் எழுது கின்றான். படித்தவர்கள் நூற் கல்வி யின் பணியாளரே யாவர். தங்களு டைய சுய அறிவைக் கொண்டு ஒரு கட்டுரையை வரையுமாறு அவர்களை வேண்டினால், அவர்களுடைய தலை சுற்றுகின்றது, அவர்கள் எங்கிருக கின்றார்கள் என்று அவர்களே அறியார் கள். இயற்கையி விலஙகும் உயிருளள உருவங்களை எழுத முயலுமபோது, கூரிய பார்வையும் அமைதி மிகுநத கைகளும், ஒளிரும நிறங்களுமின்றி, படங்களைப பார்த்தெழுது பவரும், வெறுப்பிலலாது புததகங்களை வாசிப்ப வர்களும் ஒரே நிலையிலிருப்பவர்களா வர்.

தற்காலக் கல்வி முறையில் தோர்ந்தவ னொருவன், முழு மூடனாக மாறாதிருப் பின், அவன் தலை தப்பியது தம்பிரான் புண்ணியமென்றே எண்ண வேண்டும். வகுப்பில் பெரும் பெயரேடுக்கும் சிறு வர் உலக மேடையில் பெரும் பெய ரேடாரேன்பது உலக வழக்கு. ஒரு சிறு வனுக்குப் பளளியில் புகட்டப்படும் கல்வி முறையும், அவனுடைய வெற்றி யைக் குறிப்பிடும் நியதிகளும் மிகவும் உயர்ந்த உள்ளக்கருவிகளின் உதவி யைப பற்றினவல்ல. இலக்கணம், பாஷைகள், கணிதம், உலக சாத்திரம், இவைகளை மனப் பாடஞ்செய்து ஒப் பிகக ஆங்குப் பேருதவியாற்றி நிற்பது ஞாபகசக்தியேயாகும். எனவே, இயற் கை யுணர்சசியினறி யமையாத மற்ற சக்திகளற்று, இநத ஞாபகசக்தியை யுடையவன், பள்ளியில் பெரும்பெய ரெடுபபான். மற்ற விஷயங்களை அறிய ஆற்றலும் அற்றவர்களாய் அவ்வாறு செய்யவேண்டும் என்ற வற்புறுத்தலும் இல்லாம விருநதால், பததாண்டுகள் நிறைந்த சிறுவனுக்கு வார்த்தையின் வகுப்புகளைப்பற்றிய மந்திரங்களிலும் வாய்ப்பாடுகளிலும் அவனுக்குச் சிறி தும் ஊக்கமிரா தென்பது தேற்றம்.

---

# இ டி யே று

## அடிகளின் விரதம்

**ப**ற்பல காரணங்களையொட்டி விரதம் அனுஷ்டிக்கப் படுவது வழக்கம். நமது நாடு விரதத்திலே பேர் பெற்ற தென்பது வெள்ளிடைமலை. நமது நாட் டுக் கலைகளுள் விரதத்தைப் பற்றிப் பேசாதன மிக அருமை. விரததகதைப் பற்றிய கதைகள் நமதுநாட்டில் ஏராள மாக உண்டு. பண்டை முனிவரர்கள்எல் லாரும் விரததாலேயே தத்தம் விருப் பத்தை நிறைவேற்றிக் கொண்டார்கள். அத்தகைவிரததகின் மாண்பு நாளடை வில் நாட்டில் குலையலாயிற்று. இதற்குக் காரணம் நாட்டுக் கல்வியின் அழிவும், தற்கால நாகரிகமுமே யாகும். இருள் சூழ்நத இந்நாளில் உலகம் போற்றும் ஒருவர் விரதமிருத்தல் விரத உல கததை மீண்டும் உயிர்ப்பிப்பதாகும்.

காந்தியடிகள் பல முறை விரதமிருந் தது உலகுக்குத் தெரியும். அவர் ஒவ் வொரு முறையும் ஒவ்வொரு காரணம் பறறியே விரதமிருந்தார். இம்முறை தமது ஆத்ம சுத்தங் கருதி அவர் விரதத்தில் தலைப்பட்டுள்ளார். தலைப் பட்டுப் பதினெட்டு நாட்களாயின. இன் னும் எஞ்சியுள்ள நாட்கள் மூன்றே. அடிகள் விரதத்தை வெற்றியுடன் முடித்து வீறுடன் எழுவார் என்பதில் ஐயமில்லை.

காந்தியடிகளுக்கு எப்பொழுதும்தேக சக்தியில நம்பிக்கையில்லை என்பதும்,

ஆத்ம சக்தியிலேயே நம்பிக்கை உண்டு என்பதும் உலகறிந்தனவாம். காந்தியடிகள் ஆத்ம சக்தியை அடிப்படையாகக் கொண்டே ஒவ்வொரு போரையும் நிகழ்த்தி வந்ததை நேயர்கள் அறிவார்கள். உலோகாயதத்தில் மூழ்கியுள்ள இவ்வுலகை ஆத்மசக்திவழியில் திருப்ப வேண்டுமென்றே காந்தியடிகள் முயன்று வருகிறார். அவர்தம் முயற்சி மெல்ல மெல்ல வெற்றியளித்தே வருகிறது. இப்பொழுது காந்தியடிகள் மேற்கொண்டுள்ள விரதம், உலக கவனத்தை ஈர்த்து நிற்ப தொன்றே, அவர் இதுகாறும் ஆத்ம சக்தியில் பெற்ற வெற்றிக்கு அறிகுறி என்று சொல்ல வேண்டுவதில்லை. இன்னும் அவர் தமது ஆத்மசக்திக்கு ஆக்கந்தேட இப்பொழுது விரதம்மேற் கொண்டுள்ளார்.

இவ்விரதத்தை முற்றுவித்து அடிகள் தொண்டில் தலைப்படுவதற்குள் அவர் தந் தொண்டிற்கு முன்னணி வேலைகள் சில நடைபெறுதல் வேண்டும். அவ்வேலைகள், பிரிட்டிஷ் அரசாங்க வாயிலாகவும், இந்திய தேசமக்கள் வாயிலாகவும் சிறப்பாக நடைபெறுதல் வேண்டும்.

பிரிட்டிஷ் அரசாங்கம் காந்தியடிகளை ஓர் அரசியல் கிளர்ச்சிக் காரராகக் கருதுவதால் பல தொல்லைகள் நேர்கின்றன. அடிகளின் அஹிம்சா தர்மப் போரும், விரதமும், இன்ன பிறவும் அரசாங்கத்தின் ஐயப்பாட்டை இப்பொழுது நீக்கி யிருக்கு மென்றே நம்புகிறோம். ஆகவே, இனி அரசாங்கம் காந்தியடிகளை அரசியல் கிளர்ச்சிக்காரராகக் கருதாமலும், சிறைக் கோட்டத்தில் புகுத்தாமலும், அடிகளுடன் கலந்து கடனாற்றினால் இந்தியாவுக்கும் நலன் விளையும்; பிரிட்டனுக்கும் நலன் விளையும்.

இந்தியா தேசம் தனதியல்புக்குப் பொருந்தாத ஹிம்சையில் நாட்டங் கொள்ளாது, காந்தியடிகள் வழி நிற்க உறுதி கொள்வது சிறப்பு. இந்தியா தேசம் தன்மாட்டுள்ள குறைபாடுகளைப் போக்கவும் முயன்று வருதல் வேண்டும். ஜாதி பேதமும், வகுப்பு வாதமும், தீண்டாமையும் தன்னை அடிமைக் குழியில் வீழ்த்தி யிருத்தலை இந்தியா உணர்ந்து நடத்தல் வேண்டும். தீண்டாமையை ஒழிக்கக் காந்தியடிகள் செய்து வரும் முயற்சிக்கு இந்தியா போதிய அளவு துணை நின்று வருகிறதா என்பதை உலகங் கவனியாமலில்லை. தீண்டாமை விரும்பும் ஒரு தேசம் விடுதலை அடைதல் அரிது. உண்மையாக இந்தியா விடுதலையை விரும்பின், தீண்டாமையை ஒழிக்க அது முற்படல் வேண்டும். தீண்டாமை எனனும் ஒரு குற்றத்தை ஒழிக்க இந்தியா ஒரு முகமாக முன் வரின், காந்தியடிகள் விரதம் ஒருவித புதுசக்தியை இந்தியாவிற்கு உண்டு பண்ணியிருக்கிற தென்று உலகங் கொள்ளும்.

காந்தியடிகள் தமது உடலையும் உயிரையும் ஆண்டவன் திருவடியில் கொடுத்தியே விரத மிருக்கிறார். ஆண்டவன் அவரைக் காப்பாளுக.

## ஜோதிடம்

ஸ்ரீமான் கிருஷ்ணசாமியின் ஜோதிட விளம்பரம் மற்றோரிடத்தில் வெளியிடப் பட்டிருக்கிறது. ஸ்ரீமான் கிருஷ்ணசாமி ஒரு சிறந்த ஜோதிடப் புலவர். ஆங்கிலத்திலும் வடமொழியிலும் உள்ள பல ஜோதிட நூல்களை ஆராய்ந்து அவர் அத்துறையில் தெளிவுபெற்றிருக்கிறார். ஸ்ரீமான் கிருஷ்ணசாமி சொல்லும் பலன்களிற் பெரிதும் தவறுதல் நேர்வதில்லை என்பதை நேரில் பல முறை கண்டிருக்கிறோம். நேரிய முறையில் ஜோதிடக் கலையை ஆய்ந்து உணர்ந்துள்ள கிருஷ்ணசாமியின் திறமையையும் புலமையையும் தமிழர்கள் பயன்படுத்தல் நலம்.

Registered No. M. 1500.

# நவசக்தி

‘ எவ்வுயிர்க்கும் அன்பாயிரு ’ ‘ என்கடன் பணிசெய்து கிடப்பதே’

சிலம்பு கரு ஸ்ரீமுக௵ ஆனி௴ பரல் ௪

## பூகோள விலாசம்

(தொடர்ச்சி)

கின்னரர்கள் சித்தர் கெருட ருரகேசர்
பன்னுமலர் தூவிப் பணிந்தேத்த—முன்னதற்கு
முன்னவனும வெற்பீன்ற மொய்குழலா டன்னோடு
மின்னுமரி யாசனத்து வீற்றிருப்பன்—அன்னநகர்க்

**மகாமேருவும் அதைச் சுற்றியிருக்கிற விஸ்தாரங்களும்**

கெண்டிசையுஞ் சூழ விருநான்கு பொற்பதியுண்
டண்டருமங் கெய்தாத வப்பதியில்—தொண்டரெனும்
நந்தி கணங்களெனத நாளுமக லாதிருப்ப
ரிந்தமலைக் கீழ்மே கலையிரண்டிற்—கந்திருவர்
சித்தர் கடவுளர்கள் சேர்ந்திருப்ப ரம்மலைக்கீழ்
உத்தரத்தும் பூருவத்து மொண்குடக்கு—மத்தெற்கும்
வெற்புமொரு நான்குளதாய் மேருகிரிக் கீழ்பாலின்
வெற்பதுதான் மந்தரந்தண் வெண்ணிறமாம்—பொற்பிரபை
யானகந்த மாதனமு மநதகன்றிக் கிற்குடபால்
மேனிலவு நீலநிற மேவுபுலந்—தானெளிரும்
உத்தரத்தின் மாதலேயி னுள்விரைபோற் பாரிசமா
மத்திகிரி நான்கி னளவுரைக்கிற்—சுத்தமுள்ள
பூமியின்கீ ழெண்ணா யிரம்யோ சனைபொருநது
நேமிமுதல் மேலுயர நீகேளாய்—நாமத்
தினையுரைக்கில் நாற்பத் திரண்டா யிரம்யோ
சனையாகு மூன்றுஞ் சரியாம்—நனிவரைகள்
கீழ்ச்சுற் றளவின் கெணிதமுமெண் ணாயிரமாம்
தாழ்க்குமேற் சுற்றளவு தானயுதம்—வாட்கண்ணாய்
மந்தரத்தின் மேலான மத்தியினிற் பூக்கனியாய்த்
தந்த கடப்பமரந் தானிற்கும்—விந்தையுள்ள
தென்றிசையில் வைகுந் திகிரியினிற் சம்புமர
நின்றிடு மேற்றிசையி னின்றிலங்கும்—குன்றமதி
னுச்சி மிசையரசு முத்தரத்திற் குன்றமிசை
[ை]வச்ச பழுமரமும வைகியிடு—மெச்சும்
மரங்க ளுயரம் வகைக்கா யிரமா
முரங்கடருஞ் சாயையுமோர் பாதி—வரங்கடரும்

பூருவத்தின் மந்தரத்தின் பொற்கடம்பின் பூங்கனிநீர்
வார வருண மடுவினிழிந்—தாரும்
பொசிக்க வினிதாகிப் போய்ப்பாயுங் கீழ்பால்
வசிக்குஞ் சயித்திரக்கா வாமென்—றிசைக்கு
மொருநந் தனவனமங் கோஙகுமதன் மத்தி
தருபுண்ட ரீகந் தழைக்க—மருவுகின்ற
தாதமெனு மோடையொன்று தான்பொலிவு தோன்றுமெழிற்
கோதையே யின்னமுநீ கூறக்கேள்—நீதிதரு
தென்மலே யின்னுவற் றிகழ்குடம்போற் பூமலர்நது
வன்மைதரு காயொருகை[ம] [1]மாவளவாய்ப்—பின்பழமா
யக்கனிய தொன்றுக் களவுபதி ஊங்கலசசா
றிக்கு ரசத்து மினிதாகிப்—பக்குவத்தின்
விண்டொழுகித் தேறல் விழமா னசசரசிற்
கொண்டெழுந்து மேருக் குலவரையி—னெண்டிசையுஞ்
சூழவந்து சம்பு நதியெனசசொல் நாமமுறறுத்
தாழாதந் நாவலத்தூர் தன்னினுறும்—வீழுமநத
நீர்பருகு மாந்தர் நிறங்கனக மாகிவய
தோர்பதின்மூ வாயிரம துற்றிருப்பர்—சேரும்
பறவைமுத லாயிப் படியாகு மநத
நறுநீர்க் கரைச்சேற்றை நாளுங்—குறைவிலா
மாற்றதிகச் செம்பொனென வானவர்க டாமணிவர்
சாற்றுநதி யிம்மகிமை தங்குதலாற்—போற்றும்
நவகண்டஞ் சேர்தரைக்கு நாவலந்தீ வென்பர்
இவைகண்ட தின்னமுங்கே ளேழாய்ச்—சுவைகொண்ட
நாவலுறை தென்மலைக்கீழ் நண்ணும் விசித்ரமெனுங்
காவிலகு மத்திக் கினில்மல்கும்—பூவிற்
சிறந்தகுமு தோற்பலமுஞ் சேர்மா னதநீர்
நிறைந்தமடு வும்முளதாம் நேரே—பறைந்த
குடபா லரசின் கொழுங்கனியின் சாறு
வடிவாகிச் சீதோத வாவி—யிடமாய்ப்
பெருக்கெடுத்துப் பால்பழந்தேன் பெய்ததெனச் சென்று
பரிக்குமேல் பாற்றிசையிற் பாயுங்—கிரிக்கீழின்
வைப்பிரச மென்னும வனமுளவா மத்தியினின்
மெய்ப்பாம் விமலோத மென்மடுவா—மொப்பிலா
மாமேரு வுத்தரத்தில் வைகும் வடமரததி
னுமேற் பணைகளின்பா லானெய்தேன்—றூமே
வடக்கனியின் சாற்றுடனே மாமடுவிற் புக்குச்
சடக்கெனவே யுத்தரத்திற் சாரும்—படைக்குந்
திருத்தாக் கியவனமுன் சேருமதன் மத்தி
மருத்தேர் மனோரதமாம் வாவி—பொருத்துமினி

நவகண்ட வரலாறு

அட்ட கிரியி னளவுநவ கண்டவைப்பின்
திட்டமுமே சொல்லக்கேள் சேயிழையே—வட்டமதாம்

(பிரதி)—[1]மாவளமாய்,

பொன்மலைக்குத் தெற்காய்ப் பொருந்துமொன்ப தாயிரத்தில்
மின்னிடத மோரிலக்க மேல்கீழாய்—முன்னீ
ரிருகடையும் புக்கி யிருக்குமுய ரந்தான்
மருவுமிரண் டாயிரமா மானே—விரிவு
மிரண்டா யிரம்யோ சனையாகு மென்பாந
தெருண்டநவ வாயிரத்தின் தெற்குச்—சுருண்டகுழல்
மின்னேபொற் கூடகிரி மேவு மிருதலையுஞ்
சொன்னுரொன் பானயுதத் தூரமெனப்—பின்னேயு
மேலுயர மேலகலம் விண்டநிட தத்தளவாம்
போலுமுன்சொல் யோசனைத்தென பூமியின்கண்—பாலின்
வடிவா மிமையவரை வைகுமத னீளம்
குடகீழ் கடலளவாய்க் கொண்டு—நெடிதாகு
மெட்டயுத மாமுயர மீரிரண்டா மாயிரமாஞ்
சட்டமுறும் பொன்மலைக்குத் தான்வடக்கு—விட்டொளிரும்
நீலமணி போலுமொரு நீலகிரி நின்றிடுமப்
பாலும் வடக்குப் படிகமெனக்—காலு
மழகார் சுவேதகிரி யப்பால் வடக்குப்
பழகுஞ் சிருங்கமணிப் பண்பாய்—நிழலாகு
மிவ்வரைகள் மூன்று மியமன் றிசையிலுறும்
அவ்வரைகட் குள்ள வளவாகுஞ்—செவ்விதிகழ்
மந்தரத்தின் கீட்டிசையில் மாலியவான் றென்வடக்கும்
அந்தமுறு நீலநிட ததைதமுட்டி—யுந்தும்
வரைநீள முப்பானு லாயிரமா மற்றவ்
வரையுயர மாயிரமா மானே—விரிவு
மேலுஞ் சகத்திரமா மேருவுக்கு மிவ்வரைக்குங்
கோலுமொன்ப தாயிரமாய்க் கொண்டிருக்குஞ்—சாலமக
மேருவுக்கு மேல்பால் விளங்குமொன்ப தாயிரத்தின்
வாரருவி மேவுகந்த மாதனமுஞ்—சேரும்
நிடதநீ லத்தளவு நீண்டிருக்கு நீல
வடிவளவு மாலியவான் மானு—மிடமதனில்
மேல்பாற் கடலளவு விள்ளிலெண்ணுன் காயிரமாம்
நீலகிரித் தெற்கு நிடதமட்டுஞ்—சேலனைய

## கேதுமால கண்டம்

கண்ணாய்கேள் முப்பானு லாயிரமாய்க் காணுமதின்
மண்ணோர் புகழ்கேது மாலகண்டம—நண்ணுமதி
யாடவருங் கூடு மரிவையரு முற்பலத்தின்
றோடவிழு மென்மலரின் றொன்னிறமாய்—நீடும்
வருக்கைக் கனிநுகர்ந்து வாழ்வா ரயுத
மிருக்குநடுக் கண்டமதி னெல்லை—முருக்கிதழீர்
செங்கனக மேருத் திசைக்கொன்பா னாயிரமாய்த்
தங்கியநீ லந்நிடதந் தன்னோடும்—பொங்குகந்த

## இளாவிருத கண்டம்

மாதனமும் மாலியவான் மன்னுகிரி நான்கினுக்கு
ளேதமிலாக் கண்ட மிளாவிருத—மீதமரும்

மாந்தர் வனச மலரி னகவிதழ்போற்
சார்ந்த நிறமுடையார் சம்புபல—மாந்தியும்பன்
மூவா யிரவருட மூப்புநரை நோய்களின்றிச்
சாவாம லவ்வளவுந் தானிருப்பர்—பூவாரும்

### பத்திராச்சுவ கண்டம்

மாலியவான் கீழ்பாலின் வாழ்கேது மாலகண்டம்
போலு மளவாய்ப் பொருந்தியது—சீலமுள்ளோர்
கண்டபத்தி ராச்சுவமாங் கண்டமதின் வாழ்மாந்தர்
விண்ட மதியைநிகர் மெய்யினராய்க்—கொண்ட
கருங்குவளைப் பூநுகர்ந்து காமுகரு நுட்ப
மருங்கினரு மோரயுதம் வாழ்வார்—கருங்குழலீர்
நீல கிரியினுக்கு நேர்வடக்கு வெண்மைதருஞ்
சீலச் சுவேதவரைத் தெற்காக—மேல்கீழ்

### பிரமிய கண்டம்

கடலளவு நீண்டிருக்குங் கண்ட பிரம்ய
மிடமாயக் கண்டமதி லேவாழ்—மடவாரு
மைந்தர்களும் வெள்ளி வடிவாய் வடமரங்க
டந்த கனிநுகர்ந்தே சந்ததமுஞ்—சிந்தைமகிழ்ந்
தீராறு மாயிரத்தி னெல்லையிவர்க் காயுளித
னேராஞ் சுவேதவரை நேர்வடக்குக்—காரார்

### இரண்மய கண்டம்

சிருங்கவரைத் தெற்காய்த் திரைக்கடலி னீண்ட
மருங்கி னிரண்மயமா மானே—நெருங்கிவளர்
மன்பதைகள் யாரு மதியனைய மெய்யினராய்த
துன்பமுறு மூப்புத் துகடிலா—ரின்பமுடன்
சம்பீர மென்பலங்க டாநுகர்வர் ராயுணிலை
கொம்பேகே ளோரயுதக் கூறதன்மே—லம்புவியி
லோரைஞ்ஞூ றுண்டா மெனவுரைப்ப ரொண்சிருங்க
நேர்வடக்குச் சிந்து நிலவரையு—மோரொன்ப
தாயிரமாம் யோசனையா மாழிவளைந் தோங்குதலாற்
றாயகடன் முத்திசையாய்த் தோன்றியிடு—மேய

### குரு கண்டம்

குருகண்ட மாமிதனிற் கூர்ந்திருக்கு மாநதர்
மரகதத்தின் றன்னொளியா மானே—யொருவயிற்றிற்
பெண்ணுணுங் கூடப் பிறந்தே கலந்திருப்பர்
தண்ணார் பலகனிக டாநுகர்வர்—எண்ணுகு
மாயு ளொருபதின்மூ வாயிரமா மாண்டிருப்பர்
சேயிழையே பொன்மலைக்குத் தென்றிசையிற்—சாயாதே
நின்றிலங்கு நீண்ட நிடதகிரி நேர்தெற்குக்
குன்றேம கூடக் குலவரைக்குத்—துன்றும்

### அரிகண்டம்

வடக்குக்கீழ் மேல்பாலின் வாருதியின் மட்டுங்
கிடக்குமரி கண்டமதிற் கேள்வர்—மடக்கொடியீர்
வெள்ளிநிற மேனியராய் வெண்கரும்பின் சாறருந்தி
யுள்ளவய தோரயுத முற்றிருப்பர்—தெள்ளியதோர்
பொற்கூடத் தெற்குப் புகழிமைய நேர்வடக்கு
நிற்குங் கடலிரண்டி னீளமதாய்ச்—சொற்கினிய

### கிம்புருட கண்டம்

கிம்புருட கண்டமதிற் கீர்த்திபெற வாழ்மாந்தர்
செம்பொ னுருவமைந்து தேசினுட—னைம்பா
ரிறவிக் கனிநுகர்ந்தே யின்பமுட னுயுள்
குறையாம லோரயுதங் கொள்வர்—முறையாகச்
சொன்னகண்ட மெட்டுஞ் சுகபோக பூமியிதில்
மன்னு முகிலும் வழங்காம—லெந்நாளு
மல்லல்வள மோங்கி வருணமொரு நான்குமின்றிச்
சொல்லுபிணி மூப்புத் துயரின்றி—யெல்லவரு
மாதி யுகத்தி லமைதிபோ லென்றென்று
மேதமிலாப் போகநுகர்ந் தேயிருப்பர்—மேதினியிற்

### பரத கண்டம்

சொல்லு மிமையந் தொடங்கியே தென்கடல்மட்
டெல்லையொன்ப' தாயிரவி யோசனையி—னல்ல
பரதகண்ட மாகுமிந்தப் பார்வாழு மாந்தர்
உருவமும்வெவ் வேறுகு மூணும்—பொருவரிய
நெல்லிறுங்கு சாமை நிறைவரகு கேள்வரகு
நல்லதினை கம்பு நனிவாலி—புல்லரிசி
மாட முதற்பயற்றின் வற்கமுடன் காயிலைக
ளோடுமா னுமை யுடும்புமுதல்—நாடதனிற்
கோதிலாச் சீவசெந்து கோடான கோடியும்பின்
னேது மனேக வுணவாகுந்—தீதிலிவர்க்
காயுணிலை தானிமைத்த லானதுமூ வாறுகொண்டால்
மேயதொரு காட்டை யெனவிளம்புந்—தூயவந்தக்
காட்டைமுப்பான் கொண்டாற் கலையாகு மக்கலையின்
கூட்டமுப்ப தோர்முகிர்த்தங் கொள்ளுமே—நீட்டியதோ
ரம்முகிர்த்த முப்பதுகொண் டாலொருநா ளநநாளுஞ்
செம்மையின்முப் பானுமொரு திங்களென்பர்—இம்மையினிற்
றிங்களோ ராறுகொண்டாற் சேயிழையீ ரோரயன
மங்கயன மும்மிரண்டோ ராண்டாகும்—பஙகமிலா
ஆண்டுமொரு நூறுமென் றுரணங்க டானுரைக்கும்
நீண்டநூ றுண்டும் நிலையல்ல—ஈண்டவர்முன்
செய்கருமங் கட்கீடாய்ச் சென்மித்துக் காசினியில்
எய்துமற்ப வர்யுளினு மீதன்றி—மெய்தருநற்
றீர்க்கத்து மத்திமத்துந் தேகஞ் சிதைநதிடுவர்
நீர்க்குமிழி போலுமிது நிச்சயமாம்—பார்க்குளிவர்

## மரணக்குறி

கால மறிவதற்குக் காலங் குறியிடங்கேள்
சீலமுள்ள பிங்கலையிற் சேர்வாயுச்—சாலவொரு
நாளியங்கில் மூவாண்டி னம்பா துயிரிழப்பர்
மீளா திரண்டுதின மேயோடில்—நீளாதே
யீராண்டிற் சண்ட னெதிரிடுவ ளுள்மூன்றுக்
கோராண்டாம் பின்னு முபையத்தில்—நேராக
வையிருநா ளோடி லறுமதியிற் ருனிறப்பர்
வெய்யினோர் வாயில்நன்னீர் விட்டுமிழின்—றய்ய தனுத்
தோற்ருதே லோராண்டிற் ரூற்பருயிர் தோற்றுதனுத்
தோற்ற மிரண்டுதுண்டாய்த் தோற்றியிடிற்—சாற்றுமதி
யாறளவின் வாணு ளழிவரந்த விற்றுண்டிற்
பேறுடைய காந்திருவப் பெண்ணொருத்தி—யேறி
யிருககவே காணி லியமன் பதியில்
இருக்குமதி மூன்றி னிறப்பர்—பெருக்கவரு
மும்மலமுந் தான்குறையில் மூந்நான்கு திங்களினில்
மென்மையுள்ள சண்டனகர் மேவிடுவர்—மை[ம்]மதமா
விண்மீதிற் காணில் விளிவாறு மாமதியிற்
றண்மே லசையாமற் றன்னிழல்தான்—மண்மீ
தசையவே காணி லசையா வுயிர்தென்
றிசைசேரு மோர்பகலிற் றிண்ணம்—வசையிலாச்
சந்திரனைப் பூரணையிற் ருனெய்யைச் செப்பகலில்
முந்தவிட்டுப் பார்ககில் முழுமதியம்—விந்தையுடன்
தென்பாற் குறையிற் சிதைவொரு பட்சத்திற்
பொன்மதியங் கீழ்பாகம் பொன்றிவிடின்—றன்சீவன்
திங்களொன்றி லந்தகனூர் சென்றுவிடு மேல்பாக
மங்கியிடில் நாலுமதி யில்மரணந்—தங்குமதி
யுத்தரத்திற் ருன்குறையி லோங்குமுயிர் மும்மதியிற்
றத்தரமாய்ச் சய்யமினித் தான்சேருஞ்—சுத்தவிதழ்
நாக்கு மிடறு நசையறவே தான்புலரிற்
சே[ர்]க்குமறு திங்களினிற் றென்புலத்தில்—நாக்குதடு
பல்லுண்ணுத் தாலு பரிவாய்க் கறுப்பேறிற்
கொல்லுமறு திங்களினிற் கோதையே—நல்ல
புனலாடிற் கைகாலிற் புள்ளியிடை யங்கம்
நனையாதே லோர்மதியி னந்துந்—தனதுருவைத்
தற்பணத்தைப் பார்க்கிற் தலைவயிறு தோன்றுதே
லற்பவுயி ரோர்மதியி லற்றிடுவர்—நற்பகலோன்
முன்னிரண்டாய்த் தோன்றில் முடிநதிடுவ ரோர்மதியிற்
றன்னுதனு நாற்றிசையுந் தோன்றியிடிற்—பொன்னசலம்
போன்றபக ரோர்திபுரம் புக்கிடுவர் பக்கமொன்றி
னேன்றபே யாடல்பக லேகாணிற்—றேன்றுத
காந்திருவ மாநக ரங்கனம திற்றேன்றி
ஞேந்திதலை மீதில்விழி ஞெண்டொடியே—மாந்தரவர்
சின்னுளி னந்தகனூர் சேர்ந்திடுவ ராதுலர்கட்
கெந்நாளு மீவோ னிலையெனினும்—பின்னேது

(தொடரும்)

# சமரச சன்மார்க்க போதம்

(தொடர்ச்சி)

## VIII கலம்பகம்

[இப்போதம் நூலாகும்போது கீழ் வருவன ஆங்காங்கே பொருந்திய இடங்களிற் சேர்க்கப்படும்.]

21. உடல், இறைகோயில். அதை நோய்க்குடிலாக்குவது தவறு. அதனால் உயிர் நலனுக்குக் கேடு நேரும்.

22. நல்லுடலுக்கு அறிகுறி மலச்சிக்கலின்மை. மலச்சிக்கலே எல்லா நோய்கட்கும் தாயகம்.

23. தங்கு மலம், பழமை ஆக ஆக, அது நஞ்சாகி, நாடி நரம்புகளில் தேங்கி மூளையையும் பற்றும்.

24. மலநஞ்சேறப் பெற்ற மூளையினர்க்கு அமைதித் தியானங் கூடுதலரிது. அவர்க்குத் தியானங் குலைந்து கொண்டே போகும்.

25. தியானம் உடல் நலனுக்கும் உயிர் நலனுக்கும் வேண்டற்பாலது. இதுபற்றிப் பின்னுங் கூறப்படும்.

26. மலச்சிக்கலால் வெம்மை எழும். அவ்வெம்மை பலவிதத் தீயொழுக்கங்கட்கு வழிகோலும்.

27. மலச்சிக்கல் உறாதவாறு உடலைக் காப்பது அறிவுடைமை. உடற்பயிற்சியும், பொருந்திய உணவும், நலனெண்ணமும் மலச்சிக்கல் உறாதவாறு காக்கும். உணவில் சிறப்பாகக் குறிக்கத் தக்கன கீரையும் பழமும்.

28. மலச்சிக்கல் உறின், அதை மருந்தால் போக்க முயல்வது, தற்காலச் சாந்தி தேடுவதேயாகும். மருந்தால் பழைய மல நஞ்சு அறவே நீங்காது.

29. அவரவர் உடல் நிலைக்கேற்றவாறு வாரத்துக் கொருமுறையோ மாதத்துக் கொருமுறையோ நோன்பிருப்பது நலம். நோன்பிகட்கு மலஞ் சிக்குதல் இல்லை.

30. மலச்சிக்கல் உறின், அதைப் போக்கும் பேராற்றல் நோன்புக்கு உண்டு.

31. நோன்பு முறைப்படி இருத்தல் வேண்டும். நோன்பிருத்தற்கு முன்னாள், பகல் உணவு கொண்டு, அன்றிரவு எவ்வுணவுங் கொள்ளலாகாது. மறுநாள் காலை எழுந்து, காலைக்கடன்களை முடித்துக்கொளளுதல் வேண்டும். நோன்பு வேளையில் சோர்வு குமட்டல் மயக்கம் நேரும்போதெல்லாம் நீர் அல்லது உப்பு கலந்த நீர் அருந்தல்வேண்டும். நீர் அருந்தாமல் இருப்பது தவறு. அருந்தும் நீர், சோர்வு குமட்டல் மயக்கங்களைப் போக்குவதுடன், உட்கருவிகளை வறள ஒட்டாமல் காத்து, அவைகளில் ஏறித் தேங்கி ஊறியுள்ள மல நஞ்சு கீழிறங்கத்துணைசெய்யும். நோன்பின் போது தீயொழுக்க நினைவுந் தோன்றலாகாது. அந்நினைவு நாடிநரம்புகளை அரித்துப் பாழாக்கும். அச்சமயத்தில் தெய்வத் தியானஞ் செய்து கொண்டும் தெய்வக் கதைகளைக் கேட்டுக்கொண்டும் இருப்பது நலம். காற்றுளிபடாத இடங்களில் இருத்தலாகாது. முறைப்படி சூரிய ஸ்நானம் செய்வது தவறுதலாகாது. மூன்றும் நாள் வழக்கம்போலக் காலைக் கடன்களை முடித்து நோன்பு கழிக்கப் புகுதல் வேண்டும். நோன்பைப் படிப்படியாகக் கழித்தலவேண்டும். திடீரென வழக்கமாகக் கொள்ளும் பரு உணவுகளைக் கொள்ளுதல் பெருந்தவறு; கொள்ளின் நோன்பின் பயனுங் கெட்டு, மெலிந்த உட்கருவிகளெல்லாம் இடர்ப்பட்டு, நலத்துக்குப் பதிலாகத் தீமை விளையும். முதலாவது நீர் அருந்திப், பின்னே பழச்சாறு அருந்தி, பின்னே நீர் மோர் கஞ்சி போன்றன அருந்தி, பின்னே வழக்க உணவு கொள்ளலாம். இஃது ஒருநாள் நோன்பு முறையாகும். விரிவு, நோன்பு நூல்களிற் காண்க;

இயற்கை மருத்தவரிடங் கேட்டுத் தெளிக.

32. நோன்பால் பண்பட்ட நல்லுடல் இயற்கை வாழ்வுக்குப் பொருத்தமானது. அந்நல்லுடல் தியானத்துக்குப் பெருந்துணை செய்யும்.

33. நல்லுடலுக்கு மரஞ் செடிகளிடை வாழ்வதுந் தேவை.

34. மரஞ் செடி முதலிய தாவரங்கட்கும் உயிருண்டு.

35. ஒவ்வொரு வீட்டிலும் மரஞ் செடிகள் சூழ்ந்திருத்தல் வேண்டும்.

36. பாதைகளின் இருபக்கமும் மர வரிசைகள் அமைந்திருத்தல் வேண்டும்.

37. ஒவ்வோர் ஊரிலும் பயிர் பசைகள் பரவி இருத்தல்வேண்டும்; சோலைகள் அடர்ந்து நிற்றல் வேண்டும்.

38. காடுகள் நன்முறையில் பாதுகாக்கப்படுதல் வேண்டும்.

39. நாட்டின் உயிர் காடு; நாட்டைக் காப்பது காடு.

40. ஓரூரின் ஜனத் தொகையைப் பார்க்கிலும் மரஞ் செடிகளின் தொகை அதிகமாயிருத்தல் நல்லது.

41. மரஞ் செடி கொடி முதலியன பிராணவாயுவை உமிழ்கின்றன; கீரை, பூ, காய், கனி முதலியவற்றைக் கொடுக்கின்றன; பசுமைக் காட்சியை வழங்குகின்றன; பறவைகளுக்கு இடந் தருகின்றன; வேறு நலன்களையும் அளிக்கின்றன.

42. பசுமைக் காட்சி வழங்காத ஊர் பாழ். அங்கே நோய்கள் மிகும். பசுமை, மூளைக்கும் நாடி நரம்புகட்கும் நலஞ் செய்வது. பசுமை, வெம்மை தணிக்கும் இயற்கை மருந்து.

43. நகரங்களில் பிணிகள் பெருகுதற்குக் காரணங்கள் பல உண்டு. அவைகளுள் ஒன்று மரஞ் செடி பயிர் பச்சை முதலியன பெரிதும் இன்மை.

44. மரத்தடியில் இருந்தோ நின்றோ உலவியோ கதிரொளியில் மூழ்குவது (சூரிய ஸ்நானஞ் செய்வது) சிறப்பு. கதிரொளி, பச்சிலைகள் வாயிலாக உடலில் படர்வது நல்லது.

45. மக்கள், மரஞ் செடி முதலியவற்றை ஓம்புவது தங்களை ஓம்புவதாகும்.

46. வாயில்லா ஏழைப் பிராணிகளை வதைப்பது நியாயமன்று.

47. இளமையிலே கல்வி பயில முயல்வது நலம்.

48. இளமை, பின்னெழும் வாழ்வு நிலையத்திற்கு அடிப்படை.

49. கல்வித் துறைகள் பல. அவைகளில் மக்கள் தத்தம் இயல்புக்கேற்ற ஒன்றைக் குறித்துக்கொண்டு, அதைச் சிறக்கப் பயிலல்வேண்டும். பிறதுறைகளில் ஒல்லுமவகை பொது அறிவு பெற முயல்வது நல்லது.

50. தொழிற் கல்வியும் கலவியின் பாற்பட்டதே.

51. கல்வி, பெண் ஆண் என்னும் இருபாலார்க்கும் உரியது.

52. ஒத்த கல்வியுடைய ஒருவரை ஒருவர் மணந்து கொள்வது வாழ்வுக் கழகு.

53. அறிவியற் கலையை வாழ்வு நலத்துக்குப் பயன்படுத்துவது ஒழுங்கு. அக்கலையைப் போருக்கும் கொலைக்கும் பயன்படுத்துவது தவறு.

54. அறிவியற் கலை வாழ்விற்குப் பயன்படு முறையில் வளர்ந்துவரின், அதனால் மன்பதைக்குத் தீங்கு விளையாது. அக்கலைபோருக்கும் கொலைக்கும் என்று வளர்நதுவரின், அதனால் மன்பதைக்குத் தீங்கு நேரும்.

55. அறிவியற்கலை நன் முறையில் வளரவளர, இயற்கையை உடலாக் கொண்ட இறை உண்மையை எளிதில் உணர்ந்து உறுதி பெறுதல்கூடும்.

56. எவ்வெம்மொழியில் எவ்வெக்காவியங்கள் தோன்றுகின்றனவோ, அவ்வம்மொழியில் அவ்வக்காவியங்களைப் பயின்றால் காவிய இன்பத்தை நுகர்தல் கூடும்.

57. ஒரு மொழியில் தோன்றிய காவியத்தை மற்ருெரு மொழியில் பெயர்த்துப் பயின்ருல் காவிய இன்பத்தை நுகர்தல் இயலாது.

58. மொழி பெயர்ப்பில் காவியக் கதைகள் அடங்கிவரும்; காவிய இன்பம் அடங்கி வாராது.

59. காவிய இன்பத்துக்குத் தாய்மொழிப் பயிற்சி இன்றியமையாதது.

60. அறிவியற் கலைக்கு மொழிக் கட்டுப்பாடு வேண்டுவதில்லை. அதை எம்மொழி வாயிலாகவும் பயிலலாம்.

61. தன்னல அழிவு, படிப்படியாகப் பெண் ஆண் கூட்டுறவால் நிகழ்தல் வெள்ளிடைமலை. அவ்வழிவு தனித்த வாழ்வில் எங்ஙனம் உறும்?

62. தனித்த வாழ்வில் தன்னலம் அழிதல் அரிது. ஒருவேளை அவ்வாழ்வில் தன்னலம் பெருகினும் பெருகும்.

63. தன்னலத்தை நீப்பது துறவு. அது பெண் ஆணின் அன்பு வாழ்க்கையால் நிகழ்கிறது. ஆகவே, பெண் ஆணை நீத்தும், ஆண் பெண்ணை நீத்தும் வாழ்வது மட்டும் துறவாகாது.

64. இயற்கை அறத்தை இல்லறம் என்ருல் என்ன? துறவறம் என்ருல் என்ன? பெயரைப் பற்றிய போராட்டம் வேண்டுவதில்லை. வேண்டுவது தன்னலத்தை அறுப்பது.

65. சில சமயங்களில் ஆட்சி முறை தவறுதலாலும், வேறு சில காரணங்களாலும் உடல் நலம் வாய்க்கப்பெற்றுத் தொழில் புரிய ஊக்க முடையவரும், தொழில் கிடையாமையால் வருந்தல் நேரும். அந்நிலையில் அவர்க்கு உதவி புரிதல் பாவமாகாது.

66. தொழில் கிடையா நிலைமையை மாற்றி, வறுமையைப் போக்க, அறிஞர்கள் முயலுதல் வேண்டும்.

67. சன்மார்க்கம் நேரிய முறையில் மன்பதையில் பரவிஞல் தொழில்கிடையாது வருந்தும் நிலை நேராது. இது குறித்துப் பின்னும் விளக்கஞ் செய்யப்படும்.

68. பிறப்பில் உயர்வு தாழ்வு கருதும் இழிவு நாளடைவில் தீண்டாமை முதலிய கொடுமைகளைப் பெருக்குவதாகிறது.

69. மக்களுக்குள் தீண்டாமை கருதுவது மடமை.

70. கடவுள், தீண்டுங் கடவுள் தீண்டாக் கடவுள் என்று இரண்டுபட்டில்லை. ஒரு கடவுளில் தீண்டாமை எங்கிருந்து பிறக்கும்?

71. பிறப்பில் உயர்வு தாழ்வும், தீண்டாமையும கருதுவோர், அன்புக் கடவுளின் அன்பரா யிருத்தல் முடியாது.

72. கல்வி அறிவு ஒழுக்கம் முதலிய சிறப்புக்களில் எல்லாரும் ஒத்திருப்பதில்லை. இவைகளில் மக்கள் வேற்றுமைப் படுதல் கண்கூடு.

73. கல்வி அறிவு ஒழுக்கம் முதலிய சிறப்புக்கள் பொது உடைமை. அவை பிறப்பை ஒட்டின அல்ல.

74. தன்னுயிரைப்போல் மன்னுயிரைக் கருதுவது சகோதர நேயம்.

75. சகோதர நேயம் பெருது தெய்வத் தன்மை அடைதல் இயலாது.

76. மலயோக வகைகள் பல. மூச்சைப் பிடிக்கும் மலயோகம், மூச்சைப் பிடியாத மல யோகம், கண் காது முதலியவைகளின் வழிச் செய்யும் மல யோகம் முதலிய பல வகைக ளுண்டு. அவைகளில் சிலவற்றில் சில சமயங்களில் ஒலி கேட்டலும் ஒளி தோன்றலும் நிகழும். இவைகளைக் கொண்டு சில மல யோகிகள் பெருங் கோட்டை கட்டி உலகை வஞ்சிப்பதுண்டு. அவர்களுக்கு உலகம் மிக எச்சரிக்கையாயிருப்பதாக.

77. மூச்சைப் பிடிப்பதில் தவறுதல் நேர்ந்தால் நோயுண்டாகும். அந்நோயாளிகட்கும் சில வேளைகளில் ஒலி கேட்பதுண்டு. இதற்குக் காரணம் நுரை ஈரலின் நலிவும், மண்ணீரலின் சவலையும், பிறவுமாகும்.

78. நோய்வாய்ப்படாத நல்ல மல யோகிகள் சிலருக்கும் ஒலி கேட்பதுண்டு. அவ் வொலி அவர்களது

பயிற்சி மிகுதியால் நரம்புக் குழாய்களி னின்றும் பிறப்பதாகும். அவ்வொலி இயற்கையினூடு பரந்து நிற்கும் அருள் நாதம் அன்று.

79. மல யோகத்தில் தோன்றும் ஒளி, பயிற்சி மிகுதியால் நுண்ணிய நரம்பொலிகளின் உராய்தலால் தோன் றும் பூத ஒளி. அஃது அருள் நாத ஒலிக்கு ஊற்றாயுள்ள ஞான ஒளி அன்று.

80. மலயோக ஒலிக்கும ஒளிக்கும் அஞ்ஞான வேரைக் கல்வி அறுக்கும் ஆற்றல் கிடையாது.

81. கொலை, களவு, கள், காமம், பொய் முதலிய பாவங்களில் தோய்ந்து கிடக்கும் ஒருவன், மல யோகத்தில தேர்ச்சி பெற்ற ஒருவரிடம அணுகி, அவ் யோகப் பயிற்சி செய்துவருவா னாயின், அவனும் ஒலி கேட்கவும் ஒளி தோன்றவும் பெறுதல் கூடும். அவ் வொலியும் ஒளியும் மேல் நிலை உய்க்கும் எனில் உலகில் ஒழுக்கமே வேண்டுவ தில்லை யன்றோ? ஆகவே, மலயோக ஒலி ஒளி அளவில் நின்று, உலகம் ஏமாறாமல் இருப்பதாக.

82. இயற்கைத் தியானத்துடன் உயிர்த்தொண்டுஞ் செய்து வருதல் வேண்டும். இஃது இயற்கை வழிபாட் டின்பாலது.

83. மன உணர்வு மாயும்போது, சில சமயங்களில், போராட்டம் சோதனை முதலியன நிகழும். அவைகளுக்கு எளி மையாகாத உறுதிவேண்டும். அவ் வேளையில் குருநாதன் தோன்றித் துணை செய்வன்.

84. குருநாதன் தோன்றி உண்மை விளக்கியதும் மன உணர்வு முற்றும் மாயும்; அஞ்ஞானவேர் அறுந்துபடும்; "நான்" என்பது சாகும்; உள்ளொளி எழும்.

85. அரும்பு மலரானதும் மணம் எழுவது போல, மனம் மறைந்ததும் உள்ளொளி எழும்.

86. உள்ளொளியும், புறத்தே தோன் றும் இயற்கை அழகொளியும் ஒன்றும் போது தனித்த இறைவின் தொடர்பு விளங்கும். அதற்கு மேல் நேர்வது சொல்லுக் கடங்காதது.

87. இயற்கையிலுள்ள சக்திகள் பல. அவைகளுள் ஒன்று அருட் சக்தி. அச் சக்தி நிலவாத இடம் இல்லை. அது, நிஷ்காமிய நெஞ்சில் நுழையத் துடி துடித்துக்கொண்டிருக்கும். இயற்கைத் தியானத்தால நெஞ்சம் நிஷ்காமியம் பெறுந்தறுவாயில், அச்சக்தி நெஞ்சில் நுழைந்து கொள்ளும்; நுழைந்து கொண்டு குருநாதன் வருகைக்கு வழி கோலும்.

88. மன உணர்வினர்க்கு மிக அரி யனவாகத் தோன்றுவன வெல்லாம், உள்ளொளியினர்க்கு மிகஎளியனவாகத் தோன்றும். இவர்கள் நிகழ்த்துஞ் சில செயல்கள் மன உணர்வினர்க்குச் செயற்கருஞ் செயல்களாக அதாவது அற்புதங்களாகத் தோன்றும்.

89. உள்ளொளியும் புற வொளியும் ஒன்றித் தனித்த இறைவின் தொடர் பை விளக்கி, அதற்கு மேலும் விளக் கும் அநுபூதி நிலையை மன உணர் வினர் ஆராய்ந்து ஆராய்ந்து, மண்டை யை உடைத்துக்கொள்ள வேண்டுவ தில்லை. அரிய காலத்தை அவர்கள் அவ் வழியில் போக்குவது வீண்; அவ்வநு பூதி நிலையை எளிதில் கூட்டவல்ல இயற்கை வழி நிற்க முயல்வது அறி வுடைமை.

90. இயற்கை நெறியே சாலச் சிறந்தது; எளியது; பொருந்தியது. இயற்கை நெறி நின்று உலகம் இன் புறுவதாக.

91. குருமார்கள் வரலாற்றை ஆராய் ந்துகொண் டிருத்தல் அநாவசியம். அவர்களைக் காண நேரும்போது அவர் கள் வரலாறு விளங்கும்.

92. கடவுளுக்கும் மக்களுக்கும் இடையில் குருமார்கள் இருத்தல் உண் மை.

93. குருமார்கள் நிலை, புலனறிவு ஆராய்ச்சிக்கு எட்டாதது. அவர்கள் நிலை, தியான முதிர்ச்சியில் மலரும் மாசற்ற மெய்யுணர்வில் விளங்குவது.

94. உணர்வு இருவகைத்து. ஒன்று பொய்யுணர்வு; மற்றொன்று மெய் யுணர்வு.

95. பொய்யுணர்வு நிலையுதலில்லாதது; மாறுவது. மெய்யுணர்வு நிலையுதலுடையது; மாறுதலில்லாதது.

96. மக்கள் மெய்யுணர்வு பெறும் வரை, பொய்யுணர்வு கொண்டு ஆராய்ச்சியில் தலைப்படுகிறார்கள். அவ்வாராய்ச்சியால் நிலைத்த முடிவுகள் ஏற்படுவதில்லை. அவரவர் கலவி அறிவு அநுபவத்துககேற்ற அளவில் ஆராய்ச்சி முடிவுகள் தோன்றும். ஒருவனே ஒருபோது கண்ட முடிவை மற்றொரு போது மாறுபட உணர்ந்து, அதை மறுத்து வேறொரு முடிவு பெறுகிறான். ஆகவே, மெய்யுணர்வு பெறும் வரை நிலைத்தமுடிவு புலப்படுதல் அரிது.

97. பொய்யுணர்வு, புலனறிவினின்றும் பிறப்பது. புலனறிவுக்கு எட்டாத நுட்பங்கள் பலவுள்ளன. அவைகள் புலனறிவு ஆராய்ச்சிக்கு எட்டாதன. அவைகளைப் புலனறிவால் ஆராய்நது ஏமாறுவது அறிவுடைமை யாகாது.

98. குருமார்களின் அருள் மொழிகளிலும், அவர்களைக் கண்ட ஞானிகளின் உரைகளிலும் உறுதியும்அன்புங் கொண்டு ஒழுகி, உண்மை காண முயல்வது அறிவுடைமை.

99. சன்மார்க்கக் கலப்பில்லாத உலகியற்றுறையோ உயிரியற் றுறையோ இல்லை.

100. சன்மார்க்கம் உலகியலுக்குப் புறம்பான தன்று.

101. சன்மார்க்கத்தை விரித்துக் கூறுவது தெய்வ மறை.

102. தெய்வ மறையின் நிலைமூன்று. அவை மோனம், ஒலி, மொழியென்பன.

103. மோனத்தினின்றும் ஒலியும், ஒலியினின்றும் மொழியும் பிறக்கும்.

104. இம்மூன்று நிலையும் குருமார்கட்கு உரியன.

105. குருமார்கள் பருவுடல் தாங்கும் போது, அவர்கள் வாயிலாகத் தெய்வமறை மொழிவடிவில் வெளிவரும்.

106. தெய்வமறை பல விடங்களில் பல மொழியில் பலவாறு இறங்கியிருக்கிறது. அவை யாவும் தெய்வத் திருவருள் மொழிகளே. அவைகள் உலகில் பல பெயர்கள் பெற்றிருக்கின்றன.

107. ஐயந்திரிபு மயக்கங்கள் நீங்கி விளக்கம் பெறுதற்குக் குருமார்கள் வாயிலாகப் பிறந்த தெய்வ அருள் மொழிகளைப் பயில்க; பயின்று அவைகளின் வழி நிற்க.

108. இச் சமரச சன்மார்க்கபோதம் சுருங்கிய முறையில் யாக்கப்பட்டது. பல வேறு காலங்களில் பலவேறு இடங்களில் தோன்றி, அவ்வக கால தேச வர்த்தமானங்களுக்கேற்ற முறையில் குருமார்கள் வெளியிட்ட கருத்துக்களின் ஒருமைப்பாடு, அடியேன் உணர்வில் விளங்கிய முறைப்படி இந்நூற்கண் தொகுத்துக் காட்டப்பட்டது.

109. அடியேன் பல துறைகளில் நின்று யாத்த நூல் பலவற்றிலும் சமரச சன்மார்க்க உயிர் நாடி ஓடிக் கொண்டிருக்கும். அந்நூல்களின் சாரம் இந்நூல்.

திரு. வி. கலியாணசுந்தரன்.

# நமது சிந்தனை

[திரு. சி. சதாசிவனார்]

V

## இன்பம்

"ஈண்டு மகன் இயற்றும் நல்வினைகளின் பயனைச் சுவர்க்கத்தில் இன்பமாக நுகர்கின்றான்; தீவினைகளின் விளைவைத் துன்பமாக நரகத்திற்றுய்க்கின்றான். சுவர்க்கம் என்பது மேலே ஆகாயத்தில் எங்கோ மிளிர்கின்றது. நரகம் பாதாளத்தில் எங்கோ கிடக்கின்றது. மக்கள் இறந்த பின் அவரவர் புரிந்த செயற்குத் தகுந்த இடத்தை எய்துகின்றனர்" என்று பழம் புராணங்கள் கூறுகின்றன.

இப்பழங்கதைகள், மக்களது குழவிப் பருவத்தில் - அவர்களது அறிவு விளக்கமுறாத காலத்து - அவர்களைப் பயமுறுத்தி, நற்றுறைகளில் திருப்பும் பொருட்டு அறிவுடையோர்களால் வகுக்கப்பட்ட கட்டு. இடக்கு மிக்க குழவிகட்குப் பூச்சாண்டிப் பயங்காட்டி அடக்குவது பழக்கமல்லவா? ஆனால் புதுக் கல்வி மலிந்து, நூதனம் பரந்து, பல் துறைகளிலும் அறிவு சிறந்து மிளிரும் இக்காலத்தே இக்கதைகள் மனதைக் கவரா.

நாம் இயற்றும் செயல்களின் கனிவை இங்கேயே இப்போதே நுகர்கின்றோம். இறந்த பின் வரும் மறு பிறப்பிலல்ல. நரகம் அல்லது சுவர்க்கத்திலல்ல. இவை இரண்டும் நமது மனதினது துணை நிலைகள். நரகம் பாதாளத்திலும், சுவர்க்கம் ஆகாயத்திலும் இருக்கின்றன என்பதிலும் ஒரு சிறிது உண்மை காணலாம். விலங்கு மனம் எண்ணுவன அனுபவிப்பன யாவும் மண்ணைப் பற்றியதாகவும், கீழ் நோக்கியதாகவும் நின்று மனிதனைக் கீழே இறக்கித் துன்பம் நல்குவன. அறிவு கூர்ந்த தெய்வ மனம் சிந்திப்பன, நுகர்வன, தெய்வ மணங் கமழ்ந்து, மனிதனை மேனிலைகட்கு உந்தி, உண்மை இன்பு பயப்பன.

இன்ப துன்பம், சுவர்க்க நரகம்; இவ்விரட்டைகள் நமது உள்ளத்தின் இரு நிலைகள். இன்பு நமக்குப் புறத்தே தோன்றும் ஒரு பொருளிலாதல், நிகழ்ச்சியிலாதல் இல்லை. அது நம் மகத்தி லரும்பும் ஓர் உணர்ச்சி.

வானம் பொழிகின்றது. ஒருவன் இயற்கை விநோதத்தை உன்னிஉன்னி, ஆண்டவனது இன்னருள் மன்பதையோர் நலனெய்த, மழை யுருக்கொண்டு விண்ணினின்றிழியும் திறனை நினைந்து நினைந்து, வியப்பெய்தித் திண்ணையிலமர்ந்து இன்னிசை மீட்டத் துவக்குகின்றான். மற்றொருவன் இருட்டறையில், கணப்படியில், கம்பளிக்குள் முடங்கி, "இழவு மழை எப்பொழுது நிற்குமோ" என வருந்துகின்றான். முதலவனுக்கு இச்சந்தர்ப்பம் சுவர்க்க இன்பம் மனதிடைத் தோற்றுவிக்கின்றது; மற்றவனுக்கோ அது நரக வேதனை யளிக்கின்றது. இன்ப துன்பம் வானப் பொழிவிலா அல்லது மனதிலா?

பசியுற்றொருவன் இன்னமுது தருந்தி இன்புறுகின்றான். நாழிகை பல கடந்து அருந்தியது உடலிற் சார்ந்து விடுகின்றது. ஆயினும் அதில் ஓர் எலி விழுந்து செத்துக்கிடந்ததாயும் அதையே தான் குடித்ததாயும் கேள்விப்படுவானாகில், அவன் குமட்டி வாந்திசெய்து வேதனையடைகின்றான். இன்பதுன்பம் பாலிலா அல்லது மனதிலா?

இன்பமும் இருதிறத்தன. பொய்யின்பம்; மெய்யின்பம். எது பொய் எது மெய் என்று கண்டறிவது மாந்தர் கடன். பொய் இன்பம் ஆதியில் இன்பமாகத் தோன்றி அழிந்து அந்தத்தில் துன்பமே நல்கும். இது

உண்மையில் இன்பமே யாகாது ; துன்பமே யாகும்.

இப் பொய்யின்பம் பல் வேறு. எடுத்த கருமம் நன்கு முடிந்தபோது கிடைத்த இன்பம்-விரும்பிய பொருள்-அண்டிய போது உண்டாகும் உற்சாகம் - சுரும்பு முரலும் கோதையழகிய அரிவை நல்லார் பாயல் வழங்கும் ஆநந்தம் - கல்வித்துறையின் அகன்கரை கண்டோம் எனும் செருக்கிலுற்ற மகிழ்ச்சி இன்னன புலன்வழி தொடக்கு மனத்தால் நுகரப்படுவன - இவை சிறுபோழ்தே நிலையுற்று, பின் அவலமாகி, ஏமாற்றத்தையே நல்குவன.

மண், பெண், பொன் இவை மனிதனைத் தலைக்கிளப்ப வொட்டாது உலகத்திற் பிணிக்கின்றன. இவை மாட்டு மையல் கொண்டு மகன்மருண்டு இவைகளைமட்டும் அடைநது விட்டால் இன்புறலாம் என மனப்பால் குடிக்கின்றான். ஆயினும் எதுவரையில் இவை கிட்டாம லிருககின்றனவோ - எதுவரை வருநகாலத்தில் அவசியம் தனது ஆசை பூர்த்தியாகும் என்று எதிர்பார்த்து (in expectation) உழைத்துழைத்து, காத்துக் கிடக்கின்றானோ - அதுவரையிற்றான் அவனுக்கு இன்பம் - இவைகளை அடைநதபின் துன்பத்தின் தொடக்கத்தையே அவன் காண்கின்றான் - உன்னுங்கால் இவைகளைத் தேடித திரிவதில் துன்பம்; அடைந்தபோது கட்டிக்காப்பதில் துன்பம் ; கெட்ட காலத்துக் கணக்கில் கலக்கம் ; ஆக என்று இவைகளால் இன்பம்?

"உண்மை இன்பு இவையல்ல" என உணர்வதே நிலைபெறும் இன்பம் - புலன் வழி நுகரப்படுவன நிலைபெறா என அறிந்து மனநதிரும்புவதே அழியாத இன்பம் - நமக்குப் புறத்தே உள்ள ஒன்றால் ஒரு சிறிதும் நன்மை இல்லை என்று தெளிவதே அநத மில் இன்பம் - அவாவை அவனியில் தோன்றும் ஒன்றனிடம் விடாது இழுத்துப் பிடிப்பதே கெடாத இன்பம் - ஆசைக் குதிரை நம்மைத் தாறுமாறாக இழுத்துச் செல்லாது மறித்து அதை அடக்குவதே நிற்கும் இன்பம் - னின்றும் எரிநினைவுகளை அதட்டி, அதில் நல்லெண்ணங்களைப் புகட்டுவதேபெரிய இன்பம் - எல்லா நிகழ்ச்சிகளிலும், எல்லாப் பொருள்களிலும் நன்மையைப் பதித்து ஆநந்தமடைவதே நீங்காத இன்பம் - என்றும் குறைவுபடா இன்பம் நுகர்வதே உண்மை இன்பம்.

இன்பு நிலையே உண்மை நிலை; இயற்கை நிலை. பிறநிலை செயற்கை நிலை ; நமது அறியாமையால் வருவித்துக் கொள்ளும் துன்பு நிலை. மழை பொழியும்போது வருந்துபவன் யானை நீராட்டை நிகர்த்து, தானே துன்பத்தை அச்சநர்ப்பத்தில் கற்பனைசெய்து கொண்டு கலுழ்பவனாகின்றான். வானம் வழங்குவது நமது தீங்கிற்கா? நலத்திற்கா? துன்பம் மனதின் கற்பனை ; இன்பம் இயற்கை.

பிரிவினையால் விளைவது துன்பம் - இணைவில் உள்ளது இன்பம் - பிரிவினை கற்பனை - ஒருமை உண்மை. உலகியற் சட்டம இருக்கின்றது. அதனுடன் ஒன்ற வருவது நன்மை. பிரிந்து வேறுபட விளைவது தீமை. இயற்கைச் சட்டங்களும்உள. இயற்கையில் ஓர் ஒழுங்கும் உண்டு. இவைகளோடு மனம் ஒன்றுபட உள்ளது இன்பம்;முரண்பட உண்டாவது துன்பம். இச்சட்டங்களை மாற்ற இயலாது. அவைகளோடு ஒத்து அமைதியாக வாழ்தல் கூடும். நமக்குக் கட்டுப்படாத ஒன்றுடன் முரண்படுவது அறிவுடைமை ஆகாது. இயற்கைச் சட்டங்கள் நமது நன்மைக்காகவே ஏற்பட்டன. அவை தீமை வழங்குபவை அல்ல. உலகியற் சட்டங்களும் நமது நன்மைக்குததானே ஏற்பட்டன ?

காலம் ஓடுகின்றது. வாழ்வு பறக்கின்றது. இவை நம்மை ஒப்பற்ற ஓர் இடததிற்கு - நிலைக்கு - இழுத்துச் செல்கின்றன. இவ்விடத்திற்கே நாம் ஒவ்வொருவரும் அறிநதோ அறியாமலோ சென்றுகொண் டிருக்கின்றோம். பேராற்றில் விழுந்துவிட்டோம் ; சமுத்திரம் - எங்கும் பரந்த கடல் - எல்லையில்லா வாரி - இதை அடையவேண்

டும். இதுவே நாம் இங்கு மங்கும் ஓடாது, வேகங் கெட்டு, இளைப்பாறக் கூடிய அமைதி இடம். ஆற்றின் நடுவே அமைதியாக மிதப்போமாயின் நமக்கு இடர் சிறிதும் இல்லை. ஆறு, தானே நம்மைச் செல்லவேண்டிய இடத்திற்கு இட்டுச் செல்லும். வேகங் கெடுத்தாலும் வேதனடியை உன்னி, ஆறு பாயும்வழி நீந்திச் சென்றால் நமது குறிப்பை இன்னும் கடிதில் அடைதல் கூடும். அதை விட்டு, இச் சுலபமான வழியை நீத்து, ஏன் நதிப்பெருக்குடன் முரண்டி, எதிர்த்து, நீந்தித் தத்தளித்து, மேன்மூச்சு கீழ்மூச்சு வாங்க, கரைகளில் உள்ள முட்புதர்களிற் சிக்கி, கழிகளில் நுழைந்து, தடுமாறி, கானல் நீரொத்து எதிரே தோன்றி, நாம் அண்டியதும் கம்பி நீட்டும் நீர் மேற் குமிழிச் சின்னஞ் சிறறின்பத்திற்கு ஆவலாகி அல்லலுற வேண்டும்? ஏன் ஆற்றங்கரையிற் படர்ந்து படிந்திருக்கும் சேற்றைப் பூசிக்கொண்டு, பிரபுக்கள் என்னும் பல உருமாற்ற முற்று ஏமாற்ற மடைந்து, நாற்ற முறல்வேண்டும்? அந்தமில் இன்பப் பெருவாரியை அடைதற்கு நாமே ஏன் இடரைக் கற்பித்துக்கொண்டு தாமதப் படவேண்டும்? இயற்கைச் சட்டம், ஒழுங்கு, ஆற்றின் பெருக்கை ஒத்து, தடைப்படாது இயங்கிக்கொண்டிருக்க அதற்கு மாறாக நாம் ஒழுகுவது அறிவுடைமை யாகுமா?

நம்மை இயற்கையுடன் ஒன்று படுத்துவதும், வேறு படுத்துவதும் நமது எண்ணம். துன்பத்திற்கும் இன்பத்திற்கும் காரணம் நமது மனம். இயற்கைச் சட்டம், ஒழுங்கு இவை எக்காலத்தும் எல்லோருக்கும் இன்பம் பயப்பன. நல்ல எண்ணம் - ஒழுங்கான எண்ணம் - thoughts in hormoney with the law and order of nature - நம்மை இயற்கையுடன் ஒன்றுபடுத்தும் - அப்பொழுது உள்ளது இயற்கை இன்பு. தீ நினைப்பு - இயற்கையினின்றும் வேறுபட்ட எண்ணம் - அதனின்றும் நம்மைப் பிரித்து வேறு படுத்தும்.

துன்பம் என்பது இன்பம் இன்மை. எரி எண்ணங்கள் நம்மை இயற்கையி னின்றும் மாறுபடுத்துவதால அதனூடே விரவிக் கிடக்கும் இன்பு நம்மைத் தாண்டி அறியாது ஓடிவிடுகின்றது. அப்போது நமக்கு இன்பம் இன்மை யாகின்றது. எரி நினைவு எரிச் செயலாக முற்றித் துன்பக் கற்பனையாக முடிகின்றது. எரி எண்ணம் இன்ப மறியும் கண்ணை மறைக்கின்றது.

எண்ணமே யாவற்றிற்கும் முதல். வாழ்வை ஆக்குவதும் எண்ணம்; அழிப்பதும் எண்ணம்; துன்பம் தருவதும் எண்ணம்; இன்பமளிப்பதும் எண்ணம். எரி எண்ணங்களை அறவே நீக்கி, இயற்கையுடன் ஒன்றுபட்ட நல்லெண்ணங்களுக்கே நமது மனதை முழுவதும் ஆக்கி விட்டால் நமக்கு இன்பமே எப்போதும் உண்டாகும்.

சிந்தனை யடக்கம் - Thought control - நாம் தீ எண்ணங்களைத் தூரத்தள்ளி, நல் லெண்ணங்களையே எண்ணுதற்குப் பெரும் உதவி செய்யும், உலகில் பருமையில தோன்றும் எல்லா நலனும் முதலில் நுண்மையில் உண்டாக வேண்டும். மனஉலகில் நுண்மையில் நல்லெண்ணம் இன்பு நல்கும் நிலையை உண்டாக்குகின்றது. இந்நிலை நாளடைவில் முற்றிப் பின் புறத்தில் இன்பு நிலையாகக் கனிகின்றது. இச்சீர்திருத்தம் சிந்தனை அடக்கத்தால் நடைபெறும்.

நெஞ்சடக்கம் நமது சித்தத்தைத் தெளிவிக்கும். பொய், மெய்- துன்பம், இன்பம்-தோல்வி, வெற்றி- நோய், சுகம்-இறப்பு, பிறப்பு-வறுமை, நிறைவு-தண்மை, வெப்பம், இன்ன துவந்துவங்களது கூட்டத்தில் மறுகி, உண்மை யறிய மாட்டாது, திகைப்பூண்டைமிதித்ததுபோல் கலக்கமடைந்திருக்கும் சித்தம் நெஞ்சடக்கத்தால் தெளிவுறலாம்.

நெஞ்சடக்கம் வாழ்வை இனிமையாக்கும்; வேண்டியன பெறும் வகையும் தோற்றுவிக்கும்; இயற்கையுடன், இறையுடன் ஒன்று பட்டவர் நாம் எனும் நல்லுணர்ச்சியும் நல்கும்; நினைவடக்கமநல்கும் நலத்தைச்சொல்ல மொழி கிடையாது; எழுதஏடும் அகப் படாது. உள்ளத்திலூறும் அமுதப் பெருக்கை-வரம்பு கடந்த பெரிய இன்பத்தை-கட்டுடைய மனதால்-மொழியால் எவ்விதம் வருணிப்பது?

இன்பம் நமது மனதில - எண்ணத்தில் இருக்கின்றதே ஒழிய நமக்குப் புறம்பாகத் தோன்றும் ஒன்றில்

# ஆற்றலுடை மக்கள்

[திரு. கி. சுப்பிரமணியனார்]

**(பேரறிஞர் வாசுவானி அவர்களது கட்டுரையின் தமிழாக்கம்)**

இளமை இந்தியாவின் ஆணை தாங்கித் தொண்டாற்றும் "பாரதயுவ சங்கச் சார்பில் நடைபெறுஉம்" "சக்தி ஆசிரமம்" என்று முழக்கும் ஆக்கவுரையாதெனின், ஆன்றோர் சரிததிரங்களைப் பயிலுதல் வேண்டுமென்பதாகும். அறிவுத் துறையில் தலைசிறநத பெரியார்களும், அருந்தவம் ஓம்புநரும், கர்ம வீரருமே ஆன்றோர் எனப்படுவா. இத்தகைய வள்ளலார்களின் சரித்திரங்களை ஒவ்வொருவரும் நன்கு ஊன்றிப் படித்துணர்வாராக.

சக்தி—ஆற்றல், என்பதே இளந்தோன்றல்கள் சிந்திக்கும மநதிரமாகும். எனவே, அவர்கள் கனவு காண்பவர்களாயும், ஊக்கங் குன்றிய, செயலற்ற, போலி வீரர்களாயு மிருக்க வொண்ணாது. அவர்கள் என்றும் ஊக்கஞ் செறிநத, உரம்படைத்த, தததுவ முணர்ந்த மக்களாய்த் திகழ்தல் வேண்டும். ஆற்றலுடைய ஆன்றோர் சரித்திரங்களையும், நடைமுறையில்—செயலிற் சிறந்து விளங்கிய வீரர்தம் வரலாறுகளையும் அவர்கள் கருததூன்றிக் கற்றல் வேண்டும். இந்நூற்கள் மனோவலிமையின் மாசற்ற சிறப்பினை நன்கு போதிப்பனவாம்.

தற்போது நம் நாட்டு மக்கள் அறிவுத் துறை பற்றிய வாதமுறைகளிலும், ஆடம்பரக் கிளர்ச்சிகளிலும் தலைசிறநதிருந்தும, இது காலைப் பிளவுபட்டு ஆக்கங் குன்றி அழிவெய்தி வருவது, அவர் மனோவலிமையையும் ஊக்கத்தையும் இழந்ததினாலன்றோ? வெற்றி வீரர்களான இராமர், சிவாஜி, இராணாப் பிரதாபர், குருகோவிநதசிங், நெப்போலியன், லெனின் போன்ற தலைவர்கள் யாண்டும் சக்தி ஓசையை எழுப்பிச் சென்றனர். அவர்களனைவருந் திண்ணிய மனத்தராய், ஆளுந் திறனுடையவராய்த் திகழ்ந்து, உலகிடைத் தங் கொள்கைகள் என்றும் நிலைபெற நிறுவி மறைநதனர்.

மகா நாடுகளில், காகித அளவிலேயே நிற்கும் பற்பல தீர்மானங்களை நிறைவேற்றும் நமது செய்கையையும், மனப்பான்மையையுங் குறித்து யான் மிகவும் கவல்கின்றேன். வேண்டுவது யாது? மனவுறுதி—மனோவுறுதியே. மேடை மீது புரியும சொற்பெருக்கும், வீர முழக்கமும பயனற்றவைகளே. அவைகளால் விளைவது யாதொன்று மில்லை. போலிச் சிந்தனையும், வெற்றுரையும் 'சக்தி'யின்பாற் படமாட்டா. எண்ணங்கள் யாவும் ஒருங்கே திரண்டொளிர்தல் வேண்டும். வெறும் உள்ளக்கிளர்ச்சியும் சக்தியின்பாற் படமாட்டாது. ஆக்கத் துறைபற்றித் தொண்டாற்றும் உணர்ச்சியே சீரியதாகும். அதனையே

யாவரும் மதிப்பர்; போற்றுவர். ஆதலின் சக்தி எனப்படுவது செயல்முறை பற்றிய மனத்துணிபே யாகும்.

## மனோவலிமையே வெற்றி பயக்கும்

வாலிபர் முக்கியமாய்ப் படிக்கத்தகுந்தது இருசக்தி வீரர்களின் வாழ்க்கை வரலாறு களாகும். அவர்கள் முறையே காரிபால்டி, (Garibaldi) சோஸ் ரிசால், (Jose Rizal) எனப்படுவர். தற்போது "டிபீற்" எனும் ஆங்கிலப் புனை பெயரோடு வெளிவந்துலவும் ஒரு நவீனததில் காரிபால்டியாரின் வீரஞ்செறிந்த சரித்திரமானது செவ்வனே வரையப் பட்டுள்ளது. அதனை ஆக்கியவர், சரித்திரத் துறைபற்றிய நவீனம் வரைவதில் தலைசிறந்த "கச்" எனும் பெயரிய நூலாசிரியராவர். காரிபால்டி தம்முடைய வாழ்க்கையில் பற்பல துன்பங்களை எதிர்த்துப் போராடினர் எனினும் அவர் தமது கொள்கையினின்றும் தவறிலர். இவரே பேராற்றல் படைத்த வீரராவர். உரோமாபுரியினை ஒன்னலர் பலர் சூழ்ந்து எதிர்த்த போது, "பகைவருடன் போர்தொடுக்க ஒருவரும் முன்வரவில்லையாயின் உரோமாபுரியினைக காததறகு யான நாய்களைப் பயன் படுத்துவேன்" எனச் சொற்றனர்.

மனோவலிமை, தன்னம்பிக்கை, அடக்கியாளுந் திறன் ஆகிய இவற்றினாலேயே, அறிஞர் "கச்" என்பார் சித்தரித்தபடியுள்ள சீரிய அரணில்லா உரோமாபுரியினை, போர்முறை அறியாத் தமது போலிவீரருடன், போர்த் துறையில் கைவந்த ஐரோப்பிய வீரர்களோடு எதிர்த்துப் பொருது வாகைசூடினர். ஆதலின் மனோவுறுதியே யாவற்றையும் ஆக்கும் ஆற்றலுடைய தாகும். அதனின்றும் அரும்புவதே எதிர்க்கும் வீரம். உரோமாபுரியில் எழுந்த இச்சக்தி ஐரோப்பாவின் வியப்பினைக் கவர்ந்தது.

நாட்கள் பல கழியத் துன்மார்க்கம் யாண்டும் தாண்டவமாடிற்று. மதுபான வெறி கொண்டலைநத மாக்களின் இழிகுணத்தால் நாட்டில் சுதந்திர உணர்ச்சியே வேரற்றுப் போயிற்று. ஆஸ்டிரிய வீரர்களால் காரிபால்டியும் ஒதுக்கி வைக்கப்பட்டார். இடுக்கண் பல நேர்ந்தும அவர் தமது கொள்கையினின்றும் சற்றும் விலகிலர். வீரர் பலர் அவரைப் பின்தொடர்ந்தனர். தம்மைச் சுற்றித் துன்பச்சூழல் வளர, வளர அவர் பலத்தில் சிறநதொளிர்நதார். இத்தாலியின் ஆக்கத்திலே உறைந்து நின்ற காரிபால்டி தநகொள்கைகளை என்றும் மாற்றிலர். அழிவெய்தியுள்ள உரோமாபுரியின் கோட்டைகளைக் கண்ணுற்று அவர் ஊக்கத்தை இழநதாரல்லர். ஒரு தெய்வீக உணர்ச்சியானது, பண்டைப் பெருமையை எய்துவான் சதா அவரைத் தூண்டிற்று. "அஞ்சுவது யாதொன்றுமில்லை; அஞ்ச வருவதூஉமில்லை" என்னும் மனவுறுதியுடைய வீரர்கள் எதற்கும் அஞ்சாரல்லரோ? அவர்களது உளத்தில் சதா அமைதியும் இன்பமுமே குடிகொண்டிருக்கும். அதனாற்றான் காரிபால்டி எதிலும் வெற்றி பெற்றார். அவர் தோல்வியைக் கனவிலும் அறியார். தமது பூதவுடல் நீங்கு முன்னர் இததாலியாவின் ஒற்றுமையை நிலைநாட்டினவர் அவரே.

## மனோ வுறுதிகளே சரித்திர ஆக்கம்

இளமை இந்தியாவிற்கு ஜோஸ்ரிஸால் என்பாரின் பெயர் நன்குதெரியவராது. அவரே பிலிப்பைன் தீவிடைத்தம்புகழ் பொறித்த தேசிய வீரராவார். "பிலிப்பைன்வீரர்" என்னும் பெயரிய நூலில் அவரது சரித்திரத்தைப் பரக்கக் காணலாம். ரிஸால் அருந்திறன் படைத்தவர்; சிறந்த அறிவாளி; நவீன நூலாசிரியர்; அரும்பெரும் புலவர்; தம் தாய் நாட்டு மக்கள் யாவரும் கல்வி அறிவிற் சிறந்து, அன்னிய ஆட்சியைத் தவிர்க்க அவர் அருமபாடு பட்டார். இதுவே அவர் நாட்டிற்குச் செய்த நற்பணியாகும். ரிஸால், 1861ல் பிறந்தார். தமது இளமைப் பருவத்திலேயே கல்வி கற்பதில் அதிக ஆர்வமுடையவராய்த் திகழ்ந்தார்; ஸ்பெயின் தேசத்துக் கல்லூரியில் கல்வி பயின்

ரூர். கண்டவர் வியக்கும் பேராற்ற லுடன் கூர்த்த மதிநலன் படைத்த வராயிருந்தும் காலாசாலை அதிகாரிகள் அவரை ஒரு தாழ்த்தப்பட்ட சமூகத தினராகவே நடத்தினர். பிலிப்பையி னில் இவ்வுணர்ச்சி நாளடைவில் அதி கரிப்பதை அவர் கண்ணுற்ருர். அத னுல் அவர் தம் வாழ் நாட்களை நாட்டு மக்களின் நலங்கருதித் தொண்டாற்று வதற்குப் பயன் படுத்துவதெனத் தன் மனதில் உறுதி கொண்டார். தங்கள் இழிநிலை யுணர்ந்து மக்களனைவரும் அன்னிய ஆட்சியாகிய அடிமைத் தளையை நீக்கி, ஆற்றலுடன் உய்யும் வழிதேட அவர்க்குச் சீரிய கல்வி அளித்தல் வேண்டுமென்பதை உணர் ந்து, அப்பணியாற்றப் போதிய பயிற்சி பெறுவான் ஐரோப்பா சென்றனர்; ஆண்டு, மேட்ரிட், பாரிஸ், பெர்லின் முதலிய நகரங்களில் திகழும் கல்லூரி களில் கல்வி பயின்ருர்; பல மொழி களைக் கற்ருர்; அருந்திறன் படைத்த அறிஞர் பலரோடு கேண்மை பூண்டார். இப்பெரியார், பொன்னும் மணியும் கோடி கோடியாகத் தேடிச் செல்வக் களியாட்டில் திளைத்து இன்புற்று வாழ்ந்திருக்கலாம். ஆனுல் அவர் மனம் அவ்விதஞ் செய்யத் தூண்டவில்லை. அவர் எளிய வாழ்வையே மேற்கொண் டார். ஸ்பெயின் அரசாங்கத்தின் ஆட்சி முறையைக் குறித்தும், அதிகாரிகளும் மதக்குருக்களும் இழைத்த அட்டூழி யங்களைக் குறித்தும் தககமேற்கோளு டன் ஒரு நவீனம் வரைநது வெளியிட் டார். ஸ்பெயின் அரசாங்கத்தார் அவரை ஒரு பெருங் கிளர்ச்சியாள ரெனக் கருதினர். உண்மையில் அவர் கிளர்ச்சியாளரல்ல; அவர் விழைந்தது கிளர்ச்சியன்று; சீர் திருத்தமேயாகும். அதனுல், அவர் குடும்பத்தினர் யாவ ரும் துன்புறுத்தப் பட்டனர். அவர்க் குப் பிலிப்பைன் தீவினைப் பிரிய நேர்ந் தது. ஸ்பெயின் அரசாங்கமும் அவரை விடாது பின் தொடர்நது இழைத்த இடுக்கண் பல. இறுதியில் அவரைப் பிடித்தனர்; விசாரணை செய்தனர். அதில் அவர் பெருங்கிளர்ச்சி யாள ரெனக் குற்றஞ் சாட்டப்பெற்று 1896ல் சுட்டுக்கொல்லப் பட்டார்.

அதுபோது அவர்க்கு வயது 35. எனினும், அவரது மனவுறுதி பிலிப் பைனுஸ் மக்களின் வாழ்வில் ஒருபெரும் மாற்றத்தைத் தந்தது. அவர் மரணம் ஸ்பெயின் அரசாங்கக் கொடுங்கோலாட் சியின முடிவு கண்டது. இப்பெரியார் உலகினைநீத்த நன்னுளை மக்கள் தேசீய ஆண்டு விழாவாய்க் கொண்டாடினர். நாட்டின் நலங்கருதித் தமது ஆருயி ரைப் பலிகொடுத்த தேசாபிமானச் செல்வராம் இவர் மக்களின் ஞாபகார்த் தமாய் விளங்குகின்ருர். சோஸ்ரிஸால் எனப் பெயர் வாய்ந்த இப்பெரியாரின் மனவுறுதியே அவர் நாட்டு மக்களுக் குப் புத்துயிரை அளித்தது. மனே வுறுதியே சரித்திரத்திற்கு ஆக்கந் தருவதாகும். ஏனெனின், மனிதன் அடிக்கடித் தன்னைப் பலகீனமுடையவ ஞய் நினைப்பதைப் போன்று அவன் சக்தியற்ற ஜீவனன்று. மனிதன் உண் மையில் எதையும் ஆக்கும் பேராற்றல் படைத்தவனுவான்.

# வெண்ணிலவு

[திரு. இ. சிவகுருநாதன்]

வெண்ணிலவை விண்ணிற் காண்மின்:- வெண்ணிலவு தண்ணொளி வீசுகிறது; விண்மீன் நடுவண் தவழ்கிறது. அக் காட்சி கண்ணைக் கவர்கிறது; உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகிறது. அவ்வொளியுற்ற உடல் குளிர்ச்சியுறுகிறது; உளளம் மகிழ்ச்சியில் துள்ளி விளையாடுகிறது.

வெண்ணிலவைக் கண்ட மன்பதை மகிழ்ச்சியில் ஆழ்கிறது; மாண் செயல் இயற்றுகிறது. மன்பதை மகிழ்ச்சியுறும் வகையை நோக்குங்கள். வெண்ணிலவின் மாண்பு விளங்கும்.

பச்சிளங்குழவிகட்குப் பால்நிலவு காட்டி பால் சோறு ஊட்டுகிறார்கள.

"பால்போலும் வெண்ணிலாவே
பகலெல்லாம் எங்கு சென்றாய்..."

"நிலா நிலா ஓடிவா நில்லாமல் ஓடிவா
மலைமேலேறிவா மல்லிகைப் பூகொண்டுவா
............................................"

எனப் பாட்டிசைத்துத தாலாட்டுகிறார்கள். இளங் குழந்தைகள் உள மகிழ்ந்து விளையாடுகின்றன; குழலினும் இனிய மழலை மொழிந்து மகிழ்ச்சி யளிக்கின்றன; "அம்புலி! அம்புலி!! வா! வா!!" என அன்பொடு அம்புலியை அழைக்கின்றன.

சிறுமியர்கள் சிற்றில் புனைந்து சிறுசோறு அடுகிறார்கள். ஒண்டொடி மடந்தையர் கோண்டான் கொட்டுகிறார்கள். பெதும்பைப் பெண்கள் தும்பி சூழ்கிறார்கள்.

முரண் மிக்க காளையர் அரண் கட்டுதல் முதலிய விளையாட்டு விளையாடுகின்றனர்.

அன்பொத்த காதலர் இன்பொடு கூடி, கொஞ்சிக் குலவுகிறார்கள். பாட்டிமார்கள் பழங்கதைகளைப் பரிவுடன் சொல்லுகிறார்கள்.

ஆராய்ச்சி வல்லோர் புதுமைப் பொருளை ஆராய்கின்றனர். இயற்கை அறிஞர்கள் நிலவைக்கண்டு "என்னே! என்னே!! நிலவின் பரிசு மன்னுக நிலவு; துன்னுக இன்பம். இயற்கை நிலவில் இறையைக காண்மின்; வணங்குமின்" என்கிறார்கள்.

பகலெல்லாம் உழைத்த தொழிலாளி இரவில் நிலவைக் காண்கிறான்; உடலசைவைப் போக்கிக் கொள்கிறான்.

வெண்ணிலவில் திருவிழவு செய்கிறார்கள்; மகிழ்ச்சிக் கூட்டம கூடுகிறார்கள்; மகிழ்சசி யுணவு உண்கிறார்கள; இசைக்குழுவும் கூத்துக் குழாமும் கூடுகின்றன.

இத்தகைய வெண்ணிலவைப் பற்றிய பண்டைப் பாவலர் மொழிகள் பலப் பல. அவற்றை விரிப்பிற் பெருகும். புராண முடையார் கூறுவன பெரும் புராணமாக விரியும்.

இக்காலத்து விஞ்ஞானிகள் கூற்றையே எவரும் விரும்புவர். அவர் கூற்றிற் சில கூறுவாம். "சநதிர மண்டலம் சூரியமண்டலத்திற்குத் தாழ்ந்தது. சநதிரன் சூரியனுககுககண்ணாடி போலிருநது, அவவொளியை உலகுக்கு அளிக்கிறது. சநதிரன பூமியைச் சுற்றுகிறது. சநதிரன பூமியை ஒரு சுற்று சுற்றி வரின் ஒரு திங்கள் ஆகும். சந்திரனில் காணப்படுங் கருமை, பூமியின் சாயலாகும்"

வெண்மணல் வெளியில், தண்ணிலவினொளியில், தமிழ்தென்றல் தவழ்ந்து வர உட்காருங்கள். உள்ளத்தை உற்று நோக்குங்கள். இனிய எண்ணங்கள் தோன்றி இன்பத்தை ஈனக் காணலாம். இனிய எண்ணங்கள் உடல் நலத்திற்கு உறுதுணை யாகும். ஆதலின் அன்பரீர்! வெண்ணிலவைக் காண்மின்; வெண்ணில வொளியில் மூழ்குமின்; வெண்ணிலவை வாழ்த்துமின்! வணங்குமின்!

# கற்றவர் மடமை

(வில்லியம் ஹாஸ்லிட் என்னும் ஆங்கிலப் புலவரின் கட்டுரையைத் தழுவியது)

[திரு. தி. ர. சாரங்கபாணி]

(தொடர்ச்சி)

உடல் வலிமையற்றவனும, நுண்ணிய மனப்பான்மையில்லாதவனும, ஒருவர் கூறியதை மறவாத இயல்பினனும், இயற்கையாகவே மற்ற விஷயங்களை அறிய முடியாதவனுமே வகுப்பில் முதல்வனாக நிற்பான். ஆனால், பள்ளியில் சோம்பித்திரிபவனே, வெறுப்புமிகுந்தவார்த்தையைக்கூட்டும் புத்தகத்தைப் படித்துக் கிளிப்போலும், ஆசிரியர் கூறியதை யோதி மரம்போலும், அநேக மணிநேரம மேஜையினருகிலமர்ந்து, தான் இழந்த ஆநந்ததிற்கும் மணிநேரஙகளுக்கும் பதிலாக ஆண்டுவிழாக்கள் தோறும் வெகுமதி பெறுவதிலும், இயற்கைச் சுபாவத்தை யோர்ந்து அவைகளின் உணாவையறிந்து, தன் அறிவு இலங்க, இரத்த ஓட்டத்தையும், இருதயத் துடிப்பையும் விரும்பி, இன்பதுன்பங்கள் மறநது, ஒரு பந்தையோ அல்லது பட்டுப் பூச்சியையோ தொடர்ந்துஓடவும்,சுத்த ஆகாயம் தன் முகத்தில் வீசுவதை யுணரவும், தனக்குத் தெரிநதவர்களுக்கும் நண்பர்களுக்கும் இடையில் நேரிடும் சிறு சச்சரவுகளில்சேரவும்,விரும்புகின்றான். தினசரிப்பாடஙகளைப்படிக்கவும், கல்விக்கழகங்களின் பட்டங்களைப் பெற்றிடவும் இயலாது தடுத்து நிற்பதும் அறியாமையே எனினும், பெரும்பாலும் அறிவின்மை என்பது அத்தகைய கல்வியைக் கற்றிடுவதில் ஊக்கமின்மையே யாகும். சிறிதும அறிவில்லா மூடர்கள், கல்வியைக் கற்க இயலாது தவிப்பதுபோலும் பெரும்பாலும்பேரறிவு வாய்க்கப்பட்டவர்கள் தவிக்கின்றனர். நம்முடைய பேரறிஞர்கள் ஒவ்வொருவரும், பள்ளியிலேனும், கல்விக்கழகத்திலேனும், பெரும் பெயரெடாம விருந்தது எண்டு நோக்கற்குரியது. அன்னார் கல்விமுறையின் நியதிகளையும் அத்தகைய முறையால் வரும் பயனையும் பெரிதும் போற்றுவதில்லை.

நூறகல்வி யென்பது மற்றவர் அறியாதது ; புத்தகங்களினின்றும் அத்தகைய இயற்கை மூலங்களினின்றும் உய்ததுணரும் ஞானமேயாகும். நம் கண்முன் புலனுவதும், நம்மைச் சுற்றிப் பொலிவதும், நம்முடைய அநுபவத்தையும் மனப்பான்மையையும் உள்ள நாட்டத்தையும் வலுப்படுத்துகின்றவைகளைப்பற்றிய ஞானம் கல்வியன்று. கற்றவர்களல்லால் மற்றவர்கள் கற்றறிவதற்கறியா ஞானமே நூற்கல்வியாகும். ஐயமும் திரிபும் கடினமும் நிறைந்து பண்டைக்காலத்திலிருந்து பரம்பரையாக உரைக்கப்பட்டு வருவதும், அநுபவப் பிரமாணத்திற் கெட்டாததும், காட்சிப் பிரமாணத்திற்கும் சாதாரண வாழ்க்கைக்கும் எட்டாதது மான விஷயங்களைப்பறறி எவன் அதிகமாக அறிந்துள்ளானே அவனே அதிக கல்வி யறிவு வாய்க்கப்பட்டவனுவன். அது மற்றவர்களுடைய கண்களைக் கொண்டு பார்ப்பதையும், அவர்களுடைய செவிகளைக்கொண்டு கேட்பதையும, அவர்களுடைய அறியுந் திறனில் நம்பிககை வைத்தலையும் ஒக்கும். கற்றவன் பெயர்களிலும் தேதியிலும் அறியும் ஞானத்தில் கர்வங் கொள்கின்றான்; மனிதனைப்பற்றியும், பொருள்களைப் பற்றியும் அவனறியான். அயல் வீட்டுக்காரர்களைப்பற்றி, அவன் ஒன்றும் அறியானெனினும், பண்டைக்காலத்துஜாதி குலம், முதலியவைகளைப்பற்றி அவன் அதிகம் படித்துள்ளான். கான்ஸ்டாண்டிநோபலைப் (Constantinople) பற்றியும் பெக்கினைப் (Pekin) பற்றியும் அவன் அதிகம்அறிவானெனினும், அடுத்த வீதிக்குச் செல்லும் வழியை அவன் அறியான். தன்னுடைய பழைய நண்பன் திருடனே இன்றேல் மடையனேவென அவனல் அறிய இயலா தெனினும், சரித்திரத்தில் காணப்படும் பெரியார்

களைப்பற்றிப் பெரும் சொற்பொழிவுகள் நிகழ்த்துவான். ஒரு குருடனுக்கு நிறங்களைப்பற்றி எவ்வளவு தெரியுமோ அவ்வளவு அவனுக்குத் தான் பேசும் விஷயங்களைப பற்றித் தெரியும். வழக்கொழிந்த மொழிகளிலும் அவன பாண்டித்ய முடையவ னெனினும், தன்னுடைய தாய் மொழியில் பிழையில்லாது பேசவும் எழுதவும அவன் அறியான்.

புத்தகங்களை யல்லால் மற்றொன்றும் அறியாத கற்றவன் அப்புத்தகங்களைப் பற்றியும் ஒன்றும் அறியான். "புத்தகங்கள் புத்தகங்களின் உதவியைக் கற்பிக்கமாட்டா." ஒரு நூலில் கூறப்பட்டுள்ள விஷயத்தைப பற்றி ஒன்றுமறியா ஒருவன் அந்நூலைப்பற்றியென்னவறிய வியலும்? பல புத்தகங்களை முதல் நூற்களாகக் கொண்டு படிப்படியாகத் தோன்றிய புத்தகங்களையே அவன் அறிவான். மற்றவர்களிடத்திலிருந்து அறிந்தவர்களுடைய கருத்தைக் கிள்ளைப் போலும் இவன படிக்கின்றான். ஒரு வார்த்தையைப் போலும் பத்து பாஷைகளில் எழுத அவனால் இயலு மெனினும், அவ்வார்த்தை குறிக்கும் பொருளை அவன் அறியான். இருதயத்தையும் அறிவையும் புலன்களையும் பூட்டிவிட்டு அவன் தன்னுடைய தலையை, அதிகாரங்களினின்றும் பிறந்த அதிகாரங்களாலும, மற்ற இடத்திலிருந்து எடுத்துக்காட்டாக எடுத்துக்காட்டியுள்ள மேற்கோள்களாலும் நிறைத்துக் கொள்கின்றான். உலக நடத்தையிலும், முது மொழிகளிலும் அவனுக்குப் பயிற்சி கிடையாது. இயற்கையிலும் சிற்பத்திலும் அவனுக்கு அழகு புலனாகவில்லை. அவனுக்குக் கண்களாலும், செயலினாலும அறிதற்குரிய உலகம் மறைந்து கிடக்கின்றது. ஓவியங்களைப் பற்றி அவனொன்றும் அறியான். இயற்கையினுடைய பாஷையையும், சிற்பத்தின் பாஷையையும் அறிய அவனால் இயலாது. அதற்கேற்பச் சங்கீத ஞானம் அவனுக்குச் சிறிதுங் கிடையாது. அவனுடைய செவிகளும் புத்தகங்களையே அறியும். இசைநூலைப் பற்றி ஏதேனும் அவன் அறிவனோ? ஒரு விருத்தத்தி லுள்ள சீர்களையும, ஒரு நாடகத்தின் காட்சிகளையும அவன் அறிவான். ஆனால் அவைகளின் உள்ளர்த்தத்தை அவன் உணரான். அவன் கற்ற கல்வி, வீடு அமைப்பதற்கும் பயிரிடும சாஸ்திரத்திலேயும், இரும்பு மரமமுதலிய சாமான்களைச் செய்வதிலேயும் அவனுக்குப் புலமை யளித்திடாது. தன்னுடைய கரங்களையுங் கால்களையும் அவன் உபயோகிப்பதில்லை; ஓடவும் நடக்கவும் நீந்தவும் அவன் அறியான்; அவவாறு செய்யக் கூடியவர்களைக் கண்டாலும் அவர்களைத தன்னினுந் தாழ்ந்தவர்களாகக் கருதுகின்றான்.

உண்மையில மனிதன் அறிந்தவெல்லாம் தினசரி விஷயங்களையும் அநுபவத்தையும் பற்றிய விஷயங்களேயாகும். மற்றவைகளெல்லாம் வெளிவேடமே யாகும். ஏழைமக்களோ தங்களுடைய அங்கங்களை உபயோகிக்கின்றார்கள். ஏனெனில், தங்களுடைய உழைப்பினாலேயே அவர்களுடைய வாழ்க்கையை அவர்கள் நடத்தவேண்டியிருக்கின்றது. தங்களுடைய தொழிலையும் அத்தொழிலைப் பற்றியவர்களையும் அவர்கள் அவசியம அறியவேண்டியிருந்தலான், அவர்கள அதனை அறிகின்றார்கள். தங்களுடைய மனோநிலையை ஓதுதற்குரிய வாகரு வன்மையும், வெறுப்பையுஞ் சிரிப்பையும் மூட்டுதற்குரிய அறிவும் அவர்களுக்கு இயற்கையில் அமைந்திருக்கின்றது. இலக்கண இலக்கிய வரம்புகளை அவர்கள் அறியார்கள். பொது மக்கள அரங்கத் திலிருந்து (House of Commons) அறிவதைவிடப் பேருண்மைகளை ஒரு சாராயக்கடையில் நடக்கும் சம்பாஷணையிலிருந்து அறிய ஒல்லும். ஒரு சாதாரண நாட்டு மாதினிடம் சென்ற ஐம்பதாண்டுகளின் சரிதையை, கற்றானொருவன் அவ்விஷயத்தைப்பற்றி எழுதியுள்ள எண்ணிறந்த புத்தகங்களைப் படித்து அறிவதைவிட அதிகமாகவும்

விளக்கமாகவும் திருஷ்டாந்தங்களுடனும் அறியலாம். படித்தவர்கள் நாட்டைப்பற்றியும் நகரத்தைப் பற்றியும் உண்மையில் ஒன்றும் அறியார்கள். கல்லாத மக்களுக்குச் சுய அறிவு மிகவும் உண்டு.

நூற்கல்வியால் பெறும பயன் இஃதேயாகும். அவர்கள் காணும பொருள்களேயும் புத்தகங்களில் வாசித்தறிநதவாறு காண்கின்றார்கள். உண்மையான பொருள் அவர்களுக்குப் புலனாவதுமில்லை. புலனாயின் தாங்கள் பயின்ற உண்மைகளுககு முரண் ஏற்படு மென்றஞ்சி அவர்கள் கண்களை மூடிக் கொள்கின்றார்கள். உண்மையையும் உபயோகமானவைகளையும் அறிய நம்முடைய மானிட அறிவு எவ்வளவு சிறிது உபயோகிக்கப்படுகின்றது. தத்துவ ஆராய்ச்சியிலும், நியாயம், அரசாங்க நூல், ஜோதிஷம், பொன் செய்யும் வித்தை முதலியவைகளை அறிவதிலும் எவ்வளவு நேரமும் அறிவும் வியர்த்தமாகின்றன. பண்டை நூற்களிலிருநது உண்மையாக நாம் பெறும்பயனென்ன?

மக்கட் கூட்டத்தில், தாங்கள் கண்டவைகளையும் அறிந்தவைகளையும் பற்றித் தர்க்கிக்கும் உலகியல் உணர்ந்தவர்களே பேரறிஞராவர். பெண்மக்களே ஆடவர்களைவிட அதிக கல்வி யறிவு பெற்றவர்களாவர். அவர்களுக்கு அதிக வேடமில்லை; கடின நியதிகளை அவர்கள் அறியார்கள். தாங்கள் காணும் பொருள்களைத் தங்களுடைய இயற்கை நினைவிற்குத் தோன்றியவாறு கொள்வதால், அவை உண்மையாகவும் இயறகையோடியைநதும் இருக்கின்றன; அவர்கள் தர்க்கிப்பதே இல்லையாதலால் தவறாகத தர்ககிபபதில்லை. சில நியதிகளையும் வரம்புகளையும் கொண்டு அவர்கள் பேசுவதில்லையாதலால், அவர்களுக்குச் சாதாரணமாக வாக்கு வன்மையும், அறியும் சமயோசித யுகதியும் அதிகமாக இருக்கின்றன. மேலோதிய இயற்கைத் தன்மைகளால அன்னார் தங்களுடைய கணவர்களை ஆண்டு வருகின்றனர். அவர்கள் தஙகளுடைய நண்பர்களுக்கு லிகிதம் எழுதுங்கால் உபயோகிக்கும் நடை (Style) ஆசிரியர்களுடைய நடையைவிட அழகாக இருக்கின்றது. ஷேக்ஸ்பியர் (Shakespeare) என்னும் பெரியாரின் உள்ளம் கல்வியின் வரம்புகளறியா உள்ளம்; அவருடைய ஒப்பற்ற மனோபாவத்திற்கும் வித விதமான கருததுக்களுக்கும் அஃதே காரணமாகும். ஆனால் மில்டன் (Milton) என்பவருடைய உள்ளமும் கருத்துககளும் உணர்ச்சிகளும் கல்வியின் வரம்புகளுடனும் பொலிகின்றன. மக்களுடைய இயற்கைப் புலமையையறிய ஷேக்ஸ்பியரினுடைய நூற்களை வாசிக்கலாம். நூற் கல்வியின் இழிவை யறிய ஷேக்ஸ்பியருடைய நூற்களுக்கு உரை கண்ட உரையாசிரியர்களைப் படித்தல்வேண்டும்.

# இருவினை

[நோன்பி]

இந்நில உலகில் பிறககும் மனிதர்களே பரமுத்தி எய்துதற்கு உரியர். மற்றைய அண்டங்களில் வசிப்பவர் பதமுத்தி நிலைகளில் நின்று தாங்கள் ஈட்டிய புண்ணியத்தின் பலனை அனுபவித்த பின்னர் இவ்வுலகிற்கே வரவேண்டும் என்றும், அவ்வண்டங்கள் போக பூமிகள் என்றும, இவ்வுலகு ஒன்றே கர்மபூமி என்றும் அறிஞர்கள் சொல்வர். இதில மக்கள் தங்கள் நல்வினை தீவினைப் பயன்களை அறவே அனுபவித்து இனி வேறு பிறவிவாராத வழிதேட வேண்டும் என்றும் நம் சாத்திரங்கள் வற்புறுத்துகின்றன. திருமூலர்: “இக்காய நீக்கி இனி ஒரு காயத்தில் புகுகுப்பிறவாமல் போம்வழி

தேடுமின்''. ஆகவே, மேலைப் பிறவிக்கு வித்தாகிய அவா என்பதை அறுத்து, ஆகாமியம் (மேல்வினை) விளைய வொட்டாமல் எல்லாம் ஈசன் செயல் என்று நம்கர்மங்களைச் செய்ய வேண்டும் என்பர்; அப்போது பழைய வினையின் தொகுதியாகிய சஞ்சிதம் (தொகை வினை) ஞான அளவில் எரிந்து போய் விடும். இப்பிறவியில் அனுபவிக்க வேண்டிய பிராரத்தம (துவக்கவினை) நம அனுபவத்தால் இந்த தேகத்தோடு அழியும் என்பர்.

மேலே கூறிய கொள்கைகளை அங்கீகரிப்பதில் சிலருக்கு ஒரு சந்தேகம் நிகழும்; அதாவது, "முற்பிறவிகளில் செய்த இன்ன வினையின் பயனாக இப்பிறப்பில இன்ன சுகதுக்கம அனுபவிக்கிறோம் என்னும் அறிவு நமக்கு ஏன் இல்லை'' என்பதே. அதற்குச் சிலர் "நாம் அவ்வினைகள் காரணகாரியத் தொடர்பை அறியாமலிருக்குமாறு இறைவன் செய்துளார்'' என்பர். அல்லது, "பூர்வவினை சம்பந்தத்தை அறிவது திரிகாலமும் உணரும் ஞானிகளுக்கே இயலும்'' என்பர். இவ்வுத்தரங்களைப் பற்றிச் சிறிது ஆராய்வாம்.

பூர்வவினை சம்பந்தத்தை ஞானிகளே அறிவர் என்றுசொல்வதற்கில்லை, ஏனெனில், இராவணனும் தன்னை அழிக்க வந்த சீதை முற்பிறப்பில் வேதவதியாயிருந்து தனக்குச் சாபம் கொடுத்தவள் என்று அறிந்திருந்தான். வங்காளத்தில் ஒரு பெண் குழந்தை தான் பிறந்த ஊருக்குச் சிறிது தூரத்தில் உள்ள வேறு கிராமத்திற்குப் போனதும், அங்கே தான் முந்திய பிறவியில் கிழவியா யிருந்தபோது தான் குடியிருந்த வீட்டை யடைந்து தன் குழந்தைகளுடன் சம்பாஷித்ததும் பத்திரிகையில சிலவருடங்களுக்குமுன் வெளிவந்ததை நேயர்களுக்கு ஞாபகமிருக்கலாம். ஆகவே, ஞானிகள் தவிர மற்றையோர்களும் பூர்வ ஜன்ம உணர்ச்சியைப் பெறக்கூடும் என்று அறிகிறோம். ஆனல் சாதாரணமாய் அப்படிப்பட்ட உணர்ச்சி இல்லாததுகண்கூடு. அப்படி உணர்ந்தாலும் அதனல் பெரும்பாலும் நற்பயன் ஒன்றும் இராதென்றே சொல்லலாம். உதாரணமாக மணிமேகலையில் கோவலன் இறந்ததின் காரணத்தைத் தனக்கு ஓர் தெய்வம் அறிவித்ததாகக் கண்ணகி கூறுகின்றாள். (மணிமேகலை கதைச்சுருக்கம் 158 சுவாமிநாதய்யா 2-ம் பதிப்பு) அப்படித் தெரிந்த பின்பும் தன்கோபம் அடங்காததால் அவள் மதுரை நகரைத் தீக்கு இரை யாக்கினள். தசரதன் தன் மகன் இராமனைவிட்டுப் பிரிந்ததற்குக் காரணம் அப்பிறப்பிலேயே ஒரு ரிஷி புதல்வனைத்தான் அம்பினுல் கொன்றது என்று கௌசலைக்குத் தெரிவிக்கிறான்; ஆனல அவ்வறிவு தன துயரத்தை ஒரு சிறிதும் தணிக்க வில்லை. ஸ்ரீகிருஷ்ண பகவான் தம் காலின் பெருவிரலில் ஒரு வேடன் பாணமபட்டு இறக்க நேர்ந்தது முற்பிறப்பில் அவ்வேடன் வாலியாயிருந்த போதுதான், இராமபாணத்தினுல் அவனை மறைந்திருந்து எய்தது என்று உணர்ந்தார். ஆயினும் அவ்வறிவைக் கொண்டு அவர் தம மரணத்தைத் தடுத்துக்கொள்ளவில்லை. ஆகவே இன்ன வினையால் இன்ன துக்கம் நேர்ந்தது என்னும் சக்தி நமக்கு இல்லாததால் நமக்கு ஒரு கஷ்டமும் இல்லை என்பது திண்ணம. அதற்குபபதிலாகஅவ்வறிவு ஒரு விதத்தில் துன்பமும் தரககூடும். ஆகையாலதான் "அறி வின்மையே சுகம் தருவதாயிருக்க அறிய முயல்வது மூடத்தனம்.'' (While ignorance is bliss, it is folly to be use) என்னும கருத்துடைய ஆங்கிலப்பழமொழி எழுந்ததுபோலும். கர்னன் தன் உண்மைப் பிறப்பை உணர்ந்ததும் அர்ச்சுனனிடம் மும்முரமாய்ச் சண்டை செய்திருக்க முடியாது என்று நாம் ஊகிக்கலாம்; அர்ச்சுனனும் கர்னன் தன் தமையன் என்று அறிந்திருந்தால் பாரத யுத்தமே நடவாமற் போயிருக்கலாம். மேலும், அறிவின்மையும் ஒரு விதத்தில் அநுகூலமே என்னலாம். இந்திரசித்து இறந்த பிறகு அவன் மனைவி சுலோசனை, முன்விழுந்த அவன் கையைக் கொண்டு இராமரிடம் அவள்

சென்று அவன் உடம்பைத் தகனம் செய்ய உத்தரவு பெற்றாள். அப்போது அவளிடம் அனுதாபம்காட்டிய இராமர் மேல் சீறி விழுந்த இலட்சுமணர் தன் தமையன் உதவியால் அவள் முன் பிறவியில் தன் மகள் என்று உணர்ந்து அழுகிறான். இப்படிப்பட்ட வருத்தங்கள் நேரிடாதிருக்கவே நாம் நமபழைய பிறவி உணர்ச்சியை இழந்து விடுமாறு இறைவன் தன்மாயையில் நம்மை அமிழும்படி செய்கிறார் என்று பக்தவிஜயத்தில் கபீர்தாஸ் பிறப்பின் சம்பந்தமாகக் கூறியிருப்பதால் அறிகிறோம். அந்தச் சக்தி திரோதான சத்தியாகும். அதனால் மாயை கன்மம் தொழில் செய்யத் தொடங்கி நம் ஆணவமலத்தை ஒழிக்க இறைவன் நமக்கு உதவி செய்கிறார் என்பர். இதனால்தான் சுவாமி மலை திருப்புகழ், "ஒருவரை ஒருவர் அறியாமலும்.........." என்று முழக்குகிறது. தாயுமானாரும், "அறிவினை மறைப்பதும் நின்னதருளே" என்பர். திருவாசகத்திலும், "மானேர் நோக்கி மணவாளா......நின் சீர் மறப்பித்து இவ்வூனேபுக என்றனை நூக்கி" என்று கூறியிருப்பதால், நாம பிறக்கும்போது நமக்கு இருக்கும் இறைவன் உணர்ச்சியைப் பிறந்தவுடனே இழக்கிறோம் என்று அறிகிறோம். (Words-worth Trailing clouds of glory do we come, from God who is our home) ஆகவே, முறபிறப்புகளை மறபபிப்பது ; கருவில் உள்ளபோது இருநத கடவுள உணர்ச்சியைப பிறந்தவுடன் மறப்பது முதலியவை மறைப்புச் சக்தியாய்த திரோதாயி மூலமாக நேரிடும சம்பவங்கள் என்றும் அவைகளின் இரகசியம் நாம் அறியாதது நமது நன்மைக்காகவே என்றும் சொல்லலாம். தாயுமானாரும் இந்த வினைகளைபபற்றிய இரகசியததின் காரணம தமககுப் புலப்படவில்லை எனறு, "தன்னையே நோவனோ பிறரையே நோவனோ தற்காலமதை நோவனோ பநதமானது தநத வினையையே நோவனோ பரமார்த்தம் ஏதும் அறியேன்" என்பதால் தெரிவிக்கிறார். ஆகவே, வினைகளின் காரண காரிய நிகழ்ச்சியை நாம் ஆராய்வதைவிட, அவ்வினைத்தொடர்பை இறைவன் அருளால் அறுக்க முயல்வதே அறிவுடைமை என்று அறிந்து நாம் தக்கபடி ஒழுகுவோமாக.

# நமது நாட்டில் வழங்கும் பழங்கதைகள்

[சோமசுந்தர தேசிகர்]

நம் நாட்டுச் சிறுவர்கள் ஆவலோடு படிக்கும் கதைகளுள் பஞ்சதநதிரக் கதையு மொன்று. இது பல மொழிகளிலும் வழங்கி வருகின்றது கொண்டே இதன் பெருமை யொருவாறு விளங்கும. மனமகிழ்ச்சியே பொருளாக எழும் கதைகளைப் போலன்றிப பஞ்ச தந்திரக கதைகள் அறிவை விளக்கவல்லன. இப்படிப்பட்ட கதைகளுள் பெரு வழக்கிலிருப்பது குரஙகு முதலையை ஏமாற்றிய கதையாகும். இது 'நாளை வரும் விளாம்பழத்தினும் கையிலுள்ள களாப்பழம் மேல்' The bird in the hand is worth two in the bush என்ற பழமொழிகளின் பொருளை விளக்குவது. கதைச் சுருக்கம் வருமாறு:—கங்கைக் கரையில் நாவல் மரததின்மேற் சுமுகனென்ற ஒரு வானரம் இருந்தது. மரத்தடியில் இளைதத முதலை யொன்று வந்தது. அதனைக் கண்ட குரங்கு அது இளைத்திருப்பதைக் கண்டு சில நாவற் பழங்கள் தந்தது. அதனை யுண்டு களைப்புத் தீர்ந்த முதலை 'உண்டு ருசி கண்டவனும்....கண்டவனும் போகான்' என்பது போல, நாள்தோறும் அங்கே வந்து குரங்கோடு உறவாடிப் பழங்கள்

வாங்கித் தின்று செல்லும். ஒருநாள் முதலை குரங்கு கொடுத்த நாவற பழங் களுள் சிலவற்றைத் தம் மனைவிக்குக் கொண்டு போய்க் கொடுத்தது. அவற் றையுண்ட பெண் முதலை அவற்றின் இனிப்பைக் கண்டு தன் கணவனைப் பழங்கள் வநத விதத்தைக் கேட்டது. ஆண் முதலை தனக்கு ஒரு குரங்கு நண்பன் இருப்பதாகவும் அவன் நாவற் பழங்கள் ஏராளமாகக் கொடுப்பதாக வும், அன்று கிடைத்த வற்றில் தானுண்டு எஞ்சியவற்றைத தனது மனைவிக்குக் கொண்டு வநது கொடுத்த தாகவும கூறிற்று. இதனைக கேட்ட பெண் முதலை ஆண் முதலையைப் பார்த்து 'இநத நாவற்பழமே இவ்வளவு இனிப்பாயிருந்தால் இப்பழங்களையே ஆகாரமாகக் கொள்ளும் குரங்கின் ஈரல் மிக இனிப்பா யிருககுமே; அதனை யெனக்குக் கொண்டு வந்து கொடுக்கவேண்டும்; கொடுககாவிட் டால் உயிர் வாழேன்' என்றது. ஆண் முதலை 'நீ நட்புக்குத் தீங்கிழைக்கிறாய், அது தகாது' என்பது போன்ற சொற் களை எவ்வளவு சொல்லியும் அது கேளாததால் முதலை ஒரு தநதிரஞ் செய்ய எண்ணிக் குரங்கு இருக்கு மிடத்திற்கு வநதது. குரங்கைக் கண்டு 'நண்பனே! உன் மைததுனி நான் நாடோறும் பழம் வாங்கி யுண்பதற் காகக் கோபிக்கின்றாள்; உன்னை யழை த்து விருநது செய்ய விரும்புகிறாள்; வரவேண்டு'மென்று சொல்ல, வான ரம் 'நீ நீரில் வாழ்பவன்; நான் எப்படி வருவே'னென்ன, முதலை தன் முதுகில் ஏறிக் கொண்டால் நீரில் படாமல் வீட்டிற்குக்கொண்டு போவதாகக் கூறி ற்று. அதனைநம்பி வானரம் முதலையின் மேலேறிக் கொள்ள முதலை நீரில் விரைவாகப் போயிற்று. அதனைக் கண்டு அஞ்சின குரங்கு சற்று மெல் லப் போகுமபடி முதலையை வேண்ட முதலை குரங்கைக் கொல்லப் போவ தாக உண்மையைக் கூறிற்று. இதனைக் கேட்ட வானரம் பயந்தபோதிலும், தைரியத்தைக் கைவிடாது, 'நண்பனே இதனை முன்னமே கூறியிருந்தால் மரத்தில் மாட்டி வைத்திருக்கும் எனது ஈரலைத் தந்திருபபேனே, இதறகு இவ்வளவு கஷ்டப்படவேண்டு வதில்லையே' என்றது. இதனைக் கேட்ட முதலை மகிழ்ச்சி கொண்டு குரங்கை மறுபடியும மரத்தடியிற்கொண்டு வந்து சேர்ததது. குரங்கோ உயிர் பிழைத் தோமென்று மரத்திலேறிக் கொண் டது. இதனை யொதத ஜாதகக் கதை வருமாறு:—

## சிம்சுமார ஜாதகம்

பிரமதத்தன் காசியிலே அரசாட்சி செய்து கொண்டிருக்கையில் போதி சத்துவர் இமயமலைச் சாரலில் வானர உருவெடுத்து வாழ்நது வந்தார். அப் பொழுது கங்கையில் ஒரு முதலை தன் மனைவியோடு வாழ்நது கொண்டிருந் தது. நல்ல அவயவங்களோடு நடமாடும் குரங்கைக் கண்ட பெண் முதலை அந் தக் குரங்கின் ஈரலைக் கொண்டுவந்து கொடுக்கும்படி ஆண் முதலையைக் கேட்டது. குரங்கைப் பிடிப்பது எளி தான காரியமல்லவென்று பெண் முத லைக்கு ஆண் முதலை எவ்வளவு சொல்லி யும அது கேட்கவில்லை. பின்னர் ஆண் முதலை ஒரு யுக்தி செய்தது. அது குரங்கைக் கண்டு அக்கரையில் மா, பலா முதலிய பழங்கள் ஏராளமாக இருப்பதாகவும் வானரம முதலையின் முதுகில்ஏறிக்கொண்டால் அக்கரைசேர் ப்பதாகவும் கூறிற்று. இதனைக் கேட்ட குரங்கு பழ ஆசையால் முதலையின் முதுகில் ஏறிககொண்டது. சிறிது தூரம் கங்கையிற் சென்றவுடன் முதலை குரங்கைத் தண்ணீரில் அமிழ் த்த முயன்றது. குரங்கு முதலையை இவ்வாறு செய்யக் காரணமென்ன வென்று கேட்டபோது, அது தன் மனைவியின் இச்சையைத் தெரிவித்தது. குரங்கு தங்களினம மரம் விட்டு மரம் பாயும் இனமாதலால் தாங்கள் எப் பொழுதும் ஈரலை ஒரு மரத்தில் மாட்டி வைப்பது வழக்கமென்றும், தானும் அதனையொட்டிப்பக்கத்திலுள்ள அத்தி மரத்தில் ஈரலைத் தொங்க விட்டிருப்ப

தாகவும் கூறவே, முதலை குரங்கை மரத்தடியிற் கொண்டுபோய் விட்டது. குரங்கு உடனே மரத்திலேறிக் கொண்டது. முதலை ஈரலைத் தரும்படி குரங்கைக் கேட்டபோது, குரங்கு முதலையைப் போன்ற மூடாத்மா இல்லையென்றும், ஈரல் உடலை விட்டுப் பிரிகக முடியாத ஓர் உறுப்பு என்றும் கூறியதைக் கேட்ட முதலை வெட்கிப் பணமிழந்த பாவிபோல் திரும்பிச் சென்றது.

இக்கதையினுல் பல நீதிகள் விளங்குகின்றன அல்லவா?

# சுந்தர சுலோசனு

[திரு. டி. ஆர். சாரங்கபாணி, எம். ஏ.]

(தொடர்ச்சி)

## "இறைவனை இரந்து இருங்கள்"

தயாநந்தலால் என்னும் பெரும் மார்வாடியினிடத்து நின்றும் நற்சாக்ஷிப் பத்திரம் பெறறு உரிமையுறையுளில் இரண்டாண்டுகளாகக் காவற்காரனுக இருநதுவரும் முருகேசன் மீது ஐயகுமாரன் பெரிதுஞ் சந்தேகங் கொண்டான். எவ்வகையானும் அவனுடைய உதவியான் உளவறிதல் வேண்டும் என்ற எண்ணம் அவனகத்தில் உதித்தது. தான் உரிமை உறையுளிற்கு வந்ததிலிருந்து உள் உளவாக இருந்து தன்னுடைய விரோதிககு அடிக்கடி எல்லா விஷயங்களையும் அறிவுறுத்தியவன் முருகேசனேயாவன் என்ற எண்ணம் அவனைப் பிடித்தது. பூட்டப்பட்டிருந்த தன்னுடைய அறையில் "சண்முகம்" என்னும் பொய்க் கையொப்பமிட்ட கடிதம் வைத்தவனும் அவனே என்றும அவன் சந்தேகிததான். இரவில் உரிமையுறையுளின் கதவங்களைப் பூட்டிக் காவல் புரியும் பொறுப்பையுடைய அவனே, தான் மோகனசுநதரத்தின் அறையுள் நுழைந்து துப்பகப்படுமோ என ஆராயுஞ் சமயம் பார்ததுத் தன்னுடைய அறையுள் நுழைந்து தன்னுடைய அறையுள்ளிருந்த தன்மேஜையின் மீது தன் விரோதியின் கடிதத்தை வைத்தவன் என்றும் அவன் உன்னினுன். முருகேசன் நற்சாக்ஷிப்பத்திரம் பெற்ற தயாநந்தலால் யார் என்று அறிந்தாலல்லான், தன்னுடைய உண்மை விரோதியைக் கண்டறிய இயலாதென அவனுக்குத் தோன்றியது.

மேலோதிய எண்ணங்கள் அவன் அகததில் உதிதததும் தன்னுடைய பணியாளனுகிய சத்தியநாதனை ஐயகுமாரன் விளித்தான்.

"சத்தியநாத! இங்குக்காவற்காரனுக இருக்கும் முருகேசனை நீ அறிவாயே."

"அறிவேன் ஐய! நான் இங்கு வந்த உடனே அவன் என்னுடன் சிநேகஞ் செய்துகொண்டான். அவன் என்னிடத்திலிருநதும் சில உண்மைகளை அறிய எண்ணிச் சில கேள்விகளைக் கேட்டான். அவன் கேட்ட முறைகளை நோக்கும்பொழுதே அவன் உம்மையும் என்னையும் அறிவானெனவும், இயன்ற வரையில் நம்மிடத்திலிருந்து நாம் இந்தக் கேசில் எவ்வளவு அறிவோமெனவும், யார் மீது சநதேகங் கொண்டிருக்கிறோம் என்றும் அறிய விரும்பினுன் எனவும் நான் உணர்ந்து அவனுக்குச் சநதேகம் அளியாதவாறு வார்த்தையாடினேன். மேலும் ஐய! அவன் சண்முகசுநதரப் பிரபுவையும் மோகனசுந்தரத்தையும் மிகவும் இழிவாகப் பேசி, அவர்கள் மிகவும் ஒழுக்க ஈனர்களெனவும் அறைந்தான். எனவே, அவன் நாம் சண்முகசுந்தரப் பிரபுவின் மீதும் மோகனசுந்தரத்தின் மீதும் பெரிதும் சந்தேகங்கொள்ள வேண்டு

மென்றே அவ்வாறு பேசினனெனவும் விளங்குகின்றது. அல்லதல்லான் ஐய! நாம் இங்குவந்த இரவு எனக்குத தெரியாத ஒரு காரியத்தை நீர் செய்தீர். நீர் ஒருவரும் அதனைப் பார்க்கவில்லை என்று எண்ணியுள்ளீர். ஆனல், நீர் திருடனைப் போலும கரிய அங்கியையணிந்து மோகனசுநதரத்தின் அறையைக் கள்ளச்சாவியிட்டுத் திறந்துசெல்லுங்கால், இருவர் உம்மைக்கவனித்துக கொண்டிருந்தார்களென நீர் அறியீர்.''

''சத்தியநாத! நீ கூறுவது உண்மைதானு? அவர்கள் யார்? நீ யொருவன் என்று விளங்குகின்றது.''

''ஆம் ஐய. நான் இந்த உரிமையுறையுளில் பணியாளனு யிருக்கும் ஒருவனைக் கவனித்தேன். அவன் உமமைக் கவனிப்பதறிநதேன். உம்முடைய பணியாளனுகிய நான் உமக்கு ஓர் ஆபத்தும் வாராது காத்தலே என்னுடைய முக்கிய கடனென நன்குணர்வேன். எனவே, நான் அவனைக் கவனிக்க நேர்ந்தது. அப்பொழுது அவன் நீர் அறையுள் சென்றதும் உம்முடைய அறையைத் திறந்து உள் நுழைந்தான். நுழைந்த சில நிமிடங்கள் கழித்து அறையுள்ளிருந்து வெளிப் போந்தான். எங்கும் இருள் சூழ்ந்திருநதமையான் அவ்வறையுள் என்ன செய்தான் என நான் அறியேன். ஆனல், அவன் அறையுள்ளிருந்து வெளிச் சென்றதும் நான் அவனைத் தொடர்ந்து சென்றேன். அவன் அவ்விருளில் உரிமையுறையுளை விட்டுச் செல்வது கண்டேன். அவ் வேளையில் அவன் வெளிச் செல்வதற்கு ஒரு முக்கிய காரணமிருத்தல் வேண்டுமென எனக்குத் தோன்றியது. எனவே, நான் அவனைத் தொடர்நது சென்றேன். அவன் நேராக உரிமையுறையுள் சாலையின் வாயிலாகச் சிறிது தூரஞ் சென்றான். ஆங்கு ஓர் ஆள் அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்தான்.

'முருகேச!'

'ஆ! நடராஜ!'

'அக்கடிதத்தை வைத்துவிட்டாயா?'

'வைத்துவிட்டேன். ஆனல வேறொரு முக்கிய சமாசாரம கூற வேண்டும்' என்று மிகவும இரகசியமாக ஏதோ இயமபினன். அமமொழிகள் என் செவியிற்படவில்லை. ஆனல நீர் கரிய அங்கியைத தாஙகி மோகன சுந்தரத்தின் அறையுள் சென்ற விஷயத்தைப்பற்றியே அவன் கூறியிருப்பானெனத் தோன்றுகிறது.''

'' சத்திய நாத! பின்னர் நடந்தியமபு.''

''பேசியவுடன் நடராஜனிடம் விடைபெற்றுக் கொண்டு முருகேசன் உரிமையுறையுளுக்குத் திருமபினன். பின்னர் யான் ஒளிந்து நடராஜனைத தொடர்ந்து சென்றேன். அவன் உரிமை யுறையுள் சாலையின் கோடியிலுள்ள ஒரு மாளிகையுள் நுழைநதான். அவனைத்தொடர்ந்து சென்ற யான் அம்மாளிகையின் வெளிக் கதவத்தில் பதிக்கப் பட்டிருநத எண்ணை அறிநதேன். நான் இருட்டில எவ்வாறு உணர்ந்தேன் என நீர் ஐயுறலாகும். ஆனல், நடராஜன் அம்மாளிகையுள் நுழைந்த சில நிமிடங்களில் ஒருபெரிய மோட்டார் வண்டி அம்மாளிகையுள்ளிருந்து வெளிப்போநதது. அதனுடைய எண் 6266. அதனுள் இருநதவர்களை யான் அறிய இயலவில்லை. ஆனல் உள்ளே இருவரேனும் இருக்க வேண்டுமென நான் உணர்நதேன். ''அடே'' என்ற ஒரு சப்தமும் ''அடியேன்'' என்ற ஒரு மொழியும், ''சுவாமிகளே'' என்ற ஒலியும் இருவர் உண்மையில் வண்டியிலிருந்தார்கள் என்பதை விளக்கிய தெனினும், ஒருகால் பேசிய இருவரில் ஒருவன் வண்டி யோட்டுபவனுக இருப்பினும் இருத்தலாகும் எனவும் எனககுத்தோன்றுகிறது. அவ்வண்டி சென்னையை நோக்கிச் சென்றது. அவ்வண்டி மறைந்ததும் நான் மெதுவாக என்னுடைய மின்சாரக் கைவிளக்கினுதவியான் அவ்வில்லத்தின் கதவிலக்கம் 60 என உணர்நதேன்.''

"சத்திய நாத! மெச்சினேன் உன்னுடைய நுண்ணறிவை. நாம் உடனே சென்னைக்குச் செல்லவேண்டும். வண்டியைக் கொண்டுவா. வழியில் இதர விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொள்ளலாம். ஆனால் நாம் செல்வதன் முன்னர்ச் சாரதாவைச் சந்தித்துச் சில விஷயங்களை யறிதல் வேண்டும். நான் பதினைந்து நிமிடங்களுள் வந்துவிடுகிறேன். நீ வண்டியைத் தயாராக வைத்திரு"

" அப்படியே ஆகட்டும் ஐய " எனக் கூறிவிட்டுச் சத்திய நாதன் அறையை நீத்துச் சென்றான்.

சத்தியநாதன் அறையை விட்டுச் சென்றதும் ஐயகுமாரன் தன்னுடைய அறையை விட்டு வெளிவர, அங்குச் சுலோசனுவும் சாரதாவும் தனக்காகக் காத்திருப்பது கண்டான். தான் செல்வதன் முன்னர்ச் சாரதாவைச்சந்தித்து வார்த்தையாடிச் சில உண்மைகளைக் கண்டறிய வேண்டும் என்று தான் எண்ணியதற் கேற்பச் சாரதாவை ஆங்குக் கண்டதும் ஐயகுமாரன் களிப் பெய்தினன்.

"தந்தை நீர் இப்போது சென்னைக்குச் செல்லப் போகின்றீரெனக் கூறினர்கள்."

"ஆம் அம்மா"

"செல்வதன்முன் உம்மைக் காணலாமென இங்கு வந்தேன். என்னுடைய தோழியாகிய சாரதா உம்மிடம் பேச விரும்பினள்."

" அம்மா சுலோசனு ! சில நிமிடங்களுக்கு முன்னல் யானும் உனனுடைய தோழியாகிய இவர்களை நேரில் கண்டு இரண்டொரு விஷயங்களைக் கண்டறிய வேண்டுமென எண்ணினேன். நான் யாரென ஒருவரிடமுங் கூறலாகாதென இயம்பியும் நீ கூறிவிட்டது பெரும் விசனத்தையே அளிக்கின்றது."

"ஐயகுமாரரே ! உண்மையை ஒளித்துப் பொய்யுரைய என்மன மெழவில்லையே, யானென்செய்வேன் !"

"அவ்வாறு கூறிவிட்டதால் காரியம் ஒன்றும கெட்டுவிடவில்லை. அதற்காக நீ வருநதாதே."

"ஐயகுமாரரே! என்னுடைய காதலர் மீது கள்வனெனும் பட்டஞ் சூட்டப் பட்டதையும் சில நிமிடங்களுக்கு முன் யான் தந்தையினிடமறிந்தேன். அறிந்தவுடன் உம்மைக் கண்டு பேச எண்ணினேன். அவர் திடீரென மறைந்ததாலன்றே அவர் கள்வனுகவும் சந்தேகப்படுகின்றுர்? ஆ! ஈச."

"சுலோசனு! மோகனசுநதரர் குற்ற மற்றவர். நகைகளை யெல்லாங் களவாடியவனைக் கண்டு பிடிததற்கே யான் இப்பொழுது சென்னைககுச் செல்கின்றேன். வீண் பழியைத் தாங்கிய மோகன சுநதரர் அவைகளைக் களவாடவில்லையென நான் உம்முடைய தந்தையினிடமும் இயம்பினேனே!"

"ஆம்! ஐயகுமாரரே சில நிமிஷங்களுக்குமுன்னரேயே அதனையும் அவர் எனக்குக் கூறினர். ஆனல் நீர் காலையில் என்னை வினவிய கேள்விகளை எல்லாம் நான் சிநதிக்கையில் உமக்கும் என்னுடைய காதலர்மீது சிறிது சந்தேக மிருந்ததாகவே விளங்குகின்றது. ஐயகுமாரரே! என்னே! அவருடைய விதி யிருநதவாறு!"

"அம்மா! நீர் வீண் கவலையுற்றுப் பயனென்! நான் காலையில் உமக் களித்த வாக்கை மறந்துவிட்டீர் போலும்!"

"ஐயகுமாரரே! என்னுடையதுயரை ஒழிக்க வல்லார் நீர் ஒருவரே என நான் அறிவேன். எனினும், மனக்கவலை என்னை வாட்டுகின்றதே. யானெனசெய்வேன்?"

"அம்மா சுலோசனு! ஆண்டவன்மீது நின்னுடைய பாரத்தையிட்டு நீர் கவலையற்றிருத்தல் சாலவும் நன்று. அமமா சாரதா! நான் உமமுடன் சில நிமிடங்கள் உன்னுடைய நலனைக் கருதியே தனிததுப் பேசலாமா?"

"உம்மிடம் பேசுவதற்காகவே நான் வந்தேன்."

" காலம் அதிகமாகிவிட்டது. நான் இவ்விருளில் சென்னைக்குச் செலல வேண்டும். செல்வதன் முன்னர் இரண் டொரு கேள்விகளையே நான் உம்மை வினவ எண்ணுகின்றேன். அநதக் கேள்விகளுக்கு நீ உண்மையான பதிலை யிறுத்தல்வேண்டும்."

"ஜயகுமாரரே! கேளுங்கள்."

"அம்மா! சண்முக சுந்தரப் பிரபு வைப்பற்றிய இரண்டொரு விஷயங் களையே நான் இது போழ்து வினவ விரும்புகின்றேன். அமமா! உண்மை யை நான் உணர்வேன். உனனுடைய மனக் கவலையையும் இனிதோர்வேன். சண்முகசுநதரப் பிரபுவுக்கும் உனக்கு முள்ள ஒரு தொடர்பை யான் அறி வேன். சென்ற ஓராண்டாக இருப் பிடந் தெரியாது மறைந்து நிற்கும அவருடைய இருபபிடத்தை யறிந்து அவர் தாங்கி நிற்கும் வீண் பழிகளை யெல்லாம் ஒழித்தலே என்னுடைய கடனாகக் கொண்டுள்ளேன். நீங்கள எண்ணுமாப்போல் ஒழுக்கம் நீத்து, கள்ளுண்ணவும் வேசியருடன் உற வாடவும் அவர் தொடங்கிவிட்டார் என சந்திரசேகரப் பிரபு எண்ணுவது பெருந் தவறெனவே எனக்குத தோன்றுகின்றது."

"ஜயகுமாரரே! உண்மைதானா நீர் கூறுவது? அவர் வேசியருறவை நாட வில்லை யென்று நீர் கூறுவது உண்மை தானா? கள்ளுண்ணும் கொடும பழக் கத்தை அவர் கொண்டார் என்பது பொய்யா? ஆ! ஈசா! அஃதுண்மை யெனின் அவர் மார்வாடிகளிடத்தில கடன் வாங்கியதேன்?"

"அம்மா சாரதா! இதில் என்னவோ ஒருபெருஞ் சூழ்ச்சி யிருக்கின்றது. அதனையே நான் ஆராய்ந்தறிதல் வேண் டும். இப்பொழுது யான் எடுத்துக் கொண்ட கேசில் சண்முகசுநதரப பிரபு வும் மோகன சுந்தரப் பிரபுவும் சம்பந் தப் பட்டிருக்கின்றார்களென யான் அறிவேன். இந்தக் கேசில் உண்மைக் குற்றவாளியை யான் கண்டுபிடிததும் அதன் வாயிலாகவே சண்முகசுநதரப் பிரபுவும மோகனசுநதரப் பிரபுவும குற்ற மறறவர்களென்பது தானாகவே புலனாகும. இப்பொழுது நடந்து வரும விஷயங்கள சென்ற இரண்டாண் டாக ஒரு களவன் செய்துவரும் பெருஞ் சூழ்சசியின் பலனென்பதை யான உணர்கின்றேன். சண்முகசுந தரததின்மீது கொடும் பழிகளைச சுமத்தி அவர் ஒழுக்க ஈனரென நீங்கள் அனைவரும் எண்ணுமாறு செய்தவனும், மோகன சுந்தரததைத் திடீரென மறையுமாறு செய்தவனும், அன்று சநதிரசேகரப் பிரபுவினுடைய இரும் புப் பெட்டியிலிருநது நகைகளையும், பொருளையுங கொளளை யடித்தவனும், தான் களவாட அப்பழி மோகனசுந் தரத்தின்மீது விழுமாறுசூழ்ச்சி செய்த வனும் அக்கள்வனே யாவன். ஆதலின் நீயும் இவ்வுரிமை யுறையுளிலுள்ள ஏனை யோரும் சண்முகசுநதரம் ஒழுக்க யீன ராகிவிட்டா ரெனவும், தூர்த்தருடன் கூடித் தீ வழிப்பட்டாரெனவும், அவ் வுண்மை வெளியாகிவிட்டதென்வுணர்ந ததும் உரிமை யுறையுளை நீத்து ஓராண் டாக மறைந்தாரெனவும் எண்ணுதல் தவறேயாகும்."

"ஆ! ஜயகுமாரரே! அவர் தன்னு டைய உயிரென மதிக்கும் யானும அவ் வாறே எண்ணினேன்."

"அம்மா! அவ்வாறு நீ எண்ணியது உன்னுடைய தவறன்று. அபபெருங் கள்வனுடைய சூழ்ச்சியான் நீ அவ் வாறு எண்ணினாய். சில தினங்களில் நீ மீண்டும் உன்னுடைய காதலரைப் பெறுவாய்."

"ஆ! ஈச! குற்றமறியா அவர் வீண் பழிகளைத் தாங்கி எங்குற்றனரோ? ஓராண்டாக உணவும் உடையும் பொரு ளுமின்றி எங்கு இடிப்புண்டு திகைக் கின்றாரோ? ஏ! முருக! தாய்மையுடைய வனெனக் கருதப்படும் நீயும் உன் மெய்யடியாராகிய என் காதலருக்கு ஆபத்து சேர்ந்த சமயத்தில் உதவி யாற்றாது வாளா இருந்ததென்? தாய் மை மிகுநத என் காதலர் வீண்பழித்

தாங்கி துச்சிற் கிடந்து துயருற நீ அடியார்க் கடியனெனப் பெரும் பெயர் பூண்டுப் பெருமையுடன் சிறக்க இலங்குவதென்! உன் அடியார்க் காபத்து வாராமல் காத்தல் உன்னுடைய கடனன்ருே? ஐயகுமாரரே! என்னுடைய இன்னுயிரனைய காதலரை எனக்கு மீண்டும் அளிப்பீரா? அவர் குற்றம் அற்றவரென்பதை உலகம் அறியுமா? உலகினர்-அவரை-உண்மையை ஓராது நாவில்நரம்பில்லாது பழிக்கின்றனரே."

"அம்மா! சாரதா! நீ கவலையுருதே. "மருவுமடியார்கள் மனதில் விளையாடும் மரகத மயூரப்பெருமா"ளுகிய முருகன் மறந்தும் தன் மெய்யடியார்களைக் கைவிடான். "அயனென வாகி அரனென வாகி அரியெனவாகி அவை மேலாய்" முழுமுதற் கடவுளாகிய "போ பெருந் தெய்வமனைத்திறகும் பெருந் தேவன் தானெனவே" சிறக்க விளங்கும் முருகுடைய முருகனருளான் யான் உன்னுடைய துயரைக்களைவேன். நீ சிறிதுங் கவலையுருதே. அம்மா! சாரதா! உன்னுடைய காதலராகிய சண்முக சுந்தரர் மறைந்த அன்றிரவும் உனக்கெழுதிய கடிதத்தின் கையொப்பத்தை மாத்திரம் யான் இப்பொழுது பார்க்க விரும்புகின்றேன்."

"ஐயகுமாரரே! நான்சென்றுஅதனைக் கொண்டு வருகிறேன்."

"அம்மா! செல்வதன் முன்னர் யான் வேறொரு விஷயத்தையும் அறிதல் வேண்டும். சாரதா! அவர் சென்ற ஓராண்டாக ஒரு கடிதமும் உனக்கு வரையவில்லையா?"

"இல்லை."

"அவரைப் பற்றிய விஷய மொன்றும் நீ அறியவில்லையா?"

"ஐயகுமாரரே! மோகன சுந்தரப் பிரபுவினிட மிருந்து சில விஷயங்களை யுணர்ந்தேன். அவர் அவைகளை இரகசியமாக வைத்துக்கொள்ளுமாறு என்னிடங் கூறினர். அவைகளை யான் சுலோசனைக்கும் அறைந்தேனில்லை."

"அம்மா! யானும் அதனை இரகசியமாகவே வைத்துக் கொள்ளுகிறேன். நீ அதனை மறைப்பதால உனக்கொரு இலாபமு மில்லை. என்னிட மியம்பினுல் அவைகளின் வாயிலாக நான் உம்முடைய காதலருக்கும் அவர் வாயிலாக உனக்கும் பெரும் உதவி செய்ய ஒல்லும்."

"ஐயகுமாரரே! அண்ணு-நான்மோகனசுந்தரப் பிரபுவை அண்ணுவென்றே அழைப்பது வழக்கம் - அண்ணு ஒரு முறை சென்னையில் தம்புச் செட்டி வீதியில் ஓர் இல்லத்தில் அவரைக் கண்டாராம். அவர் தேகம் மெலிந்து வறுமையால்பெரிதும்வாடியிருந்ததாம். அவருக்குச் சிறிதுபொருளுதவி செய்யுமாறு அவர் அண்ணுவைவேண்ட, அண்ணுவும் தனனிடத்திலிருந்த பொருளை யெல்லாம் அவருக் களித்தாராம."

"சாரதா! மோகன சுந்தரம் உன்னுடைய காதலரைஎப்பொழுது சந்தித்தாராம்."

"தாம் விடுதலைக்குச் சென்னையிலிருந்து வருவதற்கு முந்தின நாளாம்."

"அவருக்கு எப்படிஉன்னுடையகாதலரின் உறைவிடம் தெரிய வந்தது?"

"என்னுடைய காதலர் அவருக்குக் கடிதம் ஒன்று வரைந்திருந்தாராம்."

"அதற்கு முன் சென்ற ஓராண்டாக மோகன சுந்தரர் சண்முக சுந்தரத்தின் இருப்பிடத்தை அறியாரே!"

"அறியேனென்றே அவர் என்னிடங் கூறினுர்."

"சாரதா! உன்னிடம் ஏதாவது விஷயங்கூறுமாறு தம்முடைய சோதரரிடங் கூறினுரோ?."

"ஆம். ஐயகுமாரரே! என்னை வீணுக வருந்தவேண்டா மெனவும், சில மாதங்களில் என்னைக் காண்பதாகவும் என்னிடங் கூறுமாறு கூறினுராம். மேலும் அண்ணு கூறியதிலிருந்து என்னுடைய காதலர் ஏதோ ஒருபெரிய இடுக்கணில் சிக்கி யிருப்பதாகவே தோன்றுகின்

றது. அண்ணு கூறிய மொழிகள் இப்பொழுதும் என்னுடைய நினைவில் மிளிர்கின்றன. "சாரதா! அண்ணு ஒரு மோசக்காரனிடம மாட்டிக் கொண்டிருக்கிருா. காவியைத் தாங்கி உலகை ஏமாற்றித் திரியும அப்பாதகனை-ஆ! சாரதா கொலை செய்திடினும் பாவமாகாது. நாளைககுப பத்தாயிரம ரூபாயை யான் அச்சண்டாளனுக் களித்திடின், அண்ணுவை மீட்டு விடலாகும். இதுவும் இறைவனுடைய சித்தம் போலும். ஆ! முருக" என அவர்-ஜயகுமாரரே கண்ணீர் விட்டார்."

"அம்மாசாரதா! யான் ஊகித்தவாறு சில உண்மைகள் புலனுகின்றன. இறைவனைப் போற்றிநில். நின்னுடைய துயர் மறையும் காலம் நெருங்கி விட்டது. அவனருளால் யான் அப் பாதகனைப் பிடித்து வாட்டுகின்றேன். நீ சென்று உன் கடிதத்தைச சிறிது கொண்டு வருகிறுயா?"

"இதோ கொண்டு வருகிறேன்" எனக் கூறிச்சென்ற சாரதா சிலநிமிடங்களில் சுலோசனையுடன் திரும்பிக் கடிதத்தை ஜயகுமாரன் கையிற் கொடுத்தாள். ஜயகுமாரன் விளக்கி ஞெளியில் தன்னுடைய பூதக்கண்ணுடியின் யால் அக்கடிதத்தின் கையொப்பத்தை ஒருமுறை நோககி விட்டு, கடிதத்தை சாரதாவினிட மீநது "ஆம் மணியாகி விட்டது. நான் சென்று வருகிறேன். சுலோசனு! சாரதா! நீஙகள் இருவருங் கவலைபுருது இறைவனை இரந்து இருங்கள். உங்களுடைய துயரம உஙகளை விட்டகலும், சென்று வரட்டுமா?"

"ஜயகுமாரரே! சென்று வாருங்கள்; ஜயகுமாரரே! சென்று வாருங்கள். நீர் மீண்டும எபபொழுது வருகிறீர்கள்?"

"சுலோசனு! அநேகமாக நாளைக்கு இஙகு வருவேன்."

அதுகாலை வெளியில் மோட்டாரின் ஒலி யோசை கேட்டது.

"என்னுடைய பணியாளனுகிய சதநிய நாதன் எனக்காக வண்டியுடன் நெடுநேரம் காத்துக கொண்டிருககிறுன். நான் சென்றுவருகிறேன்" எனக் கூறி ஜயகுமாரன் வெளிப்போந்து தன் வண்டியுள் ஏறியமர்ந்து "சத்தியநாத! வேகமாகச் சென்னைக்குச் செல்" என்னலும் வண்டியும் அறுபது காதம் வேகத்தில் சென்றது.

# திருக்கோயில் வழிபாடும் சீர்திருத்தமும்

[திரு. போன்னம்மாள், பி. ஏ., எல். டி.]

## I

### "கோயில்" என்ற சொல்வழக்கும் கோயிற்பணியின் புராதன நோக்கமும்

தற்போதுள்ள தமிழ்நூல்கள்யாவற்றினும் புராதன முடைத்தாய்ப் பெரியோரால் கருதப்படும் நூல் தொல்காப்பியம் என்பது யாவருமறிந்ததே. அதன்கண் கடவுளரைப் பற்றியும், அவர் வழிபாட்டினைப் பற்றியும் ஆங்காங்கே கிளத்தப்பட் டிருப்பினும் கடவுளரின் உருவினைப் பற்றியோ அன்றி அவரிருக்கையைப் பற்றியோ எவ்விடத்தும் சான்றுகள் காணக் கிடையாவென அறிஞர் கூறுவர். 'கோயில்' என்பதற்கு அரசன் மனை என்பதே வழக்கா யிருநதிருககக் காண்கின்றனம். ஆயின், கடைச்சஙகநூல்களில்'கோயில்' என்ற பதம் நாம் தற்காலம் வழங்கும் பொருளில் காணப்படா நின்றது. சிலப்பதிகாரத்தில்,

"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செவவேள் அணிதிகழ் கோயிலும்
வால்வளை மேனி வாலியோன் கோயிலும்
நீல மேனி நெடியோன கோயிலும்
மாலை வெகுண்ட மன்னவன கோயிலும்"

என வருதல் காண்க.

'கோயில்' என்ற பொருளைக்கொண்ட 'கோட்டம்', 'நகரம்', 'இமயம்', 'பள்ளி' என்னும் சொற்களும் வழக்கிலிருந்தன என்பது சான்றோர் துணிபு.

## கோயில் கட்டப்பட்ட காலம்

வேதகாலம், பிராமண காலம், உபநிடத காலம், மனுக்காலம் என ஆன்றோரால் பிரிக்கப்படும் நம் இந்து மதச் சரித்திரத்தின் இறுதிக் காலமாகிய மனுக் காலத்திலேதான், அதாவது ஏறக்குறைய கி. மு. 250-வது ஆண்டிற்முன் கோயிலைப் பற்றியும் கோயிற் குருக்களைப் பற்றியும் முதன் முதலாகத் தெளிவாய்க் குறிக்கப்படுகிறதைக் காண்கின்றனம் என ஆராய்ச்சி வல்லார் கூறுகின்றனர்.

## கோயில் கட்டப்பட்டதன் நோக்கம்

மனுக் குலம் அனைத்திலும் யாது காரணம் பற்றியேனும் சமய வுணர்ச்சியும் கடவு ளுணர்ச்சியும் ஏதோ ஒரு வாறு எக்காலமும் இருந்து வருகின்றன.

''அஞ்சி லாயினும் அன்புபட் டாயினும்
நெஞ்சம் வாழி நினை நின்றியூரை''

என்ற ஆளுடைய பிள்ளையார் கூற்றின்படி 'ஆதிகால மக்கள் முதற்கண் அச்சத்தால் கடவுளை வழிபட்டோரே யாவர். பல சக்திகள் நன்மையையும் தின்மையையும் விளைவிக்கும் தன்மையனவென உணர்நது, அவை தம்மைத் துன்புறுத்தா வண்ணம, அவற்றின் தயைபெற நாடி வழிபட்டார். ஞாயிறு, திங்கள், வைகறை, வானம், தீ, மழை, இடி, காற்று, ஆறு, மலை முதலிய இயற்கைப் பகுதிகளே முன்னோர் வழிபட்ட தெய்வங்களாகும்.'

'இவற்றின் தயவைப் பெற உயிர்ப் பலி கொடுத்தனர். இப் பலிப் பொருளோடு சேர்த்தோ தனித்தோ தாமுண்ணும் மரக்கறி யுணவுகளில் பலவற்றையும் படைப்பதுண்டு. வேள்வியில் தமது குறையிரந்து, விண்ணப்பத்தோடுதேவரைப்' புகழ்ந்தும் ஸ்தோத்தரித்தனர்.

மேற்கூறிய உயிர்ப் பலிக்கான மேடையே ஆதியில் மானிடர் கடவுளைசசந்திதது வழிபட்ட கோயிலாகும். இத்தகைய கடவுள ரிருக்கை மலையின் மேலும், ஓரோர் இடத்தில் இயற்கை வளம் செறிநததோர் செழிததுத தழைத்த மரத்து அடியிலும் அமைக்கப்பட்டது.

சிறிது அறிவு உதித்த காலையில் கடவுளரைப் பற்றித் தமககுச் சிந்தையில் தோன்றியபடி கடவுளின் லட்சணஙகளைப் பல சித்திரங்களாக வரைந்து வைத்ததோடு உருவாரூபமாயும் படைத்துக் கோயிலில் வைத்தனர். இவை பலதிறப்பட்டஉருவங்களாயின.

## கோயில் அமைப்பு முறை

யாதுகாரணமுமின்றி, இயல்பாகவே தம்மினின்றும் கடவுளுணர்ச்சி எழுந்த தன் காரணமாகத் தெய்வம் தம முடலையே கோயிலாகக் கொண்டிருக்கிறார் என்றுணர்ந்த முன்னோர் அவரை முன்னிலைப்படுததி வழுததும் ஆர்வமுடையரானார். ஆகலின் அவரிருக்கையெனச் சமைத்த கோயில்கள் மானிட உடற்றத்துவங்களைக் குறிக்குமாறே சமைத்தனர்.

'அகவாலயத்தை முதலில் மானிடர்க்குணர்த்தி அவ்வழிபாட்டை உயிராற்றல் முடியாதென ஐயமுற்ற நம் பண்டை மக்கள் புறவாலயத்தை அகவாலயக் குறிகளாக்கினர். புறவாலய வழிபாட்டால் உள்ளத் துறுதியும் தூய்மையும், அருமபொருளுணருமஆற்றலும் உண்டாகப் பெறுதற்காக மக்களுக்கு அவ்வாலயாதி வழிபாடுகளால் சரியையாதி முதலிரு நெறிகளை வற்புறுத்திப் பின்னர் அவ்வழிபாட்டினும் சிறந்தது அகவாலய வழிபாடெனப் பெரியோர் வழிகாட்டிச் சென்றனர்'. பல்லாண்டுகள் சென்றும் இப்பெரியாரது நன்னோக்கம் நிறைவேறப் பெறாது இன்னும் புறவாலய வழிபாடொன்றே சிறப்பாகச் செய்யப்படுகின்றது மிக இரங்கத்தக்கதே. நிற்க.

## அகவாலயச் சிறப்பு யாது ?

ஆலயஞ் சென்று தொழல் அகவாலயத்திற்கு வழிநடத்தும் ஒரு படியாக மாத்திரம் கொண்டு பின்னதையே முடிவான சிறப்புடைத்தாய்க் கொண்டனர் நம் பெரியார் என்பதற்குப் போதிய சான்றுகளுள்ளன. அவற்றிற் சில கூறுதும் :

" அகத்தினுட் பூசை செய்வாராக்
 கருவருப் பில்லை கொல்லும்
பகைத்தொழி லில்லை அல்லற்
 படுதலும் உடலுக் கில்லை
உகப்புறு பலமும் மேலாம்
 உறும்பல முனியி னற்பம்
சகத்தினுட் பூசை செய்வார்
 தமக்கெலாம் வருத்தஞ் சார்ந்தும் "

—சிவதருமோத்ரம்.

" சிறந்தகத்துள் ஆன்மாவில் உறைசிவனைப்
 பூசையினைச் செய்யா தொழிந்து
மறந்துபுறத் தினிற்பூசை வருந்தியே
 இயற்றுபவன் ஆவினினும்
கறந்தபா லடிசில்அகம் கையிலே
 யிருப்பதுந்தான் கண்டு ஞ்சி
புறங்கையினை நக்குபவன்
 போலுமால் "

" காயமே கோயி லாகக்
 கடிமனம் அடிமை யாக
வாய்மையே தூய்மை யாக
 மனமணி இலிங்க மாக
நேயமே நெய்யும் பாலாய்
 நிறையநீ ரமைய வாட்டிப்
பூசனை ஈச னார்க்குப்
 போற்றவிக் காட்டி னோமே"

—திருநாவுக்கரசர்.

"என் சிந்தை கோயிலாக வாழுங்குரு"

—தாயுமானவர்.

"அன்பர் மனமே கோயிலாக்கொண்டவன்"

—மணிவாசகர்.

" மடங்கலிஞ்சனம் வார்த்தளிப்
 பிண்டிமும் மாமதில்சூழ்
கிடங்கலர் சோலைகள்
 நாடகசாலைகள் கேடில்விண்ணோர்
அடங்கலும் ஆடுகின்ற
 ஆடகக்கோயிலின் உம்மடியேன்
முடங்கல் மனையுமே
 இனிதாயிற்று எம்முதத்தனுக்கே"

ஏவ்வாறு நம் தென்னிந்தியக் கோயில்களையொழுக்கத்துக்குரிய நற்களங்களாக்கலாம ?

மேற்கூறிய அகவாலய வழிபாட்டினை முடிந்த பொருளாக் கொண்டு, புறவாலயத் தொழுதலை நம மூதாதைகள் ஏற்படுத்தியிருக்கத் தற்காலம் நம நாட்டு இளைஞராலும், நாகரிகம் பெற்றுள்ள மக்கள் பலராலும் கோயில் வழிபாடு எள்ளி நகையாடப்படும் நிலையைஅடைந்திருக்கிறதை நாம்எங்கணும் காண்கிறோம். காரணம் யாது ? ஒரு தேயமோ பாஷையோ மனிதரோ உயர்ந்த நிலை வகித்திருந்து பின் க்ஷீணித்துப் போவதற்குப் பல அகக் காரணங்களும் புறக் காரணங்களும் உண்டு என்பதை நாம் சரித்திர வாயிலாகக் கண்டறிந்திருக்கிறோம். புறக் காரணம யாதாயிருப்பினும், அகக் காரணங்களே அழிவுக்கு அடிப்படையாயிருக்கின்றன வென்பதை நாம் அனுபவத்திற் கண்டிருக்கலாம். மானிடருக் குண்டாகும் பலவிதப் பிணிகளுள்ளும், கண்ணுக்குப் புலப்படாது என்பு முதலிய மறைந்த ஸ்தானத்திலிருந்து முளைக்கும் புற்று(cancer), எலும்புருக்கி, க்ஷயரோகம் முதலியவைகளே மிக ஆபத்தானவை யென வைத்திய நிபுணா கண்டறிந்திருக்கின்றனர். "மனிதனுக்கு வெளியேயிருந்து உள்ளே போகிற தொன்றும் அவனைத் தீட்டுப்படுத்தாது. உள்ளேயிருந்து வெளியே வருகிறதே மனிதனைத் தீட்டுப்படுத்தும்" என்று கிறிஸ்து பெருமான் கூறியதின் உண்மையும் அதுவாகும். தம்மிடத்தில் சிகிச்சை செய்து கொள்ள வரும் நோயாளிக்குப் பரிகாரஞ் செய்யுமுன் வைத்தியர் அவனை நன்கு சோதித்து அவனை யொடுக்கி வருத்தும் பிணி என்பைப்பற்றியதோ, நரம்பைப் பற்றியதோ, தசையைப்பற்றியதோ, நீரைப் பற்றியதோ என்பதைத் தெளிந்தபினனரே பரிகாரஞ் செய்ய ஆரம்பிப்பார். நோயாளியைப் பலப்படுத்தும் ஏதுக்களையன்றி அந்நோயின் மூலகாரணத்தையே அறநீக்க முதன்முதல் முயல்

வர்; நோய் தெளிந்த பின்னரே பலத்துக்கான ஏதுக்களைக் கையாளுவர். அதுபோல் நம் நாட்டு ஆன்ம வளர்ச்சி குன்றிக் கோயில் பணி முதலியவை எண்ணமற்றுப் போவதற்கு நம்மிலே காரணமாயிருப்பதுயாதெனத்தேர்ந்து, அதனை நீக்கிய பின்னரே அவ்வளர்ச்சியைச் சிறப்பித்து உயரச் செய்யும் ஏதுக்களை நாம் கையாளுதல் நலம். அவைதான் யாதா யிருக்குமென எம் சிற்றறிவுக்குத் தோன்றியவாறு ஆராய்ந்து பார்க்க இறைவன் ஒளி தந்து உதவி புரிவானாக.

“பழையன கழிதலும், புதியன புகுதலும வழுவல கால வகையினானே” எனக் கூறிப்போந்த பெரியார் வாக்கு இவ்விடத்தில் சிந்திக்கற்பாலது. “பழையன வெல்லாம் நல்லன; புதியன வெல்லாம் தீயன என்பது ஆகாது” என்று கூறிப் போந்த பெரியாரது கூற்றும் நினைவு கூரற்பாலது. சில நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்த நிலை எத்துறையிலும் இப்போதில்லை. தாது வர்க்க மண்டலம் துவக்கி, மனிதவர்க்கம் கடவுள் வர்க்கத்திலுங் கூடப் பெரும் மாறுதலுண்டா யிருப்பதை அறிஞர் யாவரும் ஒத்துக்கொள்வர். அக் காலத்தில் மனிதன் தனக்கான பல முன்னேற்றததிற்கென வழக்கத்திற் கொண்டிருநத பண்டங்களோ, தொழிலோ, போக்கு வரவுச் சாதனங்களோ இப்போது எத்துணையான அதிசய மாறுதல்களையடைந்திருக்கின்றன. அம் மாறுதலை விரிக்கிற் பெருகும். சுருங்கச் சொல்லின் எவ்வாறு மனிதர் தத்தம் அறிவு முதிர்ச்சிக்கும் நாகரிக வளர்ச்சிக்கும் ஏற்றவாறு காட்டு மனிதர், தற்கால மனிதர், உலோககால மனிதர், சாஸ்திரகால மனிதர், என அழைக்கப்பட்டனரோ, அதற் கேற்றவாறே அவருறையும் இல்லும், நடை உடை பாவனைகளும், பிறவும் அந்தந்தக் காலத்திற்கேற்றவாறு உயர்ந்து சிறந்த மாறுதலையடைந்து கொண்டே வந்திருக்கிறதை நாம் பார்க்கிறோம். குகைகளிலும், மரப் பொந்துகளிலும், சிறு குடிசைகளிலும் முறையே வசித்து வநதோரின் வழித்தோன்றிய நாம இப்போது வசிக்கும் பலதிறப்பட்ட மாட மாளிகை கூட கோபுரத்தின் சிறப்பைக் கூறவும் வேண்டுமோ! சிக்கிமுக்கிக் கற்களால் தனக்காகும் வெளிச்சத்தை யுண்டு பண்ணின மனுக்குலமானது தனதரிய சக்தியாலும், அதிசய புத்தியாலும் வானத்தின் பெருஞ் சுடர்களின் பேரொளியையும் மங்கச் செய்யும படியான மகத்தான விளக்குகளைக் கண்டறிந்து பிரயோகிக்கின்றது.

இதுமாத்திரமன்று. அக்குலம் நிலன், தீ, நீர், வளி, விசும்பு ஆதியன பஞ்சபூதங்களின் தகைமையையும் சாஸ்திர வாயிலாகக் கண்டறிநது, அவற்றை அடக்கியாளும ஆற்றலும், அறிவு மடைந்து, தனக்கான பல சௌகரியத்திற்கென அவற்றைப் பயன்படுத்திக் கொண்டும் வருகின்றது. “அரிதரிது மானிடராதல் அரிது” என்று கூறிப்போந்த நம் முன்னோர் இத்தகைய அதிசயசக்தியின் பயனை இப்போது காண்பராயின், எத்தனையாக இறைவனை வழுத்தி ஸ்தோத்தரிப்பர்! இவ்வாறு லௌகிகத்துறையில் ஊர்ந்து, நடந்து, ஓடிப் பறக்கும் சக்தியையும் மனிதன் அடைந்து விட்டான்; அன்றியும் ஒப்புயர் வில்லாத் தன் புலமையை, உலகெங்கணும் பரவும் நிலன் நூல், வான் நூல், மொழி நூல், மன நூல், உயிர்களின் தோற்ற வளர்ச்சி நூல், மக்கட் டோற்ற நூல் ஆதிய பல்வகை அரிய நூல்களையும் எழுதிக் காலாகாலத்தில் திருத்திப் பெருக்கிப் பயன்படுத்தி வருகின்றான்.

இத்தகைய நவீன நாகரிகத்தையும் நலத்தையு மளிக்கும் நல்லறிவின் முதிர்ச்சியின் மத்தியில் நம் தற்காலக் குழந்தைகள் பிறக்கின்றன. காலத்துக் கேற்றவாறே அக்குழந்தைகளின் அறிவும் ஆற்றலும், ஆராய்ச்சி யுணர்வும், தாம் காணும் எத்தகைய செயலுக்கும் காரண காரியத்தை யுன்னி நோக்கிக் கண்டுகளிக்கும் பெரும் விருப்பும் மிக இளமைப் பிராயத்திலேயே காணப்படுகின்றன. அன்னோரது மன

நிலையையும், அறிவு நிலையையும் நன்குணர்ந்து அவற்றிற்குத் தக்கதாக ஒவ்வொரு துறையிலுமுள்ள மெய்ப்பொருளைப் படிப்படியாக அறிவுறுத்தி உன்னத நிலைக்குக் கொணர்தலே தற்காலக்கல்வி இலாக்காவில் புக்குழைப்போரின் சீரிய நோக்கமாகும். பிற துறையிலிருந்து தம தேசீயப் பொது நலத்திற்கெனத் தொண்டு புரியும் பெரியாரின் நோக்கமும அதுவே யாகும்.

இக் கோட்பாட்டுக்கு முற்றிலும் மாறுக நம் கோயில்களும், அவற்றிற் பள்ளிகொள்ளும் கடவுளரும் எதத னையோ நூற்றாண்டுகளுக்குமுன் நிறுத்தப்பட்டபடியே அசைவும், ஆற்றலும் அற்றுத் தோன்றுவனபோல் காணப படுகின்றன. கோயில் கட்டப்பட்ட முறைகளும், கோயில் வழிபாடு, திருப்பணி முட்டுகள், ஆசாரியர் முறைமை முதலியவைகளும் அவை யுண்டாய காலத்தில் பல அரிய கொள்கைகளையோ, சத்தியத்தையோ உணர்த்துவனவா யிருந்தன. கோயில்களில் உள்ளும் புறம்பும் நிறுத்தப்பட் டிருக்கும் பல பாவைகளும், உருவங்களும், அவற்றில் சித்திரிக்கப்பெற்ற பல புராணக் கதைகளுங்கூட கடவுள், ஜீவர்கள் முதலியோரைப் பற்றிய உண்மைகளையும், இம்மை, மறுமை என்பவற்றைப் பற்றிய சத்தியங்களையும் காட்டி நின்றன. அவ்வாறு அவற்றில் பொதிந்து வைக்கப்பட்ட கொள்கைகளும், உலக சத்தியங்களும் காலஞ் செல்லச் செல்ல வெளிப்பட்டு அநேகருக்குப் பயனளித்தன.

இவ்வா றளிக்கப் பெற்ற பெரும் பயனை அடிப்படையாகக் கொண்டு, அதன்மேல் காலத்துக் கேற்றவாறு அப்பயனைப் பெருக்கி, இறைவனைப் பற்றியும் உயிர்களைப் பற்றியும் இன்னும் உயரிய அறிவையும், உண்மைகளையும் கண்டு அவற்றைப் பின் சந்ததிக்கான அஸ்திபாரமாகப் பொறித்து வைப்பதே சான்றோர்க் கழகும் அவரது முக்கிய கடமையுமாகும்.

"உவமைகளால் என் வாயைத் திறப்பேன்" என்று கூறிய கிறிஸ்து பெருமானைப் போல் அனேக நூற்றாண்டுகளுக்கு முன்னுள்ள நமது ஞானிகள் பல அரிய சத்தியங்களை அக்கால மக்கள் எளிதில் அறியுமாறு பல திறப்பட்ட கதைகளைக்கொண்டு விளக்கினரேயொழிய அக்கதைகளிலுள்ள சம்பவங்கள் உண்மையாக நிகழ்ந்தன என்று தம பின் சநததியார் கொள்ள வேண்டுமென்ற கருத்திற் கூறினரிலர். இரண்டொரு உதாரணம பார்ப்போம்:

முழு முதற் பொருளாக் கொண்ட சிவபெருமானை 'மாதுடைப் பாகன்' 'திரிபுரமெரித்தோன்' 'நீலகண்டன்' எனப் பெயர் கொடுத்து அவற்றின் கருததுக்களைக், கதைகளைக் கொண்டு உணர்த்தினரன்றோ? தற்காலம் ஆராய்ச்சிவல்லார் சிலர் கூறுவது போல் 'மாதுடை பாகன்' என்றது இறைவனுக்குள்ளே அம்மை - அப்பரின் குண விசேடத்தையே காட்டி நின்றது. இறைவனது இருமுக்கிய லட்சணங்கள், கிருபையும் சத்தியமும், அனபும நீதியும், தண்மையும் வெம்மையும், அருளும் ஆண்மையுமாகும். இவ்வாறு பொருள் கொள்ளுவதற்குப் பதில் அவ்வுருவினைப் போலவே கடவுள் ஆணுருப்பொரு புறமாகவும் பெண் தன்மை மற்றொரு புறமாகவும் இரு கூறுகளைத் தன் சரீரத்தில் உண்மையாகக் கொண்டிருப்பதாகவே தீர்த்துச் சிவனைப் பெரும்பான்மையினர்வழுத்துகின்றனர். என்னை? நமக்கெதிரே அவ்வித இயற்கைக்கு மாறுக ஓர் உருவம் திடீரென தோன்றுமாயின் நம்மில் பலர் அவ்வுருவினைச சிவனென வழிபடுவரோ? அன்றித் திறந்த வாயுடனும், இமையாத கண்ணுடனும், மேலும் கீழும் முறையே உற்று நோக்கி, நகையாடுவரோ? அதைச் சிந்திப்பார் உணர்வாராக.

அவ்வாறே 'திரிபுர மெரித்தோன்' என்றது மானிட இயற்கையில் காணப்படும் ஆணவம், வெகுளி, மயக்கமாகிய முக்குறும்புகளையும அழித்து நாசப்படு

த்தி, ஜீவர்களை ஆன்மவெற்றிகொள்ளச் சகாயம் செய்யும் சர்வ வல்லவரின் பேராற்றலையே தெரிவித்து நின்றதே யொழிய, பலர் கருதுமாறு அக் கதையிற் கூறப்பட்ட சம்பவங்கள் உண்மையாகவே நடைபெறவில்லை யென்பதை ஆன்றோர் சிலர் அறிநதுகூறுவர். "அவருககு இயேசு என்று பேரிடுவாயாக; ஏனெனில அவர் தமது ஜனங்களின் பாவங்களை நீக்கி அவர்களை இரட்சிப்பார்"—மத்தேயு 1 : 21. என்று கிறிஸ்தவரின் சத்தியவேதப் புத்தகத்தில் குறிப்பிட்ட பொருளையும இங்கே ஒப்பிட்டுப பார்க்க.

அப்படியே 'நீலகண்டன்' எனச் சிவனைக் குறிப்பிட்ட கதையின் பொருளும் ஓர் அரிய சத்தியத்தையே முன் குறித்து நின்ற தென்பதை அதைச் சிந்திக்கும் உண்மை யறிவும் உயரிய வாய்மையு முடையார் காணுதிரார். அஞ்ஞானத்திலும், மாயையின் சிக்கிலும், பால இருளிலும் அழுந்தியுழலும் தாம் மக்களை அச் சேற்றினின்றும் தூக்கி எடுத்து, கழுவி, பரிசுத்தராகிய தம்மோடு முடிவில் ஒப்புரவாக்கச் சித்தங் கொண்ட நம் தந்தையாகிய இறைவன் தம் திருச்சித்தத்தை நிறைவேற்றுமாறு எடுததுக்கொண்ட ஏதுவையே அக்கதையின் பொருள் உணர்த்தா நின்ற தென்பது எமது கருத்து. அவ்வேது தான் என்ன? பாற்கடல்கடைந்த கதையிற் கூறியபடி தீயோனால் உலகிற்கு நேரும்தீங்கனைத்தையும் நிவர்த்தி செய்து சிறநத தநதையையும் தாயையையும் போன்று தம் உயிரைக்கொடுத்தேனும் மானிடரை இரட்சிப்பின் வழி சேர்க்கச் சித்தங் கொண்டதே.

"மெய்யாகவே அவர் நம்முடைய பாபங்களை ஏற்றுக்கொண்டு நம்முடைய துக்கங்களைச் சுமந்தார்... ...நமமுடைய மீறுதல்களின் நிமித்தம் அவர் காயப பட்டு,நம்முடையஅக்கிரமங்களின்நிமித்தம் அவர் நொறுக்கப்பட்டார்; நமக்குச் சமாதானத்தை உண்டுபண்ணும் ஆக்கினை அவர்மேல் வநதது. அவருடைய தழும்புகளால் குண மாகிறோம"—ஏசாயா 53 : 4-5. "பரிகரிக்கப்படும் கடைசிச சத்துரு மரணம்"—1 கொரிநதியர் 15 : 26. "மரணத்துக்கு அதிகாரியாகிய பிசாசானவனைத தமது மரணத்தினாலே அழிக்கும்படிக்கும், ஜீவகாலமெல்லாம் மரண பயத்தினாலே அடிமைத்தனத்திற் குள்ளானவர்கள் யாவரையும் விடுதலை பண்ணும்படிக்கும் அப்படியானார்"—எபிரேயர் 2 : 14-16. என்று கிறிஸ்தவரின் வேத வாக்கியங்களில் கூறப்பட்டிருப்பதின் கருத்தும் இங்கே சிந்திக்கற்பாலது.

# இடியேறு

## திருஞான சம்பந்தர்

தமிழறிஞர் - சே. சிவஞானம் பிள்ளையவர்கள் இயற்றிய "திருஞான சம்பந்தர்" என்னும் நூல் நமது பார்வைக்கு வந்தது. இநநூல் மூன்று பகுதிகளால் ஆக்கப்பட்டிருக்கிறது. ஒன்று சரித்திரம்; மற்றொன்று 'குறிப்புகள்' என்பது; இன்னொன்று 'ஆராய்ச்சிக் குறிப்புகள்' என்பது.

சரித்திரம் மூலத்தைத் தழுவி எளியிய நடையில் எழுதப்பட்டிருக்கிறது. பொருந்திய இடங்களில் மூலத்தின் சொற்களையும் சொற்றொடர்களையும் ஆசிரியர் ஆண்டு செல்லுதல் அழகுக்கு அழகு செய்வதா யிருக்கிறது. தமிழ் உரைநடை பயில்வோருக்குப் பிள்ளையவர்களின் உரைநடை வழிகாட்டியாயிருக்குமென்பதில் ஐயமில்லை.

குறிப்புக்களில் அரும்பதஉரை, குறிப்பீட்டு விளக்கம், திருப்பதிகளுள்ள இடங்களைப் பற்றிய குறிப்புகள் முதலியன பொறிக்கப்பட்டிருக்கின்றன. இவை, மாணக்கர்கட்கும், யாத்திரை

வாசிகட்கும், மற்றவர்கட்கும பெருந் துணை செய்யும் முறையில் ஒழுங்கு செய்யப்பட் டிருக்கின்றன.

ஆராய்ச்சிக் குறிப்புகளை நோக்க நோக்க மகிழ்ச்சி பெருகுகிறது. அக் குறிப்புகள் தமிழுலகிற்கும், சைவ உலகிற்கும், ஆராய்ச்சி உலகிற்கும பெரு விருந்து செய்வன என்று கூறல் மிகையாகாது. ஆராய்ச்சிக் குறிப்புகள், தமிழறிஞர் சிவஞானம் பிள்ளை யவர்களின் தேவார ஆராய்ச்சியின் பெருக்கையும் திறத்தையும் ஆழத்தையும நன்கு புலப்படுத்துகின்றன. பிள்ளை யவர்கள் தேவாரக்கடலைப் பன்முறை கடைந்து கடைந்து தேவார இன்னமிழ்தையும், அக்கடலில் பன்முறை படிநது படிந்து தேவார நுண்பொருள் மணிகளையுங் கொணர்ந்து தமிழுலகத்துக்கு உதவி யுள்ளார்கள். திருஞான சம்பநதர் வரலாற்றுக்கு அரண் செய்ய வல்ல அகச்சான்றுகளும், புறச்சான்றுகளும் நூலிடை மலிந்து கிடக்கின்றன.

திருஞான சம்பந்தர் வரலாறு பலரால் வரையப்பட்டிருக்கிறது. சிலர் வரலாற்றை மட்டும் எழுதியுள்ளார்; சிலர் வரலாற்றோடு மிகச் சில குறிப்புக்களைப் பொறிக்கும் அளவில் நின்றுவிட்டார்; சிலர் மிகச் சில அகச்சான்றளவில நின்றுள்ளார். இந்நூலாசிரியர் தேவாரத் துறைகள் பலவற்றில் நுழைந்து உழைத்துத "திருஞான சம்பந்தரை" உருப்படுத்தியிருக்கிறார். இவர் தம் ஆராய்ச்சி, காய்தல் உவத்தல் அற்ற நடு நிலையினின்றும பிறநதிருத்தல் குறிப்பிடத்தக்கது. திருஞான சம்பந்தரைப்பற்றிய ஆராய்ச்சி நூல் இதுகாறும் இம்முறையில் வெளி வரவில்லை என்று கூறலாம். இவ்வாராய்ச்சி முறையில் இநநூலாசிரியரால் அப்பர் வரலாறும், சுந்தரர் வரலாறும் எழுதப்பட்டிருக்கின்றன; மாணிக்கவாசகர் வரலாறும் எழுதப்பட்டு வருகிறது என்று அறிகிறோம. திருவாளர் சிவஞானம் பிள்ளை யவர்கள் எழுதியுள்ள இந்நூல்கள் தேவார நுண்பொருள்கள் பலவற்றை மக்கள் முயற்சியின்றிப் பெறுமாறு ஒழுஙகு செய்யப்பெற்றிருக்கின்றனஎன்று சுருங்கச் சொல்லலாம். ஆராய்சசி யுலகுககுப் பயன்படும் வழியில் நூல்களை யாத்து உதவிவரும் ஆசிரியர் சிவஞானம் பிள்ளையவர்கட்கு நமது நன்றி உரியதாக. விலை ரூ. 1-4-0. விலாசம்: ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை.

## ஸ்ரீ ரமண விஜயம்

இப்பெயா வாய்நத நூல் வரப்பெற்றோம். இந்நூல் ஸ்ரீ ரமண ரிஷியின் வரலாற்றைக் கூறுவது. கதா நாயகர் இந்நாளில் திருவண்ணாமலையில் எழுந்தருளி யிருப்பவராதலான், அவரைப் பற்றி விரித்துக் கூறவேண்டுவதில்லை. அருணாசலம் நோக்குவோர் பலர் இப் பெரியாரைக் காணாது செல்வது அரிது என்பதை நாம் நன்கு அறிவோம. இவர் தம் வரலாற்றை நண்பர் சுத தானந்த பாரதியார் எழுத நேர்ந்தமை குறிதது மகிழ்வெய்துகிறோம். ஸ்ரீ சுத் தானந்த பாரதியார் தமிழ்த் தாயின் இனிய சேய்களுள் ஒருவர். உள்ளத தெழுங் கிளர்சசியை உள்ளாவாறே வெளியிட்டு எழுதும் ஆறறல் ஸ்ரீ சுத தானந்த பாரதியாருக்குண்டு என்பது அவர் தம் நூல்களால் நனிவிளங்கும. ஸ்ரீ ரமண விஜயத்தில் உண்மை ரமணர் விளங்குமாறு அறிஞர் பாரதியார் வரைந்துள்ளார். ஆங்காங்கே எடுத்துக் காட்டப்பெற்றுள்ள ஆன்றோர் மொழிகள் நெஞ்சைக் கவர்கின்றன. நூல் நன்னடையில் எழுதப் பட்டிருக்கிறது. விலை ரூ. 1-4-0. விலாசம்: காரியதரிசி, ஸ்ரீ ரமணாச்ரமம்;

Registered No. M. 1500.

# நவசக்தி

‘ எவ்வுயிர்க்கும் அன்பாயிரு ’ ‘ என்கடன் பணிசெய்து கிடப்பதே ’

சிலம்பு கரு ஸ்ரீமுக ௵ ஆடி ௴ பரல் கூ

## கோள விலாசம்

(தொடர்ச்சி)

மீயான் மனமிளகி யீந்திடினு மிங்கிவர்கள்
மாய்வா ரிருமதியில் மானனையீர்—ஏயுமிரு
காதுதனைப் பொத்திற் கதறுமொலி கேளாதேல்
மாதே யெழுநாளின் மாரணமாஞ்—சோதிதரு
கண்ணைவிர லாலமிழ்த்திற் [1]காணும்விழி தோன்றாதே
லெண்ணிலஞ்சா நாளி லிறந்திடுவர்—கண்ணுறங்கிற்

### கனவுக்குறி

காணுங் கனவிற் கழுதைநரி நாய்கழுகு
தோணுங் கருங்காகஞ் சூழ்பருந்து—நீணிலத்தி
லின்னவைக ளன்மேலி னேறத் தினங்காணில்
முன்னிடுவ ரந்தகனை மும்மதியி—னின்னுங்
கருங்குறளன் றன்னொருவன் காஙகுறுநற் கச்சை
மருங்கி னிடையின் வனைந்து—கருங்கதையொன்
றேந்திவரக் கண்டா லிறந்திடுவ ரோர்மதியிற்
சார்ந்த கரியகுறட் டையறனைத்—தோய்நதிடவுங்
கண்டா லொருமதியிற் காலனூர் புக்கிடுவர்
பண்டிறந்தோ ரின்னொருவன் பையவந்து—தண்டித்துக்
கட்டிக் கொடுபோகக் கண்டா லொருமதியில்
விட்டிடு வாருயிரை மேதினியில்—மட்டலருஞ்
செம்மாலை செஞ்சாந்தஞ் சேர்த்தணியத் தான்காணின்
மும்மதியி னுவி முடிந்திடுவர்—தம்முடலி
லெண்ணெ யிடக்கரங்க ளீர மயிரெறியக்
கண்ணதனிற் காணிற் கடுங்கூற்ற—னண்ணுபுரஞ்
சென்றிடுவ ரோர்மதியிற் றேனே கனவினங்கேள்
குன்றம் பலவிருக்கங் கோட்டிடபம்—வென்றிதரு
காரானை யுப்பரிகை கண்டதன்மே லேறிநிற்கிற்
பார்மீதிற் செந்நீர் பருகிடவு—நோகச்
செத்தபிணங் கண்டிடநற் சேயிழையைத் தோயமலஞ்
தத்தமெய்யிற் பூசிடவுந் தான்கண்டாற்—சுத்தமுடன்

(பிரதி)—[1]காணுமொழி.

மாறுத் திருவோங்கி வாழ்ந்திருப்ப னின்னமுங்கேள்
ஏறூரு மீச னிறைவனிப—மீறுன
பொனபணியே ளுன்காணிற் போற்றுங் கிளைஞருடன்
இன்பநுகர்ந் தேவாழ்வ னிநதிரன்போல்—மின்போலும்
மான்காண நீண்ட மரத்திற் கனிபறிக்கத்
தான்காணில் மெத்தத் தனஞ்சேருங்—கான்காணும
பன்னகந் தோட்டை பற்றித தனைககடிக்கப்
பின்னுநல்ல வெள்ளுரகம பீதியின்றித்—தன்னிடது
கைவிட்டு மற்றவலக் கையிற் கடித்திடவு
மெய்யாகக கண்டால் வெகுலாபந்—துய்ய
பருப்பதத்தின் மேடைகளிற் பாங்காக வேறிக்
குரைக்குங் கடலிற் குதித்துத்—திரைககடலை
நீந்திக் கரையேறி நிற்கவுங்கண் டான்பிடித்த
மாந்தரும்பூ பாலரென வாழ்நதிருப்பர்—சேர்நதிருக்கும்
புண்டரிகப பத்திரியிற் போசனநெய் பாயாசங்
கண்டா லுலகாளுங் காவலனுந்—திண்டாடுஞ்
சேவல்கிர வுஞ்சமிவை செஙகையினில் வைத்திருக்க
ஆவலுடன் [1]காண வருங்குலததுப்—பூவையரைத்
தானடைவன் காலிற் றளையிடவுந் தன்னையொரு
மானிடன்கை யாற்பிடித்து மற்கட்டத்—தானிவைகள்
கண்டால்நற் கீர்த்திபெறு கான்முளையுண் டாமினங்கேள்
உண்டா மனையி லுயரணையிற்—றண்டாத
வாகனத்தி லாசனத்தில் வன்னிபடக் கண்டதுண்டேற்
கோகனக மாதுமகிழ் கூர்ந்திருப்பள்—மாகமதிற்
சந்திரனைச் சூரியனைத தான்கண்டால் நோயாளர்
நொந்தபிணி தீருமந்த நோயிலலார்—முந்துறவே
கண்டாற் றனலாபங் கைகூடும் செவ்விரத்த
முண்டாற் சுராபான முண்டாற்போற்—கண்டாக்கால்
வேத ரெனிற்பிரம வித்தையடை வார்கள்மற்றச
சாதியெனி லைசொரியம தானடைவர்—சோதிக்குங
கோட்டு விலங்கு குரங்குபன்றி நாயிவைதான்
வாட்ட முறத்துரத்தி வநததென—நாட்டமுறக்
கண்டால் வெகுதுயரங் காவலரால் அச்சமுறுந
தண்டாப் பரிரதத்தில் தான்பூண்டு—கொண்டதொரு
தேரின்மே லேறிச் சிறந்திருக்கக் கண்டதுண்டேல்
பாரில்நிதி கோடியுறும் பண்டிரதத்—தோரிடையில்
ஒட்டகம்வா லேப முரத்தகிடாப் பூண்டதன்மேல்
சட்ட முடனிருக்கத் தான்கண்டால்—துட்டரினுல்
துக்கமுண்டாந் தன்சிரத்தில் தொக்கதனி லெண்ணெயிட்டுப்
பக்குவஞ்சே ரன்னம் பருகிடவே—சக்கதனிற்
காணிற் பிணியுறுங்கட் டாரிகுடை பாதுகைமுன்
தோணிற் பயணந் துலைபோக்கும—தோணியின்மேல்
ஏறி நதிகடக்க வேகாணிற் றூரதுலை
ஏறிப்பின் மீண்டிடுவர் இன்புறவே—கூறுமம
ததிகண்ணிற் காணில்நிதி தான்சேரும் நெய்க்கு

(பிரதி)—[1]காண்க.

நிதிகோடி சீர்த்தியுறும் செய்தான்—புதிதாகத்
துய்த்திடவுங் கண்டால் துயரமுறு மான்றதியைத
துய்க்கவெகு கீர்த்திச் சுகமுண்டாம்—மிக்கான
ஆன்பாலின் மேற்படரு மாடை யுடன்பருகத
தான்சோம பானந் தருமவற்குத—தேன்போலும்
கோதுமைய கண்டாககாற் கூடா நிதிகூடும
போதில சோகம் புரகாலிப்—போதிவைகள்
கண்ணூரக் கண்டாற் கடுந்துயரம கற்பூரம
தண்ணு ரகில்சாந்தஞ் சாநதாத்திக்—கண்ணீர்சோ
துய்யவெள்ளைப் போதிவைகள் தோன்றவே கண்காணில்
ஐயமில்லாச் செல்வ மதுவெய்தும்—வையமிசை
மாண்ட பிரேதம வலத்தானைத் [1]தான்புசிக்கக்
காண்டவிற்பொன் னைஞ்ஞூறு கைசேரு—மீண்டுமதன்
கைபுசிக்கில் ஆயிரம்பொன் கைகூடும் பின்னதன்மேல
எய்துஞ் சிரமதனை யேபுசிக்கில்—மெய்யயுதம்
பொன்சேரும உண்மையிது போகமுததம் தாமபூலம்
மின்போற் பிரபைதரும வெண்பணிலம்—பின்னுறும்
சந்தனநீ லோற்பலபூ சாதிக்காய் தக்கோலம
வந்த கிராம்புதயிர் வாரமுது—முந்திலஞ்சிப்
பூவிளக்குக் கன்னிகையார் பொற்றுவசம் வெண்கவிகைக
கேவிளங்க வாழ்வுதரும் எநநாளும—மேவுசிவ
பூசைசெயச் கண்டாக்காற் [2]போர்க்களத்தில் வெற்றிதரும்
மாசிலா வெள்ளையினில் வன்பருத்தி—தேசுதரு
நெல்லன்ன மோடுதிரு நீறிவைகள் மூன்றொழிய
நல்லவெண்மை [3]காண நலமாகும்—நல்ல
கறுப்பிற் பசுப்பூட்கைக் காணுமறை வேதா
நெறிப்பிலெதிர் தேவதைகள் நீங்கக்—குறிப்புடன்மற்
றெல்லாக் கறுப்பும் [4]எதிர்காண வாதையுறும்
பொல்லாத ரோகம் பொருந்தியிடும்—நல்லாய்கேள்
இன்னகன வெல்லா மிசைந்தமுதற் சாமமது
தன்னில் வருடமொன்றில் தான்பலிதம்—பின்னிரண்டாம்
சாமமெனிற் திங்களெட்டில் தான்பலித மாமூன்றாஞ்
சாமமெனில் மும்மதியில் தான்பலிதம்—சாமமொரு
நாலிற் றசதினத்தில் நண்ணுமரு ணோதயத்திற்
கேலு முடன்பலித மேயாகு—மேலுமின்ன

## பிற குறிகள்

குன்றனைய மென்முலையாய் கூறக்கே ளிநதினைத்தான்
என்றினைத்தா னோர்கண்ணு லேபார்தது—நின்றுதன்கை
ஓர்விரலி னுல்மறைக்கில் ஓங்குங் கதிர்தெரியில்
மாரணமாந் திங்களொன்றில் மானனையீர்—தாரணியில்
ஒத்த தளத்தி லுயர்வான் களங்கமறில்
பத்தடிக்கு ளேந்தடிமேற் பாரதனிற்—சுத்தமுள்ள
மெய்நிழலைக் கண்ணால் மிகப்பார்த்து விண்ணோக்கில்
மெய்போல் உருவமொன்று மேல்தோன்றும்—ஐயமில்லாப்

(பிரதி)—[1]தான் பொசிக்கக். [2]பொற்களத்தில் வெத்திதரும். [3]காண்க. [4]எதிர் காண்க.

பச்சைநிற மாயிருந்தால் பக்கமொன்றில் தன்கிளைஞர்க்
கச்சமுறு மைப்போல் அதுகாணில்—வச்சபிணி
தன்னால் வருத்தந் தருமுருவிற் கைகுறையிற
சொன்னமதி யாறிலுயிர் தோற்றிடுவர்—பின்னுருவிற்
சென்னி குறைநதிருந்தால் திங்களொரு மூன்றளவிற்
றன்னடியால் வைதரணி தான்கடப்பன்—பன்னுகுறி
இன்ன மனேகமுண்டா மெல்லையற்ற பல்லுயிர்கள்
மன்னு பரதகண்ட வாறிதுவாம—சொன்னவுத்த

## மனுவின் பெயரும் ஆயுளும்

ராயணமும் விண்ணவருக கோர்பகலாம கங்குல்தெகக
ணயணமா மீதிரண்டோர் நாளாகும்—சேயிழையீர்
இந்நாண்முந் நூற்றறுப தென்னிலோர் திவ்வியவாண்
டன்னவாண் டீராறு மாயிரந்தான்—மன்னு
சதுரயுக மாகுமது தானெழுபத் தொன்று
மதுரமொழி யீர்மனுவின் வாணாள்—சதுரயுகம்
ஓரா யிரம்பிரமற் கோர்பகலா மப்பகலிற
காரூரும் வேந்தரிரு காலேழு—பேரிறப்பர்
அந்த யுகமுமிரண் டாயிரமோர் நாளயனுக்
கிந்தநாள் முப்பா னெனின்மாதம்—வந்ததொரு
மாதமுமுந் நானகுகொண்டால் வசசரமாம் வச்சரம்நூ
றோதிமற்கு வாணாளா மொண்டொடியீர்—ஓதிமருங்
கோடி யிறக்கிற் குலவுகண்ணற் கோர்பகல் பொன்
னுடையனு மிம்முறைநூ றாண்டிருப்பன்—நீடுமனுப்
பேரும் விளம்புகிறேன் பெண்ணே சுவாயம்பு
சேருஞ் சுவரோச் சிதமனுப்பின்—பார்புகழு
முத்தமன் [1]றாமசன்பின் ஞைது மிரேவதனும்
வைத்தபுகழ்ச் சாக்குடன்வை வச்சுதனு—மெநதிமைாயுஞ்
சாற்றுவசா வன்யமனுத் தக்கசா வன்யனிருண்
மாற்றும் பிரமசா வன்யமனு—நாற்றிசையுஞ்
சீர்தருசா வன்யமனுச் செப்புசீர்ச் சாவன்யன்
பார்புகழு ரோச்சியன் பௌம்யமனுப்—பேரிவர்கள்

## பிரியவிரதமனுவின் மக்கள் பதின்மர்

பன்னுங்கின் முந்தப் பகர்சுவா யம்புதவு
மின்னே பிரிய விரதனென்பா—னந்நாளிற்
சம்புநெடுந தீவுமுதற் சார்ந்தபெருந் தீவேழு
மும்பர்கோ னென்ன வொருகுடைக்கீழ்ச்—சொமபாகச்
செங்கோல் செலுத்தினன்பின் சேவுயர்த்தோன் றாளினைந்து
தங்கா நெடுநாட் டவமபுரிந்து—பங்கமுறா
தீரஞ்சு புத்திரரை யீன்றா னவர்பெயர்கே
ளாரஞ் செறிமேதை யக்கினியும்—போரஞ்சா
வாகுதுதி மான்வபுட்டு மானக்கி னேத்திரனுஞ்
சோகந் தருசவனன் சோதிடுமான்—வேகமுள

(பிரதி)—[1]றணமசன்பின்.

அவ்வியன்மே தாதிதியென் றையிரண்டு புததிராிற்
செவ்வியனு மேதை திடவாகு—மவ்வலணி
யக்கினியிம் மூவர்களு மைம்புலனுந் தானடக்கித்
தக்க துறவின் றலைநின்றார்—மிக்கவுள்ள
புத்திரர்க ளேழ்வரையும் போர்ததநெடுந தீவேழும
பத்திரமா யாளப் [1]பணித்திட்டான்—சுத்தமுள்ள

## ஆக்கினேத்திரன் மக்கள் ஒன்பதின்மர்

சம்புநெடுந் தீவுதனைத் தானுக்கி நேத்திரனும்
நம்பிப் புரந்தான்பின் னுளதற்பின்—கிமபுருடன்
445 பத்ராச் சுவனுவி பாங்கா யிழாவிரத
னெத்திசையும் போற்று மிரண்மயனும்—புத்தியுள்ள
கேதுமா லன்னிரண்யன் கீர்த்திபெறு நற்குருவோ
டோதுமரி யிவ்வொன்பா னுத்தமரை—நீதியுட
னீன்று னவர்கட் கிசைநதுசம்புத் தீவதனைச்
சான்றுயோன் பான்பிரிவாய்த் தானளிததான்—தோன்றுமவ
ராண்டதினு லன்னோர் பெயரா யமைநததிநத
நீண்டநவ கண்டமும் நேரிழையீர்—பூண்ட
பனிவரைக்குத் தெற்காகப் பாரினையுந நாவி
யினிதாண்டு பின்னிடபற் கீந்தான்—நனிதா
450 யிடபன் பரதனையு மீன்றிப்பார் தன்னைத்
திடமாகக் காவென்று செப்பி—முடிபுனைந்து
வீடடைந்தான் பின்பரதன் மேதினியைத் தான்புரநதா
னுடி யவன்புரந்த நற்கண்டம்—நீடும்

## பரதகண்டத் தீவுகள் ஒன்பது

பரதகண்ட மென்றுபெயர் பாவையே யிந்தப்
பரதகண்டந் தீவொன் பதுவாஞ்—சரதங்கேள்
இநதிரநற் சேருகததீ வேற்றுமெழிற் றும்பிரததீ
வந்தமுள்ள நாகங்கெ வத்தியுடன்—முந்துஞ்
சவுமியம்பின் காந்திருவஞ் சாரும் வருண
மிவையினுடன் நறகுமரி யென்னும்—நவமாகுந
455 தீவுக ளொன்றொன்று சேர்சகத்திர யோசனையா
மேவுங் குமரியொன்று விட்டொழியத்—தீவதெட்டில்
தானதவ மாச்சிரமஞ் சாதிபே தங்களின்றி
யூனமிகு மாரியர்க ளுற்றிருப்ப—ீனமிலார்

## நால் வேதம் ஆறு சாத்திரம்

சேர்ந்திருக்கும் நற்குமரித் தீவுதனி லேயிருக்கு
மாய்ந்தவெசுர் சாம மதருவணம்—வாய்ந்தமறை
யிந்நானகு சிட்சைகற்ப மேநிருத்தஞ் சந்தசுவுஞ்
சொன்ன வியாகரணஞ் சோதிடமு—மின்னேயிவ்

## இருபானெட்டு ஆகமங்கள்

வங்கமோ ராறு மருங்கா மிகமுடனே
சிங்கார யோகசமுஞ் சிந்திதமு—மங்காத

(பிரதி)—[1]பணிந்திட்டான்.

காரணம்பின் னுமசிதங் காட்சியகு ணத்தீதத
மாரணநே ருஞ்சகத்ர மங்குசமான்—பார்புகழுஞ்
சுப்பிர பேதமொடு சூக்குமம்பின் வீரதந்த்ர
மெய்ப்பாம விசையம் விசுவாச—மிப்ப[ா]றசு
வாயம் பவமனலம் மாமகுடம விமபமுட
னேயும் விமல [1]மிரவுரவம—நேயமுள்ள
சநதிர ஞானஞ் சறுவோத்தஞ் சநதானம்
வந்தசித்தம புரோக்கிதமும் வாதுளமு—முநதும
பரமே சுரம்லளிதம் பன்னுங் கிரண
மிருபானெட் டாகமமு மின்னுங்—திரமான

பதினெண புராணம

சைவம் பவுடீகஞ் சாற்றுமாற் கண்டமொடு
மெய்யா மிலிங்க மிருகூர்மம்—பொய்யிலலாக்
காநதம் வராகங் கருதுமச்ச வாமனமும
பாந்தபிர மாண்டம்விண்டு பாகவதஞ்—சேர்ந்ததொரு
நாரதம்பின் காருடம் நற்பிரம[ம்] பிற்பதுமங்
காரிருணீக் கும்பிரம கைவத்தம—பேரழலி
ஞக்கினே யம்பதினெட் டாகும் புராணமுடன்

பதினேண் மனுவாக்கியங்கள்

வாக்கியங்கேள் விண்டுமனு வாசிட்டந்—தீர்க்கமுள்ள
மங்கோச நல்லியம மாபத்தம் வைதிகிரி
யங்கிரா வியாத மருந்ததியந்—தங்காத்தியஞ்
சாதாரநற் குரவஞ் சங்குயிச மோடயனங்
காசார் பராசமிரு கற்பதியுந்—தீதில்
பயிரவ மென்னுமனுப் பத்தெட்டு மற்று
மியல்சேரெண் ணெண்கலையெண் ணன்கு—செயிர்தீர்மா
வாக்கியங்கட் கேற்ற மருந்தா முபநிடதந
தாக்கு மிலக்கணங்க டானைநதும்—பாக்கியஞ்சேர்

நதிகளின் சிறப்பு

கங்கைமுத லெட்டெட்டாங் கோடிகட வுண்ணதியிற்
சங்கநிறை கங்கை சரச்சுபதி—துங்கபத்ரை
சநதிர பாகை சரையுவித்தை காழுந்தி
வந்த கிருஷ்ட்ணை வருகவுரி—மந்தகைநற்
றேயை நிருமதைசு சோபனைவி பாகைதுறகை
மாயைதவிர் வேத வதியமுனை—நாயகமாங்
கோமதிபன் னைசை குமரி திரிசாமை
தாமசிவ யொட்டினி சமனுபதி—நாமமினிர்
பொன்னி வதிசை பொருனைவைகை சித்ரநதி
யின்னமுத லஞ்னூ றெனுநதியு—மன்னும்

மலைகளின் சிறப்பு

பொதிய முத[ற்]கோடி பூதரங்க டன்னிற்
சிதைவிலா மாயேந் திரம்பின்—பொ

(பிரதி)—[1]னிமிர விரவம்.

சையகிரி விந்த்யகிரி சாற்று மிருககிரி
ஐயமில்லாச் சுத்திகம்பா ரியாத்திரகிரி—மெய்யான
சத்த கிரிமுதலாய்த் தானா யிரங்கிரியு
மத்தல மாயிரமாங் கோடியதி—னுத்தமமாங்

## சிவாலயங்களின் சிறப்பு

காசி யருணகிரி காளத்தி காஞ்சிநகர்
வீசுகழுக் குன்றம் விருத்தகிரி—தேசார்பொன்
னம்பலநள் ளாறே டருட்காழி காரோணம்
வெம்பும் வினையகற்றும் வெண்ணெய்நல்லூர்—நம்புஞ்
திருப்பா திரிபபுலியூர் தென்புகலூர் யார்க்கும்
விருப்பாந் திருக்குடந்தை வேத—மருச்சனைசெய்
வேதவனம் வீழி மிழலைதிரு வையாறு
மாதவனந் தீர்கெவுரி மாயூரஞ்—சீதவனஞ்
சேரு மிடைமருதூர் தென்றுறைசை செங்கமலை
யாரும் புகழவரு மானைக்கா—சீராருங்
கூடல் புனவாசல குற்றால மாப்பனூ
ரேடகநெல் வேலியிரா மீச்சுரமு—மாடானை
தென்பரங்குன் றூர்சுழிகை தென்றிருப்புத் தூர்கானை
வன்கொடுங்குன் றம்பூ வணமங்கை—யினயமிகு
மின்ன தலமுதலா யீரஞ்ஞூற் றெட்டாகு
மன்னவையின் மிக்கா யருள்பெருகும்—பன்னகஞ்சேர்

## மருதூர் நாகநாதர் சிறப்பும் பெருமையும்

தென்மருதூ ரொன்று சிவலோக மொப்பாகும்
வன்மருத வில்வ வனம்நெருங்கும்—பொன்மருவு
மாலயற்குந் தேவருக்கு மாதவர்க்கு வாசமதாஞ்
சீலமுள்ள ஞானியருஞ் சேர்ந்திருப்பர்—மேலும்
பிறக்க நினைக்கப் பெயருரைக்கக் கேட்க
விறக்கவந்து காணமுத்தி யெய்துஞ்—சிறக்குந்
திருநா மமுமிருபத் தெட்டெனவே செப்பு
மொருநாக தீர்த்தமதி லுண்டா—மருகாகச
சென்றுதெரி சித்தோர்முன் செய்தகொடும் பாவமெல்லா
மென்றுள்வரக் கண்ட விருள்போலாந்—துன்றலையில்
நீர்த்திவலை மேற்றெறிக்க நீணிலமெல் லாம்புரப்பர்
பார்த்தொருநீர்த் துள்ளி பருகியிடிற்—கூர்த்தவிருள்
நெஞ்சினிருள் நீங்கிமருள் நீங்க வறிவுபெற்றும்
பஞ்ச விலக்கணந்தேர் பாவலராந்—தஞ்சமென
அந்நீரி லாடி யருந்தார்க டாய்முலைப்பால்
பின்னொரு முன்னவராய்ப் பேறடைவா—ரின்னுமந்தத்
தீர்த்த மகிமையெம்மாற் செப்பரிதென் றேபிரமன்
மூத்த முனிவரற்கு முன்மொழிந்தான்—பூத்தமலர்க்
கொன்றைச சடையன் கொடிவிடைய னாகேசன்
துன்றுபுவ னம்படைத்த தொன்னாளில்—நன்றிகிளை
ரீரஞ்ஞூ றெண்கிரண மேகமாய் வில்வமரத்
தூரடியி லிங்கச் சுயம்பானோன்—சீர்பெருகு

மம்பிகையா டுற்கை யயிராணி பொன்மடந்தை
நம்பு மருந்ததிமின் ஞமடநதை—வெம்பி
வருந்து மகிலிகையாள் மாமறைகள் நான்கும்
பொருந்துபிர மன்மேகம போன்றேன்—பெருநதவத்துக்
கோதமனென் றிநது குமரன் கபிலமுனி
மாதவஞ்சேர் காந்திருவ மாணிபத்ரன்—தீதகலுஞ
சேடன் றிசையுரகர் தென்மலைய மாமுனிவ
ஞடி யருச்சனைசெய் நாகீச—ஞேடிவரும்
வைகை நதியான் வளர்மேற்குச் சன்னிதியான்
வைகை நதியின் வடகரையான்—பொய்கைவரும்
வேடனுக்குக் காட்சியருண் மெய்யினன் மெய்க்குருவாய்ச்
சேடனுக்கு ஞானமுப தேசித்தோ—ஞடிவருந
திக்கரவம் பூசைசெய்யச சித்திகொடுத தேயவருந்
திக்கரவை மாற்றுவிக்குஞ் சிற்சோதி—சக்கிரிமுன்
பெற்றசா [1]பந்துலைத்தான் பின்புளிஞ ராயிரவர்க்
குற்றசா பந்தனையு மோட்டினேன்—சுற்றமுடன்
நல்குரவி ஞல்மெலியும் நாகமய்யன் வேண்டநிதி
நல்கிரச வாதம் நவின்றபிரான்—நல்குரவு
தீரமதி மானெனுமோர் தெய்வமறை யோன்துதிக்க
ஈரமுடன் செமபொற் கிழியீந்தோன்—கோரந்
தருதவனந் தீர்க்குந் தவலோகத் தாரை
மருதம்வில்வ மாயமைத்த வள்ளல்—சுருதிபகர்
காலமோ ராறுங் கசிநதுருகிப் பூசைசெய்யுஞ்
சீலமுள்ள நாகநம்பி தேவிநங்கை—பாலகியை
வேட்டுமணக் கோலம் விரும்புகும்ப மாமுனிக்குக்
காட்டியருள் செய்த கடவுளா—னீட்டுபுகழ்க்
காசிநகர் வாழ்மறையோன் காதலனை வாளரவம்
பாச முறும்பசியாற் பற்றிநுங்கப்—பூசுரனுஞ்
சிந்தை கலங்கித திகைத்தழுங்கும் வேலையினில்
அந்தணன்போல் வந்தவனை யஞ்சலென்று—முநதவுமந
நாகந் தனையழைத்து நன்மகவைக் கக்குவித்துச்
சோகந் தவிர்த்த சுடரொளியான்—வேகவதி
நாடதனிற் காரடர்ந்த நற்குடியில் வாழ்மறவன்
மூடனிரு கண்ணில்லான் முத்தமிழும்—பாடத்
தெரிவித்தே யந்தாதி செப்புகென முற்சீர்
தருவித் தருள்புரிந்த சம்பு—பரிசுத்த
மொல்லாவுந் தன்மகவா மூகையினைப் பேசுவிக்க
அல்லாவென் றேத்து மடியிணையா—னல்லபுகழ்ச்
சித்தன் மதுரச் செவந்திலிங்க மாமுனிநம்
பத்தனென வாண்ட பரஞ்சோதி—பித்தரையிற
றேசமன்பத் தாறினுள்ளுஞ் [2]சென்மித்து வாழ்மனுக்கள்
நேசமுட னெண்ணெய்நெய்பால் நெல்லரிசி—பூசணிக்காய்
காணிக்கை யுள்ளதுவுங் கையாரக் கொண்டுவந்து
பேணிக் கொடுத்துப் பிறப்பொழிக்கும்—வேணிப்

(தொடரும்)

(பிரதி)—[1]பநதுலைந்தான். [2]சென்மித்த.

முடிமன்னன் அரசாளுகிறான். அவன் பெயர் சுந்தரபாண்டிய தேவன்[1]. அவனுடைய நாட்டில் நாணயமான முத்துக்கள் ஏராளமாக அகப்படுகின்றன; அவைகள் எவ்வாறு எடுக்கப்படுகின்றனவென்று கூறுவேன்.

இந்தியாவுக்கும் இலங்கைக்கும் நடுவில் கடல் குடாவாக [2]ஓடுகிறது. இந்தக் குடா முழுவதும் கடல் பத்து முதல் பன்னிரண்டு ஆள் புருஷந்தான் ஆழமாக விருக்கிறது; சிலவிடங்களில் மேடாய் இரண்டாள் புருஷமிருக்கும். முத்துச் சலாபம் குளிக்கிறவர்கள் ஏப்ரல் முதல் மே மாத[3] நடுநாள் வரையிற்றங்கிப் பெரிதும் சிறிதுமாகிய கப்பல்களை அங்குக் கொண்டு செல்கின்றனர். பெட்டலா[4] (Betteller) என்ற ஊருக்குச் சென்று தங்கி, அங்கிருந்து புறப்பட்டு அறுபது கட்டை குடாவிற் செல்லுகின்றனர். சலாபம் குளிக்குமிடத்தில் நங்கூரம் பாய்ச்சி பெரிய கப்பலிலிருந்து சிறு கப்பலுக்கு மாறுகின்றனர். சலாபம் குளிக்கச் செல்லும் வணிகர் கூட்டம் கூட்டமாகப் பிரிந்து ஏப்ரல் மாத முதல் மே மாத நடுநாள் வரைச் சலாபம் குளிக்கக் கூலிபேசி ஆட்களை யமர்த்திக்கொள்ள வேண்டும். மொத்த வருமானத்தில் பத்திலொன்று[5] அரசனுக்கு அரசிறையாகச் செலுத்த வேண்டும்.

மீன்கள் சலாபங் குளிக்குமாட்களைத் துன்புறுத்தாதபடி மந்திர செபஞ் செய்யுங் கடல் கட்டிகட்கு[6] இருபதிலொரு பங்கு கொடுக்க வேண்டும். இந்தக் கடல் கட்டிகட்கு அபிரேயமன் (Abraiaman) என்று பேர் வழங்குகிறது. இவர்கள் பகற் பொழுதைக்கு மட்டும் மந்திரத்தால் மீன்களைக் கட்டுகின்றனர். இரவில் மீன்கள் இஷ்டப்படி துன்பஞ்செய்ய அவற்றைக் கட்டவிழ்த்து விடுகின்றனர். இந்த அபிரேயமன்னர் விலங்கு பறவை முதலான உயிர் வாழும் பிராணிகளைக்கூட மந்திரத்தாற் கட்டவல்லவர்.[1] கூலியாட்கள் கப்பலிலிருந்து படகுக்கு வந்தவுடன் கடலிற் குதித்துக் கீழே நான்கு முதல் பன்னிரண்டு புருஷம் வரை மூழ்கித் தங்களாலான மட்டும் மூச்சொடுக்கும் வரையில் அங்கிருக்கின்றனர். அங்கே முத்துள்ள சிப்பிகளைக் கண்டு இடுப்பில் கட்டிக்கொண்டிருக்கிற வலையிற் போட்டுக்கொண்டு மேலே வந்து போட்டுவிட்டு மறு முறை மூழ்குகின்றனர். அவர்கள் மூச்சுத் தாங்கும் வரையிற் கீழே யிருக்கின்றனர்; தாங்காதபோது மேல் வந்து சிறிது களைப்பாறி மறு முறை மூழ்குவர்; இவ்வாறு நாள் முழுதும் செய்வர். சிப்பிகள் பார்வைக்கு நத்தைகளைப்போலிருக்கின்றன; இந்தச் சிப்பிகளிற்றான் சிறிதும் பெரிதுமான முத்துக்கள் தசையோடு ஒட்டிக் கொண்டு காணப்படுகின்றன. இவ்விதமாகப் பெருவாரியில் முத்துச் சலாபம் குளிக்கப்படுகிறது; உலக முழுதும் பரவி யிருக்கும் முத்துக்கள் முழுமையும் இங்கிருந்தே வருகின்றனவென்பதுண்மை. அந்நாட்டு அரசனது வருமானம் முத்துக்களினின்றும் ஏராளமென்று நான் சொல்வேன்.

மேமாத மத்தியம் கழிந்ததும் முத்துச் சிப்பிகள் அங்கு காணப்படுவதில்லை. முந்நூறு கட்டைகட் கப்பால் அவை காணப்படுகின்றனவென்பதுண்மை.[2] அவ்விடத்தில் செப்டம்பர்

[1]போலோ 1293 வாக்கில் பாண்டிய நாடு வந்தான். அப்பொழுது ஆண்ட பாண்டியன் **ஜடாவர்மன் சுந்தரபாண்டியனாக** விருக்க வேண்டும். இவன் கி. பி. 1253-ல் பட்டத்துக்கு வந்தான்.

[2]இதனை **மன்னார்குடா** என்பர்.

[3]சித்திரை மாத முதல் வைகாசி மத்தி வரை.

[4]பட்டலம் என்ற ஊராகக் கருதுகின்றனர்.

[5]முத்துச் சிப்பிகளை யெடுத்து வந்து எடுத்த முத்தில்பத்திலொன்று அரசிறையாகும்.

[6]மீன்கள் வாயைக் கட்டுபவருக்கு **கடல் கட்டி** யென்று பெயர்.

[1]நாய்களை வாய் கட்டுவது நாம கண்கூடாகக் காணுஞ் செய்தி.

[2]இது **பாக்ஸ்** ஜலசந்தி போலும். வேதாரணியம் கோடிக்கும் பாம்பனுக்கும் நடுவிலுள்ள இடம். அரேபியா பக்கத்திலும்

அக்டோபர் மாத மத்தியில் சிப்பிகள் காணப்படுகின்றன.

இந்த மாபார் நாடு முழுவதும் மக்கள் நிர்வாணமாகச்[1] செல்வதால அங்கி தரிக்கவாவது தைக்கவாவது ஒரு தையற்காரன் கூட இல்லை. மானத்தைக் காப்பதன் பொருட்டே ஒரு சிறு ஆடை உடுத்துகின்றனர்; இது ஆடவர் பெண்டிர் என்ற இருபாலாருக்கும் மொத்தமே.[2] ஏழையும் பணக்காரனும இதற்கு விலக்கன்று; அரசனுங்கூட முன் கூறுவதைத் தவிர்த்து நிர்வாணமாகவே இருக்கின்றான். அரசனும் நிர்வாணமாகவே செல்லுகின்றானென்பது உண்மையே யாயினும், அவன் இடுப்பைச் சுற்றி நாணயமான ஒருடை உடுத்தி யிருக்கின்றான்; உயர்ந்த மாணிக்கம, கோமேதகம், மரகதம முதலாய விலையுயர்ந்த அரதனங்கள் வைத்திழைத்த பதக்கமொன்று கழுத்திலணிந்திருக்கின்றான். கழுத்திலிருந்து வயிறு மட்டும் தொங்கும்படியான முத்தும் மாணிக்கமுமாகச் சேர்ந்து நூற்று நான்கு[3] மணிகள் பட்டுக் கயிற்றில் கோத்த தாழ்வடமொன்று அணிந்திருக்கின்றான். இந்த முத்துமணி வடத்தினாலே அவன் வணங்கும் விக்கிரகங்களுக்கு 104 தரம் வணக்கம் சொல்ல வேண்டிய திருப்பதனாலே அதனை யணிந்துள்ளானென்று அங்குள்ளார் கூறுகின்றனர். அவர்களுடைய மதமும் வழக்கமும் அத்தகையது. அவனுக்குமுன் வந்த அவனது பூர்விகரான அரசரும் அவ்வாறே செய்தனர்; இவனும் அதனைக் கடைப்பிடித்தொழுக வேண்டியே அதை ஒரு பொருளாக வைத்தனர். அவர்கள் அன்றாடம் செய்கிற ஜபம் பசௌத, பசௌத பசௌத[1] என்பதாம்; இதனை அவர்கள் 104 தடவை ஜபிக்கின்றனர்.

முன்னர்க் கூறிய அரசன் கையில விலையுயர்ந்த முத்துக்கள் பதித்த மூன்று கடகங்களும், காலில அதே மாதிரியான சிலம்புகளும, விரல்களில மிஞ்சிகளும அணிந்திருக்கின்றான். இந்த அரசன் அவன் உடலில் அணிந்திருக்கும பொன், முத்து இரத்தினங்களின் விலை ஒரு பட்டினத்தை விலைக்கு வாங்கக்கூடிய அவ்வளவு மதிப்புள்ள தொகைபெறும்.[2] அவன் ஏராளமான திரவிய முடையவனாகையால இது ஓர் அதிசயமல்ல. அன்றியும அவை அவனுடைய நாட்டிலேயே அகப்படுகின்றன. இஃதன்றி அரைசகியோ [3]நிறைக்கு மேற்பட்ட முத்துக்களை நாட்டை விட்டு வெளியே கொண்டுபோதல் கூடாதென இவ்வரசன் கட்டளையிட்டுள்ளான்; அன்றி வெளியேகொண்டுபோகவேண்டுமானால் மறைபொருளாகவே கொண்டு போக வேண்டும. இவ்வாறு பருமனுள்ள முத்துக்களையெல்லாம் தான் வைத்துக்கொள்ள வேண்டுமென்ற எண்ணத்தாலே இந்த விதமான கட்டளையிட்டிருக்கின்றான்; ஆதலினால் இவனிடமுள்ள முத்தினளவு அளவிட்டுக் கூறவியலாதது. அன்றியும் பருமுத்துக்களுடையவர்களெல்லாம் அவற்றைத் தன்னிடம கொண்டு வருவார்களாயின் அவற்றுக்கு ஒன்றுக்கு இரட்டி கொடுப்பதாக ஆண்டாண்டு தோறும் பறை யறைவிக்கின்றான். அவ்வாறு மகிழ்ச்சியோடு செய்ய நாட்டிலுள்ள ஒவ்வொருவனும் முற்படுகின்றான்; அதனால் அவ்வரசன் அதற்குள்ள விலையைக்

[1]நிர்வாண மென்றது ஐரோப்பியரைப் போன்று உடலை முழுமையும் மூடாமையைக் குறிக்கும். இந்நாட்டில் வெப்பம் அதிகமாகையால் இடுப்பில் ஆடை கட்டுவதுடன் நிற்கின்றனர்.

[2]மலையாளக் கரையில் பெண்டிர் மேலாடையின்றிருப்பினும் சோழ பாண்டி நாடுகளில் அவ்வாறிருந்ததாகத் தெரியவில்லை.

[3]நூற்றெட்டாக விருக்கவேண்டும்.

[1]இவருக்கு இவ்வாறு கூறியவர் இன்னரென்று விளங்கவில்லை. ஒருகால் **பசுபதே** யென்று சிலர் சொல்வதைக் கேட்டார் போலும். பஞ்சாக்ஷர அஷ்டாக்ஷர ஜபம், காயத்திரி ஜபத்தைத் தவிர இவ்வாறு ஜபம் செய்ததாகத் தெரியவில்லை.

[2]So, let me tell you what this king wears, between gold and gems and pearls.

கொடுத்து எல்லாவற்றையுந் தானே வாங்குகின்றான்.

இஃதன்றி இம்மன்னவனுக்கு ஐந்நூற்றுவர் மனைவியரிருக்கின்றனர்; நாட்டில் அழகு வாய்ந்த ஒரு மங்கையுண்டென்று கேட்டால் அவளையுடனே மணந்து கொள்கின்றான். அவன் ஒரு துக்ககரமான செய்கை செய்தான். இவன் சகோதரனுக்கு ஓர் அழகுள்ள மனைவியிருந்தாள். அவளை இவ்வரசன் கைப்பற்றிக் கொண்டான். சகோதரன் பொறுமையுடையவனாதலால் வெளிக்காட்டவில்லை. [1]இவ்வரசனுக்கு அநேக பிள்ளைகளுண்டு. அரசனைச் சுற்றிப் பிரபுக்களான தலைவர்கள் அநேகர் காத்துநிற்கின்றனர். இவர்கள் அரசனோடு குதிரை சவாரி செய்வர்; அவனுடனேயேயிருப்பர்; நாட்டில் அதிகாரஞ் செலுத்துவர்; அவர்களை அரசனது உரிமைச் சுற்றமென்பர். [2]அரசனிறந்ததும் அவனைச் சுடுகாட்டில் தீயிலிடுவர்; அப்பொழுது இந்த உரிமைச் சுற்றமும் தீப்பாயும். அந்த உரிமைச் சுற்றத்தார் இந்த உலகில் தோழர்களாக இருந்தது போல மறுவுலகிலும் தோழமை கொள்ளப் போவதாக அவர்கள் கூறுகின்றனர்.[3]

அரசனிறந்ததும் அவனது மக்கள்[4] அவனீட்டிய பொருளைத் தொடுவதில்லை. அவர்கள் தந்தை ஈட்டிய தேட்டத்தைப் போன்று தாங்களும் தேடவேண்டுமென்று கூறுகின்றனர். இதனால் ஏராளமான திரவியம் இந்த நாட்டிற் குவிந்திருக்கிறது.

இந்நாட்டில் குதிரைகள் உண்டாவதில்லை; அதனால் குதிரை வாங்குவதில் மிகுந்த திரவியம் செலவழிகிறது. அது எவ்வாறென்பதைக் கூறுவேன்: கிஸ் [1](Kis) [2]ஹொர்மஸ் (Hormes) தோபார் (Dofor) சோயர் [3](Soer) ஏடன (Aden) என்ற இடங்களிலுள்ள வணிகர் பலவகைக் குதிரைகளைச் சேர்த்துக்கொண்டுவந்து இந்நாட்டிலும் இவனது சகோதரர் [4]அரசாளும் நாட்டிலும் விற்கின்றனர். இங்கு ஒரு குதிரை ஐந்நூறு சகி (Saggi) பொன்னுக்கு விற்கப்படுகிறது. அப்பொன் நூறு வெள்ளி மார்க்குகளுக்குச் சமமாகும். இவ்வரசனே ஆண்டுதோறும் இரண்டாயிரம் குதிரைகள் வாங்குகின்றனன்; இவனைப்போலவே இவனது சகோதரர்களும் வாங்குவர். அவர்கள் அவ்வளவு வாங்கக் காரணம் ஆண்டு முடிவில் நூறு குதிரைகளே உயிரோடிருக்கின்றன; மற்றவை இறந்துவிடுகின்றன. அவற்றை, நன்றாகக் கவனியாமலிருப்பதால் இறக்கின்றன. அவர்கள் குதிரையைப் பராமரிக்கும் வழியறியமாட்டார்கள்; அன்றியும் இலாடமடிப்பவர்கள் இந்நாட்டிலில்லை. வணிகர் அந்நாட்டிலிருந்து தங்களோடு இலாடமடிப்பவர்களை யழைத்து வருவதுமில்லை. அவர்களாகவே வர முயன்றாலும் வணிகர் தங்கள் வியாபாரம் குறைந்து ஊதியம் போய்விடுமென்று கருதி அவர்களை வரவிடுவதில்லை. இவர்கள் குதிரைகளை மரக்கலங்களிற் கொண்டு வருகின்றனர்.[5]

நான் கூறப்போகிற வழக்கம் அவர்களுள் உண்டு. ஒருவன் ஒரு குற்றத்திற்காகக் கொலைத்தண்டனை யடைந்தபோது, அவன் இன்ன தெய்வத்தின் பேரால் உயிர் விடுவேனென்று கூற அவனுக்கு உரிமையுண்டு. அவ்வாறே தண்டனையடைந்தவன் செய்துகொள்ள

---

[1]இச்செய்தி சரித்திரக்காரர் ஒருவருங் கூறவில்லை.

[2]ஐம்பெருங் குழுவும் எண்பேராயமும்.

[3]அரசரோடு நட்புடைய பாவலர் பலர் தீப்பாய்ந்ததாகப் புறநானூறு முதலிய நூல்கள் கூறும்.

[1]Kais.

[2]Hormusy.

[3]Sohar; இது, அரேபியாவிலுள்ள ஓமான் நாட்டின் புராதன தலை நகரம். ஓமான் குடாவிலிருக்கிறது.

[4]சேர, பாண்டிய, இரட்ட நாடுகள்.

[5]பட்டினப் பாலையில் புரவிகள் கால்வழியாக வந்ததாகக் கூறப்பட்டிருக்கிறது கவனிக்கத் தகுந்தது.

அரசாங்கம் உதவியும் கொடுக்கிறது. அவனுடைய உறவின முறையாரும நண்பரும் அவன்மேல் பன்னிரு கத்தியைக் கட்டி ஒரு வண்டியிலேற்றி ஊரிலுள்ளாரறியுமபடியாக 'இவவீரன இன்ன தெய்வத்திற்காக உயிர துறக்கப் போகின்ருன்'னென்று கூறிச செல்வர். எல்லோருமே குறிதத விடத்திற்கு வநதவுடன், குற்றவாளி ஒரு வாளை யெடுத்துக்கொண்டு 'இத் தெய்வததிற்காக நான் உயிர் விடுகின்றேன்'னென்று சொலலி ஒரு கையில் குத்திக்கொள்வான், இதே விதமாக மற்றொரு கையிலுமாக, வயிற்றிலுமாகப் பலவிடங்களிலும் குத்திக்கொண்டு உயிர் விடுவான். அவன் இறநதவுடன் சுற்றத்தார அசசவத்தை யெடுத்து மகிழ்சசியோடு தீயிடுவர. பெண்டிருமே தம் கணவனைத் தீமடுத்தபோது தாமுமஅத் தீயில விழுந்து உயிாவிடுவர் அவ்வாறு செய்வோரை எல்லோரும் கொண்டாடுவர்.



# சுந்தர சுலோசன

[திரு. டி. ஆர். சாரங்கபாணி, எம். ஏ.]

(தொடர்ச்சி)

## இதழ் 8.

### "ஆறுமுக அப்பாவருக"

"அரும்பொனே மணியே என்அன்பே
[என அன பான
அறிவே என்னறி விலூறும்
ஆநநத வெள்ளமே என்றெனறு பாடி
ஆடினேன் நாடி நாடி [னேன்
விரும்பியே கூவினேன் உலறினேன் அல
மெய்சிலிர்த திருகை கூப்பி [றினேன
விண்மாரிஎன எனஇருகண்மாரி பெய்
வேசற்றயர்ந் தேன்யான் [யவே
இடும்பநேர் நெஞ்சகக்கள் வன்ஆனுலும்
இடைவிட்டு நின்றதுண்டோ [உனை
என்று நீஅன்று நான உன்னடிமை யல்
யாதினும் அறியாவெறுந [லவோ
துரும்பனேன் என்னினுங் கைவிடுதல்
[நீதியோ..."—தாயுமானுர்.

"உனனை மறந்திடுவேனே
மறப்பறியேன் மறந்தால்
உயிர்விடுவேன் கணந்தறியேன
உன்ஆணை அதுநீ
என்னை மறந்திடுவாயோ
மறநதிடுவாய் எனில்யான்
என்னசெய்வேன எங்குறுவேன்
எவர்க் குரைப்பேன எநதாய்
அனனையினும் தயவுடையாய்
நீமறந்தாய் எனினும்
...மெலாம் அளித்திடும்நின்
...ள் மறவா தென்றே
...க்க ளிதநதங்கே
இருக்கின்றேன மறவேல்
இது தருணம் அருட்சோதி
எனக்கு விரைந்தருளே.'
—இராமலிங்கர்.

ஆ! ஈசா! இளமைப் பருவத்திருந்து உன்னைநான் மறவாது நின்றதன் பயன் என்னே! இளமையில் பெற்றோரை இழந்த பெரும் வாட்டம் நின்னடியை நாடவும நீயே கதியென உன்னைப் பாடவும் ஓயாது நினைந்து நினைந்துருகவும் தூண்டியும் நின் எழிலைக் கண்ணாரக் கண்டு பேருவகை பூத்து ஆநநதத்தில் திளைததெழும் பெரும் பாக்கியத்தை யான் பெறவில்லை. அறிவுரு கெட்டாது அருவமாய் அஙஙன கெனுதபடி எஙகும் நிறைந்தும் தனிததும் நிற்கும் என் முருகாவோ! நின்னடி யார்க்குத் தொண்டு செய்திடின் உன்னைக் கண்டு இன்புறாஉம பெரும் பேறு பெறுவேனென வெண்ணியன்றே, என் இறைவ நான் கடன் வாங்கவுந் துணிந்தேன். "மருவும்அடியார்கள் மனதில்" இனிது விளையாடி இன்பத்தேன் சொரியும் என் "ஆறுமுக அப்பா!" நின்னுலன்றே என் அன்னை - ஆ!....அன்பிற் சிறந்த என் அருமன்னை - இறநதபின் அன்னை

யாகவும் அப்பனாகவும் நின்று, உரிமையின் இயல்பையும், அன்பின் பெருமைமையையும், ஒழுக்கத்தின் சிறப்பையும், பக்தியின் மாண்பையும், நின்னடிப் பெருமையையும் எனக்கறிவுறுத்திய மிதுனபுரி ஜமீந்தாராகிய சந்திர சேகரப்பிரபுவும், தீயருடன் கூடி யான் தூர்த்தனாயினேன என எண்ணி என்னை வெறுக்கவும் நேர்ந்தது. கள்வனைப் போலும் குடியனைப்போலும் யான் சென்ற ஓராண்டாக என் குருநாதனுறையுளில் ஒளிந்து உறையவும் நேர்ந்தது. ஏ! மயிலேறும் மன்னா! என்னுயிரினு முயர்ந்த என்னுயிர்க்காதலி சாரதாவும், நான் வேசியருறவான் ஒழுக்கமிழந்தேனென எண்ணவும் நேர்ந்ததே. நற்குண உறையுளாகிய சுலோசனையும், நான் தூர்த்தருடன் கூடித் தீயஒழுக்கங் கொண்டேனெனச் சந்தேகிக்கவுங் காலம் வந்து விட்டதே. அடியார்கள வாழ்வே! ஒழுக்கத்திற் சிறந்த என்னுடன் பிறந்தோனாகிய மோகன சுந்தரமும் உண்மையையுணராது என்னைச் சந்தேகிக் கின்றனனே. ஆ! என்னே! என் விதியிருந்தவாறு! இளமையிலிருந்து துன்பத்தை நுகர்ந்தறியா நான் இவ்வளவு வேதனைகளையும் பொருட் செய்யாது நின்னெழிலைக் காண்டல் வேண்டும் என்னும் பேரவா கொண்டிருப்பது நீயறியாததோ? என் குருநாதரும் நின்னைக் கண்டின்புறுதற்குரிய நிலையை யானெய்து விட்டேனெனக் கூறியும் நின்னைக் காணவியலாது யான் வாடுகின்றேனே. அயனெனவாகி அரனெனவாகி அரியெனவாகி அவை மேலாய் மூவுருவின் முதலுருவாய் தனித்திலங்கும் என் ஆண்டவா! எவ்வொழுக்கம் பூண்டு எந்நெறிபற்றி என் குருநாதர் நின்னைக்கண்டு - நின் அழகிய உருவில் கலந்து - இன்பம் நுகர்ந்தனரோ அம்முறைகளையே யான் சிறிதும் வழுவாது கையாண்டும் நின்னைக் கண்ணுறாத தன் காரணமென்னை? என் பழவினை என் முன்னர் நின்று நின்னைக் காணாதவாறு தடுக்கின்றதோ? இன்றேல் நான் பெரும் பாபியென்று நின்னுருக் காட்டா தொளிக்கின்றாயோ?

"அறிவா லறிந்துன இருதாளிறைஞ்சும
அடியார் இடைஞ்சல் — களைவோனே"

—அருணகிரியார்.

நீயென்னைக் கைவிடுதல நீதியோ,

"கல்லாதநாயேன எனினும் எனைக்
காக்குந் தாயநீ என்றுலகம்
எல்லாம் அறியும் ஆதலினால் எந்தாய்
அருளா திருத்தி யெனிற
பொல்லாப் பழிவந்தடையும் உனக் கரசே
யான் புகல்வ தெனனே [யினி
செல்லார் பொழில்சூழ் திருத்தணிகைத் தே
ஞானச் செழுஞ்சுடரே." [வே

—இராமலிங்கர்.

ஆதலின் எந்தாய்!

"அண்ட முடிதன்னிலோ பகிரண்ட மதனி
அலரிமண்டல நடுவிலோ [லோ
அனல்நடுவிலோ அமிர்த மதிநடுவிலோ
அகமுருகி மலர்கள் தூவித் [அன்பர்
தெண்டமிட வருமூர்த்தி நிலையிலோ திக்குத்
திகந்தத்திலோ வெளியிலோ
திகழ்விந்து நாதநிலைதன்னிலோ வேதாந்த
சித்தாந்த நிலைதன்னிலோ
கண்டபல பொருளிலோ காணாதநிலையெனக்
கண்ட சூனிய மதனிலோ
காலமொரு மூன்றிலோ பிறவிநிலை தன்
கருவிகரணங்க ளோய்ந்த [னிலோ
தொண்டர்களிடத்திலோ நீ வீற்றிருப்பது
தொழும்பனேற் குளவு புகலாய்..."

—தாயுமானார்.

ஆ! முருக.

"சேநிலை யுணர்ந் துணர்ந் துணர்வுறக்
கந்தனை யறிந்தறிந் தறிவினிற் [யாத
சென்று செருகுந் தடந்தெளிதரத் தணி
சிந்தையு மவிழ்ந்த விழ்ந்துரை யொழித
தென் செயலழிந்தழிந் தழிய மெய்ச்
சிந்தைவர என்று நின்தெரிசனைப் - படு
[வேனோ"—அருணகிரியார்.

அழகும் இளமையும் இறைமையுந் தாய்மையும் ஒருங்கியைந்த திருமால் மருக!

"கண்ணால் உனது திருவடியைக்
கண்டாதரவு பெருகி இருகையால்
தொழுதுன் திருக்கோயில் காலால்
வலஞ்செய்து உனதுபுகழ்

ஏப் புகழ்ந்து
கண்ணீர்பாயா ஏனையுக
தாயாகப் பரிந்துவளர்க்கும் பெருங் [மும்
கருணை படைதது விரிஞ்சைபபதிவா
அண்ணுலவருக வுலகுமுழு
தாண்டாய் வருக கதிதரும்எம்
ஐயாவருக ஆறுமுக அப்பா
வருக விளங்குகதிர்
வண்ணுவருக மயிலேறும் மனு
வருக அடியார்கள் வாழ்வே
வருக தெய்வசிகா மணியேவருக வருகவே.

—**மார்க்க சகாயதேவர்.**

மூவுருவின் முதலுருவாய் தனித்திலங்கும் இறைவ! நான் பல்லாண்டுகளாகக் கண்டின்புற ஏங்கும் நின்மெய்யுருவைக் காட்டி.

“அறுமுகந தனிலொரு முகந்தனே
அடியனேற் குறவாககிடீர்
அம்பகம் பனிரண்டி லொன்றில்
எனஆணவங் கெடநோக்கிடீர்
வெறிகொள் பன்னிருகையில் ஒன்றில்
என்வெம் பவக்கடல் தடுததிடீர்
விளங்கும் ஆறுசெவ் வாயில்ஒன்றினில்
வீடுசேர்மொழி கொடுத்திடீர்
செறியும்ஆறிரு செவியில் ஒன்றில்என
செய்தியாவையுங் கேட்டிடீர்
செய்யமார்பம் ஓராறில் ஒன்றில்என்
செநதமிழ்த் தொடை பூட்டிடீர்
தறுகண் வேடர்கள் உதவும்மின்கொடி
தனமும் அனபர்கள் மனமும்நீள்
ணிகையங்கிரி முடியும் நண்பு
தழைத்த செங்கல்வ ராயரே.”

—**கந்தப்ப தேசிகர்.**

மேலோதிய அரும்பாடலைக் கண்களை மூடி கண்களினின்றும கண்ணீர் ஊற்றென வெதும்பி யூற்ற, முகத்தினில் வாட்டமும் ஞானவொளியும ஒருங்கியைந் தொளிர, சண்முக சுநதரமஇறைவனின் திருவுருவைக் காணுமாசை யான் இரநதிரந்து பாடிப்பாடி அழுது நிற்கையில் அவனிருந்த அறையின் கதவு திறக்கப்பட, அரையிற் காவி பீதாம்பர மணிந்து, நெற்றியிலும் உடல் எங்கும திருநீறிலங்க, சநதனத் திலகம்இடையில்குங்குமப்பொட்டுடன் இலங்ககமெழுத்துப் பருதது, சிவநத மேனியுடைய ஒருவேடம் அறையுள் நுழைந்து “அபபா! சண்முகம்!”என விளித்தது. அக்குரலோசையைக் கேட்டதும, சண்முகசுநதரம் கண்களைத் திறநது ஓடோடியுஞ்சென்று அவர்திருவடிகளில் அடியற்ற பனைபோலும் வீழ்நது பணிநது “சுவாமி” யென மறுமொழியீந்து அடக்கமாக ஒருபுறம் நின்ருன்.

“அப்பா சண்முகசுநதரம்! நீ வருந்துவதைக்காண என்னுள்ள முருகுகின்றது. ஆனுல் அவசரப்படுதல் நியாயமன்று. யான் பல்லாண்டுகளாக இடிப்புண்டு உணாந்த வழிகளை யெல்லாம் உனக் கறிவித்துள்ளேன். பககுவ நிலையையும் நீ எய்து விட்டாயெனவும உணர்வேன். ஓராண்டில் நீ இத்தகைய பெரிய நிலையை எய்தியது நின்குலஞ் செய்த புண்ணியமேயாகும். உன்னைச் சீடனுக யான் பெற்றதும் என்னுடைய பாக்கியமேயாம். “அவனருளால் அவனடி” வணங்கும் பெரும் பாக்கியத்தைப் பெற்றும் நீ வீணுக வருந்துதல் நன்றன்று. சில தினஙகளில் நீ பெறுதற்கரிய பெருங் காட்சியைக் கண்டின்புறுவாய். உலகம் தோன்றியும் ஒடுங்கும் இடமாகிய இறைவன் உனக்குருக் காட்டா தொழியான். எனவே, நீ கவலையற்றிடு.”

“சுவாமி! என்உள்ளத்தைக்கொள்ளை கொண்ட அறுமுகப் பெம்மானைக் காண்டல வேண்டுமெனும் பேரவாவினுல் யாண்கொண்ட வீண் பழிகளையும் இழிவுரைகளையும், நீர் அறியீரா?

---

# இ டி யே று

## காங்கரஸ் !

எதிர்பாராத நிகழ்ச்சியொன்று நேர்ந்திருக்கிறது. அஃதென்னை? காங்கரஸ் கலைக்கப்பட்டதேயாகும்.

காங்கரஸ் கலைக்கப்பட்டதற்கு உரிய காரணங்கள் பலபடக் கூறலாம். அக் காரணங்களை ஆராய்வதால் பயன் ஒன்றும் விளையாது. காங்கரஸ் கலைக்கப்படும் நிலைமை நேர்ந்தமை குறித்துத தேசம வருந்தும் என்பதில் ஐயமில்லை.

சட்ட மறுப்பை முற்றும் நிறுத்த வேண்டுமென அரசாங்கத்தார்கொண்ட பிடிவாதமும், அதை அறவே நிறுத்த மனங்கொள்ளாத தலைவர்கள் பிடிவாதமும் காங்கரஸைக் கலைத்துவிட்டன என்று சுருங்கச் சொல்லலாம். தேசத்தில் ஏற்பட்டுள்ள சோர்வும், ஒற்றுமையின்மையும், வகுப்புவாதமும், சுயநலமும், இன்ன பிறவும் அரசாங்கத்தைப் பிடிவாதத்தி லிருக்கச்செய்தன. அரசாங்கத்தின் பிடிவாதத்துக்கு எதிராகத் தலைவர்கள் கொண்ட பிடிவாதமும் காங்கரஸைக் குலைக்கச் செய்தது.

பூனாவில் கூடிய தலைவர்கள மகாநாட்டில் பலர் காந்தியடிகளைக் குறைகூறுவதில் கருத்தைச் செலுத்தினரேயன்றிப் புதிய திட்டங் கோலிக் காங்கரஸை நன் முறையில் நடாத்துவதில் கருத்தைச் செலுத்தினரில்லை. சட்டமறுப்பை நிறுத்திச் சட்டசபையைப்பற்றல் முதலிய வழிகள் பல இல்லாமற் போகவில்லை.

சட்டமறுப்பை நிறுத்தல் தோல்விக குறி என்று கருதுவது தவறு. 'சட்ட மறுப்பு' என்பது என்றும் நிலவத் தக்கதோர் இயக்க மன்று. அதை நிலையாக வைத்துப் பாதுகாக்க முயல்வதனால், சோர்வும், பிறவும் விளைதல் இயல்பு. நமது தேசம் உள்ள நிலையில் சட்ட மறுப்பைச் சதாகாலம் போற்றிக்கொண்டிருத்தல் கூடாது. பல வழியிலும் பிரிவுபட்டுள்ள தேசத்தில் சட்டமறுப்பு இயக்கம் முழுவெற்றியை ஒருபோதும் தாராது. சட்டமறுப்பு இயக்கம் ஒருவித உணர்ச்சியை உண்டு பண்ணக் கருவியாக உதவுந் தகையது. அதை என்றும ஓம்பக் கருதுவதால் நலன் விளையாது.

காந்தியடிகள் ஒருவர் என் செய்வார்? அவர் என்னென்னவோ செய்து பார்க்கிறார். தேசம் அவர்தம் முயற்சிக்குப் போதிய அளவில் துணை நிற்கும நிலையிலில்லை.

தீண்டாமை காந்தியடிகள் முயற்சிக்குப் பெருந்தடையாக நிற்றல் வெள்ளிடைமலை. அவ்வுண்மை கண்டே தீண்டாமை விலக்கல்மீது அடிகள் கருததுச் செலுத்தலானார். அக்கருத்துக்குப் பூனாமகாநாடு இடர் செய்தது என்றே கூறலாம். காந்தியடிகள் சில காலம் அரசியலில் தலைப்படாது, தீண்டாமை விலக்கலில் மட்டுந் தலைப்பட்டுத் தொண்டாற்ற உறுதி கொண்டிருக்கலாம்.

தலைவர்கள் உள்ளத்தில் தோன்றிய பலதிற எண்ணங்கள் சுழன்று சுழன்று கடைசியில் காங்கரஸையே வீழ்த்தி விட்டன. காங்கரஸ் அமைப்பு வீழ்ந்தாலும், காங்கரஸினின்றும் எழுந்து தேசத்தின் நாலு பக்கங்களிலும் பாய்ந்து ஒளிர்ந்து கொண்டுள்ள காங்கரஸின் காந்த சக்தி வீழ்ந்துபடாது. அச்சக்தியை அழித்தல் எவராலும் இயலாது. அச்சக்திக்குப் பிறப்பிடமாயிருந்த நிலையத்தைச் சீர்படுத்த வேண்டுவது தேசபக்தர்கள் கடமை.

காங்கரஸ் சக்தியைப் புதுக் குழல்கள் வழியாகப் பாய்ச்ச முயலுதல் வேண்டும். தற்போதைய காங்கரஸ் அமைப்புக் குலைந்தமையான், அது கொண்ட சட்ட மறுப்பு முதலியனவும் ஒழிந்தன என்று சொல்லவேண்டுவதில்லை. சட்ட மறுப்பில் தேசத்தார்க்கு எவ்வளவு ஊக்கம் தொடக்கத்தில் எழுந்ததோ, அதைப் பார்க்கிலும்

பதின்மடங்கு சோர்வு இப்பொழுது அதன் மாட்டு ஏற்பட் டிருக்கிறது. ஆகவே, தற்போது சட்ட மறுப்புமீது கருத்துச் செலுத்துவதே அநாவசியம். சட்ட மறுப்பில கருத்துச செலுத்தாது ஆக்கவேலைகளில் கருத்துச் செலுத்திக காஙகரஸ் அமைப்பை மீண்டும் உயிர்ப பிக்க முயல்வது சிறப்பு. இதற்கு என் செய்வது ?

அரசியல் ஞானிகள் ஓரிடத்தில் ஒன்றுபட்டுத் தேசம் தற்போதுள்ள நிலைமைக்கேற்ற முறையில் ஒழுங்கு பட்ட திட்டங் கோலுதல்வேண்டும். அத்திட்டத்தை மாகாண மகாநாடுகள் வழி உறுதிப்படுத்திப் பின்னே பொது அமைப்பில் உறுதிப்படுததலாம். இவ் வழியில் முயல்வது நலம்.

பொது அமைப்பை உண்டுபண்ணுது ஆங்காங்கே தன்னந் தனியராய்ச் சிறு சிறு அமைப்புகளை உண்டுபண்ணிச சட்டசபையைப் பற்ற முயன்று வரு வது தேசியக் கொலையாக முடியுமென் பதைத் தலைவர்கள் உணர்ந்து நடப்பார் களாக.

## ஸ்ரீமேஹர் பாபாஜி

ஸ்ரீமேஹர் பாபாஜி அவர்களின் வர லாறும் மொழிகளும அடங்கிய ஒரு நூல் வரப் பெற்றோம். இநநூலை ஆங் கிலத்தினின்றும தமிழில் மொழி பெயர்த்தவர் திருவாளர் எஸ். வி. இரத்தின சபாபதி அவர்கள். மொழி பெயர்ப்பு நன்முறையில் அமைந்திருக் கிறது. இத்தொண்டில் தலைப்பட்ட திருவாளர் - இரத்தின சபாபதி அவர் கட்கு நமது நன்றி உரியதாக. ஸ்ரீமே ஹர் பாபாஜி குருவருள் பெற்று, ஆண்டவன் இன்பத்தில் திளைத்துத் தாம் பெற்றுவரும் அநுபவங்களை உலகுக்கு அறிவுறுத்திவருதல் முதலிய குறிப்புகள் இநநூற்கண் சுருக்கமாக ஓதப்பட்டிருக்கின்றன. ஸ்ரீபாபாஜி யின் திருமொழிகள்சில நூற்கண் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அவைகள் இக்காலத்துக்கு இன்றியமையாதன.

கடவுள் உண்மையில நம்பிக்கை குறைநது வரும இந்நாளில் ஸ்ரீமேஹர் பாபாஜியின் வாழ்வும் உபதேசமும் உல கிறகுப் பெரிதும் பயனபடுவன என் பதில ஐயமில்லை. திருவாளர்—இரத் தின சபாபதி அவர்கள் மொழிபெயர்த் துள்ள ஸ்ரீ பாபாஜியின் திருமொழிகள சில வருமாறு:—

“மனிதனுடைய வாழ்ககையின் முககிய இலட்சிய மெனனவென்று பார்க்கும்போது அது தன்னுள்ளிருககும் ஜீவாத்மாவை எல் லாமாய் எங்குமாய்ப் பரவியிருக்கும் பரமாத் மாவாகக கண்டு அதனோடு ஒனறி ஆனந் தத்தை அநுபவித்தலேயாம் எனபது தோன றும்.”

“ஒரு குறுகிய வரம்பிற்குட்பட்ட ‘நான்’ எனபது ஒழிநதபோது பரநதும் வரம்பில் லாததுமாகிய ‘நான்’ எனபது தானுகவே தோன்றும்.”

“எங்கும பரநது இருக்கும்படியான அந்த ஒரு கடவுளே கல்லாகவும், இரும்பாகவும், தாவரமாகவும் (வாயில்லாப்) பிராணியாகவும், மனிதனுகவும் இருநது பற்பல விதமாக நடிக கிறுர். அவர் அநத அநுபவங்களுள் ஒவ் வொன்றன் மூலமாகவும், தம்முடையசொந்த மாயததிலுைம், தந்திரத்திலுைம் அவதாரங் கள் பல எடுக்கிறுர். மற்றும் பிரிக்கமுடியாத அநதக் கடவுளே அறிந்த ஒரு தோற்றததின் உஜ்ஜீவிப்பின மூலமாகவோ அல்லது ஆத்ம ஞான முதிர்ச்சி பெற்ற தோற்றததினலோ மாயததிற்கும் தநதிரததிற்கும் மேலாக வுள்ள தம்முடைய உண்மை நிலையை அநுப விக்கிறுர்.”

“உண்மைப் பகதி (தெய்வ வழிபாடு) என் பதற்கு மதசம்பநதமான சடங்குகளை அதயா வசியகமாக அநுசரிக்க வேண்டுமென்பதோ, மந்திரங்களை ஜபிக்கவேண்டு மென்பதோ அர்த்தமல்ல ; ஆனல், கடவுளின் ஏதாவ தொரு நாமத்தை இடைவிடாது ஸ்மரணை செய்தல் அல்லது சதா சர்வகாலமும் இறை வனைப்பற்றி நினைத்தல் என்பதே நிச்சய மான அர்த்தமாகும்.”

‘அன்புருவாய இறைவா உன்னுடைய வீடாகிய புததியில் பிரவேசிக்க எப்போதும் சிததமாகவே யிருக்கிறுர் ; ஆனல், அது உன னுடைய எண்ணற்ற பொய்யான அன்புகளி னல் (பற்றுக்களினல்) நிறைந்திருப்பதனல், அவர் பிரவேசிப்பதற்கு இடமுண்டாக வில்லை. அதனல், அவர் பிரவேசியாதிருக் கின்றுர்.”

"அன்பு மயமான ஆண்டவனிடமிருந்து நீ பிரிவதற்கு நீயே காரணமாயிருக்கிறாய். நீ "நான்" என்பதை வேரோடழித்து விடுவாயாயின், அவருடன் ஐக்கியப்படும் பெரும் பேற்றை அடைவாய்."

"உன்னுடைய கூந்தலானது கத்தரிக்கப்படவேண்டுமானால், நீ உன்னுடைய தலையை ஒரு நாவிதனுக்கு ஒப்புவித்து, அவ்வேலையானது முடியும் வரை இணங்கியிருக்கிறாய். அவ்வாறே நீ கடவுளை அறிதல் வேண்டுமானால், நீ சதாசாரியப் பெருந்தகையாகிய சற்குரு ஒருவரிடம் சரண்புகுதல் வேண்டும்."

"மதத்தலைவர்கள் எனப்படுவோர் ஒழிவின்றி எப்பொழுதும் பழக்கம், மதநம்பிக்கைகள் என்பவைகளுக்காகச் சச்சரவிடுகின்றனர்; அவற்றால் அவர்கள் தங்களுடைய சீடர்களை அஞ்ஞானமாகிய பெரும்பள்ளத்தில் தள்ளுவதற்குமாத்திரம் சாமர்த்திய முடையவராயிருக்கின்றனர். குருடன் குருடனையே பின்பற்றுவான். இருட்டாகிய அஞ்ஞானத்தில் இருக்கும்ஒருவன் பிறருக்கு எவ்வாறு அறிவு விளக்கஞ்செய்தல் கூடும்? தனக்கே உண்மையான மதம் என்பது எது என்று தெரியாதவன மற்றவர்களுக்குமதத்தைப்பற்றி என்ன ஞானத்தைப் போதிக்கவல்லான்?"

"கிரம்பப்பேசும் ஒருவன் மாறாத தத்துவ ஞான முள்ளவனாக இருப்பதில்லை. மிகத் துரிதமாகச் சொற்களை மாரியாகச் சொரிவது பேரறிவுடைமையைக் குறிக்கும் அடையாளமாகாது. அபரிமிதமான சொற்களைக் கொண்டு பேசுவதை விவேகம் என்று தப்பிதமாக எண்ணிவிடாதே."

"பாலுடன் கூடிய பரிசுத்தமான மரக்கறி உணவே மனிதனுள்ளிருக்கும் தெய்வீகத் தன்மையைப் பெருகச் செய்தற்கு உதவி புரிகிறது. ஆனால், முட்டைகள், மாமிசம், இறைச்சி, மதுபான வகையராக்கள் மனிதனுள்ளிருக்கும் மிருகத் தன்மையை மேலெழச் செய்கின்றன."

"பல ஆயிரக்கணக்காயுள்ள விரோதிகளைக் கொன்று அதனால் வெற்றிபெறும் பராக்கிரமத்தினும் ஒரு விரோதியின் மனதைக் கவர்வதே மிகப் பெரிய பராக்கிரமமாகும். கடுமையான விரோதியையும் இடைவிடாது நல்லெண்ணப் பிராயத்துடன் மனம் நினைக்குமானால் அவனையும் அன்பார்ந்த சிநேகிதனாக மாற்றும் மகோன்னத சக்தி மனதிற்குப் பெரிதும் உண்டு."

"உன்னைப்பற்றிப் புறங்கூறுபவரிடத்துக் கோபம் கொள்ளாதே; ஆனால் அவரிடத்துந் தயை யுடையவனாயிரு. ஏனெனில் அவர் அப்படிச் செய்வதனால் உன்னுடைய வினையின் சேமிப்பைக் குறைத்து உனக்குத் தொண்டு புரிகிறார்; அதனால் தம்முடைய வினைகளின் பெருக்கத்தை மிகவும் அதிகமாக்கிக்கொள்ளுகிறார். அதற்காக அவர்மீது நீ கருணைகொள்வாயாக."

"உன்னுடைய நிழல் உன்னை விட்டுப் பிரியா திருக்கிறது. அதுபோல் கடவுள் உனக்கு வெளியே இல்லை; ஆனால், உன்னுள்ளே இருக்கிறார், உன்னுடைய நிழலை நீ பிடிக்கமுடியாததுபோல நீ கடவுளை சர்வ சாதாரணமான வழியில் அடைதல் முடியாது; பல கோடிக்கணக்கானவர்களில் ஒரு சிலரே கடவுளை அறிகின்றனர்."

"என்று, இந்தியாவில் தாழ்த்தப்பட்ட மக்கள் என்று பிரிவு ஏற்படுத்தப்பட்டதோ அன்றேஇந்தியாவும் தாழ்த்தப்பட்டுவிட்டது. தாழ்த்தப்பட்ட மக்கள் உயர்த்தப்படும்போது தான்,இந்தியா ஏகபோகமாகத்தனிப்பெருஞ் சிறப்பினையுடைய நாடாக ஆகாவிட்டாலும், உலகிலுள்ள சிறந்த நாடுகளில் ஒன்றாக விளங்கும் பெருமை வாய்ந்ததாகும்."

"செய்யும் சீர்திருத்தங்கள் அனைத்தும் கல்வியை அடிப்படையாகக் கொண்டிருத்தல் வேண்டுமேயன்றி பலாத்காரத்தைக் கொண்டிருத்தல் கூடாது. மக்கள் விரும்பாத எந்த மாறுபாட்டையும் சட்ட சபையின் மூலமாகக் கொணர்தல் கூடாது. எந்தச் சீர்திருத்தத்தையும் செய்யு முன்பு முதன் முதலாக மக்களுடைய மனப்பான்மையை மாற்றி, அவர்கள் தற்போது இருக்கும் நிலைமையினின்றும் மாறி முன்னேற்றமடைதற்குச் சீர்திருத்தம் வேண்டும் என்பதை உணரும்படி செய்தல் வேண்டும்."

நூலின் விலை அணா 4; விலாசம்: எஸ். வி. இரத்தினசபாபதி, 17, நாட்டுப் பிள்ளையார் கோயில் தெரு, ஜார்ஜ் டவுன், சென்னை.

Registered No. M. 1500.

# நவசக்தி

‘எவ்வுயிர்க்கும் அன்பாயிரு’ ‘என்கடன் பணிசெய்து கிடப்பதே’

சிலம்பு ௧௫ ஸ்ரீமுக௵ ஆவணி௴ பரல் ௧௦

## பூகோள விலாசம்

(தொடர்ச்சி)

பெருமானைத் தென்மருதூர்ப் பெம்மானைப் பாகத
தொருமானைச் சேர்க்கு முருவை—வருமானை
வத்திரனைத் தநதிதிசை வத்திரனை முன்பூறு
வத்திரனை நீண்டவிண்டு வததிரனை—யத்தசந்த்ர
சேகரனை நாகலிங்க தேசிகனை மிக்ககரு
ணாகரனை முன்னி யடிபணிநது—தேகமதில்
வெண்குட்டந் தீரவென்றும் மேற்றடிப்புத் தீரவென்றுங்
கண்கெட்டேன் தீர்க்கக் கடாட்சியென்றுந்—தண்குட்டம்
அட்டோ தரங்கள் அகற்றென்றுங் குன்மவலி
கட்டோடே தீர்க்கக் கடவையென்றும—மட்டில்லாப்
பாண்டு விடகரப்பன் பற்குத்துக் காமாலை
நீண்ட சலக்கழிச்சல் நீரழிவு—பூண்டநெடுந்
தாகம் வறட்சி சயங்காசம் விப்புருதி
கூகை படுவன் குலையெரிவு—வேகமுடன்
வந்தபிணி யெல்லாமு [1]மாற்றிட வேணுமென்றுஞ்
சந்ததிகள் நீதந் தருளென்றுஞ்—சொந்த
மனையும்நெடு மாளிகையும் மாறாத வாழ்வும்
அனமுங் கொடுத்தருள்வை யென்றுந்—தனதாகப்
பூலோக மெல்லாம் புரக்கவரு ளாயென்றுஞ்
சாலோக சாமீப சாரூப—மேலான
வீடருளா யென்றுமிவை வேண்டிடவும் மெய்யடியார்
கூடவினை யாடுமெங்கள் கோமானூர்—வாடுகின்ற
மன்னுயிர்கள் கேட்ட வரமளித்துத் தாபரிக்கும்
நன்னயஞ்சேர் நாகேசர் நற்பதியுஞ்—சொன்னமுகில்

### நூற்றெட்டுத் திருப்பதிகள்

மேனியான் தானிருக்க மிக்கபுரு டோத்தமமு
மானகர கூள மனந்தகிரி—தானொளிரும்
வேதாத்ரி கிஞ்ஞாத்ரி மேக படலதலந்
தோதாத்ரி சேடாத்ரி சொன்னமந்த்ர—மீதான

(பிரதி)—[1]மாற்றிடுக.

சீய மயோத்தி திருவரஙகங் காஞ்சிநகர்
மாயபுரங் காஞ்சி ஸ்ரீ வைகுந்தங்—கேயாச்
சதுரகிரி யிந்த்ர தலம்பிரிதி சங்க
மதுரைகிரி தீபமணி கூடம்—விதுரபுரி
சித்திர கூடந திருநகரம பாதாளஞ்
சத்திய லோகஞ் சதுர்த்தீப—முதநதார
பாதாளம் புல்லாணி பாற்கவட சந்தனம்புரி
மீதாம்வை குண்டகிரி வேகவதி—மாதாரும
அத்தி கிரிகோ பதநனய பூரிஸரிய
வைத்த வகோபளம காரண்ஸரியஞ்—சுநதக்
குருக்கேத்தி ரங்கும்ப கோண முதலா
யிருக்கோது மீரைமபத் தெடடுத்—திருப்பதியும்

ஐம்பத்தாறு தேசம்

வங்கங் கலிங்க மகதமசச மாருடங்
கொங்கந தெலுங்கங் குருக்கேத்ரஞ்—சிங்களநற்
சீனம் நிடதந திகத்தம விராடமகா
சீனம் விலாடமுயர் சேதிசிநது—மானறிகழ்
சாளுவமி ராடஞ் சவுராட்ட கங்குடக
மாளவங்காந் தாரமவஙகம் வத்தமும்—வேளைநிக
ராடவர்கள் வைகு மவந்திகொப்ப மாரியமும்
பாடல்முழங் குங்குகுதம் பஞ்சமமும்—நீடுபுக
ழொட்டியம்வி தற்பம் உயர்கோ சலமிதுலை
தொட்டியங்காம் பீரங் துளுவமுடன்—சட்டமுள்ள
கொங்கணங் கடாரங் குலிங்கங் கெவுடமுடன்
பங்களங்காம் பீலியொடு பாஞ்சால—மங்களஞ்சேர்
குச்சரமும் பப்பரமுங் கூட்பகமுங் கேகயமும்
மிச்சவளஞ் சேர்காசு மீரமுமே—மெச்சவரு
பாண்டிசே ரஞ்சோளம் பல்லவமீ ழங்கண்ட
நீண்டபுகழ்க் கொந்தளமும் நேராக—வீண்டுரைத்த
வெண்ணேழு தேசமும்பின் னேயுமதிற் சேர்ந்திருக்கும்
பண்ணுன பூமி பதினெட்டு—மண்ணவரில்
வேத ரரசர் மிகுமவணிகர் சூத்திரரென்
றோதும் வருண மொருநான்கு—மீதின்றித்
தாழும் பலபலவாஞ் சாதிகடொண் ணூற்றாறும்
வாழுங்க்ர கத்தம்வா னப்பிரத்தம்—ஏழு
பிறப்பகத்துஞ் சன்னசம் பின்பிரம சாரங
குறிப்பாமிவ் வாச்சிரமக் கூறும்—நெறிப்பாகக்
கூறுமயுகம் நான்கின் குணபே தமுமிதெல்லாம்
மாறில்கும ரித்தீவில் வைகியதால்—தேறுமிந்தப்

நல்வினை தீவினை நுகர்ச்சி

பூமியொன்று மேதருமபூமியுமி தாகையினால்
நேமமுட னல்வினைக்க ணின்றிடுவோர்—தாமுமெலா
மெண்பத் தொருகோடி யென்னுந் துறக்கமதிற்
பண்புற்ற போகம் பருகிடுவர்—கண்பற்றத

தீவினைகக ணின்றிடுவோர் செஙகோற் கடவுள்நகர்
மேவியம தெண்டினையி னுலமெலிந்து—சாவிலாப்
பாதாளத துள்ளிருக்கும பாழிருபத் தெண்கோடி
மீதாம் நிரையமதில் வீழ்ந்துழல்வர்—கோதாய்கேள்
சித்தாநதந தேர்ந்து திருவருளைப் பெறறவர்கள்
சுத்தானு பூதியினிற் றோய்ந்திடுவர்—வித்தாக
மூன்றினுக்கும யோக்யமென முன்னூல மொழிந்திடுமா
மேன்றகும ரித்தீவு மிவ்வாறுந—தோன்றுங்

## கயிலைமலை

கயிலைமலை வைகுமிடங் கட்டுரைககக கேளாய்
புயலா ரிமையப் பொருப்புக்—கயலாக
ஈசான பாகத் திருக்கும்வெள்ளி யம்பொருப்பிற
றேசாரு மண்டபமுந் தெற்றிகளுந—தூசாரு
மம்பொற் சிகர மழகுநெடுங் கோபுரமுஞ
செம்பொற் றிருமதிலுஞ் சோநதிலங்கு—மும்பாகளுந
மாதவரு மட்ட வசுககளுமெண் பாலகரும்
போதனெடு மாலிவர்கள போற்றிசெய்ய—வாதனத்தி
லம்பிகையா ளோடு மருகிருப்பன் பூரணநற்
சம்புசிவ ருத்திரனார் தாமிருப்பர்—சம்புநெடுந
தீவின் பெருமைதனைச செபபினே னித்தீவை
மேவி யுவர்க்கடலு மேற்சூழுந்—தேவரசன்

## சிறகறுபடாதமலை பன்னிரண்டு

வெற்பின் சிறகரிந்து மேனுளிற் பன்னிரண்டு
வெற்புச் சிறகொடுமிவ் வேலையினிற்—றப்பியே
நாற்றிசையுஞ் சென்றொளித்த நற்றிசையின் றன்பெயர்கேள்
தோற்று மிடபகிரி தூம்ப்ரகிரி—சாற்றுகின்ற
துந்துமியிம் முக்குவடுஞ சொற்கிழக்கின் றெனகடலின்
வந்தமிழ்நதுஞ் சக்ரகிரி மைநாக—முந்துகின்ற
வாலாக மிம்மூன்றும் வாராகஞ் சோககிரி
மேலான நந்தனமு மேல்கடலின்—பாலாரு
முத்தரத்திற் சென்றொளித்த தோதிற் றுரோணகிரி
சத்தியுள்ள கங்ககிரி சந்த்ரகிரி—யித்திகிரி
மூன்றுரு மாகவிவை முந்நான்கு நற்கிரியுந்
தோன்று தமிழ்ந்திசிற்குஞ் சூழ்கடலி—லேன்ற

## வடவா முகாக்கினி

வடகடலிற் கங்ககிரி மததியினிற் செய்ய
வடவைமுக வெவ்வழலும் வைகிக்—கடலுதக
மிஞ்சாம லேபருகி மேதினியிற் பல்லுயிரை
யஞ்சாமற் காக்குமரி [1]யாக்கினையால்—மஞ்சாரும்

## பிலக்கத் தீவு

உப்புச் சமுத்திரமு மோரிலக்கம் யோசனையா
மப்பாற் பிலக்கத்தீ வாமதனை— வைப்பாக

(பிரதி—)[1]நாக்கினையால்.

மேதாதி யென்னுமொரு வேந்தனொடு நாட்புரந்து
தீதி லனந்தன் சிவன்கெமகன்—மாதாருஞ்
சாந்தபையன் நற்சிசிரன் சாற்றுஞ் சுகோதையன்பின்
சேர்ந்தருச னேழு சிறுவர்களைப்—பார்ந்தமுடன்
பெற்றவருக் கிந்தப் பிலக்கத்தீ வைப்பிரித்துக்
குற்றமறக் காக்கக் கொடுத்தனன்பின்—சுற்றமுட
னன்னோ ரெழுவரு மாய்ப்புரந்தா ரத்தீவின்
மூன்னோரை யாரியரென் றேமொழிவர்—மன்னவரைச
580 சொல்வார் குராரரெனத் தொல்வணிகர் தங்களையும
பல்கால் விதிற்சியரென் றேபகர்வார்—மல்லாரும்
பின்னவரைப் [1]பவ்யரெனப் பேசுவா ருணிவர்க்குக்
கன்னலினற் சாறருந்திக் காளையராய்ப்—பொன்னொளிரும்
பங்கயத்தோன் பாதம் பணிந்திடுவா ராயுணிலை
மங்காம லையா யிரவருடந—தங்குமிதிற்
சோமகிரி சந்த்ரகிரி துந்துமிவைப் ராசகிரி
நாம விடபகிரி நாரதமுந்—தாமும்
உவமேத மென்னுமலை யோரேழுண் டாங்கே
நவபாஞ் சகைசுகிர்தை நாடும—பவமகற்றுஞ்
585 சந்தைை விபாவை தருக்கிருட்ணை நற்கிலைமை
வந்தமிர்தை யெண்கியிடும் வைகியிடும்—அந்தமுள்ள
இத்தீவிற் செம்பொன் னிறலிமரம் நிற்கையினா
லித்தீ விறலித்தீ வென்றுரைப்பர்—முத்தேகே
ளித்தீவி னீள மிரண்டிலக்க யோசனையில்
வித்தாரங் கன்னலநதி மேற்சூழு—மத்தியதில்
நாப்பண் விளங்கும் நவமணியின் பாறையினிற்
பூப்பொலியு மைந்தேனும பூங்காவுங்—காப்புடைய
நந்தா வனமும் நறுநீரின் வாவியுந்தே
னுந்துமலர்ச் செங்கழுநீ ரோடைகளு—மிந்தவனஞ்
590 சேர்ந்திருக்கு மந்தத் திருமணிநற் பாறையினிற்
பூந்தவிசின் றேவைநறும் பூவைவண்ணன்—வேந்தன்முதற்
றேவர் முனிவர் சிறந்துசரண் போற்றிநிற்க
மாவளருஞ் சோதிமணி மண்டபத்திற்—ருவுமெழில்
மாணிக்கச் சிங்கா சனமதனில் மத்தியிற்பூ
கோணத்தின் மேல்விருத்தங் கொண்டதன்மேற்—பாணிக்கு
மட்டதன் மீதி லறுகோண மங்கதன்மேற்
றிட்டதிறி கோணத் திராசரிக்கஞ்—சட்டமுடன்
பாத மிரண்டும் பருமுதர பந்தனமுஞ்
சோதிமுந்நூல் மார்பகமுஞ் சுந்தரமுங்—கோதிலாக்
595 கைகள்பதி னொன்றுங் கயமுகமும் நால்வாயுங்
கைகள்பதி னொன்றிற் கலந்திருக்குந்—துய்யதொரு
மாதுளங்க மோடுகதை வான்கரும்பு சூலமுடன்
தீதில்வளை பாசஞ் செழுங்கமலந்—தாதார்
கருங்குவளை நெல்லின் கதிரிடது கோடு
மருங்கிரண்டுஞ் சேர்ந்திருக்க மற்றுந்—தருங்கதிர்கால்

---

(பிரதி)—[1]பவ்யனெனப்.

செம்மணியின் நற்கலசஞ் சேர்ந்த துதிக்கைதிகழ்
மும்மதமு மோர்கோடு முக்கண்ணுந—கொம்மைமுலை
வல்லபைப் பெண்வர்மக வானின மகிழ்ந்திருப்ப
அல்லைநிகர் கூந்த லரமபையர்கள—சொல்லரிய
600 நாட்டியங்க ளாடவிஞ்சை நாட்டியாக ளாடவும்விண்
ணுட்டியங்க ளார்ப்பமிக நஞ்சுமிழுஞ்—சூட்டரவின்
கன்னியரி ரட்டைக் கவரி பணிமாற
மின்னுதுகிற் பாவாடை வீசிநிற்க—பொன்னேடை
மத்தகமுஞ் சென்னியினின் மாமகுட முநதுலஙக
வித்தக விநாயகரும் வீற்றிருப்ப—ரித்தகைய

## இலவத் தீவு

கன்னல்தருஞ் சாற்றின் கடலு மிரண்டிலக்க
மின்னகடற் கப்பா லிலவததீ—வன்ன தனை
வாசமாய்க் காக்கும் வபுட்டிமான் வெள்ளைவிடை
யீசுரனை வேண்டி யிருக்குமந்நாள்—பேசரிய
605 வித்தியுதன் சீமூதன் மேன்மையுள்ள சுபபிரத
ஞெத்த சுவேத னுலோகிதனும—புத்தியுள்ள
மானசன்பின் ஞமரிதன் மைந்த ரெழுவரையு
மீன மறப்பயந்தா னிததீவைத்—தானவர்க்குப
பங்குமோ ரேழாய்ப் பகிர்நதளித்தான் வேதியரை
[1]யங்கே கபில ரெனவறைவர்—மங்காத
வேந்த ரருளரென விண்டிடுவர் வர்த்தகரைச
சாந்தமுள்ள பீதரெனச் சாற்றிடுவர்—சேர்ந்திருக்கும்
பின்வருஞ் சூத்திரரைப் பேசுவார் கிஷ்ணரென
வெந்நாளுந் தேற வினிதருந்தி—மன்னுன
610 வாய்வுக் கிறைதான் வழிபாடு செய்திடுவ
ராயுளிவர்க் கையா யிரம்பருவ—மேயுமிதில்
வாராகம் நற்குமுதம் மாமயிடங் கங்ககிரி
சோரா வுதனந் துரோணகிரி—சீராருஞ்
சொற்குமுதம் வான்கிரியுந் தோன்றுகிரி யோரேழும
நிற்கும் விமோசனியும் நீணிவிர்த்தி—சுக்கிலையுஞ்
சந்திரநற் ரேயை தருகிருஷ்ணை நீதியென
வந்தநதி யேழு மகாநதியாங்—கொநதலருந்
தார்க்குழலா யித்தீவின் றன்னீளம் நாவிலக்கஞ்
சேர்க்கு மிலவு செனிக்கையினுற்—பார்க்குளினிற்
615 சான்மலித்தீ வென்றுரைத்தார் சாற்றுமிநதத் தீவதனைத்
தேன்கடலுஞ் சூழ்ந்திருக்குஞ் சேயிழையே—தேன்கடலும்
நாவிலக்கம் யோசனையி னன்னீள மிக்கடற்கப
பாலிருக்குந் தீவும் பகரக்கேள்—சேலனைய

கண்ணுய் குசத்தீவாங் காவலனுஞ் சோதிடுமான்
நண்ணுர் வணங்கநெடு நாட்புரந்து—கண்ணுன

(பிரதி)—[1]அங்கை.

வேணுமா லம்போ தரன்கபிரன் மெய்த்திருதி
பேணூற் புதன்சுப் பிரபாகன்—தோணுமநத
காரகனென் றேயேழு காதலரைப பெற்றவர்கருப்
பாரமிகு மத்தீவைப் பங்கேழா—யீரமுட
னீய்ந்தா னவர்க ளெழுகூறுய்த் தான்புரந்தா
ராய்ந்த திராவிடரா மநதணர்கள்—வேநதருமே
சுட்டுமிய ராம்வணிகர் சொலலுஞ சினைகர்பின்னோர்
சட்டமுள்ள மைந்தரெனத் தான்புகல்வ—ரிட்டமுடன்
நெய்யருநதி யையா யிரம்பருவம நீள்கமலத்
தய்யனடி போற்றி யமர்நதுறைவர்—துய்யபுடப
தெநதங் குசலந திரிதி யுலோகிதமும்
வந்தேமம் நாமகிரி மந்தரகிரி—யநதமுள்ள
வித்துரும மென்றுரைக்கும் வெற்பேழும் வித்தியுநதி
வைத்த பவுதரையொடு வைதுதை—முததிதரும்
பாவை சமதை பகருங் [க]கீசாம்பை
தேவர்புக ழேழு திருநதியு—மேவுகுசத்
தீவுமோ ரெட்டிலக்கஞ் சேர்நதிருக்கும் பொற்குசையத்
[1]தீவினுள தாற்குசைப்போர்த தீவாகும—பாவையரே
சொன்னகுசைத் தீவதனைச சூழுமே நெய்க்கடலுந்
தன்னீள மெட்டிலக்கந தானாகும்—பின்னதற்கு

## கிரவுஞ்சத் தீவு

மீதுகிர வுஞ்சமெனு மேற்றீவா மத்தீவை
நீதியாய்க் காக்க நிருபனுமே—தீதில்
துதிமான வன்பயநத துந்துமிநற் கண்ணன்
கதிசோ முனிந்தநத காரன்—மதியார்
குசலன் மனோகரன்சீ [2]கொள்பிரபை வாமென்
றிசையுமெழு புத்திரர்க்கித தீவைத்—திசையோர்
அறியப் பிறித்தளித்தா ரன்னவரு மேழு
பிறிவாகக் காததனர்பின் பேதாய்—நெறிசேரும்
முன்னவரும் புட்கரற்கு மொய்கழறகாற் கையொளிர்வேல்
மன்னவரும் புட்காரபின் மாவணிகர்—தன்னியராஞ்
சாற்றியநா லாம்வருணத் தாருந திசசியராங்
கூற்றுதைதத தேவைக் குழைந்தேத்திப்—போற்றிநிதம்
ஐயா யிரப்பருவ மான்றதியைத் தானருநதி
வைபோக மாக வதிந்திடுவார்—மெய்யான
வாமனகம் புண்டரிக மற்றுஞ சலாதரமுஞ்
சோமகிர வுஞ்சந் துருகிரியுஞ்—சேமமதாந
துந்துமியபி ரத்னகிரி சொல்லுமலை யேழாகுஞ
சந்திரை மனோசெபை தார்த்திரியும—வந்த
கவுரி குமுதபதி கான்புண்ட ரீகை
தவராடு நற்சாதி தானென்—றவியமறும
புண்யநதி யேழும பொருந்தியிடு மத்தீவு
மெண்ணு மிலக்கமுமீ ரெட்டாகும்—பெண்ணரசே

(யிரதி)[1]தீவனுள. [2]கொள்கை பிரபை.

சொற்றகிர வுஞசமதைச் சூழுந் தயிர்க்கடலு
மற்றதுமீ ரெட்டிலக்க மாமகல—மற்றப்பாற

### சாகத் தீவு

சாகத்தீ வாமதறகுத் தாரவேந்த னவ்வியனு
மோகததா வீன்றெடுத்த மோதாதி—பேசுத
துருமன் சலதன சுகுமாரன் பின்னே
தருநற் குசுமோத தரனு—மருவளருந
தாரார் குமரன் றருநேர னீசகனென்
ருேரேழு புத்திரர்க்கு மொப்புவித்தா—ஞேரேழு
பங்காய்ப் புரந்திருநதார் பா[ர்]ப்பாரு மாய்வரா
மங்காத வேந்தருமே மாததாராங்—கொங்காரும
மாலைப் புயவணிகர் மானசராம் பின்னவருஞ
சீலமுள்ள மந்தகராஞ சேயிழையே—பாலருந்தி
ஐயா யிரம்பருவ மாயுளிவற் காவதனை
மெய்யான தேவெனவே வேண்டிநிதி—யெய்யாமற்
சிநதித் திருப்பணிந்தத தீவி னுதையகிரி
சுநதரஞ்சே ரததகிரி சூட்சகிரி—மந்தரம்நேர்
கேசரி நல்லமபிகா கேயகிரி ரேவதமபின
பேசுஞ் சுமியகிரிப் பேரேழும்—வாசமுள்ள
வேணுகை மகாபெவினி மிக்க குமாரிபத்தி
ரேணுகையை தூயைபிக்கை யென்றுபெயர்—காணும்நதி
யோரேழு தான் விளங்கு மோதுமநதத் தீவகலம
நேராமெண் ணுன்கிலக்க நேரிழையே—சேருமிதைப்
பாற்கடலுஞ் சூழ்ந்திருக்கும் பாற்கடலின் றன்னீளம்
ஏற்குமி யோசனையெண் ணுன்கிலக்கந்—தீற்கமதாம்

### சுவேதத் தீவு

இப்பாற கடலினடு வெட்டிலக்கம யோசனையி
னெப்பாய்ச் சுவேதத்தீ வொன்றுளதாம்—பொறபாரும
அத்தீவிற் செம்பொன் னணிநகரங் கோடியுண்டா
முத்தீவும் போற்று முனிவாருஞ்—சித்தவித்தி
யாதரருங் கின்னரரு மட்சரருஞ் சாரணரும்
மாதருட னங்கு வசித்திடுவர்—தீதின்றி
யங்குதித்தோ ரெல்லா மறிவுடைய ராய்நேமி
சங்குகதை வில்வாள் தரிததவராய்ச்—செங்கணெடு
மாலுருவ மாகி வதிந்திடுவா பின்சிலவர்
மேலொளிரும் பூதிதிகழ் மெய்யினராய்ச—சீலமுள்ள
கண்டிகையின் பூணினராய்க் காமமுதல் முகுறுமடயும்
விண்டகன்ற சத்த விழுமியராய்க்—கொண்ட
நரைதிரைமூப் பின்றியங்கு நண்ணிடுவ ராயுள்
பருவமொன்ப தாயிரமாம் பண்பாய்ப—பெருவளமை
நண்ணுமந்தத் தீவில்நடு நாரா யணபுரமாம்
விண்ணுலகில் மிக்காக வேவிளங்கு—முண்ணெருங்குஞ்
சோலையெல்லாங் கற்பகமாந் தோயமெல்லாங் கங்கைநன்னீர்
சீலமுள்ள பெற்றமெல்லாந் தேனுவதா—மேலுலகிற்

660 தேவ ரரம்பையர்கள் செஞ்சிலம்பு பூசலிட
மேவிநிதஞ் சஞ்சரிக்கும் வீதிகளு—மாவளரு
மங்கரி னுப்ப ணாரதனததாற காஞ்சனத்தால்
மன்னுமயன் செய்தமைத்த மண்டபமு—முன்னதமா
மண்ட முகடளக்கு மமபொனெடுங் கோபுரமு
மண்டலம்போ லேழுசுற்று மாமதிலுங்—கொண்ட
திருமா ளிகைசதுககந் தெற்றியொரு கோடி
யருணோ தயமுதிதத தன்ன—விருணீக்குஞ்
சோதிப் பிரபைதரு தூய்யமணி மண்டபத்தின்
சாதிப் பணிபபாயல தன்மீதிற்—சீதரனும்
665 நாரா யணன்கனகம் நங்கை யடிவருடக்
கார்மேகம் போல்ஞானக் கண்வளர்வன்—சீராரும்

## புட்கரத் தீவு

இக்கடலுக் கப்பா லிலக்கமுமெட் டெட்டாகும்
புக்கரநற் றீவு புறஞ்சூழு—மிக்க
சவன னெனுமரசன் றுதகிமா வீர
னிவரிரண்டு புததிரரை யீன்று—னவர்தமக்குச்
செம்பொன் முடிபுனைந்தத் தீவதனைப் பங்கிரண்டா
யும்பர் புகழ வுவந்தளித்தா—னமபியதை
யன்றே ரிரண்டுகண்ட மாக்கி யவர்பெயரா
லந்நாட் புரந்திருந்தா ரத்தீவை—மின்னேயத்
670 தீவில்நடுச் சக்கரம்போற் றிக்கெட்டுஞ் சூழ்ந்திருக்குந்
தூவி யெனமான சோத்ரவரை—மாவுயர
மஞ்சயுத யோசனையா மவ்வளவா மேலகலம்
வஞ்சியே பொன்னிறமாய் வைகியிடும்—விஞ்சுமதில்
முற்பாக மாவீர மென்றே மொழிந்திடுவர்
பிற்பாகந் தாதகியாய்ப் பேசிடுவ—ரிப்படியே
கண்டமிரண் டாகியமுற் கண்டமதி னுலமரம்
விண்டொடவு நீண்டு விழுதுவிட்டுக்—கொண்டுநிற்கு
மம்மரத்தி னீழ லயனிருப்ப னஙகுறைவோர்
வெம்மைதரு துன்ப வினையின்றி—யிம்மையினி
675 லாச்சிரம மின்றி யதிவருணம் நான்குமின்றி
வாச்ச நரைதிரையா மாசின்றிக்—காச்சுற்ற
பொன்போலும் ஞானம் பொருந்தி யுயர்நெடுமால்
தன்பாதம் போற்றுந் தகைமையராய்—மின்போலு
மேனியரா யொன்பதெனு மெய்யா யிரம்பருவம்
வானவரைப் போல வதிந்திடுவா—ரானவிந்த
மானசத்தின் கீட்டிசையில் வானவர்கோன் றன்பதியுந்
தானதற்குத் தெற்குச சமன்பதியு—மேனிலையில்
வாரிக் கிறைபதியு மற்றும் வடதிசையிற்
சேருகின்ற சோமன் திருப்பதியும்—நாரியரே
680 யிநநான்கு நற்பதியி லிநத்ரன்முதல் நால்வருமே
முன்னு யிருப்பர் முடிவரையில்—மின்னுகதிர்

(தொடரும்)

# நமது சிந்தனை

[திரு. சி. சதாசிவனார்]

## VII

### தியானம்

ஒரு சிறிய நிலத்தை நாம் நமது முயற்சியால் பண்பு செய்து, அழகிய தோட்டமாக அமைக்கலாம். அச்சிறு தோட்டத்தினின்றும் நாம் வேண்டியவற்றைப் பெற்று, நமது வாழ்வை இனிதே நடாத்தல்கூடும். நலத்தையும், ஊதியத்தையும் அடைய விரும்பின், நாம் அததோட்டத்தை மிகவும் நல்ல நிலைமையில் பாதுகாத்து வரல் வேண்டுமென்று சொல்ல வேண்டுவதில்லை.

முதலில் தோட்டத்தில் ஆடு, மாடு இன்ன பிற விலங்குகள் புகுந்து பயிர் பச்சைகளைத் தின்று பாழாக்காது திண்ணிய வேலிகள் நாற்பக்கமும் அமைத்தல் வேண்டும். பயிருக்கு இறைக்கும் நீரையும் மண் சாரத்தையும் உண்டு, தோட்டமெங்கும் விரைவிற்படர்ந்து, நற்பயிர்களை வளரவிடாது பாழாக்கும் முட்செடிகளையுங் கொடிகளையும் களைதல்வேண்டும். பின்பு நிலத்தை நன்ருகக் கொத்திப் பண்படுத்தி, பாததிகள் செப்பனிட்டு, பலன்தரும் வேண்டிய செடி கொடி வகையராக்களை இனமினமாகப்பிரித்து, அந்தம் பெறத் தகுந்த இடத்தில் ஊன்றவேண்டும். பின் நாள் தவருது நீரிறைத்து, தாய்மார் தன்னருமைச் சிருர்களைக் காப்பதுபோல் வளர்த்து வரல்வேண்டும். ஒரு பகல் நீரிறையாவிடின் சிற்சில முளைகள் வாடிப்படுவதும் உண்டாதலால், தினந் தவருது அத்தோட்டததை ஓம்பல்வேண்டும். அடிக்கடிப் பின் முளைக்கும் களைகளைக் களைதலும் அவசியமாகும்.

இவ்விதம் நாம் அத்தோட்டத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டு ஒழுகுவோமாளுல், சின்ளுளில் நாம் பட்ட உழைப்பிற்குத் தக்க கூலி கிடைக்கலாம்.

கால அளவில் அச்சிறுதோட்டமும் பெருகிப் பெரியதொரு காவாகவும் இடமுண்டு. அக்காவிற் கனியும் பழங்களைப் புசித்து நாம் வயிராறலாம். வெங்கோடை நாட்களில் நாம் அருமையாக வளர்த்த மரஞ் செடிகளின் தண்ணிழலிலமர்நது ஆதவன் கொடுமையை ஆற்றிக்கொள்ளலாம். அல்லது சிறிய கொடி இல்லமொன்று அமைத்து அதில் அமர்ந்து இன்பம்அடையலாம்.

நன் முயறசியையும் நல்லறிவையும் பயன்படுத்தி, இயற்கையோ டியைந்து, சோலையுடன் அன்புத தொடர்பு கொண்டு, வேறு கவலையற்று, ஒழுகும் நமக்கு இயற்கை அன்னை குற்றேவல் புரிவாள். இவள்தன் கட்டிலடங்காக் கருணை வெள்ளம் நம்மாட்டுக் கரை புரண்டு பாய்ந்து வருவதை உணர்வோம். மகார் பசியால் வாடுமே என்று கழிவிரக்கங்கொண்டு, அன்னை, இனிய கனிகளில் ஆயிரம் மாத்தலைகளிற்ருங்கித் தலைவணங்கி நாற்புறமும் நிற்பாள். பறித்து அருந்தாவிடின் மறந்து விட்டால் என் செய்வது என்று ஏங்கிக் கீழே வீழ்ந்து, கால்களில் இடறிஇறைபடுவாள். நீர் வேட்கையிளுல் குழவிகள் வருந்துமே எனப் பால் நினைந்தூட்டுந்தாயினும் சாலப்பரிந்து, தெங்கின் இளநீராக ஊசலாடுவாள். தண்ணீரிறைத்து, உடல் வருந்தி, யாக்கையினின்றும் வியர்வை ஆருகப் பொழியும்போது, இளநதென் காலாக மெல்லென வீசி வெப்பந் தணித்து, நறுமணங் கமழும் அழகிய மலர்களினது பூந்தாதையள்ளிக் கம்மென எப்புறமும் பரப்பி நம் அகத்தில் இன்பமாக அரும்புவாள். அக்காலை சிறுபுள்ளினங்களையும் வண்டினங்களையும் இன்னிசை பாடி வரவிட்டு, நம்செவிகளில் பண்ணின்பமாக நின்று, நம்மைத் தன் வயமாக்குவாள். இன்னும் நடனமாதர் அரங்கமேடையில் இனிது பயிலும் களியாட்டையும் அச்சோலையின் கண்

இயற்கையன்னை ஆடி அகமகிழ்வாள்.

சேட்டிகைத் தெங்கா றள்ளத தென்மதுச்
சிதறத் தும்பி
நீட்டிசை முரலச் சாயா நின்றுபூங்
கொம்ப ராடல்
காட்டியப் புலவ னூட்ட நகைமுகம்
வெயர்வை சிந்தப்
பாட்டிசைத் தாடா நின்ற பாவைமார்
போன்ற வனமே!

என்ற ஒரு புலவரது கற்பனையைச் செவி மடுக்கும்போது எத்தகைய ஆனந்தம் பொங்குகின்றது!

பச்சைப்பசே லென்று எப்புறமும் இருண்டு பரந்த இலைக்கூட்டங்களின் இடையிடைப் பன்னிறத்தோடு அந்தம் பெறச்செறிந்த மலர்கள வழங்கும் காட்சி, அதனிடையிடையுள்ள நுழைகளில் சூரியனது கரங்கள் புகுந்து விளையாடும் விநோதம், பறவைகளும் அணிலாதிய சிறு பிராணிகளும் இன்கனியருந்தி இங்குமங்கும் ஓடியாடி அலமரும் அற்புதம், இரவில் நீலவானத்தில் விண்மீன்கள் மரங்களினூடே எட்டி எட்டிப் பார்த்து இமைக்கும் கோலம், இன்னவை நம்மனதைக கவர்ந்து ஐந்து புலன்கட்கும் இன்னமுதூட்டும். மனித வாழ்க்கையில் இதைவிட இன்பம் வேறுண்டோ? இவ்வளவும் யாருக்குக் கிடைக்கும்? மெய் வருந்தி யுழைதது, சோலை வேறு நாம் வேறு எனக் கருதாது, அதனுடன் அன்பு கொண்டு வாழும் ஒருவனுக்குததான் இவ்வின்பம் உண்டென்று கூறலாம.

நாம் பருமையில் இச்சோலை இன்பத்தோடு நின்றுவிடக் கூடாது. இத்திறப் புறவாழ்வானது நமக்கு இதைவிடச் சாலச் சிறந்த அகவாழ்வு ஒன்று இருப்பதாக அறிவுறுத்தவேண்டும். மனமாகிய சிறநத நிலமொன்று நம்மிடம இருக்கின்றது. அதையும் பண்படுத்தி, அதில் வசித்து, ஒரு பயிரிட்டு அதன் கனிகளை நுகர்வதே உண்மை இன்பமளிக்கும். இதற்காகவே நாம் ஈண்டுப் பிறநதிருக்கின்றோம்.

தோட்டத்தை உழுது பயிரிட்டது போல் நாம் மனதையும் சாருபடி செய்யவேண்டும். அதில் ஒரு வித்தையும் இட்டு, வேலி கோலிக் கண்ணை போல் பாதுகாத்தலவேண்டும். அவ்விதை முளைத்துச் செடியாகி மரமாகிக் காய்த்துக கனிநதபின், அப்பழத்தின் சுவையை மட்டும நாம் உருசித்து விட்டால் பின் நமக்கிணையாவார் யாரும இல்லை. பாற்சுவை கண்ட பூனையைப் போலப்பின் நாம் அசசோலையையும் அம் மாத்தகத்தையும் விட்டகலோம என்பது நிச்சயம.

இதற்கும் உழவு, விதை, களை நீக்கல், நீர், காபபு முதலிய யாவும் தேவை.

இநநிலத்தைச் சாருபடி செய்யத் தொடங்குமுன், நம்மிடம் விருப்பு எனும் விதை கையிலிருக்க வேண்டும். காரியம எல்லா வற்றிற்கும் ஆதிகாரணம் அவாவே என்பது யாவரும் அறிந்ததொன்று. நாம் ஒன்றைச் செய்ய விழைவு கொண்ட பின்பே அதைச்செய்ய முற்படக் கூடும். அகத்தில்எழுந்த ஆழ்ந்த அவாவின்றி நாம் ஒருகாரியம்செய்யப் புகின் அது சரிவர நிறை வேறுதல் கடினம். விருப்பமே எக்காரியததிற்கும விதையாக ஆகின்றது. இசசையே இவ்வுலகை ஆக்கி ஆளுகின்றது என்றுங் கூறலாம். இப் பயிற்செலவைச செய்வதே நமது ஆயுள் வேலை என்ற விருப்பு எழுந்தால்தான் இக் காரியம் இனிது நடைபெறும.

ஒரு நிலத்தைப் பயிரிடாது விட்டு விட்டால் உபயோகமில்லாத புற்பூண்டுகளும், செடி கொடிகளும் அதில் முளைததுப் பெரிய காடாகி விடுவதியற்கை. அதை உழுவதன் முன் இக் களைகளை வேரோடு பறித்து எறிய வேண்டும். பின்னரே உழல் கூடும். நன்கு பண்படாத விலங்கு மனத்திலும் உபயோகமற்ற களைகள் பல உள. தப்பான ஞாபகங்களே (Error consciousness) இக்களைகள் ஆகும். இவ்வுலக இன்பே முடிவு என்றும், ஈண்டு, கட்டுடை மனத்தால்

புலன்வழி நுகரும் இன்ப துன்பமே உண்மை என்றும்—இவை கணத்தில் அழிந்து படுவதைக் கண்டும்—நம்பி அவைகளையே பின்பற்றி ஓடி உழன்று கொண்டிருக்கின்றோம். இன்னும் பிணி, வறுமை, துன்பம் முதலியனவே உலகில் உள்பொருள் என்ற இன்மை எண்ணங் (Negative thoughts)களையே-கேடு தரும் (destructive) எண்ணங் களையே பெரிதுங் கொள்கின்றோம். இத்தவறுகளை-மயக்கத்தை-பொய்களை மனதினின்றும் அகற்றுதல் நமது முதற் கடனாகும்.

களைகளைப் பிடுங்கி எறிந்தபின் அவ் விடத்தில் வதிந்த பாம்பு ஆதிய விஷப் பிராணிகள் உறைவிடம் அற்றதால் தாமே அகன்றுவிடும். பொய்யை மெய் யென நம்பி மோசம் போகும் மனதி னின்றும் பொய்யாயின வெல்லாம் போயகன்றபின், அந்நீர்மேற் குமிழி யைத் தேடித் திரியத் தோன்றும் விருப்பு, அது கிட்டாவிடில் முளைக்கும் கடுப்பு, இன்ன எரி எழுச்சிகள் இல்லா தொழியும்.

களைகளைந்த நிலம் வெற்றுத் திடலா யிருக்கும். அப்படியே அதை விட்டு விட்டால் மறுபடியும் பூண்டுகள் முளைத் துக் கிளைத்து அது கெட்டுப்போக லாம். உடனே உழுது, விதையிட்டு, நீரூற்றல்வேண்டும். மனமாகிய நிலத் தினின்றும் பொய்யகன்றபின் அதை வாளா விடடுவிட்டால் மறுபடியும் அது பழைய நிலைக்கே வந்துவிடும். ஆதலால் பொய்க்களைகளை வாங்கும் போதே உண்மை விதையை அங்கு ஊன்றல்வேண்டும். கடவுளே உண்மை, சத் (God is truth) எனும் எண் ணத்தை மனதில் பதித்து, அதையே அகத்தில் உழற்றிக் கொண்டிருப்பதே இங்கு உழவு ஆகும். இவ்வுழவை எவ் வளவு கடுமையாகச் செய்கின்றோமோ அவ்வளவு கடிதில் பயனடையலாம். இவ்வுண்மைப் பயிர் நன்கு மன நிலத் திற் பதிந்து வேரூன்றி, பிடுங்கி எறிய முடியாத (மறவாத) நிலைக்கு வரும் காலம் வரை, கண்ணுங் கருத்துமாக இவ்வுழவைச் செய்து கொண்டிருத்தல் வேண்டும்.

மரஞ் செடிகளை வளர்க்கும் நீர் போல இப்பயிரைப் பொறுமை எனும் ஒன்று வளர்க்கும். பருமைச் சோலையை ஆக்குபவனுக்கே பொறுமை அதிகம் வேண்டும். "எவ்வளவு தினங்கள் காத் திருப்பது, இன்னும் பலன் காணவில் லையே" என்று பொறையிழந்து இரண்டு தினங்கள் நீர் இறையாது விட்டால் செடி கொடிகள் வாடிப் போக லாம். நுண்மையிற் செயும் இதற்குக் கேட்கவும் வேண்டுமோ? தனையுடைய மனம் கடடற்று விரிந்து பேரறிவாகி இறையுண்மையை முன்னினைத்த படி. பிணியாதிய தீமை இல்பொருள் என் றும், ஆண்டவன் இயல்பு எங்கும் நீக்கமற நிறைந்து நிற்குமகோதிலா வமுத மென்றும், சுகவாரிஎன் றும், குறைவிலா நிறை வென்றும, இந்நிறைவில் வதியும அவன் மக்க ளாகிய நம்மெல்லோருக்கும் இவ்வியல்பு கள் உண்டு எனவும் - உணர்ச்சி வாயி லாக உணர்வதற்கு எவ்வளவோ நாட் கள் செல்லலாம். சீக்கிரம் பலன் கிடைக்காதது பற்றி மனந தளர்ந்து இப்பயிற்சியை விட்டுவிட்டால், நாம் அதுவரை எடுத்துக்கொண்ட முயற்சி கள் யாவும் வீணே அவமாகும். நிச் சயம் நாம் சிறப்படைவோம் என்ற நம் பிக்கையோடு கூடிய தளராத பொறு மையே இப்பயிற்சியைக் கெடாது ஓம் பும் நீராம். நமமகத்தில் முளைத்த உண் மைப் பயிர் - சிவப் பயிர் - வளர்தற்கு மிக்க ஆக்கமளிப்பது பொறை எனும் நீராகும்.

இந்நற்பயிர் செழித்து வளர்வ தற்கு இடையூறுகளாக வருபவை எண்ணில. இவை முன் அகற்றப்பட்ட இன்மை எண்ணங்களும் தீக்குணங் களுமாகும். நமது அகமும் புறமும் தூய்மையாக இல்லாவிடின் இவை மறு படியும் மனதைத் தாக்கிக் கலக்கம் விளைக்கும். இவை உள்ளே நுழை யாதபடி தகவு எனும் வேலி கோலல் வேண்டும். நமது ஒழுக்

கம் குணம் முதலியன நன்மையாக ஆக வேண்டும். அன்பு, நீதி, மன்னிப்பு, நல்லுணர்ச்சி இன்ன பிறவுமே நமது பயிரைக்காக்கும் வேலியாகும். அகத்தூய்மை அவசியம்.

இன்னும் நாம் நினைப்பதும் செய்வதும் செம்மையாக விருத்தலும் வேண்டும். இறை இயல்பினின்றும வேறு பட்ட எண்ணங்களும் செயல்களும் செம்மை யாகா. எங்கும நிறைநத, தன்மை, முற்றறிவு, பேரன்பு, சுகம் நிறைவு, ஒழுங்கு, அமைதியாதிய இறை இயல்பினின்றும வேறு படாது நினைத்து, இயற்றி வாழ்தலே செவ்வி தாகும். இயற்கை நியதியின் பாற்பட்டு புறவாழ்வு நடாத்தி, செம்மையுள் நாம நின்றால தான் நன்மை யடையலாம். புறத்தூய்மையும் நம்பயிருக்கு நற்காப்பு.

இப்படி ஒழுகிக் காத்துக் கிடந்தால் இறை உண்மையை நாம் உணரல் கூடும். நாம் யார் என்பதும், இறையின் இயல்பும், நமக்கும் அதற்கும் உள்ள தொடர்பும் விளங்காமற் போகா. இவ்வுண்மையை நாம் உணர்ச்சியாக அடையும்போது - அப்பயிர் மரமாகிப் பூத்துக் காய்த்துக் கனியும்போது - அக்கனிகளை நாம் சுவைக்கும்போது - அது எவ்வித மிருக்கும என்பது அப்பொழுதுதான் தெரியும். அக்கனிகள் எல்லாம் அறிவு - எல்லாம் நிறைவு - எல்லாம் அமைதி - எல்லாம் சுகம் - எல்லாம் அன்பு - இன்பு என்ற பெயர்கள் உள்ளனவாய் இருக்கலாம்.

இநநிலையை - சிவபுரத்தை - (Kingdom of God) கிட்டியவர் பருவுடல் தாங்கி நிற்கும்போது இயற்கைத்தாய் அவாகட்கு ஏவல் புரியா நிற்பாள் ; பசி வந்திட்டபோது இன்னமு தருத்துவள். அப்போது பிணிகள் நாடா ; இடரணுகா. (There shall no evil befall thee ; neither shall any plague come nigh they dwelling.) "இன்பமே எந்நாளும் துன்ப மில்லை".

"மெய்ம்மையா முழவைச் செய்து
விருப்பெனும் விதைதை வித்திப்
பொய்ம்மையாங் களையை வாங்கிப்
பொறையெனும் நீரைப் பாய்ச்சித
தம்மையு நோக்கிக் கண்டு
தகவெனும் வேலி யிட்டுச்
செமமையுள் நிற்ப ராகிற்
சிவகதி விளையு மன்றே."

என்று, தமிழ்மறைதியானத்தின் இயல் புகளைக் கூறும். துகளற்ற இயற்கையோடியைந்த செம்மை வாழ்வு நடாத்தி மனதினின்றும் பொய்யாயினவற்றைக் களைந்து மெய்யைப் பதித்து, பொறையாம் நீரைப் பாய்ச்சி, அகபபுறத் தூய்மை வேலிகோலிச் சிந்தித திருக்க விளைவது சிவகதியாம்.

அடுத்த இதழில் "பொய்" யின் இயல்பைச் சிந்திப்போம்.

---

# திருக்கோயில் வழிபாடும் சீர்திருத்தமும்

[திரு. போன்னம்மாள், பி. ஏ., எல். டி.]

## III

இவ்வாறெல்லாம உருவ வழிபாட்டின் தீமைகளை நாம் கண்ணாரக கண்டும, அவ்வழிபாடு மிகக கீழ்த்தரமக்களதே என்பதை நம் பெரியாரிலும் பலர் எடுத்துக் காட்டியிருக்கவும், அது அறிவு வளர்ச்சிக் கொருதடையாயிருககிறதை ஓராது "ஆன்ம வர்க்கத்தில் சிலர் பலாஎன்றவாறு கீழ்த்தரத்திவிருப்பாருக்கு அது பயனளிக்கிறதென்றும், இன்னும் பல ஒவ்வாத சாக்குப் போக்குகளைக் கூறியும் திரிபவர் நம இந்துமத பரிபாலனத்தைச சேர்ந்த அறிஞர் சிலரிலும் காணப்படுகின்றனர். இதுமிக இரங்கத் தக்கதே. உலகில் தற்காலம் ஒளிமிளிர்ந்து ஓங்கிவளர்நது வரும் சாஸ்திரங்களில் பல, விக்கிரக வணக்கஞ் செய்பவரையல்லாத ஏனையோரின் மூலமாகவே தோன்றிச சிறப்புற்று வருகிறதென்பதைச் சரித்திர ஆராய்சசி வல்லார் எளிதிற்காணலாம். அன்றியும் ஒரு காலத்தில் மிக உன்னத நிலையிலிருந்து இப்போது சிறிதும் இல்லாது இறந்து பட்டனவும், வரவர க்ஷீணித்துச சுருஙகி வருவனவுமான தேசங்கள் உருவ வழிபாட்டினை உயர்த்தி வழுத்தும் கோட்பாட்டினையுடையனவாயிருந்த தேயங்களே என்பது தெள்ளிதில் விளங்கும்.

உருவ வழிபாடு எல்லா வழிபாட்டினும் கீழ்த்தரமானதே என்பதை நன்கறிந்த பெரியாரொருவர் அதனைப் பிறமதத்தினர் எள்ளுகின்றனர் என்ற ஒரே காரணத்தினிமித்தம் தம்வாக்கை நிலை நிறுத்துமாறு அவ்வழிபாடு சிறந்ததெனக்கூறுமிடத்து 'அது தூரதேயஞ் சென்றிருக்கும் ஒருவன் தன்னை விட்டுப் பிரிந்திருக்கும் தமதனனையின் படத்தை அன்னையென்றே பாவித்துப் பூசித்துத் தன் அன்பைக் காட்டுவதையொக்கும்' என்றார். என்னை ? 'இதோ சதா காலமும் நானஉங்களுடனே இருக்கிறேன்' என்று கூறிய கிறிஸ்துவின் கூற்றினை நமது சிவ விஷ்ணு பக்தரில் எத்தனையோபேர் தங்கள சொநத அநுபவததிற் கண்டு பாடியிருக்கின றனா. தம் அன்புள்ள அருமதந்தையைத் தம் எதிரேஒவவொரு நிமிஷமுமவைத்துக் கொண்டு அவரை ஏறெடுத்தும் பாராமல அவர்போன்ற பாவையை நிறுத்தி அன்பினை வெளிக்காடடும புதல்வரை அத தநதையர் காணின் அவர் மனதை எத்தனையாக வருததும்? அத்தகைய புதல்வரைப் பிறரும் காணின் ஏதோ சிததப் பிரமை கொண்டவர் என அன்னோரைக் கருதி நகைப்பரே யொழிய பெற்றோர் மீதுள்ள அன்பினால் அவ்வாறு செய்கின்றனா எனக் கூறுவார் யார்?

இன்னும் "சிறுவர்க்கு முதன் முதன் பொருட்களைக் கொண்டு கற்பிப்பதற்கு ஒப்பாகும்" எனக் கழறுவாருமுளர். என்னை? சிறுவர் என்றும் சிறுவரன்றே. அச்சிறுவர் தாம் அப்படியே பொருட்களைககண்டு கல்விபயிலக் கற்றும் உயர்நத வகுபபுக்கு ஏற ஏற சாஸ்திரவாயிலாக அப்பொருளை உணர்நது முடிவில் எததிறபபட்ட திட, திரவ, வாயுப பதார்ததங்களையும் கூறு பாடு செய்து, குணம் குறிதது நூலெழுதும் சீரிய ஆற்றலையும் அடைந்து விளங்க வேண்டாவோ? அதுவன்றோ அறிவின் தன்மை? பெற்றதைப்பெருக்கிப் பிறர்க் குணர்ததும ஆற்றலையுரைக்கும கலவியே உயரியது. அபபடிக்கின்றி பாலர் வகுப்பிலேயே தம் அரும் குழவிகள பல வருடங்கழிக்கக் கண்ட பெற்றோர் அத்தகைய தம் புதல்வர் மீது வருத்தமும், கோபமும் இரககமுங் கொண்டு உளம்நொந்து மடிவாரன்றோ! குழநதைகளின் உடல் வளர்சசிக் கேறபவே அறிவுவளர்சசியும் ஆன்ம வளாச்சியும். எத்தகைய தேச வளர்ச்சியும் அன்ன பெற்றித்தே. பூரணசுகமுடைய புதல்வரின்லட்சணம்யாது? இவ்வுலகின்கண்

சிசுவாயுதித்துச் செங்கீரையாடி, தொட்டிலிற் பழகி, சப்பாணி கொட்டி, முத்தமளித்து, முன்னே நடந்து, முழுமதி கண்டு களித்து, சிற்றில் சிதைத்து, சிறுபறை கொட்டி, சிறுதேர் உருட்டி, செல்வச் சிறாராய்ப் பள்ளிக்குச் சென்று, பலகலை கற்று, பாங்குடன் பலமுடைக் காளைகளாகி, பாரினிற் சென்று, பரிவுடன் பெருஞ்செயல் பலவும் ஆற்றித்தம்புகழுடம்பை நிறுத்திப் பூமியில் மிளிர்வதன்றோ? இத்தகைய செல்வப் புதல்வரை யன்றோ கண்ணுறுந் தோறும் கண்ணுறுந்தோறும்,

“ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும் தனமகனைச்
சான்றோனெனக் கேட்டதாய்”

என்றும்,

“இவன் தந்தை என்னோற்றான் கொல்!”

என்றும் தெய்வநாயனார் கூறியவாறு இருமுதுகுரவரும், பெருநில மாந்தரும் களிப்பெய்திக் கொண்டாடுவர்!

இதற்கு மாறாகத் தம் அன்பின் கனிகள் பல்லாண்டு சென்றும் பிள்ளைப் பருவத்திலேயே தங்கி, சிறுத்து, சிதைவுற்றுக் காணப்படின் பெற்றோர் ஆற்றியிருப்பரோ? அவ்வளர்ச்சி குன்றிய தன் காரணத்தை யறிந்து பரிகாரஞ் செய்யுமாறு உலகில் யாவரினும் மேம்பாடுடைய அரிய வைத்திய நிபுணரை நாடி, தம் உடல், ஆவி, பொருள், யாவற்றையும் தியாகம் செய்தேனும் தம் குலக்கொழுந்து வளர்ந்து பெருகிப் பூவும் காயும் கனியுமாய்த் தழைப்பதைக் காணவேண்டுமென ஆசியாரோ? இம்மண்ணுலாய பெற்றோர் தம் குழந்தைகளின் வளர்ச்சியினபொருட்டு இத்தனை அன்பும் அநுதாபமும் கொண்டு முயல்வரெனின், நம் விண்ணோங்கிய வேதியன் தம் மக்கள் பல்லாயிரவாண்டுகளாக ஒரு பாழுங்குழியில் பதிந்து மாண்டுபோவதைக் காண எத்தனையாக மனமுடையார்? ஆகலின நம் பெரியார் அன்னோரைப் பிரகாசிப்பித்து, அவரது அறியாமையையும் அஞ்ஞானத்தையும நீக்கி மெய்ப்பொருளான அன்பின் கனி அருள் நாதனைக் கண்டு ருசித்து ஆனந்தத்தில் சுகித்திருக்கச் செய்வது நம் பொறுப்பும் கடமையுமென்று உணர்தல் வேண்டாவோ? அப்படிக்கின்றி அறிஞரான தலைவரே ஆத்மாக்களை இருளிலேயே நிறுத்தி அஞ்ஞானத்திற்கு அடிமைபபடுத்தி நிற்கும், ஒன்றுககும உதவாத உருவ வழிபாட்டினை நிலை நிறுத்திச சிறப்பிக்க முயல்வது ‘வேலியே பயிரை யழி’த்தற்குச் சமானமா யிருககின்றதன்றோ! பல வினைரையும அறிவீனரையும் தாங்கல் சான்றோர் கடன். சங்கீதக்காரன் கூறுவதுபோல் நல்ல மேய்ப்பர் தம் ஆடுகளைப் “புல்லுள்ள விடங்களில் மேய்த்து அமர்நத தண்ணீர்களண்டைக்கு நடத்தி” அவை எவ்விதத்திலும் தாழ்ச்சி யடையாதிருக்கச செய்தலன்றோ கிரமமாகும்! அவ்வாறு தம் கடனைச் செய்யாது நிர் விசாரமாயிருப்பதோடு மெலிந்த மந்தையை இன்னும் மெலியச் செய்யும் பாழான பள்ளத்திலேயே அழுத்திக் கெடுக்க அவர் விரும்புவராயின் “உன் உக்கிராணக்கணக்கை யொப்புவி” என்று நல்ல மேய்ப்பரான இறைவனிடமிருந்து கட்டளை பிறக்குங்கால் யாது செய்வரோ! “யாரிடத்தில அதிகம்கொடுக்கப்படுகிறதோ அவரிடத்திலிருநது அதிகம் கேட்கபபடும” ‘அறியாமற் செய்கிறவன் கொஞ்சம் அடிகள் அடிக்கப்படுவான்! அறிநது செய்கிறவன் அநேக அடிகள் அடிக்கபபடுவான் என்று கிறிஸ்து கூறினது இங்கு எம ஞாபகததிறகு வருகிறது. தமது ஆதரவின் கீழ் ஒப்புவிக்கபபட்ட பலவினரையும், அறிவீனரையும் ஆன்ம குருடர், சப்பாணி, ஊமைகளையும் மேன்மேலும் உயர்நத வெளிச்சத்திற்கும், வளர்ச்சிக்கும் படிப்படியாய் நடதத மதாசிரியரும, பெரியாரும் சாவதானமாயிருக்கத் தவறும்போது எல்லாவற்றையும்பார்த்தறிந்துசோதித்துணரும் பரமதகப்பன் அடிக்கடி அவரை எச்சரிக்கிறது எம் செவியில் இடையறாது தொனித்து நிற்கிறது.

அவைகளிற் சில இங்குக் கூறுதும் : "என் தாசனையல்லாமல் குருடன்யார்? நான் அனுப்பிய தூதனையல்லாமல் செவிடன யார்? கர்த்தருடைய ஊழியக் காரனேயல்லாமல் அநதகன் யார்? நீ அனேகக் காரியங்களைக் கண்டும கவனியாதிருக்கிறாய்"—ஏசாயா 42 : 19. "பரிசுதத முள்ளதற்கும பரிசுதத மில்லாததற்கும் வித்தியாசம் பண்ணு மலும், அசுத்த முள்ளதற்கும் அசுத்த மிலலாததற்கும உண்டான வேற்றுமையைக் காண்பியாமலும் இருநது, என் ஜனத்தைப் பட்சிததது, வேதத துக்கு அநியாயம செய்கிற மேய்ப்பர் அவர்கள மத்தியில் நான் கனவீனம பண்ணப்படுகிறேன்" — எசேககியேல் 22 : 26—27 ; "கட்டையைப் பார்த்து 'நீ என்தகப்பன்' என்றும், கல்லைப்பார்த்து 'நீ என்னைப் பெற்றாய்' என்றும சொல்லுகிறவர்களும, அவர்கள் ராஜாக்களும், அவர்கள் பிரபுககளும், அவர்கள் ஆசாரியர்களும், அவர்கள் தீர்க்கத் தரிசிகளும் வெட்கப்படுவார்கள்"—எரேமியா 2 : 26. "அவனவன் தன் தன் நரகலான விககிரகத்தையும் அருவருப்பையும்விட்டுத் திரும்பாதிருநதால் ........ தீர்ககத்தரிசியினிடத்தில் விசாரிககிறவனுடைய தண்டனை எப்படியிருககிறதோ அப்படியே தீர்க்க தரிசியின் தண்டனையும் இருக்கும"— எசேக்கியேல 14 : 6+10 ; "என் பிள்ளைகள் என்னை விட்டுப் போய்விட்டார்கள். மேய்ப்பர்கள் மிருக குணமுள்ளவர்களாகிக் கர்த்தரைத் தேடாமற் போனார்கள். ஆகையால் அவர்கள் காரியம் வாய்க்காமற்போய் அவர்கள் மந்தையெல்லாம் சிதறடிக்கப்பட்டது"—எரே 11 20 4.

இவற்றையெல்லாங் கண்டும கேட்டும் இன்னும் உருவ வழிபாட்டைச சிறப்பிக்கும் கருத்தும் விருப்பும் இருக்குமாயின் அத்தகைய பெரியாருக்கு நாம் ஒன்று கூறுவோம்.

"அவனருளே கண்ணுகக் காணின் அல்லால்
இப்படியன, இநநிறததன, இவவண்ணததன்
இவனிறைவன எனவெழுதிக் காட்டொ
ணாதே"

எனத திருத்தாண்டகததில் கூறப்பட்டிருக்கும் இறைவனுகிய முழுமுதற் பொருள ஒன்றையே குறிப்பாய்க் காட்டுமபடியான ஒரே உருவமே எக்கோயிலினும காணப்படலாமே! குற்ற மிகுதியால் இறந்துபட்ட பேய்த்தனமுடைய ஆவிகளுக்கும், வீரராயிருந்து உஜ்ஜீவித்துச சென்றோர்க்கும், நம்போல் பாவிகளாயிருநது பதவி பெற்றோர்க்கும் உருவஙகள் சமைததுக கோயில்களில் நிறுததிக் கும்பிட்டு வருதல் எத்துணையும பொருநதாதென்க. இதுமாத்திரமோ! ஒரு பக்தன் புலம்புவதுபோல்,

"ஊரினிற் பெயர்கொண் டிருந்து செததவ
உளவுபோய் மடிநத காமுகர்க்கும [ர்க்கும்
உயிர்விடவலிய நானறு கொண்டவர்கும
உகந்துதீய்ப் பாய்நத நீலிகட்கும்
பாரினில கணவன் தனக்கடங்காமல்
பதைததிட நஞ்சினைத தின்றும்
படுங்கயததினிலும் ஆற்றிலும் வீழ்கப்
பசாசுருவான பாவிகட்கும்
போரினிற் படையில் பட்டவீரருக்கும்
புராதனத திருந்த மன்னவர்க்கும்
புலையர் சக்கிலியா குறவர்க ளீனப்
புதரையர் கழுவி லேறிகட்கு
தேரினும கோயிற் புறததினும் நடக்கு
தெருவினும் சிலையடித திருததித்
தேவனென றிருநத பாவியான்"

"எனற தெலலாம் போதாதென
அரிசிவன் பிரம னெங்கா றுறு
முகன் சதாசிவன் மயேசுரனு
டையனர் வீர பத்திர னிருளன்
அனுமநதன கால சங்காரன
பொருதடி மாடன கருப்பண னிடும்பன
புததனர் காத்தவ ராயன
பொம்மனரெட்டியச்சின்னுடன சக்கதேவி
பொானனியங் காளி கங்காளி
பெரியமா காளி ரணபததிர காளி
பேச்சிசா முண்டியுத தண்டி
பில்லிவாய்க குறளி ஏகரி வீரி
பிடாரிகாட் டேரிதூத தேறி
எமகண்டி சாமளை துற்கை
இன்னமும் அனநதம் பேய்களை"

யும, இதுவும் போதாதென்று,

"சூரியன் வடிவோ சநதிர னுருவோ
தொகையிலா வானபற வைகளோ

துன்னிய காற்ருே வன்னியோ முகிலோ
தோனறிய பூமியோ மண்ணுே
பாரினில் ஊர்குஞ் சீவனுே செநதோ
பற்பல நாலுகால் விலங்கோ
பசும்புலோ செடியோ அனநத தாபரமோ
பயோததி நீர்ஜசங் கினமோ
ஏரியோ குளமோ ஆறதோ நதியோ
எண்ணிலா மலைகளோ சுனேயோ
இடங்களோ விசேஷ தலஙகளோ கோடி
இதத‍னை இழுவுமல் லாமல்
காரிய மெனவே நாகலை நீரைக
கலநதபெண் குறியொ டாண் குறியைக்
கடவுளென் றிருந்த மடையனு னையா
கருணைசெய் காக்கும் ரட்சகனே"

என்று சாஸ்திரியார் கூறும் வண்ணம நம தென்னிந்தியாவில் வழுத்தப்படும் தெய்வங்களுக்கோர் கணககுண்டோ! ஐயகோ! இஃதெத்தனை கோரமான கொடுமை! "நோக்கிடவிதியிலாத" இத்தனை திரளானவஸ்துவைக கடவுளென அடிதொழின் உருவிலா உன்னத ஜோதியின் அன்பையும, அருளையும், நீதியையும், பரிசுததத்தையும், நிறைந்த ஜோதியையும், சுத்தமகத்துவத்தையும், சுயதத்துவத்தினையும் நம்மக்கள் எல லாரும காணுவ தெக்காலமோ! கல்வி கற்றறிந்த நல்லவர் இதனைக் கண்டறி யார் கொல்! வானம பூமியாவையும் படைதத மட்டில்லாச் சருவ வல்லவன் மகத்துவ தேவன், ஜெகததினில் ஈனர் வகுத்தமேனியில் இருப்பனுே! இவ் வாறு சததியந் தப்பி அவரவர்க்கேற்ற சாமிகள் செய்யவுந்தான் தகுமோ! ஞானமுள்ளோர் நம்மில் இல்லையோ! நீதி, நடுவிலாத் தேயமோ ஈது! நம் முடைய கையாற் சமைத்த பாவைகள் உருவஙகள் நமக்குப் பதவியைத் தரு மோ! அப்படியிருக்கக கதிதரும் கர்த் தனை விடடு அநீத வீண் பொருளைக் கை தொழுவாரைக் கண்டனம் பண்ணி, கனிந்த அன்புடன் கைகொடுத்து நடத் திக் "கருதரிய சிற்சபையில் ஆனநத நர்த்தமிடும் கருணுகரக்கடவு"ளண்டை நடத்தல் நம்பெருத்த கடனென்று கற்ருேரே உணர்வீர். விக்கிரகங்கள் ஒருபோதும் நம்மக்களைக் கற்பிப் பதில்லை. கல்விக்கோர் தடையே அவை கள். உருவழி பாட்டினைத் தாண்டிச் செல்லாருக்குப் பிறர் கூறும் ஏதத கைய நல்லறிவும், நல்லுணர்வும், நல் லொளியும் பலன் செய்யாவெனக் கண்ட அப்பரும்,

"செததுச் செததுப் பிறப்பதே தேவென்று
பததி செய்மெனப் பாறைகட் கேறுமோ?"

என்ருர்.

"வான்கெட்டு மாருதம் மாய்ந்து
அழல் நீர் மண் கெடினும்
தான கெட்டலின்றிச்
சலிப்பறியாத தன்மைய"

ஞை உலகுக்கெல்லாம் ஏக வஸ்துவாகிய பராபரனின் பண்பை நாமும்பெற்று அவருடன் நிததியமாய் ஜீவித்திருக்க விரும்பிடில் அவரேயே யன்றிவேருென் றின்உருவையும் உற்றுநோக்கி உள்ளத் தாலும் தியானிததல் தகாதே.

> "மனிதன சிரத்தை (=நம்பிக்கை) மயமானவன். யாவருக்கும் தததம் உள்ளி யல்புக கொத்த நம்பிக்கை யமைகிறது. எவன் எந்தப் பொருளில் நம்பிக்கை யுடையவனுே அநதப் பொருளே தானு கிருன்"—பகவத்கீதை 17-ம் அதிகாரம் 3-ம் சுலோகம்.

என்று பகவத்கீதையும் பகர்கின்றதே. இதன் உண்மையை அநுபவார்த்த மாய்க் கண்ட கிறிஸ்தவ பக்தர் தம் மந் தையின் ஆடுகளைத் தெய்வத் தன் மைக்கு நேராய் வழி நடத்தும பெருநோக்குடையாராய், அச்சபையார் உற்று நோக்கி யுள்ளத்தில் உள்கும்படி வேருெரு உருவத்தையும் கையாற் சமைத்து வைக்க விருப்பிலராய், "என்னைக் கண்டவன் என் பிதாவைக் கண்டான்" எனத் திருவுளம் பற்றின கிறிஸ்திறைவனையே உள்ளநதனில் நிறுத்தி "சுயாதீனப் பிரமாணமாகிய பூரண பிரமாணமான கிறிஸ்துவை உற்றுப் பார்த்து அதிலே நிலைத்திருக் கிறவன் கேட்கிறதை மறவாமல் அதற் கேற்ற கிரியை செய்கிறவனுயிருந்து, தன் செய்கையிலே பாக்கியவானுயிருப் பான்"—யாக்கோபு 1 : 25. என்று போதிக்கின்றனர்.

# "ஐம்பெரும் பாதகர்கள்"

[திரு. ஆரியூர் - வ. பதுமநாப பிள்ளை]

"ஐம்பெரும பாதகாகள்"—என்ற தலைப்பைக கண்டவுடனே, எண்ணிறந்த நீதிநூல்களிலும் சன்மார்க்கப் பிரசங்கங்களிலும் முறையே கண்டும் கேட்டும் பெரிதும சலித்துப்போன கர்நாடக விஷயமென்று உங்களிற் பலர் இக்கட்டுரையைத் தள்ளிவிட்டு அடுத்த கட்டுரைககுப் போய்விட நினைப்பீர்களென்பது எனக்குத் தெரியும். புதுப் புது விஷயங்களைப் படிபபதிலேயே ஆர்வம் கொண்டு நிற்பவர்களுக்கு, தெருவில் விளையாடிக்கொண்டிருந்த பருவத்திலேயே தெரிநதுகொண்டுவிட்ட விஷயங்களை ஆராய்ச்சிகள்மிகுந்தஇக்காலத்தில் கட்டுரைகள் வாயிலாகப் படிப்பது எட்டிக்காய்ச்சட்டினிபோன்றே தோன்றும் என்பதும் எனக்குத் தெரியும். அத்தகையவர்கள் தங்களது ஆராய்ச்சிக் கண்கள் கொண்டு இக்கட்டுரைத் தலைப்பை நன்கு கவனித்துப் பார்ப்பார்களானுல், இக்கட்டுரையைப் பகிஷ்கரித்துவிடத் தீர்மானித்து விடமாட்டார்கள் என்னும் நம்பிக்கை எனக்கு உண்டு. 'பஞ்சமா பாதகர்க'ளைப் பற்றியே நான் விவரிக்கப் புகுகிறேனேயல்லது, 'பாதகங்க'ளைப் பற்றியல்ல என்பதைக் கவனிக்க வேண்டுகிறேன். 'கொலையினுர்', 'களவினுர்', 'கள்ளினுர்', 'காமனுர்', 'பொய்யினுா' முதலிய ஐவர்களது வீரப்பிரதாபங்களை யான் விவரிக்கப் புகவில்லை என்று முதலிலேயே தெரிவித்துக்கொண்டுவிடுகிறேன். நான் வெளியிடப்போகும 'ஐம்பெரும் பாதகர்கள்' உங்களது வெறுப்புக்கும் கோபத்திற்கும் பாத்திரர்களாவதற்குப் பதிலாக, உங்களது அன்புக்கும் மகிழ்ச்சிக்குமே உரியவர்களாகக் கூடியவர்களாவர். அவர்கள் எவர்களாக இருக்கக்கூடுமென்று உங்களால் சொல்லமுடியுமோ? உங்களுக்குத் தெரியாவிடில், உங்கள் கைகளிலுள்ள இப் பத்திரிகையை மூடி வைத்துவிட்டு, கண்களை மூடிக்கொண்டு அவர்கள் எவர்கள் என்பதைத தெரிவிக்குமாறு சத்தியலோகத்திலுள்ள கலைமகளைத் தியானித்துப் பிரார்த்தியுங்கள். பாவம்! கலைமகள்கூட உங்களுககு உணர்த்த வில்லையா? ஆமாம! தான் வீற்றிருப்பதின் இனத்தினரின் இரகசியங்களை உங்களுக்கு வெளியிட்டுரைக்கக் கலைமகளுக்குத் திருவுள்ள மில்லைபோலும்!

காலையில் எழுநதிருந்ததும் படுக்கைக் காப்பி; பல் துலக்கியவுடன் பலகாரமும் காப்பியும்; பதினொரு மணிக்கெல்லாம் சுகபோஜனம; மாலை நான்குமணிக்குச் சிற்றுண்டியும் காப்பியும்; இரவு 8 மணிககுச் சாப்பாடு; ஒன்பது மணி முதல் சீட்டாட்டம் அல்லது கிராமபோன் கீத சிரவணுனந்தம். இவ்வாறு தானே உங்களிற் பெரும்பாலோரது தினசரிக் காலப்போக்கு இருந்து வருகிறது! இடை நேரங்களில், மேஜையும் காகிதங்களுமே உங்களோடு உறவாடும் தோழர்கள்! இத்தகைய உங்களுக்கு, சிந்தனு சக்தியைப் பயன்படுத்திக் கொள்ள ஓய்வு வாய்ப்பதேது? செயற்கைக் காட்சிகளிலேயே உங்களது சிந்தை படிந்து கிடக்கிறது! பெயரே தெரியாத மரங்கள் சிலவும், மலர்களே இல்லாத மரங்கள் சிலவும், மணமே இல்லாத 'மலர்க'ளையுடைய மரங்கள் சிலவும், குட்டநோய் பிடித்தவை போன்ற 'குரோட்டன்ஸ்கள்' சிலவும் ஓரிடத்தில் இருந்துவிட்டால், அவ்விடததிலேயே உங்களுக்கு 'இயற்கைக காட்சி இன்பம்' கிடைத்துவிடுவதாக உங்கள் எண்ணம்! 'பார்க்கு'களாம் 'பார்க்குகள்'! அவற்றைப் பார்க்கும்போது, உண்மை இயற்கை இன்பத்தில் திளைப்பவர்களுக்குச் சிரிப்புதான் உண்டாகிறது!

'காடுகளாகக் கிடந்த இடங்களை நாங்கள் வந்து அழித்து நகரங்களாக மாற்றி இந்நாட்டினரை 'நாகரிகர்க'ளாக்கி யிராவிட்டால், இந்தியர்கள் பலரும் வனவாசிகளாகவே வாழ்வார்

கள்'—என்று அந்நியர்கள் - இல்லை கலிகாலத தேவாகள் இநதிய நாட்டினருக்குத் தாங்கள் செய்த 'கைமமாறு கருதாத' திருத்தொண்டைச சிறப்பித்துக் கூறக்கூடும். ஆனால், முற்காலத்தில் காடுகளில் இந்நாட்டினர் அனுபவித்த இன்பததை, தற்காலததில் நாகரிகம் மிகக நகரங்களில் கூட அனுப
!

இயற்கைக்கு மாறுபட்டதையே ஓர் ஆசசரியக் காட்சியாகக கருதி, நீங்கள் அசையும் படக்காட்சிகளையும் பேசும் படக்காட்சிகளையும் கண்டு களிக்கலாம; நாட்டுக் கைத்தொழில்களில் மண்ணைப் போட்டு - எண்ணிறநத ஏழைகளைத் தினந்தோறும் வாட்டி - மனிதனை உடல் உழைப்பை வெறுககும சோம்பேறி யாக்கி ஆசைப் பேய்க்கு ஆட்படுத்திவரும் விசித்திர இயந்திரங்களைக் கண்டு வியநது மகிழலாம்; தங்களது முழுத்திறமையையும வெளிப்படுத்த எண்ணி, ஆவேசங்கொண்டவர்களைப்போலத் தலைமயிர் அவிழ்நதாடக் கண்கள் புரண்டாடக் கைகள் தாளம் போடத தங்களது சங்கீத ஞானத்தை வெளிப்படுத்துவோரது பாட்டுகளைக் கேட்டு, நீங்கள் சிரக்கம்பமும் கரகோஷமும் செய்து மகிழலாம். ஆனால், பச்சைப் பசேலென்று செழித்து வளர்ந்த பலவகைப்பட்ட அழகிய மரங்கள் நிரம்பியுள்ள பலவித நிறஙகளால் காண்போர் கண்களுக்கும், மனோகரமான இனிய மணததால் முகர்வோர் நம், மிக்க மிருதுத்தன்மையினால் தொடுவோர் கைகளுக்கும் ஒருங்கே பெருமகிழ்வூட்டக்கூடிய பல வகை மலர்களும் பறிப்பாரின்றி உதிர்ந்து சிதறிப் பரவி இரத்தினக் கம்பளம் பரப்பப்பட்டதுபோ லிருக்கிற பசும்புல் தரையை உடைய - உடலையும் உள்ளத்தையும் ஒரேசமயததில் குளிர்விக்கக்கூடிய இனிய பூங்காற்று வீசிக் கொண்டிருக்கிற - எங்கு நோக்கினும் இயற்கைப் படைப்பின் ஒப்பற்ற அற்புத அழகைத் தோற்றுவித்துக்கொண் சோலையிலே புகுந்து உலவும் பாக்கியம், உங்களுக்கு எப்பொழுதேனும் வாய்த்தது உண்டோ? அத்தகைய பாக்கியம் ஒருநாள் கூட உங்களுக்குக் கிடைததிராவிட்டால், எவ்வளவு விவரித்துச சொன்னாலுங்கூட நான் கூறப்போகின்ற நூதன பஞ்ச மகா பாதகர்களது சகதி எத்தகையதென்பதை நீங்கள் நன்கு தெரிந்து கொள்வது அரிதே.

இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பு, இததென் தமிழ்ததிருநாட்டில் வாழ்ந்திருநத ஒரு மாது சிரோமணி கண்ட காட்சியை இனி விவரிக்கத் தொடங்குகின்றேன். கண்களையும்கருத்தையும் ஒருங்கே கவர்ந்து, மண்ணுலகத்தினரின் மனோரதத்தைக் கந்தருவ உலகில் செலுத்தி இன்ப வயப்படுத்தக் கூடிய பூஞ்சோலை ஒன்றிலே - தழைத்துச் செழித்து வளர்ந்துள்ள மாமரம் ஒன்றிலே - நீலக்கருங்குயில் ஒன்று உட்கார்நது கொண்டு, கந்தருவர் சந்த கீதம் எந்த விதமாக இருக்குமென்பதை இந்த உலகினருக்கு உணர்த்துவதுபோல், தனது இணையற்ற இன்பக் குரலிலே பாடிக் கொண்டிருக்கிறது. அதன்பாட்டின் இனிய ஓசையிலே ஈடுபட்டு இன்பவயப்பட்டு நிற்கும் சிந்தையை உடையவர்கள், அச் சிந்தையை அப் பாட்டின் பொருள் என்னவென்று கண்டு பிடிப்பதில் செலுத்தி வீணாகக் குழப்பிக்கொண்டு விடமாட்டார்கள். கந்தருவ பாஷையையும் கந்தருவ கானத்தையும் இந்த உலகத்திலே, எந்த கலாசாலைக்குச் சென்று கற்றுக் கொள்ளக்கூடும்? ச-ரி-க-ம-ப-த-நி, எனும் ஸப்த ஸ்வரங்களையும் புரட்டிப் புரட்டிப் பாடுவதே சங்கீத ஞானம்' என்று நினைத்துக் கொண்டிருப்பவர்களது நெஞ்சை, நீலக்குயிலின் மோகனப்பாட்டு சிறிதளவும் உருக்கக் கூடியதாகாது என்பது கேவலம் உண்மையே. ஆயினும், அப்பாட்டைக் கேட்டு அகம் கரைந்து உருகி நிற்கக்கூடிய உள்ளம் உடையவர்களாக சீரிய மெய்க் காதல் உலகத்தில் வாழ்ந்தோரும் சிலர் இருந்தனர் என்னும்

உண்மையை, அவர்கள் அமைத்துச சென்ற சொற்சித்திரங்களே இன்றும நமககு விளக்கிக் காட்டக்கூடும்.

"மானிடவர்க்கென்று பேசசுப்படில் வாழகில்லேன்"— என்று சூளுரை கூறி, நீலமேனி நெடியோனுகிய திருமாலையே தனககு உரிய மணவாளனுக மனத்திற் கொண்டு, அப்பெருமானைக் கூடிக் களிக்கும்பேறு எப்பொழுது வாய்க்குமோ என்று ஏங்கி நிற்கும் தலைவி, இருந்த இடத்திலேயே இருந்து கொண்டிருப்பதால் மேன் மேலும பெருகுகிற மனுேசஞ்சலததை வெளியிற் சென்று உலவி வருவதாலேனும் ஒருவாறு ஆற்றிக் கொள்ளலாம் என்று எண்ணியவளாய்ப் பூஞ்சோலை ஒன்றை அடைகின்ருள். தனது தலைவனது பிரிவால் விளைந்த துயரைப் பொறுக்க முடியாமல் மேனி பசந்து அகம் கரைந்து உருகுகிற தலைவியின் செவிகளிலே, மாமரத்தில் அமர்நது எத்தகைய கவலையுமின்றி உற்சாகத்துடன் பாடிக்கொண்டிருக்கிற நீலக் குயிலின் மோகனப்பாட்டு கேட்கிறது; தலைவி தலை நிமிர்ந்து நோக்குகிருள்; தனது மனதிற்கு மகிழ்வூட்டக் கூடிய தலைவனைப் பிரிந்து படும துன்பம் தாங்க முடியாமல் தான் மட்டும் அகம் கலங்கி நிறக, தான்படும் துன்பத்தில் சிறிதளவும் அநுதாபங் காட்டாததோடு தன்னைப் பரிகசிப்பது போலும் களிப்போடு கூவுகிற குயிலின் கொடுமை கண்டு, தலைவியின் மனம் குமுறுகிறது; சீற்றமும் வெறுப்பும கலந்த நோக்குடன் அக்குயிலைநோக்கி, அவள் பின்வருமாறு கூறத் தொடங்குகிருள் :—

"பெண் வருத்தம் கண்டு பேயும இரங்கும்"—என்று பலர் சொல்லக் கேட்டிருக்கின்றேன். ஓ! காலனைப் போலும் கருநிறம் படைத்த கருணையற்ற குயிலே! உன் மனம் பேயின் மனதைக் காட்டிலும் கொடியதாக இருக்கிறதே! நான் படும் துயரைக் கண்கூளாரக் கண்டும், சிறிதளவும் இரக்கமின்றி உனது மோகனப் பாட்டால்எனது துயரத்தீயை மேன்மேலும் வளாக்கவும் துணிவு கொண்டுவிடக் கூடியவாறு, உனது மனதை இன்று கொடுமை மிகுநததாக மாற்றிய இறைவன், முன்பு இனியதாக இருநத உனது குரலையும் இன்று கொடியதாக மாற்றி விட்டான்போலும்! நான் எனது தலைவரது பிரிவாற்ருது படுகிற துன்பம், உனககு இன்பமாகத தோன்றுகின்றதா? உனது காதலியோடு கூடிக் குலவும் காதற்செருக்கு, உனது அறிவையே மறைத்து விட்டது போலும்!

உனது துணைவியை நீ பிரிய நேர்நதால், உன் மனம் எவ்வளவு பாடுபடக் கூடுமென்பதைச் சிறிதேனும் சிநதிததுப்பார்ததாயா? உள்ளததைக்கொள்ளை கொண்ட அன்பரைப் பிரிவதனுல் உண்டாகும துக்கததை நீ அறியாயோ? நானும் எனது ஆருயிர்த்தலைவரும் இச் சோலையிலே கூடிக்குலவிக் களித்திருந்த காலத்திலே, எங்கள இருவரையுங் கண்டு இன்பக் கடலில் ஆழ்ந்த நீ, என்றென்றும் நீங்கள் இருவரும் ஒருவரையொருவர் விட்டுச் சிறிதும் பிரியாது சேர்ந்திருந்து வாழவேண்டும் என்று எங்களை வாழ்த்தி மகிழ்வு பொஙகக் கூவிய நீ, எப்பொழுதும எனது இன்பத்தை மேன்மேலும் வளர்ப்பதாக உனது மோகனப்பாட்டால் உணர்த்திய நீ இன்று முற்றிலும் வேறு குயிலாக மாறிவிட்டாய்! நீ நடித்த நடிப்பும் வாழ்ததிய வாழ்த்தும் பாடிய மோகனப்பாட்டும், இன்று முற்றிலும் பொய்ததுவிட்டன! அந்தோ! உனது மேனியைப் போன்றே உனது உள்ளமும் கருத்துவிட்டதோ? உனது பொய் எததகைய பெரும் பொய்! எனக்கு ஆசை காட்டி மோசம் செய்த அநியாயப் பொய்!! நினைக்க நினைக்க என் நெஞ்சைக் குமுறசசெய்யும் கொடும பொய்!!! சீ! சீ!! நீயும் ஒரு காதல இன்பத்தை அனுபவிக்கிருயா? எனது காதலரது கண்ணுக்கினிய கருநீலநிறம் உனக்கேன்?"

இவ்வாறு ஐம்பெரும் பாதகர்களுள் முதற்பெரும் பாதகனுகிய குயிலைப்

பெரிதும் வெறுத்துப் பழித்துரைத்த தலைவி, பின்னும் அங்கு தங்கிநிற்க மன மற்றவளாய்ச்சற்று நடந்துசெல்கிறாள். சிறிது தூரம் சென்றபின், அவள் கண்ட காட்சி அவளை அசைவற்று நிற்கச் செய்துவிடுகின்றது. பததுப் பன்னிரண்டு ஆண் மயில்களும் பெண் மயில்களும் வானத்தில் செல்லும குளிர்ந்த கருமுகில்களைக் கண்டு குதூகலங் கொண்டு கூத்தாடுகின்றன. அவற்றில் ஆண்மயில்களெல்லாம் காண்போர் கண்களையும் கருததையும் மயக்குகிற ஒப்பற்ற பேரழகு வாய்ந்த தத்தம் தோகையை விரிதது ஆடுவதைக் கண்ட பெண்மயில்கள், அத்தகைய அற்புததோகை தங்களுக்கு இல்லாமையால் தாங்கள் ஆடுவது ஆண்மயில்களின் ஆட்டத்தைப்போல அழகாக இல்லை என்பதைக் கண்டு, மிக்க மன வாட்டத்துடன் தங்களது ஆட்டத்தை நிறுத்தி விடுகின்றன. அதைக் கண்டு அகம் பதைத்த தலைவி, ஆண்மயில்களை நோக்கிக் கூறுகிறாள் :—

"வெறும் மேகங்களைக் கண்டுவிட்டு, வெறி பிடித்தவர்களைப்போல் கூததாடுகிற ஆண் மயில்களே! உங்கள் குலத் தலைமை பூண்ட இரண்டினுள் ஒன்று வெற்றி வடிவேலனைத் தாங்கி உலவினால், மற்றொன்று கலைமகளைத் தாங்கி உலவுகிறதல்லவா? நீங்கள் உங்கள் காதலிகள் கொண்ட வாட்டத்தைக் கண்டும் காணாதவர்களைப்போல், அவர்கள் படும்துயரம் மேன்மேலும் பெருகுமாறு ஆடிக்கொண்டிருப்பதேன்? உங்களைக் காதலிப்பவர்களிடம் அன்பு காட்டாத உங்களுக்கு, ஆட்டம எதற்காக? ஒருகால், வனவேடர்கள் மறநது வைத்துவிட்டுப் போய்விட்ட பாத்திரங்களிலிருந்த கள்ளைக் குடித்து விட்டுத் தான் இப்படி ஆடுகின்றீர்கள் போலும்! ஐயோ! பாவம்! மதுவின் மயக்கம், உங்கள் மதியையும் மயக்கிவிட்டது போலும்! சிறந்த பெருமை பெற்ற குடியில் பிறந்திருநதும, கள்ளைக் குடித்து மகாபாதகர்களாய் விட்டீர்களே! சீசீ! உங்கள் எதிரில் நிற்பதும் தகாது!"

இவ்வாறு அமமயில்களை மகாபாதகர்களாகக கருதி வெறுத்துரைத்த தலைவி, அவ்விடததை விட்டு வேகமாக நடந்து செல்கிறாள். சிறிது தூரம் சென்றதும், புன்னை மரம் ஒன்றின் அடியிலே - அம் மரத்தைத தழுவிப் படர்ந்து - காற்றில் அசைந்து ஆடிககொண் டிருப்பதொரு கொடியைத தலைவி காண்கிறாள். அக் கொடியின் இடையிடையே காணப்படும் இநதிரநீல நிறமுடைய 'கருவிளை'ப் பூக்கள்என்னும காக்கணம்பூக்கள், கண்ணபிரானது வண்ண மேனியை ஒத்தனவாகத் தலைவியின் அகத்திற்குத் தோன்றுகின்றன. அக்கொடி புன்னை மரத்தின் அடியைத் தழுவி நிற்பது போல், தனது ஆருயிர்க் காதலனைத் தான் தழுவி மகிழுங் காலம் எப்பொழுது வாய்க்குமோ எனும் ஏக்கம் தலைவிக்கு உண்டாகின்றது. உடனே, அவள் அக் கருவிளைப் பூக்களை நோக்கி முறையிடுகிறாள் :—

"மாதர் மனதிற்கு மகிழ்வூட்ட வேண்டிய பூக்களே! கண்ணபிரானது வண்ண மேனியைக் காட்டி எனது காதல் தீயை மேன்மேலும வளர்க்கிற கருவிளை மலர்களே!! உங்களது மென்மலர்த் தன்மை எங்கு சென்றது? காண்போரைக் களிப்பூட்டக் கூடிய உங்களதுகருணை ஒளிந்த இடமெங்கே? எனது காதலரின் பிரிவாற்றாத என்னை எரிககின்ற காதல் தீயோடு, நீங்களும் சேர்ந்துகொண்டு என்னை முற்றுமே எரித்துவிட எண்ணிக்கொண்டு விட்டீர்களோ? நெருங்கினால் குளிர்ந்திருப்பதும், நீங்கினால பெரிதும் எரிப்பதுமாகிய காதல் தீயை உடையவராகிய என் மனதை அடிமை கொண்ட எனது மன்னர், அருள் பொழியும் தமது மணிக் கரங்களால் என்னைக் கொல்ல மனமின்றி, எனது உடலை எரிக்கும் வேலையைத் தோட்டிகளாகிய உங்களிடம் ஒப்புவிதது விட்டாரோ? அவர் இட்ட கட்டளையை நிறைவேற்றுவதாக ஏற்றுககொண்ட கரிய 'கருவி

ளைக் கொலைஞர்களே! இதோ என்னுடலை உங்களிடம் ஒப்புவிக்கிறேன்! இதை இப்பொழுதே எரித்துவிடுங்கள்! எரித்துவிடுங்கள்!! ஐயோ! என்ன இது? எனது ஆருயிர்க் காதலர் ஆர்வத்தோடு என்னை அணைத்து இன்புறுவிக்கும் காலமும் என்றேனும் ஒருநாள் எனக்கு வாய்க்காமற் போகாது என்னும் எண்ணம், இன்னமும் என் மனத்தில் ஒட்டிக்கொண் டிருக்கிறதே! அப் பாழும் ஆசை ஒன்றேயல்லவா, எத்தகைய சித்திர வதைகளுக்கு உட்பட நேர்ந்தும் எனது உயிரை இவ்வுடலினின்றும் நீங்காதவாறு தடுத்து நிறுத்திக்கொண்டு விடுகின்றது! ஓ! கருவிளைக் கொலைஞர்களே! உங்களது அடிகளில் வீழ்ந்து வணங்குகின்றேன். எனது ஆசை என்றேனும் ஒருநாள் நிறைவேறக் கூடும் என்னும் நம்பிக்கை, இன்னும் என் உள்ளத்தினின்றும் ஒழிந்தபாடில்லை! அதன் பொருட்டேனும் என்மேல் கொஞ்சம் கருணை காட்டுங்கள்!"— என்று இரு விழிகளினின்றும் நீர் பெருகி வழியக் கூறி, கருவிளைக் கொடிகளின் கீழே தலைவி வீழ்ந்து வணங்குகிறாள்.

அந்தோ! நிலத்தில் விழுந்த இடத்திலுமா அவளை வேறு சில பாதகர்கள் துன்புறுத்த வேண்டும்! வணங்கி எழுந்த தலைவியின் கண்களின் முன், தரையில் படர்ந்திருந்ததொரு கொடியில் விளங்கிய கருநிறக் களாப்பழங்கள் சில கண்ணபிரானது வண்ணத்தைக் கொண்டு காட்சி யளிக்கின்றன. அழுதுகொண்டிருந்த தலைவி, களாப் பழங்களின் போலித்தன்மை கண்டோ மனத்துயர மிகுதியாலோ அவற்றை நோக்கிக் கலகலவென்று சிரிக்கிறாள்; சிரித்துப் பின்வருமாறு பேசுகிறாள்:—

"களவிற் சிறந்த களாப்பழங்களே! உங்களது திருட்டுத்திறமைமிக்க வியப்பூட்டக்கூடியதாக இருக்கிறது! முன்பு என் காதலர் வெண்ணெய் திருடினர்; தனக்கு உரிய காதலியைக் கவர்ந்து கொண்டு விட்டார்; என்து வளைகளைக் கழற்றிவிட்டார்; என் உள்ளத்தைத் தனக்கே உரியதாகச் செய்துகொண்டு விட்டார்; என் உடல் வளத்தையும் ஒழித்துவிட்டார்; என் உயிரையும் எடுத்துக்கொண்டுவிடச் சமயம் பார்த்துக்கொண்டிருக்கிறார். அத்தகைய கள்வர் பெருமானது கருமுகில் வண்ணத்தையும் நீங்கள் திருடிக்கொண்டுவிட்டீர்கள்! எனது சிந்தைக்கினிய செல்வ மன்னரின் நீல வண்ணத்தை நீங்கள் திருடிக்கொண்டுவிட்டால், அந்நிறத்தினாலேயே நீங்கள் சிறப்புற்று விடுவீர்களோ? ஈனக் கள்வர்களே! நிறத்திற்கு ஆசைப்பட்டுப் பழங்களுக்கு உரிய சிறப்பையும் இழந்தீர்களே! பலராலும் அலட்சியமாக மிதிக்கப்படும் உங்களைப் பார்க்கவும் எனக்கு மிக்க வெட்கமாக இருக்கிறது!"

இவ்வாறு நான்காவது பாதகர்களாகத் தோன்றிய அவற்றை இகழ்ந்த தலைவி, மறு பக்கம் திரும்பிப் பார்க்கிறாள். கம்பீரமாகக் காற்றில் அசைந்தாடும் காயாம்பூக்களின் கொடிகள் சில, தம்மிடம் வருமாறு தம் கைகளை நீட்டித் தன்னைக் கூப்பிடுவதாகத் தலைவியின் மனதிற்குத் தோன்றுகிறது; உடனே எழுந்து அவற்றின் அருகில் சென்று நின்று, அவற்றை உற்று நோக்குகிறாள். கண்ணபிரானுடைய இந்திர நீல வண்ணத்தைக் கொண்டனவாய்த் தலைவியின் காதல் தீயை வளர்க்கின்ற காயாம்பூக்கள், ஐம்பெரும் பாதங்களையும் ஐந்து மலர்க்கணைகளாகக் கொண்டு உலகத்தினரை வாட்டுகின்ற காம தேவனால் தன்னைக் கொல்வதற்காக அனுப்பப்பட்ட போர்வீரர்களைப் போன்று போர்க்கோலங் கொண்டு நிற்பவைபோல அவளது மனதிற்குத் தோன்றுகின்றன. தலைவனது பிரிவாற்றாத கொடுந்துயரம் அனுபவித்துக்கொண்டு இவ்வுலகில் வாழ்வதைவிட, இறந்து படுவது நலம் என்று தலைவி கருதுகின்றாள். ஆயினும், இன்னும் ஒரே ஒரு முறை தலைவனைக் கூடிக் களிக்கும் பேறுமட்டும் தனக்குக் கிடைத்துவிட்டால், தனது ஆவி உடலை விட்டுப் பிரியும்போது அமைதியோடும்

மகிழ்வோடும் பிரிந்து செல்லும் என்னும் எண்ணத்தினால், அவள் இன்னும் சிறிது காலம் அப்பேற்றை எதிர்பார்த்துக்கொண்டு இவ்வுலகில் தங்கியிருக்க விரும்புகின்றாள். அகத்தினின்றும் அகற்ற முடியாத அவ்வாசையினாலே, அவள் காயாம்பூக்களாகிய காமன் ஏவலரை நோக்கிப் பின் வருமாறு கூறுகின்றாள் :—

“காமதேவனால் ஏவப்பட்ட போர் வீரர்களே! தனக்குச் சமானமான வலியற்றவர்களையும் பேதை மாதர்களையும் எதிர்த்து நின்று போர் தொடுக்க, தருமவீரர்கள் மனம் இசையுமோ? உடல் வளத்தை இழந்து உள்ளச் செருக்கையும் இழந்து கொடுந்துயரால் வருந்துகின்ற என்மேல், சிறிதளவும் இரக்கமின்றிப் பகைமை கொண்டு எதிர்த்து நிற்கும் உங்கள் வீரமும் ஒரு வீரமாகுமோ? உங்களது பேடித் தன்மையைக் கண்டு, மற்ற மலர்கள் பரிகசித்துச் சிரியாவோ? இவ்வுலக வாழ்வில் கொண்டு விட்ட பாசத்தினாலே, நான் மரணத்திற்கு அஞ்சி நிற்கிறேன் என்று நினைத்துக்கொண்டு விட்டீர்களோ? சீசீ! என்னிடமும் அந்த அற்ப மாயை நெருங்க முடியுமோ? ‘துன்பங்களுக்குப் பின் இன்பம் உண்டு’ என்னும் நம்பிக்கையினாலே - ‘எனது உண்மைக்காதலின் உறுதி வீணாகிவிடாது’ என்னும் நிச்சயத்தினாலே - ‘இவ்வுடலை விட்டு என்னுயிர் பிரிவதன் முன்னர், எனது இன்னுயிர்த் தலைவா ஒரு முறையேனும் என்னிடம் வாராரோ’ என்னும் ஆசையினாலே - இன்னும் சிலகாலம் இங்கு தங்கியிருக்க விரும்புகிறேனே யன்றி வேறில்லை. இவ்வுலகத்திலேயே - பலரும் அருகிலிருந்து பார்த்துக் கொண்டிருக்கும் போதே - இவ்வுடலோடேயே - எனது ஆருயிர்த்தலைவர் என்னைத் தமது முகில்வண்ணத் திருமேனியுடன் இரண்டறக் கலந்து கொண்டு விடத் திருவுள்ளம் கொண்டாலும் கொண்டு விடுவாரன்றோ! எனது உறுதி குன்றாத உண்மைக் காதலுக்குத் தக்க பரிசு என்றேனும் ஒரு நாளில் கிடைத்தே தீரும் என்னும் நன்னம்பிக்கை எனக்கு இருக்கும்போது, உங்களைக் கண்டு நான் ஏன் அஞ்ச வேண்டும்? உங்களுக்கும் குயில்கள் மயில்கள் கருவிளைமலர்கள் களங்கனிகள் முதலிய மற்ற நாற் பெரும் பாதகர்களுக்கும் என் மனமறிய எத்தகைய துன்பமும் செய்யாதிருந்தும், என்னைப் பெரிதும் துன்புறுத்திய கருணையற்ற கொடியவர்களாகிய உங்களை இனிச் சும்மா விட்டு விடுவேனோ? மகாபாதகர்களைத் தக்கவாறு தண்டிப்பது நீதியேயாகுமன்றோ! எனது ஆருயிர்த் தலைவரோடு நான் சேர்ந்து கொண்டுவிட்ட பின்னர், உங்களால் விளையும் இன்பங்களைப் பிற்காலத்து மனிதர்கள் சிறிதும் மதியாது மிக்க அலட்சியமாகப் புறக்கணித்து நடந்து கொள்ளுமாறு செய்து விடுகிறேன் பாருங்கள்! எனது கொடிய சாபத்தின் பயனாக, எதிர்காலத் தமிழ் நாட்டிலே உங்களைக் கவனிப்போர் எவருமின்றி - உங்களது செருக்கையும் இன்பப் பெருக்கையும் இழந்து - பிற்காலத்து மனிதர்களால் நீங்கள் பெரிதும் அவமதிக்கப் படுவதைக் கண்டும், மதியாதாரிடையிலிருந்து மானம் இழக்க விரும்பாமல் மனித சஞ்சார மற்ற இடங்களிலே திருடர்களைப் போன்று நீங்கள் ஒளிந்து வாழ்வதைக் கண்டும், எனது இன்னுயிர்த் தலைவரோடு சேர்ந்துகொண்டு வைகுந்தமா நகரில் வீற்றிருக்கும்போது உங்களது இழிநிலையை எண்ணி எண்ணிச் சிரித்துக் கொண்டிருக்கப் போகின்றேன்!

காட்சி முடிந்துவிட்டது. அந்த தலைவி தன்னைத் துன்புறுத்திய விசித்திர ஐம்பெரும்பாதர்களது இன்றைய நிலையைக் குறித்து, தனது தலைவனோடு உல்லாசமாக உரையாடிக் கொண்டு அடிக்கடி சிரித்துக் கொண்டிருக்கும் காட்சியையும் பார்க்க விரும்புகின்ற வாசகர்களுக்கு, இப்பொழுதே வைகுந்தத்திற்குப் புறப்படக்கூடிய வைராக்கியம் இருக்கிறதா? அத்தகைய வை

ராக்கியம் இன்னும் உங்களுக்கு உண்டாகவில்லையானால், பத்திரிகை உலகத்துக்கு வந்து சேருங்கள்! இதுவரை உங்களைச் சிந்தனை உலகில் சஞ்சரிக்கச் செய்த தலைமகள் யாரென்பதை இன்னும் உங்களுக்குத் தெரிவிக்கவில்லையே! அவ்வன்னைதான் கண்டோரைக் காதல் வெள்ளத்தில் ஆழ்த்தக் கூடிய கண்ணபிரானுக்குப் பாமாலை பாடிக்கொடுத்தும் பூமாலை சூடிக்கொடுத்தும் மகிழ்ந்திருந்து கடைசியில அப்பெருமானோடு இரண்டறக் கலந்து இன்புற்றிருக்கும் ஸ்ரீ வில்லிபுத்தூர் ஆண்டாள்!

"பைம்பொழில் வாழ் குயில்காள்!
மயில்காள்! ஒண் கருவிளைகாள்!
வம்பக் களங்கனிகாள்!
வண்ணப் பூவை நறுமலர்காள!
ஐம்பெரும் பாதகர்காள்!
அணி மாலிருஞ்சோலை நின்ற
எம்பெருமானுடைய நிறம்
உஙகளுக்கு என செய்வதே?"

இப்பாட்டில் புகுந்து கொண்டிருந்த விசித்திர பஞ்சமாபாதகர்களைக் கண்டு பிடித்து பகிரங்கப் படுத்துகிற வேலை, ஆராய்ச்சித் துறையில் சிறிதும் திறமை இல்லாத சிறியேனுக்குக் கிடைத்ததை நினைக்க நினைக்க எனக்கே சிரிப்பு உண்டாகிறது! 'எனது அதிகப் பிரசங்கித்தன'த்தை வாசகர்கள் மன்னித்து விடுவார்களாக.

# கீதையின் போதனை

[திரு. ஏ. முத்தையா, எம். ஏ.]

(*Lecturer, Pachaiyappa's College*)

"எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே"

கீதை இந்துமத நூல்களில் தலையாயது; இந்துமதக் கொள்கைகளைச் செவ்வனே கூறுவது; சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல் முதலிய அணிகள் செறிந்தது; தெய்வ வாக்கெனப் போற்றப்படுவது; இந்துக்களின் பைபிள் எனத்தக்க பெருமையையுடையது; இந்துக்களேயன்றி ஏனைய மதத்தினரும், மற்ற தேயத்தினரும் கூடத் தத்தம் மொழியில் மொழிபெயர்த்து, தலையாய நூலெனத் தாழ்ம் படிக்கும் திறத்தது.

இத்தகைய நூலின் போதனை என்ன என்றாராய்தல் மிக்க பயனுடைத்து. நிகழ்காலப் போக்குக் கேற்றன எவை அந்நூலில் காணக்கிடக்கின்றனவென்பதை ஆராயின் அநேக விஷயங்கள் புலனாகின்றன.

உலகில் பற்பல தேயத்தினரும், பல வேறு வகைப்பட்ட காலத்திலும், பல் கோடி உயிர்களும் எங்ஙனம் நலனுற்று செம்மையின் வாழமுடியும் என்பதைப் பற்றிப் பெரிதும் ஆராய்ந்து வந்திருக்கின்றனர். இவ்வுலகில் வாழ்க்கைமுறைகளைச் செவ்வனே அமைப்பின் இவ்வுலகையே பெரிய இன்ப வீடாக்கலாம் என்றெண்ணுவோர் ஒரு சாரார்; "இன்பத்தை இவ்வுலகில் துய்த்தலரிது உலகத்தை நீத்தலே உறுதியடையும்நெறி" என்பாரொரு சிலர்; பொருளாதார நிலையை அமைக்கும் முறையில் தான் இன்பதுன்ப வேறுபாடுகளுண்டாகின்றன என உலகறியக் கூறுவோர் ஒரு கூட்டத்தார். மேல் நாடுகளில் சில காலமாக உலகினர் எல்லாரும் இன்புற்றிருக்கத்தக்க ஏற்பாடுகள் செய்யமுடியும் என்ற தீர்மானத்துடன் Communism, State socialism முதலிய பல வேறுபட்ட பொருளாதார ஏற்பாடுகளையுடைய அரசியல் முறைகளை ரஷ்யா

முதலிய பலவேறு நாடுகளிலும் புகுத்தி வருகின்றனர்.

உலகின் அறிவுப்போக்கு இவ்வண்ணமிருப்ப, நம் நாட்டினர் எல்லாரும் இன்புற்றிருக்க வேண்டியதற்கேற்ற ஏற்பாடு எது என்று கூறியுள்ளனரென ஆராயின் "சகல மக்களின சந்தோஷம்" என்னும் அஸ்திவாரத்தின் மேற் கட்டப்பட்ட கலங்கரை விளக்கம் கீதை தானென்பது எளிதில் தெரிகிறது. சம்சார சாகரமாகிய கடலில் கரைகாணாது தவிக்கும கப்பல்கள் பல. அவையே பலகோடி உயிர்களும் அவ்வுயிர்களாகிய கப்பல்களைத் தமமிட மழைதது, கடவுளாகிய துறைமுகத்தில் கலக்கமற்றிருக்க உதவுவது கீதைக் கலங்கரை விளக்கமே. கடவுளாகிய துறைமுகத்தில் உயிர்களை வருத்தும் துக்க அலைகள் கிடையவே கிடையா. அங்கே கடவுளின் கருணையாம் இளந் தென்றல் கழிபேருவகையை அளிக்கிறது.

நவீன அறிவுப் போக்கின்படி பொருள் இன்பம் என்னுமிரண்டினும் சமத்துவத்தாண்டவம் வேண்டுமென முயற்சி செய்வதில் ஏற்படும் இன்னல்கள் பற்பல. ஒரோவழி எல்லா மக்களிடையேயும் பொருளில் சமத்துவ மேற்படுத்தினும் இன்ப நுகர்ச்சியில் சமத்துவ மேற்படுததுவது அரிதினுமரிய காரியமாகும். வெளிப் பொருள்களை நுகர்வதில் சமத்துவ மேற்படின் உயிரின் இன்ப உணர்வும் சமமாகுமெனக் கூறல் முற்றும் சரியல்ல.

மிகப் பெரும் முயற்சி செய்து, பலவேறு கஷ்டங்களிடையே நிறுவப்படும் "இன்ப சமூகங்கள் இவ்வுலகில் நிலையற்றவையாகின்றன.* †அருமைப் பொருள்கள் அழிகின்றன. ஐம்புல நுகர்ச்சியால் அடையும் பலன்கள் அழியும் தன்மையவான புறப்பொருள்களிடமிருந்தே பிணிமூப்புச் சாககாடாகிய மாளா வருத்தப் பெருந்தீ மக்களை வாட்டுகின்றது. ஒரு பகுப்பினர் இன்புறின் மற்றப் பகுப்பினர் துன்புறுகின்றனர். உலகப் போர் என்னும் வெடி குண்டு உச்சிக்குமேல் தொங்குகிறது.

இந்த உலகமானது தோன்றி நின்று அழியும் இயல் புடையது. இவ்வுலகிலுள்ள பொருள்க ளெல்லாம நிலையற்றவை. இதை உணராது உலக இன்பத்தைத் தேடித்திரிநது எய்தல் அறிவற்ற செயல். அது கானல்நீரை வான் நீரென மான் தேடுதலை யொக்கும். இவ்வுலகில் எத்துணை முயற்சிசெயினும பெறக் கூடியது சிற்றின்பமே. சாயாரூபமான இவ்வவனியில் நுகரக் கூடிய இன்பம் எங்ஙனம் பெருமையுடைத்தாகும்? மக்களிடையே இவ்வுலகின்கண்ணே இன்பசமூகம் ஏற்படுத்த வேண்டுமென முயலுதல் பயனற்றது. உடல் நலத்தையே உறுதிசெய்ய முன் வருவது இம்முயற்சி. ஐம்புலன்களால் ஒரோவழி அனுபவிக்கும் இன்பத்தை ஒரு சிறிதுதான் கொண்டது இன்னற் பொதி. ஆதலால் பேரின்பப் பெரும் வீடடைதல் எவ்வாறு எனக் கூறுவது தான் கீதை யென்னும் கீர்த்திக் கிரந்தம். உயிர் உடல் என்னும் இரண்டில் பின்னதின் இன்பத்தை இலக்காகக் கொண்டனர் மேல நாட்டு மேதாவிகள். நம் நாட்டினரோ உயிரின் நலனே நாடற்பாற்றென நாளும் தேடினர். அம்முயற்சியின் பயனே கீதை. கீதை கூறும் "இன்ப சமூகம்" இன்பமய மான உயிர்களால், பற்றற்றுக் கட்டறு பட்ட உயிர்களால் ஆக்கப்பட்டது.

அவ்வின்ப சமூகத்தில் இனனல் கிடையவே கிடையாது. எல்லா உயிரும் ஒன்றே என்றஉணர்வு ஓங்கி நிற்கின்றது. *"ஆன்மா எல்லாவற்றிலும் உளது. எல்லாம் ஆத்மாவில் உண்டு" என்று உணர்வாரே அச்சமூக உறுப்பினர். வாழ்க்கையோ கடவுள் மயமான சமான வாழ்க்கை.† ஞானமே உணவு. எல்லா உயிர்களும் அஞ்ஞான இருளை விட்டுக் கடவுளின் பேரொளியை அறு

* Chap. II 13, 14.
† Chap. 16—8,

* Chap 6—29.
† Chap. 18—21. Chap. 4—10,

பவிக்கின்றன. இருவினை ஒப்பு உண்டாகிறது. புண்ணிய பாவம் அவர்களைக கட்டுப்படுத்துவ தில்லை. சாதாரண நீதி நெறிகள அவர்களை வசபபடுதத முடியாது. கர்மபநதம் கழன்று விடுகிறது. துன்ப உணர்ச்சியும அவர்கட்குக கிடையாது. *துன்ப காரணர்களாகவும் அவர்கள் இருப்பதில்லை. எல்லோரையும் சமத்துவ புததியுடன் நோக்குபவர்கள் அவர்களே ; ஏனை உயிர்களும் உய்ய வேண்டுமென உழைப்பவர்களும் அவர்களே. சாதிப்பிணக்குகள் அங்கு கிடையா. சமயப் பிணிகள் அவர்களை அணுகா. ஆத்மதரிசனம் அவர்கட்குச் சித்திக்கின்றது.

கீதையின் இன்பசமூக அங்கததினர் அடையும் ஆனநதமோ அளவற்றது. உன்மத்தன் கனவு கண்டால் உணர்வின் மாததிரமிருக்குமே யன்றி உரைக்க முடியாத வாறுபோல, அனுபவித்தாரே அதன் பெருமையை அறிய முடியும். அவர்களெல்லோரும் அளப்பில் புகழ் வாய்ந்தவர்கள். இன்பம் அவர்களுடைய சொந்த ஆஸ்தியாக இருக்கின்றது. மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்புலன்களாலும் மகளிரிடத்தே சிற்றின்பம் நுகருகின்றிலர். பேரானந்தப் பெருங் கடலிடையே ஐம்புலன்களாகிய பாத்திரங்களால் இன்பத்தை முகந்து உண்டு செம்மாந்திருப்பர். "நாமார்க்கும் குடியல்லோம்" என்பது அவர்கள் வீரமொழி. கடவுளின் பகுபபின் ஒரு கூறே ஒவ்வொரு உயிரும் என உணர்வார் அப்பெரியார். இநத நிலையில் அவர்கள் பூரண சுயேச்சையை அடைந்தவர்களாக ஆகின்றனர். ஏனெனில் முற்கூறியபடி எக்கருமஞ் செய்தாலும், ஏதவத்தைப் பட்டாலும் அவைகளின் பலனை சுக துக்கங்கட்கு அப்பாற் பட்டவாகளாக அவர்கள் விளங்குகின்றார்கள். தற்போதம் இழந்த பெரியார்கள் அவர்கள். அழியாப் பெரும் வஸ்துவான கடவுளிடமிருநது தான் அவர்கள் இன்பமெல்லாம் அடைகின்றனர். அழியும பொருள்களான உலகப பொருள்களில் அவர்கள் மனம ஈடுபடாததால் அவர்கள் துனப நுகருவதில்லை ; இலவற்றை உளவெனக் கொண்டு மயங்குவதில்லை. எலலா இன்பத்தையும நுகருவது உயிரே. உள நெகிழ்ச்சி தரும இவ்வின்பம் சாலச் சிறநதது ; அளவற்றது ; அழியாதது. அகப்பொரு ளின்பத்தின் அளவு கடந்த நிலையே, அவ்வுயிர்கள் பெறும் பேறாகும்.

* Chap. 12—15.

இப்படிப்பட்ட இன்ப சமூகம் மேல நாட்டாரின் இன்ப சமூகத்தை விட எவ்வளவோ சிறந்தது என்பது முற்போநத ஆராய்ச்சியால் தெள்ளென அறியலாகும். அவ்வின்ப சமூக அஙகததினராக வேண்டின் கீழ்க் கண்ட மூன்று வழிகளில் ஒன்று தானும் சாலும். அவை தாம்,

(1) ஞான மார்க்கம். (2) பக்தி மார்க்கம். (3) கர்ம மார்க்கம்.

## 1. ஞான மார்க்கம்

பொருள்களைத் துருவி ஆராயும் வழியில் அறிவைச் செலுத்தினல் பொருள்களின் தன்மை முதலியவற்றை அறியலாம. புறப்பொருள்களிலும் நிலையற்ற பொருள்களிலும் ஆராய்ச்சி நிகழ்த்திப் பெறும் அறிவு விஞ்ஞானமாகும். (Scientific knowledge) உண்மையின்கூறுகளை முழு உண்மையென மயஙகுவதுதவறு.* ஆத்மதரிசனம்கடவுள் தரிசனம் முதலியன செய்வதற்கு உயிரின்போக்கைப் பெரும் பாலும் மாற்ற வேண்டி வருகிறது. அர்ஜ்ஜுனன் புறக்கண்ணல் கண்ணனின் விஸ்வரூபத்தைக் காணவில்லை. அறிவாம் அகக் கண் திறந்த அப்போது தான் அனைத்தையும் பார்க்க முடியும்.† காமக் குரோதாதிகளை அடக்கல் வேண்டும்.‡ அறிவுக்குப் பயிற்சி நன்கு கொடுக்க வேண்டும். உலகப் பழக்க வழக்கங்களை யெல்

* Chap. 18—20 to 22.
† Chap. 4—39.
‡ Chap. 2—44.

லாம் ஞானக் கண் கொண்டு பார்க்க வேண்டும்.

மனதுக்குப் பயிற்சி உண்டாவதற்காகவே யோகம் செய்ய வேண்டி இருக்கிறது. அதனால் மனம் சுத்தியடைகிறது. உடல் உணர் வெல்லாம் தூயனவாகிக் கடவுளுக்கு வாசயோக்யமான வீடாகின்றன. உலகின் பலவேறு வகைப்பட்ட இன்பப்பொருள்களிடமும் செல்லாதவாறு மனதைத் தடுப்பது யோகம். உண்மைப் பொருளை உணர வழி காட்டுவதும் அதுவே.

உண்மையின் தரிசனம் பெற மனநிம்மதிவேண்டும். உண்மையை ஒருவன் பெறின் எந்நாளும் இன்பமே. வாழ்க்கையின் நலன் கடவுளின் கலியாண குணங்களில் ஆழ்தலல்லால் வேறல்ல. உண்மையை அறிய வேண்டுமெனின் கடவுளின் அடியில் நம இதய கமலத்தைச் சாத்தி வழிபட வேண்டும்.*

உண்மையை அறியின் எல்லா உயிர்களும் முடிவில் ஒன்றே என்ற உணர்வு உண்டாகின்றது. ஒரே இடத்தில் தோன்றி, ஒரே இடத்தில் அடங்குவன பலகோடி உயிர்களும் என்ற அறிவு விளக்க முண்டாகின்றது. குறுகிய நோக்கக் கொள்கைகள் வலியிழக்கின்றன. உண்மை யுணர்ச்சி உண்டானதும் புலன்கள்அழிகின்றன. "தான்" "தனது" என்ற அகங்கார மமகாரங்கள் அழிகின்றன.† எஞ்சி நிற்பது உயிர் அநுபவிக்க வேண்டிய அளப்பரும் இன்பந்தான்.

## 2. பக்தி மார்க்கம்

ஒருவஸ்துவின் மேல் உண்டாகும் உளநெகிழ்ச்சியைப் பலர் பல பெயரா லழைப்பர். தனக்குக் கீழ்ப்பட்டாரிடத்தில் காட்டின் கருணை எனவும், சமப்பட்டாரிடத்தில் காட்டின் அன்பு எனவும், கடவுளிடங் காட்டின் பக்தி எனவும்கூறுப. கடவுளிடம் பக்தி யுற்றோர் மற்ற எல்லா வற்றையும் மறப்பர். அளவுகடந்த ஆவமே பக்தி. அப்பக்தி பயத்தினால் உண்டாவதல்ல. கடவுள் கருணை மயம. தீனதயாளு. ஒருயிர் கடவுளிடமே எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்யின் உறுதி எய்து மென்பதில் ஐயமுண்டோ? கீதையில்* "என்னிடம் மனதை நிலை நிறுத்து; என்னுள் உன் உணர்வைப்புகுத்து; அதன்பின் என்னுடனேயே இருப்பாய்" என்று கூறப்பட்டு இருக்கிறது. அதுவே பக்தி மார்க்கத்தின் சக்தியாகும.

பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டாருக்குத் தனக்கென வேறொன்று கிடையாது.† நினைப்பது, பூசிப்பது, போஷிப்பது எல்லாம் அபபராபர வஸ்துவையே. தற்போதம்போய் கடவுட்போதம வந்தடைகின்றது. அப்போது எக்காரியம் செய்யினும் அதன் பலன் அவர்களை வாதிக்காது. அப்பக்தி மார்க்கத்தினர் கடவுளையே சிந்திக்கின்றனர். உயிரின் உணர்வு அதிகரிக்கின்றது. ஆத்ம திருப்தி பெருகுகின்றது.‡

பலவேறு வகைப்பட்ட கடவுளின் முகூர்த்தங்களும் ஒரே கடவுளையே குறிக்கின்றன. §"யாதொரு தெய்வங் கொண்டீர் அததெய்வமாகி ஆங்கே" அக்கடவுளே வந்து தோன்றுவன. பலவேறு உருவங்களும, வழிபடுவோரின் அறிவு பக்தி இவைகளின் பக்குவத்தைக் காட்டும அறிகுறிகளாக விளங்குகின்றன.

¶எல்லா வஸ்துகட்கும் அப்பாற்பட்டது கடவுள் எனக் கீதை கூறுகிறது. அதுவே பிரபஞ்ச சொரூபன் கடவுள் எனவும் கூறுகிறது.

எனவே, பக்திமான் தான் என்ற தன்மையை இழக்கின்றான். செய்வன எல்லாம் கடவுளுக்குத்தான். எனின் இன்ப நுகர்ச்சிக்கு அளவு முண்டோ?

* Chap. X 8 & 9.
† Chap. II—59.

* Chap. 12—8.
† Chap IX—28
‡ Chap XVIII—64 to 66.
§ Chap. VII 20—21.
¶ Chap. XVIII 73 also VI & XI.

### 3. கர்ம மார்க்கம்

நற்காரியம உயிருக்கு உறுதி பயக்கும். நல்ல மனிதன் உலகத்துடன் கூடி உலக நலனுக்கு உழைக்க வேண்டும்.*

நல்ல மனிதனுக்குத் தன்னை யடக்கும் தன்மை உண்டாகிறது. எக்காரியம் செய்தாலும் நற்பயனே அன்றே என வருந்தாதக வென்று கீதை கூறுநிற்கின்றது.† எக்காரியமும் செய்யாமல் இருப்பதைவிட, காரியஞ் செய்து எக்காரியத்திலும் பற்றற்று நிற்றல் நன்று. நற்கிருத்தியங்களில் செல்லும் ஆசை மிகச் சிறந்ததாகும். ‡ஆதலால் ஆசை என்பது முற்றிலும் கெட்டதல்ல. மோக்ஷத்துக்காக நாம முயன்று, முயற்சி பயனுற்ற நிலையை அடைதல் வேண்டும.

அந்த நிலையில் உயிர்கட்கு இதஞ் செய்ய முயலுதல முக்கியம். கீதை சுய நல ஆசையை ஒழிக்க வேண்டுமெனக் கூறுகிறதே யொழிய உலகின் சாதாரண காரியங்களை விட்டொழித்து விட வேண்டுமெனக் கூறவில்லை.

எந்த நல்ல காரியத்தையும் தனக்கெனச் செய்யலாகாது. நிற்பினும் நடப்பினும் கிடப்பினும, கடவுளது அச செய்கை என உணரவேண்டும. அந்த நிலையில் அளவிலின்பம துய்க்கச் சௌகரியம் உண்டாகின்றது.

எனவே, இதுகாறும் கூறிய கீதையின் இன்ப சமூகம் அளப்பரும பெருமையுடையது; இன்பமானது; இளமையானது ; இனனலில்லது ; அழிவில்லது ; ஒழிவிலலது. அசசமூகத்தின முடியாப் பெரும் இன்பமே இனபம என அறிநதாம.

அப்படிப்பட்ட சமூகததைச் சேர வேண்டுமென விரும்புவார் முதலில "நிலையற்ற உலக சமூகவின்பம்' குறைபாடுடைய தென உணரவேண்டும். கீதையின் இன்ப சமூகமே எநநாளும் மேலானதென உறுதியுடன் கடைப்பிடித்து நிற்றல்வேண்டும். அவ்வுறுதி பெற்றதும, மேற்கூறிய (1) ஞானமார்க்கம் (2) பக்தி மார்க்கம் (3) கர்மமார்க்கம் என்ற மூன்று வழியில் எவ்வழியை அநுசரித்தேனும் அவ்வளவிலின்பப் பெருவானில் செம்மாந்து மகிழ்ந்து திரியலாம்.

எனவே, இவ்வுலகில் பெருஞ் சுகம் பெற முயலுவது வீண். உண்மையின்பம் இன்னது, இத்தன்மையது, இப்படிப் பெறுவது என்னும் இவ்விஷயங்களைப் போதிப்பதே கீதையாகும்.

* Chap V 25 Chap. XII 4.
† Chap. VI 46. VIII 27.
‡ Chap. VII 11.

---

# சுந்தர சுலோசனு

[திரு. தி. ர. சாரங்கபாணி, எம். ஏ.]

(தொடர்ச்சி)

"அப்பா சண்முகம்! நிலையில்லா உலகினர், தாமெனும் ஆணவக் கேணியில் ஆழ்ந்து, பிறப் பிறப்பெனும் கொடுஞ் சாகரத்தில் சுழன்று சுழன்று அல்லலுறூஉம் பேதை மக்கள், அறியாமையில் அழுந்தித் தம்மையுணருந்திறனற்று மயங்கிய சிற்றறிவுக்குத் தன்னையுணர அவயவங்களையும் உருவ வகுப்பையுமீந்த இறைவனருளை யோருந் திறனற்றப் புல்லியர்கள், நான் எனது எனுந் தொடர்புகளை விட்டு இயற்கையில் இறைவனெழிலைக்கண்டுருகிப் பேரின்பமெய்திடக் கனவிலுங் கருதாக் கல்லாக் கயவர்கள், பக்திநிலையின் மாண்பையும் கருமநெறியின் இயல்பையும், நீ இது காலை எய்தியுள்ள ஞான நிலையின் தூய்மையையும் உணரும் ஆற்றலற்ற அறிவிலிகள், உன்னை, என் மெய்ச்சீடனுகிய ஈடெடுப்பற்ற உன்னை, கள்ளனென்றுங் குடியனென்றும், வேசிய ருறவுடையா

னெனவும், கடன் வாங்குங் கயவனென் றும் பழித்தலான், நீ அப்புன் மொழி களை எண்ணி எண்ணி ஏங்குதல் அறி யாமையே யாகும்.''

''சுவாமி அவர்களுடைய பழிமொழி களுக்கு யான் சிறிதும் வருநதுகின் றேன் அல்லே. ஆனால் இன்னமும என் அகத்தைக் கொண்ட ஆண்டவன் தன் னுருவை எனக்குக் காட்டா தொளிப் பதே எனக்குப் பெரும் ஏக்கததை யளிக்கின்றது. ஆ! முருக!''

''அப்பா வருநதாதே. நின்னைக் கண் ணுறுந்தோறுங் கண்ணுறுநதோறும் என் மனமும் மாறுகின்றது. சரீர சம பந்தமாக நிகழும் இழிய நிகழ்ச்சிகளும் என்னை விட்டகன்று எனக்குள் ஓர் இன்ப உணர்ச்சி நிகழ்கின்றது. மெசசி னேன் உன் மெய்ப்பக்தியின்மாண்பை. யான் என்னுடைய தனிப் பூசைக்குச் செல்லல் வேண்டும். நின் பாடலைக் கேட்டு மனமுருகி உன்னைத் தேற் றவே போகும்வழியில் ாண்டுவந்தேன். சண்முகம்! நீசிறிதுங்கவலையுறுதே.உல கம் புகழும் பெரும்பேறெய்தும் காலம் நின்னையணுகி விட்டது. நான் சென்று வருகிறேன்.''

''சுவாமிகளே அவ்வாறே செய்யுங் கள்'' என்று சுவாமிகளை அனுப்பிவிட் டுச் சண்முகசுந்தரம ஆழ்ந்த சிநதனையி லாழ்ந்தான்.

---

## இதழ் 9.

### தயாநந்தலால் யார் ?

உரிமையுறையுளில் காவலாளனாக இருந்து தன் செயலைக் கவனித்து, உரி மையுறையுள்சாலை 60-வதுஎண்ணுள்ள இல்லத்தில் இருந்த ''சுவாமி'' என் றழைக்கப்பட்டஒருவருக்கு, அவைகளை இயம்பிய முருகேசனுடைய செயல் ஜய குமாரனுக்குப் பெரும் ஆச்சரியத் தையே அளித்தனென முன்னமேயே கூறினோம். சென்னையை யடைந்த இர வெல்லாம் ஜயகுமாரன் தன் அறை யில் சாய்வுநாற்காலியி லமர்ந்து ஆழ்ந்த சிந்தனையி லிருந்தான். தயாநந்தலால் யாரென்ற வினு பன்முறை அவன் அகத்திலெழுநதது. ''சாரதா! அண்ணு ஒரு மோசககாரனிடம் மாட்டிக்கொண் டிருக்கிறார். காவியைத் தாங்கி உலகை ஏமாற்றித் திரியும் அப்பாதகனை - ஆ! சாரதா ! கொலை செய்திடினும் பாவ மாகாது. நாளைக்குப் பத்தாயிரம் ரூபா யை யான் அச்சண்டாளனுக் களித்தி டின், அண்ணுவை மீண்டும் மீட்டுவிட லாகும'' என்று மோகனசுந்தரம் சார தாவினிடம் இயம்பிய மொழிகள் அவ னுடைய அகத்தெழுந்தன. மோகன சுநதரததைக் கள்வனுக்கியவனும், சண் முகசுந்தரத்தைக் கடனாளியாக்கி வீட் டைத் துறந்து ஓடுமாறு செய்தவனும், யார் என்று ஜயகுமாரன் தான் கண்டு பிடிததல் வேண்டும என்க் கருதினான். இடையில் தயாநந்தலால் முருகேசனைக் கொண்டு தன்னுடைய செயல்களை யெல்லாங் கவனித்துவரக் காரணமிருத் தல் வேண்டுமென அவன்உன்னினான். தயாநந்தலாலுக்கும், மோகனசுந்தரத் தால் இழித்துரைக்கப்பட்ட காவி யணிந்த கபடதாரிக்கும் சம்பந்த மென்னவென்று எண்ணினான். சத்திய நாதன் கூறியதற்கிணங்க சென்ற இரவு உரிமையுறையுள் சாலை 60-வது எண் ணுள்ள இல்லத்திலிருந்து சென்னை நோக்கிச்சென்ற6266-வதுஎண்ணுள்ள மோட்டார் வண்டி யாருடையதெனக் கண்டறிதல்வேண்டும் என்று ஜயகுமா ரன் திடங்கொண்டான். இவ்வாறு எண் ணிக்கொண் டிருக்கையில் '' சென்னை யில் தயாநநதலால் என்னும் பெரிய மார்வாடியிடத்தில் அவருடைய நற் சாக்ஷிப் பத்திரத்தைக் கண்டே நான் அவனை இங்குஅமர்த்திக்கொண்டேன்'' என்று முருகேசனைப்பற்றி சந்திரசேக ரப்பிரபு இயம்பிய மொழிகள் ஜய குமாரனுக்குப் பெருஞ் சந்தேகத்தை யளிததன. தயாநந்தலால் என்னும் பெயரையுடைய பெரிய மார்வாடியைப் பற்றித் தான் அதுகாறுங் கேள்விப் படாதிருந்ததே அதற்கு முக்கியகாரண

மாகும். மேலும் மாரவாடிகளுள் லால் என்னும் பட்டம் கிடையாதாதலான் அவன் ஒரு மார்வாடியாக இருக்க வியலாதென்றும் அவன் எண்ணினுன். அடுத்தநாள் தான் எவ்வகையானும் தயாநந்தலாலின் உறைவிடத்தைக் கண்டுபிடித்தல் வேண்டுமென்றும், சத்திய நாதன் தம்புசெட்டி வீதி, 2220 எண்ணுள்ள இல்லத்தைக்கவனிக்கவேண்டுமென் றும் தீர்மானித்து "சத்தியநாத!" என்று விளித்தான்.

"ஐயா"

"நாளைக்குக் காலையில் நீ தம்பு செட்டி வீதியில் 2220 எண்ணுள்ள இல்லத்தைக் கவனித்து அவ்வில்லத்தில் உறைபவர்களைப்பற்றி விசாரித்துக்கொண்டு இங்குவா"

"அப்படியே யாகட்டும் ஐயா."

"சத்தியநாத! நீ மாறு வேடம் பூண்டே ஆங்குச் செல்லல் நன்று. மேலும், நாம் நம்விரோதியர்களைக் கவனிப்பது போலும் அவர்களும் நம்மை கவனித்துக் கொண்டிருக்கிறுர்கள். ஆகையால் நீ ஜாக்கிரதையாக அவர்களை ஏமாற்றிச் செல்லல்வேண்டும்."

"அதற்காக நீர் கவலைப்பட வேண்டாம். இப்பொழுதே நான் செல்கிறேன். ஆனுல் மீண்டும் நான் உம்மை எப்பொழுது காண்பது?"

"மாலை மூன்று மணிக்கு நீஇங்குவா. அதற்குள் நான் திரும்பி வந்துவிடுவேன் என்றையா."

"சத்தியநாதன் சென்றதும் ஜய குமாரன் நாற்காலியை விட்டெழுந்து ஓர் அறையுள் சென்றுன். சுமார் அரை மணி நேரங்கழித்து ஓர் அழகிய உருவம் அறையுள்ளிருந்து வெளிப் போந்தது. அவ்வுருவம் ஆங்கில முறையில் ஆடையணிந்திருந்தது. அழகிய அரை மீசையுடன் அதன்முகம் பொலிந்தது. தற்கால நாகரிகத் தடபுடலுக்கிணங்க பெரிய மூக்குக் கண்ணுடி அதன்முகத்திற்கு எழிலையளித்தது. கரத்தில் ஓர் அழகிய டெல்லி பிரம்பு விளங்கியது.

அறையினின்றும் வெளிப்போந்த உருவம் மாடியை விட்டுக் கீழேஇறங்கி மோட்டார் வண்டியிருந்த இடத்தை யண்மியது. ஆங்கு 5555 எண்ணுள்ள பெரிய வண்டி ஒருபுறமும், 3246 எண்ணுள்ள மற்ருெரு சிறுவண்டி மற்ருெரு மூலையிலுங் கிடந்தது. அவ்வுருவம் 3246 எண்ணுள்ள வண்டியிலேறிக் கொண்டு இல்லத்தை விட்டு வெளிச்சென்றது.

சுமார் அரை மணிநேரங் கழித்து தம்புச்செட்டி வீதியின் வழியாக மேலோதிய எண்ணுள்ள வண்டி சென்றது. அவ்வீதியில் 2220 எண்ணுள்ள இல்லத்திற் கெதிரில் ஒரு பிச்சைக்காரன் உட்கார்ந்து கொண்டு அவ்வில்லத்தைக் கவனித்துக்கொண்டிருந்தான். மோட்டாரைக் கண்டதும் அப்பிச்சைக்காரனின் முகம்மலர்ந்தது. வண்டியுள்ளிருந்த உருவம் அதைக் கவனியாதது போலும் நேராகச் சென்றது. ஆனுல் அதனுடைய கண்கள் குறிப்பிட்ட இல்லத்தின் மீது பாய்ந்தன. உடனே ஒரு பெரிய சப்தம் மோட்டாரிலிருந்தெழுந்தது. ஓடிநின்ற வண்டி அவ்வில்லத்துக்கு நேராக நின்றது. உள்ளிருந்த உருவம் வண்டியை விட்டுக் கீழிறங்கிப் பிச்சைக்காரன் இருந்த பக்கமாக வண்டியின் முன்பாக மூடியைத்திறந்து வண்டியின் இயந்திரத்தைக் கவனிப்பது போலும் இல்லத்தைக் கவனித்தது.

சச்சிதாநந்த சுவாமிகள் மடம் என்ற எழுத்துக்களை அவ்வில்லத்தின் மேற் கண்டதும் திடுக்கிட்டது. "காரணிந்த பாதகன்" என்று மோகனசுந்தரம் சாரதாவினிடம் இயம்பிய மொழிகள் அதனுடைய நினைவுக்கு வந்தன. (இவ்வுருவம் மறுவேடம் பூண்ட ஜயகுமாரனே யாகுமென அன்பர்கள் ஊகித்திருப்பார்கள்.) அக்கட்டடம் புதிய கட்டடமாகவே இருந்தது. நூற்றுக்கணக்காக ஏழைமக்கள், வறுமைப் பிணியால் வாடிவதங்கும் ஏழைமக்கள் கும்பல் கும்பலாக அம்மடத்தை நோக்கிவந்து கொண்டிருந்தார்கள். மோட்டார்வண்டி

நிற்பதையும்-ஐயகுமாரன், மாறுவேடம் பூண்ட ஐயகுமாரன் - வண்டியின் முன் மூடியைத் திறந்து கொண்டு இயந்திரத்தை நோண்டிக்கொண்டிருப்பதையுங் கண்ட ஏழைமக்களின் கூட்டம் நம நாட்டு மௌடீக வழக்கத்திற் கேற்ப வண்டியைச் சூழ்ந்துகொண்டு ஐயகுமாரனைக் கவனித்தன. அதே தருநதசமயமென ஐயகுமாரன் அம்மடத்தைப் பற்றி விசாரிக்க ஆரம்பித்தான். அதுகாலை அவ்வில்லத்திற் கெதிரில்அமர்ந்து இல்லத்தைக்கவனித்து நின்ற பிச்சைக்காரனும் ஐயகுமாரன் அருகில் வந்து நின்றான்.

"இந்த மடம் எத்தனை நாட்களாக இங்கிருக்கின்றது" என்று ஐயகுமாரன் இயந்தரத்தை நோண்டிக் கொண்டே வினவினன்.

ஆங்கில ஆடையணிந்து அழகாயிலங்கிய ஐயகுமாரன் தமிழில் பேசுவதைக் கேட்டதும் ஏழைகட்கு ஆச்சரியமும் ஆநந்தமும் ஒருங்கே எழுந்து அவன் கேட்ட வினக்களுக்கு உத்தரவளிக்க முன் வந்தனர்.

"ஒரு மாசமாக இருக்குது சாமி"

"ஒவ்வொருநாளும் உங்களுக்கு இங்கு அன்னமளிக்கப் படுகின்றதோ?"

"ஆமா சாமி"

"இதற்கு யார் பெரியவா ?"

"ஒரு சாமியார்சாமி ரொம்ப நல்லவரு ; எங்ககூடவே அவரும் உட்காந்து சாப்பிடுராரு ; ஒரு தவப்பனேபோலே இருக்குராரு. அவருக்குச் சாமி ரொம்ப ஆயுசு கொடுக்கனும். புண்ணியவாஞ் சாமி"

அது சமயம் இல்லத்துள்ளிருந்து ஒருவன் தன்னுடைய வண்டியை நோக்கி வருதலை ஐயகுமாரன் கவனித்தான். அதேசமயம் அவனருகில் நின்றிருந்த பிச்சைக்காரன் மெதுவாக "நடராஜன்" என்றான். அதனைச் செவியுற்றதும் ஐயகுமாரன் வண்டியின் மூடியை மூடித்தாளிட்டு வண்டியுள் ஏறினன். சிறிது நேரத்தில் வண்டியும் நகர்ந்தது.

தன்னருகில் "நடராஜன்" என மொழிந்தவன் இல்லத்தைக் கவனித்துக்கொண்டு எதிரில்லத்தில் அமர்ந்திருந்த பிச்சைக்காரனென்று ஐயகுமாரன் உணர்வான். அப்பிச்சைக்காரனே ஐயகுமாரனுடைய உண்மைப் பணியாளனுகிய சத்திய நாதனென அன்பர்கள் ஊகித்தறிந்திருப்பீர்கள். அவ்வில்லத்தைக்கவனியுமாறு ஐயகுமாரன்கூறியவுடன் பிச்சைக்காரனுடைய வேடம் பூண்டு சத்தியநாதன் சச்சிதானந்த சுவாமிகளின் மடத்தைக் கவனித்துக் கொண்டிருந்தான். சத்தியநாதன் இயம்பிய பெயர் ஐயகுமாரனுக்குப் பெருஞ் சந்தேகத்தை விளைவித்தது. உரிமையுறையுளில் காவலனுக தயாநந்தலாலால் ஏவப்பட்ட முருகேசன தான் காருருதாங்கி மோகனசுந்தரத்தின் அறையுள் கடிதங்களைக் கொண்டவன்று இரகசியமாகப் பேசிய ஆளின் பெயரும் நடராஜனெனச் சத்திய நாதன் தன்னிடத்தில் இயம்பிய மொழிகளை ஐயகுமாரன் மறந்தானல்லை. ஆனல் நடராஜனென இல்லத்திலிருந்து வெளிப்போந்த ஆளை சத்தியநாதன் அறிந்து கொண்டது ஐயகுமாரனுக்குச் சிறிது ஆச்சரியத்தையே யளித்தது. எனினும் பின்னர் அதனைப் பற்றி யோசித்துக் கொள்வோமென ஐயகுமாரன் கமிஷனர் ஆபிசுக்குச்சென்று, 6266எண்ணுள்ள மோட்டார் வண்டியாருடையதென விசாரிக்க, அது 2221 தம்புசெட்டி வீதியில் வதியும் தயாநந்தலால் என்னும் பெரிய மார்வாடியின் வண்டியெனவும், சுமார் மூன்று மாதங்களுக்கு முன்னேயே அவர் அந்தவண்டியை வாங்கினர் எனவும் அறிந்தான்.

அறிந்தவுடன் நேராகத் தனதில்லஞ் சென்று தான் பூண்ட வேடங்களைநது வேறோர் வேடம் பூண்டு தன்னுடைய வண்டியில்செல்லல் நன்றன்றென ஒரு நண்பருடைய வண்டியிலேறித் தம்பு செட்டி வீதியில் 2221ம எண்ணுள்ள இல்லத்தை யடைந்தான். அடுத்த இல்லமாகிய சுவாமிகள் மடத்தின் முன் ஏழை மக்கள் நிறைந்திருந்தனர். பிச்

சைக்காரன் வேடங்கொண் டங்கிருநத சத்திய நாதனையும் ஜயகுமாரன் காண வில்லை யாதலால் அவன் மடத்திற்குள் சென்றிருப்பான் எனத் தேர்ந்து2221 எண்ணுள்ள இல்லத்தை நோக்கினான். அதில தயாநந்தலால் மார்வாடி என் றொரு பெரிய பித்தளைத்தகடு பதிககப் பட்டிருந்தது. ஜயகுமாரன் வண்டியை விட்டிறங்கி உள் சென்றான். உள்ளே பெரிய ஹாலில் இரண்டு மின்சார விசி றிகள் ஓடிக் கொண்டிருந்தன. நான்கு குமாஸ்தாக்கள் நான்கு திண்டுகளில் தனித்தனியே அமர்நது கணக்குப் பதித்துக கொண்டிருந்தார்கள். இடை யில் ஒரு பெரியதிண்டு காலியாகவே இருநதது.

உட்சென்ற ஜயகுமாரனைக கண்ட துமம அமர்ந்திருந்த நால்வரில் ஒருவர் "வாங்க சார்! உங்களுக்கு என்ன வேண்டும்?" என வினவினார். ஜயகுமா ரன் புன்னகையுடன் "தயாநநதலாலை நான் சில நிமிடம் பார்த்துப் பேச வேண்டும" என்று கூறினான். உடனே அவர் "சார்! இப்பொழுது லால்ஜீ பூஜையிலிருப்பார். மூன்று மணிககு மேல்தான் இங்குவருவார்." என்றார்.

"காலையி லிங்கு எததனை மணி வரையிலிருப்பார்?"

"பதது மணிவரையில் சார்!"

"மாலையில்?"

"ஆறுமணி வரையில்...."

"சரி; அப்பொழுது நான் மாலைவந்து அவரைக் காண்கின்றேன். சென்று வ(

"அபபடியே சென்று வாருங்கள் சார்."

---

# பிறர் நம்மைக் கண்டவிதம்

## மார்க்கோபோலோ யாத்திரை

[திரு. சோமசுந்தர தேசிகர்]

II

மக்கள் படிம வழிபாட்டுககாரர்; அவர்களுள் பலர் பசுவை மேலான பிராணியென்று கொண்டு வழிபடுகின் றனர். அவர்கள் ஒருபோதும் மாட்டி றைச்சியை யுண்ணவு மாட்டார்கள்; எக்காரணத்தை முன்னிட்டும் பசுவைக கொல்லவுமாட்டார்கள். கோவியென் றொரு வகுப்பினர் வாழ்கின்றனர்; அவர்கள் பசுவைக் கொல்லாதபோதி லும் மாடடிறைசசி தின்பர்; இருநதா லும் ஒரு பசு தானே யிறக்குமாயின் அதனை யுண்பர். இந்நாட்டினர் மாட்டுச் சாணததினால் வீட்டின் தரையை மெழு குகின்றனர். நிற்க, பெரியோர் சிறி யோர், அரசன், தலைவ ரெல்லோரும் தரையிலேயே உட்காருகின்றனர்; அவர் கள் பூமியிலேயே பிறந்து பூமிக்கே மீண்டுஞ் செல்வதால் பூமியிலுட்காரு வதே கண்ணியமான செய்கையென்று கூறுகின்றனர். ஆகவே பூமிக்கு அதிக மரியாதை கொடாவிட்டாலும் அதனை யிகழ்தல் கூடாதென்பர்.

கோவி என்ற வகையினரைப் பற் றிக் கூறுமிடத்து, அவர்கள் என்ன கிடைப்பதானாலும் ஆரச் தோமையார்[1] அடக்கஞ் செய்யப்பட்டிருக்கிற விடத் துக்குச் செல்லவே மாட்டார்கள்; அவர் மாபாரில் ஒரு பட்டினத்தில் அடக்கஞ் செய்யப்பட்டிருக்கிறார்.[2] ஒரு கோவியை இருபது முப்பது பேராகச் சேர்ந்து பிடித்துக் கட்டிக் கொண்டாற் கூட, அவன் இயேசு நாதருடைய அபோஸ்தலரான அந்தத் தோமையார் அடக்கஞ்செய்யப்பட்ட விடத்தில் நிற்க

[1]St. Thomas.

[2]மயிலாப்பூரில் அடக்கஞ் செய்யப் பட்ட தாகக் கூறுவதுண்டு. மயிலாப்பூரின் கடற்க ரைப் பக்கம் அதனாலேயே சான்தோம் (San Thome) என்றுபேர் பெறும்.

மாட்டான். அந்த ஞானி கொல்லப்பட்டது அக் காலத்திருந்த மக்களாலான தால் அவருடைய செல்வாக்கு அவ்வளவுக்கு ஏறியிருக்கின்றது ; அவர் எவ்வாறு கொலையுண்டாரென்பதைக் கூறுவேன். இந்த நாட்டில் நெல்தான் விளைகிறது ; கோதுமை யென்பது தெரியவே தெரியாது. மற்றொரு வியக்கத்தக்க செய்தி சொல்லக்கூடியது குதிரைகளை உற்பத்தி செய்ய முடியாதென்பது ; எத்துணையோ தடவை இதனைச் செய்து பார்த்தும் இயலவில்லை. நல்ல பொலி குதிரையும் குட்டிபோடக்கூடிய பெண் குதிரையும் சேர்த்தும, அவைகட்குண்டாகும் குதிரைக் குட்டி ஏறி சவாரிசெய்ய முடியாத முட்டிக்கால் தட்டும் குட்டியாக இருக்கிறது.

நாட்டு மக்கள் போருக்குச் செல்லும்போது மேற்கவசங்களின்றி ஈட்டியும் கேடயமும கொண்டு செல்லுகின்றனர்; அவர்கள் தகுந்த வீரர்களுமன்று. விலங்கு பறவை உயிருள்ள பிராணி எதனையும கொலைசெய்ய மாட்டார்கள் ; தங்கட்காக அவ்வேலையைத் பிறரைக் கொண்டு செய்து கொள்கின்றனர். அவர்கள்—ஆடவரும பெண்டிரும்—நாடோறும் இரு வேளைகளிலும் நீராடுகின்றனர்.

நீராடாதவர்களை நம் நாட்டுப் பதரிகளைப்போல அவர்கள் கேவலமாக நினைக்கின்றனர். உணவு கொள்ளும் பொழுது அவர்கள் வலது கையாலேயே உணவு கொள்ளுகின்றனர் ; ஒருபொழுதும் உணவை இடது கையாற றொட மாட்டார். தூய காரியங்களெல்லாம் வலது கையாற் செய்யப்படுகின்றன ; வெளியிற் சென்று கால் கழுவுவது போன்ற தகாத காரியங்கட்கு இடது கையை யுபயோகிக்கின்றனர். இஃதே போன்று நீர்முதலாயின பருகுவதற்கும் அதற்கென வைத்துள்ள பாத்திரங்களினின்றும் பருகுகின்றனர் ; ஒவ்வொருவனுக்கும் ஒருகுவளையுண்டு. ஒருவர் பருகும் பாத்திரத்தை எடுத்து பிறனொருவன் பருகுவதில்லை. அவர்கள் பருகும் போதும் வாயில் வைத்து உறுஞ்சாமல் தூக்கி வாயில் விழும்படி குடிக்கின்றனர். எவரும எக்காரியத்தை முன்னிட்டும குவளையை வாயில் வைத்துப் பருகவும் மாட்டார்கள்;பிறனுககும் கொடுக்கவும் மாட்டார்கள். பிறரிடம் பாத்திரமில்லா விட்டால் அவர்கள் கையில் நீரை விடுவர் ; அவர்கள் அதனைப்பாத்திரமாகக்கொண்டு பருகுவர்.

அவர்கள் குற்றஞ் செய்தோரைத் தண்டிப்பதில் மிக்க கடுமையுடையவர்கள் ; சாராயம் குடிப்பதுமில்லை. அவர்கள் குடிகாரரையும் கப்பலேறித்தேசாந்தரஞ் செலலுபவரையும் புணையாக வொப்புவதில்லை. அவர்கள் தேசாந்தரஞ் செல்லுபவனை அயோக்கியனெனப் பாவிப்பதோடு அவன் கூறும் சாட்சியத்தையும் நம்பத்தகாத தென்கின்றனர். இருந்தாலும் காமுகனை விருப்பது பாவச்செயலன்றெனக்கருதுகின்றனர். கடனைப் பற்றப் பின்கண்ட விதிகளைக் கையாளுகின்றனர். கடன் பட்டவனைக் கடன்கொடுத்தவன் பலதடவைகடனைக் கொடுக்கும்படி கேட்டும் அவன் கொடாமலிருந்தால் அவனைக் கண்டபோது கடன் கொடுத்தவன் கடனாளியைச் சுற்றியொரு கோடு கிழித்துவிடுவானாயின் பின்னவன கடனுக்கு வழி செய்தாயினும் தகுந்த புணைகொடுத்தாயினும் கோட்டைவிட்டு அகலவேண்டும். அவ்வாறின்றிக் கடனாளி கோட்டைக் கடந்து செல்வானாயின் அவனை நெறியினின்றும் வழுவினவனைக் கருதி உயிர் வாங்குவர். மார்க்கோவாகிய நானே ஊர் திரும்பும் பயணத்தில் இவ்வாறு நடந்ததை நேரிற் கண்டேன். அந்நாட்டு அரசன் ஒரு வணிகனுக்குக் கொடுக்க வேண்டிய தொகை மிகுதியுமிருந்தது. வணிகன் பலதடவைகளில் மன்னவனையணுகியும் தொகை பெறவில்லை. ஒரு நாள் அவ்வரசன் குதிரை யிவர்ந்து செல்லக்கண்ட வணிகன் தனக்கு அமயம் வாய்த்ததெனக் கண்டு அரசனையும குதிரையையுஞ் சுற்றிக் கோடிட்டுவிட்டான். என் செய்வான் அரசன் ! அவ்வாணையைக் கடக்காமனின்று வணிகனுக்குச் சேரவேண்டிய தொகை முழு

வதையுஞ் செலுத்தினன். நாட்டினர் அம்மன்னவன் நீதி நெறியினின்றும் வழுவாதவனென்று கொண்டாடினர்.

அங்கு வெப்பம் மிகுதியாக விருப்பதைப் பார்க்க அதிசயமாக விருக்கும். அவ்விடத்தில் ஜூன் ஜூலை ஆகஸ்டு என்ற மூன்று மாதங்கள் மட்டுமே மழைபெய்கிறது. இந்த மூன்று மாதங்களிலும் மழைபெய்து பூமி தழைத்துக் காற்று குளிர்ச்சியாக அடிக்காவிட்டால் காய்சச லதிகமாகி யொருவருமே உயிர்வாழ முடியாது. முக லக்ஷண சாஸ்திர[1] மென்றொரு கலை அவர்கள் நன்கறிந்தது; அதனைக் கொண்டு மக்களுடைய குணஞ் செய்கைகளை வெகு விரைவாகக் கண்டு கொள்வர். அவர்கள் புள் விலங்கு முதலாயினவற்றைக் கண்டு அதன் பலனையும் நன்கு அறிவர்; உலகத்திலுள்ள மக்களில் சகுன சாஸ்திரங்களைக் கவனிப்பவர்களில் இவர்களே முதல்வராவர். ஒருவன் தெருவழியே போகும் போது பிறனொருவன் தும்மினால், அது நல்ல பலனைத் தருமெனக் கருதினால் மேலே செல்லுவான்; அன்றி வேறு வகையாக யிருப்பின் சற்றுதாமதிப்பன்; சில வேளை பயணத்தையே நிறுத்தி விடுவான். ஒருவனுக்கு ஒரு பிள்ளை பிறந்தவுடன், அதற்குச் சாதகம் எழுதுகின்றான்; சாதக மென்பது குழந்தை பிறந்த நாள், நாழி, மாதம், திதி இவைகளைக் குறிப்பது. இவ்வழக்கத்தை யவர்கள் கையாளக காரணம் அவர்கள் செய்யும் ஒவ்வொரு காரியமும் சோதிட சம்பந்தமானது; சூனியம், கருவித்தை, தொடுகுறிபோன்ற சில கெட்ட வழிகளைக் கையாளுபவர்; சிலர் சோதிடத்திலும் வல்லவர். ஆண் பிள்ளைகளுடைய ஒவ்வொரு குடும்பத்தினரும் பிள்ளைக்குப் பதின்மூன்று வயதானவுடன் வீட்டைவிட்டு வெளியேற்றி விடுவதோடு அவர்களைக் காப்பாற்றுவதுமில்லை. பிள்ளைகள் தாங்களே வியாபாரஞ் செய்து சம்பாதிக்கக்கூடியவர்களென்று பெற்றோர் கூறுகின்றனர். அதனால் அவர்கள் தம மக்களைச் சிறு திரவியத்துடன் அனுப்பி விடுகிறார்கள். அவர்கள் இஙகு மங்கு மலைநது ஏதோ வாணிபஞ் செய்கின்றனர். முத்துச் சலாபம குளிக்குங் காலத்தில் அங்கே சென்று தங்கள தகுதிக்கேற்ப நாலைந்து முத்துக்களை விலைக்குப் பெற்று வெப்பத்துக் கஞ்சி வீட்டினுள்ளேயே யிருக்கும பெருவணிகரிடம் சென்று 'இது இன்ன விலைக்கு வாங்கியது' இதற்குள்ள ஊதியந் தாருங்க'ளென்று பெறுகின்றனர். முதல் நீங்க மிகுதியுள்ளதற்கு உணவுப் பண்டங்கள் வாங்கித தம் தாயிடம் கொடுத்துச் சமைத் துண்கின்றனர். அவ்வாலிபர்கள் ஒருபோதும் குடுப்பத்திலுண்பதில்லை. இவ்வாறு வாணிபத்திற் பழகித் தேர்ந்து வணிகராகின்றனர்.

இந்த நாட்டிலும், இந்தியா முழுவதிலும் பறவைகளும் விலங்குகளும் நம் நாட்டிலுள்ளவை போலன்றி வேறுபட்டிருக்கின்றன. ஒரேவொருபறவை-காடை மாத்திரம் - ஒரே மாதிரியாக விருக்கின்றது. மற்றவை யெல்லாம் வேறு மாதிரிதான். அங்கே வெளவால் - இரவில் பறக்கும் இறகற்ற பிராணி - இருக்கின்றன; அவை நம் நாட்டு கோஷாக் (Goshawk) கைப் போன்றிருக்கின்றன. அவர்களுடைய கோஷாக பறவை காக்கையைப் போல் கறுமையாயிருப்பதோடு விரைவாகவும் உறுதியாகவும் பறக்கின்றன. மற்றொரு அதிசயமான சமாச்சாரம் என்னவென்றால் அவர்கள் குதிரைகளுக்குச் சமைதத சோறும் ஊனும மற்றும் பல சமைத்த உணவுகளும் ஆகாரமாகக் கொடுக்கின்றனர். இவைதான் குதிரைகள் இறப்பதற்குக் காரணம்.

அங்கே சில மடங்கள்[1] இருக்கின்றன; அவறறில் ஆண் தெய்வங்களும் பெண் தெய்வங்களுமுண்டு; அவற்றிற்குச் சிறுமிகள் புலர் அர்ப்பணஞ் செய்யப்படுகின்றனர். அவர்களை அவர்

[1]Art of Physiognomy.

[1]கோயில்.

களுடைய பெற்றோர் விரும்பிவழிபடும் தெய்வத்திற்கு அர்ப்பணம் செய்கின்றனர். ஒரு மடத்துத் தலைவர் கடவுளுக்கு விருந்தொன்று நடத்த விரும்புகிறபோது அக்கோயிலுக்கு அர்ப்பணஞ் செய்யப்பட்ட மங்கையரையழைத்துப் பாடும்படியும ஆடும்படியுஞ் செய்கின்றனர். அம்மங்கையர் கடவுளுக்கு எல்லாவற்றோடும் ஊணும் சமைத்துக்கொண்டு வருகின்றனர்; அதாவது அம்மங்கையர் பலவகை உருசியுள்ள கறிகளும் உணவுகளுஞ் சமைத்து, எடுத்துவந்து கடவுள் முன்னர் வைத்துவிட்டுச் சிறிது நேரம் அப்புறம் செல்கின்றனர்; இவர்கள் நமது நாட்டில் ஒரு பிரபு உண்ண எடுத்துக் கொள்ளும் நேரம் ஆடியும் பாடியுங் காலங் கழிக்கின்றனர். அந்தக் காலத்துக்குள் கடவுள் உணவுப் பொருள்களிலுள்ள சத்தை உண்டிருப்பாரென்று சொல்லி அவைகளை யெடுத்து வந்து பின்பு தாங்கள் சிரிப்பும் விளையாட்டுமாகக் காலஞ்செலுத்தி அருந்துகின்றனர். இதுமாதிரியாக ஆண்டுதோறும் பல தடவை தாங்கள் மணந்துகொள்ளும்வரை செய்கின்றனர்.

இவ்வாறு இம்மங்கையரைக் கூட்டுவதன் காரணம், கடவுள் தேவியோடு கோபமாகவிருந்து பேசாம லிருக்கின்றனரென்றும், அவர்கள் சமாதானமாக வாழாவிட்டால் ஊர் பாழாகுமென்றும், அவர்களுடைய வாழ்த்து உண்டாகாதென்றும் அவர்கள் கூறுகின்றனர். ஆதலால் கடவுள் முன் இம மங்கையரை நிர்வாணமாக வந்து ஆடிப் பாடும்படி ஏற்பாடு செய்யப்படுவதாக அவர்கள் கூறுகின்றனர். இந்தச சனங்கள் கடவுள் அடிக்கடி தேவியோடு உல்லாசமாக வாழ்வதாகக் கருதுகின்றனர்.

இந்நாட்டு ஜனங்கள் மெல்லிய பிரம்பாற் செய்த மஞ்சத்தில் உறங்குகின்றனர்; அவர்கள் மஞ்சத்தில் ஏறியதும், பக்கங்களிலுள்ள கயிற்றை இழுக்க, அம்மஞ்சம் மேட்டுவளைவரை செல்ல, அங்கே இரவிற் றூங்குகின்றனர்.[1] இதுமாதிரி செய்வது ஈக்கடி புழுக்கடி முதலியவற்றினின்றும் தம்மை நீக்கிக கொள்வதற்காகவென்று கூறுகின்றனர். இவவாறு பொதுமக்கள் செய்வதில்லை; பிரபுக்களும் பெருமக்களும் இவ்வாறு செய்ய, நாட்டு ஜனங்கள் தெருவிலுறங்குகின்றனர்.

நான் இதுவரை மாபார் நாட்டைப் பற்றிக் கூறினேன்; இனி மற்றொரு நாட்டிற் காணும் அதிசயங்களைப் பற்றிக் கூறுவேன.

## அர்ச். தோமையார் அடக்கஞ் செய்யப்பட்ட இடத்தைப்பற்றியும் அதிசயங்களைப்பற்றியும்

அபோஸ்தலரான அர்ச—தோமையார் மாபார் நாட்டிலே ஒரு சிற்றூரிலடககஞ் செய்யப்பட் டிருக்கின்றார்.[2] அவ்வூரில் அதிக குடிகளில்லை; அங்கே வியாபாரஞ் செய்யக்கூடிய பண்டங்கள் அதிகமாகக் கிடைப்பதில்லை யாகையால் வியாபாரிகள் செல்லுவதில்லை; அவ்விடத்திற்குச் செல்லவும் சரியான வழியுமில்லை. ஆயினும் கிறிஸ்தவரும் முகமதியரும் பரிசுதத ஸ்தலமாகக் கருதி யாத்திரை செல்லுகின்றனர். முகமதியரும அவர் தங்கள் மதத்தினரெனறு கூறி அவருக்கு அவரியன் (Avarian) என்ற பட்டமுஞ் சூட்டி வணங்குகின்றனர். அவரியன் என்ற சொலலுக்குக கடவுட்டன்மை யுடையவ னென்பது பொருள். அங்கு யாத்திரை செல்லுகின்ற கிறிஸ்தவர்கள் தோமையார் கொல்லப்பட்ட இடத்திலிருந்து சிறிது மண்ணைக் கொண்டுவருவர். மூன்று முறை நான்காமுறைச் சுரமடிப்பவர்கட்கு அந்த மண்ணைக் கரைத்துக் குடிக்கக் கொடுத்தால் கடவுள் கருணையாலும் தோமையார் கருணையாலும் அந்தச் சுரநோய் அறவே யொழிந்து

[1]இது இநநாட்டு வழக்கமன்று. ஒருகால் ஊஞ்சலாக இருந்தாலும் இருக்கலாம்.

[2]மயிலாப்பூரெனறு முன்னமே கூறப்பட்டது.

விடுகிறது. அந்த மண் சிவப்புநிறமுடையது.[1] 1288-ம ஆண்டு ஒரு அதிசய சம்பவம் நடநதது; அதனைக் கூறுவேன். அந்நாட்டிலிருந்த பிரபு ஒருவர் தனக்கு உரியாதன நெல்லை யெல்லாம் கோயிலைச் சுற்றியுள்ள கிறிஸ்தவர் வீடுகளில் நிறப்பி விட்டனர். அங்குள்ள கிறிஸ்தவர்களுககும் வநத யாத்திரிகளுக்கும் படுக்கவும் தங்கவும் இடமே யில்லை. ஜனங்கள் எவவளவு மன்றாடியும் அப்பிரபு நெற்சேர்களை யப்புறப்படுதத சம்மதிக்கவில்லை. ஒருநாளிரவு தோமையாரே ஒரு சாப்பாடு முள்ளுடன் அப்பிரபுவின் கனவிற்றோன்றி நெல்லை அப்புறப்படுத்தா விட்டால அநத முள்ளால் தொண்டையிற் குத்துவதாகப் பயமுறுத்தக் கனவு கண்டான். மறுநாட்காலையில நெல்லை யெல்லாம் அப்புறப் படுததியதோடு வந்தவர்களிடம் தான் இரவுகண்ட கனவையும் கூறினன். அதற்கு அங்கிருந்த கிறிஸ்தவரெல்லாம் பிரார்ததனை செலுத்தினர். இதுபோன்று கிறிஸ்தவர்களுள் முடம் கூன் நீங்கிய பல அதிசயங்கஞ

[1] இநத நாட்டிலேயே மண் செவ்வல் நிற முடையது.

# டி யே

## சென்குப்தா

**வ**ங்காள தேச பக்தர் சென்குப்தா இவ்வுலக வாழ்வு நீத்தமை குறிதது வருந்துகிறோம். சித்த ரஞ்சின தாஸ் மறைந்த நாள்தொட்டு, அவர் தம் அடிச்சுவட்டைப் பற்றித தேசத்தொண்டு செய்துவந்த பெருமை அறிஞர் சென் குப்தாவுக்கு உண்டு. தேசத்தின பொருட்டுச்சென்குப்தா மேற்கொண்ட தியாகம் அளவில் அடங்காதது. சென குப்தா சிறந்த பேர்பெற்ற பாரிஸ்டர். அவர் தேச சேவையில் ஈடுபடாது, தந் தொழிலிலேயே ஈடுபட்டிருப்பரேல், அவர் இலட்சாதிபதியாக வாழ்நது உயிர் துறந்திருப்பார் என்பதில் ஐயமில்லை. சென்குப்தாவின் பிற்கால வாழ்வு, சிறை வாழ்வாகவே முடிநதது உலகறிநத தொன்று. அவர் அடிககடி சிறைபுக நேர்நதமையே அவர்தம் அகால மரணத்துக்குக் காரணம் என்று கூறல் மிகையாகாது. தேசபந்துவுக்குப் பின்னைத் தேசபந்துவாக வங்கம் பெற்றிருநத சிங்கம் வீழ்ந்து பட்டது தேசத்தின் துரதிர்ஷ்டமேயாகும். சென்குப்தாவின் இன்னுயிர் ஆண்டவன் அருளொளியில் அமைதி பெற்று நிலவுவதாக.

## காங்கரஸ்

காங்கரஸ் ஒரு சிறநத அமைப்பு; தேசீய அமைப்பு. அதன் தற்போதைய நிலைமை இரங்கத்தக்கதாயிருக்கிறது. ஸ்ரீமான் ஆனே விடுத்த அறிக்கையைப்பற்றிப் பல திறவியாக்கியானங்கள் வெளி வநதுகொண்டிருக்கின்றன. தலைவர்கள் என்போர், வேதாநத சூத்திரங்களைப்போலப் பல திறப் பொருள்களைத் தரக்கூடிய அறிக்கைகளை விடுப்பது தவறு. அரசியல் தொடர்பு கொண்ட அறிக்கைகள் தெளிந்த - வெளிப்படையான-பொருள் கொண்டனவாக விருததல்வேண்டும். ஸ்ரீமான் ஆனே அறிக்கை மிகச் சுருங்கிய முறையில் வெளிவர நேர்ந்தமையான், அது பல்வாறு பொருள செய்யப்படுகிறது. காங்கரஸ் கூட்டத்தாருள் இருவகைக கருத்து உலவிவருதல் வெள்ளிடைமலை. ஒன்று சட்டசபையைத் துறப்பது; மற்றொன்று சட்டசபையைப் பற்றுவது. பின்னையது தலைவர்களிடை ஆக்கம்

பெற்று வருகிறது. தலைவர்களிடை ஆக்கம் பெற்று வரும் ஒன்று நாளடைவில் தேசத்தில் ஆக்கம் பெறுவதாகும். காங்கரஸைச் சட்ட மறுப்பில் ஈடுபடுத்த பல தலைவர்கள் விரும்புகிறார்களில்லை. காங்கரஸின் எதிர்கால நிலை சட்டசபை நுழைவதாகும் என்பதற்குப் பலவகை அறிகுறிகள் தோன்றி வருகின்றன. இந்நுட்பங் கண்டே காந்தியடிகள் காங்கரஸ் சார்பில் கடனாற்ற ஒருப்படாது தனிமுறையில் கடனாற்ற ஒருப்பட்டனர். தற்போது நேர்ந்து வரும் நிகழ்ச்சிகளை நோக்குழிக் காங்கரஸ் சட்டசபை நுழைவுக்கு ஆதரவளிப்பது நல்லது.

## காந்தியடிகள்

காந்தியடிகள் தற்போது விடுதலையடைந்திருக்கிறார். உண்ணாவிரதங் காரணமாக அடிகள் எர்வாடா சிறையினின்றும் ஸாஸூன் வைத்திய சாலைக்கு மாற்றப்பட்டார். தீண்டாமை விலக்குப் பிரசாரத்துக்குப் பழையபடி தமக்குப் போதிய வசதி அரசாங்கத்தாரால் கொடுக்கப் படவில்லை என்று அடிகள் சிறையில் உண்ணாவிரதந் துவங்கினார். அவ்விரதங் கண்டாதல் அரசாங்கத்தார் அடிகளின் வேண்டுதலுக்கு இணங்க மனங்கொண்டாரில்லை. அன்பர் ஆண்ட்ரூஸ் துரைமகனார் அடிகட்கும அரசாங்கத்துக்கும் இடையில் நின்று சமாதான முயற்சியில் தலைப்பட்டார். அடிகளின் வேண்டுதலுக்கு இணங்கினால் விண்ணிடிந்து விழுந்து விடும் என்று அரசாங்கம் கருதியது போலும். அடிகள் அடிக்கடி உண்ணாவிரதங்கொள்வதை அரசாங்கம் ஊன்றிக் கவனித்தல்வேண்டும். குறைபாட்டை உண்ணாவிரத வாயிலாக முறையிடுவதினுஞ் சிறந்த நாகரிக முறை வேறொன்றிருப்பதாகத் தெரியவில்லை. நுட்பம உணர்ந்து அரசாங்கம் கடமைப்பட்டு நடப்பது அழகாகும். லார்ட் வெல்லிங்டன் அரசாட்சி, அஹிம்சையில் சிறந்து விளங்கும் ஒருவரிடத்தில் நடந்துகொண்டு வரும் முறை ஒழுங்காகத் தோன்றவில்லை. தள்ளாத வயதில், பலமுறை சிறை புகுந்தும், பல முறை பட்டினி கிடந்தும் புறக்கரணங்களும அகக்கரணங்களும் வற்றிய ஒருவர், ஒரு சிறு காரணத்தை முன்னிட்டு உண்ணாவிரத மிருந்ததை அரசாங்கம் பார்த்துக் கொண்டிருந்து இப்பொழுது அவரை விடுதலை செய்தது. அரசாங்கமும் காந்தியடிகளும் ஒரு நன்முடிவுக்கு வருதல் நல்லது. காந்தியடிகளின் உடல் நிலை நலம பெறுக பெறுக என்று ஆண்டவனை வழுத்துகிறோம்.

---

Registered No. M. 1500.

# நவசக்தி

'எவ்வுயிர்க்கும் அன்பாயிரு' 'என்கடன் பணிசெய்து கிடப்பதே'

சிலம்பு ௧௫ ஸ்ரீமுக௵ புரட்டாசி௴ பரல் ௧௧

## கோள விலாசம்

(தொடர்ச்சி)

### உதையகிரி

*ஆதவனார் வீற்றிருக்கு மம்பொற்றே ரச்சினிலொன்*
*றாதுமைம்பத் தேழிலக்க யோசனையாய்—மாதேயிம்*
*மாமான சோத்ரவரை மத்திவரை நீண்டிருக்குந்*
*தாமதனி றாழியொன்று தான்சேர்த்துச்—சேமவரை*
*யட்டதிக்குங் கன்ன லறுபதினிற் றான்சூழும்*
*வட்டவல மாகிநித மாறாமல்—விட்டிதனைச்*
*சுத்தோ தகக்கடலுஞ் சூழ்நதிருக்கு மக்கடலின்*
*வித்தார மெட்டெட்டா மேலிலக்கம்—நத்துறையு*

### கனகநிலம்

*மிக்கடலுக் கப்பா லிருக்குங் கனகநில*
*மக்கனக பூமி யளவுரைக்கில்—மிக்காகு*
*மென்றபத்துக் கோடி யியோசனையா மத்தரையைத்*
*துன்றிவல மாகவுமே சூழ்ந்திருக்குங்—குன்றமது*

### சக்கரவாளகிரி

*சக்கரம்போல் நிற்கையினாற் சக்கரவா ளப்பொருப்பா*
*மொக்கு மதனுயர மோரிலக்க—மிக்க*
*தலைவிரிவு மோரயுதந் தானாகி நிற்கு*
*மலைபாதி பின்னிருளாய் மன்னும்—நிலையாகு*
*முற்பாதி யும்வெயிலாய் முற்றுகையா லக்கிரியை*
*யிப்பாரு ளோர்லோகா லோகமெனச்—செப்பிடுவர்*
*பொற்றரையிற் சித்தர் புலவ ரொடுதயித்யர்*
*மற்றரக்க[1]ராதியிவர் வந்திருந்து—சுற்றமுடன்*
*கூடிவிளை யாடிமகிழ் கூர்ந்துதங்க டங்கனகந்*
*தேடியே செல்வர் தினந்தோறும்—நீடிவளை*
*சக்கரவா ளப்பொருப்புத் தானெட்டுத் திக்கினிலுந்*
*திக்கதிப ரெட்டுச் செழும்பதியிற்—புக்குறைவர்*

---

(பிரதி)—[1]ராதியிவை,

## இருட்பூமி

அப்பா விருட்பூமி யாமகலந் தானுரைக்கில்
முப்பானங் கோடிய திலமேல்மொழிவா—[1]மப்பாற்பத்
தொன்பதி லக்கத் துடனு லயுதமாம
பின்பதனிற் சஞ்சரிக்கும் பேய்க்கணங்கள்—முன்புகலுந்
தாரணியில வாழ்மாநதர் தாங்கா வெகுளியினுற்
கோரமுள்ள வெம்பிணிகள் கொண்டதினு—லாருயிரை
விட்டவர்க [2]டானும் வெகுகாலம் பேயுருவாய்த்
தொட்ட விருட்டறையிற் சூழ்ந்துழல்வார்—விட்டுப்

## புறக்கடல்

பெரிய புறக்கடலும பின்பதனைச சூழும்
விரியுமொரு கோடியதன் மேலு—மிருபத்
தெழுநூ[ற்றி] [3]னுயிரம தென்பா ரிதனைத்
தழுவிநிற்கு மண்டகடா கந்தான்—பழுதிலா
மேரில்நடு நின்று விளங்குமண்டப் பிததிவரைச்
சேருமி யோசனையைச் செப்பக்கேள்—மேருவின்கீழ்
மததியினில் நின்று வளர்கிழக்கெண் ணுயிரமா
மத்தில்நின்று மாலியவா னவ்வளவு—மொத்தநவ
வாயிரமா மாலியவா னுயிரமப் பாலுமெண்ணுன்
காயிரமாங் கீழார் கலியளவு—மோயாத்
திரைக்கடலு மோரிலக்கஞ் செப்பும் பிலக்கத்
தரைக்கு மிரண்டிலக்கந தானு—முரைக்கடங்காத்
தித்திக்குங் கன்னற் றிரைக்கடலும் ரண்டிலக்க
மெத்திக்கு மெண்ணு மிலவத்தீ—வத்துக்கும்
நாலிலக்க மாந்தே னறுங்கடலு நாலிலக்க
மேலுங் குசத்தீவு மெட்டிலக்க—மேலும்நறு
நெய்க்கடலு மெட்டிலக்கம் நீடாமல் நேரிழையாய்
மிக்ககிற வுஞ்ச மெனுந்தீவுந்—தக்கவிரி
வீரெட் டிலக்கமதா மிங்கிதற்கு மேற்றதியு
மீரெட் டிலக்க மதாமீங்கிதன்மேற்—பேரெட்டுஞ்
சாகமுமெண் ணுன்கிலக்கஞ் சார்ந்ததிருப் பாற்கடலு
மேகவி யோசனையெண் ணுன்கிலக்க—மாகருறை
புட்கரநற் றீவு பொருந்துமெட்டெட் டாமிலக்கந்
தக்கநல்ல தண்ணீருஞ் சாகரமு—மைக்குழலீ
ரெட்டெட் டிலக்க வியோசனையாம் பொற்றரையுந்
தொட்டவீ ரைங்கோடி தூரமதாம்—வட்டமுள்ள
சக்கரவா ளக்கிரியின் றன்னீள மோரயுதம்
நிற்குமிருட் டறையி னீளமுங்கேள்—திக்கொன்றின்
முப்பானங் கோடியின்மேல் முந்துபத்தொன் பானிலக்கத்
தப்பாறு நாலயுத மாயிருக்குஞ்—சொற்பெரிய
சாகரமுங் கோடியின்மேற் றுனிருபத் தேழிலக்க
மாகனமா மண்ட மதில்கோடி—யாகவிவை

(பிரதி)—[1]மப்பாப்பத. [2]டானுருவம். [3]றுயிரம்,

யோரைம்பான் கோடியெனு மோரயுத மிம்முறையே
மேரில்நடு நாற்றிசையு மேவியிடும்—பாரிலிதைப்
[1]பஞ்சாசத் கோடி யெனப்பகர்வ ரிவ்வளவு
மெஞ்சாத பூலோகத் தெல்லையதாம்—வஞ்சியரே

## புவலோகம்

715 மேலுலக மாறும் விளம்பக்கேள் மேதினியின்
மேலும் புவலோக மேலுயரங்—கோலளவ
தென்னுங் குணித வியோசனைமூ வைந்திலக்க
மன்னுமதன் கீழிருக்கு மண்டலங்க—ளன்னதையு
மோதக்கேள் மேதினியி லோரயுத யோசனையில்
வாதமொரு பத்திலொன் றின் மண்டலமாம்—வாதமதன்
பேரும் விதன்னுவன் பேரழலுக் கெஞ்ஞான் றுஞ்
சார்வா யதிகபெலன் றன்கொடுத்துப்—பாரில்வளர்
கங்கைமுத லான கடும்பறவைக் காதரவாய்த்
தங்கியிடு மற்றிதன்மேற் றனயுதத்—தங்கிருக்கும்
720 மண்டலத்திற் றனுறையும் வாய்வுபிற சேதகனு
மெண்டிசையு மென்பயிரை யீரமறக்—கண்டிதது
நீண்ட மரங்கள் நிலைகுலையத் தான்முறித்து
மீண்டு மதுவாட மிகவுலர்த்து—மீண்டிதன்மேல்
அந்தரத்தி னோரயுதத் தக்கினிப் ப்ரசேதனென
வந்தமருத் தொன்று மழைகடனைச்—சிந்துவித்தும்
பின்னலாற சுட்டுவித்தும் பேருலகிற் றன்வாழும்
மன்னுயிரை வ[ா]தைசெய்யு மற்றிதன்மேல்—முன்ன
முரைத்திடுமவ் வியோசனையி னுற்றிருக்கும் வாயு
விரைத்துவரு சேசனிய தென்பாம்—நிரைத்திருக்கும்
725 சத்துவக்க ணென்றுரைக்குந் தாரா தரத்துடனே
மித்துருவாய்க் கூடியிந்த மேதினியிற்—றத்தரமா
யென்பிலாச் சீவன்முத [2]லெண்ணிறந்த சீவசெந்து
துன்புறவே மாரி சொரிவிக்கும்—பின்பதற்கு
மேலோ ரயுதமதில் மேவுமுத கப்பேர்க்
காலு முரோததமெனுங் கந்தாமுஞ்—சால்புறவே
கூட விடமழையைக் கொட்டுவித்து மன்னுயிரைப்
பீடைசெயு மிங்கிதன்மேற் பின்னயுதங்—கூடுமிடத்
தெல்லைவச்சி ராங்கதனென் றேயுரைக்கும் வாயுவொன்று
வல்லவு வக்னியென்னு மஞ்சினுடன்—மெல்லநட்பாய்க்
730 கன்மாரி மண்மாரி காலுமழல் மாரிசெந்தீ
ரின்மாரி பெய்துலகை யீடழிக்கும்—பின்மேலு
மோரயுதத் தெல்லையினின் றோங்கும் வயித்திதனென்
றோரும் புகல்வாயு வாமதுவுஞ்—சார்வேக
மிக்காம் வயித்தியுத மேகமுடன் றன்கூடித்
துக்கமுறு மின்னல் சுடுமசனி—யக்கினியின்
வாதைசெய்து பூவுலகில் மன்னுயிரை வாட்டுமதன்
மீதோ ரயுதமதில் வீற்றிருக்கும்—வாதிமதன்

(பிரதி)— [1]பஞ்சாசட். [2]வெண்ணிறைந்த.

நாம மிரைவதனுல் நன்மேகம புட்டிவதன்
ருமமுடன் கூடியிந்தத் தாரணியோர்—நேமமுடன்
வாழ்ந்திருக்க நல்ல மழைபொழியு மற்றிதன்மேற்
சூழ்ந்திருக்கு மோரயுதத் தூரமதில்—வாழ்ந்திருக்குஞ்
சங்காத னென்னுந் தனிமருத்து மைப்பதையென்
றங்கோது மேக மதுதானு—மங்காம
லொன்ருகி மன்னுயிர்கட் கோங்கும் பிணிகடரும்
நன்ருகா மாரியினை நல்குவிக்கும்—நின்றிதன்மேல்
தோற்றும் விசித்த துறும்விசங்க வாதனெனுங்
காற்றுங் குரோதனெனுங் கநதரமு—மேற்றிந்த
நாடனைத்து மொன்ருரால் நாசமுற மன்னவற்குப்
பீடையுறு மாரியினைப் பெய்விக்கும்—கூடுகின்ற
வாயுவீ ரைந்து மழைமேக மோரேழு
மேயுங் கதிர்பதத்துக் கிப்பாலாம்—வாயுவுடன்
வீற்றிருக்கு மோரேழு மேகமதி லொன்றினுக்குக்
கூற்றுமொரு மூவயுதக் கோடிமுகில்—போற்றிநின்று
சேவித் திருக்குந் தினகரன்ற னெல்லையின்கீழ்
பூவிற் றிகழ்சாயை போலொளிரு—மாவளமை
பெற்றதொரு மண்டலத்திற் பேர்பெரிய கேதுவுடன்
மற்று மிராகுவும்நல் வான்பரிகள்—குற்றமிலா
வீராறு பூண்ட விளையிரத மீதினிடஞ்
சோராமல் மேருவினைச் சூழ்நதிடுவார்—நேராக

### ஆதித்த மண்டலம் : பன்னிரண்டாதித்தர்

இங்கிதன்மே லாதவர்க ளீராறுவர் தாமிருக்கும்
பொங்கொளிர்சேர் மண்டிலமாம் பூவையே—தங்குபுவிக்
கோரிலக்கம் யோசனையி னுன்னதமா மண்டிலமும்
சீரிலகுமவ் வகலஞ் செப்பக்கேள்—நேரிலகு
மொன்பான் சகத்திரவி யோசனையா மங்கதனி
லன்பா யினிதிருக்கு மாதவர்க—டன்பெயர்கே
ளஞ்சனுடன் ருதா வருட்பூடா விந்திரன்பின்
விஞ்சு சவிதா விவச்சுதனுந்—துஞ்சா
பகன்பர்ச் செனிதொட்டாப் பங்கயத்து மித்ரன்
ருருகும்வருணன் விட்ணுவெனச் சொல்லும்—பகலவர்கள்
பன்னிருவ ராமாதம் பன்னிரண்டு மேநிரையா
யுன்னுமொரு திங்கட் கொருவர்களா—மின்னொளிரும்
அம்பொ னிரத மகமொன்ப தாயிரத்திற்
செம்பொனச்சி ழுழியொன்று சேர்ந்திருக்க—உம்பருணும்
பாற்கடலிற் றேன்றும் பசும்புரவி யீரேழுஞ்
சேர்க்கு முருணனுமத் தேரூர—வேற்குமந்தத்
தேரி லிருந்துலகஞ் சேர்ந்ததொரு மூன்றினையு
மேருவினைச் சூழ்ந்து விளக்கிடுவர்—சீருலவு

### திங்கள் மண்டலம்

மிங்கிதற்கு மேலோ ரிலக்கமெனும் யோசனையிற்
றிங்களுறை மண்டலமுஞ் சேர்ந்திருக்கு—மங்க

திரண்டயுதத் தேழா யிரமியோ சனையாந்
தெருண்ட வகலஞ் செழிக்கு—முருண்டோடும்
வண்டிலொரு மூன்றுளதாய் வான்பரிகள் பத்துளதா
யெண்டிசையுந் தாங்கு மிரதமிசை—கெண்டைவிழி
மின்னு ளுரோகணிமுதல் மேலிருபத் தேழுமின்னார்
எந்நாளுஞ் சூழ விருபாலு—மன்னன
சந்திரனும் வீற்றிருப்பன் றனிதன்மீ தோரிலக்கத்
தந்தரத்திற் றாரகையம் மண்டிலமா—முந்துமிதன்

நட்சத்திரமண்டல முதலியன

மீதி னிரண்டிலக்க மேற்றளத்திற் பூங்கமல
மாதே புதனிருக்கு மண்டிலமா—மீதிதன்மேற்
செல்லு மிரண்டிலக்கஞ் சேரிடத்திற் றனவர்க்கு
வல்லகுரு சுக்கிரன்றன் மண்டிலமாஞ்—சொல்லுமந்த
மண்டிலத்தின் மேலே வகுக்கு மிரண்டிலக்கங
கொண்ட த[ல]ததிற் குசனிருக்கு—மண்டிலமாஞ்
சொன்ன விதன்மீதிற் றேகை யிரண்டிலக்கம்
பொன்னவன்றன் மண்டிலமாம் பூவையே—யன்னதற்கு
மேலு மிரண்டிலக்க மீதுசனி மண்டிலமாஞ்
சாலவதன் மீதிலக்கஞ் சார்தளத்தின்—சீலமுள்ள
அத்திரி மரீசியுட னங்கிராப் பின்வசிட்ட
ரொத்த புலத்தியரு மொண்கிருகுஞ்—சுத்தப்
புலகரிவ ரேழ்முனிவர் புட்பகங்க டன்னில்
இலகவுறை மண்டிலமா மின்னிவ்—வுலகமதற்

துருவ மண்டலம்

கோரிலக்கந் தன்னி லுயர்துருவ மண்டிலமாந
தாரகையோ ரிந்துமுதற் சார்ந்தவரை—மேருவினைச்
சுற்றி வலமாகச் சூட்சமுடன் காற்கயிற்றாற்
பற்றித் துருவன் பதத்திருப்பன்—மற்றவனெ
டைம்படையுந் தாங்கி யணிதுளப மாலையினன்
செம்பதும மாலையுடன் சேர்ந்திருப்பன்—அம்புவிமே
லிவ்வளவு மூவைந் திலக்கம் புவலோகங்
கொவ்வையித ழாதனத்தி கூறக்கேள்—செவ்வி

சுவற்க லோகம்

தருசுவற்க லோகமது தானெண்பா னைந்தாய்
வருமிலக்க யோசனையின் மட்டாம்—விரிவதனில்
வேந்தன் புருகூதன் விண்ணவரு மாதவருஞ்
சார்ந்த வரம்பையருந் தற்சூழ—வேந்து
மரியணையில் வீற்றிருப்பன் அம்புவியின் வேள்வி
ரிபவர்கள் கங்கைப் புனற்பால்—விரதமுடன்
தானதவஞ் செய்தோர்தற் சாதி யொழுக்கினின்றோர்
ஈனமிலாக் கற்பினிற்கு மேந்திழையார்—ஆனநெடும்
போர்க்களமு னின்றுயிரைப் போக்கும் புவிவேந்த
ராக்கு மதப்புலிபோ லாண்டவன்முன்—நீர்க்குமிழி

775 வாழ்க்கைநிலை யல்லவென்று மாற்றலரை வென்றவரால்
வேட்கையுடன் றுஞ்சுசுதத வீரர்களும்—நாட்கமலம்
போன்றிருக்கு மிந்தப் புரத்தினிடை சேர்ந்ததனிற்
றோன்றுபெரும் போகங்க டுய்த்திடுவ—ரேன்றமகா

மகாலோகம்

லோக மிதின்மே லுறையுமிரு கோடிதுலை
யாருமதின் வைகு மருந்தவரின்—யோகமுறும்
மார்க்கண்டர் சித்தர் மரிசி மதத்தவராஞ்
சேர்க்குமிதின் மீது செனலோகம்—பார்க்கில்

சேனலோகம்

இருநான்கு கோடி யியோசனைய தென்ன
வருமுயர மற்றதனிற் சோமர்—அரியமண
780 ரக்கினியார் சீய ரருள்வரத்தர் பற்கீயா
லக்கி றவவிய வாகனரு—மிக்க
நிருத்தர்முதல் நால்வரிவர் நீங்கா திருப்பர்
தருக்குமிதின் மேற்றவ லோக—மிருக்குமது

தவலோகம்

பன்னிரண்டு கோடி பகருயர மவ்வுலகந்
தன்னிற் சனகர்முதற் றுனெழுவ—ரென்னுந்
தவமுனிவ ரங்குறைவர் தானிதற்கு மீதெட்
டவைபிரட்டிப் பாங்கோடி யாகு—மவையுயர
மெத்திசையு மொப்புவமை யில்லா தெழின்மணக்குஞ்
சத்தி யவுலோகந் தானதனிற்—சிததிரக்கால்

சத்தியலோகம்

785 மண்டபத்தி னுப்பண் வனசமலர்க் கர்ணிகையிற்
புண்டரிகன் வாணியொடும் புக்குறைவன்—விண்ட
குணபாக பீடமதிற் கொண்மூ நிறம்போல்
மணமா மிருக்குமறை வைகுந்—தணவா
வடபாற் படிவ வடிவாகப் பீடத்
திடமா யெசுர்வேத மெய்தும்—குடபாலின்
நற்பீட மேற்பதும ராகமெனச் சாமமறை
யிற்பூ டணமா யிருக்குமே—தெற்காக
அல்லிநிற மென்ன வதருவணந் தானிருக்குஞ்
சொல்லும் பிதாமகன்றன் சூழலினும்—நல்லாறு
790 சாத்திரமு மாகமமுஞ் சாற்றும் புராணமுநின்
றேத்துகின்ற சாவித் திரியுடனே—நேத்திரம்போற்
காயத் திரியுங் கலந்திருக்கு மவ்வுலகிற்
றூயத் ததிகமெனச் சொல்விளங்குந்—தாயொத்த
தாமானச் சாரிசொன் றங்கமரு மச்சரசிற்
பூமானும் நாமகளும் போற்றிசெய்யக்—காமாரி
செஞ்சடையில் வைகுந் திரிபதகை யங்கிருப்பள்
கஞ்சங் கருங்குவளை கல்லாரம்—[1]விஞ்சுமணச்

(பிரதி)—[1]விஞ்சுமனச்.

செங்குமுத நெய்தலஞ் சேழிமதி லோதிமமுஞ்
சங்கம் நிறைந்திருக்குஞ் சந்ததமு—மங்காத
வித்துருவ நற்கொடிகள் மேற்படர்ந்து சோதிவிடுஞ்
சுத்தமுள்ள வச்சரசின் சூழலினும்—பத்தியுள்ள
கற்பகப்பூங் காவுமதிற் காமமுதல் மூன்றொழிந்த
சொற்பெரிய மாதவருஞ் சூழ்நதிருப்பர்—இப்பெருமை
பெற்றிருக்கு மந்தப் பிரமன் பதத்துதிததோர்
மற்றடங்கா ளெண்கணன்வா ளளவு—முற்றிருப்பர்

## விண்டுலகம்

இப்பதத்துக் கீரிரண்டு கோடியி யோசனைமேற்
செப்பரிய விண்டுலகஞ் சேர்நதிருக்கு—மொப்பிலா
மண்டபமுங் கோபுரமு மாடநெடு மாளிகையுங்
கொண்டகதிர் கோடி குவிந்ததெனை—வெண்டிசையுங்
கண்கவருஞ் சோதியொளி காட்டுமரி யாசனத்திற்
பண்கவரும் பாகவதர் பாட்டிசைப்ப—மண்கவர
வாமனமாய் மாவெலிபால் வந்திரக்குங் கோபாலன்
முமரைமேற் செல்வியொடுந் தானுறைவன்—பூமியினிற்
கங்கைநதி தோய்ந்தோர் கதிரோ னடிபணிந்தோர்
சங்கவன்ற னுமஞ் சகத்திரமும்—பங்கமுறு
நித்தந் துதித்தோர் நியமமுடன் பூசைசெய்தோர்
பத்தியுடன் விண்டு பதிதொழுவோர்—இத்தகைய
செல்லா மரிவடிவா யெய்தியே யப்பததத்திற்
பல்லூழி காலம் பயின்றிடுவர்—நல்ல
அரியுலக மீதாறு கோடியள வின்கண்
புரியுஞ் சிவலோகம் பொன்னே—விரிவாகும்

## சிவலோகம்

மாணிக்கம் பச்சை வயிரம்வயி டூரியமு
மாணிக் கனக மதனுலும்—வேணிமயன்
கைவருந்தச் செய்தமைத்த கர்ப்பக் கிரகமுடன்
மெய்வருந்திச் செய்த விமானமுமேற்—செய்தமகா
மண்டபமு முன்னருத்த மண்டபமு மற்புதக்கால்
மண்டபமுஞ் சாற்றுதிரு மாளிகையும்—விண்டடவு
மேழுநிலைக் கோபுரமு மேழுசுற்று மாமதிலு
மேழுதெரு வீதியுமீ ரேழுலகும்—வாழுமிதற்
கொப்புவமை யில்லா வுயர்ந்த திருப்பணியுங்
கற்புடைய கற்பகக்காக் காவனமுங்—துப்புநிகர்
செங்கழுநீ ரோடைகளுஞ் செங்குமுதப் பூஞ்சுனையும்
பங்கயஞ்சேர் வாவியும பக்கமெல்லாங்—திங்களணி
நம்பனுக்குச் சாத்துதற்கு நந்த வனங்கோடி
வம்பவிழுஞ் சோலை மகாகோடி—யும்பர்
புகழிவை யாவும் பொருநதியே யெண்ணிப்
பகலவர்கள் வந்துதித்த பண்பாய்த்—திகழுஞ்
சிவலோக மாமிதனிற் றேவ முரசும்
புவமாற்றும் விஞ்சையர்கள் பாட்டுந்—தவமாகும்

815 வேதர் மறைமுழக்கு மேன்மையுள்ள சைவதவ
ரோதுசா ரங்கி யொலியுமிகச்—சீத
முகிலிற் றிரைக்கடலின் மும்மடங்கு விம்ம
வகிலினரு நறு தூபமண மார்ப்பப்—பகலிரவு
காட்டா வொளிருங் கனகமணி மண்டபத்தின்
ஈட்டுமரி யாசனத்தி னெங்கோமான்—நாட்டமொரு
மூன்றுங் கறைமிடறு முந்நூலு மார்பகமுந
தோன்றும் பிறைச்சடையுந தோணுன்குங்—கான்றவிடப்
பொங்கரவ கங்கணமும் பூதிதிகழ் மெய்யொளியுஞ்
செங்கைமழு மானிருக்குஞ் சித்திரமுந்—துங்கப்
820 புலியி னதளுடையும் பொற்று ளிணையு
மிலகவிடப் பாலி னியைந்த—மலைமகளுங்
கூடி யிருக்கக் கொடிவிடையு முன்னிலங்கத்
தேடியுமால் காணுத் திருவடியி—னீடுபுக
ழும்ப ரயன்முதலோ ரோங்குமலர் தூவிமிக
நம்பிப் பணியவிறை நண்ணிடுவ—னம்புவியில்
வெண்ணீறுங் கண்டிகையு மேன்மையுட னேதரித்தோர்
பண்ணுருஞ் சாம மறைபயின்றோர்—தண்ணுரும்
பூச்செடிகள் வைத்தோர் பூவெடுத்துச் சங்கரற்கு
வாச்சதொடை சேர்த்து [1]வணைவித்தோர்—ஈச்சுரன்றன்
825 ஆலயங்க டன்னி லலகிட்டோ ரன்புடனே
மாலைவிளக் கிட்டு வணங்கினோர்—பாலைப்
பொருவுமலர் கொண்டுசிவ பூசைநிதஞ் செய்தோ
ரரிய சிவநிசியி னன்பாய்ப்—பரசிவனுக்
கெண்ணெய்முதற் சந்தனம தீரு யபிடேகம்
பண்ணுவித்தோர் மாவிளக்குப் பார்த்திட்டோர்—நண்ணு
மமுதுபடி காய்கறிக ளன்பா யளித்தோர்
கமழும் புழுகொடுகற் பூரஞ்—சமதைபெறச்
சந்தனத்திற் சேர்த்துத் தரிப்பித்தோர் மாதாந்தம்
வந்தே யரனை வணங்கினோர்—சிந்தையுடன்
830 காணிக்கை யீந்தோர் கனபூ டணமளித்தோர்
பேணிநறுந் தூபம் பெருந்தீபம்—வேணியாற்
கற்புதமாய்த் தோன்று மனபாய் மகிழ்ந்தளித்தோர்
சொற்பெரிய பாமாலை சூட்டினோர்—நற்புகழ்சேர்
காசி தனிலிறந்தோர் கட்டளையா யீச்சுரற்கு
வாசியுள்ள பூமி வழங்கினோர்—பேசவரு
மின்னோர் சிவபுரத்தி லேகி நெடுங்காலம்
பொன்னாரும் போகம் பொசித்திடுவோர்—மின்னு
ரிடையா ரிதன்மீ திருக்குமண்டப் பித்திக்
கடையு மொருகோடி கண்டாய்—வடிவாஞ்
835 சிவலோக மேநிரையாய்ச் சேர்ந்தபுர மூன்றும்
நவமாகு மற்றதற்கு நாமந்—தவமாகும்

(தொடரும்)

(பிரதி)—[1]வணைவிடுத்தோர்.

# நமது சிந்தனை

[திரு. சி. சதாசிவனார்]

## VIII

## பொய்

நாம் சற்று அமைதியாக அமர்ந்து சிந்திப்போமாயின், இங்குத் தோற்றும் எப்பொருளும், உணரும் எவ்வுணர்ச்சியும் வெறும் ஏமாற்றமென்றே அறிதல் கூடும். நமது கருவிகளாய புலன்கள் பொய் கூறி நம்மை ஏமாற்றுகின்றன. பார்ப்பன வெல்லாம் உண்மையில் நாம் அறிவனபோல் இலலை.

ஒரு பொருளை எதிரே, புறத்தில் நாம் காணுவதாக நினைக்கின்றோம். ஆனால் கண்ணரம்புகளால் மூளையில் வரையப்பட்ட அப்பொருளின் சிறிய படத்தையே நம்மகத்தே பார்தது அப்பொருள் வெளியே இருக்கின்றது என்று எண்ணுகின்றோம். நமது கட்புலன் இங்கு நம்மை ஏமாற்றுகின்றது.

சூரியன் சந்திரன் ஆதிய கோள்கள் கிழககிலிருந்து மேற்கே செல்வதாகக் காண்கின்றோம். ஆனால் உண்மை இவ்விதமன்று என்பது யாவரும் அறிந்தது. இங்கும் ஏமாற்றம்.

வீணை இன்னிசை தருகின்றது என்று களிப்படைகின்றோம். ஆயினும் அக்கருவி புதிதாக ஒன்றும் ஒலிசெய்யவில்லை. இசை - ஒலி - யாண்டும் நிறைந்திருக்கின்றது. இதையே இக்கருவி வெளிப் படுத்துகின்றது. தந்திகள் அசைவதால் பலதிற காற்றசைகள் எழும்பி, செவிப் பொறிகளில் மோத, மூளை ஓரிசையைக் கற்பனை செய்து தருகின்றது. நம்முள் ஏற்கனவே உள்ள இசையை நாம் அறிகின்றோமே தவிர அது வெளியே இருந்து வரவில்லை. எல்லாம்வெறும் ஏமாற்றம்.

காலில் ஒரு முளதைக்கின்றது. அக்கால் அதை உணர்வதில்லை. தொடு நரம்புகள்வழி மூளையே அதை உணர்ந்து "கால் வலிக்கின்றது" என எண்ணுகின்றது. அத்தொடு நரம்புகள் கெட்ட ஒருவன் அக்கால் வலியை அறியான்.

கல் திடப்பொருள் என நினைக்கின்றோம். ஆயினும் இஃது எண்ணிறந்த சிறிய அணுக்கூட்டங்கள் ஒன்று சேர்நததால் ஆயது என்றும், அவை ஒவ்வொன்றிற்கும் இடையிடை வெளி இருககின்றதென்றும், உண்மையில் அப்பொருளிற்குத் திண்மையே இல்லை என்றும் நூல் வாயிலாக அறிகின்றோம. நமது புலன்கள் நம்மை மயககுகின்றன என்பதற்கு இன்னும எத்தனை சான்றுகள் வேண்டுமானாலும் அடுக்கிக் கொண்டே போகலாம்.

மூளை கெட்டவர், வெறியடைந்தவர், இன்னபிறர் ஒருபொருளை மற்றொன்றாகக் காண்கின்றனர். நமது கண்களாற் காண இயலாத புதுமைகளை அவர்கள் காணுவதாக நினைக்கின்றனர். கருவி கேடுற்றதால் இன்னவருக்கு உலகமும் வேறுபட்டுத தோன்றுகின்றது.

மனவேறுபாட்டால் பலர்ஒரு நிகழ்ச்சியை வெவ்வேறு விதமாகக் கண்டு பலதிற முடிவுகட்கு வருகின்றனர். மழை பொழியும்போது ஒருவன் உலகைத் துன்பமயமாக உணர்கின்றான். மற்றொருவன் மழையிலும் நன்மையைக் கண்டு இயற்கை விநோதத்தை உன்னிக் களிப்பெய்துகின்றான். இவ்வொரு நிகழ்ச்சியே இருவருக்கும் வெவ்வேறு விதமாகத் தோன்றியது.

நமது உணர்வு இருபொருள்களால் உண்டாகின்றது; கருவி, சக்தி. கருவியாகிய மூளை அவ்வொரு சக்தியின் இயக்கத்தைப் பற்பல விதமாக அளந்து உருவம், நிறம், வாசனை, ஒலி, ஒளி என்று வேறுபடுத்தி உணர்கின்றது. மூளையில் மாறுதல் ஏற்பட்டபோது இவையாவும் வேறுபட்டுத் தோன்றும்,

மனிதனுக்குக் கருவி குறுகியோ, அல்லது அருகியோ இருப்பின் அவனறியும் உலகம் நாம அறிவதுபோல் இருப்பதில்லை. குருடனுக்கு அழகு ஒளி செறிந்த உலகம் இல்லை. செவிடன் இசையுலகை அறியான்.

மனம் பலதிறப்படுவதால் உலகம பலவாகத் தோன்றுகின்றது. உலகம் ஒன்று. அதை உணர்த்தும கருவிகள் தான் பலதிறததன. இப்பலவும் பல்வேறு தோற்றங்களைக் காண்பிக்கின்றன. உலகம் பலவிதம் என்று நாம் சொல்கின்றோம். நாம் தான் பலவிதம் என்பதை மறந்து விடுகின்றோம்.

"மேய்ப்பாரு மின்றி வெறித்துத் திரிவன" ஆகிய புலன்கள் வழி நாம் அறியும் உலகு உண்மையன்று. இதை உண்மை என எண்ணுவது தவறான நோக்கம் (Error consciousness).

உலக அறிவிற்படும் தோற்றம் மெய்யென நினைக்கின்றோம். ஆயினும் இவ்வறிவில் உறைப்பது சத்திய-முழு-உலக மன்று. நுண்மையாக எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் முழு உலகினது மிகச் சிறிய தொருகூறே சிற்றறிவால்-கட்டுடைய புலனறிவால்-அறை குறையாக அளந்தறியப் படுகின்றது.

அறை குறையான அறிவால் மனந் தெளிவதில்லை. ஒவ்வொருவரும் அவரவர் மனம் போனபடி உலகத்தைப் பலவிதம் கூறிக் கொள்ள இடங்கிடைக்கின்றது. இங்கு யானையைக காணச் சென்ற நான்கு குருடர்கள் செய்தி நினைவில் வருகின்றது.

அறைகுறை உணர்ச்சிகளை இருவகையாகப் பிரித்து நுகர்கின்றோம். ஒன்று இன்பம்; மற்றொன்று துன்பம். உணர்ச்சிகளே உண்மையல்லாதபோது இவையும் உண்மையல்ல எனச் சொல்லவும் வேண்டுமோ?

துன்பம் என்பது உள்பொருள் என மதித்து, அது வந்துற்றபோது நடுங்கி ஏங்குகின்றோம். அது உள்பொருளா? அதற்கு உண்மையில் நமக்குத் துன்பமிழைக்கச் சத்தி இருக்கின்றதா? சத்திய உலகில் அதற்கு இடமுண்டா?

உள்பொருள் என்பது தோன்றல், திரிதல், கெடுதல், விகாரமின்றி என்றும் ஒரே நிலையில் நிற்பது. தீமை நீங்காக ஓரிடத்தில் எப்போதும நிலைத்து நிற்பதை நாம் காண்கிலோம். சிலகாலம் தீமையாகத தோன்றிபபின் மாறும் ஒன்று எப்படித் தீமையாகும்?

தீமைக்குச் சொநதமாக நம்மைவருத்தவும வன்மை கிடையாது. நமது பயத்தால்அதற்கு வலிமையை நாமேவழங்குகின்றோம். பயந்தவர்களை விரட்டுவது யாவர்க்கும் எளிது; பயந்த நம்மையே அது வருத்துகின்றது. நமது பயமே துன்பததிறகுப் பலம்.

சிறு ஊசிகுத்திய துன்பம் பொறுது மூன்று நாள் நலிபவர் பலர். உயிரே போய் விடலாம் என்று தெரிந்தும் போர்முனையில் வாளேந்தி நிற்பவர் பலர். முதலவன் பயததால் வருத்தத்தையும், மற்றவன் அச்சமின்மையால் வருத்த மின்மையையும் அடைகின்றான்.

இங்கு, தீமைதரும சக்தி ஒன்று உண்டு என்பது பொருத்த மற்றது. தீமைதரும் சக்தி ஒன்றும நன்மை வழங்கும் சக்தி ஒன்றும் எங்கும் நிறைந்து, எல்லாம வல்லதாகி ஓரிடத்தில் இயங்குதல் முடியாத காரியம். அப்படி ஒன்றற் கொன்று போட்டி போட்டுக் கொண்டு, ஒன்று நனமையையும் மற்றொன்று தீமையையும் அள்ளி வீசிக் கொண்டிருக்குமாகில் இவ்வுலகம் முன்னமே அழிந்து பட்டிருக்கும்.

அல்லது ஒரு கடவுளே இரண்டையும் கலந்து வழங்குகின்றார் என்று கொள்ளுதலும முரண் பாடுடையதாகும். கடவுள் தீமையாயும் நன்மையாகவும் இருந்தாற்றான், இரண்டையும் கலந்தளிக்க இயலும். நன்மையும் தீமையும் ஓரிடத்தில் ஒன்றாக நிலை கொள்ளல் கூடாத காரியம. இருளும ஒளியும் எப்படி ஒன்றாக இயங்கும்? அச்சக்தியிடம் தீமை சிறிதும் இருக்கு

மாயின் அதை முடியா நன்மை என்றும், கருணைப் பெருங்கடல் என்றும் எங்ஙனம் அழைக்க முடியும்?

தீமை உள்பொருள் அன்று. அதற்கு நம்மை வருத்த வன்மையும் கிடையாது. அதை வழங்கும் கடவுளும் எங்குமில்லை. உள்ளது அந்தமில் லின்பப் பெருவாரியே. ஆயினும் துன்பத்தையே எங்கும் மிகையாகக் காண்கின்றோமே, அஃது என்ன?

வருத்தந்தரும் சம்பவங்களைத் துன்பம் என எண்ணுவதே மனித மனம் செய்யும் ஒரு பெருந்தவறு. விலங்கு மனம் (Mortal mind) தெளிந்து விசால மடையாது தனையுற்றுக் குறுகிய நோக்கங் கொள்ளும் பழக்கமே இம்மயக்கத்திற்குக் காரணம். உண்மையை உணர்ந்தபோது இம்மயக்கம் அறும். (Ye shall know the truth, and the truth shall make you free.)

தீமை எனுந்தடங்கல் வாழ்வில் இல்லாவிடின் இறையுணர்வு பிறவாது. அறிவும் சிறவாது. ஒன்றும் நாம் எண்ணியவாறு முடியாது. வருத்தம் தருவதிலிருந்தே, நமக்குள் அகப்படாத சக்தி ஒன்று இருக்கின்றது எனும் உணர்ச்சி நமக்கு உண்டாகின்றது. இந நல்லுணர்வை நல்கும சம்பவம் தீமையாகுமா?

நமது அறிவிற் கெட்டாத இச்சக்தி, ஒருவழி இயங்குகின்றது. அவ்வழியை நாமும் பின்பற்றாது மாறுபடுவதால், இடர்கள் வாழ்வில வருகின்றன. இவைகளை நாம் தீமை என எண்ணுகின்றோம். அப்படி நினைத்த லொழித்து, நாம் எங்குத தவறினோம் எனத் தெளிந்து, நமது ஒழுக்கததைச் சீர்படுத்தியஉடன் இவ்விடர்கள் தாமே இல்லா தொழியும். அக்காலை, துன்பமுட் நமது நன்மைக்கே வந்தது எனவும விளங்கலாம்.

உடலில் உண்டாகும் நலிவும் நமது அரிய நண்பன் என்பது சிந்தித்தால் விளங்கும். நமது யாக்கை எங்குக் கேடடைந்திருக்கின்றது என்று நலிவு உணர்த்துகின்றது. எங்கு இயற்கைக்கு மாறுதலாக நாம் நடந்திருக்கின்றோம் என்பதையும் குறிப்பிடுகின்றது. நமது தவறுதலை அறிந்து, நாம் செம்மையாக ஆனதும் அவ்வலி பின்பு இலலையாகும். இவ்வோர் எடுத்துக் காட்டைத் தீய அனுபவங்கள் ஒவ் வொன்றோடும் பிணைத்து நோகக, அவ்வவற்றில் மறைந்துள்ள நன்மை விளங்காமற் போகாது.

வாழ்விற்கு அடிப்படை முடியா நன்மை. அன்பு எனும சக்தி உலகிற்கு ஆதாரமாயுள்ளதே நமது வாழ்வில் தீய அனுபவங்கள் வருதற்குக் காரணம் எனவுங் கூறலாம். தன்னைப்போல் நம்மையும நன்மையாக்கக் கருதிய இச்சக்தியினருள், நாம் இயற்கையினின்றும் வழுவிய போது, இடராக விளைந்து நமக்குமுன் மலைபோல் குறுக்கிடுகிறது. நன்மை - அன்பு இவற்றின் உதயமானது நமக்குத் துன்பமாகத் தோன்றுகின்றது. நாம் துன்பமென எண்ணுவது முடியா நன்மையினது உதயத்திற்கு அறிகுறி.

உலகில் அதிக அனுபவமுள்ளோர்களே இவ்வுணர்ச்சியை- இன்பமே எந்நாளும்துன்பமிலை எனும் எண்ணத்தை- அடைகின்றார்கள். நாமோ துன்பமே எந்நாளும் இன்பமில்லை என்கின்றோம். அவர்கள் உலகம், வாழ்வு, உலக இன்பம் இன்னபிற நிலையில்லாதன என உணர்ந்து, இவைகளில் மனதைவிடாது, ஆண்டவன் அருள்வழி நின்று, என்றும் இன்பமடைகிறார்கள். நாமோ இவ்வுலகவாழ்வு உண்மையென மயங்கி அருள் நெறியை விட்டு நீங்கித் துன்பமடைகின்றோம். வாழ்வின் பயனை அவர்கள் அடைந்து விட்டார்கள். நாமோ வாழ்வின் நோக்கம் இன்னதென்றே உணர்ந்து கொள்ளவில்லை.

இறை உணர்வு பெறுதலே மனிதப் பிறப்பின் ஒரு நோக்கம். இதுவே யாவரும் கைக்கொள்ள வேண்டிய குறிக்கோள். "இறையே உண்மை" எனும் உணர்ச்சியை நாம் அடையும்

வரை ஈண்டுப் பிறந்திறந்து உழலல் வேண்டும். இவ்வறிவை உலக அனுப வங்கள் நமக்கு அளிததல் வேண்டும். எல்லா அனுபவங்களும் இவ்வொரு முடிபுக்கே நம்மைத் தெரியாமல் முட்டித் தள்ளுகின்றன. இந்நன் முடிபு நம் கண் முன்னேயே எப்போதும் நின்று கொண்டிருந்தால தீய அனுப வம் ஏது?

அழுக்கு மூடிய நம்மைத் தம்மைப் போல் வெண்மையாக்கக் கருதி, அனுபவ வாயிலாகத் தனது உண்மையை உணரட்டும்என்று நமக்குஇருப்பு, கருவி இவை நல்கி, இங்கு வரவிட்ட இன்னருளினின்றும் மாறுபடாது ஒழுகி, நாம் அதையே குறிக்கோளாகக் கொள்ளாது, பொய்பேசும் புலனின்பம் விழைந்து, அது கிட்டாவிடில் வருந்தி, கிடைத்துக் கெட்டபோதும் வாடித் துன்புறுவது அறிவுடைமை ஆகாது. இவ்வித அனுபவங்களால் புலன்உணர்ச்சிகள் பொய் - நிலையற்றன - என ஓர்ந்து, உண்மை என்ன என்று சிந்திக்கத் தலைப்பட்டு, அநதமில் வின்பம் இறையுடன் தொடர்பே என்று தெளிவதே நாம் அறிநது கொள்ள வேண்டிய பாடம். இப்பாடத்தை நாம் கற்றுக் கொண்டு விட்டபின் எல்லாம் நன்மை என்ற உணர்வையும் அடைவோம்.

பொய்யை மெய்யென நம்புவது, அதை நாடி நிற்பது, பிணி வறுமை இன்ன தீமைகள் உண்டு என எண்ணுவது, அவைகளை அடைந்து வருநதுவது, நன்மை வந்தபோது களிப்பெய்துவது இன்னவை மனித மனதின் பாற்பட்டன. இப்போலி உணர்ச்சிகளைச் சுற்றிலுமே நமது மனம் வட்டமிட்டுக் கொண்டிருப்பது பழக்கம். இவற்றின்மேல் ஆசை கொண்டுள்ள போது, நமக்கு இறை உணர்ச்சி உண்டாவது அருமை. களைகள் நிறைந்த நிலத்தில் நற்பயிர் விளைவதும் அருமை.

நாம் கொண்டுள்ள இத்தப்பெண்ணங்கள் (Error consciousness) மனதினின்றும் அழிதல் வேண்டும். இவ்வுலக இன்பே சதமெனும் கருத்து ஒழிய வேண்டும. புலன்வழி வரும் பொய்யை நாம் புலன்வழிச் செல்லாதிருக்கும்போதே நீக்கல்கூடும். பொய்ய கற்றலானது புலனடக்கததிற் கொண்டு போய்விடும. புலனடக்கம் நினைவடக்கம் (Thought Control) பொய்களைதல் இவையாவும் ஒரு பொருளன.

பருமை உலக உணர்ச்சி புலன் வாயிலாக வருவது. தொடக்குடைய புலன்கள் உணர்ததுவன யாவும் பொய். பொய் அறிவிக்கும் கருவிகள் வழி உண்மை அறிய இயலாது. புலன் வழி வெளிநோக்காது, உள்ளடங்கி நினைக்க உண்மை விளங்கும்.

பொய் என அறிவாலே உணர்நத வற்றை உணர்ச்சியாக நாம் அடைதல் வேண்டும். அப்போதே பொய்யாயின போம. வழக்கமாகக் கொண்டுள்ள நோக்கத்தை மாற்றிக்கொள்ள நமது மனதைப் பழக்கவேண்டும். உலக உணர்சசிகள் பொய் என அதற்கு அறிவுறுத்தல் வேண்டும்.

பொய்யை மனதினின்றும் அழிக்க வல்லவை மறுப்பு (Denials) நெஞ்சறிவுறுத்தல் களாம். "எந்நாளுந் துன்பமில்லை" என்பதை மறுப்பு மநதிரங்கட்கு ஓர் எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம். இச்சிறு சொற்றொடரையே நாம் சிறிது காலம் சிந்தித்துக் கொண்டிருந்தால், அதன் பொருள் விளங்கிப் பெருகி ஈண்டுத் துன்பமே இல்லை எனும் உணர்ச்சியை யடையலாம்.

காலை மாலை குறித்த சிறிது நேரங்களில், தனியே யமர்ந்து, நமது மனதினின்றும் பொய்யகற்ற வேண்டி, மறுப்பு மந்திரங்களைச் சிந்திப்பதே சிறப்புடைய வழி; அதற்கு முதற்படி. தமிழ் மறைகளில் பெரியார்கள் அருளியிருக்கும் மறுப்பு மந்திரங்கள் பரந்திருக்கக் காணலாம். "எந்நாளுந துன்பமில்லை" "அஞ்சுவதியாதொன்றுமில்லை அஞ்சவருவது மில்லை" "அல்லலென்செயும் அருவினை என்செயும்" "துன்பமின்றித் துயரின்றி என்று

நீர் இன்பு வேண்டி இராப்பகலேத்து மின்'' இன்னவும் பிறவும் மறுப்பு எண்ணங்களாகும்.

இவைகளில் யாதாயினு மொன்றை நாம் சிந்தித்திருக்கும் போது அதன் பொருளை - உண்மையை - நாம் படிப்படியாக உணர்வோம. நமது முன் அனுபவங்கள் பல எடுத்துக் காட்டுக்களாக அடிக்கடி நன்மனதின் முன்னின்று, இதை விளக்கி மனதைத் திடப்படுத்தும். இப்படிச் சிந்தித்துக் கொண்டே செல்ல ஒருநாள் எல்லாம் இன்பமே எனும் உணர்வு பிறத்தல் கூடும்.

அகத்தில் வாழும் இகருதித்த காலங்களைத் தவிர, நமது புறவாழ்வில் வறுமை பிணி இன்ன இன்மை எண்ணங்கள் வரும்போதெல்லாம், மறுப்பு மந்திரங்களால் அவற்றை ஓட்டவேண்டும். இவ்விதம் பொய் மனதில் நுழைய இடங்கொடாது எப்போதும் கவனத்துடன் அகத்தைக் காத்து ஒழுகுவது நாளடைவில் முற்றிப் பழக்கமாகலாம். நாம் சிந்திப்பன உண்மை எனும் உணர்வும், அமைதியாக உள்நோக்க வல்ல காலமும் சீக்கிரம் வந்துறலாம்.

பொய்களைந்தபின்- புலனடக்கம் அடைந்த பிறகு- தீமை நன்மை எனும் நினைவு அற்ற பின்பு-நம்மிடம் நவசக்தி ஊற்றுக் கண்திறந்து பெருகும். அக்காலை "துன்பமே பிறப்பே இறப்பொடு மயக்காம தொடக்கெலாம்'' அறிந்து, உண்மை யொளி, "சிறைபெறா நீர் போற் சிந்தை வாய்ப்பாயும.''

# யோபுவின் பக்தித் திறன்

[திரு. தி. ர. சாரங்கபாணி, எம். ஏ.]

உலகிடையுதித்த மக்களுள் சிலர் செல்வப் பெருக்கான் வாழ்க்கையை இனிது நடாத்தி இன்பம் நுகர்வதும், பலர் வறுமைப் பிணியால் இடிப்புண்டு வாடிவதங்கித் துன்பம் நுகர்வதும், இடையறாத் துன்பம் அணுகிய வமயங்களுள் இறைவனை இறைஞ்சுவதும், அவனருளை வேண்டுவதும், அவன் புகழை யோதுவதும், அவன் பெருமைகளைப் பாடுவதும், செல்வம் நிறைந்த சமயங்களில் சிற்றின்பத்திலாழ்வதும், செல்வச் செருக்கெய்துவதும் இறைவனை மறந்துழல்வதும், யாக்கை இளமைசெல்வம் எனும் முப்பொருள்களும் அழியுந் தன்மையன வெனனும் பேருண்மையைச் சிந்தையினின்று மறவே அகற்றிடுவதும், இன்றேல் மாறாத இனப மெய்திய காலத்தில் இறைவனைப் போற்றிப் புகழ்வதுந் துன்ப மணுகிய வமயத்தில் "தெய்வமொன்றுண்டோ'' வென ஐயுறுவதும் உலகியல் பென்பது அநுபவ வாயிலாக இனிது போதரும்.

இறைவன் மாட்டரும்பும் அன்பு இன்பம் நுகருங்கால் வெளியுறும் இயல்பன்றெனவும், புற வேடமாக உலகை யேமாற்றக் கொள்ளும் பண்பன்றெனவும, தன்னலமபேணக் கொள்ளும் தனி வேடமன்றெனவும், இன்பத்திலும் துன்பத்திலுஞ் செம்மையிலும் வறுமையிலும் இடையறா திலங்கும் மாறாப்பக்தியேயாமெனவும் அன்புநெறிநின்று இன்பப் பேறெய்திய ஒவ்வொரு மெய்யடியாரின் சரிதையும் இனிது வலியுறுத்தும்.

சத்திய வேதத்தின் முற்பகுதியாகிய "பழைய ஏற்பாடு'' எனப் பெயர் பெறாஉம் பண்டையறவுரைப் பகுதிகளுள் பதினெட்டாம் பகுதியாயிலங்குமயோபுவின் சரிதம் மெய்ப்பக்தியின் திறனை நனியெடுத்தோதும் பகுதிகளுள் ஒன்றாமெனக் கூறனும் ஒவ்வும்.

யோபெனும் பெரியாரின் தூய சரிதம், ஆண்டவனிடத்து மெய்ப்பக்தியுடையோர்க்கு இன்பத்திலுந் துன்பத்

திலும் வறுமையிலுஞ் செம்மையிலும் இறைவன் மாட்டுள்ள அன்பும் நம்பிக்கையும் எள்ளளவுங் குன்றிடாதெனும் பேருண்மையை எடுத்தோதுகின்ற தென்பது அவர் சரிதையை இனிதாராய நனி விளங்கும்.

"ஊதஸ் தேசத்திலே யோபு என்னும் பேர்கொண்ட ஒரு மனுஷன் இருந்தான; அந்த மனுஷன உத்தமனும் சன்மார்க்கனும் தேவனுக்குப் பயந்து பொல்லாப்புக்கு விலகுகிறவனு மாயிருந்தான்.

"அவனுக்கு ஏழு குமாரரும் மூன்று குமாரத்திகளும் பிறந்தார்கள்.

"அவனுக்கு ஏழாயிரம் ஆடுகளும் மூவாயிரம் ஒட்டகங்களும் ஐந்நூறு கழுதைகளும் ஐநநூறு ஏர் மாடுகளுமாகிய மிருக ஜீவனகள் இருநதது மினறி திரளான பணி விடைக்காரரும இருந்தார்கள். அதினல் அந்த மனுஷன் கிழக்கத்தி புத்திரா எல்லாரிலும் பெரியவனு யிருந்தான்."

1 : 1 - 3.

மேல் எடுத்துக் காட்டிய உரைகள் யோபின் வாழ்க்கையின் இயல்பை விளக்குகின்றன. வறுமைப் பிணியால் இடிப்புண்டுவாடும் ஏழை மக்கள், பெரிதும் நாடும் செல்வப் பேற்றை யோபு பெரிதும் பெற்றவர்; உலகிடை மனிதன் பெறுதற்குரிய பாக்கியங்களுள் சிறந்த புத்திர பாக்கியத்தையும் அவர் சிறக்கப் பெற்றிருந்தார்; தம் மினத்தவருள் தலைவராக விளங்கும் பெரும் பேறும் அவரை நாடி நின்றது. எனினுஞ் செல்வச் செருக்கு அவரை நாடிற்றில்லை; செல்வப் பேறுடையார் பெரிதும் நாடும் தீய வொழுக்கம் அவர் மாட்டுப் புலனுகவில்லை; தானெனு மாணவம் அவரை யாட்கொள்ளவில்லை; உலகிடைப் பெறுதற்குரிய நலங்களைப் பெற்று விட்டோம் இதை விடப் பேரின்ப மொன்றுண்டெனக் கழறுவது முயற்கோடு கூற்றுகும் என மயக்குறுத்தும் உலோகாயதனின் கூற்று அவர் உள்ளத்தில் மறந்தும் உதிற்றிற்றில்லை. ஆனல் இம்மையில் மனிதன் பெறுதற்குரிய நலங்களை யெல்லாம் பெற்றிருந்த யோபுவின் அகம் கடவுட்டன்மையுடன் இலங்கியது நோக்கற்குரியது. ஆண்டவனல் அணிவகுக்கப்பட்ட அறநெறியை அவர் பற்றிநின்றுர்; அவ்வறநெறிக் கிணங்கத் தம் வாழ்க்கையையும் நடாததினர் என்பது தேற்றம். எனவே, உலகிடை இன்பத்தை நுகர்ந்த வமயத்தில் யோபு 'இறைவனுடைய பேரருளானன்றே இவ்வின்பத்தை யான் நுகர்கின்றேன்'னென இறைவனைப் போற்றி நின்றுர் என்பது காணப் பெற்றேம்.

இன்பமுந் துன்பமும் உலக வாழ்க்கையில் மாறி மாறி வருதல் கண்கூடு. செல்வோமென்ற காரணத்தான் செல்வமெனப் பெயர் பெறாஉஞ் செல்வப்பேறு பெற்றவன் திடீரெனவறியவனகி வறுமைப் பிணியால் வாடுவதும், வறுமைநோயால் வாடி வதங்கிய ஒருவன் செல்வப் பேறு பெற்று இன்பம் நுகர்வதும் உலக இயல்பேயாம். தீரா வியாதிகளானும் ஓயாமனக் கவலைகளானும் இடிப்புண்ட இல்வாழ்க்கையானும் துன்பம் நுகருஞ் செல்வந்தர் எண்ணிறந்தார். பாடுபட்டுத் தேடிய செல்வத்தான் வயிராறவுண்டு போதுமென்ற மனதுடன் இன்பம் நுகரும் வறியோர் பலர். தொண்டைமானுந தோட்டியும் உலகிடை இன்பததை யுந் துன்பத்தையும மாறி மாறி நுகர்தல் இயல்பாம்.

அதற்கிணங்கச் செல்வம்மிகுந்து இன்பநுய்த்த யோபுவின் மீதொரு பேரிடி விழுந்தது.

"...ஒருநாள்.........ஒரு ஆள் அவனிடத்தில் வந்து எருதுகள் உழுகிறபோது கழுதைகள் அவைகளின் பக்கததில் மேய்ந்துகொண்டிருக்கையில், சபேயர் அவைகள் மேல் விழுந்து அவைகளைச் சாய்ததுக கொண்டு போனுர்கள்...என்றுன. இவன் இப்படிப் பேசிக் கொண்டிருக்கையில் வேறொருவன் வநது வானததிலிருநது தேவனுடைய அக்கினிவிழுநதுஆடுகளையும்வேலையாட்களையும் சுட்டெரிததுப் போட்டது,.....என்றுன்... இப்படிப் பேசிக்கொண்டிருக்கையில் வேறொருவன் வந்து கல்தேயர் மூன்று பவுஞ்சாய் வந்து ஒட்டகங்களின் மேல விழுந்து அவைகளை ஓட்டிக்கொண்டு போனுர்கள்......என்றுன்......இவன் இப்படிப் பேசிக்கொண்டி

ருக்கையில் வேறொருவன் வந்து உம்முடைய குமாரரும் உம்முடைய குமாரத்திகளும் தங்கள் மூத்த சகோதரன் வீட்டிலே புசித்துத் திராக்ஷரசம் குடிக்கிறபோது வனாந்தர வழியாகப் பெருங் காற்று வந்து அந்த வீட்டின் நாலுமூலையிலும் இடிக்க அது பிள்ளைகளின் மேல் விழுந்ததினால் அவர்கள் இறந்து போனார்கள்.. என்றான். 1 : 13-19

"பட்டகாலிலே படுங் கெட்டகுடியே கெடும்" எனபது உலகவழக்கு. யோபுவின் எருதுகளையுங் கழுதைகளையுஞ் சபேயர் கொள்ளை கொள்ள, ஆடுகளும் வேலையாட்களும் தீவாய்ப்பட, ஒட்டகங்களைக் கல்தேயர் ஓட்டிச்செல்ல,வறுமையின்கொடுங்கரம் யோபுவைத்தாக்க, அதுகாலை பெறுதற்கரிய செல்வமாகிய புத்திர செல்வமும் இடிப்புண்ட இல்லத்தான் ஒருங்கே யிடியுண்ண, யோபு-செல்வப்பேறு பெற்று இன்பமல்லால் துன்பத்தைக் கடுகளவுஞ் சுவைத்தறியா யோபு-கலங்கினாரல்லை; இறைவனுக்குக் கருணையில்லையெனப் பழித்தாரல்லை; பொருளையும் புத்திரபுத்திரிகளையும் இழந்து விட்டோமே யெனக் கதறினாரல்லை; இறைவனை இரந்து கருணை புரியுமாறு வேண்டினாரல்லை;

"இவை யெல்லாவற்றிலும் யோபு பாவஞ் செய்யவுமில்லை. தேவனைப்பற்றிக் குறை சொல்லவு மிலலை. 1 : 22.

ஆனால்,

"நிர்வாணியாய் எனதாயின் கர்ப்பத்திலிருந்து வந்தேன்; நிர்வாணியாய் அவ்விடத்துக்குத் திரும்புவேன்; **கர்த்தர்** கொடுத்தார், **கர்த்தர்** எடுத்தார்; **கர்த்தருடைய** நாமத்திற்கு ஸ்தோத்திரம்" 1 : 21

எனக் கடவுளுக்குத் துதி செலுத்தினாரெனின் யோபுவின் பக்தியின் திறனை எங்ஙனம் போற்றுவது? இஃதன்றோ மெய்ப்பக்தியின் இயல்பு! வறுமைப்பிணி அவருக்கு அச்சத்தை யூட்டவில்லை. புத்திரசோகம் அவரை வாட்டவில்லை. இன்பமெய்திய சமயத்தில் இருந்தது போலுந் துன்பமணுகிய வமயத்திலும் "கர்த்தர் கொடுத்தார்; கர்த்தர் எடுத்தார்; கர்த்தருடைய நாமத்திற்கு ஸ்தோத்திரம்" எனக் கூறுகின்ற நிலை ேர்ந்த பக்தி நிலையேயன்றோ?

யோபுவின் சோதனை வறுமைப் பிணியுடனும் புத்திர சோகத்துடனும் நிற்கவில்லை.

"அப்பொழுது சாத்தான கர்த்தருடைய சந்நிதியை விட்டுப் புறப்பட்டு, யோபின் உள்ளங்கால் தொடங்கி அவன உச்சந்தலை மட்டும் கொடிய பருக்களால் அவனை வாதித்தான். அவன ஒரு ஓட்டை எடுத்து, தனனைச் சுறண்டிக்கொண்டு சாம்பலில் உட்கார்ந்தான்" 2: 7. 8.

புத்திரசோகம்பெரிதும்வாட்ட யோபுவின் மனைவி, மௌனியைப் போலும் வேதனையைச் சகித்துக்கொண்டு சாம்பலில் அமர்ந்திருந்த யோபுவை யணுகி,

"நீர் இனனும் உம்முடைய உத்தமத்தில் உறுதியாய நிற்கிறீரோ? தேவனைத் தூஷித்து ஜீவனை விடும்" 2 : 9.

என்றியம்பியகாலை,

"நீ பயித்தியக்காரி பேசுகிறது போலப் பேசுகிறாய்; தேவன் கையாலே நன்மையைப் பெற்ற நாம் தீமையையும் பெறவேண்டாமோ" 2 : 10.

என்றவர் இறுத்தவுரை போற்றுதற்குரிய அறவுரையேயாம். செல்வங்களெல்லாம் ஒரே நாளில் ஒழிந்தும், பொறுத்தற்கரிய தீரா நோயும் அவரை வாட்டியும் அவருடைய முதுமொழிகள் ஞானத்தையே ஓதுகின்றன. மனம் வாக்குக் காயம் எனும் திரிகரணங்களாலும் அவர் தமக்குற்ற இன்னல்களுக்காகச் சிறிதும் இறைவனைக் குறை கூறினாரல்லை. அவர் பெற்ற அவ்வுறுதி நிலையை நாமும் பெற்றிடின் எவ்வளவு பேரின்பம் நம்மதாகும்?

யோபுவுக் குற்ற இடுக்கண்களை யோர்ந்த எலிப்பாஸ், பில்தாத், சோப்பாரென்னும் மூன்று நண்பர்கள் அவரைக் காண ஆங்குப் போந்து நோய் வாய்ப்பட்டுப் பித்தேறியவர் போலுஞ் சாம்பலில் அமர்ந்திருந்த யோபைக் கண்டதுந் துயரந் தாளவியலாது ஓவென்றலறி அவருடன் பேசவும் நாவெழாது ஏழு நாட்கள் அவருடன் அமர்ந்திருக்க (2 : 11-13) ஏழாம் நாள் தம்மைப் பீடித்து நின்ற தீரா நோயின்

வேதனையைத் தாளவியலாது யோபு வாய்விட்டலறி,

"நான் பிறந்த நாளும் ஒரு ஆண் பிள்ளை உற்பத்தியாயிற் றென்று சொல்லப்பட்ட ராத்திரியும் அழிவதாக." 3 : 3.

"நான் கர்ப்பததில் தானே அழியாமலும் கர்ப்பத்திலிருந்து புறப்படுகிறபோதே சாகாமலும் போனதென்ன" 3 : 11.

"என் போஜனத்துக்கு முன்னே எனக்குப் பெரு மூச்சுண்டாகிறது ; என கதறுதல் வெள்ளம்போல் புரண்டு போகிறது."

"நான் பயநதகாரியம் எனக்குநேரிட்டது. நான் அஞ்சினது எனககு வந்தது."

"எனக்குச் சுகமுமில்லை, இளைப்பாறுதலுமில்லை, அமைதலுமில்லை, எனக்குத் தத்தளிப்பே நேரிட்டது." 3: 24-26.

என மனம் புழுங்கி யறைந்த உரைகளை உன்னுந்தொறும் முன்னுந்தொறும் நமது மனங்கரைந்திடுவது திண்ணம். இன்பதுன்ப வன்மங்கடந்த பெரும் நிலையாகியஞானநிலையை அவர்எய்தியவரல்லை யெனினும் நம்மனோர்க்கொரு எடுத்துக் காட்டாகவே அவர் விளங்குகின்றார். தம்மை வாட்டிநின்ற நோயின் கொடுமையைத் தாளவியலாது "நான் இருத்தலினும இறததலே நன்" றென அவர் இயம்புகின்றாரல்லான் இறைவனை அவர் மறந்துங் குறைகூறவில்லை யென்பது நோக்கற்குரிய தொன்றாம்.

இவ்வாறு யோபு வருந்துங்கால் அவருடைய நண்பனாகிய எலிப்பாஸ், யோபுவுக்கு இறைவன் மாட்டன்பு குறைந்துபட்டதெனத் தவறாக எண்ணங்கொண்டு,

"நீர் அநேகருக்குப் புத்தி சொல்லி இளைத்த கைகளைத திடப்படுததினீர் - விழுகிறவனை உம்முடைய வார்த்தைகளால் நிற்கப்பண்ணித தள்ளாடுகிற முழங்கால்களைப் பலப்படுத்தினீர் - இப்பொழுதோ துன்பம் உமக்கு நேரிட்டபடியினால் ஆயாசப்படுகிறீர்; அது உம்மைத்தொட்டதினால் கலங்குகிறீர் - உம்முடைய தேவபக்தி உம்முடைய உறுதியாயும், உம்முடைய வழிகளின் உத்தமம் உம்முடைய நம்பிக்கையாயும் இருக்க வேண்டியதல்லவோ? குற்றமில்லாமல் அழிந்தவனுண்டோ? சன்மார்க்கர் அதம் பண்ணப்பட்டதெப்போ? இதை நினைத்துப்பாரும்" 4 : 3-7

என்று தேற்றி,

"தேவன் தண்டிக்கிற மனுஷன் பாக்கியவான ; ஆகையால் சர்வ வல்லவருடைய சிட்சையை அற்பமாக எண்ணாதிரும். அவர் காயப்படுத்திக் காயங்கட்டுகிறார்; அவர் அடிக்கிறார்; அவருடைய கையாற்றுகிறது.

5 : 17-18

"உம்மை யண்டியுள்ள துன்பம் உம்முடைய பக்தியின் பெருமையையும் இறைவனுக்கு உம்மீதுள்ள ஒரு தொடர்பையும விளககுகின்றது. ஆதலின் நீர் வருநதாதேயு"மென அறைநத மொழிகளைக் கேட்டு யோபு,

"சர்வ வல்லவரின் அம்புகள் எனக்குள் தைத்திருக்கின்றன ; அவைகளின் விஷம் என் உயிரைக குடிக்கிறது." 6 : 4

"தேவன்...எனனைத் துண்டித்துப் போட்டால் நலமாயிருக்கும்......அப்பொழுதாவது எனக்கு ஆறுதலிருககுமே" 6: 9-10

"நான் காததுக்கொண்டிருக்க என்பெலன் எம்மாததிரம்?......என்பெலன் கற்களின் பெலனோ? என் மாம்சம் வெண்கலமோ?

6 : 11-12

என்று கதறி இறைவனை நோக்கி,

"மன்னுயிரைக் காப்பவரே பாவஞ்செய்தேனானால் உமககு நானசெய்ய வேண்டியதென்ன? நான எனக்குததானே பாரமாயிருக்கும்படிக்கு நீர் எனனை உமக்கு இலக்காக வைத்தது என்ன?"

"என மீறுதலை நீர் மன்னியாமலும் என் அக்கிரமத்தை நீக்காமலும் இருக்கிறதென்ன?" 7 : 20 21

" இதுகாலை யான்படும்பாடு யானறியாமற் செய்தபாவங்களின் விளைவுகளேயாம். ஆதலின் என் ஆண்டவரே ! என்னை மன்னித்தலாகாதா " வென வேண்டுவது தமக்குற்ற துன்பம்தாம் அறியாதியற்றிய தம்வினையின் பயனல்லான் இறைவனாலல்ல வென்று யோபு உணர்ந்தா ரென்பதையே விளக்குகின்றது.

அம மொழிகளைச் செவிமடுத்த, பில்சாத், அன்பரே !

"தேவன் உத்தமனை வெறுக்கிறது மில்லை பொல்லாதவர்களுக்குக் கைக்கொடுக்கிறது மில்லை" 8 : 20

பின் உம்முடைய துன்பம் ஒழிந்து படும்; வருத்த முறுதேயு" மெனத் தேற்ற, யோபு,

"தேவனுக்கு முன்பாக மனுஷன் நீதி மானா யிருப்பதெப்படி?" 9 : 2

"நான் நீதிமானாயிருந்தாலும் அவரோடே வாழக் கூடாமல் என் நியாயாதிபதியினிடத்தில் இரக்கத்துக்குக் கெஞ்சுவேன்." 9 : 15

"நான் என்னை நீதிமானாக்கினாலும் என் வாயே என்னைக் குற்றவாளி யாக்கும்; நான் உத்தமன் என்று சொன்னாலும் நான் மாறுபாடானவன் என்று அது சாட்சி கொடுக்கும்." 9 : 20

"நண்பரே! மனிதர்களாகிய நம்முடைய நீதி எல்லாம் வல்ல இறைவனின் பெரும் நீதியின் முன் எம்மாத்திரம்? எனவே, நான் அவர் அருளை இறைஞ்சுவேன். நான் நீதிமான் என்னும் பெரும் பெயருக் கருகனல்லன்" என்று கூறுவது யோபுவின் தாழ்மையையும் அவர் பக்தியின் [illegible] கூறலும் முடியாது. அறிவிலாச் சில அன்பர்களைப் போலும் "என் ஆண்டவரே! மூன்று வேளைகளிலும் நான் உம்முடைய ஜபத்தை யோதுகின்றேன்; உம்முடைய வேத புத்தகத்தை அநுதினம் ஓதுகின்றேன். ஆதிவாரந்தொறும் உம்முடைய ஆலயத்துக்குத் தவறாமல் செல்கின்றேன்; உமக்குரிய காணிக்கைகளை முறையாய்ச் செலுத்துகின்றேன். எனவே யான் உம்முடைய பக்தனல்லனோ? என்னை நீர் இவ்வாறு வாட்டுதல் முறையோ"வென யோபு இறைவனிடம முறையிட விழைய வில்லை. தாம் நீதிமானாக விருந்து அறநெறி பற்றியவராக விளங்கியும் பக்தி முதிர்ந்தவராகத் தம்மை அவர்கருதினாரல்லை. "எனக்கருள் புரியுமாறு நான் எல்லாம் வல்ல இறைவனைக் கெஞ்சுவேன்" என்னும் மொழி அவருடைய தாழ்மையையே ஓதுகின்றது. அன்பு சமயமாகிய இரக்ஷகரின் சமயம் தாழ்மையையே அடிப்படையாகக் கொண்டிலங்குகின்றது. அவருடைய வாழ்க்கையும தாழ்மையுடன் விளங்கியது. ஆனால் அவருடைய பெயரைத் தாங்கிய அடியார்களுள் எத்துணைப் பேர் தாழ்மையைத் துறந்து அகத்தூய்மையை அறவே களைந்து, புறவேடப் பற்று மிகுந்து தானெனும் ஆணவ மிகுந்து திரிகின்றார்கள். ஆண்டவன் அவர்களுக்கு நல்லறிவை யருள்க.

"தேவன் உத்தமனை வெறுக்கிற தில்லை. நீர் வருந்தாதேயு" மென்றியம்பிய எலிப்பாஸுக்குத் தாம் உத்தமனெனக் கூறற்கருகனல்ல வெனத்தாழ்மையான் மொழிந்த யோபு,

"நான் தேவனை நோக்கி; என்னைக் குற்றவாளி யென்று தீர்க்காதிரும்; நீர் எதினிமித்தம் என்னோடே வழக்காடுகிறீர். அதை யெனக்குத் தெரியப்படுத்து மென்பேன்." 10 : 2

என்று மொழிந்து,

"நான் துன்மார்க்கன் அல்ல வென்பது உமக்குத் தெரியும்." 10 : 7

"எனக்கு ஜீவனைத் தந்தது மல்லாமல் தயவையும் எனக்குப் பாராட்டினீர்; உம்முடைய பராமரிப்பு என் ஆவியைக் காப்பாற்றினது." 10 : 12

என்றிறைஞ்சி.

"சிங்கத்தைப் போல என்னை வேட்டையாடி எனக்கு விரோதமாய் உமது அதிசய வல்லமையை விளங்கப் பண்ணுகிறீர்." 10 : 16

என மொழிவது துன்பத்திலும் அவர் ஆண்டவன் பெருமையையே யுன்னுவதை விளக்கும். "பாழுந் தெய்வத்திற்குக் கண்ணில்லை" யென்று கல்லாக் கயவர்களும் போலி வேடதாரிகளும் பழித்திடும் நிலையில் வாடும் யோபு "உமது அதிசய வல்லமையை விளங்கப்பண்ணுகிறீர்" எனத் துன்பத்திலும் இன்பத்திலும புகழ்வதன்றோ மெய்ப்பக்தியின் மாண்பு!

யோபுவின் தாழ்மை யோடியைந்த மொழிகளை ஆய்ந்தறியும் அறிவற்ற அவருடைய நண்பனாகிய சோப்பார் அவரை நோக்கி,

"வாய்ச் சாலகன் நீதிமானாய் விளங்குவானோ?" 11 : 1

"நான் துன்மார்க்க னல்லனென உமக்குத் தெரியும்" என்று இறுமாப்புடன் அறையும் யோபுவே,

"மனுஷருடைய மாயதனை அவர் அறி வார். அக்கிரமத்தை அவர்கண்டும் அதைக் கவனியாதிருப்பாரோ!"

நீர் நீதி நெறிபற்றி இருக்கின்றேன் என்றெண்ணியுள்ளீர். ஆனால் சில அக் கிரமங்கள் உமக்குரியவைகளா யிருத் தல் வேண்டும். எனவே, ஆண்டவர் அதற்காகவே உம்மைத் தண்டித்துள் ளார் என்பது திண்ணம். ஆதலின்,

"நீர் உம்முடைய இருதயததை ஆயத்தப் படுததி உம்முடைய கைகளை அவருக்கு நேராக விரிததால் நலமாயிருக்கும்."

"உம்முடைய கையிலே அக்கிரமம இருந தால் அதைத தூரததில் அகற்றிவிட்டு அநியாயம் உம்முடைய கூடாரங்களில் வாச மாயிருகக வொட்டாதிரும்." 11 : 13 - 14

அது காலை "உம்முடைய துன்பம் அழிந்துபடும்; இறைவனின் பேரருள் உம்மை நாடிடும்" என்று கூற, யோபு,

"நீங்கள் அறிந்திருக்கிறதை நானும் அறிந் திருக்கிறேன்; நான் உங்களுக்குத தாழ்நத வனல்ல. 13 : 3

பேசாமலிருத்தல் நலமாகும் 13 : 5

என்று தம்மீது பழிசுமத்திய அன்பர் களை வேண்டிக் கொண்டு,

'அவர் என்னைக் கொன்று போட்டாலும் அவர் மேல் நம்பிக்கையாயிருப்பேன்; ஆனா லும் என்வழிகளை அவருக்கு முன்பாக ரூப காரம் பண்ணுவேன்.

'அவரே என ரட்சிப்பு; மாயககாரனே அவர் சநநிதியில் சேரான." 13 : 15 - 16

என்றுறைந்த மொழிகளைச் சிறிது ஆரா யல் நன்றாம்.

யோபு இருந்த நிலையை உமது அகக் கண்ணால் உன்னிப்பாருங்கள். ஓரே நாளில் உற்றாரும் உற்றபொருள்களும் ஒழிய, பெரும் பிணியின் வேதனை அவரைப் பெரிதும்வாதிக்க, இல்லாளும் இறைவனை இகழ்ந்திட பிதற்றியவள் போலும் அவரை இறைஞ்சிட, நண்பர் கள் "நீதிமான் என்று நீர் உம்மைக் கருதுகின்றீர். அவ்வாறு நீர் நீதி மானாக இருப்பின் ஆண்டவர் உம்மைத் துன்புறுத்த இடமில்லை யாதலான் உம் முடைய அக்கிரமங்களை முறையிட்டு அவரருளை வேண்டு"மென்று அவரைப் பழிக்க, இடிப்புண்ட அந்நிலையிலும் "அவர் என்னைக் கொன்று போட்டா லும் அவர் மேல் நம்பிக்கையாயிருப் பேன். அவரே என் ரட்சிப்பு" என று கூறுகிற ஒரு மனோநிலை - ஒரு வைராக் கிய திறன்-எளிதில் ஒருவன் பெறுதற் குரிய திறனுமன்று; துயரம் - தீராத் துயரமண்டிய காலததில ஒருவன் பற்றி நிற்கும் நெறியுமன்று. அகத தூய்மையான் அரும்பும் பக்திமணம், மாறா அன்பின் மணம் அடியாரின் நல் லுரைகளில் மலிதல் காண்க. யோபு வின் துயர் நிலையில், இடிமேல் இடி விழும் பயங்கர நிலையில் நாம இருப் பின், அவர் அறைநதவாறு நாமும் அறைவோமா? அவருடைய அகத் தூய்மையைப் போலும் ஓர் அருந்தூய் மையை நாம் எய்திடும நாள் எந்நாள்? அவரைப்போல் நாமும் பகதி நெறியை நாடும் நாளும் வந்திடுமோ? புறவேடங் களை நம் மனம் பெரிதும் நாடுகின் றதே! உலகை ஏமாற்றுவது போலும் இறைவனையே ஏமாற்ற நாம் துணிதல் முறையோ? ஜபங்களை ஒரு கடனாகக் கருதி நாம் இயந்திரங்களைப போலும் ஓதல் ஆறறிவு படைதத நம்போன் றோர்க்கும நீதியோ? சீனதேயத்தார் ஜப சக்கரத்தைச் சுற்றி ஆண்டவனுக்குச் செலுததுந் துதியும், கிராமபோன் பிளேட்டைப் போலும ஆர்வ மற்றுக் கிளிப்போலும் ஜபத்தைக் குருட்டுப் பாடமாக உணர்வற்று ஓதும் ஜபமும் ஒன்றே யன்றோ? ஆறறிவினையும் ஆண்டவனையும் பிணித்து நிற்கும் பிணைப்பே ஜபமென எத்துணைப் பேர் கருதுகின்றோம்? தூய்மையான அகத் திலிருந்து ஆர்வத்துடன் பொங்கி எழுந்து உரைகளாகப் பரிணமித்தற் குரிய துதி குருட்டுப் பாடமாகவும் விதியல்லாத கடனாகவும் மாறியதென்! இறைவனை இறுகப்பிடித்து நம்மையாட் கொண்டு நமக்கருள் புரியுமாறு வற் புறுத்தும் வன்மையுடைய தூயஜபம்

செய்யுங்கால் கடவுள் திருமுன் யாமிருக்கின்றோம என்ற ஓர் அச்ச ஆனந்த வுணர்வு நமமுள்ளத்தில் எத துணை முறை உதிககினறது? அன்பர் களே! விழிமின்; ஜபததின் பெரு மையை யோர்மின்; புறவேடங்களை விடுமின்; வேதததை இனி தாராய்ந்து அதில் ஆழ்நது விளங்கும நுண்ணிய கருத்துக்களை யோர்நது அதறகிணங்க உங்களுடைய வாழ்க்கையை நடாத்து மின். அதுகாலை இகபர சுகமிரண்டும் இறைவனருளால் நம்மை யணுகுவது திண்ணம்.

# பிறர் நம்மைக் கண்டவிதம்

## மார்க்கோபோலோ யாத்திரை

[திரு. சோமசுந்தர தேசிகர்]

III

அந்தக் கோயிலைப் பராமரிததுவரும் கிறிஸ்தவர்கட்கு அநேக தென்னை மரங்க ளிருக்கின்றன. மரம் ஒன்றுக்கு ஆறு குரோட் அரசனுக்கு வரியிறுக கின்றனர். இனி அந்நாட்டுக் கிறிஸ்த வர் தோமையார் இறந்த கதையைக் கூறினபடி கூறுவேன்:

தோமையார் காட்டுக்குள் தம்முடைய பர்ணசாலைக்கு வெளியில் செபம் செய் துகொண் டிருநதார்; அவரைச் சுற்றி மயில்கள் ஆடிக்கொண்டிருந்தன; அந நாட்டில் மயில் திகம். முற்கூறிய கோவி வகுப்பைச் சார்ந்த ஒருவன் மயிலைக் கொல்ல நினைத்து அம்பொன்றை விட் டான்; அவனுக்குச்சுவாமியார் அவவிட மிருந்தது தெரியாது; அந்த அம்பு தவறி அவரது வலதுபுறத்திற்படவே, அவர் அந்தப் புண்ணின் துன்பத்தால் கடவுளைத் துதித்துக்கொண்டு உயிர் துறநதார். அவர் இறந்த அந்தவிடத் திற்கு வருவதற்கு முன், நியூபியா வென்ற நாட்டிலிருந்துகொண்டு அனே கரைக் கிறிஸ்தவ ராக்கினர்.

இங்குப் பிறக்குங் குழந்தைகளெல் லாம் கருமைநிற முடையனவாகவே யிருக்கின்றன; ஆயினும் அவர்கள் எவ் வளவுக் கெவ்வளவு கருமையாக விருக் கின்றனரோ, அவ்வளவுக் கவ்வளவு போற்றப்படுகின்றனர். பெற்றோர் குழந்தைகளைப் பிறநதநாள் முதற் கொண்டு வாரத்துக் கொருமுறை நல் லெண்ணெயைத தடவி முழுக்காட்டு கின்றனர்; அதனால் அவர்கள் பிசா சைப்போல்கருமையா யிருக்கின்றனர்.[1] இஃதன்றி அவர்கள் தங்கள் தெய் வங்களைக் கரியனவாகவும் பிசாசங்களை வெண்மையாகவும்[2] செய்கின்றனர்; அவர்களுடைய கடவுள் படிமங்களுக் கும் கருமை பூசுகின்றனர். அவர்க ளுக்குப் பசுவிடத்தில் நம்பிக்கை யதி கம். போருக்குச் செல்லுங்கால் காட் டுப் பசுவினுடைய மயிர்களை யெடுத்துக் குதிரைகளின் கழுத்தில் கட்டுகின்ற னர். காலாட்படைவீரர்களாயின் அவர் கள் தங்களுடைய கேடயததிலேனும் தலையிலேனும் மயிரைக் கட்டிச் செல் லுகின்றனர். இவ்வாறு இந்த மயிரைக் கட்டிக்கொண்டு போருக்குச் செல்வ தால் இநத மயிருக்கு நல்ல கிராக்கி யுண்டு. இதைக்கட்டிக்கொண்டு போருக் குச் சென்றால் போரில் புண்ணின்றி திரும்பலா மென்பது அவர் தங் கொள்கையாகும்.

[1] இஃது இயற்கைக்கு விரோத மென்பது சொல்லாமலே விளங்கும்.

[2] பிசாசங்களை யுருச்செய்வது கண்டது மில்லை; கேட்டது மில்லை.

## மோட்டுப்பள்ளி நாட்டைப்பற்றி [1]

மாபாரை விட்டு ஓராயிரங் கட்டையளவு[2] வடக்கே சென்றால் மோட்டுப்பள்ளி நாட்டையடைவோம். இது முற்காலத்தில் ஓரரசனால் ஆளப்பட்டு வந்தது; அவனிறந்த பின்னர் சென்ற நாற்ப தாண்டுகளாக அவனுடைய இராணியின் அரசாட்சியி லிருக்கிறது[3] அவள் எல்லாவற்றையு மறிந்தவள்; தன் கணவனிடத்தில் வைத்த அன்பினால் பிறனொருவனைக் கணவனாக வரித்துக்கொள்ள மறுத்துவிட்டாள். அவள் கணவனிறந்தபின் இந்த நாற்பதாண்டுகளாக அந்த நாட்டைச் செவ்வையாகத் தன் கணவ னாண்டதுபோல ஆண்டு வந்திருக்கின்றாள். இவள் நியாயம், ஒழுங்கு, சமாதானம் முதலாயவற்றில் மிக்க உறுதியுடையவளாகையால் ஜனங்கள் இதற்கு முன்னாண்ட அரசன், இராணிகளைவிட இவளை வெகுவாகக் கொண்டாடுகின்றனர். ஜனங்க ளெல்லோரும் படிம வழிபாட்டினர்; இவ்வரசாங்கம் எந்த இராஜ்யத்துக்குங் கீழ்ப்பட்டதன்று. அச்சனங்கள் ஊன், நெல், பால் இவற்றையுண்டு ஜீவிக்கின்றனர். இந்த நாட்டிற்றான் வைரங்க ளகப்படுகின்றன.[4] அவை எவ்வாறு எடுக்கப்படுகின்றனவென்று கூறுவேன்: அப்பக்கங்களில் மிக்க உன்னதமான மலைகளிருக்கின்றன.[1] மாரிக் காலத்திலே கனத்த மழை பெய்யும்போது மலையிலிருந்து மழைநீர் அடித்தோடும்; மழை நின்று நீர் வற்றியபின் மக்கள் மலையோரங்களிற் சென்று தேடிப்பார்ப்பர். அங்கே நிறைய வைரம் அகப்படும். கோடையிலும் வைரங்கள் மலைப்பக்கங்களிலே கிடைக்கு மாயினும சூரிய வெப்பம் தாங்க வியலாது; அருந்த நீரும் அகப்படாது. இஃதன்றி பெரும் பாம்புகளும் பலவிதப்பூச்சிகளும் சூரிய வெப்பத்தா லுண்டாகின்றன. பாம்புகளோ அதிக விஷமுள்ளவை; அதனால் அங்குச் சென்று அதன் விஷத்தால் மாண்டுபோனவர் பலராவர்.

இந்த மலைகளுக்கு நடுவில் பல பள்ளத்தாக்குகள் இருக்கின்றன; அவற்றிற்கு மக்கள் செல்வது அருமை. வைரம் பொறுக்கச் செல்வோர் பல மாமிசத் துண்டங்களைக் கொண்டு போவர்; இவற்றை அப்பள்ளத்தாக்குகளில் எறிவர். பெரும் பெரும் கழுகுகள் அவ்விறைச்சித் துண்டங்களைத் தூக்கிக்கொண்டுவந்து தின்பதற்காக மலையின்மே லுட்காரும். அப்பொழுது மக்கள் அவ்விறைச்சிகளைக் கழுகுகள் தின்னாதபடி விரட்டுவர். அவை மாமிசங்களைப் போட்டுவிட்டு ஓடிப்போம். அந்த இறைச்சித் துண்டுகளினடியில் வைரங்கள் ஒட்டிக்கொண்டிருப்பதைச் சேர்த்துக்கொண்டு வருவர்.[2] வைரங்களைப் பொறுக்க மற்றொரு விதமுண்டு. கழுகுக் கூடுகளுக்கு மக்கள் சென்று அங்கு மாமிசத் துண்டுகளைத் தின்று இட்ட எச்சத்திலிருந்து வைரங்களைப் பொறுக்குவர். கழுகுகளையே பிடித்தாலும் அவற்றின் வயிறுகளில் வைரமிருக்கும். இப்படி மூன்று வகையாக இரத்தினங்களெடுக்கும்விதத்தைக்கூறினேன். இந்த மோட்டுப்பள்ளி நாட்டைத்தவிர வேறோ ரிடத்திலும் இரத்தினங்கள்

---

1மோட்டுப்பள்ளி யென்பது நெல்லூர் ஜில்லாவிலுள்ள ஓரூர். இது ஓரங்கல் அரசருக்குக் கடற்றுறையாக விருந்தது. இது பொழுது ஒரு சிறு கிராமமாக விருக்கிறது. இது காகதீய நாட்டைக் குறிக்கும்.

2கட்டையென்று ஒருவர் மொழிபெயர்த்துள்ளார். அதுவே பொருத்தமுடையதாகக் காண்கிறது.

3ஓரங்கல் நாட்டுக் கணபதி யரசன் கி. பி. 1198 முதல் 1261 வரை ஆண்டா னென்பர்; பின்னர் அவன் மகள் ருத்திராம்பாள் ருத்திரனென்ற பட்டத்தோடு 1258 முதல் 1296 வரை அரசாண்டாள். அவள் காளிற்றான் இந்த ஐரோப்பியர் வந்தது சென்றதும். ஆனால் இவர் சொல்லுகிறபடி கணபதியின் மனைவியல்லள் ருத்திராம்பாள்.

4கோலகொண்டா வைரங்கள் நாட்டில் பேர்போனவை.

1கிழக்குத தொடர்ச்சி மலை.

2இதுவும் பின்வருவதும் வெருங்கதைகள். ஐரோப்பியர் இவற்றையெல்லாம் நம்பியிருந்தனர். சிந்துபாத் கதையிலும் இப்படியே சொல்லப்பட்டிருக்கிறது.

உண்டாவதில்லை. அங்கு ஏராளமாகவும் பெரியனவாகவும் காணப்படுகின்றன. அநநாட்டில் அகப்படும் இரத்தினங் களில் உயர்ந்தன போகக் கழிபட்டவை யே நம் நாட்டுக்கு வருவன. வைரங் களின் மேலானவையும் மற்றைய இரத் தினங்களும அங்நாட்டிலுள்ள சக்கர வர்த்தி, அரசர், தலைவர் முதலாயினு ருக்கு விற்கப்படுகின்றன. அவர்க ளிடமே உயர்ந்த கற்களிருக்கின்றன வென்பதுண்மை.

இநத நாட்டில் நாணயமும் மென்மை யும விலையுமுடைய ஆடைகள் நெய்யப் படுகின்றன.[1] அவ்வாடைகள் சிலந்தி யின் ஆடைபோல் அவ்வளவு மென்மை யாக விருக்கின்றன. அவைகளை அணிய விரும்பாத அரசரேனும் இராணி யேனும் உலகில் இருக்க வியலாது. மக்களும் ஏராளமான ஆடுகளுடையவர்; அங்நாட்டில் மக்களுக்கு வேண்டிய பண் டங்களெல்லாம் அதிகமாகக் கிடைக் கின்றன. இனி இங்நாட்டைப்பற்றிச் சொல்லவேண்டிய தொன்று மில்லை. அபிரேயமன் னென்பார் வருகின்ற லார்நாட்டைப்பற்றிக் கூறுவேன் :

லார்நாட்டைப்பற்றி[2]

அர்ச். தோமையார் அடக்கமாயிருக் கின்ற இடத்துக்கு[3] மேற்கில் லார்நாடு இருக்கின்றது ; அங்கிருந்தே அபிரேய மன்[4] (Abraiman) னெல்லாம் வரு கின்றனர். இந்த அபிரேய மன்னர் உலகிலுள்ள வணிகருள் மேலானவர் ; உண்மையே பேசுபவர்; எவ்வளவு இலா பம வந்தாலும் பொய்யுரைக்க மாட்டார். அயல்நாட்டு வணிகமெருருவன் இங்நாட் டுப் பழக்க வழக்கங்கள் தெரியாதவன் வநது தன்னுடைய பண்டத்தை விற்க விரும்பினுல், அவனை விருப்புடனேற்று அவனுக்கு ஊதியம் கிடைக்கக்கூடிய வழியில் விற்று உடையவனிடம் சேர்ப் பர் ; உடையவன் விரும்பிக் கொடுத்த தரகை[1] மனமுவந்தேற்பர். அவர்கள் மாமிசமுண்பதுமில்லை ; கள்குடிப்பது மில்லை ; மிக்க தூய வாழ்க்கை நடத்து வர். பிறனில் விழையாது இல்லறம் நடாத்துவார் ; பிறர்க்குரிய பொருளை மறந்துங்கொள்ளார் ; அவ்வாறிருக்கின் றது அவர்களது நியாயவழி. ஒருதோட் புறத்திலிருந்து மற்றொரு புறம் வந்து கைக்குக் கீழ் முடிந்த நூலொன்றை அவர்களெல்லோரும் அணிநதிருக்கின் றனர்.[2] அதனுல் அந்நூல் முதுகிலும் மார்பிலும் குறுக்கே கிடக்கின்றது.

விலைபெற்ற இரத்தினங்களையும் பரு முத்துக்களையும வாங்க ஆவலுடைய ஓரரசன்[3] அவர்கட்குண்டு. அவன் இந்த அபிரேயமன் வணிகரைச் சோழ நாட்டுக்கனுப்பி அங்ககப்படும் பருமுத் துக்களைக் கொணரச் செய்து ஒற்றைக் கிரட்டி விலைகொடுத்து வாங்குகின்றுன். அந்தச் சோழநாடு மிக்க வளப்பமுடை யது[4] அங்கே நல்ல முத்துக்கள் அகப் படுகின்றன.[5] இவ்வாறு அங்நாட்டரசன் விலைபெற்ற திரவியங்களை வைத்திருக் கின்றுன்.

இந்த அபிரேய மன்னர் படிமவழி பாட்டுக்காரர் ; மற்றவர்களை விட இவர் கள் அதிகமாகக் குறி, சகுன சாத்திரங் களைக் கையாளுகின்றனர். அவர்கள்

---

[1]இது மசூலிப்பட்டணம் முதலான இடங் களில் நெய்யப்படும் உப்பாடையைக் குறிக் கும். பழந்தமிழ் நூல்களில் அரவுரி, பாலாவி போனற ஆடைகள் குறிக்கப்பட்டிருததல் ஈண்டுக் கவனிக்கத்தக்கது.

[2]இதனை லாடதேச மென்பர். யூல். ஆனுல் சொல்லும் விஷயங்களைப் பார்த்தால் தொண்டை நாடாகத தோற்றுகிறது.

[3]மயிலாப்பூர்.

[4]இவர்களைப் பிராமண ரென்பர் யூல். அவரே அவ்வாறுயின் வாணிபத்துக்கும் அவர்கட்கும் சம்பந்தமில்லையேயென மயங் குவர். இவர்கள் ஜயினர்களாக விருப்பரோ வென்று ஐயுறவேண்டியிருக்கின்றது.

[1]டிஸ்கவுண்டு.

[2]பூணூல். ஜயினருக்கும் பூணூலுண்டு.

[3]போலோ வந்தகாலம் சோழராச்சியம் சிதறுண்டுகிடந்தது; தொண்டைநாட்டைச் சம்புவராயன முதலாயினுர் ஆண்டுவந்தனர்.

[4]அக்காலத்திற் சோழநாடு பாண்டிய ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் கீழிருந்தது.

[5]பாக்ஸ் ஜல சந்தியில் முத்துச் சலாபமுண்டு.

வழக்கமொன்றை ஈண்டு உதாரணமாகக் குறிக்கின்றேன். வாரத்திலுள்ள ஒவ்வொரு நாட்கும் ஒரு சகுனம் ஏற்படுத்தி யிருக்கின்றனர். ஒரு பண்டம் விலைக்குக் கொள்ள வேண்டியிருப்பதாக வைததுக் கொள்ளுவோம்; வாங்க வேண்டியவன் காலையிலெழுந்ததும் வெயிலில் நின்று தன்னுடைய நிழலை அளப்பான். அஃது அன்று இவ்வளவு இருக்க வேண்டுமென்று சொல்லுவான். அந்நீழல் கணக்குப்படியிருக்குமாயின் வியாபாரத்தை அன்று முடிப்பான். இல்லாவிடில் அந்நீழல் கணக்குப்படி வரும்வரை காத்திருப்பான். ஒவ்வொரு நாளைக்கும் நீழல் இவ்வளவு அளவிருக்க வேண்டுமென்று கணக்கிருக்கிறது;[1] அநத அளவுப்படி யிருந்தாலன்றி வணிகன் தன் வியாபாரததை முடிக்க மாட்டான். இஃதன்றி ஒவ்வோர் நாளுக்கும் அவர்கள் ஒருமணி நேரம் கெடுதியான காலம் என்று நிர்ணயித்திருககின்றனர்; அதனைக் கோயியாக்[2] என்பர். உதாரணமாகத திங்கட்கிழமையில் யர்ஸில் பாதியும்[3] செவ்வாய்க்கிழமை மயர்ஸும் புதன்கிழமை கோனஸும்[4] இதுபோன்ற காலங்கள் ஆகாதவை. இவர்கள் ஏதாவது புதிய பண்டம் ஒன்று வாங்க வேண்டியிருக்கும்போது ஒரு பல்லியைக் கண்டால், அது நல்ல பக்கத்திலிருந்து வந்தால் அவர்கள் வாங்கவேண்டிய பண்டத்தைக் கொள்ளுவர். அவ்வாறன்றி அசுப பக்கத்தினின்று வருமாயின் எவ்வளவு இலாபம் வருவதா யிருந்தாலும் கொள்ளார்.[1] இஃதன்றி, வெளியிற் செல்லும்போது, யாராவது, தும்மினால், அது நற்சகுனமாயிருந்தால் செல்வர்; இல்லாவிடில் எவ்வளவு காலம் அங்கேயே நிற்கவேண்டுமோ அவ்வளவு காலம் நிற்பர். அன்றியும் செல்லும வழியிற் பறவையொன்று பறக்குமாயின் அது நற்சகுனமாயின் முன் செல்லுவர்; அவ்வாறில்லாவிடில் பின் போவர்; இவர்கள் பதரிகளைவிட மிகக் கேடானவர்.

அபிரேய மன்னர் உணவில் மிகச் சுருக்கமுடையவர்களாகையால் நீண்ட நாள உயிர்வாழ்கின்றனர். அவர்கள் உடலினின்றும் சிறிது இரத்தம் வெளிப்படாதபடி பார்க்கின்றனர். அவர்கள் பல் மிக்க உறுதியானவை. தூய்மையு மது அவர்களுண்ணும் ஒரு மூலிகையால் உண்டாகின்றது. அது முகவசீகரத்தையும் உடல் நலத்தையும் உண்டாக்குகின்றது.

சுகி (Chugi) என்று பேருடைய பிறிதொரு வகுப்பினர் இருக்கின்றனர். இவர்களும்அபிரேயமன்னர்களாயினும் மத சம்பந்தப்பட்டவர்கள்; கடவுள் பூசகர். அவர்கள் 150 முதல் 200 ஆண்டு வரை உயிர்வாழ்கின்றனர். அவர்களுண்பன சிலவே; ஆயினும் அவைநல்ல பண்டங்களேயாம். இவர்கள் பாதரசம், கந்தகம் இரண்டையுஞ் சேர்த்து ஒருவிதப் பானமாகக்கூட்டி மாதமிருமுறை குடிககின்றனர். இதனால் ஆயுள் நீடிக்கிறதென்கின்றனர். இதனை அவர்கள் இளம் பிராயமுதற் பருகுவதாகக் கூறுகின்றனர்.

இவர்களுள் சிலர் கடுமையான பிரமசரிய நிலையையுடையவர்கள்; இவர்கள் நிர்வாணிகள்; பசுவை வணங்குகின்றனர். அவர்களுள் பெரும்பாலோர் பித்தளை, ஈயம், பொன்னாலான ஒரு பசுவை நெற்றியிலணிந்திருக்கின்றனர். சாணத்தை யெடுத்து எரித்துத் தூளாகச்செய்து குழைதது உடல் முழுவ

---

[1] இவ்வழக்கம் இந்நாட்டி லிருப்பதாகத் தெரியவில்லை. அடியளந்து நாழிகை கணிப்பது இயல்பு.

[2] இதனைத் தியாச்சிய மென்பர் கால்டு வெலும் யூலும். இஃது இராகு காலததைக் குறிக்கும். இதனை அவர்கள் அறியாரென்று காண்கிறது.

[3] காலை 8 மணி.

[4] நண்பகல் 12. மணி புதன்கிழமை இராகு காலம் 15 நாழிகை முதல் பதினேழரை நாழிகை வரையில்.

[1] பல்லி சொல்லுக்குப் பலனே யொழிய வருகைக்குப் பலனில்லை.

தும் பூசுகின்றனர். கிறிஸ்தவர் பரிசுத்த நீரை உபயோகிப்பது போன்றே இவர்களும் இதனை உபயோகிக்கின்றனர். அவர்களைப் போஷிப்பவரைக் கண்டாலும் இந்தப் பூதியிற் சிறிது அவர்கள் நெற்றியிலிடுகின்றனர். அவர்கள் தங்களுணவை சட்டி தட்டுகளி லுண்ணாமல் வாழையிலை முதலான பெரிய இலைகளிலுண்கின்றனர்; ஆயினும் இவை சருகுகளேயன்றிப் பச்சையிலையன்று. பச்சையிலைக்கு உயிருண்டென்றும், அவற்றை உயிர்வதை செய்வது பாவமென்றும் கூறுகின்றனர். அவர்களுடைய ஆகமங்கள் செய்யவொண்ணாதெதென்று தடுப்பனவற்றை அவர்கள் எக்காரணத்தை முன்னிட்டுஞ் செய்வதைக் காட்டினும உயிர்துறப்பர். எவராவது இவ்வாறு நிர்வாணமாகச் செல்வது வெட்கக்கேடான செய்கையன்றோவென வினவின், இவர்கள், 'நாங்கள் உலகில் நிர்வாணமாகவே தோன்றினேம் ; பற்றொன்றி இருக்கவே விரும்புகின்றோம. அன்றியும் உடலாற்செய்த பாவமொன்று மின்மையான் அதனை மூடவேண்டுவது மில்லை; வெட்கமடையக் காரணமுமில்லை; உடற்குற்றஞ் செய்யும் நீங்கள் வெட்கமுடைமையாலே நிர்வாணத்தை மறைக்க வேண்டுவது கடமை' யென்கின்றனர்.

அவர்கள் எக்காரணங் கொண்டும் பறவை, கொசு, பேன் எதுவாயினும் யாதொரு பிராணியையுங் கொல்லார். அவர்கள் இவற்றிற்கும் உயிருண்டாகையால் இவற்றைக் கொல்வது பாவச் செயலென்பர். காய்ந்த வற்றை யன்றி பச்சையான கறிகளையுண்ணார். மேலாடையின்றி, விரிப்பின்றி வெறுந்தரையில் அவர்கள் நிர்வாணமாக உறங்கி இறவாது உயிருடனிருப்பது மிக்க அதிசயமானது ; அவர்கள் ஒவ்வொருநாளும் பட்டினிகிடந்து நீரையன்றிவேறொன்றும் பருகுவதில்லை. ஒரு புதிய சீடனைத் தங்கள் மடத்திற் சேர்க்க வேண்டிய பொழுது சிறிது அவனை மடத்தில வைத்துத் தாங்கள் செய்வதைக் காட்டிப் பழக்குவர். பின்னர் தேவதாசிகளையழைத்து அவர்களுடைய சிக்கலைக்கும்படி தூண்டுகின்றனர். அவன் அதனை லட்சியப்படுத்தாமல் இருப்பானாயின் அவனைச் சேர்த்துக் கொள்ளுகின்றனர். அவனுக்குச சிறிது பரிபவமுண்டாயின் மறுபடியும் அவனை வீட்டுக்கு அனுப்புகின்றனர்.

அவர்கள் பிடிவாதமான விக்கிரஹ ஆராதனைக்காரராகையால் அது பேயை வணங்குவதை யொத்திருக்கின்றது. அவர்கள இறந்தவுடலைத் தீயிலிடாவிடின் புழுக்களுண்டாகி அவை மரிக்குமென்கின்றனர். உடலில் ஊன்போன பின்னர் இப்புழுக்கள் உணவின்றி இறக்க நேரிடுமாகையால் அப்பாவஞ் சேருமென்று அதனை நீக்கவே மரித்தோர்சவத்தைத் தீயிலிடுவதாகக் கூறுகின்றனர். இதுபொழுது மாவாரைச் சார்ந்த பெரும்பகுதியின் விருத்தாந் தங்களைச் சொன்னேன் ; இனியும் அதனைச் சார்ந்த காயல் பட்டினத்தைப்பற்றிக் கூறுவேன்.

## காயல்[1]

காயல் என்பது ஒரு பெரிய கண்ணியமான பட்டினம் ; அது சகோதரர் ஐவருள் மூத்தவரான அஷரைச சேர்ந்தது;[2] மேறகேயுள்ள ஹார்மஸ், கிஸி, ஏடென், அரேபியா முதலான விடங்களிலிருந்து குதிரையையும மற்றும் பல பண்டங்களையு மேற்றிகொண்டு வரும் கப்பல்கள் இந்தப் பட்டினத்திற்றான் தங்குகின்றன. இதனால் சுற்றுப் பக்கங்களிலுள்ள பலர் அங்கு வந்து கூட,

---

1இதுவே கொற்கை யென்ற துறைமுகம். கொற்கை தாமிரபர்ணியின் முகத்துவாரத்திலிருந்தது. மணல் மேடிட்டு விட்டது. அதன் கிழக்கே கடல் வெகு தூரம் சென்று காயலை உண்டாக்கியிருக்கிறது.

2சுந்தர பாண்டியனது சகோதரனை சூரிய தேவன் ஆண்டு பிரதிநிதியாக ஆண்டதாகக் கல்வெட்டுக்கள் கூறும். கால்டுவெல் பாதிரியார் ஸ்ரீ வைகுண்டம் கல்வெட்டொன்றில் அசாத்திய தேவனை சூரிய தேவ னென்றிருப்பதாகக் கூறுகின்றார்.

பல்மான வியாபாரம் இந்தக் காயலில் நடைபெறுகிறது.

இந்நாட்டுஅரசனது பொக்கிஷம்மிகுதியானது. அவன் தன் உடலில் ஏராளமான அணிகலன்கள் அணிந்திருக்கின்ருன். அவனுடைய அரசாங்கத்தில் பல பிரிவுகளுண்டு; நீதிதவருது செங்கோல் செலுத்துகின்ருன்; அயல் நாட்டினரிடத்திலும வணிகரிடத்திலும் அதிக அன்புடையவனுக விருததலினுல் அவர்கள் இப்பட்டினத்திற்கு வர மிகுதியாக விரும்புகின்றனர்.

இவ்வாசனுக்கு முந்நூறு மனைவிமார் இருக்கின்றனர்; இந்நாடுகளில் அதிக மனைவியுடையவனை எல்லோரும் மேலாக மதிப்பர். நான் முன் கூறியதுபோலவே இந்த நாட்டில் ஒரே தாய்தந்தைக்குப் பிறந்த சகோதரரான ஐவர் அரசாளுகின்றனர்; [1]அவர்களுள் இவ்வரசனுமொருவன். இவர்களின் தாய் இன்னும் உயிரோடிருக்கின்ருள். சகோதரர் வேற்றுமைப்பட்டு, போர் தொடங்குங்கால் தாய் குறுக்கிட்டுப் போரினைத் தடுப்பாள். அவர்கள், மேலும் போர்செய்யத் தொடங்குவாராயின் ஒருவரையெடுத்து வந்து இவர்களைப் பால்கொடுததது வளர்த்த ஸ்தனங்களையும், (பத்துமாதம்) சுமந்த வயிற்றையும் அறுத்து உயிர் துறக்க எத்தனஞ் செய்வாள்; இவ்வாறு செய்து எத்துணையோ தடவை போரை விலக்கியுள்ளாள். இவள் இறந்த பின்னர் அவர்கள் கலவரப்பட்டுப் போர்புரிநது இராச்சியத்தை நிர்மூலமாக்குவரென்பது திண்ணம்.

[1]பதின்மூன்ரும் நூற்ருண்டில் பலபாண்டியர் ஒரே காலததிற் காணப்படுகின்றனர், மார்க்கோபோலே வநதபோது சகோதரர் ஐவர் ஆண்டிருத்தல் கூடும்.

# சுந்தர சுலோசன

[திரு. தி. ர. சாரங்கபாணி, எம். ஏ.]

(தொடர்ச்சி)

விடைபெற்ற ஐயகுமாரன் நேராகத் தன தில்லஞ் சென்று ஆங்கு இனியென்ன செய்வதெனத் தன்னறையிலமர்ந்து யோசிக்கலாயினன். சில நிமிடங்களில் ஒரு பிச்சைக்காரன் அவ்வறையுள் நுழைநதான். பிச்சைக்காரனைக் கண்டதும் ஐயகுமாரனுடைய முகம் மலர்ந்தது.

"சத்தியநாத! ஏதாவது கண்டறிந்தனையா?"

"ஐயா! அன்றிரவு முருகேசனுடன் பேசின ஆளை யான் முதல் நாள் இரவில் இருட்டால் கண்டறியா விடினும், இன்று நடராஜனைக் கண்டேன். நீரும் அவனைக் கண்டீர். மேலும் சச்சிதாநந்த சுவாமிகளின் தரிசனமும் இன்று பெற்றேன். அவருடைய புறவேடம் உண்மையாயிருக்குமேல் அவர் ஒரு பெரிய சாது என்பதற்கோர் ஐயமுமில்லை. சமரசசன்மார்கம் அவரிடத்தே குடிகொண்டிருக்கிறது. ஏழைகளுக்கு ஒரு தந்தையென சாதிமத வேறுபாட்டைச் சிறிதும் மதியாது அவர் ஒழுகுவது போற்றற்குரிய தொன்றேயாம். அன்றிரவு "சுவாமி" "அடியேன்" என்று வண்டியுள்ளிருந்து பேச்சரவங் கேட்டேன் என்று கூறினேனே அம்மொழிகளைப் பேசியவன் நடராஜனே யாவன். மீண்டும் "அடே" என ஓர் ஓசை கேட்டதெனக் கூறினேனே. அவ்வோசை ஸ்ரீலஸ்ரீ சச்சிதாநந்த சுவாமிகளின் குரலோசையைப் போலவே இருக்கிறது. எனவே அவர் அன்றிரவு உரிமையுறையுள் சாலை 60-வது எண்ணுள்ள வீட்டிற்கு வந்திருத்தல் வேண்டும்,

அவருடன் நடராஜனும் வந்திருந்தானெனவும், முருகேசன் நடராஜனிடம் பேசிய அன்று உரிமையுறையுள் சாலேயில் இருந்தவரும் நமக்குச் சண்முகம் என று புனைபெயருடன் கடிதம் விடுத்தவரும் சாமியாராகவே இருத்தலாகும் என நீ எண்ணுகின்ருயோ ?''

''ஒருகால் இருக்க வியலும் ஐயா ?''

''சத்தியநாத ! 6266 எண்ணுள்ள வண்டி முருகேசனுக்கு நற்சாக்ஷிப் பததிரமளித்த தயாநந்த லாலுடையதெனவும, அந்த மார்வாடி சுவாமிகளின் மடத்திற் கடுத்த வீட்டிலேயே வசிக்கின்ருனெனவும் இன்று கண்டறிந்தேன். இன்று மாலே சென்று அம்மார்வாடியைக்காணவும் எண்ணியுள்ளேன். ஸ்ரீலஸ்ரீ சச்சிதாநநத சுவாமிகள் மங்கள புரிக்குத் தயாநந்தலாலின் வண்டியில் வந்தமையானும், தயானந்தலாலின் இல்லமும் சுவாமிகளின் மடத்திற்கு அடுத்த வீடாயிருததலானும், தயானந்தலாலுக்கும் சுவாமிகளுக்கும் ஒரு தொடர்பிருத்தல் வேண்டும். சத்தியநாத ! இன்று நீ சுவாமிகளே நன்ருகக் கவனித்தாயா ?''

''கவனித்தேன். அவருடைய பொன் வண்ண மேனி மிகவும் எழிலுடையது. கம்பீரவதனம், மனங்கவருந தன்மையது. அவருடைய அகன்ற கண்கள் கருணையுடையன. அவருடைய முகம் எப்பொழுதும் புன் முறுவலுடன் இலங்குகின்றது. அவருடைய மேற்பல் வரிசைகளுள் முன்னிரு பற்கள் இருபாலுள்ள பற்களேவிடச் சிறிது நீளமானவை. அவருடைய நீண்டநாசி அவருடைய முகத்தின் அழகை அழகுபடுத்தும். அவருடைய வலக்கண் இரப்பையின் மீது ஒரு பெரிய மச்சமுண்டு.''

''சத்தியநாத ! உன்னே என்னுடைய பணியாளனுகப் பெற்ற என்னுடைய பாக்கியமே பாக்கியம்.''

''ஐயா பூவுடன் சேர்ந்தநாரும் மணம் பெறுவதொப்ப உம்முடன் சேர்ந்த யான் உம்முடைய திறனில் சிறிதளவேனுங் கொள்ளாமலிருப்பனே. எல்லாம் உம்முடைய அருளே.''

''சத்தியநாத ! மடத்துள் சென்ற நீ உள்ளிருநத அறைகளேக் கவனித்தாயா ?''

''ஐயா எங்களுக்கு அறுசுவையுண்டியளிக்கப்பட்ட வாசல் முன் கட்டிலேயே இருநதது. அவ்வாசலுக்கு வடபுறத்தில் இரண்டறைகளும், தென் புறத்தில் இரண்டறைகளும் இருந்தன. வடபாலிருந்த இருவறைகளுள் கீழண்டையறையே சுவாமிகளின பூஜையறை யெனவறிநதேன். ஆனல், மேற்றிசையிருந்த அறையுள் யார் வதிவதென யான் அறியவில்லே யெனினும், நாங்கள் உண்ணுங்கால் அவ்வறையிவிருநது "வாழையடி வாழை" என்னும் பாடலே யாரோ பாடினர். அக்குரலின் ஓசையும், பாட்டின் உருக்கமும் ஐயா ! என்னேக் கண்ணீர் விடுமாறு தூண்டின. கடவுளொருவ ருண்டோ என ஐயுறுங் கல்லாக் கயவர் அப் பாடலே அவர்பாடச் செவியுறின் பெரும் பக்தர்களாவர் என்பதற்கோ ரையமில்லே.''

''சத்தியநாத ! மடம் தென்றல் நோக்கி யிருக்கின்றது. அம்மடத்திற்குக் கீழ்ப்புறமே தயாநந்தலாலின் இல்லம். கீழண்டையறை சுவாமிகளின் பூஜை யறையன்ருே ?''

'' ஆம் ஐயா''

'' சரி நான் தயாநந்தலாலேக் கண்டு வருகிறேன். நீ சிறிது இளேப்பாறிடு. சத்தியநாத ! இன்றிரவு நமக்கு அதிக வேலே யிருந்தாலும் இருக்கும். சென்றுவா.''

சத்தியநாதன் சென்றதும் ஐயகுமாரன் தயாநந்தலாலின் இல்லஞ் சென்ற போது அணிந்த வேடம் பூண்டு, தன்னுடைய நண்பருடைய வண்டியேறிச் சுமார் நான்கு மணிக்குத் தயாநந்தலாவின் இல்லமடைந்தான், உள் நுழைந்ததும் காவியாகக் காலேயிலிருந்த பெரிய திண்டின்மேல் ஓர் அழகிய பெரியார் அமர்ந்திருந்தார். நீண்டு நுனியில் சுருண்டுவளேந்த அவருடைய மீசை அவருக்கு அழகையே அளித்தது. கை விரல்களில் வைர மோதிரங்கள் ஒளி

வீசின. காதில் இரண்டு வைரத்தோடு கள் விளங்கின. தலையில் பல வர்ணப் பாகை பொலிந்தது. பட்டு ஜிப்பாவுங் கரைவேஷ்டியும் அவரெழிலை மிகச் செய்தன.

ஜயகுமாரனைக் கண்டதும் காலையில் அவனிடம பேசிய குமாஸ்தா "வாருங் கள் சார்" என்றியம்பி, பெரிய திண் டில் அமர்ந்திருநதவரை நோக்கி "லால் ஜீ! இவர் காலையில் உம்மைக் காணவந் தார். நீர் இங்கில்லாமையான் இப்பொ ழுது இங்கு மீண்டும் வநதுள்ளார்" என்றான். உடனே லால்ஜி "ராம் ராம் வாங்கோ சார் உக்காருங்கோ. என்ன வேண்டும்?" என்று வினவினார்.

"லாலஜ்! உம்மிடம் இரகசிய மாக யான் சில நிமிடம் பேசவிரும்புகின் றேன்." இம்மொழிகளைக் கேட்டதும லால்ஜீயின் தேகம் திடுக்கிட்டெழுந்தது. ஜயகுமாரனுடைய கூரிய கண்கள் லால் ஜீயை உற்றுநோக்கின. உடனே லால்ஜீ புன் முறுவலுடன் "அதற்கென்ன வாருங்கள் அங்குச் சென்று பேசலா" மென்றார். லால்ஜீ புன்முறுவல் செய்யுங் கால் மேல்வரிசைப் பற்களுள் முன் னிரு பற்கள் சிறிது நீண்டிருத்தலை ஜய குமாரன் கவனித்தான்.

லால்ஜீ தம்முடைய திண்டை விட் டெழுந்து வெளிவாசலுக்குச் சென்றார்.

"சார் உங்கோ பேரென்ன"

"சோமசுந்தரம் பிள்ளை"

"இருக்கிறது எங்கே?"

"இராயப்பேட்டையில்"

"உங்களுக்கு என்ன வோணும்"

"லால்ஜீ திடீரென எனக்கு ஓர்ஆயிர ரூபாய் வேண்டும். என்னுடைய மனை வியின் வைரத் தோடைக் கொண்டுவந் துள்ளேன். அதை நான் ஆயிரத்து ஐ நூறுரூபாய்க்கு இரண்டு மாதங்களுக்கு வாங்கினேன். நகைகளை நன்றால் எனக்குப் பெரிதும் இல்லாமல் இன்று வைத் திருக்கிறது.

"அந்த நகையை எடுங்கோ பாக்க லாம" ஜயகுமாரன் தன்னுடைய சட்டைப பையிலிருநத வைரத்தோடை எடுத்து லால்ஜீயினிட மீநதான். லாலஜீ வெளிச்சத்தில் அத்தோடைப் பரிசோ திக்கையில் ஜயகுமாரன் லால்ஜீயின் வலது கண்ணையுற்று நோககினான். ஆங்கு லால்ஜீயின் வலது கண்ணில் இரபபையின் மேல் ஒரு பெரிய மச்ச மிருந்தது. ஜயகுமாரனுடைய முகம் மலர்நதது.

"என்ன லாலஜீ."

"சார் நீங்க சொல்வது போலே இந்த நகை ஆயிரத்து ஐஞ்சு நூறு ரூபாய் பெறும. இப்பொழுது என்னி டத்தில் பணமில்லை. நாளை மாலை மூன்று மணிக்கு வாங்கோ பணங் கொடுக்

"லால்ஜீ தவறாமல் கொடுக்க வேண் டும். நான் உமமை நம்பியிருக்கலாமா?"

"சார் நமபோ பேச்சு தவறதில்லே; நாளைக்கி வாங்கோ. மூனு மணிக்கு சாயங்காலம்."

"நான் சென்று வருகிறேன் லால்ஜீ"

"போய் வாஙகோ சார். ராம் ராம்"

தயானந்தலாலினிடம் விடைபெற்ற ஜய குமாரன் தன வண்டியேறி நேராகத் தனதில்லம அடைநதான். அங்குத் தனதில்லத்தின் முன்னர் இருவர் நின்று இரகசியமாகப் பேசிக் கொண்டு தன்னுடைய இல்லத்தைக் கவனிப் பதை ஜயகுமாரன் கவனித்தான். கவ னித்ததும் வெளியிலேயே தன்னுடைய வண்டியை நிறுத்திக் கொண்டு மோட் டாரின் ஓசைக் கருவியை இருமுறை அழுத்த, சத்தியநாதன் வெளியில் வந் தான். சத்தியநாதன் வண்டியுள் மாறு வேடம் பூண்ட ஜயகுமாரனையும் எதி ரில் அவனைக் கவனிததுக் கொண்டி ருந்த இருவரையும் கண்டதும் உண் மையை உணர்ந்து கொண்டான்.

"ஜயகுமாரர் வந்து விட்டாரா சத் தியநாத!"

"காலையில் வந்தார். பகல் மூன்று மணிக்கு ஒரு கேசின் சம்பந்தமாக மங் களபுரிக்குச் சென்று விட்டார்."

" எப்பொழுது வருவார்? "

" நாளைக காலையில் வருவதாகக் கூறினார். "

" இம்மொழிகளைச செவியுற்றதும இல்லததி னெதிரிலிருந்து இல்லததைக் கவனிததுக் கொண்டிருநதவர்கள் வேகமாக நடநது சிறிது தூரத்திலிருந்த ஒரு சந்தின் வழியாக நுழைநதனர்.

உடனே ஜயகுமாரன் சத்தியநாதனை ஏவ, அவன் ஓடிச்சென்று சநதின் முனையில் ஒளிந்து நோக்க, சென்ற இருவரும் அங்கிருநத ஒரு மோட்டார் வண்டியிலேற வண்டிச் செல்வதையும் அவ் வண்டியின் எண் 6266 என்றுங் கண்டு திடுக்கிட்டான்.

சத்தியநாதன் தான் கண்டதை ஜயகுமாரனிடம் இயம்ப, ஜயகுமாரன் வண்டியைத் தன்னுடைய லாயத்தில் விட்டு விட்டு இல்லத்துள் யோசித்துக் கொண்டே நுழைந்தான்.

# காரி பால்டி

## இத்தாலியின் சுதந்திரச் செல்வர்

(பிரம்மச்சரிய மாசிகையில் வெளிவந்த ஒரு கட்டுரையின் தமிழாக்கம்)

சி. சுப்பிரமணியனார்]

ஒரு நூற்றாண்டுக்கு முன்னர் இருந்தவிடந் தெரியாமல் ஒளி குன்றி, செயலற்றுக் கிடநத இத்தாலிய நாடு, தற்போது ஐரோப்பாவில் சீருஞ் சிறப்பும் பெற்ற மாபெருந தேசங்களுள் ஒன்றாகத் திகழ்கின்றது. அதன் ஆககத்திற்கு மூல காரணர்களாய்த தொண்டாற்றிய பெரியார்களுள் காரி பால்டியும் (Garibaldi) ஒருவராவர். அவர் பிறந்தபோது இத்தாலிய தேசம் பற்பல சிறிய நாடுகளாகப் பிரிவுபட்டிருந்தது. அவற்றுள், சில தன்னரசாகவும் சிலபிரான்ஸுக்கும் (France) ஆஸ்டிரியாவிற்கும் (Austria) கீழ்ப்பட்ட நாடுகளாகவு மிருநதன. அந்நிய ராட்சிக்குட்பட்ட தேசங்களில் கொடுங்கோலாட்சியே மல்கியிருநதது. அநநாடுகளில், மக்கள் மிகவும் துன்புறுத்தப்பட்டனர்.

ஆகலான், இத்தாலிய ரனைவரும அன்னிய நாட்டின் கொடுங்கோ லாட்சியை ஒழித்து நற்பண்பு வாய்ந்த ஓர் இத்தாலிய மன்னன் குடை நிழற்கீழ் செவ்வியதொரு சுதந்திர ஆட்சியை நிறுவ விழைந்தனர்.

இது பற்றி நாட்டிடை எழுந்த கிளர்ச்சிகளும் கலவரங்களும முளையிலேயே நசுக்கப்பட்டன வாதலின் இவ் வெண்ணம் நீண்ட நாளாகத் தேசபக்தர் ஒவ்வொருவர் உள்ளத்திலுமே கனன்றுகொண் டிருந்தது. கொடுங்கோலாட்சிக்கு அடிபணிநது அலலறபட்ட மக்களால் ஒன்றுபட்ட ஜனசமூகமாகத திகழ இயலாதாயிற்று. எனவே, அவாகள் ஊக்கங்கெட்டு, ஆக்கமிழந்து உலகில் நடைப் பிணங்களாகவே வாழ்ந்தனர்.

ஆனால், பத்தொன்பதாவது நூற்றாண்டின் முற்பகுதியில், பெருங்குடிப் பிறந்த வள்ளலும், தேச பக்தருமான ஜோசப் மாசினி (Joseph Massine) என்னும் பெரியாரொருவர் வாழ்ந்துவநதார். தமமை ஈன்ற தாய்நாட்டின் மீது அவர் அளவுகடந்த பக்தி மீதூரப்பெற்றவர்; இத்தாலியாவைத் தமது ஆருயிராகவே நினைத்தார். விரைவில், தம தாய் நாடு ஒருசுதந்திரநாடாகத் திகழுமென்பதில் ஆழ்ந்தநம்பிக்கை அவருக்குஉண்டு. நாட்டில் மக்களிடைச் செல்வாக்குடையவரும் அவரே. மாசினியார், தமது காளைப் பருவத்திலேயே, சிறைக்கோட்

டம் நண்ணினார்; நாடு கடத்தப்பட்டார்; மரண தண்டனையும விதிக்கப் பெற்றார். இத்தகைய துன்பச் சூழ விடையே அவர் அஞ்சா நெஞ்சினராய் இத்தாலியாவின் சுதந்திரப் பணியாற்றக் கழகமொன்று கண்டார். அக்கழகத்தின் குறிக்கோள் "இறையும் மக்களும்" என்பதாகும். அது தாங்கிய மணிக் கொடியில் திகழும் வீரிய வாசகம், "ஒற்றுமை - விடுதலை - சமத்துவம் - அன்பு" என்பது. செல்வத்திலும, கல்வியிலும் தலைசிறநத ஒருகுடும்பத்தில் தோன்றிய அவர், உயரிய கல்வி அறிவு படைத்தவராய்த் திகழ்ந்தார். தம்மாட்டொளிர்ந்த ஆற்றலேயும் அருந திறனையும் அவர் இத்தாலியாவின் விடுதலைக்காகவே பயன் படுத்தினார்.

ஆனால், காரிபால்டியின் பிறப்பு வளர்ப்பு முற்றிலும் மாறுபட்டதாகும். அவர் 1807-ல் நைஸ் (Nice) என்னும் ஊரில் பிறந்தார். அவரது தந்தை ஓர் செம்படவராவர். தமது புதல்வன் ஒரு சமயக் குரவனுய்த் திகழ்தல் வேண்டுமென்னும் அவாவினால் அவர்க்குச சிறந்த கல்விப் பயிற்சியை அளிததார். ஆனால் இளைஞரான ஜோசப் அதனை விரும்பவில்லை. அதற்குப் பதிலாக அவர் ஒரு மாலுமியின் வாழ்க்கையை விழைந்தார். சில வருடங்களுக்குள்ளாக அவர் மத்திய தரைக் கடலிடையே ஓடுகின்ற சிறிய ஒரு மரக்கலத்தின் அதிபரானார்.

காரி பால்டிக்கு இருபத்தாறுவது ஆண்டு நடைபெறுங்கால் அவரது வாழ்க்கைச் சிறப்பிற்குக் காரணமாயிருந்த ஒரு நிகழ்ச்சி நடைபெற்றது. தம்முடைய கப்பற் பயணத்தின்போது, இறுதியாகக் கப்பல் கருங்கடற்கரை மீது திகழுமொரு துறைமுகத்தினை அடைந்தது. பிரயாணத்திற்குச் சிறிது நேரம் செல்லுமெனக் கண்ணுற்ற காரிபால்டி, ஆண்டுத்திகழ்ந்த ஒரு சிற்றுண்டிச் சாலையினுள் நுழைந்தார். அவ்விடுதியினுள்ளே சிலஇத்தாலிய சேனைவீரர்களும், வியாபாரிகளும் குதூகலமாய் உரையாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு எதிரே போடப்பட்டிருந்த ஓர் ஆசனத்தில் காரிபால்டியும் அமர்ந்தார். அவர்களது வாய்மொழி, காரிபால்டியின் கவனத்தை ஈர்த்தது. அவர்கள், தங்கள் ஆருயிரிற் சிறந்த தாய்நாட்டைக் குறித்தும், அதன் விடுதலைக்காகத் தொண்டாற்றும் ஒரு பெரியாரைக் குறித்தும் உரையாடுகிறார்கள் என அறிநதார். அவர்கள் வாயினின்று "ஜோசப் மாசினி" என்னும், அன்னவரின் அரிய கொள்கையாகிய "கடவுளும் மக்களும்" என்பதும் அடிக்கடி வெளிவந்தன. அவற்றைச் செவிமடுத்த காரிபால்டி தமதகத்தில் சுதந்திர வேட்கைச் சுடர் ஒளிரத் தம்மையும் மறந்தார். அவரால் அதனை அடக்கமுடியாதாயிற்று. பின்னர், அக்குழுவினரிடையே விளங்கிய ஒரு தோன்றலின் முன்னேகி, "ஐய! மாசினியார் யாண்டுளர்," எனவினவினார். அதனைச்செவியுற்ற அவ்விளஞ் செம்மல், உள்ளம் பூததது, காரிபால்டியின் தேசபக்தியை வியந்து, பிரான்ஸ் (France) தேயத்தில் மார்செயில்ஸ் (Marseilles) நகரிடைவதியும் மாசினியார்க்குத் திருமுகம் வரைந்து உதவினர். நிருபம்பெற்ற காரிபால்டி, காலந்தாழ்க்காது, மார்செயில்ஸ் (Marseilles) நகரினை நோக்கி விரைந்து சென்றனர். அவர், மாசினியாரோடு முதன் முதலில் கேண்மை பூண்டது என்றும் மறக்கற்பாலதன்று. அதுபற்றி அவர் பின்னர் ஒருமுறை குறித்ததாவது:— "தன்னருந் தாய் நாட்டின் விடுதலைகாணத் தொண்டாற்றும் அப்பெருந்தகையைக் கண்ணுற்றதும், யான் அமெரிக்காவை முதலில் கண்ட கொலம்பஸ் (Columbus) அடைந்ததைவிடப் பன்மடங்கு அதிகங் களிகூர்ந்தேன்;" என்பதாகும்.

உடனேயே, அவர் மாசினியாரின் 'இளம் இத்தாலிய இயக்கத்திற்கலந்து, அன்னவரின் சீரிய கொள்கையாகிய "ஒன்றுபட்ட சாம்ராஜ்"யததிற்காகத் தொண்டாற்றினர். அவர்களனைவரும் இத்தாலியாவிலுள்ள அந்நிய அரசாங்கத்தை நாட்டினின்றும் துரத்துவதை

யே தங்கள் முழுமுதற் கடமையாகக் கொண்டனர்.

இத்தாலியிலுள்ள சுதிந்தர நாடு களில் தலைசிறந்த நாடு சார்டீனியா (Sardinia) வாகும். அதுவே சுதந்திர உணர்ச்சிகைவரப்பெற்ற நாடு. எனவே, காரிபால்டி ஸார்டீனியக் கடற்படை யோடு சேர்ந்து ஜெனோவா (Genoa) விலுள்ள துருப்புகளோடு பொருத எண்ணினர். ஆனால், அக்கிளர்ச்சி, தோல்வி யடைந்ததாகலான் காரிபால் டிக்குத் தூக்குத் தண்டனையும் விதிக் கப்பட்டது. அவர், தம்மாருயிரைக் காப்பாற்றுவான் தென்னமரிக்காவிற்கு விரைந்தோடினர். ஆண்டுப் பதினைந் தாண்டுகள் மறைந்து வாழ்ந்தனர். அக்காலை, அவர் ஆடுமாடுகளை மேய்த் துக்கொண்டும், மரக்கலத் தொழில செய்தும், சில ஆண்டுகளாகக் கணித ஆசிரியராகவுந தளகர்த்த ராகவும் உழைத்து வந்தார்.

தம் தாய்நாட்டு மீது கொண்டுள்ள அன்பு, அவரைத் திரும்பவும் ஆண்டுப் போதரத்தூண்டிற்று. பின்னர், காரி பால்டி சார்டீனிய (Sardinia) இள வரசரின் உதவியால் தம்முடன் வீறு கொண்டெதிர்க்கும் வீரர் மூவாயிர வரைச் சேர்த்தனர். அதனால் அவர் வெற்றிமேல் வெற்றிபெற்றார். அவர் தம் பகைவராகிய இருபதினாயிரம் வீர ரும் மூவாயிரவரை எதிர்க்கும் ஆற்ற லில்லாது தோல்வியடைநதனர். விரோ திகள் பலரும சேர்ந்து சூழ்ச்சிசெய்து அவரைக் கைது செய்தார்கள். திரும்ப வும்இன்னலுட்சிக்கியதைபுணர்ந்த காரி பால்டி தமது ஆருயிரைக் காப்பாற்ற அட்லாண்டிக் (Atlantic) கடலைக்கட ந்து, நியூயார்க் (Newyork) நாட்டினை யடைந்து, ஆண்டு ஒன்றரை வருடம் கைத்தொழில் செய்து நாட்களைக் கழித் தும், மூன்றாண்டுகளாக ஒரு நாவாய்த் தலைவராயும் உழைத்துவந்தார். 1854-ம வருடம் அவர் இத்தாலியாபோநது ஒரு சிறு தீவினை விலைக்கு வாங்கி அதிலே வசித்து வந்தார்.

தமக்கு ஐம்பது வயது சென்ற பிற குங்கூட, காரிபால்டி தம் தாய்நாட்டின் ஆக்கத்திற்கே பெரிதும உழைத்துவந்த தால் பெரும்புகழ் பெற்றதுடன், தேசீ யத் தலைவராகவுந் திகழ்ந்தார். 1859-ல் அவர், தியாக வுணர்ச்சியுடைய ஓராயி ரம் வீரர்களின் பொறுப்புள்ள ஒரு தலைவரானார். அவ்வீரர்கள் வறுமை வாய்ப்பட்டவ ரெனினும், ஆண்மையி லும் வீரத்திலும் நிகரற்றவர்கள். தங் கள வயிற்றிற் குணவில்லாது வருநதிய போதுங்கூடத் தங்கள் ஒப்பற்ற தலைவ ரின் கீழ், அவர் ஆணைவழி நின்று, "அஞ்சுவது யாதொன்று மில்லை அஞ்ச வருவதூஉ மில்லை' என்னும்படி, வீரஞ் செறிநத வீரர்களாய்ப் பல இன்னல்க ளுக் கிடையிலுந தங்கள் கடமையைப் பாங்குட னாற்றினர். அவ்வீரர்களணிந் திருந்த சிவந்த அங்கியால் அவர்கள், மக்களால் "சிவந்த அங்கியர்" எனவும், "ஒப்பற்ற ஓராயிரவர்"எனவும்அழைக் கப்பட்டனர்.

அப்பொழுது,சார்டீனிய(Sardinia) மன்னவனும், இத்தாலியநாடுகள்யாவுந் தன் குடைநிழற்கீழ்ப் போதரும்பணியி லீடுபட்டு, அதிலே வெற்றிபெற்றனன். பின்னர், இத்தாலிய முதற்பாராளு மன்றமென்று கூட்டப்பட்டது. தன் முன் குழுமிய மக்களை நோக்கி மன்ன வன், "நமது தந்தையர்நாடாகிய இததா லியா, உரோமாபுரிக்கோ அல்லது மத் திய காலவரையரைககோ உரித்தான தன்று. அது ஜன சமூகத்தின் தற் பெருமைமை விளக்கும் போர்க்களமு மன்று. இத்தாலியா - ஒற்றுமைகண்ட இத்தாலியா - இததாலிய ரனைவர்க்கும் உரிமையுள்ள இத்தாலியா வாகும", என யாவர்மனதிலும உரிமைவேட்கை மீதூர எடுத்துரைத்தனன்.

அதன் பின்னர், காரிபால்டியும் அவ ரது வீரர்களும் பிரஞ்சு (French) ஆதிக்கததிற் குள்பட்ட நேப்பிளஸ் (Naples சிஸ்லி (Sicily) என்ற நாடு களையும், மத்திய இத்தாலியாவையும், தங்கள் நாட்டோடு சேர்க்கப் பெரிதும்

விழைந்து அதற்கு வேண்டும் முறைக கையாளத் தலைப்பட்டனர்.

இத்தாலியில் பிரெஞ்சு (French) திக்கத்தின்கீழ்ப் போர்முறையிற் பயிற்சிபெற்ற இலட்சத்தி ஐம்பதினாயிரம் வீரரடங்கிய படையொன்றுள தென்பது, காரிபால்டிக்குத் தெரியவாராது. எனினும், அவர் தம்முடன் போந்த ஓராயிரம் படையினரோடு சிஸ்லிக்குப் படையெடுத்துச் சென்றனர். ஆண்டு, அவர் திங்கள் மூன்றிற்குள் பகைவரை வென்று, சிஸ்லியின் விடுதலை கண்டனர். இம்மகத்தான வெற்றி காரிபால்டியைப் பெரும் புகழோடு பொலியச் செய்தது.

அதன் பின்னர், காரிபால்டி, தமது கவனத்தை மத்திய இத்தாலியின்மீது செலுத்தினர். ஆண்டு, வெற்றிமேல் வெற்றி அவர்க்குற்றது; பற்பலகோட்டைகளையும், மெசினா (Messina) நகரினையும் கைப்பற்றினார். இவ்வாறு, தென்னித்தாலியா முழுவதும் அவரது ஆதிக்கத்திற்குள் வந்தது. இத்தாலிய மக்களனைவரும் காரிபால்டியைத் தங்களது அடிமை வாழ்வை ஒழித்து விடுதலை நல்கவந்த "கடவுள் தொண்டன்" எனப் பெரிதும் பாராட்டினர். எனவே, அவரது புகழ் நாட்டிடை யாண்டும் பரந்தொளிர்வதாயிற்று.

சிலநாட்கள் சென்ற பின்னர், காரிபால்டி, தமது படைத் தலைமையை சார்டீனிய மன்னனாகிய இமானுவேல் (Emmanuel) எனும் பெயரிய காவலற்கு நல்கி, அன்னவரையே இத்தாலியின் வேந்தனாக்கினர். அக்குரிசிலும் தமது நன்றியறிதலைத் தெரிவிப்பான் காரிபால்டியின் கரங்களைப் பற்றிக் குலுக்கினன். இருவரும் ஒருங்கே நேப்பிள்ஸ் (Naples) நகரிற் புக்கதும் காரிபால்டி, காவலனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, அன்னவன் வழங்கிய பரிசில்களைப் பெற்றுக் கொள்ளாது, காப்பிரித் தீவிலுள்ள (Capri) தம்மில்லஞ் சார்ந்து இனிது வாழ்ந்திருந்தனர்.

இத்தாலியா பூரண சுதந்திர நாடாய்த் திகழப் பத்து வருடங்கள் சென்றதாயினும் அதன் உரிமைக்கு அடிகோலியவர் காரிபால்டியேயாவர். 1860 ம் வருட நிகழ்ந்த சுதந்திரப்போரில் அவரே வெற்றிபெற்றார். ஆனால், வெனிஸ் (Venice) உரோமாபுரி (Rome) ஆகிய இருநகரங்கள் மட்டும் இத்தாலிய ஆட்சியின் கீழ்ப் போதரவில்லை. ஈராண்டுகள் கழிந்த பின்னர் காரிபால்டி மறுமுறை உரோமாபுரியோடு போர்தொடுத்தார். ஆனால் அதிலே அவர் தோல்வியடைந்து, கைது செய்யப் பெற்றாரெனினும் அதிவிரைவில் விடுதலையடைந்தார்.

1865-ம் வருடம் காரிபால்டி இங்கிலாந்திற்குச் சென்றார். ஆங்கிலேயர்களும் இத்தாலியின் சுதந்திரப்போரில் அனுதாப முடையவர்களா யிருந்தனராதலின் காரிபால்டியைக் குதூகலமாய் வரவேற்றனர். காரிபால்டி ஏரியுள்ள ஊர்தியானது இலண்டன் நகர் வழியே செல்லுவதற்கு 6 மணிநேரம் வேண்டியதாயிருந்தது. வீதியில் யாண்டும் எள் விழற்கியலாது மக்கள் திரண்டிருந்தனர். பலர் அவ்வாகனத்தின் சக்கரங்களில் ஏறி நின்றதால, அவ்வூர்தியானது பெரும்பாரத்தினைத் தாங்க வாற்றாமல் ஒடிவதாயிற்று

ஸ்ட்ரோ போர்டு (Strafford) மாளிகையினை அண்மியதும் ஆண்டு வண்டியும நிற்க, அதனின்றும் சிவந்த அங்கியுடன் வெண்ணிற மேலாடை தரித்த, உயர்தரத் தோற்றமுடை அழகிய தோர் உருவம் போந்தது. இத்தாலிக்குச் சுதந்திரந் தந்த வீரர் திலகமாகிய காரிபால்டியைக்கண்ணுற்ற நகர மாந்தரனைவரும் புரிந்த ஆர்ப்பாட்டம் செப்புந் தரத்ததன்று. அவர்கள் செய்த ஆரவாரமும் பேரொலியுங் கேட்ட காதுகள் செவிடுபடும் போலிருந்தன. பலர், காரிபால்டிக்கு விருந்து செய்து, உபசரித்து, பாமாலையும் பூமாலையும் சூட்டினர்.

இவ்வாறு சிலவாரங்கள் இங்கிலாந்திலிருந்த பின்னர் காரிபால்டி தந்நாடு

போந்தார். விடுதலைப்பித்துக் கொண்டுள்ள அவர், மற்றுமோர் முறை ஒரு சில வீரரோடு உரோமா புரியினைக் கைப்பற்ற விழைந்து சென்று போராடினர். ஆனால் அதிலவர் வெற்றி பெற்றாரில்லை.

காரிபால்டியால ஆரம்பிக்கப்பட்ட இவ்வாக்கவேலையானது விக்டர் இமானுவல் (Victor Emmanuel) என்னும் பெயரிய மன்னனால் தொடர்ந்து நடைபெற்று வந்ததாகலான் 1866-ல் வெனிஸ் (Venice) நகரமும, 1870-ல் உரோமாபுரியும் (Rome) இத்தாலிய நாட்டோடு சேர்க்கப்பட்டன. 1871-ம் வருடம் ஜுலைத திங்கள் இரண்டாம நாளன்று மன்னன் உரோமாபுரிக்குச் சென்றபோது, அன்னவனைக் கண்ணுற்ற குடிகள் ஆர்த்தனர்; களித்தனர்; தங்கள் வேநதனைப் புகழ்ந்து வாழ்த்தினர். தங்களது தாய்நாடாகிய இததாலியா, இத்தாலியரின் இத்தாலியாவாகத் திகழ்வதைக் கண்ணுற்று அவர்களடைந்த களிப்பு எல்லையற்றதாகும்.

நாட்கள் பல செல்லாநிற்ப, சிறுநாடுகள் யாவும் தன்குடைக்கீழ்ப் போதரக் கண்ட இமானுவல் மன்னவன் உள்ளம் பூத்தனன். இவ்வாறு, இத்தாலியா ஒரு சுதந்திர நாடாகத் திகழ அல்லும் பகலும அயிலுதலுந துயிலுதலுமின்றி உழைத்த புகழ் காரிபாலடியார்க்கே உரியதாகும்.

இத்தாலியத் தாயானவள், வீரஞ் செறிநத அஞ்சா நெஞ்சம படைத்த தனது அருமைத் திருமகனை அழைத்துப் பரிசில்பல பெற்றுக்கொள்ளுமாறு பலமுறை வேண்டியும காரிபாலடியார் அவறறை ஒப்புக கொண்டாரில்லை. என்னே! அன்னவர் தியாகம், என்னே! அவர்தம் கைமாறு கருதா உழைப்பு! விடுதலைப் பித்துககொண்ட அவரது ஆன்மா வீண்பொழுது போக்க விரும்பவில்லை. நாட்டுப் பற்றுடைய உண்மை வீரர் அவ்விதமிருப்பரோ? ஒருபோதும் இரார். ஆதலின், தமது அறுப தாட்டைப பிராயத்திலும் அவர், பிரான்ஸ் (France) தேயமும அதன் விடுதலைக்காகப் போராடியபோது அந் நாட்டிற்குப் பெரிதும் உதவிசெய்து வந்தார்.

காரிபால்டியார் தமது வாழ்க்கையின் இறுதிக்காலத்தை நிம்மதியாகத் தமது இல்லத்திலேயே கழித்துவந்தனர். சுதநதிரத்திலேயே பிறந்து, சுதந்திரத்திலேயே வளர்ந்து, சுதநதிரத்திற்காகவே, சுயநலங் கருதாது உழைத்த தேசியவீரர் திலகமாகிய காரிபால்டியார், தமது எழுபத்தைந்தாவது பிராயத்தில் மண்ணுலகினின்றும மறைந்தனர். காரிபால்டியாரைப் போன்று இத்தாலியின் ஆக்கத்திற்குத் தொண்டாற்றிய அரும்பெருமக்கள் ஒரு சிலரே யாவர்.

---

# திருக்கோயில் வழிபாடும் சீர்திருத்தமும்

[திரு. பொன்னம்மாள், பி. ஏ., எல். டி.]

## IV

அப்படியே பூரண சற்குணத்தின் கட்டாகிய பொன்னுலக நாயகனாகிய இறைவனின் ஜோதி மயமான தோற்றமே தொழுவாரின் சிந்தையில் பதியுமாறு நம் கோயில்களில் அமைத்தல் வேண்டுமே. அவ்வாறு செய்யத் தவறினல் வேதம் கூறுவது போல்

"அவர்கள் தங்களை ஞானிகளென்று சொல்லியும் பைததியக்காரராகி அழிவில்லாத தேவனுடைய மகிமையை அழிவுள்ள மனுஷர்கள், பறவைகள், மிருகங்கள், ஊரும் பிராணிகள் ஆகிய இவைகளின் ரூபங்களுக்கு ஒப்பாக மாற்றினார்கள்.

"இதினிமித்தம்........தேவன் அவர்களை அசுத்தத்திற்கு ஒப்புக் கொடுத்

தார். தேவனுடைய சத்தியத்தை அவர்கள் பொய்யாக மாற்றி, சிருஷ்டிகரைத் தொழுது சேவியாமல் சிருஷ்டியைத் தொழுது சேவித்தார்கள் ''—ரோமர் 1 : 21,23&25, அதனால் பலவித இச்சை ரோகங்களுக்கும், தீவினைகளுக்கும் நாம் உள்ளாவோம் என்பது உறுதி.

அந்தோ! எத்தனை பெருக்கமான சீரும், செல்வமும், கல்வியும, கடவுட் பக்தியும் அடைந்து உன்னத நிலையிலிருந்த நம் தாய்நாடானது இந்த உருவ வழிபாட்டாலன்றோ ஒடுங்கிப் பல தீமைகளுக்கும், அடிமையாகி ஓலமிடுகின்றது! " காலத்தைப் பார்த்தால் போதகரா யிருக்கவேண்டிய நீங்கள் இன்னும் கிறிஸ்துவுக்குள் குழந்தைகளாயிருக்கிறீர்களே" என்று பக்தனாகிய பவுல் தன் சபையாரைப் பார்த்து இரங்குவதுபோல், இத்தனை ஆண்டுகளுக்குள் எத்தனை திரளாய் அறிவு முதிர்ச்சியோடு ஆண்டவனது அருள் செயல்களையும் ஞானத்தையும் பற்றிய வுணர்ச்சியையும் அந்தந்தக் காலத்திற் கேற்றவாறு பெருக்கி மக்களை உய்ப்பித்து, உய்யப்பண்ணி உலகில் ஒளிமிளிரவேண்டிய நம் பரத நாடு "உள்ளவனுக் கின்னும் கொடுக்கப்படும்; இல்லாதவனுக்கு உள்ளதும் எடுத்துக் கொள்ளப்படும்" என்று கிறிஸ்து உரைத்ததுபோல், உள்ளதையும் இழந்து ஒட்டாண்டியானதே! ஒன்றுக்கும் உதவாத ஒரு கோடி உருவங்களைத் தேவரென ஒருப்பட்ட காரணத்தினாலல்லோ இவ்வாறாயிற்று? தாவரமானாலும், ஜீவஜந்துக்க ளாயினும், மனிதனாயினும் தத்தம் குலத்திற் கேற்ற வகை வகையான சந்ததியைப் பிறப்பித்துப் பெருக்குங் காலத்திற்றானே அவற்றில் ஜீவனுண்டென அறியலாம். அப்படிக்கின்றி "உள்ளதுங் கெட்டது" என்றபடி ஒரு மதத்தின் முன்னோரால் சேமித்து வைக்கப்பட்டமுதலும் கெட்டுக்கொண்டே வருமாயின் அதன் வேரில் விடமிருக்கிறதென அறிய [illegible] நிற்க.

பக்தரெனப் பட்டோருக்கெல்லாம் பாவை யமைத்து வைக்கப் புகின் இப்பாரதகண்டம் இடந்தருது! தம் செயலாலும், கல்வித் திறனாலும் பக்தரெனத் தாமே உலகிற்குத் தமை வெளிப்படுத்திய சிலரைப் பார்க்கிலும் இப்பாரில் இறைவனை எவ்விதத்திலும் இழிவின்றி யறிந்து, இன்பமாய்ப் பூசித்து அவ ரின்னடி சேர்ந்தொழுகுவோரில் எத்தனையோ கோடிக் கணக்கான பக்தர், சரித்திரத்தில் குறிப்பிடப்படும பாக்கியத்தை யடைந்திலரோ! "சமுத்திரமானது ஜலத்தினால் நிறைந்திருப்பதுபோல் பூமியானது இறைவனைப்பற்றிய அறிவால் நிறைந்திருக்கும்" என்று கலியுக முடிவைப் பற்றித் தீர்க்க தரிசனமாக முன்னுரைத்த திரிகால ஞானியாகிய ஒரு கிறிஸ்தவ பக்தன் கூறுவதுபோலவே உலகின் முடிவில் மனிதரிடத்தில் காணப்படும் ஆன்ம வளர்ச்சியையும் யுகாந்தத்தில் நிறைவேறும் வேத சத்தியத்தையும் தன் காட்சியில் தெளிவாய்க் கண்ட பக்தனாகிய யோவானும் " இதோ இவைகளுக்குப் பின் நான் பார்த்தபோது, இதோ, சகல ஜாதிகளிலும் பாஷைக்காரரிலுமிருந்து வந்ததும் ஒருவனும் எண்ணக் கூடாததுமான கடற்கரை மணலைப்போன்ற திரளான கூட்டமாகிய ஜனங்களை" இறைவனுடைய சிங்காதனத்தைச் சுற்றி நின்று துதிக்கக் கண்டேன் எனக் கூறினான். வெளிப்படுத்திய சுவிசேஷம் 7: 9. இஃதிவ்வாறாக, யாருக்கென நாம் கோயில் கட்டமுடியும்! இதனாலேதான் இறைவன் ஒருவனுடைய திருநாமத்தை முன்னிட்டல்லாது பிறதெய்வங்களுக்கானாலும் பக்தருக்கானாலும் கோயிலில்லாதிருக்கச் செய்யும் ஏதுக்களை அறிவுடையோர் ஆராய்ந்து கடைப்பிடித்தல் உத்தமம்.

ஆயின் பக்தரைப் பற்றிச் சிந்தித்தல் தகாதோவெனின், அது தகைமையுடைத்து என்றதோடு அவ்வாறு செய்ய நாம் கடமைப்பட்டும் இருக்கிறோம் என்பதையுங்கூறுகிறோம். ஆனால்

அன்னோரைச சிந்தித்து அவர் நனமா திரியைப் பின்பற்றும் வழி எத்தனை யோவுள. அவருக்கென வருடத்தில் திருநாட்களை நியமித்து அநநாட்களை ஊரிலுள்ள பொதுக் கோயிலில் எல்லா ரும் ஏகோபித்துச் சென்று அப்பக்த கோடிகளை நமக்களித்தஇறைவனுடைய அநநத ஞானத்தை வியந்து, புகழ்ந்து, போற்றித் துதித்து, பக்தரில் காணப் பட்ட பலமேம்பாடான குணவிசேடத் தைக் குறித்த சொற்பொழிவு இயறறி அவரால் நம் நாடு அடைந்த நற்பலன் ஏதாவதிருக்குமாயின் அதையும் எடுத் துரைத்துப் பயனடையலாம். இதுவே சிறநததன்றி அப்பக்தரைக் கடவு ளுக்குச் சமானமாய் வந்தித்து வழுத் தல் முறையன்று.

மூன்றாவதாக, கோயிலைப்பற்றி நம் இளைஞரும், பிறரும் எண்ணமுற்றிருப்ப தற்கு இன்னொரு காரணமு முண்டு. கண்டகண்ட இடங்களிலே, மலைகளி லும், காடுகளிலும் நாடுகளிலும், மரங் களின் கீழும், மேடைகளின் மேலும், தண்ணீர்த் துறைகளிலும், முச்சந்தி களிலும் வழியோரங்களிலும், வாசற் படிகளிலும் நிறுத்தப்பட்டு அர்ச்சிக்கப் படும் மரக்கட்டைகள், கற்கள், பாவை கள் முதலியவற்றை அறவே நீக்கல் வேண்டும். அப்போது கோயிலைப் பற்றியும் அதிலுறையும் குணவானை கடவுளைப் பற்றியும் அறிவிற் சிறந்தவ ருக்கு மாத்திரமன்றி அதிற் குறைந்த மாநதருக்கும் மாதருக்கும் மேலான எண்ணிக்கையும்கருத்தும் உண்டாகும். அறிவும் வரவரப் பெருகி விளங்கும். ஆண்டவனருளும் அன்பருள்ளத்தில் தழைத்து, அகில இந்தியாவிலும் பர வும்.

நான்காவதாக - திருவிழாக் காலங் களில் பலதிறப்பட்ட விக்கிரகங்களைப் பலவித வெறியாட்டோடும் களியாட் டோடும், அகோரக் கூக்குரலிட்டுக் கொண்டும் தூக்கிச் சுமந்துகொண்டு தெருத்தெருவாய்த் திரியும் காட்சியா னது, மானிடர் கோயிலின் சிறப்பையும் மூன்று வொளியால் சூழப்பெற்ற குண நிதியான இறைவனது பெருமையை யும் மகத்துவததையும் மங்கிமறையச் செய்கின்றது. அதததைய அகோர கொடூர, அறிவில்லாத காட்சியையடக்கி எல்லோரும் பகதிவினயத்தோடும் பரி சுத்த சிந்தையோடும், குறித்த நேரத் தில் குறிப்பிட்டவோரிடத்தில் கூடி ஏகோபிதது, இறைவனைப் புகழ்ந்து பாடி, மன்றாடி, மனக்களிப்படையும் வழியை அறிவிற் சிறந்தோர் காட்டி வலியுறுத்தி, வற்புறுத்தல் வேண்டும். இவ்வாறுதிருவிழாத்தினங்களில் ஜனக் கூட்டம் திரண்டு நிற்குமிடங்கள் தோறும் எல்லாருக்கும் பொதுத் தந் தையான ஏகவஸ்துவின் அன்பையும் அவர் பக்தருக்கும் பாவிகளுக்கும் பரி வுடன்புரியும் கிருபையையும்நீதியையும் காட்டும் முறைகளையும் அடிக்கடி எடுத் துக்கூறி ஆலயச் சிறப்பை உணருமாறு செய்தால் இப்போது இறைவனுடைய ஏக ஒளி செகத்தின் மீதெங்கும் பரவா வண்ணம் மறைத்து நிற்கும் சிறுதெய்வ வணக்கம் போய் பெருந்தேவ தேவ னை உன்னத வஸ்து நம் உள்ளத்தி லும் ஊரெங்கிலும் காட்சியளிப்பதை நாம் கண்டு களிக்கலாம்.

ஐந்தாவதாக நம் நாட்டில் ஒரூர் இறைவனுறையும் மற்றோர் ஊரைக் காட்டிலும் சிறப்புற்றதென்ற மூடக் கொள்கையும், பொதுவாய் ஆலயத் தைப்பற்றியும், அதற்கு மனிதர் செல் லும் உயர்ந்த நோக்கத்தைப்பற்றியும் தெளிவான அறிவை இளைஞர் அடையா வண்ணம் தடைசெய்கின்றது. இக் குருட்டுக் கருத்துடன் நம் நாட்டு மாக் களிற் பலர் எடுக்கும் ஸ்தலயாத்திரை, தீர்த்த யாத்திரை முதலியவற்றையும் தவிர்த்தல்வேண்டும். அக்காலக் கவிக ளிற்பலர் தாந் தாம் கடவுளை வழிபட்ட இடத்தினையும், தத்தம் பிறப்பிடங் களில் உள்ள கோயிலில் வதியும் கடவு ளையுமே மேம்பாடுற்றதாகக்கொண்டு ஏனையோரும் அதைச் சிறப்பிக்கவேண் டும் என்னும் நோக்குடையராய் இயற் கைக்கு மாறானதும், உலகில் ஒருகா லும் எங்கணும் நிகழாததுமான கட்டுக்

க அந்தந்த ஸ்தலங்களுடன் புணர்த்துக் கூறிவைததனர். அவைகளிற் சில வாசிப்போருக்கு நகைப்பையே யுண்டாக்கத்தக்கன.

"இல்லறமும் துறவறமும் கடுமையே; ஆற்றலும் அறிவும் குன்றிய எம்மனோர்க்கு இவ்விரண்டில் ஒன்றும் புரிதற்கியலாது; உய்யும் நெறி வேறேதேனும் எளிதானதுளதோ? என மனம் அலமரா நின்ற சிலருக்குச் சில பெரியோர் எதிர்ப்பட அவரை வினவா நிற்புழி, அன்னோர் 'முத்திமா நகரங்கள் மூன்று. அவை திருவாரூர், காசி, தில்லை. இவற்றில் முறையே பிறக்க, இறக்க, தரிசிக்க முத்தியாம். இதில் பிறத்தல்தானே நேர்ப்படல் வேண்டும். காசி, செல்வதும் சிரமம். ஆகதரிசித்து முத்தி பெறுக' என்பர். இக்கதையைக் கற்பிதஞ் செய்தாருக்கு இறைவன் எங்குமுளன், எல்லாவுலகிலும் வசிக்கும் எத்தகைய ஆன்மாக்களுக்கும் ஏக தந்தையாவன், என்றித் திறத்த உயர்ந்த அறிவும், விசாரித்த உணர்வுமிருந்ததோ வென்பதை வாசிப்போர் சிந்திப்பாராக.

கிறிஸ்து மரணமடைநது உயிர்த்தெழுமுன ஒருதினம் ஒரு சாமான்யஸ்திரியைத் தண்ணீர்த் துறையில் தனியே கண்டு உரையாடும்படியான சந்தர்ப்பம் வாய்த்தது. அவர் அவளோடு அனேக அரிய விஷயங்களைக் குறித்துப் பேசினார். அதில் ஒன்று ஸ்தல விசேடத்தைப் பற்றியதாகும். அதுபின் வருமாறு :—

**ஸ்திரீ**—"ஆண்டவரே! நீர் தீர்க்கதரிசி என்று காண்கிறேன. எங்கள் பிதாக்கள் இந்த மலையிலே தொழுதுகொண்டு வந்தார்கள்; நீங்கள் எருசலேமிலிருக்கிற ஸ்தலத்தில் தொழுதுகொள்ள வேண்டு மென்கிறீர்களே''

**இயேசு**—"ஸ்திரீயே, நான் சொல்லுகிறதை நம்பு. நீங்கள் இந்த மலையிலும் எருசலேமிலு மாத்திரமல்ல, எங்கும் பிதாவைத் தொழுது கொள்ளுங் காலம் வருகிறது...... தேவன் ஆவியாயிருக்கிறார். அவரைத் தொழுதுகொள்ளுகிறவர்கள் ஆவியோடும் உண்மையோடும் அவரைத்தொழுதுகொள்ள வேண்டும்'' —யோவான 4: 19-21

என்பதே,

"கங்கை ஆடில் என? காவிரி ஆடில் என?
கொங்கு தண்குமரித்துறை ஆடில் என்?
ஓங்கு மாகடல் ஓதநீர் ஆடில் என்?
எங்கும் ஈசன் எனுதவாக இல்லையே''

என்ற அப்பர வாக்கும் அப்பொருளையே குறிதது நிற்கும். ஆக ஸ்தல யாத்திரை, தீர்த்தயாத்திரைகளைப் பற்றிய அஞ்ஞானமும், மூடபக்தியும அறவே ஒழியக் கோயிற் றலைவர் ஓயாது உழைத்தல் கடனன்றோ? இயற்கை வளனும், செயற்கை நலனும செல்வமும செழுமையும் நம் இந்தியாவிற செறிந்து நின்ற முற்காலததே நம்மனோர் செருககுற்று இறைவனை மறவாதிருக்கவும், ஓரிடத்தே நின்று தேங்கிய நீரைப்போன்று சிதைவுற்றழியா வண்ணமும், அவருடைய சரீர நலத்தையும் முன்னிட்டே, பலவகைச் சாஸ்திர வளர்ச்சியற்ற அக்காலத்தில் தம்மனதிற்குத் தோன்றினவா றெல்லாம் மூர்த்தி வழிபாடு, தலவழிபாடு தீர்த்தவழிபாடெனப் பல்வேறு வழிபாட்டினைப் பெரியார் பெருக்கி வைத்தனர். இக்கால அறிவு முதிர்ச்சிக்கும், சாஸ்திரத் திறனுக்கும், ஆராய்ச்சி அமைவுக்கும், அருஞ்செயல ஆற்றலுக்கும் அத்தகைய குருட்டு வழிபாடு கொஞ்சமும் பொருநதாதென்க. தற்காலம் நம் இளைஞருக்கும் அறிவுடையோருக்கும் கிடைத்திருக்கும் நேரமும், பொருளும், பிற வசதிகளும் அவ்வழிபாட்டினை நிராகரிக்கச் செய்கின்றன. அப்படிச் செய்வதும இயல்பே.

"அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்
அகிலாண்ட''

மும் நிறைந்திலங்கும் அருட்சோதியை எதோசில தலங்களிலன்று எவ்விடத்திலும் எச்சமயத்திலும் கண்டு களிக்கும் அனுபவத்தைப் பெற நம்மக்களை இழுத்து நடத்தல் வேண்டும்.

ஆறுவதாக அவ்வாறே பிரார்த்தனை நேர்நது முடித்துக் கொள்ளப் பலர்

திருப்பதி முதலிய இடங்களுக்குச் செல்லலும் நிறுத்தப் படல்வேண்டும். என்னே? கேவலம் பாவ மானிடரின் மயிரைக் கொண்டா நம் பரம தகப்பன் உயிரை யளிக்கச் சித்தங் கொள்வார்! அந்தோ! தமதாருயிரையே தமது பால மக்களுக்காக அளித்த ஒப்பற்ற அருளும் அன்புமுடைய அருதி வள்ளலின் கருணைப் பெருக்கத்தை எத்தனையாய்க் குறைத்து இழிவு செய்தனம்!

அன்றியும் பிரார்த்தனை நோதல் மிகப் பொருத்தமேயாயினும் அது செய்யும் சீரிய முறையும் வகையும் அறிவில்லா மக்களுக்கு நன்குணர்த்தப்படல் வேண்டும். ஐயோ! நம்மனோரில் கற்றறிநத பெரியாரிற் சிலருங் கூட சுவாமிக்குப் பிரார்த்தனை பண்ணிக் கொள்ளும் விதமும அதை நிறைவேற்றும் முறையும பார்த்தோருக்கும் கேட்டோர்க்கும் நகைப்பையளிக்கத் தக்கன. நம இநதுக கோவில்களில் இநது சகோதரர் பிரார்ததனை நிறைவேற்றுதலும் அதன் விபரங்களும் எம்மைக் காட்டிலும் எம் இந்து சகோதர சகோதரிகளுக்கு நன்ருய்த் தெரியும். அண்ணமலைக்கு நான் வெண்ணெ யூட்டுவேன்; ஐயனார்தலையில் நான் நெய்யை யூற்றுவேன்; கச்சியப்பருக்கு நான் காசித் துண்டு கட்டுவேன்; சொக்கநாதனுக்கு நான் சோறுபோடுவேன்; சீரங்க நாச்சிக்கு நான் சீலை கட்டுவேன்; பல்லாவரனுக்கு நான் பலகாரம் பண்ணுவேன்; பிள்ளையாருக்கு நான் எள்ளுண்டை தருவேன்; அம்மையப்பனுக்கு நான் அரைஞாண் பண்ணுவேன்; மதுரை மீனுட்சிக்கு நான் மாமூக்குத்தி யணிவேன்; கும்பேஸ்வரனுக்கு நான் கோவணம் கட்டுவேன் என்றிவ்வாறெல்லாம் கிஞ்சித்தேனும் பகுத்தறிவில்லா மாக்கள் பிரார்த்தனைகள் பல பண்ணித தம பொருளனைத்தையும் இழந்து தவிக்கின்றதை எங்கணுங் காணலாம். இன்னோருக்கு இத்தகைய விஷயங்களில் தெளிவறிவூட்டி, அவர் பொருத்தனை போடும் பொருள் பணமாகவோ, பல பொருளாகவோ, தானியமாகவோ கோயிலில் குருககளால் சபையோருக்கு முன் கடவுளுடைய சந்நிதியில் ஆசீர்வதிக்கப்பட்டு, பின் கோவிற்றலைவரும பெரியாரும் கொள்ளும் ஆலோசனைப்படி விற்பனையாகி, வருமபடியைக் கோயிலின் பேரில் ஏழைகளுக்கான அன்ன வஸ்திரமும் பிறவுமான நன்மைகளுக்கென பயனபடுமாறு செய்தல் அறிவுடையோர் கடன்.



# இ டி யே று

## அன்னைபெசண்ட் அம்மையார்

சென்ற புதன்கிழமை அன்னைபெசண்ட் அம்மையார் இவ்வுலகவாழ்வு நீத்தமை குறிதது ஆருததுயர் உறுகின்ரும். அன்னைபெசண்ட் அமமையார் உலகுக்கு ஒருவராகவிளங்கிய பெருமை வாய்நதவர். அவ்வம்மையாரை உலக ஒளி என்று கூறல் மிகையாகாது. அவர் உழைப்பால் உலகம் பலதுறையிலும் ஒளிபெற்று வந்தது வெள்ளிடைமலே.

ஒருவர் ஒரு துறையில் வல்லவராயிருத்தல் இயல்பு; பலதுறையில் வல்லவராயிருததல் அரிது. அவ்வருமை அன்னைபெசண்ட் அம்மையாரிடத்து எளிமையாய் விளங்கலாயிறறு. அவர் பலதுறையிலும் வல்லமை பெற்றிருநதனா. அவரைச் சகலகலாவல்லி என்று டாக்டர் மணிஐயர் போன்ற பெரியார்கள் போற்றியது பொருத்தமேயாகும்.

அன்னைபெசண்ட்அம்மையார் இளமையில் இலவாழ்க்கையில் நுழைந்து மக்களையீன்று, பின்னே உயிர்களுக்குத்

தொண்டு செய்வதில் ஊக்கங்காட்டி வந்தார். முதன்முதல் அன்னையார் ஏழை மக்கள் நலங்கருதி உழைக்கப் புகுந்தார். இங்கிலாந்தில் தொழிலாளர் இயக்கம் உருக்கொள்ளுதற்குக் காரணர்களாயிருந்தவர்களுள் அம்மையாரும் ஒருவர்.

மாதுஸ்ரீ பிளவட்ஸ்கி அம்மையாருடன் கூட்டுறவுகொண்டு பெசண்ட் அம்மையார் தியசாபிகல் சங்கத்தில் சேர்ந்தார். அச்சங்கத்திற்குக் கால்கொண்ட பெருமை பிளவட்ஸ்கி அம்மையாருடையது ; அதற்குச் சுவரெழுப்பி நிலையங்கோலியபெருமை பெசண்ட்அம்மையாருடைய தாயிற்று.

அன்னைபெசண்ட் அம்மையார் இந்தியாவிற்குச்செய்த திருப்பணி அளவிடற்பாலதன்று. தற்கால இந்தியா அடைந்துள்ள முன்னேற்றத்துக்குப் பாடுபட்டுள்ள பெரியாருள் அன்னைபெசண்ட் அம்மையாரும்ஒருவர்.ஜாதிவேற்றுமை, பெண்ணடிமை, தீண்டாமை முதலிய குறைபாடுகளைப் போக்க அன்னைபெசண்ட்அம்மையார் முன்னணியில்நின்று தொண்டாற்றியதை இந்தியா ஒருபோதும் மறவாது. இந்தியாவின் விடுதலைக்காக அம்மையார் புரிந்தபோரும், நிகழ்த்திய பணியும், உற்றதியாகமும் இந்தியர் உள்ளத்தில் புத்தம் புதியனவாகப் பொதிந்து கிடக்கின்றன. அம்மையார் இந்தியாவைத் தமக்குரிய உயிர் நாடாகக்கொண்டது ஈண்டுக் குறிக்கத்தக்கது.

அன்னைபெசண்ட் அம்மையார் ஒரு சிறந்த கவி ; உரைநடை எழுதுவதில் பேர்பெற்றவர் ; நாவன்மையில் அவருக்கு ஒப்பாராதல் மிக்காராதல் உலகில் இல்லை. அவர் உலகுக்கு ஒருபெரும் நாவலராக விளங்கி வந்தனர். அவர் நிகழ்த்திய பணிகள்யாவும் நிஷ்காமியத்தின் பாற்பட்டன.

இத்தகைய அரிய மாணிக்கத்தை-நிஷ்காமிய கர்மயோகியை - உலகம் இழந்தது; இந்தியா இழந்தது. அம்மையாரின் பேச்சுகளும் எழுத்துகளும் பொதுவாக உலகிற்கும், சிறப்பாக இந்தியாவிற்கும் ஒளி வழங்கிக் கொண்டிருக்குமென்பதில் ஐயமில்லை.

அம்மையாரின் நல்லுயிர் ஆண்டவன் அருளொளியில் அமைதி பெறுவதாக. சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

## திருக்குறள் உரை

திருக்குறள் மூலமும், திருவாளர் - கி. வீரராகவனார் இயற்றிய பொழிப்புரையும் அடங்கிய நூல் ஒன்று வரப்பெற்றோம். நூல் நன்முறையில் அச்சிடப்பட்டிருக்கிறது. உரை, காலத்துக்கேற்ற முறையில் வரையப்பட்டிருத்தல்கண்டு மகிழ்வெய்திறோம். பண்டை உரைகள் அவ்வக்காலத்துக்கு ஏற்ப எழுதப்பட்டன. அவைகளில் சில பகுதிகள் இக் காலத்துக்கு ஏலாதன என்பதை ஈண்டு விரித்துக் கூறவேண்டுவதில்லை. திருவாளர் - வீரராகவனார் உரையில் சில பகுதிகளை ஊன்றிப் பார்த்தோம். அவைகள் பொருந்திய முறையில் பொலிவு பெற்றிருத்தலை ஈண்டுச் சிறப்பாகக் குறிக்கிறோம். இந்நூலை நன்முறையில் வெளியிட்ட காஞ்சிபுரம் தமிழ் நூற்பதிப்பகத்தார்க்கு நமது நன்றி உரியதாக. விலை அணா எட்டு. விலாசம்: குமரன் பிரஸ், காஞ்சிபுரம்.

Registered No. M. 1500.

# நவசக்தி

'எவ்வுயிர்க்கும் அன்பாயிரு'  'என்கடன் பணிசெய்து கிடப்பதே'

சிலம்பு ௧௫  ஸ்ரீமுக ௵ ஐப்பசி ௴  பரல் ௧௨

## பூகோள விலாசம்

(தொடர்ச்சி)

கந்தபுர மேலம்பி காபுரம காசிவலோ
கந்திரமா மூன்றுபுரங் காரிகையே—முந்துமதில்

### கந்தபுரம்

கந்தபுரந் தூய்ய கனகமய மாயிருக்கும்
வந்தமணி மண்டபத்தில் மத்தியினில்— அந்தரத்தில்
மின்னயுத கோடி விளங்குமரி யாசனத்திற்
பொன்னுலகிற் றேவர் புடைசூழச்—சென்னிமுகம்
ஓராறும் வேல்சூல மொண்சிலைவா ளேந்துகர
மீராறு நேத்திரங்க ளீராறுந்—தாராங்
[1]கடம்பவிரு மார்புங் கழலிணையும் பெற்று
நடம்புரியு மஞ்ஞையிலெங் நாளு—மடந்தைகுற
வள்ளிதெய்வ யானையிரு மாதரிரு பாலிருக்க
வெள்ளிவடி வேல்முருக வேளிருப்பன்—ஒள்ளொளிசேர்
பூவுலகிற் கந்தனிரு பொற்றாள் வழிபடுவோா
மேவுகந்த சட்டி விரதத்தோர்—சேவலன்ற
னாறு படைவீட் டணிவிழவு சேவைசெய்தோர்
தேறுமிவர் கந்தபுரஞ் சென்றெய்தி—யீறிலா
வாய்வுளோடும் போகநுகர்ந் தண்டர்தொழ வீற்றிருப்பர்

### அம்பிகாபுரம்

காயுமொழி சேரம்பி காபுரத்தி—லேயும்
பருதியொரு கோடி பயின்றதெனச் சோதி
விரியு மரிகதத்தா மின்னார்—திரவியத்தால்
வச்சிரத்தாற் செய்தமைத்த மண்டபத்தி னுப்பணையிர்
வச்சிரக்கற் பீடமிசை வாள்மடவா—உச்சிதமாம்
பாவாடை வீசப் பனகருல கத்திருக்கும்
பூவாடை வீசும் புரிகுழலார்—நாவாட

(பிரதி)—[1]கடம்பவரு.

மங்களங்கள் கூற மருவுமுயர் விஞ்சையர்கள்
சங்கையின்றி வீணையிசை தான்பயிற்றக—கொங்குகமழ்
நாமடந்தை கங்கா நதிமடநதை பூமடநதை
மாமடந்தை காளி வராகிதுற்கை—காமடநதை
மேனை யருந்ததிமின் மிக்கா மகலிகைமின்
வானுலகி லுள்ள மடவாருந—தாணிதமும்
பொன்மலர்கள் தூவியடி போற்ற மலையரசன்
றன்மகவா மம்பிகையா டானிருப்பள்—நன்னிலத்தில்
அம்பிகையா டன்பாதத் தன்பாய் வழிபடுவோர்
உமபர்தொழ வவ்வுலகத் துற்றிருப்பர்—நமபிதன்மேற்

## மகாசிவலோகம்

காணு மகாசிவலோ கந்தனையுங் கட்டுரைப்பேன்
ரேணுங் கதிரனந்தஞ் சூழ்நதெதென—மாணிக்கம
பச்சை வயிரம் பதுமரா கம்பவளம்
வச்சவிநதா நீலம்வயி டூரியமும்—உச்சிதமாங்
கோமே தகம்புருட ராகமணி கொண்டிழைத்த
தாமே திருப்பணி யஙகமருங்—தேமேவு
மாலயனுங் காணு மறைப்பொருளை யானனமும்
பால்பொருவுஞ் சோதிப் படிகமணி—போலுந
திருவுருவுஞ் செஞ்சடையிற் சேர்ந்திருக்கும் வெண்மை
மருவு சிறுபிறையு மல்கப்—பொருவரிய
பத்துக் கரமும் பதினைந்து நேத்திரமு
சுத்தமலர்த் தாளிணை யுந்தோன்றப்—பத்த
ருளத்திருக்குஞ் சோதி யொருபதும பீடத்
தளத்திருக்கு மிநதத் தறையோ—ருளத்தி
லொருகணமு நீங்கா துயோகுநிலை யுற்றோர்
மருவுசிவ ரூபவடி வாகி—யுருவருவான்
சாரு மகாசிவலோ கந்தனிலே தானமர்[ந்]து
சீராரு முத்தியினிற் சேர்ந்திடுவர்—நேரிதன்மேல்

## அண்டத்தின் கீழ்முதல் மேல் முகடு வரை

அண்டமுக டாங்கீழ்மே லண்டமொன்றின் றன்னுயரங்
கொண்டிருக்கும யோசனையைக் கூறக்கேள்—விண்டிடுங்கீழ்ப்
பித்திகனங் கோடியதின் பின்மேலுங் காலாக்னி
ருத்ரர்புர மேற்கோடி யோசனைமேற்—சுத்தமுள்ள
வெங்க[ன] லைங்கோடி மேற்றூம மைங்கோடி
கொங்கார் நிரையமுப்பான் கோடியின்மேல்—நங்கா
யிரண்டிலக்க மாமதன்மே லேவெளியி னீட்சி
திரண்டமுப்ப தாயிரமாந் தேனே—சுருண்டசடை[க்]
கூர்மாண்ட நன்னகரங் கோடியினி லோரிலக்கஞ்
சோர்வாகு மற்றதன்மேற் சுத்தவெளி—நேராக
வொன்ப திலக்க முறுமதன்மேற் றனதல்
மென்பமுதற் பாதாள மீருகத்—துன்பமறு

மொவ்வொன்று பத்திலக்கம் யோசனையா முள்வெளியு
மொவ்வொன்றுக் [1]கோரயுத யோசனையாஞ்—செவ்விதிகழ்
பாதலத்தின மேல்வெளியும் பததிலக்கத் தோரயுத
மீதாட கேசர்புர மேயாகும்—மாதேகே
ளான்பதி லக்க முறுமதன்மேற் றன்பூமி
யென்பதொரு கோடிகன மேயாகு—மன்பதைகள்
சஞ்சரிக்கும் பூமிமுதற் றன்கீழ் நிலையளவு
மெஞ்சலிலைம பான்கோடி யோசனையாம—வஞ்சியரே
பார்மேற் புவலோகம் பன்னஞ் சிலககமதாஞ்
சேர்சுவ ருலோகமுஙகேள் சேயிழையே—நேரியதா
யெண்பத்தஞ் சென்னு மிலககமதா மிங்கிதன்மேற்
பண்புற்ற மாலோகப் பான்மையுஙகேள்—விண்பெற்ற
கோடியிரண் டாமதன்மேற் கோடிசன லோகமெட்டுக்
கோடிதவ லோகமுமேற் கொண்டிருககுங்—கோடியுமீ
ராறு மதன்மே லயனுலகங கோடிபதி
னாறு மதன்மே லரியுலகங்—கூறுமது
நாலாகுங் கோடியின்மேல் நண்ணுஞ் சிவலோக
மேலாறு கோடி யெனவிளம்பு—மேலுமண்ட
மேன்முகடு மோர்கோடி மேதினியில் நின்றளவு
தானைம்பான் கோடியுமே தானகு—மேன்முகடு
மூற்றொழுகி மேலுலகத் தூடிறங்கி மத்தியெனச்
சாற்றுமா மேருத் தளத்திழிந்து—தோற்றுபுனல்
கீட்டிசையிற் செல்லுங் கிளாசீதை யென்றுபெயர்
காட்டு மிளாவிருத கண்டமும்பாய்ந்—தேற்றமுடன்
பத்திரவத் தெய்தியும் பாற்கடலிற் றன்பாயும்
உத்தரத்திற பத்திரியென் றோதுநதி—யத்திசையிற்
கண்ட பிரமியமுங் காணு மி ண்மயமுங்
கண்டுகுரு கண்டங் கடந்துபோய்த்—தெண்டிரையிற்
சாருங் குடதிசையிற் சக்குசையென் றோதுநதி
சேரு மிளாவிருதஞ் சென்றப்பால்—ஆருந்
துதிகேது மாலகண்டத் தூடாக மேல்பா
லுததிதனிற் சேர்ந்தோடு முண்மை—யிதுநிற்கத்
தெற்கழகம் நந்தையெனச் சென்றே யிளாவிருதம்
நிற்குமரி கிம்புருடம் நீத்தேகித்—தெற்குப்
பரதகண்டந் தீவொன் பதுங்கடந்து தென்பால்
குரவையினிற போய்ப்பாயுங் கோதாய்—சரதமதா

புவனம் : 108

மின்னம் புவன மியம்பக்கே ளேந்திழையே
பின்னுமண்டப் பிற்புறத்திற் பித்தியினிற்—றன்னுந்
திசையினுககீ ரைநதாகச செப்புமொரு பத்துத்
திசையினுக்கு மெண்ணூறு சேரும்—பிசகா
திருக்குமண்டத் துள்ள விருநான்கு சேருந்
தரிக்கும் பிரிதிவியின் றத்வத்—துரைக்கும்

(பிரதி)—[1]கேசுரபுர.

புவனமொரு நூற்றெட்டாம் பூவையே யிந்தப்
புவனத் துருத்திரர்தம் பொற்புச்—சிவனை

**அனைத்துலகினும் இறைவனது பஞ்சகிருத்தியம் நிகழ்கின்றமை**

890 நிகர்வோரு நூற்றெண்மர் நித்தியரா யென்றும்
புகலுமட்ட திக்கினரும் போற்ற—விகலுடைய
பூத கணங்கள் புடைசூழ வேபுவன
நாதர் முறைமுறையாய் நண்ணிடவே—ரீதினைப்போல்
எண்ணிறைந்த வண்டபிண்ட மெல்லாமும் நாகலிங்க
ருண்ணிறைந்து நின்றே யுயிரனைத்துந—தண்ணளியா
லாட்டுவித்து நாளு மளவிறந்த போகமெல்லா
மூட்டுவித்தும் பின்னு முறகருவித்தும—வாட்டு
பக்குவர்க்குச சற்குருவாய்ப் பாதமலர் சூட்டுவித்து
மிக்கான முத்தியெனும் வீடளிப்பன்—றக்கமரு

**நூற்பயன்**

895 தீசரிரு பாதமல ரெநநாளும் போற்றுகின்ற
தாச னெனுமாபத் தாரணன்ரு—னேசமுடன்
விண்டபூ கோள விலாசமதைப் பூவுலகிற்
கண்டு படிப்பவருங் காதலுடன்—கொண்டிருந்து
கேட்டவரு மர்த்தங் கிளத்தினருந் தானீண்ட
வேட்டெழுதிப் பூசித் திடுவோரும்—வாட்டமில்லா
மைந்தர்பதி னாறுபெற்று மாருத வாழ்வுபெற்றுத்
தந்தவய தெண்ணூறுந் தானிருந்தே—அந்தமதில்
899 மேலாஞ் சிவபுரியின் மேவி யினிதுறைவர்
நாலாம் பதத்தி னயநது.

## முடிவுரை

ஒவ்வொரு தேயத்திலும் ஒவ்வொரு சமயததிலும் தனிததனியாக உலக வருணனைகள் கற்பிததுக்கொள்ளப்பட்டுள்ளன. கிரேக்கர்களுடைய 'காஸ்மாலஜி' (Cosmology) மிகப் பிரசிததமானது. பௌத்தர்களது உலகக் கூறுபாடுகள் மணிமேகலையிற் சக்கரவாளக் கோட்டமுரைதத காதையிற் கூறப்படுகினறன. ஜைன சமயததவர்களது உலகக் கூறுபாடுகளை மேருமந்தா புராணததிற் சமவசரணச் சருக்கத்திலும் லோகாணி முதலிய பிற நூல்களிலும் காணலாம்.

வைதிக சமயங்களுக்குரிய லோகவிவரணங்கள் புராணேதிகாசங்களில் விரிவாய்த் தரப்படுகின்றன. உதாரணமாக, மச்சபுராணததில், 'புவனகோச சமாததி' 'பூகோள மேரு வர்ணனை' முதலிய அதத்தியாயங்களைக் காண்க. இவற்றை அடிப்படையாகக் கொண்டே மிகப் புராதனகாலத்திற் புராண கதைகளெல்லாம் தோன்றின. அனறியும் இலக்கியங்களிலும் சமய நூல்களிலும் இவை மலிந்து காணப்படுகின்றன. ஆதலால், இலக்கிய முதலியவற்றில் தக்க பயிற்சியடைய விரும்புவோர்க்கு இவ் வுலக வருணனைகளைத தெரிந்துகொள்ளுதல் இன்றியமையாததாம். இக்காரணம்பற்றியே இவ்விஷயத்தைக் குறித்துத் தனி நூல்கள் இயற்றும் மரபும் நமது நாட்டில் எழுந்தது.

இவவாறு தோன்றிய தனி நூல்களுள் ஒன்று 'அண்டகோள விலாசம்' என்பது. உரையோடு கூடிய இதன் பிரதியொன்று சென்னையில் அரசாங்கத்தாரது தொன்னூல் - நிலயத்தில் உள்ளது. இதனை இயற்றியவர் வேம்பத்தூரில் ஸரஸ்வதிபீட மென்று கருதப்பட்டவரும் சௌந்தரியலகரி முதலிய நூல்கள் ஆக்கியோருமாகிய கவிராச பண்டிதரின் வமிசத

திற் பிறந்த முத்துவேங்கடசுப்பையர் என்பவர். இவர் பால்வண்ணராம சாஸ்திரிகள் என்பவரைத் தமது குருவெனக் குறிப்பிடுகின்றார். **பிரபந்த தீபிகை** இயற்றிய ஆசிரியரும் இவரே.

அண்டகோள விலாசத்தைப்போன்ற பிறிதொரு நூல் இப்போது வெளியிடப்பெறும் **பூகோள விலாசம்.** இதனை இயற்றியவர் **'ஆபத்தாரணன்'** என்னும் பெயரினரென்பதும் இவரது ஊர் இராமநாதபுரத்துக்கு வடமேற்கில் 17 மைல் தூரத்திலுள்ள மருதூர் என்பதும்

“. . . . . . . . .தக்கமரு
தீசரிரு பாதமல ரெந்நாளும் போற்றுகின்ற
தாச னெனுமாபத் தாரணன்றான்—நேசமுடன்
விண்ட பூகோள விலாசமதை ”—[**கண்ணி** : 894 - 6]

என்னும் இந்நூலின் அடிகளால் உணரலாம். நூலாசிரியரைக் குறித்து வேறு யாதும் அறியக்கூடவில்லை.

மருதூர் இப்பொழுது நயினார்கோயில் என வழங்குகின்றது. இங்கே எழுந்தருளியிருக்கும் நாகநாத சுவாமி பேரில் தலைமலைகண்ட தேவர் அந்தாதி இயற்றியுள்ளமை யாவரும் அறிவர். இவ் அந்தாதி பாடிய வரலாற்றினை,

“. . . காரடர்ந்த நற்குடியில் வாழ்மறவன்
மூடனிரு கண்ணில்லான முத்தமிழும்—பாடத்
தெரிவித்தே யந்தாதி செப்புகென முற்சீர்
தருவித் தருள்புரிந்த சம்பு ” —[**கண்ணி** : 516 - 9]

என்று வரும் இந்நூலடிகள் உணர்த்தும். இதனையே இராமநாதபுர மன்னர் சிவசாமி சேதுபதியவர்கள் மீது சரவணப் பெருமாள் கவிராயரவர்கள் பாடிய விறலிவிடுதூதில்,

“. . . . . . . —முத்தமிழின்
பண்காட்டி யந்தாதி பாடியமெய்த் தொண்டனுக்குக்
கண்காட்டி யாண்டுகொண்ட கண்ணுதலை ”

என்று வரும் அடிகளும் தெரிவிக்கின்றன.

மருதூர்த்தலம் பற்றிய வரலாறுகள் பல 489 - 533 வரையிலுள்ள கண்ணிகளிற் கூறப்படுகின்றன.

இந்நூலினை அச்சிடுவதற்குக் கிடைத்த ஏட்டுப் பிரதியின் இறுதியிலே,

‘ ஆகக் கண்ணி ௮௱௯௰௯. சிவகெங்காதரா கிருபை. உ. ஸ்ரீ பருவதவர்த்தனியம்பாள் சமேத ராமநாதசுவாமி கிருபை யுண்டாக. உ. ௲௰௭௵ பிலவ௵ தை௴ ௰௫௳ புதவாரமும் பவுர்ணமையும் பூச நட்செத்திரமுங் கூடின சுபயோக சுபதினத்தில் எழுதி முகிந்தது முற்றும். உ. சிவகுருப்பியோ நம : உ.’

என்று ஒரு குறிப்புக் காணப்படுகின்றது. எனவே இப்பிரதி இற்றைக்கு 92 வருடங்களுக்கு முன்னர் எழுதப்பெற்றதாகும்.

இவ் ஏட்டுப் பிரதியை யுதவிய நண்பர் ஆழ்வார்குறிச்சி ஸ்ரீமான். M. P. S. துரைசாமி முதலியார் அவர்கள். இவர்களுக்கு எனது நன்றி யுரியதாகின்றது.

தமிழ் லெக்ஸிகன் ஆபீஸ்
18—10—33.

S. வையாபுரிப் பிள்ளை.

# யோபுவின் பக்தித் திறன்

[திரு. தி. ர. சாரங்கபாணி, எம். ஏ.]

II

அவர் என்னைக் கொன்று போட்டாலும் நான் அவர்மேல் நம்பிக்கையா யிருப்பேன் என்ற யோபு "இறைவனே! இப்பிணியின் கொடுமை என்னால் சகிக்க இயலவில்லை; உம்முடைய தண்டனை என்னால் தாள இயலவில்லை. எனவே,

"உம்முடைய பயங்கரம் எனனைக் கலங்கப் பண்ணுதிருப்பதாக" 13 : 21.

நீர் என்னைத் தண்டிப்பது நியாயமே. என் இளவயதின் பாவம்- இன்றேல் யான் அறியாமல செய்த பாவம்- என்னைச் சூழ்ந்து நிற்கின்றதுபோலும் ஆதலான்,

"என அக்கிரமங்களும் பாவங்களும் எததனை? என மீறுதலையும் என் பாவததை யும் எனக்குணர்த்தும்" 13 : 23.

என் மீறுதல்களை யான் உணர்ந்து வாட, பாவவுணர்வான் யான் என்னைத் தூயவனாக்கிக் கொள்ள எனக்கு என் பாவங்களை புணர்த்தியருளும்.

"ஸ்திரீயினிடததில் பிறநத மனுஷன் வாழ்நாள் குறுகினவனும் சஞ்சலம் நிறைநத வனுமா யிருக்கிறான். அவன் பூவைப்போலப் பூததது அறுப்புண்கிறான்; நிழலைப்போல நிலைநிற்காமல் ஓடிப்போகிறான்" 14 : 1—2.

நீரிடைக் குமிழிபோல் நின்றழியும் பிறவியாகிய இம் மானிடப் பிறவியைப் பெற்ற பேதையாகிய என்னால் உம்முடைய தண்டனையைத் தாங்க இயலவில்லையே.

"இப்படிப்பட்டவன்மேல் நீர் உம்முடைய கண்களைத் திறந்து வைதது உம்முடைய நியாயத்துக்கு என்னைக் கொண்டு போவீரோ?" 14 : 3.

"என் பாவத்தின்மேலல்லவோ கவனமாயிருக்கிறீர்" 14 : 16.

நடடாக மதிதது என பாவததிறகாக என்னை நீர் தண்டித்தால் நானென் செய்வேன். ஆண்டவரே! இரங்கும் இரங்கும்!" எனக் குறையிரநது நிறறல் நோக்குக.

யோபுவின மெய்புரைகளைக் கேட்டு வெகுண்ட எலிப்பாஸ்,

"உமமுடைய வாய் உம்முடைய அக்கிரமத்தைச் சொலலிக் காட்டுகிறது. நீர் தநதிர முள்ளவாகளின நாவைத தெரிந்துகொணடீர்"

"நான அலல, உம்முடைய வாயே உம்மைக் குறறவாளியெனத தீர்க்கிறது; உம்முடைய உதடுகளே உமக்கு விரோதமாய்ச் சாட்சி யிடுகின்றன" 15 : 5—6.

நண்பரே! நிறுத்தும உம்முடைய பிதற்றலை. உமமுடைய உதடுகளே உம்முடைய அக்கிரமத்தை வெளியிடுகின்றன. நீர பெரிய ஞானியைப் போலும நீதிமானைப் போலும் பிதற்றுகின்றீரே.

"நீர தேவனுடைய இரகசிய ஆலோசனையைக் கேட்டு ஞானத்தை உமமிடமாய்ச் சேர்த்துக் கொண்டீரோ?" 15 : 8.

"மனுஷனைவன் பரிசுத்தமா யிருக்கிறதற்கும், ஸதிரீயினிடததில் பிறநதவன் நீதிமானா யிருககிறதற்கும் அவன் எம்மாததிரம்" 15 : 14.

அந்நிலையில் நீர் நீதிமானைப் போல் ஒழுகல் வீண் புரட்டேயாகும்.

"மாயக்காரரின் கூட்டம் வெறுமையாய்ப் போம்" 15 : 34.

ஆதலின் இறைவனை ஏமாற்ற முயலாதேயும்" என்றுரைத்தான்.

எலிப்பாஸின் வெகுளியுரைகள் யோபுவுக்குப் புண்ணில் புளியிட்டது போல் வாட்டினவெனினும், அன்பு நெறி பற்றிய யோபு எலிப்பாஸை நாவாரத் தூற்று.

"ஆனாலும் நான் என் வாயினால் உங்களுக்குத திடஞ் சொல்லுவேன்; என் உதடுகளின் அசைவு உங்கள் துககததை ஆற்றும்" 16 : 5.

எனக கூறி.

"நொறுக்குதலின் மேல் நொறுக்குதலை என்மேல் வரப்பண்ணினார்" 16 : 14.

" என கைகளிலே கொடுமையில்லா திருக்கையிலும் என ஜபம் சுததமாயிருக்கை யிலும் அப்படி யாயிறறு" 16 : 17.

"மரண இருள் என கண்ணிமைகளின மேல் உண்டாயிருக்கிறது" 16 : 16.

" என சிநேகிதர்கள் என்னைப் பரியாசம் பண்ணுகிறார்கள் ; என கண் தேவனை நோககிக கண்ணீர் சொரிகிறது" 16 : 20.

என்று தம் நிலையையும் நம்பிக்கையை யும விரிததுரைத்து " ஆண்டவரே! என் நண்பர்களின் மீது யான் குறை கூற விழைகின்றிலேன்.

"நீர் அவர்கள் இருதயததுககு ஞானத்தை மறைததீர்" 17 : 4.

எனவே! அவர்களென் செய்வாகள். நண்பர்களே!

"நீதிமான் தன வழியை உறுதியாய்ப் பிடிப்பான்" 17 : 9.

ஆதலின் தீராத்துயரம்,என்னை இறை வன் மாட்டியான் கொண்டுள்ள மாா நம்பிக்கையை எவ்வாறும் மாற்றிடத் தூண்டாது. ஆகையால் நண்பர்களே !

" இப்போதும் நீங்கள் எல்லாரும் போய் வாருங்கள் : உங்களில் ஞானமுள்ள ஒருவனை யுங் காணேன" 17 : 10.

என்று அமைதியுடன் பதிலீந்தா ரெனின் அவருடைய மனோ நிலையின் திறன் இனிது விளங்கவில்லையோ ?

யோபுவின் பதிலுரைகளைச செவி மடுத்த பில்தாத வெகுளி விமம,

" நாங்கள் மிருகங்களைப்போல எண்ணப் பட்டு உங்கள் பார்வைக்குத் தீழ்ப்பானவர் களா யிருப்பானேன்" 18 : 3.

" துனமார்க்கனுடைய விளக்கு அணைநது போம" 18 : 5.

என்பதை நீர் அறியீரா ?

"அவன் பெலனாய் நடந்த நடைகள் குறைந்துபோம்" 18 : 7.

என்று நீர் உணரீரா ?

"பயங்கரமான மரணமே அவன் அவய வங்களைப் பட்சிக்கும்" 18 : 13.

என்று ஓரீரா" என யோபு மனம்

" நீங்கள் எததமட்டும் என் ஆததுமாவை வருததப்படுத்தி - வாாததைகளினுல் என்னை நொறுககுவீர்கள்" 19 : 2.

என்னுடைய நிலையை நீங்கள் உணரா விலலையே.

" என சகோதரரை என்னைவிட்டுத் தூரப்படுததினார்" 19 : 13.

" என் பநது ஜனங்கள் விலகிப் போனார் கள். என் சிநேகிதர்கள் என்னை மறந்துவிட் டார்கள்" 19 ; 14.

" என் வீட்டு ஜனங்களும் என் வேலைக் காரிகளும் என்னை அநநியனாக எண்ணு கிறார்கள். அவர்கள பாாவைககு நான் பர தேசியானேன" 19 : 15.

" என பிராண சிநேகிதர் எல்லாரும் என்னை வெறுக்கிறார்கள. நான சிநேகித தவர்கள் எனககு விரோதிகளானார்கள்" 19 : 19.

அன்பர்களே ! இந்த நிலைமையில் நீங்களிருநதால் நீங்கள் என் செய் வீர்கள் ?

" என் சிநேகிதரே! எனககு இரங்குங்கள் எனக்கு இரங்குங்கள்" 19 : 21.

"தேவனைபபோல நீங்களும் என்னைத துன்பப்படுததுவானேன" 19 : 22.

நீங்களும் என் துன்பத்தைப் பெருக் கல் நியாயமோ? நீங்கள அனைவரும் என்னை எள்ளிநகையாடினும்,

"என் மீட்பர் உயிரோடிருக்கிறார் என றும், அவர் கடைசி நாளில் பூமியின்மேல் நிற்பார் என்றும் நான் அறிநதிருக்கிறேன" 19 : 25.

ஆகையால் உங்களுக்காக யான் வருந்துகின்றே னல்லது உங்களைப் பழிக்கின்றேனலலே" எனவும் சோப் பார்கண்சிவக்கஅங்கமபதற "யோபுவே! (20:3) உம்முடைய அக்கிரமம உம்மை வாட்ட எங்களை நீர் நிந்திப்பது என்ன கோலம்.

" துனமார்க்கரின் கெம்பீரம் குறுகினது என்பதையும், மாயக்காரரின் சந்தோஷம் ஒரு நிமிஷம மாததிரம நிற்கும என்பதை யும்.........நீர் அறியீரோ" 20 : 4—5.

"உருவின பட்டயம் அவர் சரீரத்தையும் மின்னுகிற அம்பு அவன் பிச்சையும் உரு விப் போகும்" 20 ; 25.

"இதுவே தேவனால் துனமார்க்கனுக்குக் கிடைக்கும் பங்கும் அவன் செய்கைக்குத தேவனால் அவனுக்கு வரும் சுதந்தரமுமாம்" 20 : 29.

என்பதை நீர் அறியீரா? நீதிமான் நீதிமான் என்று நீர் உளற, துன்மார்க்கனுடைய இறுதி உமமை யணுகியிருத்தலை உணராது எங்களை நிந்திததுப் பயனென்? " என்றான்.

அதைககேட்டு யோபு "நண்பர்களே துன்மார்க்கர்களுடைய இயல்பையுமஇறுதியையும நான் உணர்வேன்.

"அவர்கள் வாழ்வு அவர்கள் கையிலிராது. துனமார்ககன ஆலோசனை எனக்குத தூரமாயிருப்பதாக " 21 : 16.

அத்தகைய புல்லியர்களின் சகவாசமும் புல்லியயோசனையு மெனக்குவேண்டுவதில்லை. ஆதலின்,

"நீங்கள் வீணான ஆறுதலை எனக்குச் சொல்லுகிறது என்ன? உங்கள் மறுமொழிகளில் உண்மைக்கேடு இருக்கிறது " 21 : 34

உண்மையோடியைந்திடா உங்களுடைய ஆறுதல் எனக்கு வேண்டுவதில்லை " என தேமானியனான எலிப்பாஸ்.

"நீர் நீதிமானாயிருப்பதால் சர்வ வல்லவருக்கு நன்மை யுண்டாகுமோ?" 22 : 3.

அன்பரே! நீதிமானா யிருக்கிறேன் நீதிமானா யிருக்கிறேனெனக் கூறிப் பயனென்? உம்முடைய அக்கிரமங்களை நீர் எண்ணிப் பாரும.

"உம்முடைய பொல்லாப்புப் பெரியதும் உம்முடைய அக்கிரமங்கள் முடிவில்லாதவைகளுமாய் இருக்கின்றனவல்லவா?" 22 : 5.

"விடாய்த்தவனுக்குத் தாகத்துக்குத் தண்ணீர் கொடாமலும் பசிததவனுக்குப் போஜனங் கொடாமலும் போனீர்" 22 : 7.

"விதவைகளை வெறுமையாய் அனுப்பிவிட்டீர்" 22 : 9.

அவ்வக்கிரமங்களினாலேயே இத்துன்பம் உம்மை யணுகி யிருக்கிறது. நீர் என்மீது கோபங்கொண்டு நிந்திக்கின்றேனென நிந்தித்துப் பயனென்.

"வேதப் பிரமாணத்தை யேற்றுக்கொண்டு அவனுடைய வார்த்தைகளை இருதயத்தில் வைத்துக்கொள்ளவேண்டுகின்றேன்" 22:22.

இறைவனை இரநது நில்லும். அதுகாலை உம்முடைய துயரம் உம்மைவிட்டகலும். ஆண்டவன் கருணையெனும் ஒளி உமமீது வீசும்" என்றான். அவ்வுரைகளைக்கேட்ட யோபு எலிப்பாஸே!

"நான் அவரை எங்கே கண்டு சந்திக்கலாம் எனபதை யறிநதால நலமாயிருக்கும்" 23 : 3.

என்னாண்டவரைக் காணும் பேற்றை யான் பெறுவனா?

"அங்கே சன்மார்க்கன அவரோடே வழக்காடலாம் " 23 : 7.

என்றாலும் நண்பரே!

"ஆனாலும் நான் போகும் வழியை அவர் அறிவார்" 23 : 7.

"என்கால்கள் அவர் அடிகளைப் பற்றிப் பிடித்தன; அவருடைய நெறியை விட்டு நான் சாயாமல் அதைக் கைக்கொண்டேன்" 23 : 11.

"அவர் உதடுகளின் கற்பனைகளை விட்டு நான்பின்வாங்குவதில்லை" 23 ; 12.

நீர் எண்ணுமாபோல் துன்மார்க்கனாக யான் என் வாழ்க்கையை நடாத்தவிலலை. எனினும் யானறியாதியற்றிய பாவம் என்னை வாட்டுகின்றதே. துன்மார்க்கனின் இயல்பையும் அவன் இறுதியி லடையுங் கதியையும் நான் அறிவேன். துன்மார்க்கர்கள் தண்டனையடையாதவர்களைப்போல் தோன்றிடினும், நீதிமான் இடிப்புண்டு வாழினும், இறுதியில் துன்மார்க்கன் துன்பத்தையுஞ் சன்மார்க்கன் இன்பத்தையுமெய்துவது திண்ணம்" என்றார்.

யோபின் அறவுரைகளைக் கேட்டபில்தாத தற்கால அறிவிலிகள், அறிவின்மையால் அறைவது போலும்,

"மனுஷன் தேவனுக்கு முன்பாக நீதிமானாயிருப்பது எப்படி" 25 : 4.

மனிதன் பிறந் திருந்து இறந்து மறையும் மனிதன் நீதிமானாக இருக்க வியலாதே. அநநிலையில் நீர் உம்மை நீதிமானாகக் கருதுவதெவண் என்றான். நம்முள் பல ரகத்துள் அடிக்கடி யுதித்தெழும் பெருஞ் சந்தேகமே பில்தாத்

தின் வாய் மொழியிலும் மிளிரல் காண்க.

உடனே யோபு "பில்தாத்தே !

"நீ ஞான மில்லாதவனுக்கு எப்படி உசாவுதுணையாயிருநது மெய்ப பொருளைக் குறைவற அறிவித்தாய்" 26. 3.

உண்மையை உணரா உனக்கு மனிதன் நீதிமானாக இருப்பது பெரும் ஆச்சரியமாகவே யிருக்கும். ஆனால் அன்ப!

"என்சுவாசம் என்னிலும் தேவன் தந்த ஆவி என் நாசியிலுமிருக்குமட்டும் - என் உதடுகள் தீமையைச சொல்லுவது மில்லை என் நாக்கு கபடம் பேசுவது மில்லை என்று - என் நியாயத்தைத் தள்ளி விடுகிற தேவனும் என் ஆத்துமாவைக் கசப்பாக்குகிற சர்வ வல்லமையுடைய ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேன்" 27 ; 23 : 4.

ஆதலான் உன்னுடைய உரை என்னை என் கொள்கைகளினின்றும் எவ்வகையானும் மாற்றிடாது.

"என் நீதியைக் கெட்டியாய்ப் பிடித்திருக்கிறேன்; அதை நான் விட்டுவிடேன. நான் உயிரோடு இருக்குமளவும் என் இருதயம் என்னை நிந்திக்காது" 27 : 6.

மானிடப் பிறவியின் மாண்பை நீங்கள் உணரவில்லை. உலகிடை நிலவும் ஜீவராசிகளுள் தலைசிறந்து விளங்குபவன் மனிதனே என்பதை நீங்கள் உணர்தல் வேண்டும். விலை மதித்தற்கரிய பல பொருள்களை நாம உலகில் காண்கின்றோம். அவைகளை யெல்லாம் நாம் கொள்ளவும் விலையீநது, வாங்கவும் ஒல்லும். ஆனால்,

"ஞானம் கண்டெடுக்கப் படுவதெங்கே? புத்திவிளைகிற இடம் எது ?" 28 : 12.

ஞானம் இருக்குமிடத்தை நாம் அறிய வியலுமா ?

"அதின்விலை மனுஷனுக்குத்தெரியாது." 28 : 13.

அதனை விலைகொடுத்து வாங்கவும் ...மா. எனவே,

"ஞானம் எங்கேயிருந்து வரும்? புத்தி தங்கும் இடம் எங்கே" 28 : 20

"தேவனே அதின்வழியை அறிவார்" 28 ; 23.

"இதோ ஆண்டவருக்குப் பயப்படுவதே ஞானம் பொல்லாப்பை விட்டுவிலகுவதே புத்தி?" 28 :28.

எனவே, ஞானத்தை நாம் ஆண்டவனருளா லன்றோ பெறல்வேண்டும் ? ஆண்டவனை யுணரா அறிவும், அவரை நாடா மனமும், அவரைப் போற்றா நாவும் ஞானததைக் கொள்ள ஒல்லுமோ ? ஞானத்தைப்பற்றிப் பேசவும் முறையோ ? அன்பர்களே ! அவருடைய பேரருள் என்னைச் சூழ்ந்து நின்ற நாட்களில் எத்துணைச் சிறப்பை நான எய்தினேன்.

"முறையிடுகிற ஏழையையும் திக்கற்ற பிள்ளையையும் உதவியற்றவனையும் ரட்சித்தேன்" 29 : 12.

"நீதியைத்தரித்துக் கொண்டேன்" 29 : 14.

"நான் குருடனுக்குக் கண்ணுஞ் சப்பாணிக்குக் காலுமாயிருந்தேன்" 29 : 15.

ஆனால் இப்பொழுதோ,

"என்னிலும் இளவயதானவர்கள் என்னைப் பரியாசம் பண்ணுகிறார்கள்" 30 : 1.

"நான் அவர்களுக்குப் பாட்டும் பழமொழியும் ஆனேன்" 30 : 9.

"இப்பொழுது என் ஆத்மா முறிந்துபோயிற்று" 30 : 16

"இராக்காலத்திலே என் எலும்புகள் துளைக்கப்பட்டு என் நரம்புகளுக்கு இளைப்பாறுதல் இல்லாதிருக்கிறது" 30 : 17.

ஆ ! ஆண்டவரே !

"உம்மை நோக்கிக்கூப்பிடுகிறேன். நீர் எனக்கு மறு உத்தரவு கொடாதிருக்கிறீர்; கெஞ்சி நிற்கிறேன்; என்மேல் பராமுகமாயிருக்கிறீர்" 30 : 20.

அன்பர்களே ! யான் துன்மார்க்கனாக இருந்தேனென நீங்கள் என்னைப் பழிக்கின்றீர்கள்.

"என் கண்களோடே உடன்படிக்கை பண்ணின நான் ஒரு கன்னிகையின்மேல் நினைப்பாயிருப்ப தெப்படி" 31 : 1.

"என் நடைகள் வழியைவிட்டு விலகினதும் என் இருதயம் என்கண்களைப் பின்தொடர்ந்ததும் ஏதாகிலும் ஒருமாசு என்கைகளில் ஒட்டிக்கொண்டதும் உண்டானால்

அப்பொழுது நான் விதைத்ததை வேறொருவன் புசிப்பானாக" 31 : 7, 8.

"என் வேலைக்காரனானாலும் என் வேலைக்காரியானாலும் என்னோடு வழக்காடும்போது அவர்கள் நியாயத்தை நான் அசட்டைப் பண்ணியிருந்தால் - தேவன் எழும்பும்போது நான் என்ன செய்வேன், அவர்விசாரிக்கும்போது நான் அவருக்கு என்னமறு உத்தரவு சொல்லுவேன் - தாயின் கர்ப்பத்தில் என்னை உண்டுபண்ணினவர் அவனையும் உண்டுபண்ணினார் அல்லவோ" 31 : 13, 15.

நண்பர்களே!

"என் பகைஞனுடைய ஆபத்திலே நான் மகிழ்ந்து பொல்லாப்பு அவனுக்கு நேரிட்டிருந்தபோது களிகூர்ந்திருந்தேனோ" 31 : 29.

எனவே, நான் ஆண்டவனுடைய அருள் நெறியைப்பற்றி என் வாழ்க்கையை நடாத்தினமையான் நான் சன்மார்க்கனே யாவேன் என்று யோபு உளங் கசிந்துரைத்தார்.

மேலோதிய உரைகளில் ஆண்டவரை அன்புடைய அப்பனாக வரித்த யோபு மக்கட் கூட்டத்தைச் சகோதரர்களாகக் கருதல் முறையேயாம். அத்தகைய சகோதர வாஞ்சை நம்மிடத்தில் இலங்குகின்றதா? நம்முடைய வாழ்க்கையில் அவ்வாஞ்சை விளங்குகின்றதா?

இரக்ஷகரின் "நல்ல சமாரியன்" உபமானச்சரிதை வேத புத்தகத்திலும், குருட்டுப்பாடமாகவும் இருக்கின்ற தல்லாமல் எத்தகைய வேற்றுமைகள் நம்முள் அரும்புகின்றன. இவன் பிராமணகிறிஸ்தவன், இவன் தமிழக் கிறிஸ்தவன், இவன் பஞ்சமகிறிஸ்தவன் எனும்பிறப்பு வேற்றுமை ஒருபால் விளங்க, உரிமை வேற்றுமை மறுபுறம இலங்க, மதவேற்றுமை எங்கணுந் துலங்க, சகோதர வாஞ்சையை - சாதிமத பேதங்கடந்த தூயநெறியாகக் கிறிஸ்து அண்ணல் எடுத்துக்காட்டாகத் தம்வாழ்க்கையிலேயே எடுத்துக் காட்டிய அன்பு நெறியை - நாம் மறந்தும எண்ணுகின்றோமா? தம்முடல் பொருளாவி எனும் மூன்றினையும் நம் பொருட்டு ஒப்பற்ற தியாகஞ் செய்த இரக்ஷகரின் சமயத்தை நாமும் சேர்ந்தவர்கள் என்று கூறுகிற உரிமைக்கு நாம் உரியவராகும் வாழ்க்கையை நடாத்துகின்றோமா? ஆண்டவனுடைய அருளான் அவனுடைய நெறிபிறழாது "யான் என் வாழ்க்கையை நடாத்தினேன், எனவே, யான் சன்மார்க்கன் என பக்தியால் போதரும் இறுமாப்புடன் யோபுவைப் போலும் நாமும அறைய இயலுமா?" பகைவரையுங்காதலிக்கும் அன்பன்றோ அன்பு. "மனந்திரும்புங்கள்" என்று இயேசுபெம்மான் தம்தொண்டை உலகிலாற்றத் தொடங்குங்கால் இசைந்த தூய வார்த்தைகள், என்றும் நம் மகத்தில் இருக்குமேல் நம்முடைய வாழ்க்கைப்பண்படுமென்பதற் கோரையமு மில்லை.

நிற்க, யோபுவின் மொழிகளை அதுகாறும் வாளாவிருந்து செவிமடுத்த எலிகூவுக்குக் கோபம் மூண்டது. தன்னை நீதிமானெனப் பல்வகையானும் யோபு முடிவு சடடியதே அவனுடைய வெகுளியை மூட்டியதெனக் கூறலும் ஒவ்வும். யோபுவின் உரைகளைக் கேட்டுப் பதிலறைய வியலாது வாளா கிடந்த யோபுவின் நண்பர்களாகிய எலிபாஸ் பில்தாத் சோபாரெனும் மூவர்மீதும் அவன் சீற்றங்கொண்டான். யான் வயதில் சிறியவனாக இருத்தலான் நீங்கள் பேசி முடியுங்காறும் வாளா விருந்தேன். இப்பொழுதோ யோபுவுககு பதிலளிய வியலாது நீங்கள் வாளாயிருத்தலான் அவருக்கு யான் பதிலறையத் துணிந்தேன்.

"பெரியோரெல்லாம் ஞானிகளல்ல; முதியோரெல்லாம் நீதியை யறிந்தவர்களுமல்ல" 32 : 9.

எனவே, நாம் வயதைப் பொருட்செய்யலாகாது. ஆதலான் யோபுவின் உரைகளுக்கு யான் பதிலளிக்கத் துணிந்தேன. யோபுவே!

"நான் மீறுதல் இல்லாத சுத்தன்; நான் குற்றமற்றவன்; என்னில் அக்கிரம மில்லை; இதோஎனனில் அவர் குற்றம்பிடிக்கப் பார்க்கிறார். என்னைத் தமக்குச் சத்துருவாக எண்ணிக்கொள்ளுகிறார்" 33 : 9, 10.

என்று நீர் இயம்பியதைச் செவியுற்றேன்.

"நீர் நீதியுள்ளவர் அல்லவென்று உமக்குப் பிரதியுத்தரமாகச் சொல்லுகிறேன" 33 : 12.

பெரியோரே!

" நான உமக்கு ஞானததை உபதேசிப் பேன" 33 : 33.

என்று இறுமாப்புடன,

" யோபு : நான் நீதிமான் ; தேவன என நியாயததைத தள்ளிவிட்டார் எனறும் நியாயம் என்னிடததில் இருந்தும் நான் பொய்யனெனறு எண்ணப்படுகிறேன ; மீறுதல் இல்லாதிருந்தும் அம்பினுல் எனக்குண்டான காயம் ஆறுததாயிருக்கிற தென்றும் சொனனுரே" 34 : 5, 6, 7.

ஆ! 'யோபுவே நீர் இறைவன் நீதிமான்களைத் தண்டிக்கிறுர் என்று கூறுவது முறையா?

" நீதியைப் பகைக்கிற ஒருவன ஆளக கூடுமோ" 34 : 17.

பெரியோர்களே !

" யோபு அறிவில்லாமல் பேசினுர் ? அவர் வார்த்தைகள் ஞானமுள்ளவைகள் அல்லவென்று புத்தியுள்ள மனுஷர் என் பட்சமாய்ப் பேசுவார்கள் " 34 : 34, 35.

ஆ! யோபுவே,

" என் நீதி தேவனுடைய நீதியைப் பார்க்கிலும் பெரிய தெனறு நீர சொன்னது நியாயம் என்று எண்ணுகிறீரோ " 35 : 2.

உமக்கு மெய்ஞ்ஞானததை யான் அறிவுறுத்துகின்றேன்.

" தேவன் மகத்துவ முள்ளவர்; அவா ஒருவரையும் புறக் கணியார; மன உருக்கததிலும் அவர் மகததுவ முள்ளவர் ; அவர் துன்மார்க்கரைப் பிழைக்க ஒட்டாதிருக்கிறுர் ; சிறுமையானவர்களின நியாயததை விசாரிக்கிறுர் " 36 : 5, 6.

கருணை மிகுந்த அவர்,

"சிறுமைப்பட்டவர்களை அவர் சிறுமைக்கு ஒடுக்கபட்டிருக்கையில் அவர்கள் செவியைத திறக்கிறுர்" 36: 15.

" அப்படியே அவர் உம்மையும் நெருக்கத்தினின்று விலக்கி ஒடுக்கமில்லாத விசாலததிலே வைப்பார்......நியாயமும் நீதியும் உம்மை யாதரிக்கும் " 36 : 16 : 17.

ஆதலின் யோபுவே நீதிமான் நீதிமான் என வீண் வார்த்தையாடல்

" தேவனுடைய ஆச்சரியமான கிரியைகளைத தியானிததுப் பாரும்" 37 : 14.

" சர்வவல்லவரை நாம் கண்டு பிடிக்கக் கூடாது அவர் வல்லமையிலும் நியாயததிலும் பெருததவர் ; அவர் மகா நீதிபரர். அவர் ஒடுகக மாட்டார். ஆகையால் மனுஷர் அவருககுப் பயப்படவேண்டும். தங்கள் எண்ணததில ஞானிகளாயிருக்கிற எவர்களையும் அவா மதிககமாட்டார்" 37 : 23, 24.

யோபே உமமைப்போல் தம்மைத் தாமே ஞானியெனப் போற்றிக்கொள்ளும் பிததர்களை அவர் மதிக்கமாட்டார் என்றியம்பியதும் பெருங் காற்றிலிருந்து,

" அறிவில்லாத வார்த்தைகளினுல் ஆலோசனையை அந்தகாரப் படுத்துகிற இவன்யார்" 38 : 2.

என்றெருரு சப்தம் எழுந்தது. எலிகூவின் வீரஞான உரைகள் ஒடுங்கின. அக்காற்றின் வாயிலாசப் பேசியகர்த்தர் யோபை நோக்கி,

" சர்வவல்லவரோடே வழக்காடி அவருக்குப் புததி படிப்பிக்கிறவன் யார்" 40 : 2.

என்று வினவ யோபு மனங்கசிநது நடுங்கி,

" இதோ நான் நீசன. நான் உமக்கு என்ன மறுஉததிரவு சொல்லுவேன்" 40 : 4.

"தேவரீர் சகலததையுஞ் செயயவல்லவர்" 42 : 2.

" நீா எனக்குச் செவிகொடும். அப்போது நான் பேசுவேன்" 42 : 4.

" இப்பொழுதோ என்கண் உம்மைக் காண்கின்றது " 42 : 5.

" நான என்னை அருவருததுத தூளிலுஞ் சாம்பலிலும் இருநது மனஸ்தாபப்படுகிறேன் " 42 : 6.

எனஅும் இறைவன் இரங்கி யோபுவின் பக்தியின் திடனேயோராது அவரை இழிததுரைத்த எலிபாஸ் முதலியவர் களைக்கடிநது யோபுவுக்கு முன்னிருந்த எல்லாவற்றைப்பார்க்கிலும் இரண்டத்தனையாக அருளினுர். யோபுவின்

துயரம் அவரைவிட்டகன்றது அவர் பற்றிய நெறியும் புத்துயிர்க் கொண்டது. யோபு பெரிய நீதிமான் என உலகம் உணர்ந்தது.

இதுகாறும்நாம்ஆராய்ந்த யோபிவின் சரிதை உண்மையில் பக்திநெறியைப பற்றினோர் இன்பத்திலுந துன்பத்திலும் இறைவனை இகழார் என்றபேருண்மையையே எடுத்தோதுகின்றது. ஆண்டவரேயான உம்முடைய நெறியைப் பற்றி நிற்கின்றேன். மனம் வாககுக் காயத்திலும் யான் தீமையை விழைந்திலேன. நான நீதிமான என றுகூறும உரிமை யோபுவின் பக்தியின் திறனையன்றோ வெள்ளிடைமலையென விளக்குகின்றது. சன்மார்க்கன் எக்காலததிலும் இறைவனால் கைவிடப்படான் என்னும் மெய்ம்மை அங்கைக் கனியென இச் சரிதையினின்றும் போதருகின்றது.

புற வேடத்தை நம் மனம் நாடும் போதும் மதவேற்றுமைகள் நம்மகத்துள் அரும்பும் போதும் சாதிப் பூசல்கள் நமமுள்ளத்திலுதிக்கும் போதும் யோபுவின் சரிதம் நம் அகக்கண்முன் தோன்றி நம்முடைய வாழ்க்கையைப் பண்படுத்துக.

யோபின் சரிதையை ஆராயுங்கள். அவருடைய தாழ்மையின் சிறப்பையும் அன்பின் மாண்பையும் பக்தியின் தூய்மையையும் இறுதியில் அவர் எய்திய பேறறையும உய்த்துணருங்கள்.

யோபெய்திய சாதிமத பேத, இன்ப துன்ப வன்மங்கடநத தூயநிலையாகிய பக்தியோ டியைந்த சமரச சன்மார்க்க ஞான நிலையை நாமும் எய்திட, அன்பு நெறியோஙக, அன்பர் பணி செழிக்க ஆண்டவன் அருள்புரிக.

# பிறர் நம்மைக் கண்டவிதம்

## மார்க்கோபோலோ யாத்திரை

[திரு. சோமசுந்தர தேசிகர்]

IV

இந்தப் பட்டினம் உள்பட இந்தியா முழுமையிலும் தாம்பூலம் [1]என்ற ஓர் இலையை வாயில் அடக்கி வைத்து மென்று, அதனுலுறும நீரை உமிழ்வது வழக்கமாகவிருக்கிறது. பிரபுக்களும் பெரியோரும் இந்த இலையோடு பச்சைக் கர்ப்பூரம் முதலான வாசனைத் திரவியங்களைக் கூட்டி சுண்ணும்புஞ் சேர்த்துப்போடுகின்றனர். இது தேகாரோக்கியமுடைய தென்று கூறுகின்றனர். ஒருவன் பிறனொருவனை அவமானப்படுத்த எண்ணினால் பகைவன் வரும்போது வெற்றிலையையாவது எச்சிலையாவது அவன் முகத்தில் துப்புவான். துப்புண்டவன் ஓடி யரசனுக்கு அறிவிதது இந்த அவமானத்துக்காகச் சண்டைபோட உத்தரவு கேட்பான். உடனே அரசன் கத்தியும் கேடயமும் கொடுக்க, அவைகளைப்பெற்றுஇருவரும் ஒருவர் மடியும்வரை போராடுவர். இந்த வேடிக்கையைப் பார்க்கச் சனங்கள் திரள் திரளாகக் கூடுவார்கள். ஆனால் அவர்கள கத்தியின் முனையைக் கொண்டு சண்டையிடுவது அரசனாற் றடுக்கப்பட் டிருக்கிறது.

### குமரி[1]

குமரி என்பது இந்தியாவைச்சார்ந்த ஒரு நாடு; அந்நாட்டில் துருவமண்ட

[1]தாம்பூல் என்பது பாரசீகச் சொல். வெற்றிலை யென்பது பொருள். இது பொழுது தாம்பூலம் என்பது வெற்றிலை, பாக்கு, சுண்ணம்பு மூன்றுஞ் சேர்ந்ததற்குப் பெயராக வழங்குகிறது.

[1]கொல்லத்தைக் கூறிப் பின்னர் குமரியைக் கூறுவர் போலோ. இங்கு வரிசைத்

லத்தைக் காணலாம். நாங்கள் சாவகத்தை விட்டபின் இதனைப் (துருவமண்டலத்தை) பார்க்கவேயில்லை. இதனைப் பார்ப்பதற்காக முப்பதுகட்டையளவு கடலிற் செல்லவேண்டும்; அப்பொழுது துருவமண்டலம் தண்ணீர் மட்டத்திற்குமேல் ஒருமுழ உயரத்திற் காணப்படும்.

குமரி யொரு காடடர்ந்த நாடு. அங்குப் பலவித விலங்குகள் வாழ்கின்றன; அவற்றுள் வானரங்கள் மக்களைப்போலக் காணப்படும். மந்தி, கரடி, சிங்கம், புலி ஏராளம்.

### கொல்ல நாடு[1]

மாபார் நாட்டைவிட்டு ஐநூறுகட்டை தென்மேற்காகச் சென்றால் கொல்ல நாடு இருக்கின்றது. நாட்டு மக்களெல்லாம் படிம வழிபாட்டுக்காரரே; சில கிறிஸ்தவரும் யூதருமுண்டு. அந்நாட்டினருக்கென ஒரு மொழியும், [2]அவர்களை ஆள ஓரரசனுமுண்டு. அவ்வரசன் ஒருவனுக்குக் கீழ்ப்பட்டவனல்ல.[3]

இங்குச் சப்பங்கி மரம் ஏராளமாகவுண்டு. இதற்குக் கொல்லச் சப்பங்கி யென்று பெயர்; [4]இது மிக நேர்த்தியானது. முதற்றரமான இஞ்சி யுண்டாகிறது.[1] அதனைக் கொல்ல மென்றே வழங்குவர். மிளகுகூட நாடுமுழுவதும ஏராளமாகப் பயிராகின்றது. அது எவ்வாறுண்டாகின்றதெனறு கூறுவேன்! மிளகு தானாக உண்டாகும் காட்டுச் செடியன்று; அது பயிரிட்டு நீர்பாய்ச்ச வேண்டியதொன்று. மே, சூன், சூலை மாதங்களில் மிளகு சேகரிக்கப்படுகின்றது. நல்ல நீலச்சரக்கு மிகுதி: அவர்கள் ஒருவகைச் செடியைச் சேகரித்து [2]வேர்களைக் களைந்து விட்டு ஒருபெரிய பாண்டத்தில் போட்டு ஊற
னர். அவை குழம்பினவுடனே இறுத்து வெய்யிலில் உலரவிட்டு நாலு அவுன்சு வில்லைகளாக நறுக்கி யெடுக்கின்றனர். அந்நாட்டில் வெப்பம் மிகுதியானதால் அதனைப் பொறுப்பது துர்லபம். அங்கு ஓடும் ஆற்றுநீரில ஒரு முட்டையைப் போட்டால் அது சிறிது தூரஞ் செல்வதற்குள் சூரிய வெப்பத்தினால் வெந்துபோம.

மான்ஸி, [3] அரேபியா, லெவாண்டு நாடுகளிலிருந்து வரும் வணிகர் பண்டங்களைக் கொண்டுவந்து கொடுப்பதாலும் கொள்வதாலும் பெருத்த லாபமடைகின்றனர்.

இந்நாட்டில் மற்றை நாட்டிலில்லாத பலவித விலங்குகளிருக்கின்றன. கறுப்பு நிறததையன்றி வேறு நிறமற்ற சிங்கங்களிருக்கின்றன; பலவித நிறக் கிளிகளுண்டு; பனிக்கட்டி போன்று வெண்மையான உடலுஞ் சிவந்த மூக்குமுடைய கிளிகளும், சிவப்பு, நீல நிறமுடையனவும் பார்ப்பதற்கு அழகுடையனவு மிருக்கின்றன; பச்சைக் கிளிகளு முண்டு. சின்னஞ் சிறிய கிளிகள் அழகாக விருக்கின்றன. மயில்கள் நம்நாட்டு மயில்களை விடப் பெரிதானவை. நம நாட்டைப் போலன்றி அங்கு ஆணுக்கும் பெண்ணுக்கும் வேறுபா டுண்டு. இன்னு

கிரமமாக எழுதியிருக்கிறது. இவர் இதனை யொரு நாடாகக் கூறுகின்றனர்.

[1]கொல்ல நாடு சேரநாடாகும்.

[2]மலையாள மொழி. கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டிலேயே மலையாளம் எழுத்து வழக்கில் வந்தது.

[3]சுயேச்சை யுடையவன.

[4]சப்பங்கி இது முள் அடர்நத காட்டு மரம். விறகாக உபயோகப் படுகிறது. இதனிலிருநது ஒருவகைச் சாயம் இறக்குகின்றனர். இரும்புததூளைச் சேர்க்க மங்கிய பழுப்பு நிறமும், படிக்காரததைச் சேர்க்க, சிவப்பு நிறமும் உண்டாகின்றன. இதனை Caesalpinia Sappan என்பர். இது Colowni எனறும் Amery என்றும் Tivi எனறும் மூவகைப்படும். சேரநாட்டினது கோலமணி என்று பேர் பெறும்; அதுவே

[1]இஞ்சியை யுலர்ததிச் சுக்காக ஏற்றுமதி செய்வர்.

[2]இது அவுரிச் செடி.

[3]சீனதேசம்.

மென்ன சொல்லவேண்டும்? அங்கிருப்பவைகளெல்லாம இந்நாட்டிலிருப்பனவற்றினின்றும் வேறு பட்டவையாக விருப்பதோடு நோமையு மழகுமுடையவை. பழங்கள் விலங்குகள், பறவை யெல்லாம் அவ்வாறே; அவையெல்லாம் அதிக வெப்பததா லவ்வாறுகின்றன.

தானியங்களில் நெல்லை யன்றிப் பிறிதொன்றில்லை. சாராயங்கூட அவர்கள் பனை வெல்லததிலிருந்து காய்ச்சுகின்றனர். அது விரைவில் போதையைக கொடுக்கின்றது. மக்களுக்கு வேண்டிய எவ்வகைப் பண்டமும் அந்நாட்டிலுண்டு. விலையும் மிகக்கொஞ்சம். அங்கு சிறந்த சோதிடருமமருத்துவரு மிருக்கின்றனர். மக்களெல்லாம் கருநிற முடையவர். ஆடவர் பெண்டிரென்ற இருபாலாருமஇடையில் ஒரு நேர்மையான ஆடையைத் தவிர வேறொன்றுமின்றி நிர்வாணமாகசசெல்கின்றனர். அவர்களுள் அததை பிள்ளை பெண்களை மணப்பதும், தமையனிறந்தபின்னர் அவன் மனைவியைத் தம்பி மணப்பதும் வழககம். இந்த வழக்கம் இநதியா முழுவது முண்டு. இனி இந்நாட்டைப்பற்றிக் கூறவேண்டிய தொன்றுமில்லை.

## எலி நாடு[1]

குமரியிலிருநது முந்நூறு கட்டையளவிலுள்ளது எலி நாடு. நாட்டினர் விக்கிரஹ ஆராதனைககாரர். அரச அவனும ஒருவருக்

[1]இது ஏழில் மலைநாடென்றிருக்க வேண்டுமெனபர் K. N. சிவராஜ பிள்ளை. மேற்குத் தொடர்ச்சி மலையில காணியம் பாடிக் கணவாய்க்கு வடககிலுள்ளதை ஏழில் மலையென்றும், தெறகிலுள்ளதைப் பொதியில் எனறும் பிரிததிருந்தனரெனறும், முற்காலததில் இதுநன்னனுடைய நாடு எனறும் கூறுவர். தமிழர் வரனமுறை பக்கம் 79. ஏழில் மலை ஏழுமலையாகிப் பின் எழுமலையாய்த திரிநது எலிமலை யாகிவிட்டது. ஐரோப்பியர் ராட் மவுண்டின் (Rat Mountain) என்று கூற, மூஷிகநாடாக மாறிவிட்டது. அரச பரம்பரையும் உண்டாகிவிட்டது.

குக் கீழ்ப்பட்டவனல்லன். அவர்களுக்கென ஒரு விஷேதமான மொழியுண்டு. அவர்களுடைய நடையுடை பாவனைகளைப்பறறியுமநாட்டுப பண்டங்களைப பற்றியும் கூறுவேன்: நம் நாட்டுக்கு அருகாமையில் வருவதால் அவை விநோதமாகவிரா.

இந்நாட்டில் கப்பற் றுறைமுகஙகள் கிடையா. எனினும் ஆழமுள்ள ஆற்று முகங்களும் கழிகளுமுண்டு. மிளகு. சுக்கு, மற்றைய வாசனைப் பண்டஙகள் (சம்பாரப் பொருள்கள்) ஏராளமாக உண்டாகின்றன. அரசன் அதிக திரவியவநதன்; அதிக சேனை இல்லை. ஆயினும் இயற்கையரண் மிகுதியாகையால் அந்நாட்டை யணுகுவது அசாத்தியம்; அதனல் அவன் ஒருவருக்கும அஞ்சுவதில்லை. பிறநாடு செல்லும கப்பல் ஏதாவது அவாகள் நாட்டுக் கழிமுகத்திற் சேருமாகுல் அக்கப்பலைக கொள்ளையடிப்பர். ஏனெனில் பிறநாடு செல்ல வேண்டி வநதது தெய்வாதீன மாகையால் பண்டஙகள் எங்களுக் குரிமையுடையன என்பர். அவர்கள் அவ்வாறு செய்வது பாவச் செய்கையாகக் கருததில்லை. இந்தப் பிழையான எண்ணம் இநதியநாடு முழுவது முண்டு. ஆனல் அத் துறைமுகத்திற்கே வந்த மரக்கலங்களை மரியாதையுட னேற்று கண்ணியமாக நடத்துவர். மான்ஸி முதலானவிடங்களிலிருந்துவரும் மரக்கலங்கள் விரைவாகப்பண்டங்களைப் பறித்துவிட்டு, வேண்டுவனவற்றை ஏறறிக்கொண்டு ஏழெட்டு நாட்களுட் சென்றுவிடும; அதறகுக காரணம துறைமுகங்கள் ஆறறுவாயும் மணல் மேடுமாயு மிருப்பதுதான். மான்ஸியினின்றும் வருமமரககலங்கள் பெரிதான நங்கூரங்கள் வைத்திருப்பதால் மணல் மேடுகட்கு அஞ்சுவதில்லை. அந் நங்கூரங்கள் எந்தக் காற்றிலு மசையாம லிருக்கும்.

இங்கு ஏராளமாகச சிங்கங்களும் காட்டு விலங்குகளு முண்டு; வேட்டையாடக்கூடிய விலங்குகளும் பறவைகளும் மிகுதி.

### ஸிலோன்[1]

அங்கமனின்[2] தீவிலிருந்து ஆயி ரங்கட்டை தென்மேற்கே பயணமானால் ஸிலோன் என்ற தீவை யடையலாம். அது உலகத்திலேயே அதே அள வுள்ள தீவுகளிற் சிறந்த தீவு. கப்ப லோட்டிகளின் குறிப்பிலிருந்து அத் தீவு 3600 மைல் சுற்றளவு இருந்ததா கத் தெரிகிறது. ஆயினும் இதுபொழுது 2400 மைல் சுற்றளவே இருக்கின் றது.[3] வடக்கிலிருந்து காற்று பலமாக அடிப்பதால் அத்தீவின் பெரும்பாகம் கடலில் மூழ்கிவிட்டது அதனால் அத் தீவு முன்னிருந்தபடி யிராமற் சிறிய தாக விருக்கின்றது. மேலும் வடகாற் றடிக்கும் பக்கம் தாழ்வாகவும் சமுத் திர மட்டத்திற்குச் சரியாகவு மிருப்ப தால் கப்பலிலிருந்து பார்க்கும்போது தரை தெரிவதில்லை. அந்தத் தீவைப் பற்றி விவரிப்பேன்:

அந்நாட் டரசனுக்குச் சேந்தமன்[4] என்பது பெயர். அந்நாட்டார் பிறருக் குக் கீழ்ப்பட்டவரல்லர்; படிம வழி பாட்டினர்; அவர்கள் இடையில் அணி யும் ஆடையைத்தவிர வேறுடையின்றி நிர்வாணமாகத் திரிகின்றனர். கோதுமை விளைவதில்லை. அரிசியு மெள்ளும் விளை கின்றன. எள்ளிலிருந்து எண்ணெயெடு க்கின்றனர். அவர்களுக்கு மாமிசம், பால் முதலாயினவே ஆகாரம். மரச்சா றென கள்ளுண்டு. உலகிலுள்ள சப பங்கி மரங்களில் முதற்றரமானவை இங்குண்டு. இனி இவைகளை விட்டு உலகிலேயே உயர்ந்த பொருள்களைப் பற்றிக் கூறுவேன். மாணிக்கங்கள் இங்கே உண்டாகின்றன. இத்தீவை யன்றி வேறிடங்களில் மாணிக்க முண் டாவதில்லை. அங்கு மரகதம், கோமேத கம் வைடூரிய முதலான இரத்தினங் களுமுண்டு. இந்நாட்டரசன உலகிலே யுள்ள மாணிக்கங்களிலெல்லாம் பெரிய மாணிக்கம் ஒன்று வைத்திருக்கின் றான்; அது எவ்வாறிருக்கிறதென்பது பற்றிக் கூறுகிறேன்: அது ஒரு முழ நீளமுள்ளது; முன் கைப் பருமனுள் ளது; பார்வைக்கு மிக்க ஒளியுடை யது[1]; குற்றமற்றது. நெருப்பைப் போல் ஒளியுடையது. அதன் பெறு மானம் மதிக்க முடியாததாகையால் அதன்விலை குறிக்க முடியாது. சீன சக்கரவர்த்தி[2] ஒரு தூதனுப்பி அந்த மாணிக்கத்தைத் தனக்கு விலைக்குக் கொடுக்கும்படியும், அதற்கு மாறாக ஒரு பட்டினத்தின் விலையாவது அவன் விரும்பிய பொருளாவது தருவதாகக் கூறினான். அதற்கு இந்த அரசன் தான் எக்காரணத்தை முன்னிட்டும் அதனை விற்கவியலாதென்றும், அது பூர்வீக சொத்தென்றும் கூறிவிட்டான். சிலோன் ஜனங்கள் வீரர்களல்ல; வலி யற்ற பயங்காளிகள். அவர்கட்கு வீரர் வேண்டியிருக்கும்போது துருக்கசேனை யை யமர்த்துகின்றனர்.

### சாக்கியமுனி புத்தரும்[3] படிம வழிபாடும்

சிலோன் தீவில் ஒருன்னதமான மலையிருக்கிறது; அது செங்குத்தாகச் செல்வது; மிக்கஉயரமுடையது; அங்கு ஒருவரும் செல்ல இயலாது; அதற்

---

[1] இலங்கைத் தீவு.

[2] அந்தமான் தீவு.

[3] இவருடைய அளவெல்லாம் அதிக மாகவே யிருக்கின்றது. ஆயினும் இலங்கைத் தீவி லொருபகுதி நீரில் ஆழ்ந்துவிட்ட தென்ற செய்தியைப் பலருங் கூறுகின்ற னர்.

[4] அப்பொழுது ஆண்டவன் பராக்கிரம பாகு III. இவன் 1267 முதல் 1301 வரை அரசாண்டான. ஜெயந்தன் என்பது பராக் கிரமன் என்பதின் பரியாயமாக விருக்க வேண்டும். இதுவே சேந்தமன் என்று மரு வியது போலும்.

[1] ஓடொரிக் பாதிரியாரும் இதே வித மாகக் கூறுவர்.

[2] கிரேட்கான் (Great Khan) என்று இவரை யாத்திரிகள் வழங்குகின்றனர். சீனு வில் கிலோனி என்று பெயருடைய பெரிய மாணிக்க மொன்றிருப்பதாகச் சரித்திரம் கூறும்.

[3] Sagamoni Borcan என்று எழுதி யுள்ளார். இவ்வாறே இந்திய நாட்டுப் பெயரெல்லாந் திரித்துக் கூறப்படுகின்றன.

காக மலை நடுவில் இரும்புச் சங்கிலிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவைகளி னுதவியாலேயே உச்சிக்கு ஏற வேண்டும்.[1] நமது முதல்பெற்றோரான ஆதமின்கல்லறை இருப்பதாகத் துருக்கர் கூறுகின்றனர். படிம வழிபாட்டினர் சாக்கியமுனி புதரின் கல்லறையிருக்கிறதென்றும், அதற்கு முன்பு விக்கிரகங்கள் கிடையாவென்றுங் கூறுவர். அவரை மக்களுட் பெரியராகவும், உண்மை ஞானியாகவும், அவர்களுடைய கொள்கைப்படி உருவகஞ் செய்யப்பட்டவரில் முதல்வராகவும் கருதுகின்றனர்.

அவர் ஒரு பெரிய திரவிய சம்பன்னரான அரசனது குமாரர். அவ்விளவரசர் பரிசுத்த குணமுடையவராக விருந்தமையால் உலகப் பற்றற்றவராக விருந்ததோடு இராச்சிய பாரமும் வேண்டாமென மறுத்து விட்டார். அரசன் தன் குமாரர் இராச்சிய விஷயங்களிற் றலையிடாமலும் கவலைகொள்ளாமலு மிருப்பதோடு ராஜரீகமும் வேண்டா மென்றது கண்டு மிக்க கவலையடைந்தான். முதலில் மிக்க செல்வமும் அதிகாரமும் தருவதாகக் கூறியும் பின்னர் இராச்சிய பாரத்தையே வகிக்க வேண்டியும், அவர் ஒவ்வாதது கண்டு அரசன் மிகத் துக்கப்பட்டான். பின்னர் தனியாக ஓரரண்மனை கட்டி, அதனில் பல சேடிகளை வைத்து அரசிளங் குமாரரைத் தம் வயப்படுத்தி உலகப் பற்றுடையவராகச் செய்ய ஏற்பாடு செய்தான். அதனிலும் ஒன்றும் பயன்படவில்லை. அவ்வாறிருக்கையில் ஒரு நாள், அவர் சவாரி போகையில் ஓர் இறந்த பிணத்தைக் கண்டார். அதுவரை அவர் இறந்தவர், வயது முதிர்ந்தோர், பிணியுடையோ ரொருவரையுங் கண்டதே யில்லை. அவர் பிணத்தைக் கண்டவுடன் திடுக்கிட்டார். அப்பொழுதுதான் அவர் மக்கள் மரிப்பதுண்டெனக் கண்டார். பின்னர் சிறிது தூரஞ் சென்றவுடன் வயது முதிர்ந்த கிழவனொருவன் நடக்க மாட்டாது தள்ளாடுவதைக் கண்டார். அவனிடஞ் சென்று விசாரிக்கையில் வயது முதிர்ச்சியால் இவ்வாறு துன்புறுவதாகச சொல்லக் கேட்டார். இதனைக் கேட்ட பின்னர் அவருக்குக் கலக்கம் அதிகமாயிறறு. அரண்மனை திரும்பி யோசனையி லாழ்ந்தார். நடுநிசியில் ஒருவருமறியாது அரண்மனையை விட்டு வெளிச் சென்றார். சென்றவர் பிறப்பிறப் பில்லாதவனாகிய கடவுளைக காண முயற்சித்தார். இயேசுநாதரைப் போலப் பரிசுத்த வாழ்வு வாழ்ந்து உயிர் விட்டார். இதனை யரசனுக்கு அறிவித்தபோது அவரைப் போன்று பொன்னாலோருருச் செய்து மக்களை வணங்கும்படி செய்தான். மக்களெல்லோரும் அவரைத் தெய்வமென்று வணங்கினர்; இன்றும் அவ்வாறே கூறுகின்றனர்.

பின்னும் அவர்கள் சாக்கியமுனி எண்பத்து நான்கு தடவை பிறந்திறந்தா ரென்கின்றனர். அவர் மனிதனாக விருந்து இறந்ததும் பசுவாகப் பிறந்தனர்; இறந்து குதிரையாகப் பிறந்தார்; இவ்வாறு எண்பத்து நான்கு பிறவி யெடுததார். முடிவில் தெய்வமானார். அதனால் அவரையொரு பெரிய தெய்வமாகக் கொண்டாடுகின்றனர். இவரது படிமமே முதன் முதலாகச் செய்யப்பட்டதென்றுங் கூறுவர்; இந்த முதற் படிமத்தினின்றும் பல உண்டாயின. இது ஸிலோனில் நடந்தது.

கறுஸதவா காலிஷியாவி லுள்ள ஜேம்ஸ் ஞானியாரைக் காணப்போவது போன்று படிம வழிபாட்டினர் நீண்ட நாட் பிரயாணஞ் செய்து யாத்திரையாக வருகின்றனர். இதுபொழுது கூறிய கதையிலுள்ள அரசன் மகனென்று அவர்கள் கூறுகின்றனர். அங்குள்ள பற்களும், கேசமும் அவருடையனவென்றும், அங்கு காணப்படும் தட்டு அவர் குடித்த தட்டு என்றுங் கூறுகின்றனர். அவர் பெயர் சாக்கியமுனி புத்தர் அல்லது சாக்கியமுனி

[1] இதனைச் சமனொளி மலையென்று கூறுவர்.

ஞானியென்றுங் கூறுகின்றனர். துருக்கர்கள் தமது முதல் பிதாவான ஆதாம் இறந்து அடக்கஞ்செய்த கல்லறை அவ்விட மிருப்பதாகக் கூறுகின்றனர். பற்களும, மயிரும், தட்டும் அவருடையன வென்றுங் கூறுகின்றனர்.

அவை யாருடையன வென்பது கடவுளே அறிவர்; ஆயினும் நமது ஆகமப்படி ஆதாமின் கல்லறை அவ்விடத்தில்லை. அந்தப் பெரிய கான் (சீன சக்கரவர்த்தி) முதற பிதாவின் பற்கள் முதலாயின இங்கிருப்பதை யறிந்து அவற்றைப் பெற்றுவரும்படி ஒரு தூது கி. பி. 1284-ல் அனுப்பினார். தூது கோஷ்டியினர் நாட்டுவழியாகவும் கடல்வழியாகவும் பிரயாணஞ் செய்து இலங்கையை அடைந்து அரசனைக் கண்டனர். அவனது உத்தரவுப்படிப் பற்களும், மயிரும், தட்டும பெற்றுத் திரும்பினர். அவர்கள் இவற்ரேடு வந்ததைக்கேட்ட சீன சக்கரவர்த்தி வெகு ஆடம்பரத்தோடு அவற்றை வரவேற்றனன். அந்தத் தட்டிலே ஒருவருக்கு அன்னமிட்டால் அது ஐந்து பேருக்காகுமென்று சக்கரவர்த்தியே கூறியிருக்கின்ருர். சீனசக்கரவர்த்தி வெகு திரவியஞ் செலவழித்து அவைகளை யடைந்த விதத்தைக் கூறினேன். அவை அவ்வரசன் மகனுடைய அடையாளங்கள்.

### அங்கமனின் தீவு[1]

அங்கமனி னென்பது ஒரு பெருந் தீவு. அந்நாட்டுக்கு அரசனில்லை. மக்கள் படிம வழிபாட்டினர்; அவர்கள் விலங்கினுங் கேடானவர்கள். இந்த அங்கமனின் தீவிலுள்ள மக்களெல்லோரும் முகம், பல், கண்ணில் நாயைப் போன்றவர் என்று நான் உறுதி கூறுவேன். அவர்கள் வேட்டை நாயைப் போன்றவர்கள். அங்கு வாசனைப் பண்டங்கள சிறிதளவுண்டு; ஆயினும் அவர்கள் கொடியவர்கள்; தங்களினத்தாரைக்கொன்றுதின்னுவிடினும் தங்கைக் ககப்பட்ட பிறரைக் கொன்று தின்றுவிடுவர். அவர்கட்கு ஊன், அரிசி, பால், பழவர்க்கங்கள் உணவுப் பொருளாகும்.

### நக்கவரம்

சாவகம், இலாமுரி நாடுகளை விட்டதும் வட புறமாக 150 கட்டை சென்றதும் இரண்டு தீவுகள் காணப்படுகின்றன; அவற்றுள் ஒன்று நக்கவரம். இந்தத் தீவில் உள்ள ஜனங்களுக்கு அரசனில்லை; அவர்கள் விலங்குகளைப் போன்றவர்கள். ஆடவர் பெண்டிர் எல்லோரும் நிர்வாணிகள்; படிம வழிபாட்டினர். அங்கு விலை உயர்நத மரங்களிருக்கின்றன. செஞ்சந்தனம், தென்னை, கிராம்பு, சப்பங்கி போன்ற வாசனைப் பண்டங்களு முண்டு.

[1] அந்தமான் தீவு.

---

# சுந்தர சுலோசனை

[திரு. தி. ர. சாரங்கபாணி, எம். ஏ.]

(தொடர்ச்சி)

## இதழ் 10.

**த**னதில்லம் அணுகுங்கால் ஆங்கு நின்றிருந்த இருவரைக் கண்டதிலிருந்து ஜயகுமாரன் ஆழ்ந்த சிந்தனையுளாழ்ந்தான். தயாநந்தலாலும் போலி வேடம பூண்டு உலகை மயக்கித் திரியும் புறவேடதாரியாகிய சாமியாரும் ஒன்றி, இக்கபட நாடகத்தை ஒருங்கே நடித்துள்ளார்களெனத் தான் எண்ணியது தவறென அவனுக்குப் புலனாயிற்று. சத்தியநாதன் கூறிய அடையாளங்கள் உண்மையா யிருக்குமேல், அவனறைந்த சிறந்த அடையாளங்களையே தான் தயாநந்தலால் என்னும் மார்வாடியின் வதனத்துக் கண்டமையானும், தானாகவூகித்துணர்ந்த பல மெய்ம்மைகளானும் ஜயகுமாரன் தயாநந்தலாலே சச்சிதாநந்த சுவாமிகள்என்பது ஓர்ந்தான். இவ்வுண்மையைக் கண்டறியத் தான் கொண்ட சிரமமெல்லாம் கள்ள வேடம் பூண்ட கள்ளனின் சூழ்ச்சியால் அவலமாய்விடின் என் செய்வதென ஏங்கினான். இனிக்காலதாமதஞ் செய்வது தவறென அவனுக்குத் தோன்றியது. எவ்வகையானும் "மைபொதி விளக்கே யென்ன மனத்தினில கருப்பு வைத்து" த் திரியும் மடாதிபதிகளின் பரம்பரையில்தோன்றியபெரியார்களுள்ஒருவராகச் சிறக்க விளங்கிய ஸ்ரீலஸ்ரீ சச்சிதாநந்த சுவாமிகளின் இன்னுரையை மெய்யெனக்கொண்டு, தெய்வப்பித்துப் பிடர்பிடித்துந்த, இறைவனைக காணுமோர் ஆசையினல் வீண்பழியைத் தாங்கவுந்துணிந்த சண்முகசுந்தரப் பிரபுவையும் குற்றமறியாது கள்ளனெனக் கருதப்பெற்ற மோகனசுந்தரப்பிரபுவையும் அக்கள்ளனின் கரங்களினின்றுமமீட்டு சாரதாவுக்கும், சந்திரசேகரப்பிரபுவுக்கும் முக்கியமாக சுலோசனைக்கும் இன்பம் நல்க எண்ணிய ஜயகுமாரன் மோகனசுநதரமும், சண்முகசுந்தரமும் தயாநந்தலாலாகவும் ஸ்ரீலஸ்ரீ சச்சிதாநந்தசுவாமிகளாகவும் நடித்து உலகை மயக்கிததிரியுஞ் சண்டாளனுகிய புறவேடதாரியி னிடமிருக் கின்றார்கள் என்பதை அவன் ஒருவா றுணர்வானாயினும அவர்களின் இருப்பிடத்தை உணரவியலாது வாடினன். ஏழைமக்கள் பெரிதும் போற்றிநாடும் மடத்திலுள்ள பூஜை அறையின் எதிரிலிருநத ஓர் அறையிலிருந்து யாரோ ஒருவர் மனங்கசிநது பாடினர் என சத்தியநாதன் கூறிய உரைகளை அவன் மறந்தானல்லை எனினும் நேரில் தானகக் கண்டுணரும் வரை எதனையும் மெய்யெனக் கொள்ளும் இயல்பை ஜயகுமாரன் உடையனல்லன். ஆதலான் தானகவே நேரில் சண்முகசுந்தரத்தின்இருப்பிடத்தையும் மோகனசுந்தரத்தின் இருப்பிடத்தையுங் கண்டறிதல் வேண்டுமென தீர்மானித்தான். தன்னுடைய விரோதி இடைவிடாது தன்னைக்கவனித்துவர, எம்முறையில் இதனைக்கண்டறிவதென அவனுக்குத தோன்றவில்லை. மாறுவேடம் பூண்டு செல்வதே தகுந்த வழியென அவனுக்குத் தோன்றியதெனினும், அவர்களுடைய கரத்தில் சிக்கிக்கொண்டால் காரியங் கெட்டுவிடுமென அவன் தயங்கினன். ஆனல் காலதாமதஞ் செய்யின், தன்னுடைய செய்கைகளைக் கவனித்து வரும் சாமியாா அவர்களை ஒளித்துவைத்து விடின் வீண்கஷ்டத்திற்குளளாக வேண்டுமாதலால் காலதாமதஞ் செய்யலாகாது என அவனுக்குத தோன்றியது. சிறிது நேரம ஆழ்ந்த சிந்தனையிலிருநது பின்னர் சத்தியநாதனை விளித்து, "சத்தியநாத! நீ எனக்கு சச்சிதாநந்தசுவாமிகளின் முகத்திடைக் கண்ட அடையாளங்களைப்பற்றிக் கூறியது உனக்கு

நினைவிருக்கிறது அல்லவா ?'' என்று வினவினுன்.

"ஆம் ஐயா"

"இன்று நான் மடத்திற்குச சென்று சில உண்மைகளைக் கண்டறிய எண்ணி யுள்ளேன். இபபொழுதோ மணி பத்தாகிவிட்டது. இங்கிருநது நான் பன்னிரண்டு மணிக்குப் புறப்பட்டுச செல்லத துணிந்துள்ளேன. நீ இங்கு எனக்காகக் காத்துக் கொண்டு இரு. இரண்டு மணிக்குள் சரியாக நான் இங்கு வந்து விடுவேன். நான் ஒருகால் இக்கபட சந்யாசியின கரத்தில சிக்குண்டாலும அது சாதாரண காரியமேயாம். நாம அவனைக் கவனித்துத் திரிவதுபோல் அவனும் நம்மைக கவனித்து வருகினருன். எனவே, இரண்டடிபபதறகுள் யான் வராததவறின், நீயுடனே ஸ்டேஷனுக்குச் சென்று கேசவனை இருபது ஆட்களுடன் மடத்திற்கு வருமாறு கூறி உடனழைததுக் கொண்டு வந்து சேர்த்துப்பின் நடப்பதைக் கவனிததுக் கொள்வோம. நான் கேசவனுக்கு ஒரு கடிதம் வரைந்து மேஜையின் மீது வைத்து விட்டுச செல்கின்றேன்."

"ஐயா! நானும் உம்முடன் வந்தால் நான் கவலையற்றிருப்பேன்."

"சத்தியநாத! நீ இங்கிருந்தால் எனக கொரு ஆபத்துவரினும உடனே கேசவனுடன அங்கு வநது என்னை மீட்க இயலும். நீ என்னுடன் வந்து பயனென்? இருவரும் திருடடுச் சாமியார் கரத்தில் சிக்கி அல்லலுறுதல் வேண்டும்."

"ஐயா! அநத சுவாமிகள் மீது நீர் வீண் சந்தேகங் கொண்டுள்ளீரெனவே யான் எண்ணுகின்றேன்."

"சத்தியநாத! நீ'' உண்மையையுணர்ந் தால்..........

"ஐயா! நீர் கூறுவதிலிருந்து யான றியாச் சில உண்மைகளை நீர் கண்டறிந் துள்ளீர் என்பது விளங்கு கின்றது.

"ஆம். சத்தியநாத! நான் ஊகித்துணர்ந்த உண்மைகளை இப்பொழுது கூற அவகாசம்இல்லை. எனவே, நான்சென்று வருகிறேன். நீ மிகவும் ஜாக்கிரதையாக மணியைக் கவனித்துக் கொண்டிரு."

"ஐயா! அப்பொழுது அந்தச் சாமியார் வேடதாரியென விளங்குகின்றது புற வேடம பூண்டு திருடித் திரியும் அப் பேயனின் கரததில் நீர் சிக்குண்டால உமமை அவன் கொல்லவும தயங்கான்"

"சத்தியநாத! புகழ் என்னும் கனி ஆபத்தென னுமமரததிலன்றோபழுத்து விழுகின்றது? மேலும் நியாய வரம்பு மீளாது நம்மால் இயன்ற தொண்டை இறைவனுடைய தொண்டாகக் கருதி நாம் இவ்வுலகிடை இயற்றலே, நம்முடைய கடனுகும. போலி வேடம்பூண்டு, இறைவனையும இறைவனுக் கிசைநத பக்தர்களையும் வாட்டித திரியும் இப் பேயனைப பிடித்து உண்மையை உலகிற்கு விளக்கி, தகுநத தண்டனையை இவன் அடையுமாறு செய்தலே தமிழகததிறகு, மதததின் மாண்பையுந தூய்மையையும் வேருடன் கெடுக்கததோன்றிய இக்கபட நாடகப் பேயர்களால் இடிப்புண்டு துசசிற்கிடந்து அல்லலுறாஉம் சமயத்திற்கு, நாம் செய்தற்குரிய பெருந் தொண்டாகும். அஃதே இறைவனுடைய அருமபணியுமாகும். அதனல் யான் என்உயிரை இழந்திடினும யான் அதற்காக அச்சமுங் கவலையும் உறுகின்றே னல்லை. ஆனல், தர்மநதலைகாக்கும் என்னும் மெய்யுரையை நான் மறக்கவில்லை. இறைவன்றன் இன்னருள்உடையோன் இத்தகைய போலி வேடதாரிகளின் சதியாலோசனைககுச சிறிதும் அஞ்ச வேண்டுவதிலலை. எனவே சததியநாத! என்பொருட்டு நீ சிறிதுங் கவலையுற வேண்டாம். ஆண்டவனருளால் நான் இறுதியில் வெற்றி பெறுவது திண்ணம."

"ஐயா! உமதிஷ்டம்போல் சென்றுவாருங்கள். நான் கவலையுடன நீர் கட்டளையிட்டதுபோல் செய்வேன். ஆண்டவன் உம்முடைய பக்கத்துணையாய் நிற்க."

உடனே ஜயகுமாரன் கேசவனுக்கு ஒரு கடிதம் வரைந்து மேஜையின்மீது வைத்துவிட்டு தன தறைக்குச் சென்று

சிறிதுநேரம் யோசித்தான். ஒருகால் தான் கபடசந்யாசியின் கரத்தில் சிக்கினால் தான் உயிருடன் இருப்பது அரிதாகும். ஆதலின் தான் அறிந்த உண்மைகள் தன்னுடன் மடியுமாதலான் தானறிந்தவைகளையெல்லாம் ஒருகடிதத்தில் விளக்கமாக எழுதினான். முதன் முதலில் சந்திரசேகரப் பிரபுவின் தொடர்பிலிருந்துகடிதம் எழுதும்வரை தான்கண்டறிந்த துப்புகளையும்அத்துப்புகளின் உதவியான் கண்டறிந்த உண்மைகளையும் விளக்கமாக எழுதிக்குற்றவாளியைவிளக்கித் தனக்குப்பின் கேசவனிடமே, தனக்கு ஓர் இன்னல் நேரிடின், அந்தக்கேசை சந்திரசேகரப்பிரபு அளிக்கவேண்டுமெனவும், குற்றவாளியைக் கண்டுபிடித்து உண்மையில் மேலோதிய கபடசந்யாசியின் சூழ்ச்சியால் வீண்பழிகளைத் தாங்கிவாடும்சண்முகசுந்தரப் பிரபுவையும மோகனசுந்தரப்பிரபுவையும் அவனுடைய கரங்களினின்றுமீட்டு அவர்களைப்பிரிநதுவருந்தும் சாரதாவுக்கும் சுலோசனைககும் இன்பத்தையும் சந்திரசேகரப் பிரபுவின் ஓயாவாட்டத்தையும் விட்டு அவருக்குக் களிப்பையும் அளிக்கத் தான செய்யும் முயற்சியில் தான் உயிர் விடின் கேசவனே அக்கபட சநயாசியைப்பிடித்து தண்டிபபதற் கேற்றவனெனவும் முடிவுகட்டி வரைந்து அக்கடிதத்தை ஓர் உறையிலிட்டுச சந்திரசேகரப் பிரபுவின் விலாசத்தை மேல் வரைந்து "சத்தியநாத! இக்கடிதத்தை நான் வரத் தவறின, நாளைக காலையில் பத்துமணிக்குமேல் நேராக என்னுடைய வண்டியில் சென்று சந்திரசேகரப் பிரபுவின் கரத்திலளித்திடு" எனக் கட்டளையிட்டுத் தன்னுடைய அறைக்குச் சென்றான்.

இறைவன் மாட்டு ஐயகுமாரனுக்கு இளமையிலிருந்து வளர்ந்தோங்கிய பக்தி தான்கொண்ட எண்ணம், நிறைவேறுதற்காக அறையுள் சென்றது; சிறிது நேரம் இறைவனருளை வேண்டுமாறு தூண்டியது. பின்னர் வெடிகுண்டின் வேகத்தைத் தடுத்துத் தன்னுயிரைக் காக்கவல்ல இருப்புச் சங்கிலிகவசமொன்றை உள் அணிந்துமேல் ஓர் எளியவன் போலும் வேடம் பூண்டு இரண்டு சிறு கைத்துப்பாக்கிகளை ஒளித்து வைத்துக் கொண்டு, ஒரு கரிய அஙகியால் தன்னை மூடிக்கொண்டு அறையிலிருநது வெளிய போந்தான். அதே நிமிடம் மணியும் பன்னிரண்டடிததது. அவனுடைய வருகையை எதிர்பார்த்துக கொண்டிருந்த சததியநாதன் ஓடியுஞ்சென்று அவனடியில் விழுநது அவனுடைய கால்களைப் பற்றிககொண்டு, "ஐயா சென்றுவாருங்கள்; இறைவனருளால் நீர்வெற்றி பெறுவது திண்ண"மென மொழிந்தான். அவனுடைய குரலோசை பெரும்மனோவேதனையை விளக்கியது. அவனுடைய கண்களில் நீர்ததும்பிற்று. ஐயகுமாரன் அவனை எழுப்பி அவனுடைய முகத்தை யுற்று நோக்கினான். ஐயகுமாரனுடைய முகததில் புன்னகை தாண்டவ மாடியது. கண்கள் ஒளியுடன் விளங்கின. சத்தியநாதனின் கண்களில் நீரைக் கண்டதும ஐயகுமாரன் அவனைக் கட்டியணைதது "சத்தியநாத! எத்தனையோ கேசுகளில் உயிரை மதியாது கள்ளரைப் பிடிதது வாட்டிய நீயும் பெண்மக்களைப் போலும் கண்ணீர் விடுதல் முறையோ! சததியநாத! கவலையுறுதே. உன்னை யான் என்னுடைய பணியாளனுகப் பெற்றது என்னுடைய பாக்கியமேயாகுமென யான் பன்முறை கூறியுள்ளேன். உன்னை என்னுடைய துப்பறித் தோழனுகப் பெற்றயான் இக்கபட சந்யாசிக்காகச் சிறிது மஞ்சவில்லை. வெற்றியுடன் இன்று திரும்புவேன். நாளை அவனைக் கைதியாக்குவேன். நான் சென்று வருகின்றேன்" நான் கூறியவைகளை மறவாதே. யானெழுதிய இரு கடிதங்களையும இருப்புப் பெட்டியில் முதலில் வைத்துப் பூட்டிவிடு. அக்கடிதமொன்றில் பெருமஇரகசியம் அடங்கியிருக்கிறது. நான்சென்று வருகிறேன்.'

சென்று வாருங்கள் ஐயா!

# ந ம து  சி ந் த னை

[திரு. சி. சதாசிவனார்]

## IX

### மெய்

இறையே உள்பொருள் — சத் — உண்மை.

"ஈறிலாத நல்லீசன் ஒருவனே," இவன், "படைப்போற் படைக்கும் பழையோன். படைத்தவை காப்போற் காக்கும் கடவுள். காப்பவை கரப்போன்" அவனைத் தவிர வேறு ஒரு சக்தி யாண்டும இல்லை.

ஐம்பெரும பூதங்களும், அவற்றின சேர்க்கையால் உருக்கொளும் கல், தாவரம், ஊர்வன, பறப்பன, நீர்வாழ்வன மா, மக்கள், இன்னவும் பிறவும செறிந்த இப்பூதலமும், தண்மதி தபனன் முதலிய கோட்களும, வான்மீன்களும், இவை இடங்கொண்டிருக்கும் பெருவெளியும்* தோற்றற்குக் காரணமாகிய சத்தியே இறைவன். இப்பருமை விகாசத்தினது உடலாக, உயிராக, அறிவாகப் பிறவாக இயங்குவது இவ்வொருசாரமே. இவ்வாதாரசக்தி ஊடே ஓடாத பொருள்கட்கு ஈண்டு இருப்பு இல்லை.

அவனன்றி ஒன்றில்லை. இறை யாண்டும நீக்கமறச் செறிந்த நிறைவு; இங்கு அங்கு என அறுதியிடமுடியாத எங்கும் நிறைந்த பேரொளி;

"இருநிலனாய்த் தீயாகி
நீருமாகி இயமானனாய்
எறியுங் காற்றுமாகி
அருநிலைய திங்களாய்
ஞாயிறாகி ஆகாசமாய்"

இப்பிரபஞ்சமாக விரிந்தும்,

"கல்லாகிக் களராகி"

—ில் பொருள்களாய்த் திண்ணெனக் கிடந்தும்,

"புல்லாகிப் புதலாகிப் பூடுமாகித"

தாவர உலகமாக விளைந்து பரந்தும்,

"மாதா பிதாவாகி மக்களாகி"

மனிதர் கூட்டமாக வளர்நதும்,

"பெண்ணாகிப் பெண்ணுக்
கோர் ஆணுமாகி"

பால் வேற்றுமையிற் றிகழ்நதும்,

"ஊனாய் உயிராய் உணர்வாய்"

மககளுள ஒளிாநதும,

"நெருநலையாய் இன்றாகி நாளையாகி"

முககாலமாக நீண்டும், பின்னுங கட்டுறறமனம் எனனெனன அறியுமோ அவ்வளவு மாகியும் மனஉணர்வைக் கடந்த,

"அப்பாலுக்கு அப்பால்" ஆகியும, இன்னும் "எததனையோ கவடு விட்டு" பபாநது விரவிய பெருமை, அணுவுள் அவனும அவனுள் அணுவும கணுவற நின்ற கலப்பு.

கடவுள், உயிர், அறிவு, அருள் வண்மை இன்ன பிறவற்றோடு கூடிய ஒரு தோன்றும் பொருள அல்ல; உலக அறிவில் மட்டுப்படாத நுண்ணிய தோன்றாப் பொருள்; சிநதிக்கரிய பேரன்பு; நலியா வன்மை; முடியா நன்மை; இன்ன நலன் பலவற்றினீட்டம்; மாற றமனங்கழிந்த நிலையில் மட்டும் உணரக்கூடியகுணசாரம்.

இறைவன் எல்லாம செய்யவல்ல தெய்வம. வரம்புடை மனித மனம நினைக்கவுமரிய அற்புதஙகள் பல அவன் முன் நிகழும். அண்டங்கள் பலவும் சாந்து போல்இளகி அவனது மனப்படி உருப்படும்; விசகின்றி நாறு ஆகும; நரிபரியாகும; துஞ்சியன புததுயிர் பெற்றெழும். இதுசெயலரிது என்பது அவனிடம

அவனது படிவம் முற்றறிவு; முக்காலத்தும் யாண்டும் விரவிய பேறறிவு. அவனியில் பற்பல துறைதொறும் விளக்கம் பெறும் அறிவுகள் இமமுழு

னது சிறுசிறு கூறுகளாகும். தன் ஒருசிறு பாகம் நம ஒவ்வொருவரது இதயத்திலும மறைந்து உறைகின்றது. அமையம் வந்துற்றபோது நம்மகததில் ஒளிரும் இச்சிறு திவலையே நடக்குமல்லா உண்மைகளையும் விளக்கும் பேராசிரியனாகஆகிஅமைந்து நம்மை அறிவு மாகடலிற் செலுத்தி அறிவு மயமாகவும் ஆக்கும். இவ்வாரியிற் குடைந்தாடுங்கால் ஈண்டுச் சம்பவிக்கும் எல்லாவற்றிற்குங் காரணங்களும், நமக்குறும் தீங்கைத் துடைக்கவல்ல விறலும், நடந்தன நடப்பன இவற்றைத் தெளியும் ஆற்றலும் தாமே நம்மகத்தே வந்தெய்தி, நமக்கு ஒரு நவசக்தியை - புத்துயிரை - அளிக்கும்.

அவன் இன்ப வடிவினனும் ஆவன்; இன்புடை ஒருவனல்லன்; இன்பேயாயவன்; எங்கு நிறையுந்தன்மையனாகவே யாண்டும் ஆரமுதப் பெருக்கமாக உறைபவன்; இடையறாத ஆனந்தமாய் என்றும் இயங்குபவன். இது ஈடு எடுப்பு அற்ற இன்பு நமது உணர்வில் உறுத்திய காலை இது எவ்வண்ணமிருக்கும் என்பதைப பெரியார்கள் ஒருவாறு வருணித்துப் போந்தனர். தீஞ்சுவைக் கனிகளது இறுத்த சாற்றில், சருக்கரையுங் கற்கண்டும பொடித்துக் கொட்டி, கலப்படமில்லா நறுங்கோற்றேன் வடித்துக் கொடுத்து, ஆவின் இன்னமுதும் தெங்கின் தீம்பாலும் வேண்டுமட்டும் விட்டு, உயர் வாதாம் இடியுங் கூட்டி, புத்துருக்கு நெய் குறைவறப் பெய்தட்டு, சிறு சூட்டிலிறக்கிச சுவைக்குங்கால் தோன்றும் இன்பததிறகுத் தோறகாது மேலெழும் இறை இன்பு.

அன்பும அவனது உடலம். அன்பே சிவன். ஆண்டவன் உயிர்கள் மாட்டுக் காட்டும் கழிவிரககம் இயற்கை யோடியைந்த செம்மை வாழ்வு நடாத்தி அதனைத் துருவும் செம்மலகட்குச் செவ்விதிற் புலனாகும். மன்பதையில் மனதை உருக்கும் நிகழ்ச்சிகள் பலவும் இவ்வன்பின் மலர்தலாக ஆவதை அவர்கள் உணர்வார்கள். நண்பனது நேயமும, ஆயினது வாஞ்சையும, தம்ப துகளற்ற காதலும், பிறவும் அப்பேரன்பினது சிறுசிறு துளிகளாக அவ்வப் பாத்திரங்களில் குறைந்தும் நிறைந்தும ஒளிர்வன ஆகும்.

அவனியை உற்று நோக்குழி, இறைவன் எங்கும நிறைவாக (Abundance) வதிதலைக் காண்போம். உடல் ஓம்பற்கு இன்றியமையாத காலும் நீரும உண பொருளும பிறவும மகன் உறைவிடம எங்கணும செறிந்திருத்தலை உணர்வோம. உயிர்கட்கு இங்கு என்னென்ன வேண்டுமோ அததனையும ஆண்டவன் எங்கும் பொறிததிருககின்றான என்பதில் அவனது பேரன்பும் தெள்ளிதிற் றெரிக்கும். இந்நிறைவும குறைவுபடா நிறைவு. உயிர்கள் எவ்வளவு காலம் உயிர்ததுக கொண்டிருநதாலும வளி குறைவுபடுமோ? எத்துணை காலம் நீர ருந்திக கொண்டிருநதாலும் அது இல்லாமற் போகுமோ? உண்டிப் பொருள்களும் பிரதி வருடமும் குறைவறப் பெருகிக் கொண்டே போவது கண்கூடு. இறைவன் எங்கும் வளரும் குறைவிலா நிறைவு தெரியின், இவ்வண்டத்தினூடே இலங்கும் ஒழுங்கு நன்கு புலனாகும். "இல்நுழைகதிரின் துன் அணுப்புரைய நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்த" கோளங்கள் பலவும் ஒன்றை ஒன்றுபற்றிச் சுழன்று கொண்டிருக்கின்றன. இவையாவும தத்தமக்குரிய நெறியே சிறிதும் பிறழாது இயங்கி இப்போண்டதனை நிறுவு கின்றன. இவைதம் ஊடேநின்று ஆட்டுவிக்கும் இறையோனது ஆணையினின்று இறையேனும தவறுமாகில், இவை பலவும் ஒன்றோடொன்று மோதி எத்தகைய கலாம விளைக்கும் என்பது சிநதிக்கரியது. இராப்பகல, கார் கோடை இன்ன பிறகால அளவைகள் தத்தமக்குரிய போதில் என்ன ஒழுங்குடன் தோன்றி மறைந்து சுழன்று கொண்டிருக்கின்றன. இவ்வொழுங்கும் இறைவன் பண்பு அல்லது இறைவனே.

அவன் சுகப்பெருவாரி; புன்கண் நீக்கி உடல் நலன் நல்கும் ஒருவன் மட்

டும் அல்லன்; பிணி அணுவும் இல்லாக் கரைகாணா மாபெரும இன்பப் பெருக் கம். உடற் குறைகளையும் உயிர்ககுறை களையும ஒருங்கே துடைககவலல சுடர்க் கொழுந்து.

நீதி, அமைதி, மன்னிப்பு, முருகு, தனக்கென வாழாமை, இன்னும என் னென்ன நல்லியலபுகள் நாம அறி வோமே அத்தனையும ஆண்டவன் இயல் கள் அல்லது அவனே.

"எல்லாம் செயவல்ல தெய்வம எஙகு நிறை தெய்வம் என்னுயிரிற் கலநதெ னக்கே இன்ப நல்குந தெய்வம் நல் லார்க்கு நல்ல தெய்வம நடுவான தெய் வம்"

"காரணமாந் தெய்வம் அருட் பூரண மாந் தெய்வம் செல்லாத நிலைகளெல் லாம் செலலுகின்ற தெய்வம்."

"இருட்பாடு நீக்கி ஒளி ஈந்தருளுந் தெய்வம் எண்ணிய நானெண்ணிய வாறு எனக்கருளுந் தெய்வம்.......... எனையும் சிவமாக்குந் தெய்வம்" எல் லாம் இறையே. இது மெய்.

மெய்யை மொழியாற் பகரவோ, வரி வடிவில் வரையவோ ஒல்லாது. மாற்ற மனங்கழிநத ஒன்றன் பண்புகளைக்கட்டு டையகருவிகளால் எவ்வாற்றால அளக்க இயலும்? கல்போல் திண்மையுற்றிருக் கும் நாம் மனந்தெளிந்து, ஆவிபோல் மென்மை யடைநது பெருகியபோது வெற்றிப்பொதுங்கில் (Vacuum Space) காற்புகுமாறு, இவ்வியல்புகள் தாமே அகத்திற் புகுந்து உறுத்தும் போது தான் இறையை உணரப பெற லாம.

யாண்டும் விரவிய இந்நிறைவின் நாப்பண் நாம் வதிகின்றோம். ஆயினும் நம்மகத்துள் இறை உணர்ச்சி துலக்கம் பெறாமையால், நாம் அதன் தன்மை களை உட்கொண்டு, தோற்றுவித்து, இன்பந் துய்க்க முடியவில்லை. தடத்தே கமலத்தருகில் உறைநது, அதன் தெண் மதுவுண்டு களிக்க அறியாத தவளை கள் உறழ, நாம் நடலை உறுகின்றோம். சுகம், இன்பம் இன்ன இவ்வு வனியிலேயே, இங்கேயே, இப்போதே நமக்கு இருக்கின்றன என்றுநாமஉணர வில்லை. இவைகட்கு மாறாக ஒழுகாது இவைகளுடன இயைந்த வாழ்வு நடாத் தின் - இறைவேறு நாம் வேறு என்ற புன்மை எண்ணம் கொள்ளாது, இறை யும் நாமும் எப்போதும ஒன்றே என உணர்நது ஒன்றுங்கால் - மாசற்று மனம் வெளுத்தபின் - மன தினின்றும் பொய்யாயின (Error Consciousness) போயினபின் - இத்தெய்வ இயலகள் நம்மிடம் விளக்கமுறும்.

இவ்வொன்றற்கு முதறபடி, இறை எங்கும உறைதல பற்றி, அவன் இயல் கள் இஙகு இப்போது இருக்கின்றன என்று ஒபபுக் கொள்வதே யாகும. நமது பழககமான இன்மை எண் ணததை அழித்து, மனதில் யாண்டு முளள இறை இங்கு இப்போது இருக் கின்றது எனநினைப்பதே துன்பவாழ்வி னின்றும் நம்மைத் திருப்பி இன்ப வாழ்வைக் காட்டும் திருபபம் (Turning Point.) கலைகள் இவ்வுண்மையை அறிவு கொளுத்தும். ஊனறி உன்ன உன்ன, இநநூலறிவு இதய உணர்வாக மாறித் திடமளிக்கும. கலையறிவு உள் ளொளியாக - உணர்ச்சியாக - மாறுவது தியானத்தின் வழி நடைபெறும்.

இருமபாய் இருந்திய நிலத்தை, இரும்பினுங் கடிய எஃகுக்கொழுவினால் ஆழ உழுது, நீர்மைச் சேறாக்கி, அதில் வித்திட்டு நாறு செய்குமாறு, எவ்வத் தடநதிரையால் எற்றுண்டு, தன்னயம் பெருகிக் குறுகிக் காழ்பட்ட பாழ்ம னத்தின்வாய், பொறை நீர்பாய்ச்சி, அசைக்கஇயலாத மெய்நதியால் இதை ஆழக்கிளற, எறுமபூரக்கலலுந் தேயும் எனும முதுமொழிக் கிலககாக, அத் திண் மனமுங் கரைந்துருகி நீர்மை பெற்று, ஆவியின் தன்மையுறறு,இறை இயல்கள் படியப் பெற்றுப் பெருகும்.

"தோற்றும் உலகே தேற்றம். அதன் இன்பே உறுபயன்" எனமயங்கும தேற லார்இதயம் முற்றிலுமமாறி, இறையை ஓர்ந்து என்றும்கெடாத இன்பம் அடைதற்கு-சிவகதி பெறுதற்கு-அவன்

இயல்களை இடையறாது மனத்திருத்திச் சிந்தித் திருப்பதே ஒரு சிறந்த நெறி. நம சிந்தனைப்படி நாம் ஆகின்றோம் அல்லவா ?

கன் மனங்கரைவது - சித்தந் தெளிவது-மெய்யெனும் உழுவால் - தியானத்தால். ஆண்டவன் அருட்குணங்களைத் தனிமையில் அமர்ந்து, அமைதி எய்தி உன்ன உன்ன, இக்குணங்களை இதயம் உணர்ந்து தனனியல்களாக ஏற்றுக் கொள்ளும் நாள் கடிதில் வரலாம். மெஞ்ஞான ஒளி அகத்துப் படிப்படிய துன்பம் பரிதிமுற்படு பனி என அருகி அருகி, நமது புறவாழ்வும் தூய்மையாக இனிமையாக மாறும்.

ஈரிரண்டு ஐந்து என ஒருவன் சொலலின் உடனே தடங்காது, தயங்காது "அன்று; நானகு" என்று அறைகூவுவோம். நமது இதயம் இம்மெய்மையை உணர்ந்து விட்டதால் நமக்கு இதில் சிறிதும் ஐயப்பாடு இல்லை. அப்படிச் சொல்லும் போது இரண்டு இரண்டை நாம் ஒன்றும் புதிதாக நான்காக ஆக்குவதில்லை. அது எக்காலும் அப்படியே இருக்கினறது. அவ்வுண்மையை நாம் உணர்ந்து விட்டதால், ஐநது என்று பறையப்பட்ட அல்லது வரையப்பட்ட இடததில் அத்தவறை நான்கு என்று திருத்தி விடுகிறோம. இத்திருத்தமும் மிகஎளிதில் நடைபெறுகின்றது. இதை ஒப்ப, இறை உண்மையை நாம் இதய உணர்வாக அடைந்த அளவு, புறத்தே நிகழும கலக்கத்தைத் துடைத்து, அமைதியை - இன்பை - நிலை நிறுதத வல்லவர் ஆவோம்.

இரண்டும் இரண்டும் ஐந்து எனும் பொய்யனைய பிணி, வறுமை, கொடுமை, கலக்கம், வெகுளி, பொச்சாப்பு, அநியாயம், இன்னவை உணர்ச்சியுடைய ஒரு மெய்ஞானியினது வழியில் வந்தகாலை, அவன் " இல்லை ; உள்ளது ஒன்றே ; அதுவும் சுகம், நிறைவு, இனிமை, அமைதி, சாநதம், நீதி" என்று உணர்ந்து ஓதுவானுக. அவனுக்கும் அவனை அண்டிய பிறர்க்கும் பிணி யாதிய துன்பங்கள் தாமே அழிந்து பட்டு அவைகட்கு எதிரிடையான நன்மைகள் விகசிக்கின்றன. உண்மையினது வலியால், இறை எல்லாம் செய்ய வல்ல தெய்வம் ஆதலால், எங்கு மெய்யொளி காலுகின்றதோ, அங்குத்தானே தனனியல்களுடன் எளிதாக வெளியாகின்றான். உலகததிற் பிணைபட்டுள்ள குறுகிய நோககுடையார்க்கு இன்ன சம்பவங்கள் அற்புதங்களாகத் தோற்றுகின்றன.

கூட்டல் பெருக்கல் வாய்ப்பாடுகளை இளஞ்சிறார்கள் மனப்பாடம் செய்கிறார்கள். இவைகளைத் தலைகீழ் ஒப்புவிப்பதைவிட வேறு ஒன்றும அவர்கட்குத் தெரியாது. இதுபோலவே வெறும் நூலறிவுடையஒருவன் இயல்பும்.அவன் இறைவன் இயலை நூல்களில் அறிந்த வாறு தருக்க நியாயங்களோடு வாதிட்டு நிலைநிறுத்துவான். கணிதங்களில்உள்ள கூட்டல் பெருக்கல் உண்மைகளைக கண்டு சரியான விடை இறுக்க மாட்டாக் கணக்கறிவில்லாச் சிறுவர்களைப் போல, இன்னவனுக்கு, அக ஒளி இன்மையால், யாண்டும் உள்ள இறைவன் புலனுவதில்லை.

உயர் வகுப்புக்களில் மாணுக்கர்கள் கணக்குகள் போட்டுப் போட்டு அவைகளில் உள்ள கூட்டல் பெருககல்களைக் கண்டோ, அல்லது அவைகளை நுழைந்தோ விடைகாணக் கற்றுக் கொள்கின்றார்கள். அதைப்போல அறிஞன் அவனுக்கு வரும் அமையங்களில், நிகழ்ச்சிகளில், உறு உணர்ச்சிகளில் எங்கு உண்மை ஒளிர்கின்றது என்று ஊன்றி உன்னித் துருவிப் பார்த்தல்வேண்டும். உண்மையை இடைவிடாது சிந்திததுக் கொண்டும் இருததல் வேண்டும். நமது இதயம் எங்கும் இறையைக் கண்டு அதை உண்மை என ஏற்றுக் கொள்ளும் காலம்வரை இவ்வுழவைச் செய்திருத்தல் வேண்டும்.

மனதில் எப்போதும் இறை எண்ணம் ஒன்றையே மறவாது உழற்றிக் கொண்டிருந்தாற்ருன், எதிலும் அவனது இயலைக் காணல் கூடும். "நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்

நினையா தொருபோதும் இருந்தறி யேன்'' என்று நாம் திடம் பெறக் கூற வல்ல இடமே மெய்ஞான உணர்ச்சி உதயமாகும் நிலை; இறையை உணர்த் தும் நன்னிலை ; இதயம் உலககட்டி னின்றும் விடுபட்டு உயர்ந்த இலகரு களைப் பற்றும் அருநிலை ; இறை வழி படுநிலை.

கன்மனதை மெய்நூதியால் ஆழ உழுது அதில் சிவப்பைங்கூழ் செயத்து வக்கும் நாள் தொட்டு அப்பயிர் நன்கு வேரோடி, வானளாவி வளர்ந்து, மன தில் வேறு புன் செடிகட்குச் சிறிதும் இடந்தராது பெருகும் காலமட்டும் - ''நெஞ்சம் உமக்கே'' என நாம் தேற்றம அடையும் போது வரை - அப்பயிருக் குத் ''தகவு'' எனும் காப்புக் கோலி நாமும ''செம்மையுள'' நிற்றல் வேண் டும். இவ்விடைக் காலத்தில் நமது மனம், உலக வாசனை முற்றும் அழி யப் பெறாததால், மேலுங் கீழும ஊச லாடித்தத்தளிக்கலாம். இராம இரா வணப் போராட்டமும், பாரத வெஞ்ச மாமும் மனத்திடை நடைபெறலாம். இப்போர்களில் வென்று சிறத்தற்கு இறையருள் துணை நிற்கும். இவ்வ ருள் உதய மாதற்கு நாம் சீரிய குணங்களையும் தெய்வ இயல்பின் வழாது ஆற்றும் கருமங்களையும் கடைப் பிடித்து வாழ்வு நடத்தல வேண்டும். இவ்வுலகத்திலும் நாம் ஒருவனது தயவை எதிர்பார்க்கும் போது, அவன் மனப்படி அவனது போக்கின் படி நாமும் நடநது அவனைச் சந்தோஷப் படுத்துகிறோம் அல்லவா?

நற்குண நற்செய்கைகளே நம்மைக் காக்கும்அரண்கள். தீக்குணம் புன்செய் கை இவற்றை அறவே நீக்கல் வேண் டும்.இவற்றினது நாசமும்தியானத்தின் வழிபெறப்படும். ஒருவனிடம் இகல் உண்டாகின்ற தென்று கூறுவோம். இதுதீது. அதற்கு எதிரிடையான தெய்வ இயல்பு அன்பு. இத்தன்மை யைஅகத்திருத்தித் தியானம்புரிவதால் இவ்வெரி எண்ணம் இரிநது, நமக்கு இன்னாசெய்த அன்னவன் மனமிளகித் தலைதாழ்த்துமாறு பெரிய நன்மை செய்து விடுவதும் சாத்தியமாகலாம். அன்பு எனும் அவிழ்தம் சாலக் கொ டியபகைமையையும் வீழ்த்தும்தெய்விக சக்தி. நமக்குத் தீஙகிழைதத ஒருவ னுக்கு மன்னிப்பளிதது, நன்மை செய்து விடுவது ஒரு சோதனையாகும். அவவிதம் செய்வது நமக்கு இன்பம ளிப்பின் நம்மிடம பகைமையே இல்லை என்றும், நாம் அன்புருவமாக இருக்கி றோம் என்றும் அறிநது கொள்ளலாம்.

இப்படித தீககுணங்கட்கு மாறான நல் லியல்புகளிற் படிந்து படிந்து அவ்வக் குணங்களைப் போக்க வேண்டும். ஆண் டவன் இயல வழி நமது ஒழுக்கம் அமைதல் வேண்டும். நமது நினைவும் செயலும இயற்கையொடு இயைந்தி ருத்தல் வேண்டும். அப்போது தான் தெய்வ இயல்புகள் நம்மிடம தோற்ற வழி உண்டாகும்.

சீரிய குணங்களும் செயல்களுமே நற்சிவப்பயிரைச்சிதையாது அளிக்கும் அரண்கள்.இறைவன் தாட்பாற்சென்னி பொருத்துவான் இத்தனிக்குறுகிய நெடு நெறி மேற்செலும் உயிர்கட்கு ஊக்கமளித்துக் காப்பது நற்சிலம் எனும அரிய தோட்கோப்பே யாதல் பற்றி, ''ஒழுக்கமே விழுப்பந்தரும்'' என்று ஆன்றோர் சுருக்கமாக மொழிப. ''தகவு எனும் வேலியிட்டுச் செம்மை யுள் நிற்பராகில்'' என அடிகளும் உணர்த்தினர்.

இக்குறுகிய வாணாளில், அந்தகன் அருகில் வந்தான் எனமதித்து, இம் மையில நன்மை நல்கி அம்மைக்கணும் பின்றொடரும் ஒழுக்கத்தை நேர்மை யாக்க - அகப்புறத் தூய்மையை வளர் க்க - இன்றே முயலுதல் செய் காரியம். இந்நற் காரியத்திற்கு மிக ஆக்கமளித் தூக்குவது சிந்தனை - தியானம்.

# திருக்கோயில் வழிபாடும் சீர்திருத்தமும்

[பொன்னம்மாள், பி. ஏ., எல். டி.]

V

ஏழாவதாக, ஒவ்வோர் உண்மையை விளகக முன்னோரால் புனைநதுரைக் கப்பட்ட கடடுக கதைகளை ஒவ்வோர் ஊரிலுள்ள கோவிலோடும் சம்பநதப் படுத்தாமல் 'கோயில்' என்ற மாத்திரத் தானே எவ்விடத திருப்போருக்கும, எந்நிலையில் வதிவோருக்கும், எதத கைய அறிவுடையோருககும ஏக நோக கமும், ஏக சிந்தனையும், ஆனநதமும், ஆறுதலும உண்டாமாறு செய்தலும் அத்தியாவசியமே. உதாரணமாக,

| | | |
|---|---|---|
| திருக்கச்சி - விநாயகர் பூசிததவிடம் | என்றும் | |
| திருநாகேஸ்வரம்-ஆதிசேஷன | ,, | ,, |
| திருமறைக்காடு - வேதங்கள் | ,, | ,, |
| திருநாரையூர் - நாரை | ,, | ,, |
| திருஈங்கோய்மலை - ஈ | ,, | ,, |
| திருஎறும்பியூர் - எறும்பு | ,, | ,, |
| திருக்கழுககுனறம் - கழுகு | ,, | ,, |
| திருவானைக்கா - யானை | ,, | ,, |

இவ்வாறு மக்கள், தேவர், நரகர் என்ற உயர்திணையின்பாற் பட்டோ ரேயன்றி அஃறிணைப் பகுதியின்பாற் பட்ட அறிவிலாப் பறவை, விலங்காதி யனவும் பூசித்துப் பேறுபெற்றதாகக் கூறும் தனித்தனி இடங்களும, கோயில் களும் மானிடர் உள்ளத்தில் ஆன்மா, கடவுள், இம்மை, மறுமை, மோட்சம் என்பவற்றைப் பற்றிய பல ஐயத்தினை யெழுப்பி, அலைக்கழிப்பை யுண்டாக குமே தவிர எத்தகைய முததி வழிக் கும், அறிவுக்கும் மானிடரை நடத் துமோ என்பதனை வாசிபபோர் சிநதிப் பாராக.

என்னை? எப்பிறவியினும் அரிய தெனக் கொள்ளப்பட்ட மானிட சென் மம் எடுத்தோன் ஒருவனை 'நீ மரணத் துக்குப் பின் எங்கே போகிறாய்? என வினவிய காலத்தில் அவன் தன் இரு கரங்களையும் விரித்துக்கொண்டு எண் ணாயிரம் பிறவிகளில் எத்தகைய பிறவி யடைவேனோ விண்ணாக கேறுவேனோ அன்றி மீண்டும் மண்ணாககே வரு வேனோ தெரியாதென்கிறான். ஈதென்ன பரிதாபம்! ஈதென்ன அறிவீனம்! கட வுள் சாயலாகச சிருட்டிக்கப்பெற்றுப் பகுததறிவுள்ள மனிதன் தான் போகு மிடத்தையும தனககமையும்நிலையையும் ஓர்ந்தறியும் ஆற்றலும, அறிவுமில்லாத வனும! ஆனால் கேவலம் பகுத்தறிவும், பக்தியின் குணமும் இல்லாதுலாவும ஊரும் பிராணிகள், உயரப் பறக்கும் பட்சிகள் முதலியவற்றின் முடிவை யுணர்ந்து கூறுவனும! இத்தகைய கட் டுக்கதைகள் சாஸ்திர ஆராய்ச்சிக்கோ இயற்கைப் பிரமாணத்திற்கோ, அன்றி அநுபவக் காட்சிக்கோ எவ்வளவேனும் ஒவ்வாதென்க. மனிதன் கீழ்த்தரப் படியில் தோன்றிப் படிப்படியாய் மண் ணாகி, மரமாகி, நீர் வாழ்வன, ஊர்வன, பறப்பனவாகி, மனுவாகித் தேவனாகி றான் என்ற புராதன சாஸ்திரக்காரரின் கூற்று எதத்னையாய் இப்போது மாறு பட்டு, மிகக கீழ்த்தரமான மானிடப் பிறவிக்கும மிக உயர்நத மிருகப் பிற விக்கும் இடையில் ஒருவராலும் கண் டுணரப்படாத ஒரு பெரும் பிளப்புள்ள தெனச் சாஸ்திர நிபுணரிற் பலர் கூறு தல் இக்காலத்தில் எங்கணும் நம் செவி யில் தொனிக்கின்றதன்றோ! இவ்வுண் மைகளெல்லாம்,

" அரிதரிது மானிடராதலரிது "

எனக் கூறி வியநத நம் மூதாதைகளின் சிறப்பினைக் காட்டா நின்கின்றன; அன்றியும் "தேவன் : நமது சாயலாக வும், நமது ரூபத்தின்படியேயும் மனு ஷனை உண்டாக்குவோமாக: "அவர்கள் சமுத்திரத்தின் மச்சங்களையும், ஆகா யத்துப் பறவைகளையும, மிருக ஜீவன் களையும் பூமியனைததையும் பூமியின்

மேல் ஊரும்சகலபிராணிகளையும் ஆளக் கடவர்கள் என்றார்...... அவனைத் தேவ சாயலாகவே சிருஷ்டித்தார்''--ஆதியாகமம் 1: 26,27. என்ற கிறிஸ்தவ சத்திய வேதத்தில் காணப்படும் தேவவசனத்தின் மறுக்கப்படாத உண்மைகளையுமே தெளிவுற வற்புறுத்தி வருகின்றன வென்பதில் ஐயமுளதோ?

அப்படியிருக்க, மகா அரிதான மனிதப் பிறவியின் தோற்றம், வளர்ச்சி, முடிவு முதலியவற்றைப்பற்றித் தெளிவாக அறிவுறுத்தும் அரிய நூல்கள் பலவிருக்கவும், அவற்றை யோராது, மனிதன் தான் செல்லும் வழியையும் இடத்தையும் அறியாதவாறு அஞ்ஞானத்தால் அதை மறைத்து, ஐயம், பயம், அவநம்பிக்கை, தளர்ச்சி, நிர்விசாரம் முதலியவற்றைப் பிறப்பிக்கத்தக்க கட்டுக்கதைகளைப் புனைந்து அறிவுள்ள சிறியோரை அலமரச் செய்யும் அறிவிலாப் பெரியோரை யென் செய்வது! நம் கோயில்களில் பலவற்றைப் பற்றிய கதைகளெல்லாம் ஈசனின் அன்பையும், அவரையடைந்து முத்தி யின்பத்தினை ருசிக்கும் முறைகளையும், ஏதுக்களையும் மிகக் கீழாகத் தாழ்த்தி,உயரியஅறிவினையும், உண்மை வழியினையும் கெடும்படி மறைத்தற்கே ஏதுவாகின்றன. இயற்கை பலவும் கடவுளின் கரத்தின் கிரியையே எனினும் இயற்கைப் பொருட்கள் கடவுளாகா வென்றும், இயற்கைப் பொருள் யாவற்றினும் மானிடன் இறைவனின் திருச் சாயலை அருமையாய்ப் பிரதி பிம்பிக்கிறானென்றும், இவ்வரிய மானிடனைக் கெட்டழியாதவாறு அவனைத் தம்மிடம் சேர்த்து ஒப்புரவாக்கி, முடிவிலா முத்தி யின்பத்தை யளிக்கும் மார்க்கத்தை அவ்விறைவன் மனிதனுக் கறிவுறுத்தி யிருக்கிறார் என்றும், இத்தகைய அரிய காரியத்தில் சிறியோரும் பெரியோரும் ஆடவரும் பெண்டிரும், அறிவுள்ளோரும் அறிவில்லாரும் உணர்ந்து கொள்ளுமாறு அறிவு கொளுத்தும் வழிவகைகளைப் பெரியோரும், குருக்களும், கோயிற்றலைவரும் தேடிக் கையாள வேண்டும். அப்போது 'கோயில் சிறப்புற்றோங்கும். அப்படிச் செய்யத் தவறித் தம்மூடக்கொள் கைகளையும்உண்மையற்றதும், உலகில் எங்கணும் எக்காலமும் நிகழாததுமான புனையுரையால் மானிடரை அறிவு பிறழச் செய்வதிலேயே கருத்தா யிருப்பராயின் அத்தகையோரைப்பார்த்தே கிறிஸ்து "மாயக்காரர், பரிசேயர், வேதபாரகர்''—மத்தேயு 23: 23. என்றும் "ஆட்டுத்தோலை போர்த்துத் திரியும் ஓநாய்களென்றும்—மத்தேயு 7: 15 —" கொசுவை வடிகட்டி ஒட்டகத்தை விழுங்கும்'' மத்தேயு 23: 24 அசத்தியர் என்றும் கூறுகின்றார் எனஅறிக. பகுத்தறிவிலலாதார் பின் பரமனின் உண்மைகளைப் பிறர்க் குணர்த்துமாறு என்ன? அது "குருடனுக்குக் குருடன் வழிகாட்டின துபோலிருக்கும். அப்படியானால் இருவரும் படுகுழியில் விழுவர்'' மத்தேயு 15: 14. என்று கிறிஸ்திறைவன் கூறியதை விளக்குமே.

எட்டாவதாக:—' எம் கனவில் இன்னின்ன கடவுள் தோன்றி, இன்னின்ன விடத்தில் கோயில் நிறுவும்படி கூறினார்' என்றும் பிறவுமான மெய்யில் உரைகளைக் கூறிக்கொண்டு கண்டா கண்ட விடங்களிலெல்லாம் பல கட்டைகளையும், கற்களையும் தேவென நிறுத்தி, முதலில் அதற்கொரு குடிலினைக் கட்டிக் குங்குமம் மஞ்சள் முதலிய குறிகளிட்டு மலர் சாத்தி, மாலை புனைந்து, பின் சிறிது சிறிதாய் இடத்தைப் பெருக்கி, உள்ளூறையும் சடத்தைப் பெருக்கி, அதன் மூலமாய்த் தம் வயிற்றையும் பெருக்கும் தீவினையாளர் நம தேசத்தில பெருகாதிருக்கப் பார்த்துக் கொள்ளலவேண்டும். இத்தகைய பகுத்தறிவும், சீரிய நோக்கமும் மிகக் குறைந்து விளங்குவதினாலேயே தற்கால இளைஞருக்கும், பகுத்தறிவுடைய மக்களுக்கும் கோயிலைப் பற்றியும், கோயில் வழிபாடுகளைப் பற்றியும் எண்ணமற்றுப் போகிறது. கோயிற்றலைவர், பெரியோர் இவரின் அநுமதியின்றி எக் காரணம்பற்றியும் எவராலும் தத்தம்

மனப்போக்கின்படி கோயில் நிறுவவாவது, குறிகளும்பாவைகளும் சமைக்கவாவது இடமும் உரிமையும் அடையாவண்ணம் கண்டிப்பாய்ப் பார்த்துக் கொள்ளல் வேண்டும். அப்போது மூலைகளிலும், முடுக்குகளிலும, சந்துகளிலும், மரப்பொந்துகளிலும் காரணமின்றி மல்கிக் கிடக்கும் அறிவும, ஆற்றலும் ஆருயிர் ஒம்பும திறனுமறற எண்ணிறந்த தெய்வங்களின் தொகை சுருங்கும். அப்போது விண் மண்யாவற்றிற்கும் தலைவனான அனுதி முதற் கடவுளை யறிய நம்மக்கள் ஏவப்படுவர்; அறிவும் பெருகும்; அந்தகாரம் இரிந்தொழியும். ஆன்மாக்கள் சித்திபெற ஏதுவுண்டாகும்.

அவ்வாறே சரஸ்வதி பூசை ஆயுத பூசை முதலிய பலதிறப்பட்ட தேவதைகளின் பூசைகளையும் தததம இல்லங்களில அவரவர் மனம்போனவாறு, மரத்தாலும், இரும்பாலும், லோகங்களாலுமான பற்பல துணைககருவிகளுக்கும், ஆயுதங்களுக்கும், வண்டிக்கும், மாட்டுக்கும், வீட்டுக்கும் மலா சாத்தி, சநதனம் தெளித்து, குங்குமம் இட்டு, குறிகளும் அடையாளங்களும் போட்டுத் தெய்வமெனக் கும்பிட்டு விழாது, விசேஷ தினங்களில் பொதுமன்றத்தில் ஏகோபித்துக் கூட்டி எல்லா நல்லறிவுக்கும், பூரண நல்வரத்திற்கும் காரணமும் இருப்பிடமுமான ஜோதிகளின் பிதாவைத் தோத்தரித்துப் பல வரங்களையும், பலத்தினையும், பேரறிவையும், ஆசீர்வாதத்தையும் பெற எத்தனிப்பது மானிடத் தன்மையாகும்.

ஒன்பதாவதாக:-இல்லின்கண் இருப்போருக்குப் பிணி, நல்குரவு, மூபபு, சாக்காடு, சத்துரு மோசம் ஏற்படுங்கால அறியாமாக்கள் பலதிறப்பட்ட பூசாரிகளின் பொய்க்கூற்றுக்களை நமபி ஐயனர், வீரபத்திரன், பொருதடிமாடன், கருப்பன், இடும்பன், காத்தவராயன், காளி, கங்காளி, மாகாளி, பத்திரகாளி, பிடாரி, காட்டேரி, தூத்தேரி, மாரி, இன்னும் பிறவுமான அனந்தமானபேய் பசாசங்களுக்குக் கள்ளுடன் சாராயங்களைப்படைத்து, கடாசேவல்களை இரணபலிகொடுதது, தோசைகள், வடைகள், பிட்டு, அதிரசஙகள், எள்ளுடன் பயறு, பழஙகள், பச்சரிசி, தேங்காய்களும், எண்ணெயோ, நெய்யோ, பால்களோ, தயிரோ, இன்னும் எத்தனையோ, விதங்கள செய்தும, 'இன்னும் குறைகளுண்டு எட்டிப் போடா' எனத் தள்ளிச் சத்தமிட்டலறும் சத்துருப் பேய்களைக் கும்பிட்டுக், குறையிரநது விண்ணப்பிக்கின்றனர். அந்தோ! வீணிலே பொருளெல்லாம இழநதும் பாடு நீஙகாது பலவாக நின்று தவிக்கும் நம்பாரத மாதா மிகப் பரிவுடன் ஈன்ற பசித்த மக்களா! நும்பசிப்பிணி தீர வழிகாட்டி யுண்பிக்கும பரமகுணத்தோர் உங்களில் இல்லையோ! பாழிலே பொருளெலாம் தோற்று ஏழையாயினீரே! என் செய்வீர்!

"தாகமுள்ளவர்களே! நீங்கள் எல்லாரும் தண்ணீரண்டைக்கு வாருங்கள். பணமில்லாதவர்களே! நீங்கள் வந்து வாங்கிச சாப்பிடுங்கள். நீங்கள் வந்து பணமுமின்றி விலையுமின்றித் திராட்சரசமும பாலும் கொள்ளுங்கள்"—ஏசாயா 55 : 1-2. "உசிதமான கோதுமையினுல் உன்னைப் போஷித்துக் கன்மலையின் தேனினுல் உன்னைத் திருப்தியாக்குவேன்"—சங்கீதம் 81 : 16. "சத்துரு உன்னை நெருககுவ தில்லை; நியாயக்கேட்டின் மகன் உன்னை ஒடுக்குவதில்லை" சங்கீதம் 89 : 22; "அவர் உன்னை வேடனுடைய கண்ணிக்கும் பாழாக்கும் கொள்ளை நோய்க்கும் தப்புவிப்பார்; இரவில் உண்டாகும் பயங்கரத்திற்கும் பகலில் பறக்கும் அம்புக்கும், இருளில் நடமாடும் கொள்ளை நோய்க்கும, மத்தியானததில் பாழாக்கும் சங்காரத்திற்கும் பயபபடா திருப்பாய்.... பொல்லாப்பு உனக்கு நேரிடாது; வாதை உன் கூடாரத்தை அணுகாது; உன் வழிகளில் எல்லாம் உன்னைக் காக்கும் படி தம்முடைய தூதர்களுக்குக் கட்டளையிடுவார்."—சங்கீதம் 91! "நீதியினுல் ஸ்திரப்பட்டிருப்பாய்; கொடுமைக்குத் தூரமாவாய்; பயமில்லாதிருப்பாய்

திலுக்குத் தூரமாவாய்......உனக்கு விரோதமாய் உருவாக்கப்படும் எந்த ஆயுதமும் வாய்க்காதேபோம்'' ஏசாயா 54 : 14-17. என்றித தனையாய்க் கூவி யழைத்துக் கனிந்த அன்புடனும், கணக்கற்ற ஆசீர்வாதங்களுடனும் உன்னைத் தாங்கி ஆதரிக்கக் காத்துக்கொண்டிருக்கும் கர்த்தராகிய தேவனிடத்திற்கு நீ திரும்பினால் நலமல்லவோ! உன்னதமானவரின் மறைவில் வந்தடையாமலும், சர்வ வல்லவரின் நிழலில் வந்து ஒதுங்காமலும் அப்பமில்லாததற்காக உங்கள் பொருளையும், திருப்திசெய்யாததற்காக உங்கள் பிரயாசத்தையும் செலவழிப்பானேன் ?

பத்தாவதாக:--புரோகிதன், தொட்டியன், ஆண்டி, வள்ளுவன், இன்னும் அழுக்குப் படிந்த ஆடையினையும், அருவருக்கத்தக்க துர்நாற்றமுடைய சடத்தினையுமுடையராய், வயிற்றுத் தேவன் பொருட்டு வழிகள்தோறுமிருந்து சாங்கிவிழும் வேடதாரித் தம்பிரான்களுமான கணக்கற்ற பேயர்களை வழுத்தி, குறி கோட்டங்கள் கேட்டு, வாரம் யோகம் முதலியவை தெரிந்து, சாதகம் எழுதி, நாட்கணித்து, தக்க ராசிபலன்களும் பிரித்து, சடங்குகள் விதவிதமாய்ச் செய்து, பல்லி கத்தினும் நெஞ்சிலே அஞ்சி, நிமித்தமும் பொருத்தமுங் கண்டு, இவ்வாறு நெடுகிலும் வீண் சாத்திரங்களைப் பார்த்து, நிலையற்ற வீண் பொய்களை நம்பிப் பாழிலே தம் பொருளெலாம் தோற்று ஏழையாகாவண்ணம் நம் பாரத மக்களைப் பாதுகாத்தல் கடன் என்பதைப் பெரியோர் கருத்தில்வைத்தல் கடன். இவ்வாறு செய்கின்ற காலையிற்றானே சத்தியவந்தனும், சகல கலாவல்லனும், தாசர் நிலையறிந்து தாயகமே புரகைத் தன்னைத் தாழ்த்தி, அன்பரின் பல இன்னல்களையும் அறவே நீக்கி இன்பம அளிக்கச் சித்தங்கொண்டு காத்து நிற்கும் ஈறில்லா நாதனைச் சரணடைந்து அவரது அன்பைச் சோதித்து ருசிக்க அறியாதவர்களையும் தூண்டல் இயலும்.

பதினொன்றாவதாக:— பல விதமாய் நேர்ந்து பிரார்த்தனை செய்து கொண்டு அதன் காரணமாக தோளெல்லாம் தடிக்கக் காவடிகள் சுமந்தும, கடும்பயணங்களை நடந்தும், கயிறுகள் செடில் குத்தியாடிக் கூவிக் கொக்கரித்துத் தீயினிற குதித்தும், கொடிய பந்தங்களால் சுட்டுக்கொண்டு கூத்தாடி, உடலெங்கணும் கீறிக்கொண்டும, மாரடித்துக் கொண்டும், நடைவிளக் கேற்றிக் கொண்டும், தோளின் நடுவினிற் சுட்டு செருப்பினால் அடிக்க இராமா இராமா வெனக் கதறி யலறிக்கொண்டும், அங்கப் பிரதட்சணம் உருண்டும, கோடிக் கணக்கான விரதங்கள் நோன்புகள் பிடித்தும் மெய்ப் பலன் காணாத கோடானுகோடி அறிவிலிகள் அஞ்ஞானம என்னும் சாகரத்தில் அழுந்தி, ஆன்ம மரணமடைந்து மாண்டுபோகிறதை நாம எங்கணும காண்கிறோமே. அன்னோரை திருத்தி, அறிவைப் பெருக்கி, எவ்வினையையும் இருங் கருணையாலே தவிர்க்கும் இறைவனையடைந்து வாழ்ந்து சுகிக்கும் சீரிய மக்களாக்க வேண்டுமென யாரேனும கருதியதுண்டோ ?

அந்தோ! இவ்வகோரக் காட்சிகளைக் காணுந்தோறும் அன்பு மயமான அனாதி சிவத்தின் உண்மையை யார் கேட்பர்? யார் நம்புவர்? யார் ருசிக்க முன் வருவர்? "அன்பே சிவமயம்" என்றும், சைவ சமயமே சீவகாருண்யத்தைக் கொண்டாடுகிற தென்றும், கொலை தவிர்தலைத் தலைக்கொண்டதென்றும் வீணே கழறிக்கொண்டும், பலநூலகளை வரைந்துகொண்டும், மேடைகளில் நின்று உபந்நியாசங்களைச் செய்து கொண்டும், மன்னுயிரை மீட்கத் தன னுயிரை யீந்த மட்டில்லா அன்பின் வல்ல பத்தினிடம் மானிடரைத் திருப்பி உண்பித்து, உய்விக்கச் செய்யுமாறு பலவாறான பாடுகட் குட்படும பக்தரான பல்லோரை 'அவர் இழிகின்றனர்; ஈனரிடமே அவர் செயல் வாய்க்கும், அவர் பயன் நோக்கிப் பணிசெய்பவர்; என்றிவ்வா றெல்லாம்

துத் தூற்றிக்கொண்டும், தங்களை மதாபிமானிகளாகக் காட்டிக் கொண்டு திரியும் கணக்கற்ற போலிகளையும, அவரது கூற்றினையும் நம்புவது எக் காரணம் பற்றி? இக்கொடிய காட்சி களைக் காண்பவரும் கேட்பவரும் அம்மையப்பரின் அன்பினை விளக கும் கட்டுக் கதைகளையும, வரலாறு களையும் கேட்க நேருங்கால் இது முயற கொம்பும குதிரை முட்டையு மாக முடிவுறும் ஏட்டுச் சுரக்காய்களே என்றிகழ்ந்து நகையாட நிர்விசாரிகளா கத திருப்பரோ? இரககம், கருணை, ஜீவ வதையின்மையின் மேன்மை, இறை வன் அன்பு இவற்றினை அநுபவார்தத மாகக்காணமல் அதற்கு, மாறுனகோரக் காட்சியினையும,கொடூரத்தோற்றததினை யுமே காணும் நம் தற்கால இளைஞர் கோயிற் பணியை எள்ளி நகையாடுகி ருரே என வருந்துவதில யாதுபயன்?

அந்தோ! கருணைப் பெருக்கமாகிய கடவுளான தந்தையின் அன்பை இம் மாக்கள்பொருட்படுத்தியவாறென்னே! இப்பூவுலகில் எங்கேனும் தந்தையின் தயையைப் பெற மைந்தர் தலைகீழே நிற்பதும் தடிகளால் தம்மை யடித்துக் கொள்வது முண்டோ? தநதையன்ரு தம் மைநதருக்கான யாவற்றையும் சேர்தது வைப்ப தோடு,அவரைத் தன் னிரு கரஙகளால் தழுவி முததமிட்டு மடிமேல் வைததுக கொஞ்சி உச்சிமோ நது உடலாவி பொருளெலாம் அவ ரின் நலங்கருதித் தியாகஞ் செய்து, அம்மைநதரின பொருட்டு இராப் பகல் ஓய்வின்றி யுழைத்து நெற்றியின் வேர்வை நிலததில் விழப்பாடுபட்டு ஆருயிரையும் அளிக்கிருன். இதை யன்ரு உலகக காட்சியில் காண்கி ரும். இது இவ்வுலகத் தநதை யின அன்பானல், நம் பரம தந்தையின் அன்பு இதனிலும் தாழ்ந்ததோ? "உன் தகப்பனும் தாயும் உன்னைக் கைவிட் டாலும் நான் உன்னைக் கைவிடேன்" என்று தமது சத்தியத்தின் பேரிலும் பரிசுத்தத்தின் பேரிலும் ஆணையிட்டுக் கொடுத்திருக்கும் அருள் நாதரின் அன்பு அனுபவிக்கக் கிட்டாததோ?

---

# இ டி ே ய று

## வித்தல்பாய பட்டேல்

தேசபக்தர் விததல்பாய் பட்டேல் ஜினிவாவில் உயிர் துறநதார என்று கேள்வியுறறு வருந்துகிறோம. வித்தல் பாய் இந்திய சட்டசபையில் பன்னெடு நாள் அங்கம பெற்றிருந்தவர். மாண்டேகு - செம்ஸ்பர்ட் திட்டப்படி அமைநத அச்சட்டசபையில் முதல் முதல் அமர்நத இந்தியத தலைவர் தேச பக்தர் பட்டேல் ஆவா. அவர் தலைவ ராக அமர்நது புரிநத வீரசெயல்கள் இந்தியருள்ளததில புத்தம் புதிதாகப் படிநது கிடக்கின்றன. தேசம் தற்போது உற்றுள்ள நிலையை அறிவால் ஒழுங்கு செய்யவல்ல ஆற்றல் வாய்ந்தவர் அன்பர் வித்தல்பாய் பட்டேல். அத்தகை அறிவு வாய்ந்த பெரியார் இபபொழுது உயிர் துறக்க நேர்நதது தேசத்தின் துரதிஷ்டமே யாகும். எல்லாம் ஆண்டவன செயல். விததல் பாய் பட்டேலின் உயிர் அமைதி பெறுவதாக. சாந்தி ! சாந்தி ! சாந்தி !

## திருக்குறள்

### தண்டபாணி விருத்தியுரை

திருக்குறள் அறத்துப்பால் மூலமும் அதற்குத் தண்டபாணி வரைந்த விருத்தியுரையும் அடங்கிய ஒரு நூல் வரப் பெற்றோம. திருக்குறளுக்குப் பண்டைநாளில பதின்மர் உரை வரைந்தனர். பின்னே வேறு சிலரும அப் பெரு நூலுக்கு உரைகண்டனர். இன்னும் பல உரைகள் வெளிவரின் திருவள்ளுவர் இன்புறுவர். திருவாளர் நாகை - சோ. தண்டபாணிப் பிள்ளை அவர்கள் அறத்துப்பாலுக்கு எழுதிய விருத்தியுரை பல வழியிலும் போற்றற்குரியது. மற்றிருபாலுக்கும் அவர் உரை காண முயன்ற வேளையில், அவர் விண்ணுல கெய்த நேர்ந்தமை தமிழ் நாட்டின் தவக்குறைவே யாகும். பழைய உரையாசிரியர் சிலர், தங் காலத்துக்கேற்ப வெளியிட்ட கருததுக்களைத் தண்டபாணி இக் காலத்துக்கேற்ற முறையில் மாறறஞ் செய்து திருவள்ளுவருக்குச் செவ்விய தமிழ்ப் போர்வை புனைநதிருத்தல் மகிழ்ச்சி யூட்டுகிறது. தண்டபாணியின் பதஉரையும, அகல உரையும் தமிழ் நடைக்கு ஆக்கந தேடுவன என்பதில் சிறிதும் ஐயமில்லை. பொருந்திய முறையில் இலககணக் குறிப்புகள் ஆங்காங்கே பொறிக்கப்பட்டிருக் கின்றன. பதிப்பும கடடடமும் நன் முறையில் அமைந்திருக் கின்றன. செவ்விய முறையில இநநூலை வெளியிடட சைவ சித்தாநத நூறபதிபபுக கழகததார்க்கு நமது நன்றி உரியதாக. விலை : ரூபா 1-12-0 ; விலாசம : சைவ சித்தாந்த நூறபதிப்புக் கழகம், 6, பவளககாரத் தெரு, சென்னை.

## திருப்புகழ்த் திருமுறைத் திரட்டு

அருணகிரிநாதர் அருளிச்செய்த திருமுறைத திரட்டு எனனும் ஒரு நூல் நமது பார்வைககு வநதது. அருணகிரிப் பெருமான அருளிச செய்த திருப்புகழ்களுள் இத திரட்டுக்கண் நானூறு அடங்கி யிருக்கின்றன ; திருவகுப்புகள் பதினெட்டும, கந்தரநதாதி, கநதரலங்காரம, கநதரநுபூதி ஆகிய மூன்றும முற்றும் அடஙகி யிருககின்றன. குறிப்புரை ஆங்காஙகே சுருங்கிய முறையில் வரையப் பட்டிருககிறது. செய்யுள் முதற் குறிபபும அமைநதிருக்கிறது. திரு. க. நமசிவாய முதலியார் வரைந்த முன்னுரை இநநூலை அணிசெய்கிறது. பதிப்பு நனமுறையில் செப்பஞ் செய்யப் பட்டிருததல் கண்டு மகிழ் வெய்துகிறோம். அருணகிரிநாதர் திருவுருவப் படம உள்ளத்தைக் கவர்கிறது. இத் திரட்டைப் பலர்க்கும் பயன்பட வெளியிட்ட காஞ்சி நாகலிங்க முனிவர்க்குத் தமிழுலகம் கடமைப் படுவதாக. விலை ரூபா 2.

டைக்குமிடம்: "காமாட்சி விலாசம், கீழ்ப்பாக்கம, சென்னை.

## சாமி கம்பெனியின் மருந்துகள்

வேலூர் சாமி கமபெனியார் நமக்கு அனுப்பிய அரைக்கீரைத் தைலம், சநதனாதித் தைலம, பன்னீர், சார தாஞ்சனம ஆகிய நான்கையும் நமது நிலையத்துள்ளார் சிலரிடம் ஈநது பயன் படுததிப பார்ககுமாறு சொன்னோம். பன்னீரின் மணமும், தைலங்களின் குணமும் அவர்களை மகிழ்வித்தன. சாரதாஞ்சனம் ரணங்களைப் போககுவ தாகும. இவைகளில் தீமையில்லை என்று சுருங்கச் சொல்லலாம். விலாசம: எம்.பி. சுவாமிஅன்கோ, பஸ்ஸ்டாண்டு, வேலூர், வடார்க்காடு ஜில்லா.

## "நவசக்தி"யின் நிலை

இன்று "நவசக்தி"யின் பதின்மூன் றாம் ஆண்டு முற்றுப் பெறுகிறது. பதின்மூன்றாண்டுகளாக "நவசகதி" நடைபெற்று வநத முறைமையை நேயர் களுக்கு விரித்துக்கூறவேண்டுவதில்லை. "நவசக்தி" பத்து வயதுவரை பிறை என வளர்ந்து வநதாள். "நவசக்தி" யின் பதினொராம் ஆண்டிலும, பன்னி ரண்டாம் ஆண்டிலும் குழப்பம் ஏற் பட்டது. அக்குழப்பம் இன்னும் நீங்க வில்லை என்றே கூறலாம்.

உப்புச் சத்தியாக்கிரகததின் போது "நவசக்தி"க்கு ஈடுகாணம கேட்கப் பட்டதும், அது காரணமாக "நவ சக்தி" ஆறு திங்கள் நிறுத்தப்பட்ட தும், அதனால் நேர்ந்த கஷ்ட நஷ்டங் களை முன்னிட்டுப் பின்னே மூன்று திங்கள் நிறுத்தப்பட்டதும், பின்னர்த் திங்கள் வெளியீடாக மாற்றப்பட்டதும் அன்பர்கட்குத் தெரியும். இப்பொழுது பழையபடி "நவசக்தி"யை வாரப்பதிப் பாக்குமாறு நண்பர் சிலர் முடங் கல் தீட்டியுள்ளார்.

"நவசக்தி"யின் நலன் கருதி உழைத்து வநத தேசபக்தர் பலர் சிறை புக நேர்நத காரணத்தால் அவரவர் தத் தம கடமைகளை நேரிய முறையில் ஆற்ற இயலாமை குறிதது வருநதிக்கொண் டிருக்கிறார். அவர்களில்சிலர் ஏஜண்டாக இருந்தவர். அவரவரிடம் சிக்குண்டு தேங்கிக்கிடக்கும் தொகையில் ஒரு பகுதிவரினும் "நவசக்தி"யைப் பழைய படி வாரபபதிபபாக நடத்தல்கூடும். "நவசக்தி"யின் நலன் கருதிமனமார உழைததுவநத அவ்வன்பர்கள் நிலை செம்மையுறும் வரை அவர்களை நெருக்கி வலியுறுத்த மனம் எழவில்லை. அவர்கள் அனைவரும் சிறந்த தேசபக்தர் என் பதை யான் அறிவேன்.

"நவசக்தி" நின்றிருந்த காலத் தில், பொழுது போக்கின் பொருட்டுப் பெரிய புராணத்துக்கு அரும்பத விசே டக் குறிப்புரை வரையும் முயற்சியில் தலைப்படலானேன். அவ் வுரையோடு கூடிய பெரிய புராணம் மாதச்சஞ்சிகை யாக வெளிவந்துகொண் டிருக்கிறது. பெரிய புராண வேலை இன்னும் இரண் டொரு திங்களில் முற்றுப் பெறும். இவ்வேலை முற்றுப்பெற்றதும் "நவ சக்தியை"ப் பழயபடி நடாத்த முயலு தற்கு வாய்ப்பு ஏற்படலா மென்று கருதுகிறேன். பிற, அடுத்த "நவசக்தி" பாலில் விளக்கப்படும்.

திரு. வி. க.

Registered No. M. 1500.

# நவசக்தி

‘ எவ்வுயிர்க்கும் அன்பாயிரு ’ ‘ என்கடன் பணிசெய்து கிடப்பதே ’

சிலம்பு கச ஸ்ரீமுகஞூ கார்த்திகைமீ பரல் க

## கடல்

[சோதிடப்புலவர் - திரு. குருகுஹதாசப்பிள்ளை அவர்கள்]

(உரிமை ஆக்கியோருடையது)

கொந்தளி கடலே! கொந்தளி கடலே!
[1]பந்த மற்றதாய்ப் பார்ப்போ ரெவரையுஞ்
சிந்தை கலங்கிடச் செய்திடுங் கடலே!
நீனிற மதுவாய் நிறைந்து யாண்டும்
வானிற் றோன்றும் மஞ்சுதை யொப்ப
ஏகமாய்த் தோன்றி யிருள்போல் விளங்கலால்
[2]கூடகமாய் நிற்குக் குவலயத துள்ளோர்
[3]கடுவலென் றதனைக் ‘கடலெ’ன் றனரோ?
படுகுழி யாழப் பகுதி நின்பால்
அடுத்தது பற்றி ‘ஆழி’என் றனரோ?
விரிந்தும் பரந்தும் மெதந்துங் கிடத்தலாற்
‘பரவை’ யென்றுனைப் பகர்ந்தனர் போலும்
பாரிடைப் படிந்தும் பாய்ந்தும் வளைந்தும்
வாருடன் செல்லும் வாரி யனைத்தையுந்
தன்னிடங் கொள்ளுந் தன்மை யதனால்
இந்நிலத் தாருனை எழில்வாய் ‘வாரிதி’
யாமென வழக்கி லறைந்தனர் போலும்
வாமமாம் புனற்கால் வடிந்து மோடியும்
நின்பா லிறுதியாய் நிறைவதை யோர்ந்தே
அன்பால் நின்னை அறைந்தனர் சிந்(து)தென
வளைத்துஞ் சுழித்தும் மண்டல மதனை
அளைத்து நின்றே அணைதல் பற்றி
‘நேமி’ யென்றும் நேர்பட வாங்கே
[4]நாமித மனைய நலதோர் ‘சக்கரம்’
என்றும் பல்லோர் ஏத்துதல் கண்டாய்

குறிப்பு:—[1]பந்தமற்றது - கட்(கரை) டற்றது. [2]கூடகம் - மறைபொருள். [3]கடு
ம் - வி

நின்று புயல்தரு நெடுந்தா ரைதனை
நின்பாற் சொரிய நீயு மதனைத
தன்மாட் டடக்கித தன்னின மாக்கலால்
வையத் தாருனை வாரின மென்றதை
மையது கொண்டு 'வாரண' மென்றே
வகுத்தன ரென்றதும் வழக்கி லொப்பாம்
இன்னவை போன்ற இன்னு மிதரமாந
தென்படு மொழியாற சிறந்து விளங்கித்
தெண்டிரை வீசித் திமிரிடுங கடலே!
ஒண்மை செறிநது ஒலித்திடுங் கடலே!
பேரொலி கிளப்பிப் பெருநதிரை யோடு
காரடுத தன்ன ககன வழியாய்
நிரைநிரை யாக நிமிர்ந்துஞ் சுழன்றும
வருதிறம் நோக்கில் "வன்மையில் என்னை
வெல்லுநர் எவரே வெல்லுநர் எவரே
சொல்லுதி" என்னச் சூசிப் பிப்பதாய்க்
காட்டியே நின்று கழறுத லொப்ப
நீட்டிய கரங்களால் நிமிர்நது நிற்பாய்
உறுமியுங் குருமியும் உருண்டுந் திரண்டும்
எறிதிரை கொண்டே எங்கு முலாவி
விண்மிசை வீசும வெண்டிரட் பரல்கள்
விண்மீ னென்ன விசும்பிடை காட்டுவை
வலைஞர் [1]பஃறியில் வாரிடும் மீன்கள்
மலையதை யொப்ப வானுற விளங்கல்
வெள்ளியங் குன்றென விளக்குவை யோர்பால்
[2]வள்ளிக் கொடிகள் வயமா யதன்மிசை
படிந்து கிடக்கும் பான்மையால் நீயும்
உடைப்புலி யாடையா னும்பர் கோமான்
இடப்பா கமதாய் இலங்கு மெழிற்கணி
அம்மையை யொப்பா யதிரிடுங கடலே!
செம்மையாய் நின்வழித் தேயங்கள் பலவாம்
பண்ட மனைததையும் பாங்கா யீட்டித்
தண்டா வுதவுந் தகையதாங் கலங்கள்[3]
நின்னிடங் கிடந்து நிமிர்ந்து தோன்றல
மன்னிய ஆக்கம் வளர்க்குந் திறமாங்
[4]கடக மாமெனக் காட்டுவை யோர்பால்
கடும்விசை கொண்டு [5]கால்வழி பாயும்
மீனே றுடனே மிளிரும் வனப்புடன்
[6]வானே றதன்பின் வருதிரட் கொண்டல்
சேணிடை நிமிர்ந்துந் திகழுற நின்றும்
[7]தூணெனக் காட்டுந் தூய்மை யதனுல்
[8]செழியனு [9]முதியனுஞ் சேர்ந்துநிற் றல்போல்

**குறிப்பு:**—[1]பஃறி - படகு. [2]வள்ளி - சைவலப் பொதுப்பேர். [3]கலம் - மரக்கலம். [4]கடகம் - யானைக் கூட்டம். [5]கால்வழி - ஆகாய் (காற்று) மார்க்கம். [6]வானேறு - இடி. [7]தூண் - நீண்டு காணப்படுந்தூண் (கம்பம்) பனைமரம்போன்ற தென்க. [8]செழியன் - பாண்டியன். [9]உதியன் - சேரன்.

பழுதிலா வண்ணம் பகர்வை யோர்பால்
[1]மானிறங் கொண்ட வடிவாய்க் காணலால்
[2]வானிற் சிறந்து மண்டல மனைத்தையும்
ஒருங்கே யாண்ட உத்தம னுமெனப்
பெரியோ ரேத்தும புலிக்கொடி வேந்தனும்
[3]வளவ னென்ன வழுத்துவை யோர்பால்
[4]தளவழி நகையார் தடங்கொள் புயத்திற்
தாங்குந் தாமந தண்ணொளி சிறகக
ஓங்கியே காட்டு முறுதிக் கிடனுந்
[5]தாளமுந் [6]துகிருந தாங்கியே நின்று
சுரள மாகத் தருவதும நீயே
தனக்கென வாழாத தன்மையாம் பெற்றியை
[7]முனைவ னுனக்கு [8]மூவா வகையில்
வகுத்தன னென்றே வளமபடக காட்டுவான்
தொகுததே வொலித்துந் தொடர்நதே பிளிறியுங்
களிப்புட னுலாவுங் காரிருட் கடலே!
[9]சளிப்பிலா மனதமொடு [10]சாலவே இன்னும்
மாந்தர் தமக்கு மாண்டகு பொருளை
ஆய்நது கொடுததே அளவிலாய் புகழைப்
போர்த்தியே நின்று புவிதனைப் புரந்து
ஆர்ப்பரித் தெங்கும் அலைஎறி கடலே!
தன்னல வேட்கையைத் தவிர்க்குந் தகையோய்!
நின்றனைத் திறனை நேர்படச் செப்பல்
நின்பாற் காணும் நீர்ததுளி யளவெனக்
கருதியே அதனைக் கழற அஞ்சி
இறுதி யாக ஈண்டுடன் விடுத்தனன்.

குறிப்பு:—[1]மால் நிறம் - மானிறம் - கருநிறம் ; மால் என்று சோழனுக்குமோர் பேருண்டு. [2]வான் - படை. [3]வளவன் - சோழன். [4]தளவழி நகையார் - முல்லையரும்பைப் பழிக்கின்ற பற்களையுடைய பெண்கள். [5]தாளம் - முத்து. [6]துகிர் - பவளம். [7]முனைவன் - முழுமுதற் கடவுள். [8]மூவா - அழிவில்லாத. [9]சளிப்பிலா - சோர்வடையாத. [10]சால - மிகுதி. கடலினின்று மாகாயவழி துள்ளிக் குதிக்கின்ற மீன் கூட்டமும், திரண்டு நீண்ட மேகமும் முறையே பாண்டியனது மீனக்கொடியையும் சேரனது தாராம் பனையையும் குறிப்பாலுணர்த்தலால் பாண்டியன் சேரன் என்றுய தென்க.

# நமது சிந்தனை

[ந. சி. சதாசிவனார்]

## X

### தியானம்

தியானம் என்பது சிந்தனை; சிறப்பாக ஆழ்ந்த சிந்தனை எனக் கூறலாம். நினைப்புகள் பலபலவாயின் அவை ஆழ்மை அடையா. நினைப்பு ஒன்ருவதும் தடிபபதும் அமைதி நிலையில் உறும். அழிந்துபடும் அவனி இன்பிலும், நிலைபெருப்பற்பல உலகப்பொருள் மீதும் மனம் மறுகி மருளாது, வேகங் கெட்டு அடங்கியபோது அமைதிஅமிழ்தம் பிறக்கும். உலகப்பொருள், இன்பு இன்ன பொய், நிலையா எனுங்தேற்றம் பிறநத பின்பே உள்ளம் அவைகளைப் போற்ருது அடஙகல் கூடும். ஆக மனம் உலகத்தின் மேற் செல்லாது அடங்கிய அமைதி நிலையில் சிறப்பாக ஒரு பொருளைக் குறித்து மாத்திரம் எண்ணும் ஆழ்ந்த சிந்தனையே தியானம் என்பது பெறப்படும்.

சிந்தனை உள்ளத்தில் எழுவது. உள்ளம் கற்பலகை; சிந்தனை அதிற் சித்திரிக்கப்பட்ட உரு. அப்பலகையில் வேறு ஒரு படம் அந்தம்பெற அமைக்கவேண்டில், ஏற்கனவே அதிற் பதிந்துள்ள கறைகளை அறவேஅழித்துவிடுகிறோம. அது சுத்தமாக ஆகின்றது. பின் புதிய ஓவியத்தை அதில் வரைகின்றோம். சுத்தமான கற்பலகை போன்றது அமைதி நிலை; பின் அந்நிலையில் சிந்திப்பது தியானம்.

தியானம் நமக்குப் புதிதான ஒன்றன்று. காரணகாரியங்களை முறையுடன் சிந்திக்க அறிந்த ஒவ்வொருவரது மனத்திலும் அதன் இயல்கள் அவரவர் நிலைக்குத் தக்க முதிர்ச்சியுடன் படிந்துள்ளன. மக்கள் எத்தனையோ அரும்பெருங் காரியங்களை ஆற்றுகிறார்கள். அமைதி நிலையின் ஆழ்ந்த சிந்தனையின்றி ஒருவரும் அச்செயல்களை இயற்றி இருத்தல் முடியாது. சிந்தனை இன்றேல் காரியமில்லை; உலகம் இல்லை.

நாம் ஓர் அருங்கனி அருந்த ஆவல் அடைகின்றோம். அவ்வமயம் இறைபொழுது பிற எண்ணஙகள் யாவும் மறைநது அமைதியும், அந்நிலையில் மனதில் மின்னல்போல் கனி எண்ணமும் உதிக்கின்றது. பின் அதைக் குறித்த சிந்தனையும அதன்வழி அதை அடையும் மார்க்கமும் பிறநது, நாம் முடிவில் அதை அயிர்க்கின்றோம்.

மனதில் அமைதியும் சிந்தனையும் எப்போதும் நிகழ்நது கொண்டே இருக்கின்றன. ஆயினும் இவைகளின் கால அளவை நிலைபெறும் நேரம் மிகமிகக் குறுகி இருத்தலால் அநநிலைகளது உண்மையை நாம் ஓரவில்லை. நாம் அறிந்தாலும் அறியாவிட்டாலும், அமைதியும் அதன் பின்வரும் எண்ணமுமே நாம செய்யும் எல்லாக் காரியங்கட்கும் காரணம். நமக்கு வரும் இன்ப துன்பம், அமையம், நிகழ்ச்சி இன்னவை நாம் அமைதியிற் சிந்திக்கும் நினைவுகளால நுண்மையிற் கருவுற்றுப் பின்பே பருமையில் மலர்கின்றன. எண்ணத்தின் முதிர்சசியே மனிதன்.

தியானததின் தன்மையை உணர்நது அமைதியையும் பின் ஒன்றை மட்டுமே நமக்கு வேண்டிய நிலையைப்பற்றி மட்டுமே சிந்திக்கும் தியானப் பழக்கத்தைப் பயின்று விட்டோமாகில், நமது வாணுளைப் பண்செய்த தாகும். நம்மிடம் கட்டுப்படாமல் தானே ஏற்படும் நமது சிறிய சிந்தனையே எல்லாக் காரியங்கட்கும் விதையாகுமானல், நாம் அறிந்து அச்சிந்தனையை அடக்கி ஆழ்மையுடைததாகச்செய்வதால் எத்துணை அரிய செயல்களை ஆற்றி முடிக்கலாம்? நமக்கு வேண்டியனவற்றைத் தோற்றுவித்து நாம் இன்பமடைய ஒரு நவ சக்தி - ஆக்கும் சக்தி (Constructive force) தியானத்தின் வழிப்பிறக்கின்றது.

நீரின் குமிழி உலக இன்பே நமது குறிக்கோளாக மதித்து, சிந்தனைத் திறனுல் சீககிரம் அழிந்துபடும் இவ் வின்பைத் தோற்றுவிக்க முயலல் விழலுக்கிறைத்த நீர்போல் ஆகும். எந்த ஒரு பொருளைப் பெற்றபோது நாம் என்றுங்கெடா இன்பம் பெறுவோமோ, அப்பொருளை அடையும் பொருட்டுத் தியானத்தின் வழி உழைப்பதே சாலச் சிறப்புடைத்து. எக்காமதேனுவை நாம் அண்டியபோது நமக்கு ஈண்டு என்ன வேண்டுமோ அத்தனையும், நமது உயிர் கூர்தற்கு இன்றியமையாத சாதனங்கள் யாவற்றையும் அடைவோமோ அச்சிறநத ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு உழைத்தல் சாலவும் நன்று.

அச்சீரிய பொருள் இறை என்று சொல்ல வேண்டுவதில்லை. இறையுள் நாம் வதிகின்ருேம்; எண்ணுகின்ருேம்; தொழிற் படுகின்ருேம. அவன் நமக்கு இருப்பு, உடல், உணர்வு, அனுபவம் இன்ன நல்கி இருக்கின்ருன். பருக நீரும், உயிர்க்கக் காலும் குறைவற யாண்டும் நிறைத்திருக்கின்ருன். உலகில் உயிர்வாழ இன்னும் வேண்டுவன சோறுங் கூறையுமே. இவைகளும் நம் பொருட்டு இறையுள் இறையினுல் தோற்றுவிக்கப் படுபவையே. இக்குறிகளைமட்டும் விழைந்துவருந்திஉழைதது உயிர் நடாத்துவது அறிவின் பாற்பட்டாது. இவை குறிக்கும் இறையையே தியானத்தின் குறிக்கோளாகக் கோடல் சிறப்பாகும்.

ஆண்டவன் முழு அறிவினன் ஆதலான் ஈண்டு நமக்கு வேண்டுவது என்ன என்பதை அவன் நன்கு உணர்வான். அவனை அடைந்து கேட்டால் நாம் வேண்டுவன யாவும் குறைவறக் கொடுகப் பெறுவோம். சொல்லப்போனுல் கேட்கவும் வேண்டுவதில்லை. அவனை அடைந்ததும் நமது நன்மைக்கு அவசியமான்வை யாவும் தாமே வந்தெய்தும். ஆராயின், நன்மை புதிதாக உண்டாவதில்லை. அவனே நன்மை நிறைவு எல்லாமாக, அவனை உணர்ந்து அடைந்ததும் நாம் இவைகளை அனுபவிக்கலாம்.

'Seek ye first the kingdom of God and every thing shall be added unto you.'

" இம்மை யேதருஞ் சோறும் கூறையும்
...அமமையே சிவலோக மாள்வதற்கு
யாதும் ஐயுற வில்லையே"

" வேண்டத தகக தறிவோய் நீ
வேண்ட முழுதுந் தருவோய் நீ"

" வேண்டுவார் வேண்டுவதே
ஈவான் கண்டாய்"

இன்ன அருள் மொழிகள் ஈண்டு உன்னற் பாலன.

மன்பதையில் நாம அறிநதவற்றுட் சிறந்தவன் மனிதன். அவனிடம் சென்று ஆசிப்பதால் என்ன பயன்? வரம்புடைய அவனுக்கு நலகுநதிறன் உண்டாகில அவன் வழங்கும் நன்மையும் அவனைப்போற் கடிதிற்கெடும் என்பது வெள்ளிடைமலை. என்றுமுள்ள இறையே அழியா நன்மை வழங்கும் திறன் உடையவன். உலகில் உள்ளது இவ்வொருசத்தியே. உலக உணர்ச்சியுடைய நமக்கு நன்மை தரும்படி இச் சத்தியை வேண்டுவதால் - பிரார்த்தித்தலால்(Prayer)மட்டுமே நாம் அழியா நன்மை எய்தலாம். பிரார்த்தனையும் பல் திறத்தன.

நுட்பம் அறியாதோர் " சாமி ஆண்டவனே! எனக்குப் பொன் நல்கு; நன்னிலை வழங்கு" எனக் கண்ணீருகுத்து இரந்திரந்து அழுதல ஒன்று. இக்கடையாவாரது வேண்டுகோளும், அவர்களை உலகினின்றும் இறைபால் திருப்புதல்பற்றி நன்மையே யாகும். இவ்வேண்டு தலினின்றும் " தமக்குப் பொருள் இல்லை, நன்னிலைமை இல்லை" என்று எண்ணும் அவர்களது இன்மை மனப்பாங்கு தெரிக்கின்றதே யன்றி, அதனுல் உடனே ஒரு சிறிதும் நன்மை விளைவதாகத் தோன்ற வில்லை. இத்தகைய பிரார்ததனையினின்றும் இறை ஒருவனே நன்மை தரவல்லவன் என்று

அவர்கள் நம்புகின்றமை போதரும். இந்நம்பிக்கையே அவர்களது வாழ்விலே வந்துற்ற நற்றிருப்பம் (Turning point.)

உயரிய நிலையிலுள்ளவர்கள் இது வேண்டும் அது வேண்டும் என்று இரங்கி இரங்கி ஓலமிடுவது அறிவீனம் என்று உணர்கின்றார்கள். இறைவன் அருளாளன் என்றும் அவன் நமக்கு வேண்டியதெல்லாம் குறைவற நல்குகின்றான் என்றும் அறிகின்றார்கள். நிகழ்வனயாவும் தமது நன்மைக்கே என்று உணர்வதால், அவர்களது துதிகள் யாவும் நன்றியறி வந்தனைகளாக வந்தமைகின்றன. ஆண்டவன் தமக்கு நல்கியுள்ள நன்மைகளை நினைத்து நினைத்து, அவனது அருட்டிறத்தை உன்னி உன்னிக் கரைந்து, தங்களது நன்றியறிதலை இறைவனுக்குஉணர்த்துகின்றார்கள். இன்னவரது தோத்திரபாக்களிற் சிலவற்றை ஆராய்வுழி, அவர்களது மனதில் இன்மை எண்ணங்களே இல்லை என்பதையும், செய்நன்றிமறவா அவர்களது உள்ளம் அழலின் மெழுகெனக் கரைந்துருகி அத்துதிகளினூடே பாய்ந்து ஓடிக்கொண்டிருப்பதையுங் காணலாம்.

அன்னவர் எவ்வத்தடந் திரையால் ஏற்றுண்டு இன்னல் அடையலாம். அக்காலத்தும் ஆண்டவனைக் கைதந்து காக்குமாறு இரங்கிக் கலுழ்தலொழிதது, அவர்கள் ஆண்டவன் அவ்வமையத்து எவ்வுதவி தரக்கூடுமோ அதைத்தானே அளிக்கின்றான் எனவும், அவ்விடரும் தமது முன்னேற்றத்திற்கு அவசியமாய் இருத்தல் வேண்டுமென்றும் உணர்ந்து, வந்ததுன்பத்தைப் பொருட் படுத்தாது, எல்லாம் அவன் அருள் என்று அவனை வழுத்திக்கொண்டு அன்பால இளகிய தமது உள்ளம் கலங்காது ஒழுகா நிற்பர்.

"மாயவற் கோர் பரமாய மூர்த்தி யவனு
நமக்கோர் சரணே"

என்றும்,

"தனனையடைநதார் வினைதீர்ப்ப தன்றோ
தலையாயவர் தங்கடனுவது தான"

என்றும்,

"கெடிலப் புனலுமுடையார்
ஒருவர் தமர் நாம்
அஞ்சுவதி யாதொன்று மில்லை
அஞ்ச வருவது மில்லை"

என்றும்,

"நீ மறநதாய் எனினும்
அகில மெலாமளித்திடும் நின்னருள்
மறவா தென்றே இன்னுமிகக்
களித்து இங்கே இருக்கின்றேன்"

என்றும், மலையேபெயர்நதுவரினும் சிறிதும்சலியா நெஞ்சில மகிழ்வுடன் அவர்கள் கொண்ட நோககமும் மிகக் கடிதில் பரிசில் அளிக்கப்படுகின்றது. உற்ற தீங்கும் பெரிய ஒரு நன்மை பிறப்பதற்குக் காரணமாகவும் முன்னோடியாகவும் அமைவதை அனுபவத்தில் அவர்கள் சீக்கிரம உணர்கின்றார்கள். இவர்களது வழிபாடு இத்திறம்.

தெய்வ வழிபாடுகள் யாவற்றிலும் தலையாயது தியானம். ஆண்டவனது அரும் அருட் குணங்களை இடையறாது உள்குவதால் நாமும் அவனைப்போல் சீரிய பண்புகள் வாய்க்கப் பெறுகின்றோம்.

"By meditating quietly upon God we become changed, for the effect of meditation is to change us unto the likeness upon which we meditate. (*The Shrine of Love by H. T. Hamblin.*)

இன்னும உயரிய நிலையிலுள்ளவர்கள் இவ்வுலககட்டினின்றும் விடுபட்டு மேற்பரநது இறைவனை உணர்கின்றார்கள். தெய்வ வழிபாட்டின் முதிர்ச்சியாகிய சமாதிநிலையினது (Contemplation) உணர்ச்சிகளை, மாறற மனங் கழிநத நிலையின் அனுபவங்களை மொழி வடிவிற் பகரல் ஒண்ணாது. இதை இப்போது நினைப்பதாற் காரியம் சிறிதும் இல்லை. இந்நிலையைக் கூட்டுவிக்கும் தியானமே நமது சிந்தனை.

இவ்வுலக அறிவுடன் நாம்செய்யும் தெய்வ வழிபாட்டிற் சிறந்தது தியானம். உன்னுங்கால் தியானமே எல்லாவிதமான தெய்வ வழிபாட்டின் ஊடே ஓடும் முக்கியமான சாரம என்பது விளங்கும். தெய்வ வழிபாட்டால் மட்டுமே மனிதன் சிறப்படையக்கூடும். சாதாரணமாக, சிவபூசை நித்திய கருமங்கள் இயற்றுதல், இறையுறையில் புகுந்து அபிடேக அருச்சனைகள் செய்வித்துப் பிரசாதம் பெறறுக் கொள்ளுதல், நோன்புகள் நோற்றல் இன்னவும் பிறவுமே தெய்வ வழிபாடு என்பது மக்களது பொதுவான - தவறான-எண்ணம். இவைகளது ஆழ்ந்த உட்கருத்தையறியாது மக்கள் பெரும்பாலும் ஒழுகுகின்றபடியால், அவர்கள் "புறஞ்சுவர் கோலம்" செய்பவர் ஆகின்றனர். நடவடிக்கையில் மிகக்கொடிய காரியங்களைப் புரிந்துவிட்டு, அதறகுப் பரிகாரமாக இவைகளைச் செய்துவிட்டால் தாம் செய்த குற்றங்கள் நீங்கிவிடும் என்று எண்ணும் மாந்தர் எண்ணிலர். இது உலக்கையை விழுங்கிச் சுக்கு வெள்ளம் அருந்துவ தொககும். இக்கட்டுகள் யாவும எக்காரணம் பற்றி ஏற்படுத்தப் பட்டுள்ளன வென்று மனிதன் சிந்திப்பதில்லை. இவையாவுமே கீழ் நிலையில் உள்ள மக்கட்குத் தெய்வம ஒன்று இருக்கின்றது என்று அறிவு கொளுதற்காக ஆதல் வேண்டும். இந்நினைவு பின் வேரூன்றி, மனிதனுள் ஆழ்ந்த இறை சிநதனையைக் கிளப்பலாம். அவனை அடைதலால் வரும் சொலற்கரிய பெரும் நன்மைகளைப் பற்றியும், அவனை அடையும் துறைகளைப் பற்றியும், உண்மையான வழிபாடு என்ன என்பதைப் பற்றியும் பின் அறிநது கொள்வதற்குரிய சிந்தனை முளைத்து வளுக்க இஃது ஒருவிதை ஆகும். அவ் விதசிந்தனை சிறக்கப் பெற்ற மகன் பின் கோயில் முதலியவற்றிற் போய்ப் புறவழிபாடு ஆற்ற வேண்டுவதில்லை என்றும், அகவழிபாடே சாலச்சிறப் புடைத் தென்றும், ஒருவனும் இவ்வக வழிபாடின்றி இறையை உணரல் முடியாதென்றும் அறிநது கொள்வான், புண்ணியநதிகள், கோயில்கள், அவைகளிற் குழுமியுள்ள உருவங்கள் ஆதியன மனிதனுக்கு இவவுணர்ச்சியை அளியாமற் போகுமாகில் இவைகளால் ஆயபயன் என்? சாதாரணமாக "நாம் அறிவு கூரியோம்; நூற்களின் அகன்கரை கண்டோம்" எனத் தம் பெருமைப் பறைசாற்றும் பலர் கூட கோயிலுக்குப் போவது, தரிசனம் செய்வது இவைகளை வெறும் காலப் போக்குக்காகக் கொண்டிருக்கின்றார்கள் என்று கூறக்காரணம் இல்லாமல்இல்லை. அக்காலங்களிலும் அவர்களது மனதில் இறை எண்ணம் சிறிதும் தவழாது, புன்மை எண்ணங்களே சிறந்திருக்கின்றன என்பதை எத்தனையோ தடவை நாம் அனுபவத்திற் கண்டிருக்கின்றோம். தீப ஆராதனை ஆகும் போது அவர்கள், தமக்குத்தாம் அத்தரிசனம் உரித்து என்று எண்ணி, மறைத்துக் கொண்டு நிற்பவர்களை "விலகு விலகு" என்று தங்களது கோபக்கனலைக்கொட்டிக் கூக்குரல் எழுப்புவதையும் நாம் பன்முறை கண்டிருக்கின்றோம். அத்தரிசனமே கிடைததற்கரிய பொன்னுலகளிக்கும் தரிசனவேதி என்று அவர்கள் அறியாமையினுற் கொண்ட எண்ணம் வியக்கத் தகுந்தது. மற்றுஞ் சிலர் ஆன்மார்த்த பூசைகள் செய்யுங் காலத்திற்கூட யாரையாவது திட்டிக் கொண்டும், அல்லது அங்குள்ளோருடன் உரையாடிக் கொண்டும், இடையிடை பிதற்றும் மந்திரங்களைக் கோபக் குருதியில் நனைத்து நனைத்து அள்ளி வீசித தங்களது தெய்வ வழிபாட்டை முடித்து விட்டதாக மதிக்கின்றனர். இவர்கள் தாம் இயற்றுவன என்ன என்றும், அவற்றை எதற்காகச் செய்கின்றோம் என்றும் உணர்ந்தவர் ஆகார். இவர்களது அறியாமையே, பலர், கோயில், அதில் நடைபெறும் வழிபாடு இன்னபிறவற்றைத் தூஷிக்கக் காரணமாகவும் ஆகின்றது.

"வேதம் ஓதில்என் வேள்விகள் செய்கில்  
நீதி நூல்பல நித்தல் பயிற்றில்என் [என்  
ஓதியங்கம் ஓாறும் உணரில் என்  
ஈசனை உள்குவார்க் கன்றி இல்லையே."

"நன்று நோக்கில் என் பட்டினியாகில்என
குன்றமேறி இருந்தவம் செய்யில்என்
சென்று நீரிற் குளித்துத் திரியில்என்
என்றும் ஈசன் என்பார்க்கன்றி யில்லையே"

இக்காரியங்களைச் செய்யும் போது மனம் சுத்தமாய் இறை எண்ணங் கொண்டு இருக்க வேண்டுமே யொழிய, வெறும்புறக் கோலங்களோடு நின்று விடுதலாற்பயனில்லை. இப்புறக் கோலங்கள் வழிபாடாகா.

"கையுறை கொண்டு கோவில் புகும் போது நினது சோதரன் ஒருவன் இழைத்த இன்னா நின்மனதில் நிற்கு மாகில், கொண்டு வந்தவைகளை மேடைக் கணித்தே வைத்து விட்டு, திரும்பி வழியே ஏகுக. அச்சோதரனுடன் சமாதானமாகிய பின்னர் திரும்பி நினது காணிக்கையைச் செலுத்துக." என்ற ஏசுநாதரது கூற்று, நாம அப்புற வழிபாட்டைச் செய்யும்போது நமது மனநிலை எப்படி இருத்தல் வேண்டு மென்று உணர்த்து கின்றது.

மெய்த் தெய்வ வழிபாடு; இறைவழி படுதல்; அவன் எவ்வழி இயங்குகின்றானோ அவ்வழி நாமும் இயங்கல்; இயற்கைச் சட்டங்களது போக்கின்படி நாமும் நடத்தல். எல்லாவித இயற்கைச் சட்டங்களையும் நன்றாகச் சிந்தித்துப் பார்க்கும்போது, அன்பு எனுமதெய்வ இயல்பின் விரிவாகக் காணலாம். நாம் எண்ணும் ஒவ்வொரு நினைப்பும், இயற்றும ஒவ்வொரு காரியமும், அன்புஎனும் வாய்க்கால் வழிப்பாய்ந்து கொண்டிருத்தல் வேண்டும். அவ்வழி நாம் ஒழுகும் போது தனக்கென வாழாமை, பயன் கருதாப்பணி, மன்னிப்பு, ஒப்புரவு, ஒற்றுமை இன்னபிற நல்லியல்கள் நம்மிடம் படியும். அன்பே இறை. ஆகவே, அதைக் கடைப்பிடித்து வாழ்தலே மெய்யான தெய்வ வழிபாடாகும்.

அமைதி நிலையிற் கூடும் தியானத்தில் நாம் அருட் கடவுளது நல்லியல்களைச் சிந்திக்கச் சிந்திக்க அவ்வியல்புகள் நமக்கு விளங்கிக் கொண்டே போகும். நமது எண்ணமே நாம் ஆதலால், நாம் அருளுருவம் அடையும் நாளும் அணித்தே வரலாம். நம்முடைய எண்ணமும் செயலும் அன்பு தலைக் கொண்டு வந்தபோது நாம் இறைவழி பட்டவர் ஆவோம்.

இறைவன் "ஒருவனாகி நின்றான் இவ்வுலகெலாம். இருவராகி நின்றார்கட் கறிகிலான்" ; இப்பிரபஞ்சம் முழுவதும் அவனுடைய பரிணமம். நாம் வேறு இறைவேறு என்று வேற்றுமை உணர்ச்சி உள்ளவர்கட்கு அவன் அகப்படான். அவன் மாற்ற மனங்கழிந்த இடத்திற் பிறங்கும் நுண்பொருளாகையால், அவனை அந்நிலையினின்றே உணர வேண்டும். புறக்கோலங்கள் மட்டும் மிகப்பூண்டு, மனதைமறித்து மடக்காது மேன்மேலும ஓடிக்கொண்டிருக்க விட்டுப் பருநிலையில் இயற்றும் கோயிலேகல், புண்ணிய நீராடல், யாத்திரை போகல் இவைகளாற் பயன் என்ன ? மன ஓட்டம் உள்ளபோது - "நான்" என்ற ஓர் எண்ணம நிற்கும் போது- இறைவேறு நாம் வேறு என்று மாறுபட்டு எண்ணுகின்றோமாக. இந்நிலையில் இறை ஒளியை நாம் உணரோம். "நான்" எனும் நினைவு "எல்லாம் அவனே" என்ற எண்ணத்திற் கரைந்து மறைந்து, மோனநிலை (Silence) கூடிய போது தான் அவவொளி - அன்பின் மாட்சி - நம்மீது படரல் ஆகும். இவ்வித நிலை தியானத்தின் வழிதான் கைவரல் கூடும. பற்பல எண்ணங்களை எண்ணும் மனம் ஒன்றை மட்டும சிறப்பாக எண்ணப் பழகுவதும், பின் அவ்வொரு நினைப்பும் அறுந் தொழிந்து மோனநிலை கூடி இறையுடன் ஒன்றுவதும் தியானத்தின் வழியே நடைபெறும்.

தியானம் அமைதி நிலையின் ஆழ்ந்த சிந்தனை என்றும், அது, நாம் அறியாது செய்யும் எக்காரியங்கட்கும் காரணமாக நமது மனதில் எப்போதும் நிகழ்ந்து கொண்டிருக்கும் ஒன்று என்றும், அதை உணர்ந்து கைவரச் செய்த காலை அதனின்றும் அரும் பெருங்காரியங்களையும் எளிதில் இயற்றற்குரிய ஒரு நவசக்தி பிறக்கின்றதென்றும், அழி

யும் உலக இன்பைத் தியானப் பொருளாகக் கொண்டு அதைத் தோற்றுவிக்க உழைப்பது வீணுதலால், என்றும நிலைபெறும் இன்பம் பயக்கும்-வேண்டுவன முற்றும் நல்கும் - அன்புத தெய்வத்தையே தியானத்தின் குறிக்கோளாகக் கொள்வது சிறப்பென்றும், இன்பவாழ்விற்கும உயிர் கூர்தற்கும் ஆக்கமளிக்கும் உண்மையான தெய்வ வழிபாடு-இயற்கையுடன் இறையுடன் ஒன்றல் - தியானத்தின் வழிப்பெறப்படும் என்றும் நாம் நன்கு உணரல்வேண்டும.

இபபயிற்சியைச் செயப் புகுங்கால் இருக்கவேண்டிய நமது உடல் நிலை அதற்குரிய காலம் இடம், இருப்பு மனநிலை இன்ன பிறவற்றை இனித் தெளிதல் கடனும்.

# த யா ன ந் தா

[திரு. கி. சுப்ரமண்யனுர்]

(பேரறிஞர் வாசுவானி அவர்கள் நிகழ்த்திய பேருரையின் தமிழாக்கம்)

பல்லாண்டுகளுக்கு முன்னர் இநதியாவில் தீர்க்கதரிசி ஒருவர் தோன்றினர். அவர், அன்பே பூத்து, அறிவேகாய்த்து, அருளே கனிந்த அருங்கலை விநோதர்; ஆண்டு பலவாக வனத்திலுறைந்து, வற்கலைபூண்டு, மனத்தையடக்கிக் கடுந்தவம் புரிநத உத்தமர். மாநிலத்துறையும் மன்பதையினர் அறியாமையாகிய இருளிடைக் கிடந்து உழல்வதைக் கண்ணுற்ற அப்பெரியார் பல இடங்களுக்குச் சென்று மக்கள் யாவரும் இன்புற்று வாழத் தம்மாலியன்ற தொண்டாற்ற விழைநதார். ஒரு நாள் அவர் அண்மையிலுள்ள ஓா அணிநகர்சென்று ஆண்டுக்குழுமியுள்ள மக்கள் முன்னர்த் தமது கருததுக்களைக் கூறி விளக்கியபோது அவர் குறித்த மணிவாசகம் :—" நின் அகக்கதவினைத் திறந்திடுக " என்பதாம். அவ்வாறு குறிக்கக்காரணம் என்னையோவெனின், தற்காலக் கல்வி பிழைப்பட்ட நெறியில் இயங்குவ தாகலின் என்க. தற்போது மக்கள் பயிலுங் கல்வி மனேவுணர்ச்சியைத் தூண்டி இருதயத்தில் அறிவுச் சுடரொளிரத் துணைபுரியாது. அகத் தூய்மை பெற்றுலல்லது அறிவுச்சுடர் ஒருவர்க்கு உண்மையில் நலந்தராது.

யான் இதுகாலை கூறிவரும் பெரியாரின் —மகரிஷியாம்தயானந்தரின்—உயரிய உள்ளததில் சதா ஆன்ம ஜோதி இரண்டறக் கலந்து ஒளிரா நின்றது. தயானநதர் ஆங்கில மொழியில் ஒரு வார்த்தையேனும் அறியார். எனினும் அவர் அறிவின் உறைவிடமாய் விளங்கினர். நம்மைவிட அவர், பன்மடங்கு சீரிய அறிவு பெற்றவர். நாமோ ஆங்கிலங் கற்ற செருக்கினுல் இறுமாந்து நம்மை மறந்து ஏழைமக்களைக் காலால் மிதிக்கின்ரும் ; அகங்கார மென்னும் அரக்கன் வாய்ப்பட்டு, இநதிய வாழ்வின் இலட்சியத்தினின்றுந தவறி அப்பால் வீழ்ந்து பட்டவராகிரும். நாம் கற்றுவருங் கல்வியும போலிக் கல்வியே யாகும். போலி, என்றும் அழிவெய்தல திண்ணம. அதற்கு உலகிடை மதிப்பேது? புகழேது? இல்லையன்ரு ! எனவே, போலியே பலவீனம் ; போலியே வெளிவேடமெனக் கூறின் மிகையாகாது.

தாமெனவொளிரும் தயானநதரை யான், ஒரு மகரிஷியாக, ஜனசமூகத் தலைவராக, பேராற்றல்படைத்த தீர்க்க தரிசியாகக் கொள்கிறேன் ; அப்பெரியாரின் திருவடிகளைப் பணிகின்றேன். சக்தியாலேயே - ஆற்றலினலேயே - உங்கட்குப் பாராளுமன்றினையும் நிறுவவியலும். தயானந்தர் இளஞ்செம்மல்

களுக்கு விடுத்துள்ள செய்தி யாதெனின்:—

" எழுங்கள் ! தூக்கத்தினின்றும் !
எழுங்கள் ! முன்னேறுங்கள் !
ஆற்றலுடை மக்களாய்த் திகழுங்கள் !
தொண்டாற்றுங்கள்! வீண்பலாத்காரத்தை
விட்டொழியுங்கள் "

என்பதாம்.

தீவிர வாதியர் ஆற்றலுடை மக்களாகார். போகநெறி ஒருவாது ஆக்கத்திற்கு ஊறுசெய்யும். உண்மைச் சக்தியாளர் என்றும் எளிய வாழ்வையே மேற்கொள்வர். ஆனால் தற்கால வாலிபர் மேனாட்டு நாகரிகத்தையும், சிற்றின்பங்களையுமே பெரிதும் விழைகின்றனர். ஆற்றலைப் போகநெறியினாலடைய வியலாது; பிரம்மச்சரியத்தால் அடையலாம்; சிற்றின்பங்களினால் எய்த முடியாது; ஆனால் தன்னடக்கத்தினால் பெறமுடியும். பிரம்மச்சரிய நெறியின் விதிகளைக் கடைப்பிடித்தொழுகும் - உண்மைத் தொண்டாற்றும் இளைஞர்களே சக்தியிழந்த - ஆற்றலிழந்த-இந்தியாவின் விடுதலை காண்பவராவர். நம்மகத் தொளிரும் ஆக்க சக்தியைப் போற்றாதவரையில், நாம் உண்மையில் தன்மதிப்பை இழந்தவர்களாவோம். அடக்கப்பட்ட, ஒடுக்கப் பட்ட ஏழை மக்கட்குச் செய்யும் நற்பணியே சமயப் பணியாகும். அத்தகைய தொண்டாற்றும் சமயமே உண்மைச் சமயமெனக் கண்டுக் குறிக்

## தயானந்தரின் பதின் கட்டளைகள்

க. அறிவனைத்திற்கும் மூலகாரணமாயிருப்பவனும், அறிவால் விளங்கும் எல்லாமாயிருப்பவனும் பரமேசுவரனே.

உ. கடவுள், என்றுமழியாத, அறிவுமயமான, ஆனந்த வடிவான பரம்பொருளாவார். அவர் உருவில்லாதவர்; யாவும் வல்லவர்; சத்தியக் குன்று; கருணைவள்ளல்; பிறப்பிறப்பில்லாதவர்; மாற்றமில்லாதவர்; ஆதியந்தமில்லாதவர்; ஒப்புயர்வில்லாதவர்; சர்வரட்சகர்; உலகின் தலைவர்; யாண்டும் நீக்கமற நிறைந்தவர்; இயற்கையானவர்; மூப்பில்லாதவர்; அழிவில்லாதவர்; அச்சமில்லாதவர்; என்று முள்ளவர்; புனிதமானவர்; யாவையும் படைத்தவர்.

ங. வேதங்களே உயரிய அறிவைப் புகட்டும் உண்மை நூற்கள். அறிவுடை ஒவ்வொருவரும் அவற்றை நன்கு பயில்வாராக; பிறர்க்குப் போதிப்பாராக.

ச. என்றும் சத்தியத்தைக் கடைப்பிடித்து ஒழுகுக. அசத்தியத்தை விட்டொழிக்க.

ரு. எவ்வினையையும் அதன் நன்மை தீமைகளை நன்கு சீர்தூக்கி உண்மை நெறி நின்று வழுவாது ஆற்றுக.

சு. பொதுவுலகிற்கும், ஆன்மவுலகிற்கும், மக்கட் சமுதாயத்திற்கும் சீரிய நன்மை பயக்கின்ற வினையாற்றுவதையே நின்குறிக்கோளாய்க்கொள்க.

எ. அன்பு, நீதி, சத்தியம் ஆகிய இம்மூன்றையுங் கடைப்பிடித்து யாவருடனும் என்றும் ஒரே படித்தான முறையில் ஒழுகுக.

அ. நின்மாட்டுள்ள அஞ்ஞானத்தை ஒழித்து அறிவைப் பெருக்குக

கூ. நினது தனி ஆக்கத்திலேயே திருப்தியடைந்து நின்றுவிடாது, ஆனால் சமூகத்தின் ஆக்கமே நின் தன் ஆக்கம் என்பதைக் கடைப்பிடித்துப் பணியாற்றுக.

கo. நின்னல ஆக்க விதிகளுக்குக் கட்டுப்பட்டு உழைப்பதோடுகூட மக்கட் சமுதாய ஆக்க விதிகளுக்குங் கட்டுப்பட்டுத் தொண்டாற்றுவையேல் நீ விடுதலை பெறுவது உறுதி.

# தொல்காப்பியத்துப் புறத்திணையியலின் முதற் சூத்திரம்

[திரு. பி. எஸ். சுப்பிரமணிய சாஸ்திரியார், M.A., Ph.D., L.T.]

தற்போது காணப்படுகின்ற தொல்காப்பியப் பதிப்புக்களில்,

"அகத்திணை மருங்கி னரிறப வுணர்ந்தோர்
புறத்திணை யிலக்கணந் திறப்படக் கிளப்பின்
வெட்சி தானே குறிஞ்சியது புறனே
உட்குவரத் தோன்று மீரேழ் துறைத்தே"

என்பதே முதற்சூத்திரமாக உளது. அதன் பொருள் 'அகத்திணை யிலக்கணத்தை நன்கு உணர்ந்தோர் புறத்திணை யிலக்கணம் கூறப்புகின், வெட்சி என்ற புறத்திணை குறிஞ்சி என்றஅகத்திணைக்குப் புறனாகிப் பதினான்கு துறைகளைக்கொண்டதாகும்' என்பதாம். அவ்வாறாயின் புறத்திணை யாவை என்பதூஉம், அவை எத்துணை வகைப்படும் என்பதூஉம் கூறப்படாவனவாகும். வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் எனப் புறத்திணை எழுவகைப்படும் என்று கூறாது முதற் சூத்திரத்தில் வெட்சியின் இலக்கணத்தைக் கூறுதல் தவறாகும். வெட்சி என்பது முற்சூத்திரங்களால் விதிக்கப்பட் டிருப்பினன்றோ அதனை உத்தேசித்து அது குறிஞ்சிப் புறனாகு மென்றலும், அது பதினான்கு துறையைப் பெறு மென்றலும் விதிக்கப்பட்டன வாகும். சூத்திரத்துள்ள முதலிரண்டடிகளின் பொருளுக்கும், இறுதியிரண்டடிகளின் பொருளுக்கும் இயைபு நேரிதாகத் தோன்றவில்லை. அன்றியும் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், அகத்திணையியல் இவற்றின் முதற்சூத்திரங்களை *நன்கு நோக்கின் அவை முறையே எழுத்து யாவை எத்துணைப் படுமென்றும், சொல் உயர்திணை அஃறிணை இவற்றில் கிடைக்கு மென்றும், அகத்திணை கைக்கிளை முதலாய்ப் பெருந்திணை யிறுவாய் எழுவகைப் படுமென்றும் கூறுகின்றன. அன்றியும் வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் இவை எவற்றின் புறனாகுமென்பது,

வஞ்சி தானே முல்லையது புறனே
—புறத். 6

உழிஞை தானே மருதத்துப் புறனே
—புறத். 9

தும்பை தானே நெய்தலது புறனே
—புறத். 14

வாகை தானே பாலையது புறனே
புறத். 18

காஞ்சி தானே பெருந்திணைப் புறனே
புறத். 22

பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே
நாடுங் காலை நாலிரண் டுடைத்தே
—புறத் 25

என்ற தனிச்சூத்திரங்களால் உணர்த்தப்பட்டது.

---

*1. எழுத்தெனப் படுப
அகரமுத னகர விறுவாய்
முப்பஃ தென்ப
சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே
—(எழுத். 1.)

2. உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை யென்மனா ரவரல பிறவே
யாயிரு திணையி னிசைக்குமன சொல்லே
—(சொல். 1.)

3. கைக்கிளை முதலாப்
பெருந்திணை யிறுவாய்
முற்படக் கிளந்த வெழுதிணை யென்ப
—(பொருள். 1.)

ஆகலின் அகத்திணையியலின் முதற் சூத்திரம்,

"அகத்திணை மருங்கி னரிறப வுணர்ந்தோர்
புறத்திணை யிலக்கணந் திறப்படக் கிளப்பின்
வெட்சி முதலாப் பாடா ணிறுவாய்
முற்படக் கிளந்த வெழுதிணை யென்ப"

என்றும, இரண்டாஞ் சூத்திரம்

"வெட்சி தானே குறிஞ்சியது புறனே
உட்குவரத் தோன்று மீரேழ் துறைத்தே"

என்றும இருந்திருத்தல் வேண்டுமென்பது என் கருத்து. அவ்வாறு சூத்திரங்கள் சிதைந்திருத்தல் கூடுமோ வென்ற ஐயத்தை உரையாசிரியர் அகத்திணையியல் 45-ஆவது சூத்திரவுரையிற் கூறிய 'தலைமகள் கூற்று உணர்த்திய சூத்திரம் காலப் பழமையாற் பெயர்த்தெழுதுவார் விழ எழுதினார் போலும' என்ற சொற்றொடரால் போக்குகின்றனர்.



# காதலும் சாதலும்

[திரு. கா. நயினார் முகம்மது]

காதல் என்பது அன்பராயினார் இருவரிடத்தே தோன்றும் உள்ள உணர்ச்சி. அது, பன்மரஞ் செறிந்த நன்மலைச் சாரலில் உள்ள இளமரக்காவிலே, தேனருவியிற் றிளைத்து வருந் தென்றல் செவ்வியவின்பத்தை யளிக்கவும், முல்லை மணமும் மல்லிகை நாற்றமும் முறை முறை வீசவும், பழுத்து முதிர்ந்த பயனுடைக்கனிகள் பரிந்து வந்த தனக்கு விருந்தளிக்கவும், மயில் ஆடவும், குயில்பாடவும் கண்டு இயற்கை யன்னையின் எழிலில் மனதைச் செலுத்தி ஆயத்தைப் பிரிந்து நின்ற அழகிய தலைவியும், வில்லும் அம்பும் கைக்கொண்டு வேட்டை வயத்தனாய்ச் சென்ற விளங்கெழிற் குரிசிலும, இயற்கை இயைப்பதான், ஒருவரையொருவர் காணும்போது, பிறற்கிவ்வாறெனக் கூறப்படாததாய் அன்னாரின் அழகிய உள்ளத்தில் தோன்றும அருமந்த உணர்ச்சியாகிய இன்பமேயாகும.

இவ்வின்பத்தையே இன்றமிழ்ப் புலவாக்ள் அன்பினைந்திணை என்று பலவாறு சிறப்பித்துக் கூறுவர். இவ்வின்பத்தைப் புகழவே, விரித்துரைக்கவே, பத்துப் பாட்டும் எட்டுத்தொகையும் பதினெண் கீழ்க்கணக்கும் பிறவும் எழுந்தனவென்றால் இதன்பெருமையை இற்றென எடுத்தியம்பல் இயலாததொன்றும். காதலான் எழும் கழிபேரின்பத்தை எத்துணை யுயர்வாக வைத்து எண்ணினரென்றால், நீண்டநாள் நெடிதுழன்று நிமலனடி நீழலெய்திய நீத்தாரின் இன்பத்துக்கு நிகராகக் கண்டனர் காதலின் உயிர்நிலை கண்ட கவியுடைப் புலவர். இவ்வுண்மையை, இறைவனடி நீழலின்பத்தை யடைந்து தெவிட்டிய இராமலிங்க அடிகள் மிகவும அழகிய இன்கவி யொன்றான் அருளுவது அனைவரும் படித்து ஆனந்திக்கத்தக்க தொன்று.

இளவேனிற் காலத்தே, மாலைப் போழ்தில் குளிர்ந்த நீழலளிக்கும் கொழும் பொழிலில், பொற்றாமரை மலர்ந்து திகழும பொய்கையினருகில், முல்லைக் கொடிகளும மல்லிகைக் கொடிகளும் பின்னிப்படர்ந்த பந்தரின்கீழ், அமைக்கப்பெற்ற சந்திரகாந்தக் கல்லாலாய அதிசய மேடையின்கண் அமர்ந்த கதிரோன் அளிசெய்யவும், வீணையும் பாடலுங் கலந்த தீந்தமிழிசை செவிக்குணவூட்டவும் களவினுற கலந்த கறபுடைக் காதலியின் கனி மொழியும் உடனுறை அனுபவிக்கும் இன்பத்தை நிகர்த்தது இறைவனடி நீழலால் எய்

தும் இன்பமும் எனக் கூறும் செய்யுளை படித்துணர்மின் அன்பர்களே,

"இளவேனில் மாலையாய்க் குளிர்சோலை யாய்
இலஞ்சிபூம் பொய்கை யருகாய் [மலர்
ஏற்ற சந்திர காந்தமேடை யாய்அதன்மேல்
இலங்கு மரமிய வணையுமாய்
தளவேயு மல்லிகைப் பந்தராய்ப் பால்போற்
றழைத்திடு நிலாக காலமாய்
தனியிளந் தென்றலாய் நிறைநரம் புளவீணை
தனனிசைப் பாட லிடமாய்
களவே கலந்த கற்புடைய மடவரல்புடை
கலந்த நயவார்த்தை யுடனுய்
களிகொள இருந்தவர்கள் கண்டசுகம் நின்ன
கழனிழற்சுக நிகருமே" [டிக்

—இராமலிங்க அடிகள்.

சுருங்கக் கூறின், காதலே, காசினியைத் தன் வயப்படுத்திக்கொண் டிருக்கின்ற தென்னலாம். காதலின்றேல் உலகம் கவின்பெற்றிலங்கா. இத்தகைச் சிறந்த காதலான் வரூஉம் இன்பத்தை யுண்டவர்கள் எங்ஙனம் பிரியத் துணிவர். அன்றில்போல் வாழ்கின்ற அருமந்த காதலர் அவ்வன்றில் ஒன்றையொன்று பிரிந்தவுடன் இறந்து படல்போல்,ஒருவரையொருவர் பிரிந்தவுடன் இறப்பதைக் கூறவும் வேண்டுமோ!

இக்காதலுணர்வு காதலன் காதலிகளிடத்தில் மட்டும் தோன்று மென்பதில்லை; குழந்தையைப் பெற்ற தாயினிடமும் தோன்றுகின்றது. மகனுக்குக் 'காதலன்' என்னும் நூல் வழக்கும் உய்த்துணரத் தக்கது. ஆயினும் முன்னது பெருவழக்கும் பின்னது அருகிய வழக்குமுடையதா யிருக்கின்றன. எப்படியேனும் 'காதல்' என்ற ஒன்று நீங்கியவழிச்'சாதல்'எங்கு உண்டெனத் தெளிவதே இக்கட்டுரையின் இனிய நோக்கமாகும். எனவே காதலுக்கும் சாதலுக்கும் தொடர்புண்டென்பது அறியலாம். என்னை? அருங் குழவியைப் பிரிந்த அன்னையிடத்தும், காதலனைப் பிரிந்த காதலியிடத்தும் சாதல் உண்டு எனத் தெளியப்போவதான் என்க.

## தாய் பிரிந்த தலைப்பெய் நிலை

பண்டைத் தண்டமிழ் நாட்டில் தன தருமந்த தவப்புதல்வன் உயிர் துறந்தவுடன் ஆற்றாமை மீதூர்தலும் ஆவி துறத்தல் பெருவழக்காயிருந்தது போலும். பண்டைத் தமிழர்களின் பழக்க வழக்கங்களை வரையறுத்துரைக்கும் ஒல்காப் புலமைத் தொலகாப்பியத்தின்கண், காஞ்சித் திணையின்றுறையாகக் கூறிய "மாய்பெருஞ் சிறப்பிற் சிறுவர் பெயரத் தாய் தப வரூஉம் தலைபெயர் நிலைமை" என்னும் சூத்திரத்தான் விளக்குகின்றார். இச்சூத்திரத்திற்கு உரை வகுத்த உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க் கினியர், "தன் மகன் சிறப்பு மாய்தற்குக் காரணமாகிய பெருஞ் சிறப்போடு களப்பட்டுத் துறக்கத்துப் போயவழி அவனோடு இறந்து படவரூஉம் தாயது தலைப் பெயல் நிலைமை" என்று விரித்துரைத்தமையும் இவ்வுண்மையை நன்கு விளக்கும்.

எனவே, பொருளகத்தே பொங்கு நனிப் பகழிகள் தைத்த புண்பட்ட மேனியொடு புதல்வன், பொன்னுலகம் புக்கவுடன், போற்றி வளர்த்த அவன் அன்னை ஆவி துறத்தலைக் காண்கின்றோம்.

போர்ப் பறையினொலி செவியுட் புகுகின்றது. புதல்வன் கரத்தில் புனித வாளை யீந்து போர்க்களத்துக் கனுப்புகின்றாள் புரையிலா வீரத் தாய்.

படுகளத்திற் றனது புதல்வன் அம்புப் பாயலில் ஆவி துறந்து கிடக்கக் காண்கின்றாள் அவன்கண் அன்பு நிறைந்த அன்னை. வயிறலைத்துக்கொண்டு மாழ்கி யழுகின்றனளா! இல்லை. ஆனந்த மேலீட்டானும், அருமந்த புதல்வனைப் பிரிந்த ஆற்றாமையானும் ஆவி துறக்கின்றாள். நெடுங்கோளன் என்னும் வீரத்தமிழன் நிணம்நிறைந்த களத்தே மரித்தமை கண்ட வீரத்தாய் பிரிவாற்றாமையான் ஆவி துறத்தலை, தகடூர்யாத்திரை என்னும் நூல் அழகாக எடுத்துரைக்கின்றது.

"எற்கண்டறிகோ எற்கண்டறிகோ
என்மகனுதல் எற்கண்டறிகோ
கண்ணேகணை மூழ்கினவே
வண்ண மாலையும் வாளிவிடக் குறைந்தன

*வாயே, பொங்குநுனைப்பகழி மூழ்கலிற் புலாவழிதது*
*ஆவகாழிகை அம்புசெறித தற்றே*
*நெஞ்சே, வெஞ்சரம் கடாதன, குறங்கே*
*நிறங்கரந்து பலசரம் நிறைததன, அதனால்*
*அவிழ்பூ அப்பனைக் கிடந்தோன்*
*கமழ்பூங் கழற்நீங்காய் போன்றனனே.*

—(தகடூர்யாத்திரை)

முற்காலத்திய தமிழ்நூல்களில்மேற் கோள தேடிச் செல்வானேன்? நாடோறும் நாம் கண்டும் கேட்டும் வருகின்ற உலகியலே இவ்வுண்மையை உணாத்து மன்றோ?

அன்பு நிறைந்த தாய், தனதருமைக் குழந்தையோடு அகமகிழ்வுடன் கொஞ்சிக் குலாவி ஆடிப் பாடிக் களித்துக் கொண்டிருக்கின்றாள். காதல் நிறைந்த கணவன் அழைக்கும் ஒலி காதிற் படுகின்றது.

மழலைமிழற்றுங் குழவியை மறு விநாடியில், மெத்தென்றிருக்கும் மெத்தையிற் கிடத்திச் செல்கின்றாள். சிறு பொழுது தனது செல்வக் கொழுநனுடன் சிரித்துப் பேசிவிட்டு மனையுள் நுழைகின்றாள். புகுந்தவுடன் என்ன காண்கின்றாள்? வீடு நெருப்புப்பற்றிக் கொண்டதைக் காண்கிறாள். உள்நுழைந்தால் தான் இறந்துபடுவ ளென்பதை யுணர்நதவளே. ஆயினும் பெற்ற மனம் பித்து. இடையில் சேலையை இறுக்கிக் கட்டிக் கொண்டாள். புதல்வனிடங் கொண்ட புனிதக காதலால் தனதுயிர்க் குத துணிந்து உள் நுழைநது குழந்தையை எடுத்து மார்போடணைதது வெளியிற் கிடத்திவிட்டாள். தழலின் வெம்மை தாங்காது உயிர் துறக்கின்றாள். என்னே! அன்னையின் இணையிலா அன்பு!

எனவே, காதல் நிறைநத தாய் அக் காதல் நிறைநத குழவியைப் பிரிந்த வழி ஆற்றாது ஆவிதுறப்பள் என்பதை நூல் வழக்கானும் உலக வழக்கானும் கண்டாம். இனிக் காதலனைப் பிரிந்த காதலியின் நிலையையும் சிறிது காண்பாம்.

## சாவிற் சாதல்

காதற்கள்ளுண்டு களிதத காதலி தனது காதலனைப் பிரிநத வழி உயிர் துறந்து விடுவள். என்னை? அவனும அவளும் ஒருயிரும் ஈருடலுமாயிருத்த லின் என்க. ஒருயிர் சென்றபோழ்து ஒன்றாய காதலியின் உயிரும் சென்று விடுமென்பது இங்குக் கூறாமலே விளங்கும். ஆயினும் ஒன்றிரண்டு எடுத்துக் காட்டுக்களை எடுத்துக் காட்டி இவ் வுண்மை கண்டு இக் கட்டுரையை முடிப்பாம்.

கோவலன் கொலையுண்டான். தான் செய்தமை தவறெனவுணர்ந்த தரணி வேந்தனும் நெடுஞ்செழியன், "யானோ அரசன், யானேகள்வன்" எனத் தரையில் வீழ்நது தனதாவி துறந்தான். அவ்வரலாறு கேட்ட அவனதருங் காதலியாம் பெருங்கோப் பெண்டும் அக்கணமே ஆவி துறந்தாள். இச்சீரிய வரலாற்றைச சிலப்பதிகார மென்னும் திருவுடை நூலில இளங்கோ அடிகள் என்னும் அருந்தமிழ்ப் புலவர் மிக அழகாக எடுத்துரைக்கும் பகுதி அனை வரும அறிந்து மகிழததக்கதாகும்.

*"அரிமானேநதிய அமளிமிசையிருந்த*
*திருவீழ்மார்பிற் றென்னா கோமான*
*தயங்கிணாக கோதை தன துயா பொறான*
*மயங்கினனகொல லெனமலாடிவருடித*
*தலைத்தாள் நெடுமொழி தனசெவி கேளாள்*
*கலககங் கொள்ளாள் கடுந்துயர் பொறாள்*
*மன்னவன் செல்வுழிச் செல்க யானெனத்*
*தன்னுயிர்கொண்டவன்உயிர்தேடினள்போல்*
*பெருங்கோப் பெண்டும் ஒருங்குடன் மாய்ந் [தனள்"*

இச்சீரிய நிகழ்வையே இன்கவிப் புலவோர் தலையளிக் குதாரணமாகத் தருவர். இதை ஐயனார் இதனால் தாம் யாதத புறப்பொருள வெண்பா மாலையில், மூதானந்தம் எனச் சிறப்பிப்பர்.

இப்படியில் வைத்து எண்ணத்தக்க வள் சூரன்மனைவி பதும கோமளையென்பவள்.

குக்குடக் கொடியோனின் கூரிய வேலாற் கொலையுண்ட கொழுநன் சூரபன்மா உயிர்துறந்தான் என்னும் சொல்

உட்புகாமுன் தானும் உயிர் துறந்தாள் அன்பு நிறைந்த அருமந்த காதலியாம பதும கோமளே. இவ்வுண்மையைக் கச்சி நகர்ப் பெரும் புலவராய கச்சி யப்பர் அகங்குழைந்து பாடும் அழகிய தமிழ்க்கவியை நோக்குமின்.

“ காயன் மன்னவன் இறந்தன ''
எனுமுரை கன்னத் தன்
மேவு மெல்லியில் அசனியே
றுண்டவெண் பணியோல்
தேவியாகிய பதுமகோ
மளயெனுந் திருமங்கை
ஆவி நீங்கினள் தலையளி
யென்ப தனுவனறே''

எனவே, இந்துணையுங் கூறியதால், காதலே உயிரென்பதும், உயிரே காதல் என்பதும், காதல் நீங்கிய கணத்தில் கவினுடையாருயிரும கழன்றுவிடுமென் பதும, இக்குறி காணப்படா விடத் திற் காதல் உண்டென்பது பொய்ம்மை யென்பதும் விளங்கும்.

காதலின் உயர் நிலையையும, உயிர் நிலையையும் இற்றெனக் கண்டனர் பழந் தமிழ்ப் பெரியார்கள்.

களவொழுக்கத்திலும், காதலன் தன தாருயிர்க் காதலியை அடையப் பெறுதவழி மடலேறும வழக்கம பண் டைக்காலத்தில உண்டு என்பதைக் கேட்கின்றோம். இதுவும் ஒருவகை உயிர் துறக்கும் நிலையேயாகும.

தண்டமிழ் நாடு, பண்டைத் தமிழ் நாட்டைப்போல், ஒருத்தி ஒருவனையும, ஒருவன ஒருத்தியையும் காதலித்து வாழும் உயிர் நிலையை - உயர் நிலையை- அடைக ; ஒவ்வோரில்லும ஓதத அன் புடைக காதலர் விளங்கும ஒளிமனை யாகத திகழ்க.

“அன்பின்வழிய துயிர்நிலை யஃதிலார்க்கு
என்புதோல் போர்தத வுடம்பு. —குறள்

காதல் காதல் காதல்—காதலின்றேல்
சாதல் சாதல் சாதல்'' —பாரதி

# சுந்தர சுலோசனு

[நு. தி. ர. சாரங்கபாணி, எம். ஏ.]

(தொடர்ச்சி)

## )தம் 11.

### தோன்றுத் துணைவன்

“அப்பா! இன்று வருகிறேனென்று கூறிச் சென்ற ஜயகுமாரர் இன்று வாராத தன் காரணம் தெரிய வில்லையே ''

“கண்மணி சுலோசனு! நம்முடைய விஷயத்தைப்பற்றி அவர் எங்கு ஆராய் ச்சி செய்துகொண்டிருக்கிறரோ நாம் அறியோம். காலமாகிவிட்டது ; இனி அவர் இவ்விருளில் இங்கு வருவாரென யானெண்ணவில்லை''

“அப்பா! ஒருகால் அவர் வந்தாலும் வரலாம்.''

“அம்மா சாரத! ஜயகுமாரனுடைய காரியங்களைப்பற்றி யாமொன்றுந் திட மாகக் கூறிவியலாது. உலகம் புகழும் அவருடைய துப்பறித்திறனின் மாண் பை இன்றே யானுணர்ந்தேன். கண் மணி சுலோசனு ! மோகனசுந்தரங் குற்றமற்றவனென ஜயகுமாரர் கூறிச் சென்றது எனக்குப் பெரும் வியப்பை யே யளிக்கின்றது. சில நிமிடங்களுள் உண்மைக் குற்றவாளி யாரெனத் தெளி ந்து மோகனசுந்தரத்தின் மீதிருந்த வீண் பழியை அவர் விளக்கியது எனக்குப் பெரும் ஆச்சரியத்தையே யளித்திடுகின்றது. ஜயகுமாரர் கூறியது உண்மையாயிருக்குமேல் யான் மோகன சுந்தரத்தின் மீது வீண் சந்தேகமே கொண்டவனுவேன்.''

“அப்பா ! அவர்மீது-குற்றமறியா அவர்மீது சூளு வாடிய குற்றத்தை நீர்

சாற்றினீரென இன்று மாலையேயுணர்ந்தேன்."

"கண்மணி! மோகனசுந்தரம் திடீரென மறைந்ததே அவனைச் சந்தேகியுமாறு என்னைத் தூண்டியது. இருப்புப் பெட்டியிலிருந்து சுமார் இருபதினாயிரம் ரூபாய் பெறாஉம் ரூபாய்களும் நகைகளும், நான் உங்களுக்கு நேற்றுக் காட்டிய வைரமாலையும் வெள்ளியுறையும் பிடியுமிட்டவாளும் மறைந்ததேயல்லான் அவைகள் மறைந்தவன்றே மோகனசுந்தரமும் மறைந்ததே அவன் மேற்கூறிய பொருள்களுடன் மறைந்தானென என்னையெண்ணுமாறு தூண்டியது."

"அப்பா! அவரைக் கேவலங் கள்வனாகவா மதித்தீர்? ஆ! ஈசா!........"

"கண்மணி! அவனும் நகைகளும் ரூபாய்களும் ஒருங்கே ஒரே நாளில் மறைந்ததேயென்னை அவன்மீது சந்தேகங் கொள்ளுமாறு செய்தது."

"அப்பா! இதுகாறும் நீர் அவருடன் பழகியும், அவரை இளமையிலிருந்து வளர்த்தும், தாய்தந்தையற்ற அவருக்கு ஈடெடுப்பில் அன்னையாகவும் அப்பனாகவுமிருந்து வளர்த்த நீர், அவர் அத்தகைய காரியஞ் செய்வாரென்று எண்ணியது நியாயமா?"

"சுலோசனா! அவன் மீது வீண் பழிகளைச் சுமத்தவேண்டுமென்பது என்னுடைய கருத்தல்ல. சந்தர்ப்பம் அவ்வாறிருந்தது. மோகனசுந்தரம் அவ்வாறு திடீரென மறைந்ததன் காரணம் இதுவரையிலும் புலனாகவில்லை. அந்நிலையில் யான் அவனைச் சந்தேகியாது மற்றென் செய்வேன்? அவன் மீது யான் சந்தேகங் கொள்ளும்போது என் மனம் பட்டபாடை பரமனே யறிவான். கண்மணி! அவனை அவனுடைய அன்னையின் பொருட்டு என்னுடைய அருஞ்சுதன் போலும் வளர்த்தபாசம் என்னை விட்டகலுமோ? எக்காலும் அகலாது. அவ்வளவு அருமையாக யான் வளர்த்த அவன் கள்ளனாயினன் என்றெண்ணியதுங் கண்மணி! யான் கண்ணீர் விட்டேன். என்னுடையதுயர் இத்தகையதென ஜயகுமாரர் அறிவார். ஒருவனுடைய வாழ்க்கையில் இன்பமுந் துன்பமும் மாறிமாறி வரும் என்பதுஉலகவழக்கு. ஆனால், கண்மணி! என்னுடைய வாழ்க்கை ஆதியிலிருந்து ஓர் இடிப்புண்ட வாழ்க்கையே யாகுமென நீ யறிவாய். என்னுடைய துயரங்களை யெண்ணியெண்ணி யான் என் உடல் நலத்தை இழந்ததலையும் நீ கவனிக்கவில்லையா? என்னுடைய தலைப் புதல்வனாகிய சண்முகசுந்தரத்தின் விஷயம் என்னை இரவும் பகலும் வாட்டி வருதலை நீ யறிவாய். அவனுடைய இருப்பிடத்தைக் கண்டுபிடிக்க யான் செய்த முயற்சிகளெல்லாம் அவலமாயின"

"அப்பா! அண்ணாவைப் பற்றியும் ஏதோ ஜயகுமாரர் தன்னிடங் கூறியதாக சாரதா கூறினாள்."

"ஆ! சண்முகசுந்தரத்தைப்பற்றியா? காணமற்போன என் கண்மணியை யான் மீண்டுங் காண்பனா? இளமையிலிருந்தே இறைவன் மாட்டு இயம்புதற்கரிய அன்புடைய என் சண்முகம்- என் காந்தாவின் சண்முகம் - தூர்த்தரின் சகவாசத்தின் தீய ஒழுக்கம் பூண்டானாயினும் அவனை யான் மீண்டும் பெறுவனா? அம்மா சாரதா! ஜயகுமாரர் சண்முகத்தைப்பற்றி உன்னிடம் என்ன இயம்பினார். சீக்கிரம் கூறிடு."

"அப்பா! அவர் என்னிடம விளக்கமாக ஒன்றும் அறையவில்லை. ஆனால் அவர்மீது வீண் குற்றங்களும் பழிகளும் ஒரு விரோதியால் சுமத்தப்பட்டிருக்கின்றன எனவும், அதில் ஏதோ ஒரு சூழ்ச்சி இருக்கின்றதென்றும், அப்பாவியின் கரத்தினின்றும் இறைவனருளால் வெகு சீக்கிரத்தில் அவரை மீட்டிடுவதாகவும் கூறினார்."

"ஆ! என் சண்முக! வீண் பழிகளைச் சுமந்தா நீ வறுமைப் பிணியால் வாடித் திரிகின்றாய். எப்படுபாவியின் சூழ்சசிக்கு நீ இறையாயினையோ? பாவியேன் அதனை உண்மையெனக் கொண்டல்லவோ நீ ஒழுக்கந் தவறினையென உன்னைக் கண்டித்தேன். கண்மணி! நீ மாத்திரம் உண்மையை அவ்

வமயம் எனக்குரைத்திருப்பின், நான் உன்னைப் பிரிந்து வாட நேரந்திடாதே. வறுமையும் உன்னை வதைக்குமா? ஆ தெய்வமே! என் கண்மணி சண்முகம் வீண் பழித் தாங்கியா நீ வாடுகின்றாய். உன்னுடைய தற்கால இடிப்புண்ட வாழ்க்கைக்கு யானன்றோ காரணம. யான் சிறிது யோசித்திருப்பின், இன் றேல் தீர ஆராய்ந்திருப்பின் நீயும யானும், கண்மணி சுலோசனையுஞ் சார தாவும் இவ்வாறு வாடநேரந்திராதே!''

''அப்பா! வீணுக வாடிப் பயனென்? ஊழ்வினை யாரை விட்டது? எல்லாம் வினையின் பயனே யாகும். துன்பத்தை நுகர நம் விதியிருப்பின் நாம துயரை யடைதல் முரணுமோ? அதறகு நீர வருந்துதல் முறையோ? எனினும இறைவன் நம்மைக் கைவிடான்.''

'' ஆம் அப்பா! சாரதா கூறுவது உண்மையே. நாம் வீணுக வருந்திப் பயனென்? இறைவன் நமமை எக் காலத்திலும் கைவிடான். அண்ணு! ஒரு புல்லொழுக்கினனின் தீய சூழ்ச்சி யான் வீண் பழிகளைத் தாங்கினுர் என ஜயகுமாரர் கூறியது உண்மையெனின், நேற்றுத் திடீரென மறைநததற்கும் அப்பாவியே காரணமாக இருக்த லாகும.''

'' அப்பா சுலோசனை இயம்புவது போலும் சிறிய அண்ணு மறைந்ததும் ஒரு தீய சூழ்ச்சியினுலேயே இருத்தல் வேண்டும். பொருளைக் களவாடியவன் அண்ணுவின்மீது திருட்டுப் பட்டம வரவேண்டும் எனக் கருதியே அவ் வாறு செய்திருக்கலாம். சகோதரர்கள் இருவரும் தீய வீண் பழிகளைத தாங்கி இடிப்புண்டு வாழ அவர்கள் விதியிருந் தது போலும.''

''சாரதா! சண்முகம் மாத்திரம் உயி ருடன் இருப்பானுயின் அவனை எவ் வகையானுங் கண்டுபிடிப்பேன். அவன் சென்ற ஓராண்டாகப் படும் இன்னல் களுக்கு யானன்றோ முக்கிய காரணம்? ஆ! மோகன சுந்தரா! உன்னை அப் பாவி சண்டாளன் என்ன தீங்குசெய்ய எண்ணியுள்ளானே? ஒருகால் சண்முக மும் அவனுடைய கரத்தில் சிக்கி என்ன துன்பம் நுகருகின்ருனே? சென்ற சிலவாண்டுகளாக யானெய்திய இன்பம ஆகாயத்தில் தோன்றும மின் னெளியைப்போலும் மறைநததே. ஆ! ஈசா! துன்பததையே இவ்வுலகத்திடை நுகர என்னைப் பிறப்பிததனையோ! ஆ! சுலோசனு! சாரதா! என்னைப்போலும் ஒருவன் இளமையிலிருநது துனபம நுகர்நது இருத்தலினும இறத்தலே நன்று. ஆ!........''

'' அபபா! வருநதாதீர்கள். எல்லாம் இறைவனுடைய செயல். நம்முடைய ஊழ்வினையின் பந்தங்கள. ஜயகுமார ரிடம வார்த்தையாடியதிலிருநது ஒரு புததுணர்வு என்னகததி லருமபி யிருக்கினறது. என்னை இதுவரை வாட்டிநின்ற சோகம இன்று என் னகத்தை நீத்து மறைந்திருப்பது எனககுப் பெரும் ஆச்சரியத்தையே யளிக்கின்றது. எனக்குள் ஒரு தெய் வீக சக்தி, யான் மீண்டும் சில தினங்க ளுள் அவரைப் பெறுவேன் என் றெண்ணுமாறு என்னைத் தூண்டுகின் றது. இறைவனருளால இதுகாலை நம் முடைய ''உரிமையுறையுளை'' மறைத்து நிற்கும் துயரம்என்னும் மேகம் மறைந் தொழியுமென்றே எனக்குத் தோன்று கின்றது. ஓராண்டுக்கு முன்னர் நாம் ஒருங்கே நுகர்ந்த இன்பததை மீண் டும் நாம் சில தினங்களுள் நுகர்ந்திடு வோம் என்றெண்ணுமாறு என்னைத் தூண்டுகினறது.''

'' அப்பா! சுலோசனு கூறியது உண் மையென்றே எனக்குப் புலனுகின்றது. நேற்று யான் ஜயகுமாரருடன் பேசி யதிலிருந்து ஓராண்டாக என்னை இர வும் பகலும் ஓயாது வாட்டி நின்ற வாட்டம் வாடியிருக்கின்றது. ஓராண் டுக்கு முன் மறைந்த அவரை மீண்டும பெறுவோமென்றே எனக்குத்தோன்று கின்றது. எனவே, நீர் வீணுகக் கலங்க வேண்டாம். நம்முடைய துயரைப் போக்கி இன்பம் நல்க வல்லார் ஜய குமாரரே யாவர். அவர் வந்தவுடன் சில உண்மைகளை நாம் கண்டறிவது

திண்ணம. இன்று வருகின்றேன் என்று கூறியவர், இன்று வராமையே, நம்முடைய விஷயத்தில் ஈடுபட்டு அவர் சில உண்மைகளைக் கண்டிருக்கிறா என பதை விளக்கவில்லையா.?''

" ஆ! ஈசா!........"

" இதுகாறும உம்மை அண்டியிருந்த உம்முடைய கண்கள் கலஙகுகின் றனவே. ஓயாத் துயரம உம்மை இந நிலைக்கு மாற்றிவிட்டதா. நீர் இவ்வாறு கலஙகினுல் பேதைகளாகிய நானும் சாரதாவும் என் செய்வோம''

" கண்மணி சுலோசனு துயரம் என்னுல் தாள வியலவில்லையே.........."

" அப்பா! இறைவன தன்னை நமபினவரைக் கைவிட்டறியான். பாரத்தை அவன்மீது சுமத்தித தைரியமாக இரும்.''

" கண்மணிகளே! நீஙகள் எனக்குத் தைரியம் இயம்புகின்ற நிலைமையையே ஆண்டவன் எனக்கருளியுள்ளான். என கவலை ஓயும் நாளுமுண்டோ. ஆ! சண்முக! மோகனசுநதர உங்களை மீண்டும் யானென்று காண்பேன்.''

"அப்பா! சாரதாவின் மாற்றலைக் கவனியும்; கவலையற்ற என் நிலையை உய்த்துணரும். எங்களுடைய கவலைகள் எங்குற்றன. ஜயகுமாரர் எங்களுக்கு அளித்த வாக்கு எங்களுடைய வாட்டததை யோட்டியது. அவர் எங்களுடைய உள்ளததைக்கொள்ளைகொண்டவரைத் தேடிச சில தினங்களுள இறைவனருளால அளிப்பதாகக் கூறிய வாக்கு எங்களுக்குத தைரியத்தை யூட்டியிருக்கின்றது. நீரும் ஜயகுமாரரையே நமபும். அடககமும் அறிவும் இறைவன்மாட்டுப பேரன்பும் உடைய அவர் நமமுடைய துயரைக் களைவது திண்ணம்.''

" என்னருங் கண்மணிகளே! அகாலமாகின்றது. நீங்கள் உங்களுடைய அறைகருச் சென்று உறங்குங்கள். இறைவனே நமக்குத் தோன்ருத் துணைவன். நம்மால் என்னசெய்ய ஒல்லும.''

" அப்பா! நீங்கள் முதலில உங்களுடைய அறைகருச் சென்று துயரை மறநது துயில் கொள்ளுங்கள். பின்னர் யானும் சாரதாவுஞ் செல்கின்ருேம். உங்களை இந நிலையில் விட்டு யாங்கள் எவ்வாறு எங்கள் அறைக்குச் செல்ல ஒல்லும.''

" சரி வாருங்கள் செல்வோம்.''

# திருக்கோயில் வழிபாடும் சீர்திருத்தமும்

பொன்னம்மாள், பி. ஏ., எல். டி.]

## VI

கிறிஸ்துவின் பாடுகளை முன் குறித்து அவைகளால் முழுமுதற் பொருளான இறைவனின் அன்பை உலகிற்கு வெளிக்கூறின ஒரு பக்தன் கூறுவதைக் கேட்கும்போது, ஆ! எத்தனையான அன்பும், தைரியமும, நம்பிக்கையும் நம் உன்னத பிதாவைப் பற்றிப் பொங்கி வழிகின்றன! அப்பக்தன் கூறுவது:--

"மெய்யாகவே அவர் நம்முடைய பாடுகளை ஏற்றுக்கொண்டு, நமமுடைய துக்கங்களைச் சுமந்தார்....நமமுடைய மீறுதல்களினிமித்தம அவர்காயப்பட்டு, நம்முடைய அக்கிரமத்தினிமித்தம் அவர் நொறுக்கப்பட்டார். நமககுச் சமாதானத்தை உண்டுபண்ணும் ஆக்கினை அவர்மேல வநதது; அவருடைய தழும்புகளில் நாம் குணமாகிருேம்'' —ஏசா 53 : 4 - 6. என்பதே. இவைகளையும், இன்னும " அநாதி சிநேகத்தால் உன்னைச் சிநேகித்தேன்; ஆதலால் என் காருண்யத்தால் நான் உன்னை இழுத்துக்கொள்ளுகிறேன்'' —எரேமி 31 : 3. "மலைகள் விலகினுலும், பர்வதங்கள் நிலை பெயர்ந்தாலும்,

என் கிருபை உன்னைவிட்டு விலகாமலும், என் சமாதானத்தின் உடன்படிக்கை நிலை பெயராமலும் இருக்குமென்று உன்மேல் மனதுருகுகிற கர்த்தர் சொல்லுகிறார் ''—ஏசாயா 54 : 10; என்பது போன்றதுமான எண்ணற்கரிய சத்திய வாக்குகளை நமக்கு ஆறுதலாகவும், நம்பிக்கையாகவும் அளித்திருக்கிற அன்பின் சாகரமாகி ஆண்டவனின் அன்பை ருசிக்க அவரது மக்களாகிய மானிடர் தங்களைப் பலவாறாகத் துன்புறுத்தி அங்கவீனம் செய்துகொள்ளத் தேவையில்லையென அடிக்கடி அறிவு குறைந்தோருக்கு அறிஞர் அறிவு கொளுத்தி அருட்சோதியண்டை அவரை நடத்த இடையறாது முயற்சிக்க வேண்டுமன்றோ? ''பெற்றாருக்குப் பிள்ளைகளல்ல, பிள்ளைகளுக்குப் பெற்றாரே பொக்கிஷங்களைச் சேர்த்து வைத்தல் கிரமம்''—II கொரிந்தியர் 12 : 14 என்றும், பெற்றாருக்காகப் பிள்ளைகளல்ல பிள்ளைகளுக்காகப் பெற்றாரே தமமை யொடுக்கி, யுழந்து, கஸ்தியடைதல் உலகானுபவமும் இயற்கையின் சிறப்புமென்பதை நாம் அறிந்து எல்லாருக்கும் எல்லாமான இறைவனது அன்பும் கருணையும் அத்தகையனவேயென உணருவது எக்காலம்? அத்தகைய நம் அம்மையப்பரின் அன்பைக் கண்ணுக்கு மெய்யாய் ருசித்துக் கண்டாலொழிய ''அன்பில் தொழு'' என்ற நம் பெரியாரின் திருவாக்கைக் கைக்கொள்ளல் எவ்வளவும் கூடாதென்றறிக. நிற்க.

பனிரண்டாவதாக :— இறைவனையடையும் ஏதுக்களாகவும், பலதிறப்பட்ட படிகளாகவு பயன்படுமாறு பெரியோரால் நியமிக்கப்பட்ட ஆலயப் பணி, ஆலய வழிபாட்டுமுறை ஆதியவற்றைத் தேசப்பணி, பாஷைப்பணி முதலிய பலதிறப்பட்ட பணிகளினின்றும் வேறுபடுத்தல் நலம். என்னை? அண்ட சராசரங்களும் ஆண்டவனுடைய பொது மனை. அதன்கண் நிலவுகின்ற உயிருள்ளனவும், உயிரில்லனவுமான எண்ணிறந்த வஸ்துக்களையும், மிருக ஜீவன்களையும், மனுக்குலமனைத்தையும் ஏக சக்கிராதிபதியாயிருந்த, இறைவனே ஆளுகின்றான். எத்தகைய ஜாதியாருக்கும், தேசத்தாருக்கும், பாஷைக்காரருக்கும் அவர் பொதுவான பிதாவன்றோ? அவருடைய திருராஜ்யமாகிய நீதி, அன்பு, சத்தியம், பரிசுத்தம் முதலியவற்றாலாய தேவரசு, பூவுலகின்கண் நிருமிக்கப்படும்படியாகப் பூமியின் எப்பகுதியிலும் அவரது பக்தரான அடியார் புரியும் திருப்பணியும் பொதுவானதாயிருக்க வேண்டாவோ? பாஷைப் பணியோ எல்லாருக்கும் ஒரே சம்மதத்தை யளிக்கும் பொதுப்பணியன்று. அந்தந்தத் தேசத்தாரது பாஷை அந்தந்த தேயத்திலே மாத்திரந்தான் சிறப்பிக்கப்படும். ஆல்பிரட் ஷேக்ஸ்பியர், மில்டன் முதலியோர் ஆங்கில தேயத்திலும், காத்தி மார்டின் லூத்தர் முதலியோர் ஜர்மனியிலும், நெப்போலியன், ராசின் மாலியர் முதலியோர் பிரான்சிலும், டான்றி இததாலியாவிலும், கஸ்டாவஸ் ஸ்காந்தி நேவியாவிலும், ஆபிரகாம் லிங்கன் அமெரிக்காவிலும் சிறந்த உரிமைப் புகழைப் பெற்றார்கள். இவர்கள் பாஷையையோ, நூல்களையோ, பிறதேசத்தாரும பிற பாஷைக்காரரும் ஒருவாறு புகழ்ந்து அதிசயிப்பினும, இவர்களைத் தமமுடையோராகப் பாவிதது உரிமை பாராட்டார் ஏனைய தேயததார். இறைவனோ வென்றால் அவ்வாறு ஏதோ ஒரு தேசததாராலோ, பாஷைக்காரராலோ அன்றி உலகின் எமமக்களாலும் கொண்டாடப்படுபவன். தமிழரோ அன்றிப் பிறவொரு பாஷைக்குரியாரோ இறைவன் தமமுடையனெனவும், பிற பாஷைக்கும தேசததிற்கும் உரியரல்லன் எனவும கூறுதல்அறிவீனமாகும. இறைவன் உலகெங்கணும சிதறப்பட்டிருக்கும் தம் மக்கள் பலரிடமும் அவரவருக்குரிய பாஷையில் பேசி, அவரவருடைய மனநிலைக்கும், ஆன்மநிலைக்கும தக்கவாறு தம்மை வெளிப்படுத்தி வருகிறான். கிறிஸ்து

வின் மதம் உலகில் இத்தனையதிசயமாய்ப் பரவிக் கிரியை செய்வதை நாம் கண்ணுக்கு மெய்யாய்ப் பார்க்கிறோமே! காரணம் என்ன? அவர் இறைவனை உலகோர் யாவரும் யாதொரு ஆடம்பரமும் ஐயமும் இன்றி அறிந்து அனுபவத்தில் காணுமாறு முழுமுதற்பொருளாகிய கடவுளை வெளிப்படுத்தினார். அவர் உபதேசங்களும, கொள்கைகளும் ஒரு தேசத்திற்கோ, ஜாதிக்கோ மட்டுமின்றி யாவருக்கும எக்காலத்திலும் பொருத்தமாயிருப்பன. அவர் உலகிலுள்ள எல்லா முக்கிய பாஷைகளாலும விளக்கபபட்டு வெளிப்படுகிறார். அவரவருடைய பாஷையில் அவரவரோடு பேசி, உறவு கொண்டாடுகிறார். அவரை முதன் முதலாக நம நாட்டுக்கோ அன்றிப பிறநாட்டுக்கோ கொண்டுவநத பெரியார் யாதாமொரு பாஷையோடு அவரைச சமபநதப் படுத்தியிருப்பராயின், கிறிஸ்துஇருந்த விடத்திலேயே இருநதுலாவி, அவிநது, அழிந்துபோயிருபபா. இப்போதோ அவர் ஏறக்குறைய 400 பாஷைகளில், உலகின் நாற்றிசையிலும் தோத்திரிக்கப்படுகிறார். ஆகவே, நாம் கடவுட் பணியையும், கடவுட் சிறப்பையும் பெருக்கி மேன்மைபபடுத்த விருப்பங்கொள்ளின், தெய்வீக அறிவுவளர்ச்சிக்கென்றும, மககளின் ஆன்ம ஈடேற்றததிற்கெனவும பெரியார் எடுத்துக் கொள்ளும மதசீர்திருத்தம், ஆலயச் சீர்திருத்தம் ஆதியவற்றோடு தேசவுரிமை, ஜாதியுரிமை, பாஷையுரிமை, சுதந்தரவுரிமை முதலிய பிறிவுரிமைகளைப் புகுத்தல் கூடாதென்க.

நமக்கான அறிவு வளர்ச்சியையும் ஆன்ம வளர்ச்சியையும், இறைவன் பணியையும் உலகில் எநத ஏது, அல்லது எத்தகைய மனிதர் தடைசெய்யக் கூடும்? கடவுட் பக்தியையும் பணியையும அரசாங்கமாயினும் ஏனை அங்கமாயினும் தடுத்தற்கரிது என்பதை அப்பரும,

'நாமார்க்கும் குடியல்லோம்நமனையஞ்சோம்'

என்னும் தம் வாக்கில் தெளிவாய் வலியுறுததியிருக்கின்றாரன்றோ? அன்றியும உலக சரிததிரத்திலும் உலகாநுபவத்திலும் நாம் காண்பதியாது? உலகில் சிறந்த மதஸ்தாபனம் செய்தோர், பல நவீன சாஸ்திரத்தைக் கண்டு உலகிற்கு வெளிப்படுததினோர், இன்னும் தேசீய நலததின் பொருட்டுத தம் உடல், பொருள், ஆவி யாவையும் தத்தம்பண்ணி யுழைப்போர் முதலியோரின் ஜீவிய சரித்திரங்களை நோக்குகையில் அன்னோரிற் பலர் துன்பத்தின மததியிலும், அடிமைத்தனத்தின் அல்லலின் நடுவிலும், பகை, விரோதம், ஜீவவதையின் மததியிலும இருநது கொண்டே தம் அறிவைப் பழக்கி, அரிய விஷயங்களைக் கண்டு உலகோர் உய்யும்படி சேமித்து வைத்துப் போயினர் எனத தெரிகிறது. இப்போது உலகின் ஒரு முனை துவக்கி மறு முனைவரைக்கும், சூரியன் உதிக்கும் திசை முதல் அது அஸ்தமிக்கும் திசைவரை எல்லாத் தேசத்தாராலும, ஜாதியாராலும், பாஷைக்காரராலும் கொண்டாடப் பட்டுப் பரப்பப்பட்டுவரும் கிறிஸ்துவமதத்தின் சரித்திரத்தை வாசிததோமாயின் அது எத்தனையாக அவிசுவாசிகளாலும், அஞ்ஞானிகளாலும், சத்தியததை அநியாயததினாலே அடக்கிவைக்கும் சததுருக்களாலும் கண்டா கண்டபடி நெருக்குண்டு, நொறுங்குண்டு, துன்பப்படுததப்பட்டு வநதது; இன்னும் துன்பப்படுத்தப்பட்டு வருகிறதென்றும் அறியலாம். என்றாலும் உலகின எலலாச சக்திகளையும், அதிகாரங்களையும, துரைத்தனங்களையும் பாரக்கிலும் கிறிஸ்து வெளிப்படுத்திய பரமபிதாவின் அன்பை "நீங்கள் உலகெங்கும் போய் சர்வசிருஷ்டிக்கும் சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள்"-மார்க்கு 10 : 15. என அவர் கட்டளையிட்டபடியே சென்று இறைவனுடைய அன்பின் ராஜியததைப் பரப்பின பக்தரின் பாரிசத்திலிருந்து கிரியை நடப்பிதத நித்திய சக்தி பெரிதாகக் காணப்படுகிறதன்றோ? இத்தகைய அன்பின் பணியை உலகெங்குஞ்சென்றுநடத்தும்

படி தமது சீஷரை அனுப்புமுன் கிறிஸ்து பெருமான் அவர்களை நோக்கிக் கனிந்த அன்புடனும் அனுதாபத்துடனும் "இதோ அதிகாரிகள் உங்களை வாரினால் அடிப்பார்கள்; சிறைச்சாலையில் அடைப்பார்கள்; காவல் பண்ணப்பட்டவர்களாய் இராஜாக்களுக்கும், நியாயாதிபதிகளுக்கும் முன் கொண்டு வரப்படுவீர்கள்; நீங்கள் அழுது புலம்புவீர்கள்; உலகமோ சந்தோஷப்படும். உலகத்தில் உங்களுக்கு உபத்திரவமுண்டு. ஆனாலும் திடன் கொள்ளுங்கள். நான் உலகத்தை ஜெயித்தேன்" என்று ஆறுதலான வசனங்களைக் கூறினார். கூறினபடியே அவர் உயிர்த்தெழுந்து பரத்துக்கேறிய பின்பு சீஷர்கள் அவரைப் பிரஸ்தாபப் படுத்தினதினிமித்தம் பலவித இன்னல்களை யடைந்து காவல் செய்யப்பட்டுப் பயமுறுத்தப்பட்டபோது தைரியத்துடன் தங்களை நியாயந்தீர்த்த அதிகாரிகளைப் பார்த்து "தேவனுக்குச் செவி கொடுக்கிறதைப் பார்க்கிலும் உங்களுக்குச் செவிகொடுக்கிறது தேவனுக்கு முன்பாக நியாயமாயிருக்குமோ? என்று நீங்களே நிதானித்துப் பாருங்கள். நாங்கள் கண்டவைகளையும் கேட்டவைகளையும் பேசாமல் இருக்கக் கூடாதே"—அப்போஸ்தலர் 5 : 19 & 20. என்றார்கள் அவரின் சீடர். இவ்வாறு இறைவன் நம்மிலே கிரியை செய்வது உண்மையாயின், நாம் உண்மையாக இறைவனின் அன்பையும் பரிசுத்தத்தையும் கண்ணாரக் கண்டு, மனமாரக் களித்து, அதை ஏனையோரும் கண்டு களிக்க வேண்டுமென விரும்புவது சத்தியமாயின், அப்போது அதற்கான முயற்சியில் நம்மை எத்தகைய அதிகாரியும், பலசாலியும் தடுத்தலரிது. காந்தியைச் சிறையில் வைத்த மாத்திரத்தில் அவர் தம் தேச நன்மைக்கென ஆலோசித்து நிதானிக்கும் எண்ணத்தையும், மன ஆற்றலையும் தடுப்பவர் யாவர்? சிறிது காலம் சிறையில் துன்புற நேரினும் அக்காலம் முடிவுற்று வெளியேறியவுடன் முன்னினும் பதின்மடங்காய் அவரது ஆற்றல் வெளிப்படுமன்றோ? அம்மானிடரின் அரிய சக்தியைக் கடவுள் தானும் தடுப்பவரல்லர். நன்மை தீமையை வகையறுத்து நற்றுறையில் நடக்க மனிதனுக்கு உணர்வையும் ஆற்றலையும் அளித்தவர் அவன் அதைப் பெருக்கி உலகைப் பிரகாசிக்கப் புகுங்கால தெய்வப் புலவர் கூறுமாப்போல்,

"குடிசெய்வலென்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான் முந்துறும்"

அன்றோ? அப்படியிருக்க நம் கோயிற் பணி குன்றுதற்கு அது காரணம் இது காரணம் என்ச் சாக்குப் போக்குச் சொல்லிக் கொண்டு திரிவதில் யாது பயன்?

பனியன் என்ற ஆங்கிலப் பெரியார் தம்மதக் கொள்கையிலிருந்து தம் தேசத்தாரால் சிறையிலிடப்பட்ட போழ்தன்றோ தமது ஒப்பற்ற தனி நூலாகிய "மோட்சப் பிரயாணி" என்ற அரிய நூலை எழுதினார். கிறிஸ்து மதத்தைப் புறஜாதிகளிடத்தில் பரப்பின பக்தராகிய பவுல் அதற்காகச் சிறைச்சாலையில் இருத்தப்பட்டபோது தானே தம் அரிய நிருபங்களை உலகிற்குப் பொறித்துரைத்துப் போனார்? அவர் அப்போது "நான் கிறிஸ்துவினிமித்தம் கட்டப்பட்டிருக்கின்றேன். ஆயினும் தேவ வசனமோ கட்டப்படவில்லை" என்று ஜெயதொனி முழங்கக் கெம்பீரித்துக் கூறினார். ஆகவே, ஒருவன் தாழ்ந்தோனாகவோ அன்றி உயர்ந்தோனாகவோ இருத்தல் அவனவனது முயற்சியளவே யாகுமென்று நம் பெரியாரும் தமிழ் மூதாதையரும் அடிக்கடி வற்புறுத்திச் சென்றாரன்றோ!

"பெருமையும் சிறுமையும் தான்தர வருமே" என்றும்,

"நன்னிலைக்கண் தன்னை
நிறுப்பானும் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு
வானும்—நிலையினும்
மேன்மே லுயர்த்து
நிறுப்பானும் தன்னைத்
தலையாகச் செய்வானும் தான்"

என்றும் ஆன்றோர் கூறிய அரிய செய்

யுட்களின் பொருளை உணர வேண்டாவோ ?

ஆகையால் கிறிஸ்து கூறியது போல் நேசனே "உனகண்ணிலிருக்கிற உத்திரததை உணராது உன் சகோதரன் கணணிலிருக்கிற துரும்பைப் பார்க்கிறதென்ன ? நம் ஆலய வழிபாடடுக்கும் மத சீர்திருத்தத்திற்கும் குறைவும் க்ஷீணதிசையும் உண்டாவதறகு உண்மையான காரணங்களை ஓாநதுநீக்க முயலாது பொருததமும் உண்மையு மற்ற பலசாக்குப் போககைக் கூறிக்கொண்டு திரிவதில லாபம் என்ன ? சிலர் கூறுகிறதுபோல் "வைதிகத்திற்கு அடிப்படை லௌகிக"மன்று. கிறிஸ்து கூறுகிறபடி லௌகிகத்திற்கு அடிப்படை வைதிகமாகும் "முதலாவது தேவனுடைய ராஜ்யத்தையும் நீதியையும தேடுங்கள். அப்போது இவைகள் எல்லாம் கூடக்கொடுக்கப்படும்" என்று கிறிஸ்து கூறுகிற பிரகாரம் துவேஷமும பகையும் பிரிவினையுமின்றி உண்மையான இறைவனைப் பற்றிய அறிவையும் உயரியபக்தி மார்க்கத்தையும் நம் நாட்டில் பெருக்கி அன்பு, சமாதானம், சததியம், நீதி, பரிசுத்தம இவற்றுலாகிய தேவனின் திரு ராஜ்யத்தை நிலைநிறுத்த முயற்சி செய்யும போது ஏனைய இன்னல்களும், அடிமைத்தனமும் தாமே இரிந்தொழியும்.

பதின் மூன்றுவதாக:—கோயிலையும் கோயிற் பணியையும் எள்ளி நம் சிறுவரும நாகரிகததில் தேர்நதோரும் நகையாடுதலுக்கு இன்னொரு முக்கிய காரணமுண்டு. ஆரம்பத்தில் இவை ஒரு நல் நோக்கத்தையுடையதா யிருநதிருப்பினும், பின் பல்லாயிரவாண்டுகளாக அவை நம்மக்களுக்கு யாதொரு நன்மையும் காட்டிற்றில வென்பதை அநேகர் உணர்கின்றனர். கோயிலும், கோயிற் குருக்களும், மடாதிபதிகளும் மல்கிக் கிடந்தும், அதனுலும் அவர்களாலும நம் சிறுவராயினும் பெரியராயினும் ஒரு சிறிதேனும் ஆன்ம அறிவில் தேறினவருமல்லர்; பயன் பெற்றவருமல்லர். பிற மதங்களிலே காலா காலத்தில் மதக்கொள்கைகளும், கோயில, கடவுள் இம்மை மறுமை, இருவினை, நரகம், மோட்சம என்பவற்றைப்பற்றி ஒருவாறு தெளிவான அறிவு பெருகி உலகெலாம நிரமபிககொண்டு வருமபோது, நம மததில் அவ்வாறு யாதொரு வெளிசசமுமின்றி வைதிகஅறிவு அறவேஒழிந்துமறைந்து வருகிறது. நமது மதாசாரியா பலரால் எழுதபபெறற எண்ணற்கரிய வைதிக நூல்களிருககவும் அவ்வறிவு ஒழிநத தென எவவாறு கூறுதல்தகுமென நண்பர் பலா வினவுதல் கிரமமே. அவற்றில் சிலவற்றைப படிப்பாருககுப் பதங்களையும தொடாகளையும் இலககண முறையாகவும இலககிய முறையாகவும் எநதனை அழகாக நம் பெரியாருக்கும் கவிகளுக்கும பிணைத்தெழுதத தெரிகிறதென்றும, எத்தனை ஏராளமான பதங்களை, எத்தனை விதமான மாதிரியில மாற்றி மாற்றிப் பிரயோகிககின்றனர் என்றும அறிந்து அதிசயிப்பர் என்பது உண்மையே. இத்தகைய சாமர்த்தியத்தில அவரை உலகில் வேறொருவரும் வெல்லார் என்பதும் உண்மையே. அந்நூற்களில் காணப்படும் தத்துவ அறிவின் துவக்கம் யாது, முடிவு யாது என எளிதிற காணககூடாவிடினும் அநதத்துவ நூலே யென்பது தெளிவாம். ஆயின், அதனைப படிப்போரின் ஆதமதாகததை யேனும, பசியையேனும தீாத்து இறைவனிடம் ஓர் அடியேனும சமீபமாய் வருமாறு அதனைப் படிப்போர்க்கு அது உதவி செய்கிறதென்ற உணர்ச்சி அதில் கிஞ்சிததும் கிடையாதெனவே கூறவேண்டியிருககிறது. என்னை ? பசித்தவனுககு யாது தேவை? ஆகாரத்தைப்பற்றிய அல்லது அக்கத்தைப்பற்றிய அறிவா ? அன்று. ஆகாரமே தேவை. தாகத்தால் விடாய்த்தவன எதை நாடுகின்றுன் ? பாலைப் பற்றி அல்லது பானததைப்பற்றிய சாஸ்திரங்களையோ? அன்று ; பானத்தையே நாடுவன். அவ்விதமே இவ்வுலகில் முச்சததுருக்களாலும் எப்பக்கமும் தாக்கப்பட்டு, ஆன்மாவைப்பற்றி

யனவும் சரீரத்தைப்பற்றியனவுமான பலவித போராட்டங்களால் நெருக்குண்டு அறிவிழந்து அந்தரப்படும் மனுக்குலத்திற்குக் கடவுளைப்பற்றிய அறிவும் சாஸ்திரமுமன்று; கடவுளே தேவை. திடதிரவ பதார்த்தங்களைக் கூறுபாடுகள் செய்து அவற்றின் தன்மைகளை முறையே தெளிவுறுத்த வல்ல ஒரு தேர்ந்த ஆசிரியனையும் எட்டாண்டுப் பிராயமுடைய ஒரு சிறுவனையும் தமக்கெதிரே நிறுத்திப் பாலின விசேஷத் தன்மையை ஓரே வார்த்தையில் அடக்கிக்கூறும்படி ஒரு பாடசாலை பரீட்சாதிகாரி கேட்டார். அப்போது பாலைப் பற்றித் தனக்குள்ள மிக விரிந்த அறிவை ஓரே பதத்தில் எவ்வாறு காட்டுவதென சாஸ்திரவல்லான சற்றுச்சிந்தனையிலாழ்ந்திருக்குங்கால், அவனருகில் நின்ற குழந்தை தாமதமின்றி ‘இனிப்பாயிருக்கும’ என்று விடையிறுத்தது. வேத சாஸ்திரிகளும வைதிக ஞானம் நிறைந்தோருமான ஞானிகள் என்னப்பட்டோர் பலர் கடவுளைப் பற்றியும் ஜீவர்களைப் பற்றியும் மிகவாய்ப் பேசி நூல் வரைகின்றனர். ஆயினும் அன்னோரிற் சிலரை ‘இறைவன் நும் ஜீவியத்தில் காண்பித்த காட்சிப் பயன் யாதென வினவின், அதைப் பற்றி யொன்றுங் கூற முடியாதென்கின்றனர். தமமைக் கற்றறிந்தோராய்க் கழறிக்கொண்டு திரியும் பெரியாரை யணுகி உண்மை யறியும் உயரிய நோக்கத்துடனே சில வினாக்களைக் கேட்குங்கால், அன்னார் வெகுண்டு ‘பக்குவமடைந்தார்க்கன்றி இவ்வுயர்ந்த சித்தாந்தம் புலனாகா’ தென்றும், இன்னும் பலவாறான வீண் விடையிறுத்தும் விடுகின்றனர். வேதம் வாக்களிப்பது போல் “ என்னைக்கேள்....நான் உனக்குப் போதித்து நீ நடக்கவேண்டிய வழியில் உன்னை நடத்துவேன்....உன் மேல் என் கண்ணை வைத்து உனக்கு ஆலோசனை சொல்லுவேன்....உனக்குப் பிரயோசனமான யாவற்றையும் போதித்து நீ அறியாத பெரிய காரியங்களை உனக்குக் காண்பிப்பேன் ” என்று நம் வேதங்களும் போதங்களுமாவது தம்மைக் கிட்டியவரைப் பல ஞானப் பொருளில பிரகாசிப்பிக்க வேண்டும; இன்றேல அதிற் றேறிய ஞானியோர் என்னப்பட்டாராவது வேத போதகத்தின் பல பொருளைப் பற்றித் தம்மை வினவுவார்க்குத் தக்க விடையிறுத்து ஆன்ம தாகத்தைத் தீர்த்தல் வேண்டும். அவ்வாறின்றி வேதத்தாலும, அதனை யோதும் பெரியாராலும் தாம போதிக்கப் பெறுதிருப்பதோடு, தாமே சென்று போதனையையடைய ஆவல்கொண்டகாலத்திலும் அதனைப் போதிப்பாராலும் எள்ளி நகையாடப்பட்டுப் பலவித வசைச் சொற்களைச் செவியுறுவதென்றால், நம இளைஞரும நாகரிகத்தில்தேர்ந்தோரும, நம கோயிலையும கோயிற் பணியையும் குருக்களையும் ஞானியோரையும் இகழ்ந்து நகையாடுவது ஓர் ஆச்சர்யமன்றே. கடவுள், ஜீவன், ஆன்மா, மோட்சம், நரகம, தீமைமுதலிய நித்தியப்பொருளை யறியவேண்டின் நாம் கொண்டொழுகும வேதங்களை யன்றிப் பிற வேதங்களையும், ஆராய்தல் தம் பெருங்கடனென அறிவுடையார் உணர்தலே யன்றித் தம்மையடைந்து ஞானமபெறவிரும்பும இளைஞரையும் அத்தகைய பல வேத ஆராய்ச்சித் துறையில் புகுத்தலன்றோ உத்தமமாய்-உண்மையான கடவுளுக்கு முன் பிரியமுமாய்க் காணப்படும்.

பதினொன்காவதாக :—உருவும், திருவும், ஆற்றலும், அறிவும நிறைந்து விளங்கும் நம் பாலர் இவ்வுலகிற் காணப்படும் பலதிறப்பட்ட இயற்கை வனப்பினையும, அதனை ஆக்கியோனாகிய இறைவனது மாட்சியையும் கண்டு ருசித்துக் களிய முன்னமே, அவரது புத்தி, சித்தம், அரிய செயலை மந்தப்படுத்தித் தடைசெய்யக் கூடிய யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை யென்னப்படும் கொள்கைகளை அன்னோருக்குமுன் போடுவதாலும், அகவாலயம புறவாலயமாகிய ஆலயங்களைப் பற்றிய சிறந்த நோக்கம் நம் சிறுவர்க்கில்லாது போகின்றது

என்னலாம். என்னை? "அரிதரிது மானிடராதலரிது" என்று இம்மானிடப் பிறவியை நம பெரியார் எத்துணையாய்ச் சிறப்பித்திருக்கின்றதை நம் இளைஞர் பார்க்கின்றனா; மனுக்குலத்தின் அருவ செயலின் சரித்திரதத்தை அவர் படிக்கின்றனர்; யாக்கை, செல்வம், இளமை முதலியவற்றால் உலகிலுண்டாகும் பல நற பயன்களையும் புகழ்ச்சிக்குரிய செயலையும தாமே நேரிற கண்டுணர்கின்றனர்; அனறியும் இந்நிலைமைகளைப் பறறி வெகுவாய்ப் போதிக்கும பலரும இவ்வுடலையும் இளமையெழிலையும பாதுகாககும் பொருட்டு எததனையோ திறப பட்ட முயற்சி யெடுககின்றதையும், "திரைகடலோடியும திரவியந் தேடு" எனற மூதுரையைக் கடைப்பிடிபபோர் போன்று செல்வத்தை ஈட்டும எத்தனையோ துறைகளைக் கண்டு அதிற் செல்லுகின்றதையும, நம் குழநதைகள் காண்கின்றன. இன்னோர் பலவித நிலையாமைப் பறறிக் கேட்கும்போது சிலர் அதை எளளி நகையாடுவதிலும், வேறுசிலர் இதனால் தாக்கப் பட்டுத தம் முயற்சியால் 'இவ்வுலகில் பயனின்று' எனக்கூறிக் காரியம் செய்தலை விடுததுத தூங்கி விழுதலும் ஓர் அதிசயமா! இவ்வாறு அவர்கள் செய்யாதிருக்க நாம் விருமபின், மானிடப் பிறப்பின் பெருமையையும், உலகமாதா அதற்கீயும பல செல்வங்களின் உயர்வையும் உண்மையிற் கண்டு உயர்ந்த பயனடையும வழிகளைக காட்டல் அறிவுடையோர் கடனாகும்.

உடலையும உயிரையும் உலகளிக்கும் அகில பொருளையும எவ்வாறு வளர்ப்ப தென்று நன்கறியும மேனாட்டார் அவைத தம் சாதனையாலும போதனையாலும் தம் இளைஞருக்குணர்த்தி வருவதாற்றானே அன்னோர் பறபல அரிய சாஸ்திரங்களிலும், செல்வத்திலும் பெருகி, நம்மிலும நாகரிகத்திற பின்னிட்டுக்கிடந்த அன்னார் இப்போது பல்லாயிரமாக நம்மிலும் பெருக்கமடைந்து ஊர்ந்து, நடந்து, ஓடி, பறக்கின்றனர். நம்மக்களோ தமக்குள்ளதையும இழநது உரிமையிழந்து உயிரிழக்கும் நிலையிலும வநதிருக்கின்றனர். இதற்கெல்லாம் காரணம் நமமக்கள் தம உடலையும உயிரையும் பொருளையும உயாநத பயனுக்கு உட்படுததாவாறு பலவித இருண்டதும் உற்சாகமற்றதும் உயிர்க் கொல்லியுமான கொள்கைகளையும் வேதங்களையும் சாஸ்திரங்களையும்கவிகளுமகலைஞரும்அவர்களுக்குமுன் போட்டுத் தடை செய்திருத்தலே என்று கூறல மிகையாகாது. "நமது சாயலாகவும் நமது ரூபததின்படியேயும் மனுஷனை உண்டாக்குவோம; அவர்கள் சமுத்திரததது மசசங்களையும், ஆகாயத்துப பறவைகளையும், மிருகஜீவன்களையும, பூமியனைததையும், பூமியின்மேல்ஊரும் சகல பிராணிகளையும ஆளக்கடவர்கள" என்றும் "சகலததையும உன் பாதங்களுக்குக் கீழ்ப்படுத்துவேன்"என்றும், "ஒருவன் தேவனுடைய ஆலயத்தைக் கெடுததால் தேவன அவனைக் கெடுப்பான்;நீங்களே அந்த ஆலயம்" என்றும் இவ்வாறுகக் கிறிஸ்துவ சத்தியவேதங் கூறுதல் மானிடப் பிறவியை மிக உன்னதமானதாய் உயர்த்திப் பாடியிருககும நம் தமிழ்ப் பெரியார் கூற்றுகளுக்குச சார்பாகவே யிருக்கின்றது. இத்தகைய சததியங்களை ஒருவாறறிநத திருமூலநாயனுர் போன்ற பெரியாரும,

"உடம்பார் அழியின் உயிரார் அழிவார
திடம்பட மெஞ்ஞானம் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாய மறிநதே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த்தேனே"

எனக கூறிப் போநதனர். இவ்வுண்மையைநாமும் அறிநது இவ்வரிய உடம்பை நோயின்றி வளர்க்கும ஆட்சியையேயன்றி, அதை அசுததம, துர இச்சை, மோகம, காமவிகாரம் இவறறால் கறைபடாமல் காததுப் போற்றிப புகழுடம்பை நாட்டும போதனையையும் சாதனைகளையுமே விசேடமாக நம இளைஞர்க்கு முன் காட்டல் தேவை. அப்போது நிலையாமை யுடையனபோற் றோன்றும் அழகு,செல்வம்,அறிவு முதலிய இறைவன் அளித்த நல் ச...

அவருக்குப் பிரியமான துறையில் பெருக்கிப் பெரும பயனையாக்கித தம மைப் பேரின்பவெள்ளத்தில் திளைத்து நிற்கப் பாத்திரராகும் பெரியாராகி, "எல்லா நல்ல ஈவுகளுக்கும பூரணவரங களுக்கும இருப்பிடமாகியஜோதிகளின் பிதாவின் திருப்பார்வையில்" எல்லா வற்றையும் நிலைநத பொருளாகக்காட்டி இன்புற நம் இளைஞர் கற்றுககொளளுவர். நமஆலயம் அன்னோரால் சிறப் பிக்கப்படுமபோது கடவுளின் புறவால யததைப்பற்றிய உயரிய சிந்தையும நோக்கும் அவருககுப் புலனுகும. அப் போது ஆலயத்தையும் அதன் பணியை யும் சீர்திருத்த நம் சிறியோர் முன் வருவர்.

பின்னும் "ஆலயநதானும் அரனெனத் தொழுமே" என்ற நம் பெரியாரின் நற்போதனையைச் சிரமேற் கொண்டொழுகவேண்டின் ஒன்று கவனிக்க வேண்டும். அகில வுலகையும, அதிலடங்கிய ஆன்மக்குழுவையும பிரகாசிப் பிக்கும் நம்மிறைவனைவெளிச்சமாகவே ருபகம் செய்து,

"சோதியே சுடரே சூழொளி விளக்கே"

என்றும்,

"கண்ணின்றொளிருங் கருமணியினுள்ளொளி
லுள்ளின்றொளிரு மொளிவிளக்கு" [போ

என்றும்,

"பெருகிய கோடிகள் கிரட்பிரகாசமாய்
வருமொரு பெருஙகதிர் மதியப்போலவே
கருணை வீற்றிருநத செங்கமலக்கண்ணினன்"

என்றும் பலவாறுக நம் பக்தகுழாங்கள் பாடிக் களித்தனர். எம்பரிசுத்த வேதாகமாகிய கிறிஸ்தவரது பைபிளிலும் கடவுளை ஜோதியாகவே, துவக்க முதல் முடிவுவரை கூறியிருக்கின்றனர் பக்தர். "ஒருவரும் சேரக்கூடாத ஜோதியில் வாசமா யிருக்கிறவர்" "ஜோதிகளின் பிதா", "நீதியின் சூரியன்", "உலகத்தில் பிறந்த எந்த மனிதனையும் பிரகாசிப்பிக்கும் மெய்யான ஒளி இவரே" தேவன் ஒளி யாயிருக்கிறார், அவரில் எவ்வளவேனும் இருள் இல்லை;........நாம் அவரோடே ஐக்கியப்பட்டவர்கள்" என்று சொல்லியும இருளிலே நடக்கிறவர்களாயிருந் தால, சத்தியததின்படி நடவாமல் பொய் சொல்லுகிறவர்களா யிருப்போம. அவர் ஒளியிலிருக்கிறதுபோல நாமும ஒளியிலே நடநதால் ஒருவரோடொருவர் ஐக்கியப்பட் டிருப்போம். "நீஙகள எல்லாரும் வெளிசசத்தின் பிள்ளைகளாயிருக்கிறீர்கள்"—நாம் இராவுக்கும் இருளுக்கும் உள்ளானவர்கள் அல்லவே. ஆகையால் நாம் தூங்காமல் விழிததுக்கொண்டு, தெளிந்த புத்தியுள்ளவர்களா யிருநது விசுவாசம், அன்பு, நமபிக்கை முதலியவற்றையுடையவராகி "அந்தகாரத்தின்கிரியைகளைத் தள்ளிவிட்டு ஒளியின் ஆயுதங்களைத் தரித்துக்கொள்ளக் கடவோம" என்பனவும், இவைபோன்ற எண்ணிறந்த சத்தியவசனங்களும் இறைவனைச், சுததமயானந்த சோதி சொரூபனுகவே கண்டு காட்டியிருக்கின்றன. இவவாறுன திருச்சோதி உறைவிடமாகிய கோயில்களும் அச்சோதியின் தன்மையை அங்குக் கடவுளை வழுத்த வருவார்க்கு நினைப்பூட்ட வேண்டாமோ? அப்படியிருக்க நம கோயில்களும திருஸ்தலங்களும் பெரும்பாலும் எங்கணும இருள் நிறைந்து, சுவாசிகக நற்காற்றுப் புக இடனின்றித் துரிஞ்சலும் பிறவும் தங்கி அசுத்தம் செய்யக்கூடியவைகளாய் வைக்கப்பட்டிருக்கின்றன. இந் நிலையைக் கூடியமட்டும் ஒருவாறுமாற்றி அதில் வழிபாட்டின் பொருட்டுக் கூடுவோருக்கு மனதிற்கும் சரீரத்திற்கும் இளைப்பாறுதலையும் அமைதியையும தரததக்கதாய்ச செய்தல் அத்தியாவசியம்.

அன்றியும் ஆங்காங்கு நூற்றுக்கணக்காயினேர் ஏக காலத்திற் கூடும்படியான மேடைகளும், உபந்நியாசப் பீடங்களும் கோயிற்குள்ளாகவே யமைத்தல் நலம்.

# ஊழும் — முயற்சியும்

[திரு. மு. ரா. அருணாசலக் கவிராயர்]

இவ்வுலகத்தை ஆக்கியளித்தழிக்கும இறைவன் எல்லாப் பிராணிகளுடைய இதயத்தும் விளங்கிநின்று, அப்பிராணிகள் செய்தற்குரிய கர்மங்களெல்லாவற்றையும் முறையே செய்து வருமாறு அவைகளை நியமித்து வருகின்றானென்றும், அவ்விறைவன் நியமனமின்றியே பிராணிகள் எக்காரியத்தையும் செய்யு மாற்றலுடையன வல்லவென்றும், ஜீவான்மா தான் சுவதந்தரனாகாது, பரமான்மாவின் நியமனத்தாலேயே எல்லாக் காரியங்களையும் இயற்றுகின்றானென்றும் அநேகர் கருதுகின்றனர். அறிஞர்கள்கூட, தமக்குத் துக்கம் நேருங்காலத்தில் 'இப்பாழுந் தெய்வம் இவ்வாறு செய்து விட்டது; தெய்வத்துக்குக் கண்ணில்லை' என்றிவ்வாறாகக் கூறிவிடுகின்றனர். இங்ஙனம் தெய்வத்தாற் சகலகாரியங்களும் நடத்தப்படுகின்றன என்பதுண்மை யானால் இறைவன் நியமனப்படி நடந்துவரும் ஜீவனுக்கு சுகதுக்கங்கள் உண்டாதல் நியாயமாமா? மனிதனுக்கு சுவதந்திரமில்லையாயின் அவன் வருந்தி முயற்சி செய்வதாற் பயனென்? இவ்விஷயங்களைச் சிறிது ஈண்டு ஆராய்வோம்.

ஈசுவரன் ஒவ்வொரு பிராணியையும் தன் நியமனம் போலவே நடத்துகிறானென்றும், பிராணிகட்கு சுவதந்திரமாக ஒன்றுஞ் செய்யும் ஆற்றலில்லையென்றும் சொல்வதற்கு, "தேநவிநாத்ருணமபி நசலதி"—"அவனன்றியோரணுவுமசையாது" என்பது போன்ற சுருதிகளைப் பிரமாணமாகச் சொல்வர் சிலர்; பின்னுஞ் சிலர், இறைவன் ஆணைப்படியே பிராணிகள் எல்லாக் கன்மங்களையும் செய்கின்றனவாயினும் ஜீவனுக்குச் சிற்சில அற்ப விஷயங்களில் பகவான் சுவதந்திரமளித்திருக்கிறார் என்று கூறுவர். இவ்வாறு, பிராணிகள் நல்வினை தீவினைகளைச் செய்வதற்கு நியாமகன், தெய்வம் அல்லது ஈசுவரனே என்று நம்புவது பெருந்தவறான அபிப்பிராய மாகும். பகவான், ஒவ்வொரு பிராணியையும "இன்ன கல்வியை அப்பியசி; இன்ன வியாபாரத்தைச செய்; இன்ன ஸ்திரீயை மணம் புரிந்து இவ்விதம் அநுபவி; இன்னின்ன ஆகாரத்தை உண்; கொலைசெய், திருடு, அசத்தியஞ்செய்" என்றிவ்வாறு நியமித்து வர, அவ்வாறே உலககாரியங்கள் நிகழ்கின்றன எனபதாயின், ஈசுவரனை விடத் துக்கியாவா ரொருவனுமிரான். ஏனெனில், ஒவவொருநாளும் ஈசுவரன் அவ்வப்பிராணிகட்கு, அவை செய்ய வேண்டிய வேலைகளைத் தெரிந்தெடுத்து நியமிக்க வேண்டிய பெருமபாரம் அவனைப் பெரிதும் பொறுக்குமன்றோ.

அன்றியும், இறைவன் கட்டளைப்படியே நடப்பவன், செய்து போந்த காரியங்களா லுண்டாகும் சுகதுக்கம், புண்ணிய பாவம, சுவர்க்க நரகம் முதலியவை, நியமித்தவனை அடையுமேயன்றிப் பராதீனனாய்ப் பகவான் ஏவற்படி நடந்த ஜீவனைச் சாராவாம். இன்னும், மனிதன் அறிந்து அநுஷ்டிப்பதற்கன்றோ, சுருதி ஸ்மிருதி இதிகாச புராணாதி சாஸ்திரங்கள் ஏற்பட்டுள்ளன? மனிதனுக்குச் சுதந்திரமில்லையாயின், இந்த சாஸ்திரஙகளும் பயனற்றவைகளாம. ஏனெனில், சத்கருமங்களைச் செய்தவனுக்கு நற்பயனையும், துஷ்கருமங்களைச் செய்தவனுக்குத் தீப்பயனையும் சாஸ்திரங்கள் விதிப்பது வீணன்றோ? இனி, சிற்சில அற்பவிஷயங்களில் மட்டும் மனிதனுக்கு சுவதந்திர மேற்பட்டுளதென்பதுந் தவறானதே. ஏனெனில், 'இன்னின்ன காரியங்களில் மனிதன் சுவதந்திரன்; இன்னின்னவற்றைச் செய்ய பகவானே ஏவுகிறார்' என்று சாஸ்திரங்களில் யாதோர் நியமனமுஞ் செய்யப்பட்டதில்லை. இல்லையாகவே, எதனைக்கொள்

வது, எதனைத் தள்ளுவது என்று ஒன்றனுமறிதலின்றி மனிதன் காரியங்களைச் செய்தலுங் கூடாவாம்.

இவற்றால், மனிதன் ஸர்வசுவதந்திரமுள்ளவனென்றும், அவன் செய்யுங் காரியங்கள், நல்லது கெட்டதென்பவற்றைச் சாஸ்திரங்களைக் கொண்டு தன் புத்தியால் நிச்சயித்து அதன்படியே ஒழுகக்கடமைப் பட்டிருக்கிறனென்றும், அங்ஙனம் அறியாமல் தீவினைகளைச் செய்வதனா லுண்டாம் பயனை, அவனே அடைதற்குரியனென்றும், "ஸாக்ஷீசேதா கேவலோ நிர்கருணச்ச" என்னும் சுருதிவாக்கியப்படி, ஈசுவரன், யாதொரு விகாரமுமின்றி ஜீவர்களது செய்கையைப் பார்த்துக் கொண்டு சாக்ஷியாய் மட்டுமுள்ளானே யல்லது, அவனுக்கு வேறு சம்பந்தமொன்றும இல்லையென்றும் நாம்தெளிவாக ஊகித்தறியலாம். ஆகவே, ஈசுவரன் துக்கத்தைக் கொடுத்தான், சுகத்தை யளித்தான் என்பது முதலிய அபிப்பிராயங்கள் தவறானவையே. மனிதனுக்குச் சுகதுக்காதி யனுபவங்கள் தன்னுடைய பூர்வகர்மத்தின் பலனாகவுண்டாகின்றனவே யன்றி, இறைவன் அவ்வனுபவங்களை யளிக்கிறானென்பதில்லை. மனிதன் தன்னுடைய முயற்சியினாலேயே நற்கதியடைதற்குரியனென்பதே சாஸ்திரங்களின் நிச்சயம்.

"தனனிலைக்கட் டன்னை
நிறுப்பானுந் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு
வானு நிலையினும்
மேன்மே லுயர்த்து
நிறுப்பானுந் தன்னைத்
தலையாகச் செய்வானுந்
தான்." — (நாலடி)

இது விஷயம், மஹாபாரதம் ஆநுசாஸநிகபர்வம் ஆறும் அத்யாயத்தில், மிக அழகாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. பிரமதேவரைப் பார்த்து, அவர் புத்திரரான வசிஷ்ட மஹருஷி, "தெய்வம் சிறந்ததா? ஆள்வினை (முயற்சி) சிறந்ததா?" என்று வினவ, பிரமதேவர் அடியில் வருமாறு கூறுகிறார்: "விதையன்றி ஒன்றும் (மரம் செடி கொடி) உண்டாவதில்லை. விதையன்றி (தானியமுதலிய) பலனுமில்லை. விதையினாலேயே விதை யுண்டாகின்றது. உழுது பயிர்செய்வோன், பூமியில் எப்படி விதையை விதைக்கின்றானோ, (அந்த விதை) நல்லதோ கெட்டதோ அதற்குத்தக்க பலனை யடைகின்றான். விதை விதைக்கப் பெறாத பூமியானது எங்ஙனம் பலனையளியாதோ, அவ்வாறே தெய்வமானது (சஞ்சிதகர்மம்) *புருஷனுடைய பிரயத்தன மன்றிப் பலனைக் கொடாது. புருஷப்பிரயத்தனம் பூமியினுடைய ஸ்தானமாகவும, தெய்வம விதையினுடைய ஸ்தானமாகவும்சொல்லப் படுகிறது. பூமியினுடையவும் விதையினுடையவும் சேர்க்கையினாற் பயிர்கள் விருத்தியடைகின்றன. கருமத்தைச் செய்கிறவன் அக்கருமத்திற்குரிய முழுப்பயனையும் தானே அநுபவிக்கின்றான். உலகத்திற் செய்ததுஞ் செய்யாததுமாகிய (கரும) பலன் பிரத்தியக்ஷமாகக் காணப்படுகிறது (எங்ஙனமெனில்) சுபமான கர்மத்தால் சௌக்கியத்தையும் பாபகர்மத்தால் துக்கத்தையும அநுபவிக்கிறார்கள். எந்தக் கருமமானது செய்யப்பட்டதோ, அதன் பலன் எவ்விடத்திலும (லோகாந்தரங்களிலும்) உண்டாகிறது. செய்யப்படாதது சிறிதேனும் அநுபவிக்கப் படுகிறதில்லை. (நற்கருமம்) செய்தவன் பாக்யத்துடன கூடிய நிலையை எங்கும் அடைகின்றான். செய்யாதவனோ காரம் வைக்கப்பட்ட புண்போல எரிக்கப்படுகிறான்... ... ....தேவதைகள், நாகங்கள், யக்ஷர்கள், சந்திரன், சூரியன், வாயு, மற்றுமுள்ள ஒளிபொருந்திய நக்ஷத்திரகிரகாதிகள் — இவர்களெல்லாம், மனிதர்களாயிருந்து புருஷப் பிரயத்னத்தாலேயே தேவத்துவத்தையடைந்தார்கள்.......உலகத்தில் தெய்வத்தை

*"தெய்வம், ஊழ், பால், முறை, உண்மை, நியதி, விதி என்பன ஒரு பொருட் சொற்கள்."

எதிர்பார்த்து அலக்ஷியமாய் (ஒன்றுஞ் செய்யாமல்) இருக்கக் கூடாதன்றோ. எவன் மனிதன் செய்யவேண்டிய கர்மத்தைச் செய்யாமல், தெய்வத்தை எதிர்பார்க்கிறானோ, அவன் நபுமஸக னைக் கணவனுயடைந்த மனைவிபோல் வீணாக சிரமத்தையடைகிறான். சுவர்க்க லோகத்தில் அநநியனால் (அசுபரால) எப்படி பயமுண்டாகிறதோ அப்படி, மனுஷியலோகத்தில் அநநியனால் பயமுண்டாகிறதில்லை. (ஆனால்) சுபாசுப கருமங்கள் பயததுககுக் காரணமாகின்றன. செய்யப்படும புருஷப் பிரயத்தனமாகிற கருமமானது தெய்வத்தைப் பின்றொடர்கிறது.........கருமமில்லாமற்போனால் தெய்வம் எப்படியிருக்கும்? (என்றால், சஞ்சிதகருமத்துக்கு இருபபில்லை யென்பது கருத்து) எப்படித்தான் பலனைக்கொடுக்கும்? மனிதன் தனக்குத தானே பநது; தனக்குத்தானே சத்துரு; தபஸ், நியமம் இவற்றோடு கூடினவாகளாயும் கடின விரதமுள்ளவராயு மிருக்கிற முனிவர்கள் தெய்வபலத்தாலேயோ சாபத்தைக் கொடுக்கிறார்கள்? இலலை. ஆனால் தபஸ் முதலிய கருமபலத்தாறறான். உலகத்தில் எநத மனிதன் மிகவும் அரியவற்றை யெல்லாம் அடைநது பாவத்தை நீக்கிகொள்ளுகிறானோ அவனையும், லோபமோகங்களையுடைய மனிதனையும தெய்வம் ரக்ஷிப்பதில்லை. அக்கினியானது அற்பமாயிருநதாலும் காறறாலசைக்கப் பட்டால் எவ்வாறு விருத்தியடைகிறதோ, அதுபோல, சஞ்சிதகருமமாகிற தெயவமானது புருஷப் பிரயத்தனத்தோடு சேர்ந்து நன்றாய் விருத்தியடைகிறது. எண்ணெயில்லாது போனால், தீபமானது எவ்வாறு குன்றுமோ, அவ்வாறு மனிதன் முயற்சியில்லையாயின் கருமமானது குன்றும்........இவ்வுலகத்தில், தெய்வமானது, (கருமபலனை) வேறுவிதமான பலனையுடையதாக வேனும, விரோதமான பயனை அளிப்பதாக வேனும் செய்கிறதில்லை. தெய்வமானது, இந்த விஷயத்தில, பிரபுவாக ஆகிறது மில்லை.''

இவ்வாறே, மச்சபுராணம, உ௨-ம அதயாயதது "முந்திய ஜன்மங்களில் அடைநதிருநத தேகத்தினாலே சமபாதிக்கப்பட்ட தன்னுடைய கருமமே தெய்வமென்ற பெயருடையதென்றறி; ஆகையால் இவ்வுலகததில் புருஷப்பிரயத்தனமே மசிரேஷ்டமான தென்றறி.'' என்று கூறப்பட்டிருததலோடு, பகவத்கீதையிலும்,(அ௲. ரு. ச. ரு.) (ஒவ்வொருவனும் தன்னாலேயே தன்னைக் கரையேற்றிக் கொள்ள வேண்டியது. தன்னைக கெடுநதுக் கொள்ளலாகாது; (ஏனென்றால்) தனக்குத்தானே பந்து; தனக்குத் தானே சத்துரு'' என்று கூறப் பட்டிருக்கிறது.

இப்பிரமாணங்களால்,புருஷப்பிரயத்தனத்தாலே சம்பாதிக்கப்பட்ட கருமபலனானது தெய்வமென்கிற பெயராற் சொலலப் பட்டிருக்கின்றதே யன்றி, ஈசுவரன் அல்லனென்பது தெளிவாகின்றது. இவவாறே, அமரத்திலும சப்தஸ்தோமத்தும் சொல்லப்படுகின்றது. இனி, கருமங்களுக்குப் பலனையளிப்பவன் ஈசுவரனல்ல னென்றால் நியாமகன் என்று அவனை எவ்வாறு சொல்லக் கூடுமெனின், இறைவன் ஆணைக்கு அஞ்சியே சகலரும் தததந தொழிலைச் செய்கிறார்கள்; அவன் சாக்ஷிபூதனாக நிற்றல் மாததிரையே என்க. இதைவிஷயம், கடவல்லியுப நிஷத் (ரு. ௬.) தில் "இந்தப்பரமான்மாவுக்கு பயநது தான் அக்கினியும், சூரியனும் பிரகாசிக்கிறார்கள்; இந்திரனும வாயும் யமனும் தத்தம் தொழிலைச்செய்கின்றனர்'' என்று வருதல் காண்க.

இக்கருத்துக்களை உட்கொண்டே, தெய்வப் புலமைத திருவள்ளுவனார், தமது அருமைத்திருக்குறளில்,தெய்வமாகிய ஊழை யுணர்த்த ஓரதிகாரமும, முயற்சியின் வலியை யுணர்த்த ஊக்கமுடைமை, மடியின்மை, ஆள்வினையுடைமை,இடுக்கணழியாமை என நான்கு அருமையான அதிகாரங்களையும் அடுத்தடுத்து அமைத் தருளினர்.

இவற்றுள்:—ஊக்கமுடைமை யாவது, மனம் மெலிதலின்றி வினைசெய்தற்கட் கிளர்ச்சியுடைத்தாதல்; மடியின்மையாவது கருதியன செய்யுங்காற் சோம்புதலில்லாமை; ஆள்வினை யுடைமையாவது, சோம்பலில்லா விடத்தும் மென்மேலும் முயற்சியிருந்தாலன்றிக் காரியம் முடியாதாகையால், இடைவிடாமுயற்சி; இடுக்கணழியாமை யாவது, தொழிலில் முயல்பவன் தெய்வத்தானாக பொருளின்மையானாக மெய்வருத்தத்தானாக துன்பம் நேரிட்ட விடத்து மனங்கலங்காமை; இவ்வாறு முயற்சியை எதிர்மறை முகத்தாலும் உடன்பாட்டு முகத்தாலும் தெய்வப் புலவர் வற்புறுத்தியதை நோக்குமிடத்து ஊழினும் அதன் வலி பெரிதும் விளங்குகின்றதன்றோ. இக்கருத்து அடியில்வரும் திருக்குறள்களில் தெளிவாகவும் கூறப்படுகின்றது.

தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.

ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும். [வ

“ சேந்தமிழ் ”

# டி யே று

## கட்சிகள்

உரிமையில்லா நாட்டில் அரசியல் கட்சிகள் பல இருத்தல் கூடாதென்று நாம் பலமுறை எழுதியுள்ளோம். உரிமையில்லா நாட்டில் அரசியல் கட்சிகள் பல இருந்தால் என்னை? அக்கட்சிகள் உரிமை வேட்கைக்கே பல வகையிலும் இடர்செய்த வண்ணமாயிருக்கும். அவைகள் உட்கலகத்தையும் பிணக்கத்தையும் பெருக்கிக்கொண்டே போகும். இன்னோரன்ன பிற்போக்கு நிகழ்ச்சிகள் பலபடக் கூறலாம். ஆகவே உரிமையில்லா நாட்டில் பலதிற அரசியல் கட்சிகள் தோன்றாதவாறு தேசபக்தர்கள் காத்து வருதல் வேண்டும்.

நமது நாடு உரிமை யில்லாதது என்பது வெள்ளிடைமலை. உரிமையில்லா நாட்டின் இயல்புகள் பல நாளுக்குநாள் பெருகிக்கொண்டு வருதலுங் கண்கூடு. நாட்டில் பிற்போக்குக் கட்சிகளும், வகுப்புக் கட்சிகளும், உட்பிணக்குகளும், இன்ன பிறவும் தோன்றிய வண்ணமாயிருக்கின்றன. இவைகளால் நாட்டுக்கு நலன் விளையுங்கொல்?

மிண்டோ-மார்லி சீர்திருத்தம்வரை நாட்டில் பலதிற அரசியல் கட்சிகள் தோன்றாமலிருந்தன. இரண்டொரு கட்சிகளிருந்தாலும் அவைகள் ஆக்கம் பெறாமலே கிடந்தன. அவைகளின் பெயரால் தேர்தல் நடைபெற்றதில்லை. மிண்டோ-மார்லி சீர்திருத்தத்தில் இரட்டை ஆட்சிமுறையின்மையாலும், தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளுள் மந்திரி சபை அமைவதின்மையாலும் பலதிற அரசியல் கட்சிகள் தோன்றுதற்கு இடமில்லாதிருந்தது. பின்னே முளைத்த மாண்டேகு-செம்ஸ்பர்ட் சீர்திருத்தம் இரட்டையாட்சியைக் கோலினமையால், மந்திரிசபை அமைப்புக்குக் கட்சிகள் தேவையாயின. முழுஉரிமையுள்ள நாட்டில் கட்சிகளிருப்பதாலும், அக்கட்சிகளின் வாயிலாக மந்திரிசபை அமைவதாலும், தீமை விளையாது. உரிமை இல்லா நாட்டில் தோன்றும் அரசியல் கட்சிகள் உட்பிணக்கை வளர்த்து வருவதிலேயே தங்கள் காலத்தைக் கழித்துவரும். அப்பிணக்கிடை உரிமை வேட்கை எளிதில் எழுமோ?

நமது நாட்டில் அரசியல் கட்சிகளின் நிலைமை எவ்வாறிருக்கிறது? சொல்லவும் வேண்டுமோ? தேர்தல் ஒன்றே சுயராஜ்யப் போராட்டமாகக் கருதப்படுகிறது. அதில் விளையும் வெற்றி சுயராஜ்யப் பேறாகக் கொள்ளப்படுகிறது. உரிமையில்லா நாட்டில கட்சிகள் பேரால நடைபெறும தேர்தல்களை உரிமை வேட்கையைக் கொலலும் நச்சுபபேய்கள் என்று கூறலாமன்றோ? மாண்டேகு-செம்ஸ்பர்ட் சீர்திருத்தம நாட்டைக கட்சிப் பிணக்கில் வீழ்த்தி வருவதை விளக்கிக் கூறவேண்டுவதில்லை.

இனி வரப்போகுஞ் சீர்திருத்தம் நமது நாட்டு மக்களைப பல வழியிலும் பிரித்துப் பிரித்துவிடுமென்பதில் ஐயமில்லை. நாடோ சாதி மத வேற்றுமைகளால் பிரிவுண்டு கிடககிறது. இத்தகை நாட்டில் மேலுமமேலும் பிரிவுகளை உண்டாக்குஞ் சீர்திருத்தம் வரின் தேசத்தின் நிலை என்னும்? வரப்போகுஞ் சீர்திருத்தத்தைத் தடை செய்தல் இயலுமா? இயலாது. எத்தகைச் சீர்திருத்தம் கிடைப்பினும், அதனுடன் ஒத்துழைக்கக் 'கற்றவர்கள்' முனைந்து நிற்கிறார்கள். ஆகவே, சீர்திருத்த நிலைமையைப் பற்றி நாம் இப்பொழுது ஒன்றுங் கூற விரும்புகிறோமில்லை. வருஞ் சீர்திருத்தம எக்கண்ணுடன், எமமூக்குடன் வரினும் வருக. அதைப்பற்றிய சிந்தனை வேண்டுவதில்லை. அதனால, நாட்டில் உரிமை வேட்கை குறையாதவாறு பாதுகாக்கவேண்டுவது தேச பக்தர்கள் கடமை. இதற்கு என் செய்வது? இங்கே தேசிய மகாசபையாகிய காங்கரஸைக் கருத்திலிருத்தினால் வழி தானே பிறக்கும்.

பலதிறப் பிரிவுகளிடை - பிணக்குகளிடை-நாட்டின் நலன் கருதிக் காணப்பெற்றது தேசிய மகாசபையாகிய காங்கரஸ். அம்மகாசபை தன் கடனை ஒருவாறு ஆற்றிக் கொண்டே வருகிறது. இந்நாளில் இந்திய நாட்டில் தேசிய உணர்ச்சி எழும்பி உள்ளது எனில், அதற்குக் கால் கொண்ட பெருமை காங்கரஸினுடையது என்றே கூறுதல வேண்டும.

காங்கரஸ் தொடக்கத்தில் உத்தியோக வேட்டையில் தன் கருத்தைச் செலுத்தி வந்தது. அந்நோக்குடனே சிலர் காங்கரஸை நடாத்தி வந்தனர். பின்னே, பாலகங்காதரதிலகர், லாலா லஜபதிராய், விபினசந்திரபாலகர், அரவிந்தகோஷ், டாக்டர் பெஸண்ட் முதலியோர் முயற்சியால் காங்கரஸில தேசிய விதை அதாவது சுதந்திர தாக விதை விதைக்கப்பட்டது. அந்நாள் தொட்டுக் காங்கரஸ் நோக்கம் வேறு வழியில் திரும்பலாயிற்று. அத் திருப்பத்துக்குக் காரணராக நின்றவர் மகாத்மாகாந்தியே யாவர். ஏறக்குறைய பன்னிரண்டு ஆண்டாகக் காங்கரஸ் மகாத்மாகாந்தி வழியாகவே இயங்கி வருகிறது என்று கூறல் மிகையாகாது.

காந்தியடிகள் தலைமையில் காங்கரஸ் இருமுறை ஒத்துழையாப் போர் துவங்கிற்று. அப்போரில் நாடு பெரிதும விழிப்புக்கொண்டது என்பதில் ஐயமிலலை. காந்தியடிகளால் தொடங்கப் பெற்ற அபபோரால் வெற்றி விளைந்ததா தோல்வி விளைந்ததா என்று ஆராய்வது அறிவுடைமை யாகாது. வெற்றிக்கோ தோல்விக்கோ காந்தியடிகள பொறுப்பாளியல்லர். வெற்றி-தோல்வி கேள்வியை தேசத்தை நோக்கியே கேட்டல்வேண்டும். அக்கேள்வியைக் காந்தியடிகளை நோக்கிக் கேட்டல் கூடாது. அவர் என் செய்வார்! நேரிய முறையில் அவர் போரை நடாத்தினார். தேசம் அபபோருக்கு இன்னும் தன்னைப பண்படுத்திக் கொள்ளவில்லை. ஆகவே போரை நிறுத்தவேண்டிய கட்டப்பாடு காந்தியடிகளுக்கு அடிக்கடி ஏறபட்டு விடுகிறது.

"காந்தியடிகள் போரில் தோல்வியுற்றார்" என்று சிலர் கூறிய வண்ணமாயிருக்கிறார். "காந்தியடிகள் தோல்வியடையவில்லை; தேசம் தோல்வியடைந்தது" என்பதை உணர்ந்து நடந்தால் எதிர்காலத்துக்கு நலம் விளைதல்கூடும்

என்பதைச் சகோதரர்கள் உணர்ந்து நடப்பார்களாக.

ஒத்துழையாமைப் போர் என்றும் நிரந்தரமாக நடாத்தப் பெறும் இயல்புடையதன்று. அஃது ஒவ்வொரு போது நடாத்தப்பெறும் இயல்புடையது. அதனை நிரந்தரமாக நடாத்தப் புகுவது அறமன்று. அதனால் பலதிற இடர் விளையும்.

ஒத்துழையாப் போருக்கு இந்தியா இன்னுந் தன்னைப் பண்படுத்தி நிற்கவில்லை என்பதை இருமுறை நடைபெற்ற அப்போர் நன்கு விளக்கிவிட்டது. இந்நுட்பங் கண்டே மகாத்மா முதன்முறை கதர்த் தொண்டிலும், இரண்டாம் முறை தீண்டாமை விலக்குத் தொண்டிலும் தலைப்படலானார். போரில்லாக் காலத்தில் ஆக்கவேலையில் தலைப்பட்டுழைப்பதே அறிவுடைமை.

காந்தியடிகள் இப்பொழுது தீண்டாமை விலக்குத் தொண்டில் தமது கருத்தைச் செலுத்திவருகிறார். மற்றவர்கள் ஏன் உறங்குதல்வேண்டும்? அவர்கள் காங்கரஸைக் காலத்துக்கேற்ற முறையில் நடாத்த ஏன் முன் வரலாகாது?

இப்பொழுது ஒத்துழையாமையில் கருத்துச் செலுத்துவது அநாவசியம். காங்கரஸ் ஏற்றுள்ள ஒத்துழையாமையை விலக்க முயல்வது சிறப்பு. அம்முயற்சி காங்கரஸ் வாயிலாகவே நடைபெறுதல் வேண்டும். ஒத்துழையாப் போர் நிறுத்தப் பெற்றிருத்தலால், அகில இந்திய காங்கரஸ் கூட்டத்தைக் கூட்டுதற்கு எவ்வித தடையும் தற்போது இராதென்றே நம்புகிறோம்.

காங்கரஸ் வாயிலாகத் தற்காலத்துக்குரிய கடனாற்ற முற்படாது, ஆங்காங்கே சிற்சிலர், காங்கரஸ் பெயரால் 'ஜனநாயகக் கட்சி' என்றும், 'சுயராஜ்யக் கட்சி' என்றும் பல கட்சிகளைக் காண்பதிலும், அவைகளை வளர்க்க முயல்வதிலும், அவைகளை எதிர்ப்பவர்களோடு வாதம் புரிவதிலும் அரிய காலத்தைச் செலவழித்து வருவது குறித்து வருந்துகிறோம். இம்முயற்சிகளால் காங்கரஸுக்கு ஆபத்து நேர்ந்தாலும் நேரும்.

சிறு சிறு கட்சிகள் ஆங்காங்கே தோன்றித் தோன்றி இயங்கின், காங்கரஸ் நிலை என்னாகும்? ஆகவே, காங்கரஸ் தலைவர்கள், அகில இந்திய காங்கரஸ் கூட்டத்தைக் கூட்டி, ஒத்துழையாமையை விலக்கிக், காலத்துக்குரிய திட்டங்கோலித் தேச சேவை செய்ய முற்படுவார்களாக.

வரப்போகுஞ் சீர்திருத்த முறைப்படி அமைவுறும் சட்டசபையில் காங்கரஸ்காரர் நுழைதல்வேண்டுமா வேண்டாமா என்பதைப்பற்றிப் பலதிறக் கருத்துக்கள் வெளிவந்துகொண்டிருக்கின்றன. இதற்கு முந்திய அநுபவத்தைச் சீர்தூக்கிப் பார்த்து ஒருவித முடிவிற்கு வருதல்வேண்டும். முதன்முறை எழுந்த ஒத்துழையாமையிலும், இரண்டாம்முறை எழுந்த ஒத்துழையாமையிலும் சட்டசபை விலக்குச்செய்யப்பட்டது. அவ்விலக்குக்குப்பிற்போக்காளர் மதிப்புத் தரவேயில்லை. தக்க சமயம் வாய்த்ததென்று பிற்போக்காளர்கள் சட்டசபைகளைப் பற்றி வெறுக்கத்தக்க சட்டங்கள் செய்யப்படுவதற்குத் துணை நின்றார்கள். பிற்போக்காளர்கள் வயத்தில் சட்டசபை முதலிய அமைப்புகள் சிக்கிக்கொள்வதால் நாட்டுக்கு நலன் விளைவதில்லை. நலன் விளையாதொழியினும் தீமையாதல் விளையாதிருக்கிறதா? பெரிதும் தீமையே விளைகிறது. ஆதலால் உரிமைப் போராட்டத்தில் ஈடுபடுவோர், சட்டசபை முதலிய அமைப்புகள் பிற்போக்காளர் வயப்படாதவாறும் காத்துவரக் கடமைப்பட்டிருக்கிறார். இதற்குத் தேசிய மகா சபையாகிய காங்கரஸ் மாறுபட்டு நிற்றல் கூடாது.

காங்கரஸிலுள்ள சிலருக்குச் சட்டசபை பிடியாதிருக்கலாம். அவர்கள் ஆக்க வேலையில் தலைப்பட்டுத் தொண்டு செய்து வரலாம். மற்றவர்கள், பிற்போக்குக் கட்சிகளுக்குச் சட்டசபை இரையாகாதவாறு காத்து வரலாம். சட்டசபை, பிற்போக்குக் கட்சிகளுக்கு

இரையாகாதவாறு காப்பதும் தேசத் தொண்டின் பாற்பட்டதே யாகும். காங்கரஸ் இததுறை நண்ணுது வாளா கிடக்குமாயின், நாட்டில மூலைக்கு மூலை சிறு சிறு கட்சிகள் பெருகித தேசபக தியையே குலைததுவிடும. நாளடைவில காங்கரஸின் மதிப்புங் குலைவுறும்.

காஙகரஸ்காரர்களிற் சிலர் சட்ட சபை வேட்கை கொண்டு, ஆங்காங்கே தனித்தனிக் கட்சி கண்டு வருகிறுர். இது தவறு. காஙகரஸ் பெயரைக் கொண்டோ கொள்ளாமலோ காங்கரஸ் வாதிகளிற் சிலர் தனிக்கடசிகள கண்டு வருகிறுர். இது, காங்கரஸுக்குள் பிள வை உண்டுபண்ணுவதாகும். ஆகவே, காஙகரஸ கட்டளை கொண்டே சட்ட சபை முதலிய அமைபபுகளைப் பறற முயல்வதே சிறப்பு.

ஒத்துழையா இயக்கம உறங்கியுள்ள இந்நாளில், காங்கரஸ் சட்டசபை நுழை வுக்கு இடநதருமென்பதில் ஐயமில்லை. வேண்டற்பாலது முயற்சியே. காங்க ரஸ் தலைவர்களிற் சிலர் பத்திரிகை களுக்கு அறிக்கைகள விடுவதிலும், வாதங்களை எழுப்புவதிலும் கண்ணுங் கருத்துமாக இருந்து வருகிறுர். இவ் வுழைப்பை, அகில இநதிய காங்கர ஸைக் கூட்டுவதிலும, காலத்துக்கேற்ற திட்டங் கோலுவதிலும ஏன திருபப லாகாது?

உரிமையில்லா நாட்டில், உரிமைக் காகப் பாடுபடும ஒரு தேசிய மகாசபை, நாட்டில் பல கட்சிகள் தோன்றுதற் கும், அவைகளின் ஆக்கத்துக்கும் இடந் தருவரின், உரிமைவேட்கையே பட்டொழியும் நிலை ஏற்படலாம். காங் கரஸால் பிற்போக்குக் கட்சிகளின் தோற்றத்தையும், அவைகளின் ஆக் கத்தையும் எப்படித தடுத்தல் கூடும் என்று சிலர் கருதலாம்.

பிற்போக்குக் கட்சிகள் தோன்றுவ தன் நோக்கம் சட்டசபை முதலிய அமைப்புக்களைப் பற்றுதற்கென்பதை விரித்துக் கூறவேண்டுவதில்லை. அவர் கள் பற்ற விரும்பும சட்டசபை முத காங்கரஸ்காரர் பற்றிக் கொண்டால் பிற்போக்குக் கட்சிகளின் நிலை என்னுகும்? அவை தாமே மாண்டு போகும். உரிமை இல்லா நாட்டில் எழும் பிறபோக்குக் கட்சிகளை ஒடுக்கு தற்கு இஃதொரு சிறநத வழியாகும.

காஙகரஸ் உரிமைக்கு உழைபப துடன், பிற்போககுக் கட்சிகளின் ஆக கத்தையுஞ் சிதைதது வருதல் வேண் டும.

## ஐரோப்பா நிலை

ஐரோப்பிய நாகரிகத்தையே 'நாக ரிகம' என்று தற்போதைய உலகம் கரு திக்கொண்டிருக்கிறது. செல்வாக்குள்ள தேசங்களைப் பலவழியில் செல்வாக் கில்லாத தேசங்கள் பின்பற்றி நடப் பது இயல்பு. செல்வாக்கில்லாத தேசங் கள் தங்களுக்கென ஒன்றை நினைக் கப் போதிய நிலைமை பெறுமையால், அவைகள் செல்வாக்குள்ள தேசங்கள் வழி உழன்று விடுகின்றன.

ஐரோப்பா 'குடியாட்சி' என்றுல், எங்கும் 'குடியாட்சி'ப் பேச்சு! ஐரோப்பா 'ஜன நாயகம்' என்றுல், எஙகும் 'ஜனநாயக'ப் பேச்சு! ஐரோ பபா "கோனுட்சி" என்றுல், எங கும் கோனுட்சிப் பேச்சு—இவ்வாறு ரோப்பா வழி உலகம் இயங்கி வரு கிறது; இதில் இந்தியா பேர்பெற்றது என்று கூறல் மிகையாகாது.

ஐரோப்பிய நாகரிக முதிர்சசி ருஷ்யா வில் திரண்டு உருண்டு புரட்சியாகிப் பொதுவுடைமை ஆட்சியை நிறுவியது. அவ்வாட்சி ஆங்கே உருக்கொண்ட நாள் முதல், பல விடங்களில் பொது உடைமைப் பேச்சு எழலாயிற்று. இப் பொழுது ருஷ்யா எநநிலையிலிருக் கிறது? அது லெனின் கோலிய முறை களிற சிலவற்றினின்றும் பிறழ்ந்து வரும் நிலையிலிருக்கிறது.

ருஷ்யாவில் தற்போதுள்ள ஆட்சி, லெனினுக்கு வலது கையாயிருநத டிராட்ஸ்கியை நாடு கடத்தவும், அமெ ரிக்கா முதலிய கொழுத்த முதாலிளி தேசங்களுடன் தனது கொள்கைக்கு

மாறுபட்ட முறையில் உடன்படிக்கை செய்து கொள்ளவும் துணை செய்து வரும் நிலைமையைப் பெற்றிருக்கிறது. இன்னுஞ் சில நாளில லெனின் பெயரால் என்னென்ன நடக்குமோ தெரியவில்லை.

இப்பொழுது ஐரோப்பாவில் "ஹிட்லர்" இடி, இடித்துக்கொண்டிருக்கிறது. தொடக்கத்தில ஹிட்லர் பலவிடங்களில் வெறுக்கப்பட்டார். இப்பொழுது அவ் வெறுப்புத் தணிந்து வருகிறது. இனி ஹிட்லர் போற்றப்படுவரோ என்னவோ தெரியவில்லை. இப்பொழுது ஐரோப்பிய நாகரிகக் கயிற்றின் ஒரு முனையை ருஷ்யா ஈர்க்கிறது; மற்றொரு முனையை ஜொமனி ஈர்க்கிறது. எதை எது ஈர்த்துத்தள்ளும் என்பது பின்னே தெரியும்.

ஐரோப்பாவில் பெரும்போர் மீண்டும் நிகழும் என்று சிலர் குறி சொல்கிறார். அக்குறி மெய்யானால், உலகம் பலதிற இடுக்கணுக்குள்ளாகிப் பின்னே தெளிவு பெற்று நன்னிலை எய்தும். உலகம் பல வழியிலும் இடருறும் நிலையை உண்டுபண்ணியது ஐரோப்பா நாகரிகமேயாகும். ஐரோப்பா நாகரிகம் முதலாளி தொழிலாளி போராட்டத்தைத் தோற்றுவித்த நாள்தொட்டு மன்பதையில் பிணக்குகள் நிரம்பலாயின. அப்போராட்டம் ஒழிந்தாலன்றி உலகுக்கு உய்வில்லை.

ஒருபால் பொருள் பெருகும் நிலையையும், மற்றொருபால் பொருள் அருகும் நிலையையும் உண்டுபண்ணிக்கொண்டிருக்கும் நாகரிகம், எத்தகைச் சிறப்புடையதாயினும், அது "நாகரிகம்" என்னும் பொருளுடையதாகாது. மக்களெல்லாரும் வயிறார உண்டு, அமைதியில் நின்று, இயற்கை அன்னையுடன் உறவுகொண்டு வாழ்ந்து, சகோதர நேயத்தை வளர்த்து, இன்புறுவதே சிறந்த நாகரிகமாகும். ஐரோப்பாவின் தற்கால நாகரிகத்தில் இவ்வின்பம் உண்டா என்பது கவனிக்கத்தக்கது.

கண்மூடிக் கொண்டு எல்லாவற்றிற்கும் ஐரோப்பா ஐரோப்பா என்று விழுவது அறிவுடைமையாகாது. எதையும் பகுத்தறிவால் சீர்தூக்கிப்பார்த்துத் தள்ளல் கொள்ளலில் தலைப்படுவது சிறப்பளிக்கும்.

ஐரோப்பா, இயற்கை அன்னையை மறந்து நீண்ட காலமாகிவிட்டது. முதலாளி தொழிலாளி போருக்கு அம்மறப்பே சிறந்த காரணமாகும். இயற்கையின் போக்கையும் நுட்பத்தையும் உணருமிடத்தில் போராட்டம் ஏது?

ஐரோப்பா எளிதில் நல்லுணர்வு பெறுதல் அரிது. அது பலதிறப் போராட்டங்களுக்கு இரையாகிய பின்னரே நல்லுணர்வு பெறும். போராட்டத்துக்கே ஆங்குள்ள அரசியல்வாதிகள் முயன்று வருகிறார்கள். ஒரு தேசத்தை மற்றொரு தேசம் நம்புவதில்லை. தேசத்துக்குத் தேசம் செய்து கொள்ளும் உடன்படிக்கைகள் போலியாகவே முடிகின்றன. உள்ளொன்று வைத்துப் புறமொன்று கொண்டு பேசும் பேச்சுக்களும், நிகழ்த்தும் செயல்களும் பொருளற்றுப் பொன்றுதல் இயல்பு.

இயற்கை நெறியினின்றும் வழுக்கி வீழ்ந்துள்ள ஐரோப்பாவை எல்லாவற்றிற்கும் எடுத்துக்காட்டாகக் கொண்டு மற்ற நாடுகளும் செயற்கை இருளில் வீழ்ந்து வருகின்றன. ஒன்றைக் கொள்ளுமுன்-ஒன்றைத் தள்ளுமுன் - பகுத்தறிவைப் பயன் படுத்துவது சிறப்பு என்பதை மீண்டும் வலியுறுத்துகிறோம்.

## காந்தியடிகள் வருகை

காந்தியடிகளின் தென்னாட்டு வருகையைப்பற்றிப் பத்திரிகைகள் அறிக்கை செய்துவருகின்றன. வரவேற்புமுயற்சிகளும் ஆங்காங்கே நடைபெற்று வருகின்றன. காந்தியடிகள் எத்தனையோ முறை தென்னாடு நோக்கியுள்ளார். ஒவ்வொரு முறை ஒவ்வொரு காரணம் பற்றி அடிகள் போந்தமையை விரித்துக் கூறவேண்டுவதில்லை. இம்முறை, அடிகள் எந்நோக்குடன் போதரு

கிறுரென்பது நேயர்கட்குத் தெரியும். அநநோக்கம் விழுப்பமுடைய தென்ப தில் சிறிதும் ஐயமில்லை.

பல நூறு நூறு ஆண்டுகளாக ஒடுக் கப்பட்டுள்ள சகோதரர்கள் நலங்கருதிக் காந்தியடிகள் நீண்டகாலமாகத் தொண் டாற்றி வருகிறுர். அத்தொண்டு பெரி தும பொதுப்படவே ஆற்றப்படடு வந தது. இம்முறை அடிகள் அத்தொண் டின்மீது சிறப்பாகக் கவனஞ்செலுத்தி வருகிறுர். வேறு தொண்டுகளில் தலையிடாது தீண்டாமை விலக்குத் தொண் டொன்றில் மட்டும் அடிகள் கவலை செலுத்தி வருதலால் நலன் விளை தல்கூடும். இதற்குச் சாதிஇந்துக்களின் துணை பெரிதும் வேண்டற்பாலது. அவர்கள் துணை செய்யா தொழியினும் தீங்கு செய்யாமலிருந்தால போதும.

ஜாதிப்பித்தில் மூழ்கிக் கிடக்கும் சில ருக்கு இப்போது வெறி ஏறிவருகிறது. அவ்வெறியால் அவர்கள் மனம்போன வாறு பேசுகிறுர்கள்; எழுதுகிறுர்கள். தீண்டாமை இந்து மதத்தில் இருத்தல் வேண்டுமென்று அவர்கள் கச்சை கட் டிப் போரிடுகிறுர்கள். இஃது அறமா? அன்பா?

தீண்டாமையைவிரும்பும்ஒருநெறி கட வுள்நெறியா என்பது கேளவி. கடவுளி லும் தீண்டுங்கடவுள்-தீண்டாக் கடவுள் என இருகடவுளர் உண்டோ என்பதை ஜாதிநேயர்கள் கவனிப்பார்களாக. எவர் எக்கட்டுக் கட்டினும், எத்தடை கிளத தினும் இனிவரும் உலகம் தீண்டாமை யைப் போற்றுதென்பது உறுதி. தீண் டாமை உள்ளவரை இந்துமதம் ஆக்கம் பெருதென்பதும் ஒருதலை. வைதி கர்கள் பிடிவாதத்தை விடுத்துக் காந்தியடிகளுடன் கலந்து, தீண்டா மையை ஒழித்து, ஜாதிமதங் கடந்து நின்ற முனிவரர்களால் வளர்க்கப் பெற்ற அருள்நெறியை ஓம்ப முன் வருவார்களாக.

காந்தியடிகளின் தென்னுட்டு விஜயத் தால் நலன் விளைவதாக.

## தமிழ் வகுப்பு

தமிழ் மொழியை ஓம்புதற்கு இந் நாளில் ஆஙகாங்கே சிறு சிறு முயறசி கள் செய்யப்பட்டு வருகின்றன. அம் முயற்சிகளிற் சில போற்றற்குரியன. 'தாய் மொழியை வளர்ப்பதில் தமிழர் கள், ஊக்கஞ் செலுத்துவதில்லை' என் னும பழி தமிழர்களுக்குண்டு. அப்பழி யைப் போககத் தமிழர்கள் பாடுபடுதல் வேண்டும்.

பண்டை நாளில சேரன் அவை யிலும், பாண்டியன் சஙகததிலும, சோழன் கழகத்திலும் அரசு வீற் றிருநத நந்தமிழன்னை, இப்போது எங்கே யிருககிறுள்? எந்நிலையிலிருக் கிறுள்? தமிழன்னையைப் பழைய நிலைக குக் கொண்டுவரச் செய்யத்தக்க முயற்சிகள் பலதிறத்தன. அவை களுள் ஒன்று-சிறநத ஒன்று - ஆங் காங்கே தமிழ் வகுப்பு வைத்து நடாத் துவதாகும.

சென்னையில் ஸ்ரீமான் சேஷா சல ஐயரவர்கள் தமிழ்க் காதல் ஒன்றே கொண்டு, தமிழ் வகுப்புக்கள் நடாததிக், தமிழ்த் தாய்க்கு விழுத தொண்டு செய்து வருவதை ஈண்டுக் கழிபேருவகையுடன் குறிக்கிறேம். ஸ்ரீமான் ஐயரவர்கள் தொண்டால் ஏழைமக்கள சிலர் பெரும் புலவ ராகித் தமிழன்னைக்குச் சேவைசெய்து அவள்தன் ஆசி பெற்று வரு கிறுர். இப்பொழுது நண்பர் தெ. பொ. மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் தமிழ்காதலால், தமிழ் வகுப்புநடாத்த முன் வநதிருப்பதை மகிழ்ச்சியுடன் தமிழ் மக்களுக்குத்தெரிவித்துக் கொள் கிறேம.

சென்னை இராயப் பேட்டையிலும், சிந்தாதிரிப்பேட்டையிலும் திரு. மீனு ட்சிசுநதரமபிள்ளை அவர்கள் தொடங்கி யுள்ள தமிழ் வகுப்புக்களுக்கு முறை யே திறப்பு விழா நிகழ்த்திய டாக் டர் சாமிநாத ஐயரவர்களும, மறை மலையடிகளும் தமிழ் வகுப்பின் அவ சியததையும், அதனுல் விளையும் நலன்

களையும் மிகத் தெளிவாக விளக்கிக் காட்டினார்கள். பல்கலைக் கழகங்களாலும், மகாநாடுகளாலும் விளையும நலன்களைப் பார்க்கிலும், இவ்வகுப்புக்களால் பெரும் பெரும் நலன்கள் விளையும் என்று அறுதியிட்டுக் கூறலாம்.

இப் பெருந் தொண்டில் தலைப்பட்டுள்ள ஸ்ரீமான்கள் சேஷாசலஐயருக்கும், மீனாட்சிசுந்தரம் பிள்ளைக்கும் நமது வாழ்த்து உரியதாக. தமிழ்நாட்டின் நாலுபக்கங்களிலும் இத்தகை வகுப்புக்களை நடாத்த ஆங்காங்குள்ள தமிழ் நேயர்கள் உறுதியும் ஊக்கமுங் கொண்டு உழைப்பார்களாக.

## பரணர்

"பரணர்" என்னும் பெயரிய நூல் வரப் பெற்றோம். இந்நூல், சென்னைப் பல்கலைக் கழகத்துத் தமிழ் ஆராய்ச்சிக் கிளையின் சார்பில், வித்துவான் - வே. வேங்கட ராஜுலு ரெட்டியார் அவர்களால் யாக்கப் பெற்றது. பரணரைப் பற்றிய பல நுட்பங்களும், உண்மைகளும், வரலாறுகளும், பிறவும் இந்நூற்கண் செறிந்து கிடக்கின்றன. ஆராய்ச்சிக்குக் கருவிகளாகக் கொள்ளப்பட்டுள்ள சான்றுகள், பொருந்திய முறையில் அமைந்திருக்கின்றன. பலவேறு நூல்களில் பலவாறு சொல்லப்பெற்ற ஒருவரை, ஒழுங்குபட ஒருநூலில் நிறுத்திக் காட்டுதல் அருமை. அவ்வருமைப் பாட்டை இந்நூல் எளிமையதாக்கியிருத்தல் சாலவும் போற்றற் குரியது. பரணரைப் பற்றிய பலதிற ஐயங்கள் இந்நூற்கண் களையப் பட்டிருக்கின்றன. நன்முறையில் நூலையொழுங்குபடுத்தித் தமிழுலகிற்குத் தந்த ஆசிரியர் ரெட்டியார் அவர்களுக்குத் தமிழுலகம் பெரிதுங் கடமைப்படுதல் வேண்டும். திருவாளர் ரெட்டியார் அவர்களின் ஆராய்ச்சித் திறனும், மொழிப்புலமையும், பொருண் மணிகளை ஒழுங்கு செய்யும் ஆற்றலும் பாராட்டத் தக்கன. ரெட்டியார் அவர்களின் உரைநடை புலவர்க்கு விருந்தாகு மென்பதில் ஐயமில்லை. நூலின் இறுதியில் பரணர் பாட்டுக்கள் கோவை செய்யப் பட்டிருக்கின்றன. இவ்வாறு வேறு பல புலவர்களின் பாடல்களும் கோவை செய்யப்படின் தமிழுலகம் நலம் பெறும். இத்தொண்டில் ரெட்டியார் அவர்கள் ஈடுபட்டு உழைத்துள்ளார் என்பது இந்நூலின் முன்னுரையால் தெரிய வருகிறது. அவ்வுழைப்புக்கள் யாவும், விரைவில் நூல்வடிவங் கொள்ளச் சென்னைப் பல்கலைக் கழகத்தார் முயல்வார் என்று நம்புகிறோம். திருவாளர்-வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்கள் வாயிலாகத் தமிழுலகுக்கு நலன் செய்வித்த சென்னைப் பல்கலைக் கழகத்தார்க்கு நமது நன்றி உரியதாக. விலை ரூபா 2½; விலாசம: மதராஸ் யூனிவர்சிடி.

## திருக்குறள் நாட் குறிப்பு—1934

தென்னிந்திய நூற்பதிப்புக் கழகத்தார் வெளியிட்ட, திருக்குறள் நாட் குறிப்பு (1934) நன்முறையில் கோவை செய்யப் பட்டிருக்கிறது. இக்குறிப்பில் ஆங்கிலப் பஞ்சாங்கம், தமிழ்ப் பஞ்சாங்கம், விடுமுறை நாட்கள், திருநாட்கள் முதலியன அடங்கியிருக்கின்றன. ஒவ்வொரு பக்கத்திலும் திருக்குறளினின்றும் அகழ்ந்தெடுத்த ஒவ்வொரு மணி அணி செய்கிறது. ஒவ்வொரு குறளுக்கும் சுருங்கிய முறையில் கருத்துரை வரையப் பட்டிருக்கிறது. இத்திருக்குறள் நாட்குறிப்பு ஒவ்வொரு தமிழரிடத்திலும் இருத்தல் வேண்டுமென்று சொல்லத் தேவையில்லை. விலை அணா 5; கிடைக்கு மிடம்: தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம லிமிடெட், திருநெல்வேலி, சென்னை.

## ஜோன் வரலாறு

இஃதொரு மொழி பெயர்ப்பு நூல். இதை ஆங்கிலத்தினின்றும் தமிழில் மொழி பெயர்த்தவர் திருமதி - நீலாம்பிகை அம்மையார். இவ்வம்மையார் மறைமலையடிகளின் மகளார். இம்மகளார் தமிழ் மணங்கமழும் முறையில் உரைநடை எழுதும் ஆற்றல் வாய்ந்தவர்.

ஜோன் மாதரசியின் பிறப்பு, வளர்ப்பு, போர்த்திறன், தெய்வபக்தி முதலியன நூற்கண் விளங்க ஓதப்பெற்றிருக்கின்றன. இந்நூலைத தமிழுலகிற்குத்தந்த திருமதி - நீலாம்பிகையார்கு நமது நன்றி உரியதாக. விலை அணு 8; கிடைக்குமிடம்: தென்னிந்திய நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி; சென்னை.

## சுலோசனை

இந்நூலின் இரண்டாம பதிப்பு வரப பெற்றோம். இதனை வடமொழியினின்றும் தமிழில்மொழி பெயாத்தவா பண்டிதமணி மு. கதிரேசஞ் செட்டியாரவர்கள். இம் மொழிபெயர்ப்புத் தொண்டில் பண்டிதமணி பெருந திறமை வாய்ந்தவர் என்பது உலகறிநத தொன்று. நூலின் பொருளும, நடையும், பிறஅமைபபும் மகிழ்ச்சி யூட்டுகின்றன. விலை அணு 4 ; விலாசம் : சன்மார்க்க சபையார், மேலைச்சிவபுரி.

## குறுந்தொகை

குறுந்தொகை மூலம் நமது பார்வைக்கு வந்தது. இதனைப் பதிப்பித்தவர் வித்வான் சோ. அருணசல தேசிகரா வர். பதிப்பு நன்முறையில் அமைந்திருக்கிறது. இறுதியில் செய்யுள் முதற் குறிபபு, பாடினோர் பெயரட்டவணை, சொல்லகராதி முதலியன அடங்கப் பெற்றுளளன. விலை ரூபா ஒன்று. விலாசம்: வித்வான், சோ. அருணசல தேசிகர், புரசை, சென்னை.

## மாதர் மறுமணம்

இந்நூல் திருவாளர் மு. சின்னையா செட்டியாரவர்களால் எழுதப்பெற்றது. இதன்கண் மாதர் மறுமணம் வலியுறுத்தபபட்டிருக்கிறது. இது பெரிதும் நாட்டுகோட்டைச் செட்டிமார் சமூகத்திற்குப் பயனபடு முறையில் எழுதப்பட்டிருக்கிறது. விலை அணு 4; விலாசம்: மு. சின்னையா செட்டியாரவர்கள், மகிபாலன்பட்டி.

Registered No. M. 1500.

# நவசக்தி

‘ எவ்வுயிர்க்கும் அன்பாயிரு ’ ‘ என்கடன் பணிசெய்து கிடப்பதே ’

சிலம்பு ௧௪ ஸ்ரீமுக௵ மார்கழி௴ பரல் ௨

## சந்திரன்

[சோதிடப் புலவர் - திரு. எஸ். குருகுஹதாஸப்பிள்ளை அவர்கள்]



தண்கதிர் விரித்துத் தாரணியோர் நலந்தனைப்
பண்புடன் புரந்து பரப்பகல் விண்ணிடைக்
காணுந் தாரைகள் கணக்கில அவற்றுள்
[1]ஏணமார் தோற்றம் இயலுந் தன்மையைத்
தன்பாற் கொண்டு சாலவே மிளிரியும்
[2]என்பணி யத்தன் எழில்வாய் சென்னியிற்
பொற்புற விலங்கியும் புகழ்மணந் தாங்கியும்
நிற்கும் பான்மையை நேர்படக் கொண்டோய் !
நிலையிலாத் தோற்றம் நின்பாற் காணலால்
கலையயில் சான்றோர் களிப்புடன் நின்னை
[3]நீபமாம் வாயிலான் [4]“நிலா”வென் றனர்கொல்!
[5]வாபிகப் புட்கள் வாழ்வினை யோம்பி
நளிர்மிகு ஒளியை நாளு வகையால்
அளித்திடுங் கருணையை அகத்துட் கொண்டோய்!
[6]எஞ்சியும் நிறைந்தும் இருளிலும் ஒளியிலும்
விஞ்சுத லின்றி விரவிய காலப்
போக்குக் கொருதுணை புகட்டியே மாந்தரின்
ஆக்கம் வளர்த்திடும் அருளாம் உருவோய் !

---

**குறிப்பு** :—[1]ஏணம் - மான். [2]என்பணி அத்தன் - எலும்பைத் தாமமாகப் பூண்டுள்ள சிவன். [3]நீபம் - ஹேது. [4]நிலா என்றது நிலவு என்றதன மரூஉ. குலாவிய புருவமும் நிலா விரிகுழையும் எனறு அடிகள் திருக்கழுமல மும்மணிக்கோவையிற் கூறியது காண்க; [5]வாபிகப்புள் - சாதகப் பக்ஷி. [6]வரிகள் 15-18 - சாந்திரமானம் குறைந்துங் கூடியுமுள்ள கால அளவை யுடையதாயினும் சந்திரனது இருளுமொளியுங் கலைகளுக்குத் தக்கவாறே ஒரே தன்மை கொண்டவை ; மனிதரின் வாழ்நாட்களி லேற்படும் உயர்வுந் தாழ்வுஞ் சந்திரனது கோசார வசத்தின் காரணமென்க.

பலகலை தேர்ந்த பண்புடை யார்கள்
தொலைவிலா அநுபவத் தொகுதியின் பயனால்
நிற்குறு தேய்வையும் நிறைவையும் ஓர்ந்தும்
சொற்றிறம் மிகுத்துத் தொனிப்பான் வேண்டியும்
"கலை"யென் றுன்னைக் கழறினர் கொல்லோ!
தேம்படு அமுதம் திண்மையில் உன்பால்
ஆம்பொருள் என்றே அறிந்தது பற்றித்
திங்களென் றதனைத் "திங்களென்" றனர்கொல்!
[1]மதியில் மிகுத்த மாண்புடை மிக்கோர்
உதித்தே நின்பால் ஓங்கிடு மதுவை
மனதிற் கொண்டுனை மதுவென மொழிதலை
மனநிலை மாற "மதி"யென் றனர்கொல்!
வனமார் குமுத மலர்க்கோர் துணைவ!
[2]மாதவத் தோரையும் மாதவ மென்னும்
மேதையிற் சிறந்த விஞ்சையர் தம்மையும்
காமமாம் வலையிற் கட்டியே இழுத்துத்
தாமலஞ் செறிந்த தொலையாத் துன்பக்
கடல்தனில் ஆழ்த்திடும் கண்ணியர் தங்கள்
இடவிய நுதற்கோர் இணையாம் இங்கென
அடையால் நின்னை அறைந்தது பற்றியோ
காதலாம் அங்கியைக் காமியர் தம்பால்
ஏதமார் வழியில் இரவில் வளர்த்துத்
தூதுவ ராயும் தூர்த்த ராயும்
அன்னோர் தம்மை அலைத்திடுஞ் சக்தி
நின்கண் ணளவிலா நிரையிற் கொள்ள
"நிசாபதி" யென்றும் "நிசாகர" னென்றும்
உசாவியே நின்னை உரைத்தனர் கொல்லோ!
கடக ராசியைக் கைக்கொண் டாட்சிக்
கிடனாய் அதனிடை எழிலுற விளங்கலால்
"அலவன்" என்றுனை அறைந்தனர் கொல்லோ!
பலவாங் கலைகளைப் பயந்திடு மதியே!
வட்டா காரமாய் வனப்புடன் விளங்கிக்
கட்டுக் கடங்காக் கதிரொளி கான்றிடத்
துண்டந் துண்டமாய்த் தூக்கியே வளர்ந்து
மண்டில உருவை மாண்புறப் பெறுமுன்
பீறிய தோற்றம் பிறங்கிடக் கிடத்தலாற்
பீறியென் றதனைப் [3]"பிறை"யென் றனர்கொல்!
விண்ணிடைக் காணும் மேகத் திரள்களைப்
பண்புடன் கிழித்துப் பார்மிசை விண்டிடும்
ஒளியின் பெருக்கால் உளக்களிப் பெய்திய
வளம்பல சான்ற மங்கையர் தங்கள்
தொடியணி கரங்களிற் றூக்கிய சிறார்பால்

---

குறிப்பு:—[1]வரிகள் 27-30 - மதியிற் சிறந்து விளங்குகின்ற மாண்புடைய அறிவிற் பெரியாரும் 'மது' வென்ற சொன்மாத்திரையானே மயக்கங்கொண்டவராகி, மதுவென்று சொல்வதைக் குதலியுங் குழறியும மதியென்றா ரென்க. [2]மாது+அவம். [3]பிறை என்றதை ஹிந்துஸ்தான பாஷையிலுள்ள 'பீர்' என்றதுடன் ஒப்பிட்டு நோக்குக,

வடுகோ அதான்று வழக்கிலாப் பாடையோ
என்றே எவரும் இயம்புதற் கேற்ப
[1]குன்றல் பலவாங் குழுவிய மொழிகளால்
அன்னவர் தம்மை அமைதியில் இருத்த
நின்னைச் சுட்டியே நிலாவது வென்ற
பன்மொழி யானுணைப் பண்ணொடு பகர்வர்
அடிசில் உண்ண அவாவிலாக் குழவியைத்
துடியிடை தன்னிற் றூக்கியே அணைத்து
நிலாவே! நிலாவே! நீயே இதனை
உலாவியே வந்திங்கு உண்ணென உரைத்தும
அம்புலி யாமொன் றுங்குள ததனைச்
செம்மையில் நீயுஞ் சீருடன் கூட்டி
வெம்பல் கொண்டும் விம்மியுங் கரைந்தும்
நிற்குந் தன்மையை நீக்கியே இருவரும்
ஒற்க மின்றி ஒத்த மனதொடு
முற்றந் தன்னில் முகமலர்ந் தாட
அம்புயம் அனைய அததங் கொண்டு
அம்புலி தன்னை அழைமின் என்றே
அம்புலிப் பருவம் அணுகிய சிறார்களை
அம்மையர் அனைவரும் அறைவதும் நின்னால்
தண்கதிர் பரப்பித் தண்கடல் தன்னை
விண்முகட் டோங்க வீசிடுந் திங்காள்!
[2]நின்னொளி மிகுத்து நிலாவுங் காலையில்
பன்னலங் குன்றிடப் பாரிடம் வதியும்
சில்லோர் தம்மைச் சீரிலாப் பித்தராய்
அல்லற் படுத்தியும் அறிவைக் குமைத்தும்
வாழ்விற் றாழ்வை வழங்கிடுங் களங்காய்!
சூழ்வினை பெரிதெனச் சொற்றிடும் மூதுரை
பிழைத்தல தென்றதைப் பெரிதுங் காட்டுவை
குழைவிலா மனதொடு குலாவிடும் இந்துவே !
[3]ஆர்வுடன் ஓங்கும் அணுத்திரட் குருதிகள்

**குறிப்பு :**—[1]குன்றல் - வார்த்தையின் உச்சரிப்புலோபமுடையது. [2]வரிகள் 83-90-சந்திரனது ஒளியாற் சிலர் மாததிரம் சித்தப் பிரமை யடைவதும் ஏனையோர்க்கஃதின் பாதையின்மையு மென்னேவெனிற், கடுங் கருமத் தொடர்ச்சியின் பயனென்றது தெற்றெனக் காட்டிற்றென்க. [3]ஆர்வுடன்-நிறைவுடன், வரிகள் 91-102-மகா மேதாவிகளாக விளங்குநரிற்சிலர், பிற்றை ஞான்றுள்ள அன்னோரது வாழ்நாட்களில் அவர்களது மேதையாம் அபாரமான புத்தியிலும் பிரக்ஞையிலும் அவர்கள் குன்றியவர்களாகிச் சாதாரண மனிதர்களிலுந் தாழ்வடைந்திருப்பதை நாம் கண்கூடாகக் காண்கின்றோம். அங்ஙனமாதல் யாதெனில், அவர்களின் புத்தியின தீக்ஷண்யத்துக்கும் பிரக்ஞையினுயர்ச்சிக்கும் மூலமாம் புதனும் வியாழனும் நாளடைவிற் சந்திரகதியால் க்ஷீணிக்க, மூளையில் முன்னம் இரத்த ஊற்றிற் சம்பந்தப்பட்டிருந்த சந்திரகலையின் ரசக் குறைவு படலென்றது ஜ்யோதிஷ சாஸ்திர மர்மமென்றதைத தெரிக. இதனையே நவீனகலா பண்டிதர்களான மேனாட்டார், இரத்தவோட்டத்திற் படிந்துள்ள ஹார்மோன் (Hormone) என்ற அறிவை வளர்க்கும் வித்தின் குறைவின் காரணமெனக் கூறுவர். இதும் பழவினையின்பாற்பட்டதன்றோ? புத்தியும் பிரக்ஞையுந் தம்முள் வெவ்வேறுமென்றது அமரகோச நூலின் துணிபு. பிரகஞைக்குக் காரகன் வியாழனென்றும், புததிக்குக் காரகன் புதனென்றுங் கூறா நிற்கும் ஜ்யோதிஷ நூலின் உரையும் ஈண்டுக் குறிக்கில் புத்திக்கும் பிரக்ஞைக்கும் விததியாசமுண்டென்றது பெறற்கிடனாதல் காண்க. எஸ். கு.

ஊற்றாய்ப் பாயும் உதிரக் கால்வழி
ஓடியே சென்றாங் குடம்பிற சார்ந்து
மூதறி விற்கு முதலாங் காரண
பூதமாய் நின்று போதம் வளர்த்திடும
மூளையிற் றங்கி நூங்கிடுஞ் சகதியைப்
பிழையாம் வகையாற் பேதமாய்க் காட்டல்
நின்பாற் கொண்டதோர் நீளுட் டீங்கென
முன்னோர் மொழிந்த முனிநூற் சோதிட
உண்மை நின்னகம் உளதென நவீனமாந்
திண்மையார் நூலிற் றிகழ்ந்தோர் பலரும
வாய்ப்பறை யறைந்து வழங்குதல் கண்டோம்!
சேய்மையில் நின்று திகழும மதியே!
தீமையை யொழித்துச் சீரார் அன்பொடும்
தூய்மைகொள் மனதொடு தொலபதி காத்து
மன்பதை யோர்க்குறு வாழ்துணை யாக
இன்னும் உளவாம் இன்பந் தன்னை
அன்னைபோல் அளிததிட் டகில மனைத்தையும்
இன்புறு நெறியில் இயங்கிடச் செய்தல்
நின்பாற் பட்டதோர் நியதியாந தொழிலென
அன்பால் உன்மாட் டறைநதனன் கண்டாய்.

# சுந்தர சுலோசனா

[தி. ர. சாரங்கபாணி, எம். ஏ.]

(தொடர்ச்சி)

## )தழ். 12

### காரிருளில் காருருவம்

"இன்று நான் மடத்திற்குச்சென்று சில உண்மைகளைக் கண்டறிய எண்ணியுள்ளேன்...........சத்தியநாத ! கவலையுறாதே... ....வெற்றியுடன் இன்று திரும்புவேன். நாளை அவனைக் கைதி யாக்குவேன்" என்றியம்பி, அவனைத் தனியே கபட நாயகனாகிய, போலி வேடதாரியினிடம் ஏவ மனமில்லாது பெரிதும் வருந்திய சத்திய நாதனைத் தேற்றி, ஜயகுமாரன் அந்நள்ளிருளில் இல்லம் நீத்துச் சென்றான். எங்குஞ் சூழ்ந்து நின்ற பேரிருள் அவனைக் கவர்ந்தது. அஞ்சாத நெஞ்சு படைத்த ...ிய சத்தியநாதனுடைய அகம் படபடெனப் பதைத்தது. ஐநதாண்டுகளுக்கு முன்னர் நிற்கநிழலும் உண்ண உணவுமற்றுப் பசியால் மெலிந்து வீதியோரத்தில் மயங்கி வீழ்ந்திருந்த அநாதையாகிய தன்னை அன்னையைப்போலும் உளங் கசிந்தணுகி, பரிந்து பேசி வண்டியிலேற்றிச சென்ற ஜயகுமாரன் கொலையஞ்சாப் பாதகனாகிய காவியாடைபுனைந்த கள்ளனுடைய உறையுளுக்குத் தனிதது இரவில் செல்வது அவனுக்குப் பெருஞ் சஞ்சலத்தையே அளிததது. தன்னுடன் பிறந்தவன் போலும் அன்னையைப் போலுந் தந்தையைப் போலும் ஐந்தாண்டுகளாக இருந்து, துப்பறித் தொழிலின் நுட்பங்களைத் தனக்கு அறிவுறுத்தி, தான் அநாதை-திக்கற்றவன் என்னும் பேதமற்றுத்தன்னுடன் ஒழுகிவந்த ஜயகுமா

ரனுக்கு ஆபத்து நேரிடும் என்ற அச்சமும், இறைவன்மாட்டுப்பேரன்பும், மாறு நன்றியும் மிக்க சத்தியநாதனை வாட்டாதென் செய்யும்! வறுமையால் இளமையிலிருந்து இடிப்புண்ட சத்தியநாதன், தனக்கு ஓயாத் துயரம் வந்த அமயங்களிலும், பசிப்பிணி தன்னை வாட்டிய நோய்களிலும், இறைவனையே இரந்து நிற்றல் வழக்கமாதலான், இளமையிலிருந்தே தனக்குஇயற்கையாக இறைவனிடத்து எழுந்த ஒரு பற்று, ஜயகுமாரனுடன்-இறைவனிடத்து மாறு நம்பிக்கையும் ஈடெடுப்பில் பக்தியும் நிறைந்த ஜயகுமாரனுடன்-பழகப் பழகத் தூய பக்தியாகப் பரிணமித்து இன்பத்திலும் துன்பத்திலும் இறைவனையே இறைஞ்சுமாறு தூண்டியதாதலான், ஜயகுமாரனுக்கு ஓரின்னலும் வாராத வண்ணங் காத்திடுமாறு அடியார்க் கடியனாகிய அமலனை, மனமுருகி வேண்டினான். தனித்தியங்கும் தூயநன்றி மறவாத் திறனும், ஆபத்திலுதவும் அரும் நட்பின் மாண்பும், சத்தியநாதனுடைய செய்கையில் மலிந்து நிற்றல் நோக்க, சத்தியநாதனுடை ஒப்பில் ஒழுக்கம் இனிது புலனாகின்றது.

இவ்வாறு சத்தியநாதன் ஜயகுமாரனுக்கு எல்லாம் வல்ல இறைவனை அருள் புரியுமாறு வேண்டிநிற்க, வேடந்தாங்கி, நற்றொண்டாற்றலே தன்னுடைய கடனெனக் கருதி வெளிப்போந்த ஜயகுமாரன் தன்னுடைய மோட்டார் வண்டியேறி நேராகத் தம்புசெட்டி வீதிக்குச் சென்று, ஸ்ரீலஸ்ரீ சத்சிதாநந்த சுவாமிகளின் திருமடத்திற்குச் சுமார் 20 அடி தூரத்திலிருந்த ஒரு சந்தில் தன்னுடைய வண்டியை விட்டுவிட்டு மெதுவாக நடந்து மடத்தை யண்மினான்.

எங்கும் நிசத்தமே குடி கொண்டிருந்தது. ஒரு கரிய உருவம் மெதுவாக நடந்து மடத்தின் வாயிலை யடைந்தது. அடைந்ததும் சுற்றும் முற்றும் உற்று நோக்கியது. வீதியில் ஒருவரையுங் காணாது, வீட்டின் முற்புறத்தை ஒரு முறை நோக்கியது. இருப்புக் கம்பிகள் இடப்பட்டிருந்த முன் தாவாரத்தை நோக்கியதும அதற்கு ஓர் எண்ணம் உதித்தது. உடனே சிறிதுந தயங்காது அக்கம்பிகளைப் பற்றி ஏறி, அருகிலிருந்து ஒரு மின்சார விளக்கின் இருப்புத் தூணின் உதவியால் அம மடத்தின்மேலிருந்த தளத்தை யடைந்தது. உடனே ஆங்கு ஒரு மூலையில் பதுங்கி ஒருமுறை தன்னைச சுற்றி நோக்கியது. விண்மீன்கள், ஒளி வீசுவன போலும் அந் நள்ளிருள் விளங்கின. எங்கும் பேரிருளே சூழ்ந்து நின்றது. அருகிலிருந்த இல்லங்கள் வெறுந தளங்களாகவே இலங்கினமையான் தன்னை ஒருவரும் கவனிக்க இயலாதென அக் காருருவந் தெளிநதது. பின்னர் தன் இடம் நீத்துச் சந்தடி செய்யாது நடந்து அம்மடத்தின் வாசல்புறம நோக்கியது. ஆங்கும் இருளே இலங்கியது. பின்னர் தளத்தின் மீதே நடந்து சென்று பின்புறம் நோக்க, அங்கும் ஓரரவமுங் கேட்கவில்லை. பிறகு இல்லத்துள் எவ்வாறு இறங்குவது என்று யோசிக்க, மடத்திற்கு மின்சார விளக்குகளின் கம்பிகளைத் தாங்கி நின்ற ஓர் இருமபுத் தூண் வாசலின் எதிர்ப்புறத்தில் இருப்பது தெரிந்தது. அவ்விரும்புத் தூணை நாட, ஒரே வழிதானிருந்தது. மாடியின் படிச்சுவர் மீதேற, அவ்விரும்புத் தூணுக்கும் படிச்சுவருக்கும் சுமார் நான்கடி இடைவெளியிருந்தது. சுவரின் மீது நின்று இரும்புத் தூணைப் பற்றும முயற்சியில் சிறிது தவறின், கீழேவிழநேரிடும் எனவும் அப்பொழுது தான் எண்ணி வந்த காரியம் அவலமாகிவிடும் என்றும் அக்காருருவம் நன்குணர்ந்தது. மேலும், அவ்விரும்புத தூணைப்பற்றிக் கீழிறங்குங்கால் சிறிது அரவங் கேட்கினும், மடத்திலுள்ளவர் விழித் தெழுவராயின், தன்னுடைய எண்ணம் ஈடேறா தெனவும் அவ்வுருவம் உணர்ந்தது. தன்னுடைய கரிய அங்கியுள் மறைத் தணிந்திருந்த இரும்புக் கவசம் அதனுடைய நினைவிற்கு வந்தது. அக்கவசம்

தூணுடன் சிறிது தாங்கினும் பேராவங் கிளம்பு மாதலான், இறங்கும் போதும் மிகவும் ஜாக்கிரதையாக இறஙக வேண்டு மெனவுந தீர்மானிததது. அவ்வாறு இரும்புத்தூணைப பறறிக் கீழிறங்குங்கால் தன்னை யாரேனும் கவனித்திடின், தன் னெண்ணம ஈடேறுதன அவ்வுருவம் உணாந்ததெனினும், வேறு வழியின்மையால் இறைவனைத் தனக்கு வெற்றியருளுமாறு வேண்டி, பிடிச்சுவர் மீதேறி, ஒருகரத்தில் சுவரின் ஓரத்தைப் பற்றிக கொண்டு, மற்றொரு கரததை இரும்புத் தூணை நோக்கி நீட்ட, அது சுமார் கரத்தினின்றும் ஓரடி தூரத்தில் இருப்பதுதெளிநதும நிதானமாகக் கரததை நீட்டியவாறே தூணை நோக்கிச் சுவரைப் பற்றிநின்ற மற்றொரு கரத்தை எடுத்து விட்டுப் பாய்ந்தது. இருட்டில் சிறிது நிதானம் தப்பியிருக்குமேல், அவ்வுருவம் தூணில் தாங்கத் தவறிக் கீழே விழுந்திருத்தல் வேண்டும். ஆண்டவனருளால் நீட்டிய கரம் தூணின் மீது தாங்கியது. பிறகு மற்றொரு கரத்தாலும் தூணை இறுகப் பிடித்து நிதானமாகத் தன்னுடைய கால்களை இருப்புத் தூணை நண்ணுமாறு அவ்வுருவம் செய்திடுங்கால் அத்தோற்றம் பார்க்கத் தகுந்த ஒரு தோற்றமாகவே இலங்கியது.

தூணை யணுகியதும் நம்முடைய கரிய உருவம் சிறிது நேரம் தயங்கி நின்று, உள்ளிருந்து ஏதாகிலும் அரவங் கேட்கின்றதா வென உற்றுக் கேட்டது. அது சமயம் "ஆ! முருக! உனக்கும் என் மீது வாதா? இன்னமும் நீ யெனக்கு நின்னுருக் காட்டாது ஒளிப்பதேன்?" என்று மனங் கசிந்தெழுந்த வார்த்தைகள் காருருவின் செவியில் பட்டதும் அதனுடைய மெய் சிலிர்த்தெழுந்தது. உண்மையான பக்திமணங் கமழ்ந்து தூய அகத்திலிருந்து நள்ளிரவிலெழுந்த அக்குரலோசை எவ்வகத்தைப் படபடெனப் பதைக்கச் செய்திடாது?

தூணைப் பற்றிக்கொண்டு குரங்கு போலமர்ந்திருந்த நமமுடைய கரிய உருவம ஓசையினின்றும் அம்மொழிகளை இயம்பியது ஒரு வாலிபராகவே இருததல் வேண்டுமெனத தெளிநதது. ஓசைவந்த திசை நோக்க, அது தூணுக்கு வடமேற்குத் திசையில் இருநத ஓர் அறையிலிருந்து வநததென ஊகிததுணாநதது. சததியநாதன் பிசசைக்காரன் வேடம் பூண்டு மடத்துள் சென்று உணவுண்ட அன்று தனககியமபிய உரைகள் அக்காருருவின் நினைவிறகு வநதன. "ஐயா!... அவ்வாசலுககு வடபுறததில் இரண்டறைகளும், தென்புறததில் இரண்டறைகளும் இருந்தன. வடபாலிருந்த இரு அறைகளுள் கீழண்டையறையே சுவாமிகளின் பூஜையறையென அறிந்தேன். ஆனால், மேற்றிசையிலிருந்த அறையுள் யார் வதிவதென யான் அறியவில்லை யெனினும் நாங்கள் உண்ணுங்கால் அவ்வறையிலிருந்து "வாழையடி வாழை" என்னும் பாடலை யாரோ பாடினார். அக்குரலின் ஓசையும் பாட்டின் உருக்கமும் ஐயா! என்னைக் கண்ணீர் விடுமாறு தூண்டின. கடவுளொருவருண்டோவென ஐயுறுங் கல்லாக் கயவரும் அப்பாடலை அவர் பாடச் செவியுறின் பெரும் பக்தர்களாவர் என்பதற்கோ ரையமில்லை" என சத்தியநாதன் தனக்கியமபிய உரைகளின் மெய்ம்மையை நம்முடைய காருருவம அதுகாலை யுணர்ந்தது. ஆனால், அது யாருடையகுரலாக இருக்குமென அது சிறிது யோசிததது. "ஏ முருக! தாய்மையுடையவ னெனக் கருதப்படும் நீயும் உன் மெய்யடியாராகிய என் காதலருக்கு ஆபத்து நேர்ந்த வமயத்தில் உதவியாறறுது வாளாயிருநததென்?" என்று சாரதா தான் மங்களபுரியை விட்டு வந்த அன்றிரவு இயம்பிய உரைகள் அக்காருருவின் நினைவிற்கு வந்தன. சண்முகசுந்தரமும் மோகனசுந்தரமும் இக்கபட சந்யாசியின் கரங்களிலேயே சிக்குண் டுள்ளார்களென நமதுருவம் உணருமாயினும், குர

லோசை பக்தியோடியைந்த தொன்று யிலங்கினமையான், முருகன் பேரருளை வேட்டவர் சண்முகசுந்தரனாகவே இருத்தல் வேண்டுமெனத் தெளிந்தது. ஆனால், அவ்வாலிபர் ஒருகால் இப்போலி வேடதாரியால் வஞ்சிக்கப் பட்ட வேறொரு வாலிபராகவும் இருத்தலாகும் என்ற எண்ணமும் அதற்கு வந்தது. எனவே, ஆராய்ந்து தெளிதலே நன்றெனும் முடிவுக்கு நமது காருருவம் வந்தது.

மேலோதிய எண்ணங்களையெல்லாம் தூணின் மேலிருந்தே இருந்தகாருருவம் எண்ணியிருந்தது. பிறகு மெதுவாகக் கீழிறங்கி வாசலையடைந்தது. தூணுக்கெதிரில் சுவாமிகளின் பூஜையறையிருத்தல் வேண்டுமெனத் தெளிந்ததெனினும், முதலில் வாசலுக்கெதிரிருந்த கூடத்தில் மடத்தின் பணியாளர்கள் எவரேனும் இருக்கின்றார்களோ என்பதுணர, தன்னுடைய கைத் துப்பாக்கியை ஒரு கரத்தில் தாங்கித் தன்னிடமிருந்த மின்சாரக் கைவிளக்கையேற்றி நோக்கியது. கூடங் காலியாக விருப்பது கண்டு புன்முறுவல் கொண்டது. பிறகு தென்புறத்திருந்த இரு அறைகளின் கதவுகளை வெளிப்புறம் ஆங்குக்கிடைத்த கயிறுகளால் பிணித்துக் கட்டிவிட்டுக் குரலோசைக் கேட்ட அறையை அணுகிக் கதவிலிருந்த ஒருசிறு துவாரத்தின் வாயிலாக உள்நோக்கியது. அறையுள் ஒரே இருட்டு விளங்கியது. உடனே மற்ற இரு அறைகளின் கதவுகளைப் பிணித்தது போலும் அவ்வறையின் கதவங்களையும் இறுகப் பிணித்துவிட்டுச் சுவாமிகளின் பூஜை அறையையே அணுகியது. அவ்வறை யுள்புறந் தாளிடப்பட்டிருப்பது தெரிந்து வெளியிலிருந்து சந்தடிச் செய்யாது ஓர் இருப்பாயுதத்தை விட்டுக் கதவை மெதுவாகத் திறந்து, ஒரு கரத்தில் மின்சார விளக்கையும் வலக்கரத்தில்கைத்துப்பாக்கியையுங்கொண்டு நுழைந்தது. அறை காலியாகவே இருந்தது. உடனே அவ்வுருவத்திற்கு ஓரெண்ணம் திடீரென உதித்தது. வாசலிலிருந்து உட்புறஞ் செல்லுங் கதவையும் வெளிக் கதவையும் மற்றக் கதவங்களைப்போல் பிணித்திடுதலே நன்றெனக்கருதி, அவ்வறையை நீத்துவெளிப்போந்து இரு கதவங்களையும் பிணித்துவிட்டு, மீண்டும் சுவாமிகளின் பூஜையறையை அடைந்து, கதவை உள்புறந் தாளிட்டுவிட்டுத் தன்கையிலிருந்த மின்சார விளக்கினொளியான் அறையின் கீழ்ப்புறச் சுவரை நோக்கியது. ஆங்கு ஒரு கதவமிலங்கியது. தான் எண்ணியதற்கிணங்க தயாரந்தலாலின், இல்லத்தையும் சுவாமிகளின் மடத்தையும் பிணித்து நிற்க ஒரு கதவத்தைக்கண்டதும் நம்முடைய காருருவம் புன்முறுவல் கொண்டது. அக்கதவம் உள்புறந் தாளிடப் பட்டிருந்தது. பின்னர் அவ்வறையை ஒருமுறை சுற்றிநோக்கியது. "பத்தித் திருமுக மாறுடன் பன்னிரு தோள்களுமாய்" நிற்கும் பெம்மானின் பெரும்உருவப்படமொன்று கீழ்த்திசை நோக்கி நின்றது. சமய பேதமற்ற சமரச நிலையையுணர்த்தும் அரியரன் உருவப் படங்களும் அவ்வறையுள் விளங்கின. பாதகங்களுக் கஞ்சா இப்பெரும் 'பேயனுக்கும் ஒரு பூஜையா' என நமது கரிய வுருவம் நினைந்தது.

# வாழ்த்துரை

[திருவாளர் - திரு. வி. கலியாணசுந்தரனார்]

I

சைவம் சிவசம்பந்தம். சிவம் அன்பு. "அன்பே சிவம்"—திருமூலர். "இன்பமே என்னுடை அன்பே"—மாணிக்கவாசகர். அன்பாகிய சிவத்தின் நெறி சைவம் ஆகும்.

அன்பு நெறியாகிய சைவம், மன்பதைக்குப் பொதுவானது. அஃது ஒரு நாட்டார்க்கோ, ஒரு மொழியார்க்கோ, ஒரு நிறத்தார்க்கோ, ஒரு மதத்தார்க்கோ, ஓரினத்தார்க்கோ உரியதன்று. அஃது எல்லோர்க்கும் உரியது. எங்கும் நீக்கமற நிறைந்து நிற்கும் சிவம், ஒரு நாட்டில், ஒரு மொழியில், ஒரு நிறத்தில், ஒருமதத்தில், ஓரினத்தில் எங்ஙனங் கட்டுப்பட்டுக் கிடக்கும்? எங்கும் நீக்கமற நிறைந்து நிற்பது சிவமாதலால், எவ்வுயிரையும் தன்னுயிர்போல் கருதிப் பயன்கருதாப் பணிசெய்வது சிவநெறி நிற்பதற்கு அறிகுறியாம். "எல்லாரும் ஏத்தும் ஈசன்"; "உரைசேரும் எண்பதது நான்குநூறாயிரமாம் யோனி பேதம், நிரைசேரப் படைத்தவற்றின் உயிர்க்குயிராய் அங்கங்கே நின்றான் கோயில்—ஞானசம்பந்தர்; "எவ்வுயிரும் நீங்காதுறையும் இறைசிவன் என்று - எவ்வுயிர்க்கும் அன்பா யிரு"—சைவ சமயநெறி.

மன்பதைக்கே உரியதாயிருந்த சைவத்திற்கு நாளடைவில், நாடு, மொழி, சாதி, சம்பிரதாயம் முதலிய தளைகள் இடப்பட்டன. அதனால் சைவம் சிறைப்பட்டது என்று கூறல் மிகையாகாது. தளைகளை உடைத்துச் சிறையினின்றும் சைவத்தை விடுதலை செய்ய முன்னே சில அறிஞர் முயன்றனர்; இந்நாளிலுஞ் சில அறிஞர் முயன்றுவருகிறார்.

முயற்சி நேரியமுறையில் நடைபெறுதல்வேண்டும். மகாநாடுகளாலும், தீர்மானங்களாலும், பிற ஆரவாரங்களாலும் பெரும் பயன் விளைதல் அரிது. சைவ ஆக்கத்துக்குச் சிவனடியே சிந்திக்குந் திரு தேவை; சிவபாத விருதயர் திறமும், மங்கையாக்கரசியார் மனமும், குலச்சிறையார் குணமும்

--

சைவ வான்பயிர் ஓம்ப இந்நாளில் சில சபைகள் ஆங்காங்கே பணியாற்றி வருகின்றன. அவைகளுள் ஒன்றாய் - தொன்மையதாய் - விளங்குவது தூத்துக்குடிச் சைவ சித்தாந்த சபை. இச்சபை, இக்காலத்துக்கு இன்றியமையாத சில நற்றுறைகளில் இறங்கி ஒரோ வழி உழைத்து வந்திருக்கிறது; இப்பொழுது பொன்விழாக் கண்டு மகிழ்ச்சியுறுகிறது. இனி இச்சபை, இக்காலததுக்குரிய அறத்துறைகளில் முற்றுந் தன் கருத்தைச் செலுத்தித் தொண்டாற்றிப் பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந்து, அன்புநெறி ஓம்ப, ஆலவாய் அண்ணல் அருள் பொழிவாளாக.

தூத்துக்குடிச் சைவ சித்தாந்த சபை வாழ்க; வாழ்க; நீடூழி வாழ்க.

# சைவ சமயப் பாதுகாப்பு

[திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி. ஏ., எல். டி.]

## II

"ஞாலம் நின்புகழே மிக வேண்டும்தென்
ஆலவாயில் உறையுமெம் ஆதியே !"

என்று இற்றைக்குச் சுமார் 1300 ஆண்டுகளுக்கு முன்பு மதுரைச் சோமசுந்தரக் கடவுள் சந்நிதியில் புகலித் திருஞானசம்பந்தப்பெருமான் விண்ணப்பித்தருளினார். அப்பெருமான் கொண்டிருந்த ஆர்வம், அவர் பாதுகாத்துத் தந்த சைவசமயத்தில் இக்காலத்துப் பிறந்துள்ளோருள் பெரும்பாலாருக்கில்லை.

தற்கால உலகை நோக்குமிடத்து, பொதுவாகச் சமயமென்ற அளவிலேயே வெறுப்பும் பகைமையும் ஆங்காங்குத் தோன்றியிருப்பது புலனாகும். சமயமானது மக்களைப் பலவாறாய்ப் பிரித்து அவர்களை முன்னேற்றத்தைத் தடுத்து நிற்குமொரு தீமை என்றும், அது வலியிழந்து ஒழிந்தாலல்லது உலகம் நலம்பெறாதென்றும் கருதுவார் பலருளர். சமயப்பற்றுள்ளார் சிலர் இவர்களை நாஸ்திகர் என்று பழிப்பர்.

உண்மைச் சமயம் இன்னதெனக் காய்தல் உவத்தல் அகற்றி மேற்குறித்த இருதிறத்தாரும் ஆராய்வாராயின், அவருக்குள்ளிருக்கும் கருத்து முரண்பாடு பெரிதும் மறைந்துவிடும். ஆகையால் சைவசமயப் பாதுகாப்பைப்பற்றிப் பேசுமுன்பு, சமயத்தினியல்பையும் அவசியத்தையும் பற்றிச் சிறிது ஆராய்தல் அவசியமாகும்.

சமயம் என்பது வரட்டுச் சாத்திரமல்ல ; வெறுந் தத்துவக் கொள்கையல்ல ; போலி வேடமல்ல ; பொருள்தராச் சடங்கல்ல; மெய்ஞ்ஞானமில்லாக் குருட்டுக் குருமார் வழிபாடுமல்ல ; அறிவையும் அன்பையும் வளர்க்காத ஆலயம் மடம் முதலிய அமைப்புக்களுமல்ல. மேற்குறித்த அடைமொழிகள் அணுகப்பெறாத சாத்திரமும், திருவேடமும், சடங்கும், ஆசிரியனும், ஆலயமும், திருமடமும் சாதனமாகக் கொண்டு மக்களைச் சிவநெறியிற் செலுத்தும் ஒரு நல்ல ஏற்பாடாகும். ஆயினும், அடிக்கடி மக்கள் இச்சாதனங்களையே சமயம் என மயங்கி எண்ணி, அதைக் கெடுத்துத் தாமுங் கெட்டுநிற்பது மெய்ம்மையே. ஆனால், இதுபற்றியே போலிச் சமயத்தையும் உண்மைச் சமயத்தையும் ஒன்றெனக் கொண்டு, சமயமே தீயது என்றல் முறையாகாது. போலிச் சமயத்தை உண்மைச் சமயத் தலைவர்கள் அவ்வப்போது கண்டித்துத் தம் வாழ்க்கையினாலும் அறிவுரைகளினாலும் மெய்ச்சமயம் இன்னதென விளக்கி வந்திருக்கிறார்கள். உண்மைச் சமயம் இல்லையேல், மக்கள் உயிர்வாழ்க்கை வளமடையாது; உண்மையான முன்னேற்றம் ஒன்றும் ஏற்படாது. "Religion is not a strange or added thing, but the inspiration of secular life, the breathing of an eternal spirit through this temporal world" * "சமயம் என்பது புதுமையான, அல்லது புறத்திலிருந்து கொண்டு வந்து சேர்க்கப்பட்ட ஒரு பொருளன்று ; அது நம் அன்றாட லௌகிக வாழ்க்கை நல்வழியில் நடக்கத் தூண்டுமொரு சக்தி ; என்றுமுள்ள பரமான்மா இம்மண்ணுலகின் வாயிலாக விடுகின்ற மூச்சு". கடவுளுக்கும் தனக்கும், பிற உயிர்களுக்கும் தனக்கும், பிற வுயிர்களுக்கும் கடவுளுக்கும் உள்ள தொடர்பை மனிதன் உள்ளவாறு அறிந்து ஒழுகுதலே உண்மைச் சமய ஞானமும் ஒழுக்கமுமாம். இச்சமய ஞானமும் ஒழுக்கமும் மனித சமூகத்தின் முன்னேற்றத்திற்கு இன்றியமையாதவை. உண்மைச் சமயம், மக்களை அன்பினால் பிணித்து ஒன்றுபடுத்தும் இயல்புடையதேயன்றி, வேறுபடுத்திப் பிளவுகளையும் பகைமையையும் வளர்க்கும் இயல்புடையதன்று; எல்லாப் பொருள்களின் உண்மையையும் மக்கள் காணுமாறு தூண்டுவதேயன்றி, ஆராய்ச்சியில அறிஞர்கண்ட எந்த உண்மையையும் சமயசாத்திரங்கட்கோ சமயவாதிகள் நம்பிக்கைகட்கோ முரணாயிருக்கிறதென்னும் காரணத்தால் மறைக்கவோ எதிர்க்கவோ முயலுவதன்று. "அன்பே சிவம்", "அறிவே

* Henry Drummond.

சிவம்'' என்றனர் ஆன்றோர். ஆதலின் அன்பையும் அறிவையும் எதிர்ப்பது ஆண்டவனையே எதிர்ப்பதாகும்.

இவ்வியல்பினதாகிய மெய்ச்சமயம், உலகில் போதிய ஆற்றலுடன் விளங்காமையால்தான், பொய், பசி, பிணி, பயம், பொறாமை, பகை முதலிய பொல்லாங்குகள் நிறைந்திருக்கின்றன. இவைகளை ஒழித்தற்குரிய ஒரே சக்தி சமய சக்திதான் என்று லாயிட்ஜார்ஜ் (Lloyd George) முதலிய அறிஞர்கள் அநுபவத்திற் கண்டு கூறுகின்றனர். ஆகவே சமயம் வேண்டும் என்னும் முடிபு சித்திக்கும்.

ஆனால், 'ஒரு சமயமென்றில்லாமல், உலகில் பல சமயங்கள் இருக்கின்றனவே; இவைகளும் ஒன்றோடொன்று ஒவ்வாமல் உளவன்றே! இத்தனை சமயங்கள் ஏன்? இத்தனையும் மெய்ச் சமயங்கள்தாமா?' என்னும் ஐயங்கள் பலர்க்குத் தோன்றுவது இயல்பே. சமயங்கள் பல உண்டென்பது கண்கூடே. பத்து, இருபதல்ல; பலகோடியுண்டு. "சமய கோடிகள்", "அரிய சமயம் ஒருகோடி" என்பர் ஆன்றோர். ஆழ்ந்து நோக்கினால் ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு சமயமுண்டு. மக்கள் தம் அறிவு குணம் செயலில் ஒரே தன்மையும் முதிர்ச்சியளவும் உடையவர்களாயில்லை. யாவர்க்கும் பொதுவாகச் சில அடிப்படையான இலக்கணங்கள் இருப்பினும், ஒவ்வொருவர்க்கும் தனித்தனிச் சிறப்பியல்புகளும் சில உள. இதனால் மக்களிடையே அறிவிலும் ருசியிலும் வேற்றுமைகள் காணப்படுகின்றன. ஆகவே, அவர்கள் சமயக்கொள்கைகளும் சிற்சில அம்சங்களில் வேறுபடுவதும் இயற்கையே. இதனால்தான் கடவுளைப்பற்றிய கோட்பாடுகளிலும், அவரை அடைதற்குரிய வழிகளைப்பற்றிய கருத்துக்களிலும் வேறுபாடுகள் காணப்படுகின்றன. எனவே, சமயங்கள் பல உள்ளன. இவை மனித இயற்கையின் அடிப்படையைப்பற்றி நிற்பதால் இவற்றை அழிக்கவோ, ஒன்றாக்கவோ முடியாது. இவை யனைத்தும் அவசியம் என்று ஒப்புக்கொள்ளவும் வேண்டியிருக்கிறது.

ஆயினும், பல்வேறு சிறப்பியல்புகளால் வெவ்வேறெனக் கணக்கிடப்படும் சமய கோடிகளினூடே ஒரே சமயந்தான் உயிர் நாடியாய் ஓடிக்கொண்டிருக்கின்றது. வடிவிலும், அளவிலும், நிறத்திலும் பலதிறப்பட்ட விளக்குக் கூடுகளுடன மின்சார விளக்குகள் எரியும்போது, காட்சி பலவாயிருக்கின்றது; உள்ளிருந்து இயக்கும் சக்தி ஒன்றுதான். இவ்வொரு மின்சார சத்தியே பெரிதாயும் சிறிதாயும் பலவேலைகளைச் செய்கின்றது. இதுபோலவே சமயங்கள் பல இருப்பினும், அப்போர்வைகளினுள்ளே இருப்பது ஒரு சமயந்தான். "வேறுபடு சமயமெலாம் புகுந்து பார்க்கின், விளங்கு பரம்பொருளே! நின்விளையாட்டல்லால், மாறுபடுங் கருத்தில்லை" என்றார் தாயுமானார்.

இச்சமயங்களை அவ்வவற்றின் உண்மை நிலையில் வைத்துக் காணும்போது, அவை யாவும் மெய்ச்சமயங்களென்றே தோன்றும். ஒரு கலாசாலையில் முதல் வகுப்பு முதல, எம். ஏ. வகுப்புவரை பல வகுப்புகள் இருக்கலாம். அவற்றிற் படிப்போர் யாவரும் மாணவர் என்னும் தன்மையில் ஒரு கூட்டத்தினரே. அனைவரும் உண்மையையே உணர்ந்து வருகின்றனர். அக் கலாசாலை முழுவதிற்கும் தலைவர் ஒருவரே. ஆயினும், வகுப்புகளின் அறிவாற்றல்களை நோக்கப் படிமுறையில் அளவு வேறுபாடிருப்பது புலனாம். இவ்வியற்கையில் தவறொன்றுமிலலை. எல்லா வகுப்புக்களும் அவசியமே; எல்லாவற்றிலும கற்பிக்கப்படுவதும் மெய்யே. இவைபோன்றே உலகமாகிய கலாசாலையிலும பல வகுப்புக்களுள்ளன. மக்கள் தத்தம் அறிவினளவிற்கேற்ற வகுப்பில் சேர்ந்து உண்மையறிந்து வருகின்றனர். எல்லா வகுப்புகளும் தேவையே; எல்லாப் பாடங்களும் உண்மை தெரிப்பனவே. எல்லாவற்றையும் நடத்தும் தனித் தலைவர் ஒருவரே. இவ்வகுப்புகள்தாம் பல்வேறு சமயங்கள். இவைகளைப் படிமுறையில் வைத்து உள்ளபடி காணுகையில் முரண்பாடு தோன்றாது; யாவும் நல்லன என்றே தோன்றும்.

இதுவரையில் விளக்கிய உண்மைகளால், உயிராயுள்ள ஒரு பெருஞ் சமயம உள்ளிருந்தியக்கி மக்கட்கு நலஞ் செய்வதற்கு உடம்பு போன்றுள்ள பல சமயங்கள் தேவை என்பது புலப்படும். ஆனால்,

"உடம்பார் அழிந்தால் உயிரார் அழிவார்". ஆகவே, பனனெடுங்காலம நிலவி நின்று தம் உபயோகத்தையும சக்தியையும் காட்டி வந்துள்ள சமயங்களாகிய உடம்புகளை, போலி புணர்வொழுக்கங்களால் நோய் வாய்ப்படாமற் பாதுகாத்து வருதல் அவ சியமாகும். அவைகளில் பொய் மிகுந்து மெய்யைத் துரத்திவிடுமாயின், அவ்வுடம்பு கள் மாய்ந்துபோம். ஆதலின், அவ்வச சம யத்திற பிறந்தோர் அவரவர் பிறந்த சம யம நன்னிலையில் நின்று மக்கட்கு உப கரித்து வருவதற்கான முயறசிகளைச் செய் யுங் கடப்பாடுடையராவர். முடிவில், அவை இருத்தலும் இறததலும கருத்தன் கருத்தின்படியாகும. 'எல்லாச சமயங் கட்கும் உயிர்நாடி ஒன்றே. எல்லாச சமயங் களும முடிவில ஆன்மாக்களைககொண்டு சேர்க்குமிடமும் ஒன்றே' என்னும் அடிப் படை உண்மைகளைச சமயவாதிகள் அனை வரும மறவாதிருப்பாராயின் சமயப்பிணக்கு நேர வழியில்லை.

இவ்வாறு நோககுங்கால், சமயங்களுள் ஒன்றெனக் கணக்கிடப்படும நிலையில் சைவ மும் போற்றிப் பேணற்குரிய தொன்றென் பது சொல்லாமலே அமையும். இதற்கு இந் நிலையே யன்றி, ஏனைச் சமயங்கட்கெல்லாம் தாயகமும் நாயகமுமாய் நிற்கும் ஒரு தனி நிலையும் உண்டு. இந்நிலையில் இதைச சன் மார்க்கம், ஒளி நெறி, திருநெறி என்று குறிக்கலாம். இதன் உச்சியிலேயே சமய அதீத நிலைமையும் அமைந்திருககின்றது.

இப்பெரிய பொது நிலையில் சைவம் மற் றைச் சமயங்களினூடே விளங்கிக்கொண் டிருக்கின்றது. அதை ஒரு பெருஞ் சமயம் எனப் பார்க்கும் சிறப்பு நிலையில், அது இந் தியாவில் மட்டும் காணக்கூடிய தொன்றும். அதிலும் தமிழ்நாட்டில் ஒரு தனிச்சிறப் புடன் விளங்குந் தன்மையுடையது.

இச் சிறப்புச் சைவம் தமிழ்நாட்டில் இன்று சீரிய நிலையில் இல்லை. சைவசமயத் திற் பிறந்தோர் பலர் பிற சமயம் புகுந்து வருகின்றனர். மதமாறுதல் செய்யாதோரும் தமக்கென வொன்றிலராய், வேளைக்கொரு கோலமும் கொள்கையு முடையராய் வழு வழுப்பான வழுவாழ்க்கை நடத்தித் தம் மிறைவனை நண்ணறியாமல் நழுவுகின்றார் கள். தேவாரம் பெற்ற திருத்தலங்கள் தாமும் பல ஊர்களில் விளக்கம பெரிதும் குன்றிய பரிதாபகரமான நிலையிலுள ளன. சைவசமய வளர்ப்புக்கென ஏற்பட்ட திருமடங்கள் தம் சமய வளாசசிக்கான முயற்சிகளை மேற்கொள்ளாது, பலவேறு லௌகிகத் தொல்லைகளிலகப்பட்டு அல்லற் படுகின்றன. வீட்டிலேனும், கல்லூரிகளி லேனும, கோயில் மடங்களிலேனும் சமய போதனை ஒழுங்காக நிகழாமையால், சைவ சமயததைப்பற்றிச் சைவர் பெரும்பா லோர்க்குத் தெளிவான யாதொரு அறிவும கிடைப்பதரிதாய் விட்டது. அசட்டையும், அறியாமையும, விபரீத ஞானமும் ஒன்று கூடித் தமிழ்நாட்டிற் சைவ சமயிகள் வாழ்வை உலைத்துவிட்டன. இன்னுஞ் சில தலைமுறைகளவரை இந்நிலையே நீடித்து விடுமாயின், சிறப்புச சைவம் செத்தே போகும்.

'சிறப்புச்சைவம் செத்தொழிந்தால் முழு கிப் போவதென்ன? உலகிற்கு அதனுல் என்ன நஷ்டம்?' என்னும் கேள்வி பிறக்க லாம். சைவத்தின் தனிமேம்பாட்டை ஆன் ேறார் பலர் நன்குணர்ந்து பாராட்டியுள்ளார். ஐயங்கொள்வோரைச் சமரச ஞானியா கிய தாயுமானுர் 'ஆகாரபுவனம் - சிதமபர ரகசியம்' என்னும் பகுதியில் அருளிச செய்துள்ள பாடல்களை ஆழ்ந்து நோக்க வேண்டுவல். சைவ நன்னெறி "அம்மை யப்பரே உலகுக்கு அம்மை அப்பர்" என் னுங் கொள்கையில் நிற்பதொன்றுதலால், மக்களனைவரும் அன்பாற் பிணிக்கப்பட்டு மேனெறி யடைதற்குத் தூண்டும் தன் மையது. "முன்னைப் பழம்பொருட்கு முன் னைப் பழம்பொரு"ளாயுள்ள முதல்வன் "பின்னைப் புதுமைக்கும பேர்த்தும் அப் பெறறிய"னுவான் என்று போதித்தலின், அது காலமாறுதலால் கலங்க வேண்டிய நிலையி லிருப்பதொன்றன்று; இக்காலததில் தோன்றும்சிக்கல்களாகிய நாட்டுத்தொல்லை, சாதித்தொல்லை, சமயத்தொல்லை, பொருளா தாரத் தொல்லை, அரசியல் தொலலை, தொழிலாளி முதலாளித் தொல்லை, ஆண் பெண் போட்டித் தொல்லை முதலிய தொல்லையினின்றும் மக்கள் விடுபடுதற்கு வேண்டிய வழிகளைக் காட்டும் மாண்பினையும்

துடையது. இதனைச் சிறப்புடைய சைவம ஏட்டளவில் ஒடுங்கிப் போமாயின், உலகிற்கே ஒரு பெரு நஷ்டமாகும. இனிச சைவ மரபில் தோன்றி விளங்கிய யோகியர், ஞானியர், புலவர் இவர் தம அரும பெரும அறிவும் அனுபவமும பிற்கால உலகிற்குக் கிடைககாது மறைநதுபோமே! இதுவும பெரு நஷ்டமன்றோ? போக்குவரவு சாதன மிகுதியால் பல தேசங்களும நெருஙகிய தொடாபுடையனவாகி, உலகமெலலாம ஒரு பெருங் குடுமபம என்னும குறிககோளை ஒருவாறு மக்கள் உணரத தலைப்படடிருககும இந்நாளில், பல நாடடு ஆன்றோா கூறிய உயரிய உண்மைகளும அனுபவஙகளும் அவசியமாகும். இப்படிக காண்கையில், தண்டமிழ்நாட்டுச சைவப பெருமக்கள் அறிவனுபவங்களும் பொதுவாய் உலகிறகு வேண்டும; சிறப்பு வகையில் தமிழ்நாடடிற்கு வேணடும். ஆதலால சைவததை அதன் சிறபபுருவததிலும் பாதுகாத்தல் நல்லோா கடனும.

உண்மைச் சமயத்தை உயிரென்று மேலே குறிததோம். உயிர் உடம்பொடு கூடியலலது தொழிற்படல் இலலை. அதுபோல் சமயமும், சாத்திரம், அநுட்டானம், கோயில, மடம் முதலிய அமைப்புகள் என்னும உடம்பொடு பொருநதியே பொதுமக்கட்கு உபகரிககும் இயல்பினதாயுள்ளது. இபபடி இவற்றொடுகூடிநிற்கையில்தான் சமயததிற்கு ஆபத்துவிளைகின்றது. ஆயினும் அடியோடு இபபுறக கருவிகளைத தள்ளிவிட வழியிலலை. மக்கட்கு வேண்டிய கருப்பஞ்சாறும் தனிச சாறாக இவபுறகையில் கிடைக்கக் காண்கிலேம். கோதும் சாறும கூடிய கருப்பஞ்செடியிலிருநதே சாறறைப பெறவேண்டியிருக்கின்றது. ஆகவே, சமயக கோட்பாடு, அமைப்பு, சடங்கு, சாத்திரம் என்பவற்றை அளவோடும் எச்சரிப்போடும கொண்டுதான் சமயத்தினால் உலகம் நன்மையடைய வேண்டியிருக்கிறது. உயிரை மறநது உடம்பையே உயிரெனப் போற்றல் பிழையாவது போலவே, உடம்பே வேண்டாம் உயிரே சாலும் என்றலும் பொதுஜனங்கட்கு நன்மை பயவாப பிழைபாடாம். உடமபை அதனளவில் மதித்து, அதனினும்சிறந்தது உயிரென்பதை எந்நாளும் வற்புறுத்தி வருதலே சமய அறிஞா செய்கடன் என்க.

இதுவரை விளக்கியவற்றால், சைவா் நம் சமய விஷயததில அசட்டையோ யிருநததும், விபரீத சமரசம பேசித் நம சமயததின் நல்ல சிறப்பியலபுகளைப் பேணுதிருத்தலும் தவறென்பது புலபபடும். பிற சமய சகோதரர்கள் தந்தம சமயங்களைப் பேணி வருவதையும சைவ நன்மக்கள் உணர்ந்து, அச்சமய சோதரர்களிடமிருந்து கற்கவேண்டிய நல்லனவற்றைக் கற்றுக் கொளளல் மிகவும அவசியமாகும. அவற்றிற சிலவற்றை ஈண்டுக குறிப்பிடந் துணிவாம: முதலில கிறிஸ்துவ சோதரர்கள் சமயத தொண்டாற்றும முறைகள் உலகறிநதவை. அவர்கள் விவிலியநூலை 600-க்கு மேற்பட்ட பாஷைகளில் மொழிபெயர்த்திருக்கிறாாகள். 1928-ல 1,13,89,540 பிரதிகள் விற்பனை செய்யப்பட்டன. இலவசமாக வழங்கப்பட்டவை எண்ணில. இந்தியாவில் மட்டும் 700-க்குக் குறையாமல் கிறிஸ்துவப் பிரசார சபைகள் இருந்து வருகின்றன. மேற்குறித்த ஆண்டில் சமயப் பிரசாரததிற்கென்று சில மேல்நாடுகள் தந்த நன்கொடைப் பொருளின் மொத்தம் 3,89,44,846 சவரன்கள். இப்பெரும்பொருளையும், அதனினும சிறநததாக மதிககவேண்டிய தியாக உணாவுடன வெளிவரும் சமய அறிஞர்களின் துணையையும கொண்டு, அச்சமயததார் எததனையோ பாடசாலைகளையும, சங்கஙகளையும, வைத்திய சாலைகளையும் பல தேசங்களிலும் வைத்து நடாத்தி, எளிய மக்கள துனபங்களைத் துடைதது அவர்களைக கிறிஸ்துவர்களாக்கப் பாடுபட்டு வருகிறார்கள். தீண்டப்படா மரபினரில் பல்லாயிரககணக்கான குடும்பங்கள் கிறிஸ்துவர் முயற்சியால் அறிவொழுக்கங்களிலும் செல்வத்திலும் செல்வாககிலும் முதிர்ந்து விளங்குகின்றன. இபபடிக் கிறிஸ்துவர் உலகெங்குஞ் சென்று மக்கட்கு எல்லாத் துறைகளிலும தொண்டாற்றி வரும் பெருஞ் சிறப்பு சைவர் குறிககொள்ளத் தக்கதொன்று. மற்றொரு பெருநலமாவது அவர்கள் ஞாயிறு தோறும கிறிஸ்துவ ஆண்மக்களையும் பெண் மக்களையும அவ்வவ்வூர்க் கிறிஸ்துவக் கோயில்களில் ஒருங்கே கூட்டி முறைப்

படக் கடவுள் வழிபாடு செய்யப் பழக்குதலும், சமயநூற் பயிற்சி பெற்ற போதகர்களைக் கொண்டு கிரமமான சமய போதனை செய்வித்தலுமாகும். இம்முறையால் இருபாலாருக்கும் அறிவும், கடவுட் பற்றும் ஒருசேர வளர்கின்றன. தத்தம் கடமைகளைத் திறமையோடு புரியும் ஆற்றலும் பெருகுகின்றது. அனுவசியமான விதிகளும் தடைகளும் அவர் கோயில்களில் இல்லை. அவரவர் தனித்தனி வழிபடவேண்டும் என்னும் வரம்பு வகுக்கப்படுகின்றது. பஜனைகள் புராணப் பிரசங்கங்கள் இந்துக்களுக்கு ஓரோ வழி இப்பயனைத் தரினும், கிறிஸ்துவர் கைக்கொள்ளும் முறையை நன்கு தழுவி, இவர்களும் தந்தம் கோயில்களில் அறிவையும் அன்பையும் பெருக்கும் முறையில் வழிபாடும் சமய போதனையும் வாரந்தோறும் நிகழ ஏற்பாடு செய்வது இன்றியமையாததாம். நம்மவருள் காணப்படும் பேதவுணர்ச்சியையும் அறியாமையையும் குறைக்க இது ஒரு பெருஞ் சாதனமாகும். தியாக உணர்வை வளர்க்கக் கிறிஸ்துவப் பெரியோர் வரலாறுகள் பெரிதும் தூண்டும்.

இனி, முகம்மதிய சகோதரர் சமய வாழ்க்கையிலும் நாம் போற்றிக்கொள்ளுதற் குரிய நலங்கள் பலவுள: அவர்கள் ஒரு தெய்வ வழிபாட்டில் ஊன்றி நிற்பவர்கள். சைவர் போல் இறைவன் பிறவான் இறவான என்னும் கொள்கை யுடையவர்கள். வழிபடு முறையை எவ்வளவு சுருக்கல் கூடுமோ அவ்வளவும் சுருக்கி, மனதால் வழிபட முயலும் மாண்பினையுடையோர்; ஒருநாளைக்குக் குறைந்தது ஐந்து முறையேனும் ஆண்டவனை நினைக்கும் வழக்கமுடையோர்; பிறப்பால், நிறத்தால் உயர்வு தாழ்வு பாராட்டாது, மகம்மதியர் எல்லோரும் சகோதரர்களே என்பதைத் தம் அன்றாட வாழ்வில் - வெறும் பேச்சிலன்று - காட்டி வருபவர். ஆதலால் உலகத்தில் பல வேறிடங்களிலுள்ள மகம்மதியர் எல்லோரும் ஒரு பெருங் கூட்டமென்னும் ஒத்துணர்ச்சியையும், அதனால் வரும் பலத்தையும் பெற்றவர்களா யுள்ளார்கள். கிறிஸ்தவர்களைப் போலவே இவர்களுக்கும் சமயபோதனைக்கு ஏற்பாடுண்டு. போதகர்கள் ஒரு சாதியை அல்லது குடும்பத்தைச் சேர்ந்தவர்களாயிருக்கவேண்டும் என்னும் கட்டுப்பாடில்லை. அவரவர் தகுதிமட்டுமே கவனிக்கப்படுகின்றது. அவர்களிற் சிறுவரும் மற்றோரும் ஐந்துமுறை நாடோறும் ஆண்டவனை வழிபட்டு வருவதோடு, ரமசான் மாதத்தில் ஒருபோது மட்டும் உண்ணும் விரதத்தைக் கடமையாய் அநுட்டித்து வருகின்றனர். அதுமட்டுமன்று: தமசொத்தில் குறித்த ஒரு பங்கைத் தம்சமய சகோதரர் நன்மைக்கென ஆண்டுதொறும் மனமாரக் கொடுத்துதவும் தியாகப் பழக்கம் அவர்கள்பால் திகழ்கின்றது. செல்வக் குடும்பங்களில் அத்தொகை பலலாயிரக் கணக்கில் செல்லும். அதுபற்றி அவர் மனம் சுருங்குவதில்லை. ஏழைகட்குத் தாராளமாய் வழங்கும் இயல்பு அவர்கட்கு எந்நாளும் உண்டு. மற்றுமொன்று குறிப்பிடத் தக்கது: ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் முகம்மதிய ரனைவரும் மசூதிகளில் தொழ வரும் வழக்க முடையவர்கள். அதுகாலை அவர்கள் வேதத்தைக் குத் தக்காரால் பொருள் விளக்கப்படுவதோடு, அவர் ஊரிலுள்ள சமய சோதரர்களின் லௌகிக க்ஷேமம் வைதிக க்ஷேமம் இரண்டையும் பற்றிய விசாரணை செய்யும் கடமையும் நிறைவேற்றப்படுகின்றது. இத்துறைகளில் வேண்டிய உதவி புரிதற்கு அவர்கள் விரைகின்றார்கள். சமய நூல் வல்லோரையும் நல்லோரையும் போற்றிப் பொருளுதவி முதலிய உதவிபுரிந்து அன்பு காட்டுவதில் முகம்மதிய சகோதரர்கள் சாலச் சிறந்தவர்கள். சமயங் கற்பிக்கப்படாத கல்வி பயனற்றதென்னும் கொள்கையுடைய இவர்கள், சமய விஷயத்தில் நடுநிலைமை வகித்துவந்த அரசாங்கத்தின் கொள்கையை ஒருவகையில் அசைத்து, அரசாங்க உதவி பெறும் பாடசாலைகளிலும் முகம்மதியர்க்குச் சமயபோதனை நிகழ்ந்து வருவதற்குரிய ஏற்பாட்டைச் செய்துவிட்டனர். அவர்கட்குள்ளிருக்கும் ஒற்றுமை உலகறிந்தது.

கிறிஸ்துவமும் இஸ்லாமும் தம் மதத்தைப் பரப்புதலில் அதிக தீவிரமான முயற்சியுடையவை. இவற்றிற்கு ஆள் தருவோர் இந்துக்கள்! இந்துமத உண்மைகளையும் இவ்விருமத உண்மைகளையும் அறிந்து சீர்தூக்கிப் பார்த்தபின் இந்துக்கள் அப் புறமதம்

புகுகின்றார் என்பதில்லை. சமய லங்கனம் செய்வோரிற் பலர் இந்துமத ஞானம ஏதுமில்லாதோர். இம்மதத்தைத் தழுவி நிற்கும்வரை இம்மையில் தொல்லைகள் பல இருத்தலறிந்து, அவற்றை நீக்க அன்பொடு பிறர் வந்து அழைக்குங்கால் அங்குச் சென்று அறிவு, செல்வம், செல்வாக்கு, மரியாதை முதலிய நலங்களைப் பெற ஆண்டுச் செல்பவர்களே. இப்படிச் சென்றுகொண்டிருக்கும் இந்துகள் தொகை பெருகிக்கொண்டே இருக்கின்றது. 1911-ம் ஆண்டுவரை இந்துக்கள் தொகை 100க்கு 15 தான் வளர்ந்தது. அதேகாலத்தில் கிறிஸ்துவர் தொகை 100க்கு 100 ஆகவும்,40 ஆண்டுகளை நோக்கினால் 100க்கு 200 ஆகவும் இந்தியாவில் வளர்ந்துள்ளது. இன்னும் தீண்டா வகுப்பு இந்துக்கள் குடும்பம் குடும்பமாய்ப் புறமதம் போய்க்கொண்டே யிருக்கின்றனர்.

இன்னும் சிறிது காலம் தென்னிந்திய இந்துக்கள் குறுகிய நோக்குடனும் சுயநலத்துடனும் இருந்து,சிறுசண்டையும் கலகமும் தம்முள் விளைத்துக்கொண்டு தம்மெளிய சகோதரர்க்குச் சமயஞானம் புகட்டாது வாளா கழிவரேல், தென்னாட்டிலும் இந்துகள் சிறுபான்மையினராய்ப் போவது திண்ணம். கண்ணுள்ளோர் காணக் கடவர்; காதுள்ளோர் கேட்கக்கடவர்.

இனி,சிக்கியரிடத்தும் கற்கவேண்டிய படிப்பினைகள் சிலவுள: அவர்களும் புறவழிபாட்டில் ஆடம்பரத்தைக் குறைத்து விட்டவர்கள். சிக்கியரனைவரும் ஒரு குழுவினர் என்னும் உணர்ச்சியை வளர்த்து வருபவர்கள்; பிறப்பாற் சாதி பாராட்டாதவர்கள் ; அனைவரும் சகோதரர் சமானஸ்தர் என்று எண்ணி யொழுக முயல்பவர்கள். அவர்கள் குருமார்களுள் ஒருவராகிய குருகோவிந்த சிங்கு என்பார் ஒரு முறை தமது சீடரொருவரையே தமக்குத் தீக்ஷை பண்ணும்படி செய்தார் என்னில், அவர்கள் சமத்துவ நாட்டத்தை என்னென்று வருணிப்பது !

இந்துக்களில் ஒரு பிரிவினராகிய ஆரிய சமாஜத்தாரை நோக்குகையில், அவர்கள் இந்துக்களுக்கு நேர்ந்துள்ள ஆபத்தை யுணர்ந்து, அவர் மதத்தின் குறைபாடுகளை அகற்றி, அதன் தூய நிலைமையில் அதைப் பரப்பும் தீவிர முயற்சியுடையராய் இருக்கின்றனர். அவரவர் தகுதியாலேயே சாதி ஏற்படும் என்று கொண்டு, தம்முள் ஒழுகி வாழ்கின்றனர். தீண்டாமையைத் தீக்ஷையால் தொலைத்து, தாழ்ந்தோரை உயர்ந்தோராக்கி வருகின்றனர். அவர்களுள்ளும் தியாக உணர்வு சிறந்து விளங்குகிறது.

ஒவ்வோர் ஆரிய சமாஜியும் தம் வருவாயில் ஒரு குறிப்பிட்ட பகுதியைச் சமயத் தொண்டிற்கும் கல்வி வளர்ச்சிக்குமென்று மனமுவந்து அளித்து வருகின்றார். இவர்கள் பல பாடசாலைகளையும், உயர்தரக் கல்லூரிகளையும், குருகுலங்களையும் வைத்து நடத்திப் பல்லாயிரம் மக்களை உடல் வலிவு, அறிவு நலம், தியாகவுணர்வு, தீரம் முதலிய நன்மைகள் நிரம்பப் பெற்ற வீரர்களாக்கி நாட்டுக்குதவி வருகின்றனர் ; மலைவாசிகளாகிய எளிய மக்களிடையே பிரசாரஞ் செய்து அவர்களையும் இந்துக்களாக்கி வருகின்றனர்; புறமதம் புக்கோர் மீண்டும் இந்துக்களாக விரும்பினால், அவர்களை அன்புடன் வரவேற்கின்றனர்.

மேற் குறித்த பல சமயச் சகோதரர்கள் சமயப் பற்றைச் செயலில் காட்டி வரும் சிறப்பு, சைவர் கவனத்தையும் இழுக்கத் தக்கதொன்றாம். இப்போது நம் நாடும் நம் சமய சகோதரர்களும் அடைந்துள்ள நிலையைஉள்ளபடிஅறிய மனமும்முயற்சியும் இன்றி, சுயநலச் சிறுவாழ்வு வாழ்ந்து ஒழிந்துபோதல் 'சைவமாம் சமயம் சாரும்' நல்லூழ் படைத்த நன்மக்கட்குச் சிறிதும் அழகாகாது. ஆதலால், தம் பண்டைப் பெரியோர்கள் மாண்பையும், தமது பொறுப்பையும் உணர்ந்து, தாமே செய்து தீரவேண்டிய சைவசமயப் பாதுகாப் பென்னுந் தொண்டைச் சைவரனைவரும் ஒன்று கூடி ஆற்றிவருதல் மிகவும் அவசியமாகும். மேலே, பிற சில சமய சகோதரர்கள் பால் காணப்படும் நலங்கள் விவரிக்கப்பட்டன. இவை போல்வன இன்னும் சில உள. இவற்றைச் சிந்தை செய்து, சைவர்கள் தம் கோயில்களையும், மடங்களையும், சபைகளையும் சமூக வாழ்வினையும் கல்வி முறைகளையும் வேண்டிய அளவு திருத்தியமைத்துக்கொள்ளும் கடப்பாடுடையர்.

செல்வாக்குள்ள இப் பிறசமய சகோதரர்களிலும் காணும் சமயநலங்களில் சார

மானவை, சுத்தமும் சுருக்கமும் பொருந்திய வழிபாட்டு முறை, அவ்வச்சமயத்திற சோக தோரணைவாகும் சமய வுரிமையிற் சமத்து வம், வெறும பிறப்பில் உயர்வு தாழ்வு காட் டாமை, சமயவளர்ச்சியில் ஆர்வம், சமயப் பாதுகாப்புக்காக யாவரும் பொருளுதவி செய்யக் கட்டான ஏறபாடு, எளியோர்க கிரங்கிச் செய்யும தொண்டு, தியாக புத்தி, ஒற்றுமையால் வரும் பலம முதலியவாம். இவற்றில் எதெதை எவ்வளவில் சைவ மக்கள் பின்பற்றுவது நலம், அல்லது சாத்தி யம் என்பதைப்பற்றிச் சைவ அறிஞர்கள் தனித்தும் ஒன்றுகூடியும நீர ஆலோசித்த லும், முடிந்த ஆலோசனைகளைத் தம் சமய சகோதரர்கட்குத் தக்கவாறு அறிவித்த லும், அறிந்தபடி சைவ சமூகம் நடத்தலும் மிகவும் அவசியமாம். இதற்கெல்லாம உரு வான வேலைத்திட்டமொன்று தேவை. அதை நடத்துவிக்கத் தக்க தலைவர் வேண் டும். பிற மதத்துள்ளோரைச் சைவம சேர் க்க முயலுவதைச் சைவர் தம் தற்காலக் கடமையாகக் கொள்ள வேண்டுவதில்லை. சைவத்தில் பிறந்தோர் தஞ்சமய மறியாமல் நாஸ்திகராகவோ புற மதத்தினராகவோ போவதைத் தவிர்க்கவேண்டி, அவர்க்கு அவர் சமய உண்மைகளைப் போதித்தலும, அவர்பால் அறிவும் அன்பும், ஒற்றுமையும் முறுகி வளரத் தொண்டாற்றலுமே முதற் கடமையாகக் கோடல் சாலும்.

தமிழ் நாட்டிலுள்ள சைவசமயிகளனை வரும் தத்தம்மூர்ச் சிவாலயங்களைத் தம் முயிரென மீண்டும போற்றி, அவற்றை அறிவும் அன்பும தரும சமயசக்தி வளர்ப் பிடங்க ளாக்கவேண்டும். அங்கு வாரத்திற் கொருமுறையேனும இருபாலாரும் குறித்த நேரத்தில் வழிபாடாற்றக் கட்டாயமசெல்ல வேண்டும். திருவுருவ வழிபாட்டின் பின் னர், ஒரு குறிப்பிட்ட நேர அளவு ஒரு திட்டப்படி சைவசமய போதனையைத் தக்க புலமையும் ஒழுக்கமும் சொல்வன்மையும் உடைய சைவர்களைக் கொண்டு நடாத்திவர வேண்டும். அப்போதகர்க்கு மாதம் நாற்பது ஐம்பது ரூபாய் கோவில் வருமானத்தி லிருந்தோ, அது முடியாவிடத்து அவ்வவ் விடத்துச் சைவ சமயிகள் தாங்களே விதித் துக்கொள்ளும் தலைக்கட்டு வரி வசூலி லிருந்தோ, அன்புடன் ஊதியமாய் அளித்து வரவேண்டும. அவரைக் கொண்டு ஒரு குறிப்பிட்ட எல்லைக்குட்பட்ட கிராமங்களி லெல்லாம் பிறமத தூஷணை சிறிதும் கல வாத சைவ சுபக்ஷ சமயபோதனை நிகழ்த்த வேண்டும்.

இதை மேற்பார்ப்பதற்குப் பெரிய சிவா லயங்களையோ ஊர்களையோ ஒட்டிச் சைவ சபைகள் இருக்கவேண்டும. இவை யாவும் ஒன்றோடொன்று தாலுகா சபைகளிலும் ஜில்லா சபைகளிலும் இணைந்திருக்க வேண் டும. இவை ஒரு மாகாண சபையில் இணைக் கப்படவேண்டும். இது விரைவில் செய்து முடிக்க முடியாததொன்றெனக் கண்டால், அங்கங்குள்ள சைவ சபைகள், மாகாண சைவத் தனிப் பெருஞ் சபையாய்ச் சென்ற 28 ஆண்டுகளாய் நிலவிவரும சைவ சித் தாந்த மகா சமாஜத்தோடு நேரேயே சேர்ந்துகொள்ளலாம். தமிழ்நாட்டுச் சைவர் இப்படித் தம்முள் ஒற்றுமையையும் சிவ அன்பையும் வளர்த்துக்கொண்டு, தெலுங்கு, கன்னட, மலையாள நாட்டுச் சைவ சகோ தரர்களோடும் அன்பு பாராட்டவேண்டும். ஈழமும் தமிழகமும் ஒன்றெனவே கொள்ள வேண்டும். பிறகு வடநாட்டுச் சைவரோடும் அளவளாவ வேண்டும். ஆங்காங்குள்ள சிவாலயங்கட்கு யாத்திரை செய்தலும், அங்கே சபைகூட்டலும, ஆங்கிலம ஹிந்தி முதலிய மொழிகளிலும் சைவப் பத்திரிகை கள் வெளிவர ஏற்பாடு செய்தலும் ஏற்ற சாதனங்களாம். அதற்குமேல், பர்மா, மலேயா, தென்னாப்பிரிக்கா முதலிய வெளி தேசங்களோடும் கூடச் சமயத் தொடர்பு காட்டித் தொண்டாற்ற முயலவேண்டும்.

இப்படித் தண்டமிழ் நாட்டிற்கு அப்பா லுள்ள சைவரோடு சகோதர உரிமை பாராட்ட முயலுங்கால், அவ்வத் தேயங் களின் சீதோஷ்ணநிலைமை, சரித்திரம் இவற் றின் பேதங்களால் மக்களுள் காணப்படும் நடை உடை பாவனை மாறுபாடுகளால் மனம் வேறுபடலாகாது. "எந்நிலையில் நின்றாலும் எவ்வேடங் கொண்டாலும் மன்னியசீர்ச் சங்கரன்தாள்" அவர்கள் மற வாதிருக்க முயலுவோர் என்ற அவ்வளவி லேயே அவர்களைச் சைவ இனத்தவ

ரெனக் கொண்டு மனமகலந்து அன்பு பாராட்டவேண்டும்.

இக்கனவுகளெல்லாம் நனவுகளாகுமுன், சைவத் தமிழ்நாட்டில் சைவததிற பிறந் தோரிடையே சைவம நிலைததுநிற்றற்கான சமயத்தொண்டு புரிநது, சிவனருளும் ஆள பலமும தேடிககொள்ளல் அவசியமாகும். திருநாளைப்போவார் நாயனுர் திருமரபினர் பிறப்புரிமையில் சைவ சமயிகளேயாவர். அவர்களை ஸ்ரீ இராமாநுஜர் திருக்குலத் தார் என்று சிறப்பித்தார். அவர்களை இனி யேனும் உயர்வகுபபுச சைவ நன்மக்கள் தம் மவரெனக்கொண்டு சமய உரிமையளிததும் வழங்குதல் தருமமாம். உடனுண்ணலும, கொள்ளல் கொடுததலும அவசியமென்று கூறவில்லை. சாதி, சமயததில் மாயும் சமயமானது அனுபவததில் மாயும் என்பது ஆன்றோர் கொள்கை. சைவசீலமும திரு நீற்றினொளி விளக்கமும் பையப பையச் சேரிகளிடையே குடிபுகுமாயின், சேரிகளே சிவபுரங்களாகும். தீண்டாமையை ஒழிக கும் உபாயம் நம்பரமாசாரியராகிய திரு ஞானசம்பநதப்பெருமான் திருவாக்காலும், அவர் திருநீலகண்ட யாழ்ப்பாணரை அவர் காலத்தில் கௌரவித்த முறையாலும் இனிது விளங்கும.

“கொல்வா ரேனும் குணம்பல நன்மைகள்
இல்லாரேனும் இயம்புவ ராயிடில்
எல்லாத தீங்கினும் நீங்குவர் எனபரால்
நல்லார் நாமம நமச்சிவாயவே”

என்ற அவர் திருவாக்கே தாழ்த்தப்பட் டோர்க்குச் சைவர் எவ்வாறு சேவை செய்ய வேண்டுமென்பதை உணர்த்தவல்லதாகும். சகோதர சமயமாகிய வைணவத்தில் உள்ள திருப்பாணழ்வார், நமபாடுவார், மாறனேர் நம்பி என்னும பெரியார்கள் சரிதங்களும சைவர் உய்த்துணரத் தக்கவை.

மேலே விளக்கியவாறெல்லாம் சைவர் தம் அன்பைக் காலதேசவர்த்தமான மறிந்து செயலிற் காட்ட முற்படாவிடில், சைவம இருந்த இடம தெரியாமல் ஒடுக்கம் புகுந்து விடும். ஆனல், சாவா மூவாச் சங்கரன், மக்கள் தன்தாளடைய வருந்த தனிப பெருநெறி இஙஙனம அழிந தொழியப் பார்த்திரான என்னும் ஒரு நமபிக்கை உள்ளது. ஆதலினன்றே, இந்நாளின் தாழ் நிலையிலும ஆங்காங்கு சுருங்கிய அளவி லேனும் சைவ போதனையும் வழிபாடும காணப்படுகின்றன. ஆயினும இக்குறைநிலை இபபடியே நீடித்திருத்தல் ஆபத்தாம். இறைவன் உள்ளிருநது தூண்டலாலேயே அறிஞர்கள் சிலர் நமமை உறக்கத்தினின் றும விழித்தெழச் செய்கின்றனர்கள்; அரன் பணிக் கழைக்கின்றனர்கள். ஆதலின், ‘சைவசமயமும் அதைப்பற்றி நிற்கும் நாகரிகமும் நல்லன. அவற்றைப் பேணி வருதல் நம் கடமையே’ என்று உணருமு ஒவ்வொரு சைவசமயியும் தன் குடுமபக் கடமையில் தான் வைக்கும் தயாவை நூறு கூறிட்டு, அத்தில் ஒரு கூறேனும சிவம பெருக்கும் திருததொண்டில் வைககத் தலைப்படல் வேண்டும. அப்படிச் செய் யின், “கோதில் சைவக் குல மிக” வாழும். ஏனைச் சமயங்களும் வாழும். தீயதெல்லாம் ஆழும. “என்றும் இன்பம” பெருகும் “உலகெலாம்.”

# சைவமாதர் சைவத்தை வளர்க்க வேண்டும்

[திரு. திருவரங்க நீலாம்பிகையார்]

III

சைவம் முழுமுதற்கடவுளாகிய சிவத்தை வழிபடுவது. சிவம் பிறப்பு இறப்பு இல்லாதது ; எங்கு முள்ளது; இன்ப வடிவினது. பேரறிவு பேராற்றல் பேரின்பமுடைய அறிவுப் பொருளின் சேர்க்கையினாற்றான் பிறந்திறக்கும் உயிர்கட்கும் பேரறிவும் பேராற்றலும் பேரின்பமும் உண்டாகல் வேண்டும். அறிஞர் சேர்க்கையால் அறிவும், வலிவுடையார் சேர்க்கையால் வலிவும், அன்புடையார் சேர்க்கையால் அன்பும் இன்பமும் வருதல் கண்கூடு. அது போல் அறிஞர் எல்லாரினும் வலிவுடையார் எல்லாரினும் அன்புடையார் எல்லாரினுஞ் சிறந்த சிவத்தின் துணை நமக்கும் எல்லா உயிர்கட்கும் இன்றியமையாதது. இறைவ னுதவியினாலேயே பிறந்தும், இறைவன் செயலினாலேயே மறைந்தும் போகும் நமக்கு வேறு யார் நிலையான துணையாகக் கூடும்? நாம் எல்லாரும் பிறப்பவரும் இறப்பவருமாயிருக்கையில், நாம் ஒருவருக்கொருவர் துணையாவதெல்லாம், சில நாளோ, சில திங்களோ, சில ஆண்டோ, அதற்குமேயில்லை.

அறிவின் முயற்சியினால்தான் உலகமெல்லாம்-உலகத்துள்ள செயல்களெல்லாம் நடக்கக் காண்கின்றோம். உயிர்கள் அறியாமையில் அழுந்தி உறங்கியோ மயங்கியோ கிடக்கையில் ஏதொரு முயற்சியும் இல்லை. ஆகவே, இந்நிலவுலகத்தின் நிகழ்ச்சிகளுக்கும், இதற்கும் அப்பாலுள்ள எண்ணிறந்த உலகங்களின் நிகழ்ச்சிகளுக்கும், இவ் வுலகங்களில் உள்ள புற் பூண்டு முதல் மக்கள் ஈறான எல்லா உயிர்களின் பிறப்பு வளர்ப்பு இறப்பு முதலான நிகழ்ச்சிகளுக்கும் ஒரு பேரறிவு முதலாய் நின்றன்றோ அவை தம்மை நடத்தல் வேண்டும்? கடவுள் இல்லை யென்றும், கடவுளிருந்தாலும் அவரையறிய வேண்டுவதில்லையென்றும், அறிந்தாலும் அவரை நினைந்து வணங்க வேண்டுவதில்லையென்றும் சொல்வோர் சொல் எதனை யொத்திருக்கின்றதென்றால், 'எனக்குத் தாய் தந்தையர் ஆசிரியர் அன்புடையார் இல்லை, இருந்தாலும் அவரை அறிய வேண்டுவதில்லை, அறிந்தாலும் அவரை நினைந்து அவர்பால் அன்பு பூண்டு வணங்க வேண்டுவதில்லை' என்று ஒருவன் சொல்வதையே ஒத்திருக்கின்றது. என் அறிவே சிறந்ததென்பவன் தன் தாய் இன்றித் தந்தையின்றி ஆசிரியர் இன்றிக் கற்றார் உதவியின்றி அவ்வறிவைப் பெற்றதுண்டோ? வரவர அறிவிற் பெரியராதற்கு, வரவர அறிவிற் சிறந்தார் சேர்க்கையும் அவர் எழுதிய நூற் பயிற்சியும் நமக்குக்கட்டாயமாக வேண்டப்படுதல் போலவே, எல்லா அறிவினுஞ் சிறந்த பேரறிவு பேரின்பத்தைப் பெறுதற்கு அவை யெல்லாம் ஒருங்குடைய சிவத்தின் சேர்க்கை இன்றியமையாததென்க.

நம்போற் பிறந்து இருந்து துன்புற்று இறந்து மறுமை யுலகங்களில் அலறித் திரியும் பேய்களைத் தெய்வங்களாக வணங்குவோர், அப்பேய் வடிவைப் பெற்று மறுமையில் அலறித் திரிவார்கள். அமெரிக்காவில் ஒரு கல்லூரியில் விலங்குகளின் அமைப்பை ஆராய்ந்து படித்த ஒரு மாணவன், ஓர் எருமை மாட்டின் அமைப்பிற் கருத்தைச் செலுத்தி அதனை இரவு பகல் நினைந்துவர, அவன் சிலநாளில் தன்னை ஓர் எருமை மாடாகவே கருதி அதற்குரிய செயல்களைச் செய்தனன் என்று ஓர் ஆங்கிலப் புலவர் மிக நுணுகி ஆராய்ந்தெழுதிய மனநூலில் எழுதியிருக்கின்றார். ஆகையால், நம் சைவத் தாய்மார்கள் பேய்களைத் தெய்வமாக நினைந்து வணங்குதல் தமக்குந் தம்மைச் சேர்ந்தார்க்கும் பெருந் தீமை

செய்வதுடன், தம் வயிற்றிற் பிறக்கும் பிள்ளைகட்குந் தீமை செய்தவராவார்கள். எல்லா அறிவும், எல்லா ஆற்றலும், எல்லாச் செல்வமும், எல்லா இன்பமும ஒருங்குடைய சிவததையும் அம்மையையும், நம் சைவ ஆசிரியரான மாணிக்கவாசகர், திருஞான சம்பந்தர் முதலாயினரையும் மிக நினைநது மிக வணங்கி மிக வாழ்த்தி வணங்குதலே நமக்கும் நம்மைச் சார்நதாக்கும அளவுபடாத பெரும் பயனைத் தரும.

மற்றைச சமயங்களும் மற்றை மொழிகளும் தத்தம் ஆசிரியர் பெயராலும் தத்தம் மக்களின் பெயராலுந் தம் மதங்களைப பௌத்தம், கிறித்துவம், மகமதியம், மத்வம், இராமாநுஜம் என்றும், தம் மொழிகளை ஆரியம், ஆங்கிலம், கிரேக்கம், எபிரேயம், சீனம் என்றும் முறையே வழங்கிவரச, சைவருந் தமிழரும் ஆகிய நாம் மட்டும் இன்ப வடிவினனும் எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளாயுள்ள சிவத்தின் பெயரால் '.சைவம்' என்று நமது சமயததையும், அச் சிவத்தின் இன்ப இயல்பைத தன்கண் உடைமையால் இனிமை யென்னும் பொருளுடைய 'தமிழ்' என்னும் பெயரால் நமது தமிழ் மொழியையும வழங்கி வருகின்றோம். இத்துணைச் சிறந்த தமிழைக் கற்றுச் சிவத்தை வணங்குதலையே நாம் உறுதியாகப் பிடிததல் வேண்டும். மற்றை மொழிகளைத் தமிழ் கற்ற பிறகுதான் கற்றல் வேண்டும்.

குறிப்பு:—எனக்குத தெரிந்தவரை சைவ மாதர் சைவததை வளர்க்க வேண்டும் என்னும் பொருள்பற்றி மிகச் சுருக்கமாக வரைந்தேன. இதனைப் பெருக்கிப் பின்னல் வெளியிடத திருவருள் துணை புரியுமென்று நம்புகிறேன.

"சி. போ. மலர்."

## தூத்துக்குடிச் சைவசித்தாந்த சபைப் பொன் விழா

# சைவ இளைஞர் கூட்டம்

### திரு. தி. கி. நாராயணசாமி நாயுடு தலைமை உரை

திருச்சிற்றம்பலம்

**பொன்னனே!** புலவர்க்கு நின்புகழ் போற்றலாம்
தன்னனே! தன்னைப் புகழ்ந்திடுந் தற்சோதி
மின்னனே! செக்கர் வானத்(து) **இளஞாயிறு**
அன்னனே! பரவையுண் மண்டளி அம்மானே!—**சுந்தரர்.**

திருச்சிற்றம்பலம்

**தோழர்களே!**

இவண் குழுமியுள்ள சைவ இளைஞர் அவைக்குத தலைமை தாங்கப்பணித்த இச்சபையார்க்கும், பிற உழுவலன்பர் கட்கும் நன்றியறிதலான என் வணக்கம். இளையனேன் நெறியும் அறிவும் இல்லேன்; ஆதலின் அடியேன் பணியில் குற்றம் குறை நிகழுமேல் மன்னிக்க.

அறம் வீழ்ந்து, மறம் வீறிட்டு, வான் நீர் சுருங்கி, வையம் விலைமாறி, தமிழ் மன்பதை பல்வகை வற்கடத்தில் ஆழ்ந்துள்ள இந்நாளில், இச்சைவ சபை நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்நது, தன் பொன்விழாவைக் கண்ட சிறப்பு, சைவத்திற்கு ஏற்பட்ட சிறப்பெனலாம். இத்தகைய அறிவியல் தொண்டிற்குத் தோன்றாத்துணையாய்த் துணை செய்துவரும் நற்றுணையை வாழ்ததுகிறேன்; வழுத்துகிறேன்.

இச்செந்நெறிச் சமயததை ஒல்லும் வகையெல்லாம் சைவச் செம்மல்கள் பண்டுதொட்டே ஓம்பிவந்தார்கள். 'இரு

சுடாககுறு கண தீர்'தத கானவர் சிஙக மாம் திண்ணன் 'ஒபபமோர் அன்பு' யாரே வாய்க்கப்பெற்ருர்? அப்பூதியடிகள், மெய்பபூதி பெறப் பெறற மூத்த சேய் - பெறலரும் புதல்வன் அல்லனே? ஒரு குடிக்கு ஒரு மகனும - சிறுவன் சீராளன் - சிறுததொண்டர் தனிப் புதலவனன்ருே? மண்கண்ட வெண்குடைக்கீழ் மேறபட்ட மன்னரும் தம் பண் கண்ட அளவில் பணியச் செய்த குமரகுருபரர் - சைவக் கொழுந்தல்லவோ? இன்னேரன்னவர் பலராதல் கண்டு, சைவத்திற்கும் இளைஞர்கட்கும் தொன்று தொட்டு வரும் தொடர்பைக் கூர்ந்து நோக்குக.

### 'ஒருவனே தேவன்'

இது திருமூலர் திருவாக்கு; 'ஒன்று கண்டீர்! உலகுக்கொரு தெய்வம்' என்பதூஉம் அவர் திருவார்த்தை. 'ஒன்றென்றிரு தெய்வம்' என்பது திருவெண்காடர் திருவாய்மொழி. குரவன்மார்அறிவுச்சுடர்கொளுத்தி இவ்வொளிநெறியில்கண்ட 'மூர்ததி, மூவுலகுக்கு ஒருவன்'.அவ்'வொருவன் பலஉருவன்' என்பது தமிழ்ககிழமை ஞானர் அருளிப்பாடு. இவற்ருன் உருவு கண்டு எள்ளாமையும் பேதித்துப் பிணங்காமையும் வேண்டப்படுவதைக் காண்க.

### பேராயிரம்

இது கடவுளொருமை காட்டிய திருமுறையில் செறிந்து கிடக்கும் தோலா மொழி.

பத்துநூறு பெயரனே 1 : 56 : 11*
ஈறிலாஞானப் பேராயிரம் பேரினன் 3: 26:5
ஆயிரம்பேர் உகந்தானும் 4 : 4 : 8
ஆயிரம்பேர் அம்மானை 4 : 7 : 5
பேராயிரம் பரவி 6 : 54 : 8
பேரும் ஓர் ஆயிரம்பேர் 7 : 18: 3
பேரும் ஓர் ஆயிரம் என்பரால் 7 : 44: 7
பேர் ஓர் ஆயிரம் உடையானை 7 : 56 : 11.

'ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்று மில்லார்க்கு ஆயிரம் திருநாமம்' என்ருர் மணிவாசகனர். இவ்வாயிர அளவு கடநது மலர்நதருளியதுங் காண்க.

எண்ணுயிரங் கோடி பேரார்! 6 : 21 : 8
எண்ணுயிரநூறு பெயராய்! 6 : 57 : 9.

அளவிலை யார்க்கும் அறிவறியான் திருநாமங்கள், எண்ணரியன என்ற தேவாரத் திருமொழிகளுமுண்டு.

பல்லாயிரம் பேரினர் 3 : 27 : 7
எண்ணரிய திருநாமம் உடையாய்! 6: 31: 4.

எந்நாட்டவருக்கும இறைவனுன தென்னுடைய சிவன் ஒருவனே, தேவன என்றருளிய விடத்து, அவன் பேர் எல்லையற்ற அளவென அருளியது எற்றிற்கு? பன்னுட்டில் பன்மொழியில வழங்கும பல நாமங்களைப் பற்றியன்ருே? இவ்வறி வுறுத்தலை நினைந்து, இவ்வொருமை கூட்டிய இவ்வுலகப் பொதுச் சமயத்தில் பிறக்க ஊழ்பெற்ற நாம், நாமரூபங்களால் அலமநது போதல் வேண்டா.

### ஒன்றே குலம்

இறை ஒருமை கண்ட சமயத்தில், வாழ்க்கையில் வகுத்துக் காட்டும் சாதி, குலம பிறப்பாய நீத்தாயகத்தில் புகுவோமாகில் கரையேற வழிதுறையொன்றில்லை. 'தயாமூல தன்ம'மென்னும தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தோர்க்கெல்லாம் நலங்கொடுத்த நாயன்மார் இவற்ருல் சலித்தமை காண்க.

சாதி குலம் பிறப்பெனனுஞ் சுழிப்பட்டுத் தடுமாறும் ஆதமிலி 8 : 31 : 5
சாதி விடாதகுணங்கள் நம்மோடு சலித்திடுமாகாதே 8 : 49 : 8
கோத்திரமுங் குலமுங் கொண்டெனசெய்வீர் 5 : 60 : 3
குலங்கள் எனசெய்வ? 5 : 77 : 8
குலங்கெடுத்துக்கோள்நீக்கவல்லான் 6:20:6.

### தமிழ்

**சேந்தமிழ்த்திறம் வல்லீர்!**

நந்தம் மொழியும், தோத்திரம் சாத்திரம் பயின்ற மொழியும் தமிழாக,

* 1-வது திருமுறை 56-வது பதிகம் 11-ம் பாட்டு.

நாம் சங்கப்பனுவல்களையும காவியங் களையும் ஏனைய இலக்கிய இலக்கணங் களையும் எனுமாறேனும் ஆதரிக்கிறே மில்லை. 'மதுரைத்தொகை'யில் காணும் கடவுள் வணக்கங்கள் சிததாநதச செந தேன் பிலிற்றுதல் காண்க.

நீலமேனி வாலிழை பாகத(து)
ஒருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை உலகும் முகிழ்த்தன முறையே.

—ஐங்குறு நூறு.

கார்விரி கொன்றைப் பொனனேர் புதுமலர்த்
தாரன மாலையன் மலைநத கண்ணியன்
மார்பி னஃதே மையில் நுண்ஞாண் ;
நுதல(து) இமையா நாட்டம ; இகலட்டுக்
கையது கணிச்சியொடு மழுவே, மூவாய்
வேலும் உண்(டு)அத தோலா தோற்கே ;
ஊர்நத(து) ஏறே ; சேர்நதோள் உமையே ;
செவவான் அன்ன மேனி; அவவான் [ற(று)
இலங்குபிறை அன்ன விலங்குவால் வையெயி
எரிஅகைந்தனனஅவிரநதுவிளங்குபுரிசடை
முதிராத திங்களொடுசுடருஞ்செனனி
மூவா அமரரு(ம்) முனிவரும் பிறரும்
யாவரும் அறியாத தொனமுறை மரபின
வரிகிளர் வயமான உரிவை தைஇய
யாழ்கெழு மணிமிடற் றநதணன்
தாவில் தாள்நிழல் தவிர்ந்தன்றால் உலகே.

—அகம்.

கண்ணி கார்நறும் கொன்றை, காமர்
வண்ண மார்பில் தாரும் கொன்றை ;
ஊர்தி வால்வெள் ளேறே, சிறந்த
சீர்கெழு கொடியும அவ்வே றெனப , [றை
கறைமிட றணியலும் அணிநதன (று), அக்க
மறைநவில் அந்தணர் நுவலவும் படுமே ;
பெண்ணுரு ஒருதிறன் (ஆகின(று), அவவுரு
தன்னுள் அடககிக் கரக்கினும் கரக்கும் ; [த
பிறைநுதல் வண்ணம் ஆகின்(று), அப்பிறை
பதினெண் கணனும் ஏத்தவும் படுமே ;
எல்லா உயிர்க்கும் ஏமம் ஆகிய
நீரற(வு) அறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த அருநதவததோற்கே.

—புறம்.

தாமரை புரையுங் காமர் சேவடி
பவளத் தன்ன மேனித திகழொளி ;
குன்றி யேய்க்கு(ம்) உடுக்கை ; குன்றின்
நெஞ்சுபக வெறிநத வஞ்சுடர் நெடுவேற்
சேவலங் கொடியோன் காப்ப,
ஏமம் வைக லெய்தின்றால் உலகே.

—குறுந்தொகை.

இவற்றில் காணும் ஏமம், இன்பம் - சேமநிதி (திவாகரம்); திருநீறு (பிங கலம); பொன் (பெருங்கதை) ; காவல் (உரை) ஆகிய சொற்களுக்கு நேராதலைச் சிநதிகக.

திருமுறைகளில காணும் கைபுனைந்து இயற்றாத் தமிழ் மாருதததின் கவின் பெருவனப்பு, புலவர் நெஞ்சை அள்ளுந் தகைதது. அவ்வழகுகளில் சில வரு மாறு :—

எண் : இவரல்.

மேவில் ஒன்றர் விரிவுற்ற
இரண்டினர் மூன்றுமாய்
நாவின் நாலர் உடல்
அஞ்சினர் ஆறர் ஏழோசையர்
தேவில எட்டர் திருவஞ்சியம்
மேவிய செல்வனூர். 2 : 7 : 3.

செம்மை வெண்ணீற் றொருமையினார்
இரண்டு பிறப்பின் சிறப்பினார்
மும்மைத் தழலோம் பியநெறியார்
நான்கு வேத முறைபயின்றார்
தம்மைஐந்து புலனும் பின்செல்லுந்
தகை யார்அறு தொழிலின்
மெய்ம்மை யொழுக்கம் ஏழுலகும்
போற்றும் மறையோர் விளஙகுவது.
12 : 1212.

இழிதல் :

மணநதிகழ் திசைகள் எட்டும் ஏழிசையும்
மலியும் ஆறுஅங்கம் ஐவேள்வி
இணைந்தநால் வேதம் மூன்றுஎரி இரண்டு
பிறபபென ஒருமை யாலுணரும் 3: 122 6.

எழுத்து :

போழும்மதி தாழும்நதி பொங்கரவு
தங்குபுரி புனசடையினன்
யாழின மொழி மாழைவிழி யேழையிள
மாதினொடி ருநத பதிதான்
வாழைவளா ஞாழல் மகிழ் மனனுபுனை
துன்னுபொழில் மாடு மடலார்
தாழை முகிழ் வேழம் மிகு தந்தமென
உநதுதகு சண்பை நகரே. 3 : 15 : 3

சொல் :

ஊனேறு வேலின் உருவேறு கண்ணி
ஒளியேறு கொண்ட ஒருவன்
ஆனேற தேறி யழகேறு நீறன்
அரவேறு பூணும் அரனூர்

மானேறு கொல்லை மயிலேறி வந்து
குயிலேறு சோலை மருவி
தேனேறு மாவின் வளமேறி யாடு
திருமுல்லை வாயி லிதுவே. 2 : 88 : 6.

பேர்பரவை பெண்மையினிற்
பெரும்பரவை விரும்பல்குல்
ஆரபரவை அணிதிகழும்
அணிமுறுவல் அருமபரவை
சீர்பரவை யாயினாள்
திருவுருவின் மென்சாயல்
ஏர்பரவை இடைப்பட்ட
என்னுசை எழுபரவை. 12 : 294.

**பொருள் :**

மங்கைக் காணக்கொடார் மணமாலையை ;
கங்கை காணககொடார் முடிக்கண்ணியை;
நங்கைமீர்! இடைமருதர் இந்நங்கைககே
எங்குவாஙகிக் கொடுததார இதழியே ?
5 : 15 : 6.

**உருவகம் :**

கிடந்தபாம்(பு) அருகுகண்
டரிவை பேதுற
கிடந்தபாம்(பு) அவளையோர்
மயிலென்(று) ஐயுற
கிடந்தநீர்ச் சடைமிசைப்
பிறையு(ம்) ஏங்கவே
கிடந்துதான் நகுதலைக்
கெடில வாணரே. 4 : 10 : 8.

சூடினார் கங்கையாளைச்
சூடிய துழனி கேட்டங்கு
ஊடினாள் நங்கையாளு(ம்)
ஊடலையொழிக்க வேண்டிப்
பாடினார் சாமவேதம்
பாடிய பாணியாலே
ஆடினார் கெடிலவேலி
அதிகைவீ ரட்ட னாரே. 4 : 27 : 2

நாகத்தை நங்கை யஞ்ச
நஞ்சகையை மஞ்சையென்று
வேகத்தைத் தவிர நாகம்;
வேழததினுரிவை போர்தது
பாகத்தின் நிமிர்தல் செய்யாத
திங்களை மின்னென் றஞ்சி
ஆகததிற் கிடந்த நாகம்
அடங்குமஆரூர்அரனார்க்கே. 4: 53: 2.

**நகை :**

திங்கள்தங்கு சடையின் மேலோர்
திரைகள் வந்து புரளவீசும்
கங்கையாளேல் வாய்திறவாள்
கணபதியேல் வயிறுதாரி
அங்கை வேலோன குமரன்பிள்ளை
தேவியார் கோல்தட்டியாள்
உங்களுக காட்செய்ய மாட்டோம்
ஓணகாநதன தளியுளீரே. 7 : 5 : 2

வாரமாகித திருவடிககுப் பணிசெய்
தொண்டர் பெறுவதெனனே?
ஆரம்பாம்பு ; வாழ்வதுஆரூர் ;
ஒற்றியூரேல் உமமதன்று
தாரமாகக கஙகையாளைச்
சடையில் வைததஅடி கேள்உந்தம்
ஊரும்காடு! உடையும்தோலே!
ஓணகாநதன தளியுளீரே. 6 : 5 : 9.

இவையன்ன பலப்பல. தமிழ் ஞான சம்பநதரின் செநதமிழ்த தடங்கடலில் திளைததால் தமிழுவையும், தமிழின் நீர்மையும், சஙகமலி செந்தமிழ்ப் பயனும, தண்தமிழும், விலையுடை யருந் தமிழும்,முத்தமிழும் காணலாம். இறைவனைத் 'தமிழன் கண்டாய்'; 'தென் தமிழ் - ஆனவன்காண்' எனச சொல் வேநதர் விளித்த விழுப்ப மென்னே ! என்னே !! அவர் பிற மதமபுக்கிருந்த ஞான்றும் 'தமிழோடிசை பாடல் மறந் தறியேன்' என்றருளியதையும், மொழியின் தன்மையை வியந்து 'செந்தமிழின் பரிசறியேன்' என்றதையும் ஓர்க. பொய்யாத் தமிழூரன் தன் ஊரைத தமிழூர் என்று பாவிக்க வல்ல ஊர் என்றும, மழபாடிமாணிக்கத்தை 'பண்ணார் இன் தமிழாய்!' என்றும, கடவுள் கலப்புத தன்மையைப் 'பண்ணிடைத் தமிழ் ஒப்பாய்' என்றும் சீர்தூக்கிய சிறப்பென்னே ! என்னே ! இறைவன் தமிழின்பம்துய்க்கத்திருவாசகமெழுதி அப்பர் பெருமானைப் பன்னாள் பாமாலை பாடப் பயில்வித்தமை சிந்திக்க. இக்கலை மலிந்த தென்புலவர்கள் விருந்தாய சொன்மாலைகளைச் செவிமடுக்கப் பாடிப் பசி தீர்வோமாக.

செல்வன் கழலேத்திய செல்வர்களின் சீர்பரவிய சேக்கிழார், திருத்தொண்டத் தொகையைத் 'தென் தமிழ்ப் பயன்' என்றும், இறைவனை 'ஞாலமளந்த மேன்மைத் தமிழின்' 'தலைச்சங்கப் புலவனார்' என்றும் சிறப்பித்தமை சிந்திப்பரியது. தமிழ் விரகர் 'தமிழ்ச்சொலும் வடசொலும் தாள்

நிழல் சேர' என்று திருவாய்மலர்ந்தரு ளியவிடத்து இறைவர் விரும்பிய தமிழை முன்வைத்த வைப்பென்னே ! இவற்றால் நாம் காணும் கருத்தென்னே? 'காகத் திருகண்ணிற் கொன்றே மணி கலந்தாங்கு' ச சமயக் கண்ணுக்கும் மொழிக்கண்ணுக்கும தமிழ்க்கண்மணி கலந்திருப்பதன்றோ ? ஆதலின், நாம் ஒல்லும் வகையெல்லாம் தமிழ் வளர்க் கும் முகமாகச் சைவ வான்பயிரை ஓம் புவோமாக.

### பனுவல்

நம் திருமுறைகளையும சாத்திரங் களையும பலவகையாக உலகினுக்குத் தரவேண்டுவது நம் கடமை. நம் குர வன்மாரைப் படிமங்களாக அமைத்தும, படங்களாகப் பிடித்தும வந்தனை வழி பாடு இயற்றுவதோடு அமையாது, அவர்தாம அளித்த இறைவன அருட் கடலின் பனுவல் துறையில், பொருட் சுவை, சொற்சுவை தோய்ந்தும,செழுந் தமிழ்த் தெள்ளமுதார்ந்தும தேக்கிப் பருகித் துய்த்த இன்பத்தை, இவ் வையகம் பெறப் படிக்குநர் விரும்பும் பனுவல்களாக வகுத்தும் தொகுததும் வகுத்த பனுவல்களுக்குப் படிக்குநரும் காணுதல் வேண்டும்.

### சிற்பம்

சிற்பததிற்கும் சமயததிற்கும தொ டர்புண்டு. ஜாவா தீவில் பாராபூதூர் (Bara Budur) பௌத்த மாடக் கோயிலின் அடுக்கு வரிசைகளில் படி மங்களாக அமைந்த புத்தர் பெருமான் சாதகக் கதைகளும், அவதானங்களும் பரமபாணம் (Prambanam) சிவன் கோயிலில் வகுத்த இராமாயணப் படி மங்களும், மாமல்லபுறத்து, கைவல் சிற்பியர் மனதையே கொள்ளை கொள ளும் பகீரதன் தவமும் சமய சரித் திரங்களை அரண் செய்து வருதல் காண்க. இவ்வண்ணமே நம் தொண் டர் திறங்கள் குடந்தைக்கடுத்த தாரா சுரத்து (இராஜராஜீச்சுரம்-திருப்பழை யாறை)மூலககோயிலில்வலமாகத்திருத் தொண்டத்தொகை வரிசைப்படி, உரிய பெயர்கள் மேலே செதுக்கப்பட்ட படி மங்கள் காணலாம. ஆவண ஓலை காட்டி வலிய ஆட்கொண்ட சுவர்ச் சித்தி ரம தஞ்சைப பெருங்கோயிலில் காண லாம். இவற்றை நாம் கண்டும், பட மெடுததும் சிற்ப ஓவியக கலைவழிச் சம யத்தைச சிறப்பிப்போமாக.

### சிலாலேகை

ஆன்றோர் நம்மை நல்லாரென நினைந்து நமககுப் புரிந்திட்ட உபகாரம் கல்மேல் எழுத்தாய்ப் பொறித்திருக்க, அவற்றின் பயனை எய்தாது அவற் றைக் கலவின்மேலிட்ட கலமாக்கி, நாம் புலவறிவாளரென ஏசலுற்றோம். (What the Musalmans did not distroy is being demolished by Pious Hindus; Ep. Report 1902) இககலையால திருவிடைவாய்ப் பதிக மும, சில ஓரெழுததுப் பிழைகளும் தெரிந்தன. இக்கலை பெரியபுராண வல்லுநர்க்கு மிகமிக வேண்டுவதை ரண்டு ஒன்று எடுத்துக் காட்டுவன். 'பேரம்பலம்' பெரியபுராண 8,250, 3806-வது செய்யுட்களில் போந்து, தில்லையில் அதன் இடத்தை நன்கு தெரிவித்திருக்கவும், இலக்கியப் பழக்க மில்லாக் கல்வெட்டு வல்லுநர் பொன் னம்பலத்தைக கொண்டு இடர்ப்பட் டிருக்கிறார்கள்.

### தொண்டு

இதுகாலை நின்று சிறக்கும் உயிர்த தொண்டும அறிவியல் தொண்டுமே வேண்டற்பாலன. அவற்றில் சில சென்ற ஆண்டு சைவ சித்தாந்த சைவ இளைஞர் கூட்டத தலைமை உரையில் புகன்றேன். ரண்டு எஞ்சியவற்றில் சில பகருவேன். சமய சபைகளில் ஆற்றப்படும் பொழிவுகளை எழுத்தில் தருமபடி செய்தல் வேண்டும். ஒவ் வோர் ஆண்டு விழாவிலும் செலவிடப் படும பொருளை நினைந்து நிலை நின்ற பயனை நோக்கினால் அதன் கருத்துத் தெரியும். நாட்டின் ஒரு பாங்கர் குழு மிய மககளுக்கே பயன் தரும் சொற்

பொழிவுகள் எழுத்தில் வரின், எல்லார்க்கும் என்றும் நின்று பயன தருதல் காண்க. இவ்வகையில இசசபை 'சைவத்தின் சமரசம்' 'சைவத்திறவு' 'சாதிவேற்றுமையும் போலிச் சைவரும்' என்ற நூல்களை அறிஞர் வாயிலாக தமிழுலகிற்கு உதவி, வான் புகழ் கொண்டதை நான மறகக இயலாது. இது நிறகு. சொன மாரிபொழிவோர் பேசிய பொருளை எழுத்தில் தந்தவுடன் அதனை மீண்டும வேறு சபைகளில் ஆற்றுது, வேறு பொருள் பற்றிப் பேச முந்துவார்கள். இந்நூற்றாண்டில் திருமுறைகளில் தலைசான்றவல்லுநர்பலராலகடைநதெடுத்த அரிய கருத்துகள் எழுததில் வராது சொல்லப்பட்டு, அவைகளைச செவிமடுத்த தொலகேள்வி யுடையாரிடை அவை அடிபட்டு வழங்கியும, சில வழக்கொழிந்தும் போயின. முனனோர் ஆய்ந்த பொருளும், அபபொருளை ஆய்நத அளவையும் உலகம் பெறுத தால் மீண்டும்மீண்டும் ஆய்நதபொருள்கள் ஆய்ந்த அளவே கண்டு மாய்ந்தன. அவற்றை அவ்வப்போது ஈந்தால் அவ்வடிப்படையிலிருநது பின் வருவோர் பிறவற்றை ஆய்ந்து நூலாராய்ச்சியைச் சிறக்கச் செய்வர். இவ்வகையாவும் எழுத்தில் வரின், சமய நூற்கல்வியை உலகம் பெற்றுப் பயனெய்துவதை எண்ணி எழுத்தில் சொற்பணிகளை ஆற்றுமாறு எல்லோரையும் வேண்டுகிறேன். 'இன்று தோன்றிய நூலெனினும் தீதாகா' என்ற சாத்திர நூற் கருத்தை மனத்திருத்திப புதிய யாப்பில் பழமை திகழும்படி செய்தல் வேண்டும. ஒருவர்க்கொருவர் கேட்கும் கருத்தறிந்து ஐயங்களைத் திரிபற நீக்க முயலவேண்டும. எடுத்துக் காட்டாக ஓர் ஐயத்தை இங்கு இயம்புவேன். முப்பத்தேழு பாடல்கள்கள் கொண்ட பெரியபுராணத்திரட்டு ஒன்று அருட்பா தொகுதியின் இறுதியில் காண்கிறோம். அதில்போந்த பாக்களின் நிரல் மூலநூல் வரிசைப்படி இல்லாமல், தொகுக்கப்பட்ட தலைப்புகள் காட்டப்படாமலே வழங்கி வருகிறது. அகத்தியர் தேவாரத்திரட்டில் எட்டுத் தலைப்புகளின் கீழ் மூவர் பாடலும் வந்துள்ளன. அவவகை இதில் அமைநத கருத்துக் காட்டப்படாமலே அசசிட்டும் பாடியும வழங்கியும வருவதன்றி, அதன் உண்மை என்போலிகள் தெளியுமாறு வநததில்லை.

மறைக்கு மேற்கோள் மறையே காட்டவேண்டும் என்ற நியதியிருநதும், ஒருவரிப் போந்த கருத்துக்களை ஓரிடத்துத் திரட்டியும, திருமுறைகளின் ஆசிரியர்களுள் ஒருவர்மொழியை ஒருவர் பொன்னேபோல் போற்றிய திறமும் காட்டினேமில்லை. உதாரணமாக இங்குப பெரிபுராணச செய்யுட்கள இரண்டு காட்டுவன்.

உலகெ லாமுணர் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன
அலகில சோதியன அம்பலத தாடுவான
மலர்சி லம்படி வாழ்த்தி வணஙகுவாம். 12: 1.

ஓதி யாரும்மறி வாரில்லை
யோதி யுலகெலாம்
சோதி யாய் நிறைந் தான்சுடர்ச்
சோதியுட் சோதியான்
வேதியாகி விண்ணாகிமண்
ணோடு எறி காற்றுமாய்
ஆதி யாகிநின் றானும்
ஐயாறுடை ஐயனே. 2 : 6 : 7 :

இவற்றில் வரியும் கருத்தும் சில ஒற்றுமைப்பட்டதைக் காண்க.

பொனனின் வெண்டிரு நீறு புனைநதெனப்
பன்னு நீள்பனி மால்வரைப் பாலது
தனனை யார்க்கு(ம்) அறிவரி யானென்று
மன்னி வாழ் கயிலைத் திருமா மலை. 12: 11:

இச்செய்யுளில் 'அளவியை யார்க்கும் அறிவரியான்' 8 : 52 : 10 என்ற திருக்கோவையாரின் வரியும், கயிலைகாணக் காதல் கொண்ட அப்பர் தம் வாக்கில் கயிலையை 1 மலை, 2 மாமலை, 3 திருமலை, 4 திருமாமலை, 5 கயிலை, 6 கயிலைம் மலையென்றும் அருளியதைத் திரட்டி கயிலைத் திருமாமலையென வைத்தமை காண்க.

(1) 5 : 84 : 10.
(2) 5 : 9 : 9 ; 5 : 51 : 11 ; 5 : 80 : 10,

(3) 4 : 103 : 10 ; 5: 1 : 10 ; 5 : 12: 11.
(4) 5 : 16 : 11.
(5) 5 : 48 : 10 ; 5: 61 : 10 ; 5: 87 : 10.
(6) 5 : 55 : 10 ; 5 : 63 : 11 ; 5: 73 : 10.

இவையன்ன பலப்பலவற்றை விரி வஞ்சியும் காலமஞ்சியும விடுக்கிறேன். செவிச் செல்வரீர் !

இக்கூட்டம் இனிது முடியத் தங்கள் ஆதரவு வேண்டி, இச்சபை நீடுவாழவும் தன் வயிர விழாவைச் சிறப்பாகச் சைவவுலகும் பொதுவாகத் தமிழுலகும் காணவும் இப்பாண்டி மண்டலச் செந்தூர்ச் செல்வனை, மருதவிளஞரர் மொழியில் வேண்டியும, ஆண்டில் முதர்ந்த அப்பர் திருவாக்கால் வழுத்தியும் என் சிற்றுரையை முடிக்கிறேன்.

நீடு வாழிய! நெடுந்தகை தாழ்நீர்
வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தி
னெடுவே ணிலைஇய காமர் வியன்றுறைக்
கடுவளி தொகுப்ப வீண்டிய
வடுவா ழெக்கா மணலினும் பலவே.

பேணித் தொழுவர் பொன்னுலக
 காளப் பிறங்கருளால்
ஏணிப்படி நெறி யிட்டுக்
 கொடுத்திமை யோர்முடிமேல்
மாணிக்க மொத்து மரகதம்
 போன்று வயிர மன்னி
ஆணிக் கனகமு மொக்கும்
 ஐயாறன் அடித்தலமே —அப்பர்.

ஒளிநெறிச் சைவம் வாழ்க !
நன்னெறித் தமிழ் வாழ்க !!



# தமிழ் அன்பர் மகாநாடு

சென்னைப் பச்சையப்ப முதலியார் கலாசாலை மண்டபத்தில் கூடியது
(23-12-33)

மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்யகலாநிதி
## டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் செய்த
## வரவேற்புப் பிரசங்கம்

" ஓங்க விடைவந்
 துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத்
 திருளகற்றும்—ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி
 வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ். "

**அக்கிராசனாதிபதி யவர்களே !**
**தமிழ் அன்பர்களே !**

தமிழ் நாட்டின் பல பாகங்களிலிருந்து இங்கே வந்து கூடியிருக்கும் உங்களுக்கு நல்வரவு கூறுகின்றேன். நீங்கள் இங்கே வந்து ஒருங்கே கூடியிருத்தற்கு உங்கள் உண்மையான தமிழபிமானந்தான் காரணமென்பதை அறிந்து பாராட்டுகின்றேன். தமிழ் அன்பர்கள் பெரும்பாலோரை ஒருங்கே கண்டு வரவேற்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்ததைக் குறித்து மிகவும் மகிழ்கின்றேன். தமிழ் வளர்ச்சியிலும தமிழ் நாட்டினருடைய மன ஒற்றுமையிலும் கவனத்தைச் செலுத்தும் கருத்தைக் கொண்ட உங்களுடைய நல்லுதவி இந்த மகாநாட்டைச் சிறப்புற நடைபெறச் செய்யுமென்று நம்புகிறேன்.

தமிழ் மொழியானது வளர்ச்சி அடைவதற்கும், தமிழ் நாட்டினருக்குத் தமிழன்பும் தமிழ்ப் பயிற்சியும் அதிகமாக உண்டாவதற்கும் உரிய வழிகளை ஆராய்வதற்காக நாம் இப்பொழுது கூடியிருக்கிறோம். பலவேறு துறைகளில் சிறந்த அறிவுவாய்ந்த கலைஞர்கள் பல அரிய யோசனைகளைச் சொல்லக் கூடுமாதலின், உங்களுடைய

அரிய காலத்தை நான் வீணுக்குவது உசிதமன்று ; ஆயினும் எனகருத் தோற்றிய சில கருத்துக்களை இங்கே சொல்லுவது மிகையாகா தென்று எண்ணுகிறேன்.

தமிழ் மொழியானது பல ஆயிர வருஷங்களாகப் பல உபகாரிகளால் பல வகையாக வளர்ச்சியை அடைந்து வந்திருக்கிறது. அப்போதிருந்த புலவர்கள் இயற்றிய நூல்களும் உரை முதலியனவும் தமிழ் மக்களின் நாகரிக வளர்ச்சிக்குப் பேருதவி புரிந்திருக்கின்றன. அவற்றின் இயல்பு முழுவதையும் நாம் அறிய முடியவில்லை. அவற்றிற் பல இந்தக் காலத்தில் விளங்காதனவாக இருக்கலாம். ஆயினும் அவற்றை அக்காலத்திருந்த மக்கள் சிறந்தனவாகக் கொண்டு படித்துப் பயனடைந்து வந்திருக்கிறார்களென்பதை நாம் மறக்கக்கூடாது.

பழைய நூல்கள் உரைகள் முதலியவற்றை நாம் நன்றாகப் பயின்று அறிந்துகொள்ள வேண்டும்; அவற்றைத் தமிழ் நாட்டினர் யாவரும் நன்றாக அறிந்து பயனடையும்படி செய்யவும் வேண்டும். பாடஞ் சொல்லுதலே அதற்கு உரிய சிறந்த முறையாகும். தமக்கு விளங்கும் சில பாடல்களும் நூல்களுமே சிறந்தன வென்றும், தமக்கு விளங்காதனவாயின் அவை குறைபாடுடையன வென்றும் சிலர் எண்ணிக்கொண்டு பழைய நூல்களையும் அவற்றைப் படித்தவர்களையும் புறக்கணிக்கின்றனர். அச்செயல் ஆதரிக்கத் தக்கதன்று.

சில ஆசிரியர்களுடைய நூல்களிலும் உரைகளிலும் உள்ள கருத்துக்கள் நமக்கு உடன்பாடில்லையானால் அவற்றை அலட்சியம் செய்யாமல் அவர்கள் அங்ஙனம் கூறியதற்குரிய காரணங்களை நன்குஆராய்ந்து பார்த்து அறிய வேண்டும். கால இயல்பு மாற மாற ஒரு பாஷையின் நூலமைப்புக்களும் மாறிவருவது இயல்பு. முற்காலத்தில் உள்ள சில வழக்கங்களும், சில நூல்களிற் கூறப்பட்ட செய்திகளும் இக்காலத்திற்கு ஒவ்வாதனவாக இருக்கலாம். அதனால் அவை தவறெனத் துணிந்து விடலாகாது.

தமிழ் மொழியில் புத்தகங்களில் வழங்கும் பாஷை ஒரு விதமாகவும் பேசும் பாஷை மற்றொருவிதமாகவும் இருக்கின்றன. பேசும்பாஷையிற்காணப் படும் கொச்சை வார்த்தைகளை அப்படியே நூல்களில் அமைத்துக் கொள்வதும், நூல்களில் வழங்கும் பாஷையிலேயே பேச முயல்வதும் அநுபவத்தில் நடைபெறக் கூடியன அல்ல. தமிழ் நாட்டின் பல பாகங்களில் ஒரே வகையாகத் தமிழ்வார்த்தைகள் வழங்கவில்லை. ஒவ்வொரு வகுப்பார் பேசுவதிலும் வேற்றுமைகள் இருக்கின்றன. சாதி, சமயம், தொழில், தேசம் என்பவற்றிற்கு ஏற்பச் சில சில வேறுபாடுகள் பேசும் பாஷையில் அமைந்திருக்கின்றன. அவைகளையெல்லாம் எழுதும் பாஷையிற் புகுத்துவதும், அவற்றைக் கொண்டு நூல் இயற்றுவதும் நினைத்த பயனை அளிக்கத் தக்கன அல்ல. ஒரு வகையினர் மற்றொரு வகையினருடைய வார்த்தைகள் சிலவற்றை வழங்குவதில்லை. சில இடங்களில் நல்ல பொருளைக் கொடுக்கும் சில சொற்கள், வேறு சில இடங்களில் கெட்ட பொருளையே கொடுத்தலைப் பார்க்கிறோம்.

ஆகவே, தமிழ் வசனநடையை ஒரு வகைப்படுத்த விரும்பும் அன்பர்கள், 'எழுதும் பாஷை வேறாக இருக்கிறதே' என்று எண்ணுவதிற் பயனில்லை. பிழையின்றி இயன்றவரையில் யாவருக்கும் விளங்கும் சொற்களையே எழுதும் பழக்கத்தை மேற் கொள்வதே நல்ல முறையாகும். வழக்கற்ற சொற்களையும் திரி சொற்களையும் வசன நடையில் கூடிய வரையில் விலக்குதல் நன்று. தமிழ் நாட்டினர் தம் கருத்தை எளிதில் அறிந்து கொள்ளவேண்டுமென்பதை எழுதுபவர்கள் மனத்திற் கொண்டு எழுதுவது தான் பயனை அளிக்கும். பேசினாலும் எழுதினாலும் கருத்தை அறிவிக்கும்நோக்கத்தை முக்

கியமாகக் கொள்ள வேண்டுமேயன்றிக் கடின நடையைக் கைக்கொள்ளுதல் கூடாது. கொண்டால், 'தமிழே கடின மானது' என்ற எண்ணம் தமிழ் மக்களுக்கு உண்டாகிவிடும்.

பழைய காலத்தில் நூல்களைப்பாடஞ் சொல்லிய ஆசிரியர்கள் மிகவும் எளிய நடையிலேயே கருத்தை விளக்கி வந்தார்கள். பரம்பரையாகப் பாடங்கேட்கும் வழக்கமே அதிகமாக இருந்தமையால் அக்காலத்தில் தமிழ் வசன நூல்கள் இயற்றப் படவில்லை.

பல வருஷங்களுக்கு முன்பு இச் சென்னை நகரத்தில் துரைத் தனத்தார் 'கல்விச் சங்கம்' என ஒன்றை அமைத்துப் பல இடங்களிலிருந்து தமிழ் வித்துவான்களை வருவித்து அவர்களைக்கொண்டு தமிழ் வசன நூல்களை எழுதச்செய்தனர்; வேறு பாஷைகளிலுள்ள நூல்கள் சிலவற்றையும் தமிழில் மொழி பெயர்க்கச் செய்தனர். இத்தகைய முயற்சிகள் தொடர்ச்சியாக நடைபெற்று வந்திருந்தால் தமிழ் மக்களுக்கு எவ்வளவோ நன்மைகள் உண்டாகியிருக்கும்.

பிற்காலத்தில் அச்சுயந்திரம்இந்நாட்டுக்கு வந்த பிறகு தமிழில் நல்லவசன நூல்களை முதலில் எழுதி வெளியிட்டு உபகரித்தவர்களுள் ஆறுமுக நாவலர் சிறந்தவர். அவர் எழுதிய பாடபுத்தகங்கள் நல்லொழுக்கத்தையும், தெய்வ பக்தியையும் படிப்பவர்களுககு உண்டாக்கும. 'நாவல்' எனப்படும நவீனத்தை முதலில் எழுதியவர் மாயூரம வேதநாயகம் பிள்ளையாவர். அவருடைய வசனநடை எளியதாகவும் சுவையுடைய தாகவும் இருக்கிறது.

சென்ற முப்பதுவருஷங்களில் கணக்கற்ற வசனபுத்தகங்கள் தமிழில் வெளிவந்திருக்கின்றன. அவற்றுள் திருத்தமான நடையை உடையவை சிலவே. மாணவர்களுக்காக எழுதப்படும் புத்தகங்கள் இக்காலத்தில் மிக அதிகமாக வெளிவருகின்றன. வகுப்பின் தரத்திற்கும் படிக்கும் கால அளவுக்கும் ஏற்றவண்ணம் திருத்தமாக அவை அமைந்தால் நன்றாக இருக்கும்.

சிலர் தாம் மேற்கொள்ளும் புதிய முறைகளை யாவரும் கைக்கொள்ள வேண்டு மென்று இக்காலத்தில் தூண்டுகின்றனர். பலருக்குப் பொதுவான பாஷையில் தங்கள் மனம் போனவாறு தம் கொள்கைகளை அவசரப் பட்டுப் புகுத்தி விடுதல் சரியன்று.

இக்காலத்தில் விருத்தியாகி வரும் சாஸ்திர அறிவு தமிழ் மக்களிடத்தும் நன்றாகப் பரவவேண்டுவது இன்றியமையாததாதலின், அத்துறையிலுள்ள நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்து வெளியிடுதல் அவசியமேயாகும். ஆனால் அவ்வகை மொழி பெயர்ப்புக்கள் ஒரே முறையாக இருக்கவேண்டும். சாஸ்திர சம்பந்தமாகவும் பொருளின் பெயர்களாகவுமுள்ள மற்றப் பாஷைச்சொற்களும் வேறு சிலவகைச் சொற்களும் இப்பொழுது சாதாரணமாகத் தமிழில் வழங்குகின்றன. அவற்றை மாற்றிப் புதிய சொற்களை உபயோகிக்கத் தொடங்கினால் அச்சொற்கள் தமிழ்நாடு முழுவதும் வழக்கத்தில் அமைவதற்கு நெடுங்காலம் ஆகும். சொற்களின் வழக்கமும் அவற்றின் பொருள் எளிதில் விளங்குதலும் முக்கியமேயன்றி எல்லாம் தனித்தமிழ்ச்சொற்களாகவே இருக்க வேண்டு மென்பது அநுபவத்தில் இயலுவதன்று. பழைய இலக்கியங்களிற் கூடச் சிலஇடங்களில் வேறு பாஷைச் சொற்களை அவ்வந் நூலாசிரியர் அமைத்திருக் கின்றனர். தமிழில் எவ்வளவோ அரிய சொற்கள் இருப்பினும் கருதியபொருளை அவ்விடத்தில் நன்றாக விளக்குவதில் அச்சொற்களைப் போல மற்றவை அமையாவென்று அப் புலவர்கள் எண்ணி யிருக்கலாம்.

மொழி பெயர்க்கும பொழுது பண்டைத் தமிழிலக்கியங்களில் கலைகளுக்குரியனவாக உள்ள சொற்களை இயன்றவரையில் உபயோகித்துக் கொள்ளலாம். பிறபாஷைச் சொற்களை எடுத்தாளும் பொழுது தமிழுக்கு ஏற்றபடி அவற்றின் உருவத்தை மாற்றிக்கொள்

ளலாம். ஈரங்கி, உயில், பாதிரி, வங்கி, காபி முதலிய வார்த்தைகள் இங்ஙனமே அமைக்கப்பட்டனவாகும். "சுதேசமித்திரன்" முதலிய பத்திரிகைகளின் ஆசிரியர்களும், தனவைசியர்களும், யாழ்ப்பாணத்தார்களும் இவ்வகையில் கொண்டிருக்கும் முறைகள் சிலவற்றை நாம் கைக்கொள்ளலாம். ஒரு பாஷையிலுள்ள உச்சரிப்பு வேறொரு பாஷையில் வழங்கும்போது அதற்கேற்ப மாறினால்தான் பொருத்தமாக இருக்கும். பழைய இலக்கியங்களில் வடசொற்களை எடுத்தாளுகையில் புலவர்கள் அவற்றைத் தமிழுக்கு ஏற்ப அமைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

பண்டைக்காலப் புலவர்கள் வடமொழிப் புலவர்களோடு மனங் கலந்து பழகி அவர்களுடைய கருத்துக்களையும் சொற்களையும் தங்கள் நூல்களில் ஆண்டிருக்கிறார்கள். வடமொழியின்தொடர்பினால் தமிழ்மக்கள்எவ்வளவோ அரிய கருத்துக்களை அறிந்து பயனுற்றிருக்கிறார்கள். ஒருபாஷை வேறுபாஷையின் தொடர்பினால் விரிவுறும். அதனால் அப்பாஷையின் அழகு ஒருபோதும் குறையாது.

சர்வகலாசங்கத்தார் பல வருஷங்களுக்கு முன்பு சில அறிஞர்களைக் கொண்டு ஆராய்ச்சிசெய்து தமிழ்வசன நடையில் இன்ன இன்ன சொற்களை வழங்கலாமென ஒரு முடிவைச் செய்தார்கள். அம்முடிவிற் கண்டவற்றுள் கொள்ளத்தக்க உபயோகமான சொற்களை நாம் எடுத்து ஆளலாம்.

தமிழ்மக்கள் தங்கள் தங்கள் ஜீவனத்துக்குரிய பலவகை முயற்சிகளில் ஈடுபட்டிருக்கிறார்கள். அதனால் யாவரும் சிறந்த இலக்கியங்களைப் படித்து இன்புறுதலென்பது இயலாத காரியம். புதிய செய்திகளோ கொள்கைகளோ இக்காலத்திற் பத்திரிகைகளின் மூலமாகவே பரவிவருகின்றன. பத்திரிகைகளைப் படிக்கும் வழக்கம் இப்போது அதிகரித்து வருகின்றது. ஆதலின் தமிழ்ப் பத்திரிகையை நடத்துகிறவர்கள் தங்களுடைய கடமையை நன்றாக உணர்ந்து தேசக்ஷேமத்தையும பாஷையின் நம்மையையும் கருதித் தமிழ்ப் பயிற்சியுள்ளவர்களை உடன் வைத்துக் கொண்டு உழைத்து வருதல் தமிழகத்துக்குப் பரமோபகாரமாக இருக்கும். எந்தப் பொருளும் அதற்குரிய லக்ஷணங்களுடன் அமைந்திருந்தால்தான் அதனை நாம மதிக்கிறோம்; இல்லையாயின் வெறுக்கிறோம். பாஷை விஷயத்தில் மட்டும் அந்தக் கொள்கைக்கு விலக்கு உண்டென்பது முறையாகாது.

சில வருஷங்களுக்கு முன்வரையில் தமிழின் நிலைமை மிகச்சிறந்ததாகவே இருந்தது. அரசாட்சி மாறுபாடுகளிலும், காலவேறுபாடுகளிலும தமிழ்ப் பாஷைக்குக் குறைபாடு நேரவேயில்லை. மகமதியர் முதலியவர்களுடைய அரசாட்சியிற் கூடத் தமிழ் மொழிக்குரிய சிறப்பானது குறையவே இல்லை. பிற்காலத்திலும் திருவாவடுதுறை, தருமபுரம், திருப்பனந்தாள் முதலிய இடங்களிலுள்ள மடங்களும், சேதுசமஸ்தானம் முதலிய சமஸ்தானங்களும் தமிழ் வித்துவான்களை ஆதரித்துத் தமிழ் வளர்ச்சிக்குரிய காரியங்களைச் செய்து வந்திருக்கின்றன. இந்த ஆங்கில அரசாட்சியில் துரைத்தனத்தாரும் சர்வ கலாசாலையாரும் பாஷையின் அபிவிருத்திக்குரிய உதவிகள் பலவற்றைச் செய்துவநதும், நம்மவர்களே பலவகையான தக்க உத்தியோகங்களை வகித்து நாட்டின் நலத்துக்கு உரிய காரியங்களைச் செய்யும நிலையில் இருநதும், நூல்கள் பரவுவதற்குரிய அச்சு முதலிய சாதனங்கள் மலிந்திருநதும், தமிழ்நூற்பயிற்சி இப்போது மாறுபட்டிருப்பதுபோல, வேறு எக்காலத்திலும் இருந்ததில்லை. இந்த நிலையைப் போக்குவதற்குரிய வழிகளைப் பற்றி இங்கே உள்ள அறிஞர்கள் ஆராய்ந்து, செய்கையில் நடைபெறக் கூடியவற்றை மேற்கொண்டால் நலமாயிருக்கும்.

தமிழ்நாட்டார் பேசும் பொழுதும் எழுதும்பொழுதும் தமிழ்ப் பாஷையையே உபயோகிக்கவேண்டும்.

அறிந்தவர்களிற் பெரும்பாலோர் ஆங்கிலத்திலே நினைக்கிறார்கள்; அவர்களால் ஆங்கிலச் சொற்கள் கலவாமற் பேசமுடியவில்லை. இத்தகைய நிலை ஒரு பெருங் குறையல்லவா? ஆங்கிலம் படித்தவர்களிற் பெரும்பாலோர் கடிதங்களைத் தமிழில் எழுதும் பழக்கத்தை அடியோடே விட்டுவிட்டார்கள். அவர்கள் ஆங்கிலத்தில் மிக அழகாகவும் மற்றவர்கள் வியக்கும்படியாகவும் பேசியும் எழுதியும் வருகிறார்கள். அம்முயற்சிகளையே தாய்மொழியிலும் கொள்ளுதல் முதற்கடமையன்றோ? ஜி. யூ. போப் முதலிய வேறு நாட்டினர் கூடத் தமிழின் இனிமையை உணர்ந்து அதிலுள்ள பழைய நூல்களை மிக உழைத்துப் படித்து அறிந்து மகிழ்ந்திருக்கிறார்கள்; தமிழ்ப்பயிற்சி உள்ளவர்களுக்கு அவர்கள் ஊக்கமளித்தும் வந்திருக்கிறார்கள். தமிழர்களாகிய நாம் அத்தகைய முயற்சிகளைச் செய்ய வேண்டிய அளவு செய்யாமல் இருக்கிறோம். ஆங்கிலம் அறிந்த தமிழர்கள் தமிழிற் பேசப் பழகிவிட்டால் தங்களுடைய கருத்தை நன்றாக வெளியிட முடிகிறதென்றும் ஊக்கம் உண்டாகிறதென்றும் சொல்லுகிறார்கள். ஆதலின் அச்செயலை யாவரும் விடாமல் மேற்கொள்ளுதல் நலம்.

தமிழ் நூல்களைத் தக்க அறிஞர்களைக் கொண்டு வெளியிட முயற்சி செய்யவேண்டும். ஒருவர்மேற்கொண்ட முயற்சியையே பலர் மேற்கொண்டு உழைப்பதைக் காட்டிலும் பலவகை முயற்சிகளில் ஈடுபட்டு உழைத்தால் தமிழ் பலதுறையிலும் விருத்தியடையும். ஒருவர் உழைப்பினாற் செய்த ஒன்றையே பலவேறு வகையிற் கைக்கொண்டு பல உருவத்தில் தம்முடைய உழைப்பின் பயனாக வெளியிடுதல் முறையாகாது. தமிழ் அறிஞர்கள் தங்களுடைய ஆற்றலைத் தனித்தனியே காட்டும் முயற்சிகளைச் செய்யவேண்டும்.

பண்டைக்காலத்துத் திண்ணைப் பள்ளிக்கூடங்களில் தமிழ்க்கணித வகைகளையும் நிகண்டுகளையும் இன்றியமையாத இலக்கிய இலக்கணங்களையும் கற்பித்து வந்தனர். பழைய முறைப்படி பாடங் கேட்டவர்களுக்கு அவை உபயோகமுள்ள நூல்களாக இருந்தன. சங்க நூல்கள் வரையில் அவர்கள் தங்கள் பயிற்சியை முறையாகவே வளர்த்து வந்தனர். அந்த முறை இப்பொழுது அடியோடு போய் விட்டது. அதனால்தான் பாஷையில் அபிமானமும் குறைவு பட்டது.

முறையாகப் பாடஞ் சொல்லுதலும் பாடங் கேட்டலும் மலிந்திருந்த காலத்திலேதான் கம்பர், ஒட்டக் கூத்தர் முதலிய பெரும்புலவர் இருந்தனர் என்பதை நாம் எண்ண வேண்டும். அவர்களைப் போன்றவர்களை இக்காலத்திற் பார்க்கவே முடியாது. இப்பொழுது பாஷை உள்ள நிலையில் இனியும் பார்த்தல் அரிதெனத் தோற்றுகிறது. நூல்முற்றும் படித்து அறிவதற்குள் ஆராய்ச்சிகளையும் அபிப் பிராயங்களையும் சொல்லத் தொடங்கும் இயல்பு இக்காலத்தில் வளர்ந்து வருகிறது. தாம் படித்ததே போதுமென்ற திருப்தியும் பலருக்கு உண்டாகின்றது. சில நூல்களைப் படித்த பயிற்சியினால் விரிந்துள்ள தமிழ்ப் பாஷையிலேயே திருத்தம் செய்ய அவர்கள் முற்பட்டு விடுகிறார்கள்.

பாடஞ் சொல்லுதலின் அவசியத்தை நன்றாகத் தமிழ் நாட்டார் உணரவேண்டும். பாடங்கேட்பதால் அறிந்து கொள்ளும் பல அரிய இரகசியங்களை எவ்வளவு சிறந்த அறிவுடையவராக இருப்பினும் தாமாகவே படித்து அறிந்துகொள்ள இயலாது. முறையாகப்பாடங் கேட்டவர்களுக்கும் தாமே படித்தவர்களுக்கும் எந்தக் காலத்திலும் வித்தியாசம் இருப்பதைக் காணலாம்.

எந்தத் துறையில் நாம் ஒரு முயற்சியைச் செய்யத் தொடங்கினாலும் அந்தத் துறையில் வல்ல அறிஞர்கள் சிலரையேனும் வைத்துக்கொண்டு அதனைச் செய்விக்க வேண்டும். எல்

லோரும எல்லாவற்றையும் செய்வ தென்பது அநுபவ சாததியமான தன்று.

சங்க காலத்திலும் பிற்காலங்களி லும பலவகையில் வேறுபாடுடைய புல வாகள் தமிழ் வளர்ச்சிக்குரிய முயற்சி யில் தங்கள் வேற்றுமைகளை மறந்து மனம் ஒன்றி உழைத்தார்கள். சைவர் களும, வைஷ்ணவர்களும், ஜைனர் களும், பௌத்தர்களும் பிறரும் ஒருங் கிருந்து தமிழாராயந் திருக்கின்றனர். இதுவரையில வேறு விஷயங்களில் இருந்தபேதங்கள் மொழிவளர்ச்சிக் குத் தடைசெய்ததிலலை. இநதக்காலத் திலோ யாதொரு நலனுமின்றித தேசம், சாதி, சமயம் முதலியவற்றி லுள்ள கொள்கை வேறு பாட்டைப் பாஷை சமபந்தமான முயற்சியிலும் சிலர் புகுத்தி வருவது மிகவும வருந்து தற்குரியது. மன ஒற்றுமை நீங்கினுல் எந்தக்காரியமும் செய்ய இயலாதா தலின் பலதிறப்பட்ட அறிஞர்களும் ஒன்று கூடி ஒற்றுமையாகப் பழகித் தமிழ் வளர்சசிக்குப் பாடுபடவேண் டும்.

நமக்குப் பல தமிழ் நூல்களை இயற்றியளித்த புலவர்களையும் அவர் களுடைய அருஞ்செயல்களையும் நாம் மறவாமல் அத்தகைய புலவர்களுடைய நாட்களைக் கொண்டாடி வரவேண்டும்.

மதுரையில் சேதுபதி வேந்தரவர் களைத் தலைவர்களாகக கொண்டு விளங் கும் தமிழ்ச் சங்கமும், சென்னைச் சர் வகலாசாலையும், அண்ணுமலைச் சர்வ கலாசாலையும், தனவைசியர்களுடைய சில நகரங்கள் முதலியவற்றிலுள்ள கலாசாலைகளும், இத்தமிழ் நாட்டிலும் இலங்கையிலுமுள்ள வேறு சில சங்கங் களும தமிழ் வளர்ச்சியைக் குறித்துப் பல தொண்டுகளைச் செய்து வருகின் றன. தமிழறிஞர்களிற் சிலர் தமிழ் நூல்களைப் பாடஞ்சொல்லும் முயற் சியை மேற்கொண்டிருக்கின்றனர். இப் போது திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத் தின் தலைவர்களாக வுள்ளவர்கள் தமி ழறிவின் வளாச்சியைககருதி நிலையான தருமங்களைச செய்து வருதல் யாவ ரும பாராட்டுதற்குரியது.

தமிழ் வளாச்சியின் திறத்தில் மேற் கொள்ளககூடிய துறைகள் இன்னும் பல இருக்கின்றன. செல்வர்களும அறி ஞர்களும் மற்றவர்களும் தங்கள் தஙகள் ஆற்றலைக கொண்டு செய்யத்தக்க காரியஙகளைச செய்தால் தமிழ்நாட் டிற்குப் பேருதவியாக இருககும.

இதுகாறும் நான் தெரிவித்தவற் றுள் உசிதமாகத் தோற்றுவனவற்றை ஏற்றுக்கொள்ளும்படி உங்களை வேண் டுகிறேன்.

இங்கே வந்துள்ள தமிழன்பர்கள் தஙகள தஙகள அநுபவத் திலுல அறிந்த முறைகளை வெளியிட்டுத் தமிழ்மொழி வளர்ச்சிக்கு உரிய செயல்களை மேற்கொள்ள வேண்டு மென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

தமிழன்பர் மகாநாடு கூடியதன் நோக்கம் நன்கு நிறைவேற வேண்டு மென்று எல்லாம் வலல இறைவன் திருவருளைப் பிரார்த்திக்கின்றேன்.

"எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணி
திண்ணிய ராகப் பெறின." [யார்

# நமது சிந்தனை

[திரு. சி. சதாசிவனார்]

## XI

### தியானம்

தியானத்தின் வழி நாம் பருமை உலகைப் பின்னே தங்கவிட்டு நுண்மை உலகில் நுழைகின்றோம். காரிய உலகை மறந்து, அதன் தோற்றத்திற்குக் காரணமாய உலகிற் புகுகின்றோம. இக்காரண உலகம பூ உலகிற்கும் பொன்னுலகிற்கும் இடையில் வழி மறைத்துள்ள அடர் கானகம். இவ்வனத்தில் நாம் ஈண்டு அருமை பெருமையுடன் போற்றி வந்த அடு சினக் கடகரிகளும், கொல் புலிகளும், கடு அரவங்களும், ஆடும் பேய்களும பிறவும் உயிர் வாழ்ந்து, மல்கிக் கறைந்துறைகின்றன. இவை உள்ளத்தைக் கலக்கிப் பிறவிப் பௌவத்து நம்மை ஆழ்த்துகின்ற நமது மாறுபடு எண்ணங்களும் எரிகாலும் எழுச்சிகளுமே யாகும். நம்மால் உருக்கொண்டு, ஊண் அளிக்கப்பட்டு, போற்றப்பட்ட இவை விறலின் வீறுபெறத் தோன்றித் தம்மை விட்டு விலகி வீடு பெற விழையும் நம்மை மாறுபடச் சாடி உலகத்தின்பாற் செலுத்தும். இவைகட்குப் பயந்து விட்டால் வருவது மோசம். சலியாத தீரத்துடன் இவைகளை நாம் வென்று அழித்துவிட்டு இக் காட்டைக் கடப்பதே இவ்வாழ்வில் நமது ஒரு காரியம. இவைகளுடன் தொடங்கும் போரில் நமக்கு மிக்க அரண் செய்து நம்மைக் காப்பது தியானம் எனும் எஃகுச் சட்டையாகும். அதனுட் புகுந்து பொருத, நாம் எளிதில் இத்தீய விலங்குகளை முறியடித்துச் சுகமாகக் காட்டினின்றும் பொன்னுலகிற் றலை நீட்டலாம்.

போர்க்கோலம் பூண்டு படுகளம் நடக்கும் வீரன், மனைவி மக்கள், வீடுவாசல், சொத்து சுதந்திரம் இன்னவை குறித்த நினைவுகளை அறவே மறந்து, வெற்றி எண்ணம் ஒன்றையே மனதிற் பதித்துப் புறப்படல் வேண்டும். செல்லும் போதும், அடுதொழில் செய்யும்போதும், இன்ன நினைவுகள் எஞ்சி நிற்கின், அவை அவன் கவனத்தைப் பின்னிழுத்து, இன்னலர் முன்னேற இடந்தந்து, இன்னல மிக விளைக்கும். அவன் மாறலர் வீரரை வீறிட வீழ்த்தி, வெற்றி முரசுடன், வாகை வேய்ந்து, சித்தம் தருக்கித் தன்னகர் திரும்பும கருத்துடையனாகில், மக்கள் வீடு பற்றிய நினைவுகளை முற்றிலும் ஒழித்து, கவலையற்ற திறம்படு மனத்தனாய், சமர்நுட்பங்களில் ஆழ் சிந்தையனாய், முனைப்புடன் வெளிப்படல் வேண்டும. அவனியிற் போரிலுறும் இவ் வெற்றிகட்கே பிற கவலை நீக்கமும், செல்லும் சமர்மேல் நோக்கமும், மாற்றார் மேற் சீற்றமும், வெற்றிமேல் வேட்கையும் வேண்டப்படுமாகில், உலகையே வென்று, பிறவிப் பெருங் கடற்கண் நம்மைப்படியப் பண்ணும் வினை பழக்கம் இன்ன பிற கொடு விலங்குகள் பொதுளித்திரியும் அடர்கானகக் காரண உலகையும் புறங்கண்டு, அப்பாலுள்ள சொல்லற்கரிய, இறை தனியரசு நடாத்தும் பொன்னகர் புகுவான் கடுநடை மேல் அவா வீழ்ந்த நமக்குப் பிறகவலை, புறக்கவலை சிறிதும் ஆகாதென்று கூறுதல் மிகையாகும். நமது உயிர்க் குருதியை உறிஞ்சிக் கொழுத்து வெறித்துத் திரியும் அவா, வெகுளி, பொச்சாப்பு, இன்னவை எஞ்சியுள்ள செந்நீரையும் வாய்மடுத்துக் களியாட்டயர்ந்து ஏப்பம் விடக் காத்திருக்குமே யன்றி, நாம் மேற்செல வழி கொடா. இவ்வமர்க்கட் சாடும் கொடுமையின் வீக்கம், நடந்தேறிய எச்சமர்க் களத்திலும் இருந்திராது. நம்முடன் தோன்றி, நாம் அருமை பெற ஊட்டி வளர்த்த வினை, பழக்கம், நினைவு இன்னவைகளை விட வேறு கொடுமுரண் சூர் தரு பகைஞர் அக்களங்களிற் றோன்றியும் இரார். இன்ன வெல்லரிய மல்

லர்களைக் கொல்லத் தியான ஊர்தி இவர்ந்து விரையும் நமது கவனம் பிளவு பட்டு, வீடுவாசல், மனைவி மக்கள் இவைகள் பாலும், நமமுடன் கூடவே தொடர்ந்தியங்கும, ஒரு தலை இருகால் இல்லத்தின் மீதும், நம்முடன் ஒன்றிய பழக்கங்களையும் எண்ணங்களையும்'கொல்வதா, கொள்வதா' என்று ஐயுற்று ஊசலாடும் சிந்தனை மீதும், இன்னும் ஒரு கூறு, இவ்வடவிக் கபபால் சீர் ஒளிகாலும் இன்ப வீட்டின் அழகிய காட்சிக்கணும் தவழ்நது தயங்குமாகில், நமது கதி அதோ கதியே. ஆதலால் நமது குறிக்கோள் - பொன்னகர் - ஒன்றிலேயே நமது நாட்டததைச் சலியாது நிறுதகி, மற்றப் பற்றுக்களைச்சற்றே மறந்து எழுதல் வேண்டுமே.

போர்முனையில் முனிநது கனைக்கும் வாள்வீச்சுவல்ல வீரர் கொற்றம், நாம் சிறிதும் வெருவுறல் வேண்டுவதின்று. போரின் நுட்பம் ஐயமற அறிந்த வல்லுநன் ஒருவன், மாற்றான் முன்னுறல் கண்ணுறக்கண்டு, அவனைமடக்க உபாயம் அறிந்து வெட்டி வீழ்த்தல் எளிவருகாரியம். மனக்களத்திடை நுண்மையில் நடைபெறும் நம்சமரத்திலோ, சாடும் அரிகளைக் கண்களாற் காண இயலாமை பறறியும், நட்பினரிற் பழகிய வஞ்சனை விஞ்சிய கரந்துறை கள்வரே நமது மாற்றார் ஆனமை குறித்தும, அடுத்துக் கெடுக்கும் இப்பகைஞர்கள் சற்றே ஒழிந்தாற்போல் ஒடுங்கி மாயம பல புரிந்து ஆண்டவன் அரசிருக்கை அணித்து விட்டோம் என மகிழ்ந்து ஆவலுடன் விரையுங்கால் வருவது தெரியாமற்றோன்றி "எங்கே செல்லுதி நில்" லென மறித்துக் கலாம மிக விளைக்கும் வஞ்சகர் இவர் ஆதல் பற்றியும், பருமைப் போரின் மிக்க திறனும் கவனமும் இதிற் பெரிதும் வேண்டுமே.

உற்றார் உடல் குறித்த ஞாபகம் நமது திறனையுங் கவனத்தையும் இரண்டு படுத்தி, அகவலி கெடுத்து, இழுக்குத் தருமாதலான், தியானத்திறன் பெருக்கப் பயிற்சி செய அமருங்காலை, இன்ன நினைவுகளது ஒழிவு பெரிதும வேண்டப் படுகின்றது. உற்றார் ஒருவரும் இடைபுகுந்து கலக்காத் தனியிடத தமரல் சாலவு நன்று. நடையும் ஓட்டமுமே பழகிய இயற்கையால் அமைவுற ஓரிடம் அசையா தமர்வது மிகக் கடினமாகவே முதலிற்றோன்றும. பயிற்சியாற் சலனமின்றி ஓராசனத்தில் குறித்த ஒருகாலம் உடல் வருத்தமின்றி உட்கார்ந்திருக்கச் சிறுகச் சிறுகப் பழகிக் கொள்ளலாம். தொடக்கத்திலேயே நெடுநேரம தியானத்திற் கழிக்கப் பிரயாசைப் படுவது மனதிற்கும் உடற்கும் ஊறு செய்து களைப்பைத் தருமாதலின் முதலிற் குறுகிய காலததிற் றொடங்கி நாளேற வேற அதை நீட்டித்தலே நன்மைதரும். சிறுக ஆரம்பித்துப் பின் பெருக்கிக் கொண்டு செல்வதே சீர்திருத்தங்கள் இடையூறின்றி நிறைவேறுதற்கு ஒரு நல்லவழி.

பலவேறுஆதனங்களில் தத்தமக்குப் பிடித்த ஒன்றைத் தேர்ந்து கொள்ளல் அவசியம். இதைத் தெளியு மிடத்து, எவ்வாசனம் உடல் நலிவு நல்கி உள்ளத்தைக கலக்கிக் கவனத்தைக் கவராது என்பதை அறிதல் முக்கியம். அறிஞர்கள் அறுதியிட்டுள்ள யோக ஆசனந்தான் அமையுமென எண்ணல் வேண்டா. உடல் வருத்தம் தரா எவ்வித இருப்பும் நல்லதே. யோக நூல் இயமபும் ஆசனங்கள் உடற் கூறு கட்கும் நரம்புத் தொகுதி கட்கும் வலிமை மிகத் தருதல் பற்றி அவைகளில் ஒன்றைத் தேர்ந்து பழகிச சாதனம் செய்து கொள்ளலும் சிறப்பே.

தனியிடத தமர்நது, கைகால் முதலிய உறுப்புக்களைத் தளரவிட்டுச சுகமாக (in a relaxed state) வீற்றிருத்தல் வேண்டும். உடம்பை நீட்டி நெறித்துக் கொண்டு உட்காரல்உடற்கு நலிவு நல்கி மனதைக் கவருமாதலால் அவ்வித நிலை அறவே கூடாது. புதிதாகத் தொடங்கும் பழக்கமில்லா நமக்கு ஒரு சிறிய வலி யாக்கையில்

உற்றுலும் நமது கவனம் ஈர்க்கப் படும் என்பதை மறத்தல் ஆகாது.

தியானத்தில் அமர்வோனது உடல் நிலை நன்ருக இருக்க வேண்டுமென்பது ஈண்டுச் சொல்லாமலே விளங்கும். நமது யாக்கை பிணியின்றி ஆரோக்கிய நிலையில் இருந்தாற்ருன்சிந்தனை ஆழ்ந்து குறிப்பில் ஈடுபடும்; பிறப்பின் நோக்க மாய கூர்தலும் நடைபெறும். 'பிணியால் வாடுபவன் சிறததற்கு வழி ஒன்றும் இல்லையா?' என்ற கேள்வி இங்குப் பிறக்கலாம். எண்ணமே மனிதன். ஆதலான், மனம் நோய் கொண்டு பாழடைந்திருக்கும்போது, உடல், பிணி கொண்டு அல்லலுறுகின்றது. பொன்னுலகக் காட்சியைக்காண அவாக் கொளுமுன் அவன் தனது குடிலை, சுத்தம் செய்து கொள்ளட்டும். முதலில் எங்கு அவன் இயற்கையுடன் முரண்பட்டு, உடற்கு ஊறு உண்டாக்கிக் கொண்டான் எனத் தெளிந்து திரும்பட்டும்.

உடலைப் பிணியாரிடம் கொடாது காப்பாற்றிக் கொள்வதில் கவனிக்க வேண்டியன அனேகம் உள. யாக்கை, நமது உண்டி திண்டிகள், பருகும் பானம், உயிர்க்குங்கால் இவைகளின் ஆக்கம்—இவை பரிசுத்தமாயும், நமது உடற்குப் பொருத்த மானவை யாயும் இருப்பின் உடல் நலன்குன்ருது. ஆதலால், நமது குட.ற் கொத்த இயற்கை நல்லுண்டி மிதமாகக் கொள்ளல், பிற பான மொழித்து தெள்ளிய நீரைஅள வுடனருந்தல், சுத்தமான காற்றில் மூழ்குதல், பசிவந்திட்டபின் உண்ணல், இயன்ற அளவு உடற் பயிற்சி செய்தல், இல்லத்தில் இருத்தற்கு அவசிய மான போதன்றிப் பிறகாலங்களில் இயற்கை வனப்பு வழிந்தோடும் மரஞ் செடி செறிந்த தோட்டந் துறவுகளில் சஞ்சரித்தல், இன்னவும் பிறவும் உடற்கு நன்மை தரும். மேலும் உடற்கு நலிவு தந்து அல்லற்படுத்தும் உலக வாழ்வில் அதிகம தோயாதிருத் தலும் வேண்டும். எல்லாவற்றிற்கும் மிதமே சட்டம்.

தெளிந்த ஆசனத்தில் அமைவுற அமர்ந்து அலைவுறும் மனத்தை உள்ளே மடக்கி இழுத்தல் பின் செய்காரியம். இடக்கு மிக்க பரியை அதன் வழி விடாது இழுத்து மடக்குங்கால், அதன் இயல்பான தீக்குணங்களை மீதூரக் காட்டுவது இயற்கை. அதுபோல் கிளை கிளை தாவும் குரங்கு மனமும், அடங்காது வெறித்து மக்களிடமும், மனைவிபாலும், எப்போதோ இறந் தொழிந்த நண்பன் மாட்டும, லண்டன்மா நகரிற்கும், சனியனிற்ருென் றும் கருப்புப்புள்ளி யிடத்தும, ஒன் றற்கொன்று தொடர்பில்லாமற்பாய்ந்து பாய்ந்து தனது ஒப்பற்ற வேகத்தை யும் குறிப்பற்ற மாற்றத்தையும் வெளியிட்டு ஏளனஞ் செய்யும். முதன் முதல் மனதை அடக்குவான் தொடங்கும் மகன், அதன் அளப்பரும் மாயை யையும், அடக்கருந் தன்மையையும் அனுபவததிற் கண்டுழி அளவில் வியப்பு எய்துவான்என்பது திண்ணம்.

"சிந்தையை யடக்கியே சும்மாயிருக் கின்ற திறமரிது" என்ற அறிஞரது மாற்றம் ஆரம்ப சூரற்கு "இதன் ஓட்டம் அடக்கற்கரியது. இதைச் செய் திறன் நமக்கு இல்லை." எனும் அச்சம் அளித்துத தொடங்கிய கருமததைக் கைவிடத் தூண்டலாம். இறைவன் இன் னருட்டுணை வேட்டு நின்ருர்க்குச் செய லரிய காரியம் இங்கொன்றுமில்லை. ஆதலான், நாமிதற்குச் சிறிதும் வெரூஉக் கொளல் வேண்டுவதின்று. முரண்படு கசடனுக்கு மெய்யுணர்வுடை நல்லான் ஒருவன், இங்கிதத்தோடு அறிவுறை பகர்ந்து, செயுங்காரியத்தின் இழுக் கெடுத் துரைத்து; செயத்தகு செய லின் மேன்மையும் நன்மையும் நயம் படக்காட்டி,மெல்லென நல்வழிதிருப்பு மாறு, தியானம பயில்வான் அமர்ந்த ஒருவன், வஞ்சக ஐம்புலக் கள்வரான் மறுகும் பாழ்மனத்தை மெல்லென விளித்து,

"வாழ்கின்ருய் வாழாத
நெஞ்சமே வல்வினைப்பட்டு
ஆழ்கின்ருய் ஆழாமற்
காப்பானை ஏத்தாதே

"சூழ்கின்றாய் கேடுனக்குச்
சொல்கின்றேனே பலகாலும்
வீழ்கின்றாய் நீ அவலக்
கடலாய வெள்ளத்தே"

என அடுத்தடுத்து அறிவுரை பகர்ந்து அதன் கவனத்தைத் துன்புதரு வினைக் கடற்கண் ஆழாமற்காக்கும் ஆண்டவன் கழலிணையிற் பொருத்துதல் வேண்டும்.

குறிப்பொன்று மின்றி மலைவுறும் மனத்தைக் குறிப்பில் நிறுத்துவதை விட, கவலைகளாற் கடிப்புண்டு அவலக் கடலாய வெள்ளத்தே வீழ்ந்திருக்கும் சிந்தையை மறித்து வழிப்படுத்தல் மிகக் கடினமாய் இருக்கலாம். 'நம்மாலாவது ஒன்றுமில்லை' என்றும் 'எல்லாம் அவன் செயல்' என்றும் அம்மனதிற்கு அறிவுறுத்த வேண்டும். சலித்துப் புரண்டு ஓடப் பார்க்கும்போது, அதற்கு,

"எந்தையே! எம்பிரானே! என உள்கிச்
சிந்திப்பாரவர் தீவினை தீருமால"

"மனமே! இப்போது நீ படும் துன்பங்கட்குக் காரணமாய பழவினைகள் யாவும் ஆண்டவனைச் சிந்திக்கச் சிந்திவிடும்" என்றும்,

"தேனிலாவிய சிற்றம் பலவனார்
வானிலாவி இருக்கவும் வைப்பரே"

"கொடும்பழ வினைகளை எரித்து நம்மை வானவர் இன்பம் துய்க்கவும் செய்வர். ஆதலான் மனமே! இறைவனைப் போற்று" எனவும்,

"அல்லல் தீர்க்கும் அண்ணாமலை கைதொழ
நல்ல வாயின நம்மை யடையுமே"

"துன்பமே வந்து விளைகின்றதே என்று கவல்தல் ஒழி. நல்லவனைக் கை கூப்பித் தொழ உனக்கு நன்மையே வந்தெய்தும்" என்றும்,

"ஐயன் ஆரூரடி தொழுவார்க் கெல்லாம்
உய்யலாம் அல்லலொன் றில்லை காண்மினே"

"உய்வதற்கு இதுவே ஒருவழி" என்றும்

"இம்மை வானவர் செல்வம் விளைத்திடும்
அம்மை யேற்பிற விததுயர் நீத்திடும்
எம்மை யாளும் இடைமருதன் கழல்
செம்மையே தொழுவார் வினை சிந்துமே"

என்றும் கூறி, இறைவன் இணையடி இன்ன நன்மைகள் அழிந்து படாதன நல்குந் திறத்தன என்று நம் குறிக்கோளின் தனிப்பட்ட மேன்மையை எடுத்துப் புகன்று ஊக்கமூட்டி நிறுத்துதல் வேண்டும். இறை ஒன்றே எல்லாம் செய் வல்ல சக்தி என்றும், அவன் யாண்டும் நீக்கமற நிறைந்துள்ளதால் நமகவலைகள் அவனுக்குத் தெரியும் என்றும், அவன் அவைகளை நீக்க அருள் சுரக்கின்றான் என்றும், அவனே நம கவலைகளைப் போக்கவல்ல ஒருவன் என்றும், மனித மனம் கவல்வதால் ஒன்றும நடைபெறுவதின்று என்றும் நாம் அதற்குத் திருப்பித் திருப்பி அறைந்து உணர்வு அளித்து அக் கவலைகளைத் துடைத்தல் வேண்டும்.

கவலைகள் அறஅகன்று மனம் அமைதியுற - மனத்தடிப் பிற்குத் தக்கபடி - நாட்களும் மாதங்களும வருடங்களும் சென்று விடலாம். எண்ணிறந்த பிறவிகளில உலகப்பொருள்களின் மீது படிந்து படிந்து பழகிய, கவல்தற் றொழிலுடை அவலமனது விரைவில் வழிபபட்டு வாராமை பற்றிச் சித்தம் சோர்ந்து தொட்ட கருமத்தை நாம் விட்டு விடக்கூடாது. ஈண்டுப் பொறுமை என்றொரு சீரிய பண்பைக் கடைப்பிடித்தல் நன்று. சோர்வெனும் வெம்மையின் வெதும்பிய அகத்தைப் பொறை எனும் வற்றாச்சுனையின் குளிர்ந்த நீரால் நனைக்க அது பொலிவுற்று மேலெழும்.

இன்னும் வாழ்முத லிறைவன், நம் மிதயத்துறு மின்பன் கூவியழைப் பதால் தியானத்தின் வழி நாமவனை யடையும் முயற்சியில் ஈடுபட்டுள்ளோம் எனும் நன்னோக்கம் நமது பொறுமையைப் பேணி வளர்க்கும். ஆராயுமிடத்து, நடப்பனயாவும் அவன் இன்னருளாற் பணிக்கப்பட்டனவே. தியானம் என்பதைக் குறித்த இச்சிந்தனையைத் தந்தவனும், அதைக் கைவரச் செய்யும் உளவு கூறுபவனும், கைவரச் செய்பவனும் யாவும் அவனே.

"வேண்டி நீ யாது அருள் செயதாய்
யானும் அதுவே வேண்டினல்லால்

வேண்டும் பரிசொன்று உண்டென்னில்
அதுவும் உன்தன் விருப்பன்றே"

அவன் பணித்தான்; நாம் செய்கின்றோம்; பணித்த அவன அதை முடிக்க உபாயத்தையும் உணர்வித்தருளுவான் என்ற நமபிக்கை நமககுப் பொறை நல்கும். நம்பிக்கை நலிவுற்ற இடத்தே பொறை சிதைவுறும். நுண்மையில் நிலைபெறும் காண இயலா ஒன்றைக் காட்சியிற் கொணர்வது நம்பிக்கை எனும நல்லியல்பே.

Faith is the substance of things hoped for, the evidence of things not seen. "நாம் வேண்டும் பொருள்களது சாரமும், கண் காணு நிலையிலுறும உண்மைக்குக் கரியுமே நமபிக்கையாம்" என "பால" தீர்க்க தரிசியார் கூறியுள்ளதையும், All things whatsoever ye pray and ask for, believe that ye receive them and ye shall have them. "நினது வேண்டுகோள் எது வானுலும் ஆக. அவை நிற்குக் கிடைக்கின்றதாக நமபுதி, கிடைக்கும" என்ற மெய்யுரையையும், "கற்றுணைப் பூட்டி ஓர் கடலிற பாய்ச்சிய" காலே அடிகளது நம்பிக்கையின் உறுதியபநத நன்மையையும், "நீ மறநதாய் எனினும், நின்னருள் மறவா தென்றே இன்னு மிகக் களிதது இங்கே இருக்கின்றேன்" என்ற பொன்னுரையினூடே எத்துணை நம்பிக்கையும் பொறுமையும சலிப்பில்லாக் களிப்பின் வீக்கமும் ஓடுகின்றன என்பதையும், "அம்மையே தரும் சோறுங் கூறையும" என்று பாடிய வன்றொண்டரது சோர்வுறு நம்பிக்கையும் தளராப் பொறையும் வைகறையிலளித்த செங்கற் செம்பொற் கட்டிகளேயும், சிறுவனேக் கொன்றட்ட சிறுத்தொண்டர், பொய்ப்பசி விஞ்சிய தனிப் பெரியான் பணிக்க, மெய்ப்பசி பொங்கிய ஐயம் ஒழி உள்ளத்தில் நமபிக்கை மீதூரச் "சீராளா" எனக்கூவி விளிக்க, அட்டதிண்டியில் வெந்து கரைந்தவன் "இதோ" என விரைந்த மேன்மையையும் சிந்திக்கச் சிந்திக்க நம்பிக்கையின் பெற்றி தெற்றெனத் தெரிக்கும்.

தடநதிரைகள் எண்ணிறந் தெறிந்து கொதிக்கும் மனக் கடலே அலே வீசா அமைதி நிலேயில் நிறுத்தற் பொருட்டுத் திடம் பெறு நம்பிக்கையும், சோர்வுறுப் பொறுமையும, திறல் மிகு உறுதியும், எம்மருங்கும அரண்செய, கூர்த்த மெய்யறிவு இறைவ னருட்டுணே வேட்டு, நல்லுரை இனிமையிற்பகர்நது மனதை ஈர்த்து நிறுத்த முயலுங்கால், இவ்வடக்கு முறையின் கொடுமை பொருது, மெய்ச்சுடரின் வெம்மையின் வெமபிய வினேமூலகள், எரிநினேவுகள், சீற்றப் புலிகள், மதம் பொழிமாக்கள், ஆசைப் பைசாசங்கள், வஞ்சனே நரிகள் தலே விரிததாடி தங்களது முழுவலியையும் ஒருங்கே வடித்துக் கொடும் போர் தொடுத்துத் தாங்க ஒண்ணுக் கருநஞ்சு கானறு, நமமை எரிமிகு பிலத்தினவாய் வீழ்ந்து மடியுமாறு உந்தித் தள்ளும். அடுத்த கணத்தில் நம்பாடு முடிந்தது எனும் எண்ணமும் வந்து ஒறுக்கலாம. என்ன பொறுக்கொணு இன்னல்கள் பெருகி வந்து மூடியபோதும் அஞ்சா நெஞ்சுடன் "எல்லாம் உன் செயல். எம்மாலாவது ஒன்று மில்லே. நீயே கதி"

"ஆனே வெம்போரிற் குறுநதூறெனப் புலனுல் அலேபபுண் - டேனே எந் தாய் விட்டிடுதி கண்டாய்" என்று அவன் கழலிணேப் புணே பிடித்து உள்ளம் உலேயாது நம்பிக்கையுடன் நிற்கும் நமக்கு ஆண்டு "அஞ்சேல்" என்ற ஒலியுடன் கண்டங் கறுத்தவனது அருளஒளிதோன்றிக் கடுவிடம்எரித்து, நம்நெறியை நன்னெறி யாக்கும். பொங்கிய மனமும் ஆறித தெளிந்து, பளிங்கென ஒளிர்ந்து நம்பியலே விளக்கி மெய்யுணர்வை ஏற்றுத் தாங்கவல்ல பாததிரம் ஆகும.

மனேவி மக்கள்பால் ஆசையற்று, உடல் உணர்வற்றுக் கவலேயற்று, தீ எழுச்சிகளற்று, அலே எறியா நீர்நிலேயன்ன அமைதி மனமே உயர் தெய்வ உணர்ச்சிகளே ஏற்றுத் தாங்கவல்ல (Receptive) பாத்திரம், தண்ணீர்

கொணருவான் கிணறு செல்லும ஒருவன் வெற்றுக்கையுடன் விரைவதாற் பயனில்லை. வெறறுக் குடமொன்று கொண்டு செல்ல வேண்டும். மெய்யுணர்வடையத தேடுபவனும் வெற்று மனதைதக் கொண்டு இறைபால் ஏக வேண்டும். ஆசை கவலை எரி எழுசசிகளாற் கனநத மனத்தைக் கொண்டு ஆண்டுச் செல்லவும முடியாது; சென்றாலும் ஒன்றும் கிடைக்காது; கிடைததாலும் அதைத் தாங்கும் வன்மையும மனதிற்குக் கிடையாது.

தியானப பயிற்சி செய்பவன் தனியிடததமர்ந்து, இறைபால் உறுதியுடைய நமபிக்கையும் தளராப் பொறையுங் கைபபிடித்து, அவனருட்டுணையுங் கொண்டு ஓடும மனதிற்கு நல்லுரை பகர்நது, உலகத்தின் நிலையாமையையும் உயரிய குறிககோளினது நிலை பெறுந தன்மையையும் உணர்த்தி, அதை மெல்லென இழுததுத தெய்வ உணர்ச்சிகளை ஏறறுத் தாங்கும பெற்றியுடையதாக அமைதியில் நிறுத்துதலே முதலிற் செய்ய வேண்டுங் காரியம். "எல்லாம் அவனே; துன்பந துடைக்க வல்லான் அவன் ஒருவனே" என்ற அடிப்படை நோக்கம் சலிப்புடை மனத்தை அமைதியில் நிறுததலாம்.

# இடியேறு

## பொங்கலோ பொங்கல்!

"பொங்கலோ பொங்கல்"— இவ்வொலி, தைத்திங்கள் முதல் நாளில் எங்கணும் முழங்கப்படுவது வழக்கம். இதன் பொருளென்னை?

பொங்கல் என்பது மகிழ்சசியினின்றும் எழுவது. பண்டை நாளில் காலமழையான் தானியங்கள் செழுமையாய் வளர்ந்து வளந் தந்து வந்தன. அவ் வளம் மக்களை மகிழ்ச்சியால் பொங்கச் செய்தது. அப்பொங்கலே பொங்கல் விழாவாகக் கொண்டாடப் பட்டது. மகிழ்ச்சிப் பொங்கலின் அறிகுறியே சோற்றுப் பொங்கல் என்பது உணரத் தக்கது.

இந்நாளில் மக்கள் உள்ளத்தில் மகிழ்ச்சி உண்டோ? மகிழ்ச்சி இல்லாவிடத்துப் பொங்கல் ஏது? காலமழை பெய்யினும், தானியங்கள் வளமுற வளர்ந்து பயன் தரினும், நாட்டில் வறுமைப்பிணி அகலுவதில்லை. இதற்குக காரணம் பலபடக் கூறலாம். அடிப்படையான காரணம் நாட்டுச் செல்வம் நாட்டிற்குப் பயன் படாமையேயாகும். நாட்டுச் செல்வம் நாட்டிற்குப் பயன் படும்பொருட்டு அறிஞர்கள் முயன்று வருகிறார்கள். அவர்கள் முயறசிககு ஆக்கந் தேடவேண்டுவது நாட்டவர் கடன். இக்கடனாற்றுதற்குரிய வழிகள் பலப்பல. அவைகளுள் ஒன்று நன்னாட்களில் ஆண்டவனைச் சிறப்பாக வழுத்துவது.

இத்தைத்திங்களில், பொங்கல் விழாவன்று, பண்டைப் பொங்கல் விழாவின் நிலையைக் கூர்ந்து ஓர்ந்து, அந்நிலையை மீண்டுங்காண ஆண்டவன் திருவடியை உன்னி உன்னி, உள்ளத் தெழுங் கிளர்ச்சியால் "பொங்கலோ பொங்கல்" என்று ஒல் இடுவார்களாக.

பொங்கல் விழாவன்று, உரிமை உணர்சசி - உரிமைக்கிளர்ச்சி - உரிமை எழுச்சி - நாடெஙகும் பொங்குக; பொங்குக; பொஙகுக. பொங்கலோ பொங்கல்!

—திரு. வி. க. - "தூ. வி."

## "ஆசிரமங்களும் தற்கால வாழ்க்கையும்"

இப்பெயர் வாய்நதநூல் ஒன்று நமது பார்வைக்கு வநதது. நூலாசிரியர், டாக்டர் சவரிராயன் ஏசுதாசன் என்பவர். ஆசிரமங்கள் என்றதும் "ஓ! பழமை" என்று எள்ளுவது தற்கால வழக்கங்களுள் ஒன்றாய் விட்டது. 'பழமை' என்ற சொல்லைக் கேட்டதும் வெறுப்பும், 'புதுமை' என்ற சொலலைக் கேட்டதும் விருப்புங கொள்வது

டைமை யாகாது. பழமையோ - புது மையோ-பொருள் பொதிவு உடையது எதுவோ—அதைப் போற்றி எறபது அறிவுடைமையாகும்.

இந்நூல், ஆசிரமத்தைப் பற்றி நன் முறையில் தன்கருத்தை வெளியிட்டிருக் கிறது. ஆசிரமத்தின் அமைப்பு, ஒழுக் கம், வைப்பு முதலியன திறம்பட ஓதப் பட்டிருக்கின்றன. ஜீவன் முத்தநிலை, பிரமசரியம்,குருகுலம் முதலியவற்றின் நுட்பங்கள் விளக்கப்படடிருக்கின்றன. சாந்திநிகேதன ஆசிரமமும, சததியாக கிரக ஆசிரமமும் பொருநதிய முறை யில் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின் றன. பல சமய ஆன்றோர் உரைகள் ஆங்காங்கே பொலிவுறுதல் நூலைச சிறப்புச் செய்கிறது. சமரச சன்மார்க்க நேயர்களுக்கு இந்நூல் ஒரு விருந்தா கும் என்பதில் ஐயமில்லை.

அன்பர் சவரிராய ஏசுதாசன் ஓரிடத தில், "யூதபக்தர்கள் கடவுளின் ஆண் மைத் தத்துவத்தையே பிரதாபமாகப் பாராட்டி யிருக்கிறார்கள். ஆனால் கிறிஸ் துவில் ஒருபெண்ணுக்குரிய சகலசாந்த உருக்க இரக்க அன்பின சொருபத்தை யும்பார்க்கிறோம். இந்து பக்தர்கள், கட வுளை, 'அன்னை' 'தாய்', 'அம்மை' 'மாதா' என்று பாராட்டுவது வழக்கம்" என்று எழுதி, " அம்மையே அப்பா........... " " பால்நினைந் தூட்டுந் தாயினும்......." எனவரும் மாணிக்கவாசகர் மொழி களை எடுத்துக்காட்டியிருததல்மகிழ்ச்சி யூட்டுகிறது. எச்சமய நிநதனையுமின்றி நூல் எழுதப்பட்டிருப்பது போற்றற் குரியது. ஆசிரமத்தில அன்பு நிலவுகி றதுபோல, இநநூறகண்ணும் அன்பு நிலவுகிறது.

கிறிஸ்து குல ஆசிரமம் வைத்து நடாததும் ஒருவர், 'ஆசிரமங்களும் தற் கால வாழ்க்கையும்' என்னும் இந்நூல் எழுதியுள்ளார் ஆதலால், இநநூற்கண் போநதுள்ள உரைகள் யாவும் ஆசிரிய ரின் அநுபவத்தினின்றும் பரிணமித் தன என்பது உணரத்தக்கது. அன்பர் சவரிராய ஏசுதாசன் அவர்கட்கு நமது நன்றி உரியதாக.

தாகூர்,காந்தியடிகள்முதலியபெரியோர் படங்களும், சிலஆசிரமப் படங்களும் நூலை ஆங்காங்கே அழகு செய்கின்றன.

விலை அணுபத்து. கிடைக்குமிடம்:— கிறிஸ்துகுல ஆசிரமம், திருப்பத்தூர், வடாற்காடு ஜில்லா.

---

# மேருமந்தரர்

இநநூல், 'மேருமந்தர புராணம்' என்னும் பெருங்காப்பியத்தை யொட்டி வித்வான் - வே. வேஙகடராஜுலு ரெட்டியார் அவர்களால் எழுதப்பட்டது. கதைப்பகுதிக ளெல்லாம் செய்யுட் பொருளைத் தழுவியே எழுதப்பட்டுள்ளன.

இந்நூல், பிறர்பொருள் வெஃகுதல், பகை கோடல் முதலிய வற்றான் நேருந் தீமைகளையும், பொறுமை, அருள், ஞானம் முதலிய வற்றான் உண்டாகும் நன்மைகளையும் நன்கு விளங்கக்கூறுவது. இது கற்போருக்கு நல்லொழுக்கத்தையும் நல்லறிவினையும் நல்கும் என்பது ஒருதலை. அன்றியும், உரைநடை செவ்விதாக அமைந்திருத்தலின், இநநூல், கற்கும் மாணவருக்குக் கட்டுரை எழுதும் ஆற்றலையும் முற்றவிளக்கும்.

இந்நூலில் வந்துள்ள அருஞ்சொற்கட்குப் பொருளும், இந் நூலிற் கூறப்பட்டுள்ளோரின் வரலாற்றுச் சுருக்கமும இப் புத்தகத் தின் ஈற்றிற் சேர்க்கப்பட் டிருக்கின்றன. அவை, மாணவர்க்குப் பெரிதும் பயன் தரும். விலை ரூபா ஒன்று.

முருகவேள் புத்தகசாலை,
12, கணபதி முதலி தெரு, இராயப்பேட்டை, சென்னை

Registered No. M. 1500.

# நவசக்தி

‘ எவ்வுயிர்க்கும் அன்பாயிரு ’ ‘ என்கடன் பணிசெய்து கிடப்பதே ’

சிலம்பு ௧௪ ஸ்ரீமுக௵ தை௴ பரல் ௫

## பணவிடு தூது

பூதலத்தார்க் கெல்லாம் பொதுப்பொருளே சாதகஞ்செய்
நாதங் கதித்திலங்கு நாணயமே—கோதணுகா
அண்ட புவனமதை யாளரசர் சென்னிமுதரி
கொண்ட பசும்பொனெனுங் குன்றமே—மண்டதில்
சித்தாதி மூலமெனத் தேசமெங்குஞ் சுற்றிவநத
பைத்தாதே பொய்த்தாதே பண்ணுவாய்—நித்தநித்தம்
வீடுவிட்டு வீடுசெல்வாய் மின்னுமொளி வைத்திருப்பா
யீடுவைத்துப் பின்புவெளி யேறுவாய்—கோடியர
5 ஆதவரைப் போல வமைந்தவரை யிற்பிறந்து
மோத வரையிலங்கி யுள்ளவரை—மாதவரை
வட்டிக்குச் செம்புதவ வாங்கா யுனதினமே
யொட்டிக் கிரட்டியென வோதுவாய்—பெட்டிதனில்
மூடி யிருப்பாய் முதலாய்க் கடையிருந்து
கோடியெனப் பேர்கோடி கொள்ளுவாய்—நாடியுனைத்
தேடித் திரிவார் தெரிசனைக்குக் கண்டவுடன்
கூடிக்கண் மீதுவைத்துக் கொள்ளுவார்—மாடிமனை
கட்டிடுவா ரிந்தவுல கந்தனிலெந் நாளுமுனைச்
சுட்டியே சொல்லுந் தொழிலையே—திட்டமுடன்
10 சாதிப்பே னுன்றனது சாதி யனேகமுண்டு
சாதியா ரின்கரத்துஞ் சஞ்சரிபபாய்—காதலுடன்
கொம்பனையார் வாழ்வுபெறக் கொண்ட திரு மங்கலந்தான்
செம்பொனே யல்லாமற் செம்பாமோ—வம்பரத்திற்
றெள்ளு மவுணருக்குச் சேர்குருவாய் வந்ததுவும்
வெள்ளியே யல்லாது வெண்கலமோ—வுள்ளபடி
சேர்ந்தரசர் செங்கோல் செலுத்துந் திருமுடிமே
லேந்துவதும் பொன்முடியோ வீயமோ—கூர்ந்து
தராதலத்திங் காரமாய்த் தானிருப்பாய் குற்றம்
தராதனக்குத் தானுஞ் சரியோ—நரேசர்
15 விதமா யனுதியார் விண்ணோர் விரும்பு
மதிகாரம் பண்ணுவதற் கன்றோ—வெதிரறுபான்
சூழ்வருடந் தன்னிலொன்றே சொன்னநட் சத்திரத்தி
லேழிலொன்றே ராசிபன்னி ரெண்டிலொன்றே—தாழ்வின்றிப்

பன்னுதிரு மால்பிறப்புப் பத்திலொன் றேயொன்ப
தென்னு நவதா னியத்திலொன்றே—மன்னுதிசை
யெட்டுக் கிரியிஞென்றே யேழுவா ரத்திஞென்றே
சட்டமென வேயாறு தன்னிலொன்றே—யெட்டுமத
மேவுபூ தத்திலொன்றே மிக்கயுகம் நாலிலொன்றே
மூவகை யாந்தேக மூன்றிலொன்றே—தாவும்
இருகதிரி லொன்றேயீ ரேழுலகந் தாங்கி
யுருவிநிற்கும் பொன்மலையா மொன்றே—பரவைசூழ்

பணத்தின் தசாங்கம்

மண்ணி லுயர்ந்தகந்த மாதனவெற் பாயெவரு
மண்ணுந் திருப்பொன்னி யாறுடையாய்—திண்ணமாய்
அந்நாளிற் சேரமா னவ்வையார்க் குக்கொடுத்த
பொன்னுடா யீழப் புதுநகராய்—முன்னேறு
வாசியாய் நீடுதிக்கின் மாதந்தி யாய்கரங்கள்
வீசுருவ ளோத்தாரின் மேன்மையாய்—பேசியகல்
யாணை முரசாய்மே லாக்குமர வக்கொடியாய்
தாணுவா யாக்கிஞ சக்கரத்தாய்—பூணுமுனை

தனித்தனிச் சிலேடை

ஆயுத மின்றி யரணின்றிச் சேனையின்றித்
தீயார்போல் வென்ற திறல்வேந்தே—போயகன்று
சாய்க்குணங்க ளின்றித் தானே நிருவாகம்
வாய்க்கும் படிநடந்து மந்திரியே—வேட்கைப்
படைக்குறும் பொன்ஞர் படவுமே லேறி
நடுக்குதிரை யேறுதள நாதா—கடற்புவியி
லாரவா ரத்தி லடங்குபுளி யாக்கையதி
கார நடத்துமணிய காரனே—நேராக்கக்
கட்டியடித் தாலுங் கலீரென்று வாய்திறந்து
வட்டறுப்பாய்ப் பேசா மவுனியே—சட்டமொரு
நன்மைத் திறத்து நளினக் குருவாகச்
சின்முத் திரைகாட்டுந் தேசிகா—மன்னெவர்க்கு
மானபசி யாலுயிர்போ மவ்வே ளையிலுடலைத்
தானே பொருத்திவைக்குஞ் சஞ்சீவி—மேனிரம்பு
சிந்தூரப் பொட்டணியுஞ் சேயிழையை மாலையிட
வந்து வரிசைபெற்ற மாப்பிளாய்—முந்துந
திடமறவே தாபந்தஞ் செய்வாய் தினமுங்
கடன்வாங்கச் சொல்லிக் கரைப்பாய்—கடன்வாங்கப்
போனாலு முன்ஞேடிப் போய்க்கலைப்பாய் பொன்கொடுப்ப
தானல் முறியெழுதென் றுடுவா—யானகடன்
கேட்டால் மொடுமொடுப்பாய் கெஞ்சிஞு லுங்கொடுக்க
மாட்டாய்முன் ஞேடி மறிப்பிருப்பாய்—நாட்டிற்

பணவிடு தூது

கடன்காரன் வைத்தகழுக் காட்டென்பா யிந்தச்
சடங்கடிக்கு வாய்த்த சளக்கா—கொடுங்குணத்து

வாயுள்ள பேர்களையும் வாயடைப்பாய் பேசுதற்கு
வாயில்லா வூமைகட்கும் வாய்கொடுப்பாய்—தூயவர்க்கு
மிச்சைதரு வாயோ ரிடத்திலுமி ராயெங்கும்
பட்சியா யூர்வாய் பறந்திடுவா—யுச்சிதமாய்ச்
சூழுறையி லேயிருக்குந் தோகையர்க்குந் தூதுசெல்வாய்
வாழாத பெண்களையும் வாழவைப்பாய்—வீழவாய்
வெட்டுவாய் தட்டுவாய் வேந்தர்வாய் பேசாமற்
கட்டுவா யொட்டுவாய் கைபிடிப்பாய்—வெட்டுதலை
மீட்டுவாய் சண்டைக்கு வீடுவிட்டு வீடுசெல்வாய்
கூட்டைப் பிரிக்குங் குறிப்பறிவாய்—வாட்டமின்றி
யோகங் கொடுப்பா யுடம்புதெரி யாதிருக்க
மோகங் கொடுப்பாய் முகங்கொடாய்—தேகியென்பார்க்
கேறிட்டுப் பாரா யிரும்பாப்பி லேயிருப்பாய்
வீறிட்ட பார்வைகீழ் மேற்பார்ப்பாய்—தேறி
வலியச் சருவி மடியைப் பிடிக்குஞ்
சலுகைப் புலியேயென் சாமி—கலியாணம்
பண்ணுமு னேடிப் பரிசமிடப் போவதனால்
வண்ணமுலை யார்தமக்கு மசசானே—நண்ணிளையோர்
கைத்தலத்தி லன்பாய்க் கனதாரை வார்ப்பதனாற்
றத்தைமொழி யார்க்குநீ தநதையோ—வைத்தசுருள்
தானெடுக்கு மாப்பிளைநீ தான்பெண்ணைப் பெற்றெடுத்த
மானனையா ருக்கு மருமகனே—தானேகம்

## அரசரது தொழிற் சிலேடை

பட்டமது கட்டிப் பருங்க லிணைத்துரங்க
வட்டமது சுற்றி மனுப்பொருந்தி—விட்டேறிக்
கம்பியரராஞ் சேனையெண்ணிக் கைபார்த்துச் சூழ்ந்துவரக்
கொம்மெனவே வாங்காக் குழலூதி—விம்மி
அடிபிடியென் றேறி யடைக்கலரைச் சாடி
யிடமுறவாங் கோட்டைலக்கை யேறி—நடுவில்
அணியணியா மோதிரங்கை யாட்ட யடை யாரைப்
பணிபணியென் றேயதிரப் பண்ணித—துணிவுடனே

## நாணயம் வழங்கிடம்

கூடலூர் தூற்றுக் குடிமலையா ளந்திருவாங்
கோடரிய வூர்பட்டுக் கோட்டைகொங்கு—நாடுபுதுக்
கோட்டை மதுரை கொழும்புதே சம்பரங்கிப்
பேட்டைசிவ கங்கை பெரும்பரம்பை—நீட்டுதிரு
நெல்வேலி காமயனூர் நீண்ட பெருநகர
மெல்லாம் வசப்படுத்தி யெங்கெங்குஞ்—சொல்லுமொழி
நாணய மாக நடந்துகொள்வீ ரென்னவே
தாணயங்கள் வைத்துமற்றுந தாரணியில்—வேணபடி

## நாணய முறையும் பெயரும்

தும்பிச்சி தம்பிசெட்டி சோழியன்சா மந்தன்கிச்
சம்மாள வெங்கிடரா சன்சிலம்பன்—திம்மயனு

யக்க னிராய னனந்தாழ்வான் ராமய்யன்
றக்க தொருராமச் சந்த்ரய்யன்—மிக்கமதி
நந்தனர வாள்வீர ராயனொடு பூச்சியனு
நந்தலிலாத் தட்டார நாயகனு—முநதுமக்கா
ரெட்டி யுடனே ரெடியபுக ழட்டாலேச்
செட்டிவிறற் கானனொடு சேர்நதமுல்லா—கட்டுமெட்டாய்
60 மேவியரா மப்பய்யன் மிக்கசா ஞன்புலித
தேவ னெனப்பேர் சிறப்பித்துப்—பூவுலகில்
நீங்காது நித்தநித்தம் நீங்கள் பிடிததமுலே
வாங்கா திருநகளென வைததருளிப்—பாங்குபெறு

நாணயவாரியல்

வல்லகுதி ரைக்குளம்பு வாகெரு மைநாக்கு
முல்லங்கி கொம்பங்கி மோகரா—நல்லசன்னசு
கீற்று மிருந்தபெருங் கீற்றுரு பாயெனவே
சாற்றுவர்க்குன் முத்திரையுந தான்கொடுத்து—மேற்றரமாய்
அட்டதிசை சுற்றி யமர்ந்திருந்து நீர்நமது
சட்டஞ் செலுததுமெனத் தானமைத்துக்—கட்டளையாய்சு
65 சாலக் கிராமலிங்கந தனனையுமவிட் டுகொடுத்து
மேலத்தாய் வாழ்ந்திருக்க வேவைதது—ஞாலத்தில்

நாணயக் குற்றம்

வந்தசெம்பு தேய்வு வருநா ணயமறுதல்
வெந்தூறல் கோழி விழுங்கலுடன்—முந்திடது
கைவெட் டொடிசல் கனகன்சா பூயூறல்
பொய்வெட்டு ளாரைநம்பப் போகாது—வையகத்தில்
மாமித் துருபோதர் வஞ்சப் பிரட்டரிவர்
சாமித் துரோகரென்று தள்ளிவைத்து—நேமிக்குந்
தண்டாய மென்னுமொரு தண்டிகைபி லேபவிசு
கொண்டாய்பூ தப்படைகும் பிட்டுநின்ற—மண்டலத்திற்
70 றேற்றுகோ டிக்கணக்கிற் றாண்டா மணிவிளக்கொன்
றேற்றுதீ வட்டி யிலங்கிநிற்கத்—தேற்ற
கிலமணக்குங் கீழக் கிடாரத்தில் வந்து
கொலுவிருந்து வாழ்வுபெற்ற கோவே—நிலமீது

அமைச்சர் இயல்பு

மிக்க திபாசு விரித்துரத்னக் கம்பளததிற்
றக்கதிண்டு போட்டதன்மேற் சாய்ந்துகொண்டு—பக்கமெல்லாம்
வெள்ளித்தீ வட்டி விளங்கச் சனநெருங்கத்
தள்ளிப் பிரம்படிச டேரென்னத்—துள்ளும்
பரிநகுலா பாக்கியசம் பன்ன மிதுலே
வருசனகா வென்றுகட்டியம் வாழ்த்த—வொருபுறத்தில்
75 ஓலைவா சிக்க வுயர்கணக்கு வாசிக்க
மாலைமலர் திண்புயத்தில் வாசிக்க—மேலொருபா
லொப்ப மிடுவ தொருமுறையாய்த் தேசத்தார்
கப்ப மிடுவதொரு கைமுறையாய்ச்—செப்பமொடு

நாட்டியங்க ளாடுவதாய் நல்லோர் பரவுவதாய்
பாட்டுடையோர் சங்கீதம் பாடுவதாய்—நாட்டிலுள்ள
பாளையக் காரர் பணிவதுவாய் ராணுவத்தாய்
நீள நெருங்கியணி நிற்பதுவாய்—நாளும்
அதிகாரம் பண்ணு மமைச்சருர மெலலாஞ்
சதிரான நின்பெருமை தானே—யெதிராகத்

அட்டவணைப் பிள்ளைமார் இயல்பு

தாலுகா வுத்யோகத் தாட்டீ கரையழைத்து
மேலுமவர் சேவகத்தை வீதித்து—மாலிமையா
யெத்தியவர் சம்பளத்தை யெட்டுமா தநதீர்த்துப்
பத்துமாத் தைத்திட்டப் பற்றெழுதி—நித்தப்
படிகாரர் சம்பிரிதிப் பத்தர் மணியத
துடிகார ரெத்துவழித் துட்டர்—நெடுகப்
பணிரெண்டு மாதமாய்ப் பற்றினபற் றெல்லாந்
தணிரெண்டு மாதமது தள்ளி—யனியாய
மாகவசக் கட்டெழுதி யாணி வரையிலொரு
சேகரமாய் நோட்டத்திற் செல்லெழுதி—யோகமுறைத்
தேவதா யங்களொடு சேர்பிரம தாயங்கள்
மாவளஞ்சேர் மாணியம டப்புறங்கள்—சேவகஞ்செய்
சீவிதக் காரருக்குஞ் சேர்ந்தநிலத் தைப்பெருக்கிச்
சாவிகிராம் பெவ்வளவுந் தள்ளாமற்—பாவிகளுக்
குள்ளவரி யென்று முயர்ந்த மகமையென்று
மெள்ளளவுஞ் சற்று மிரங்காமல்—மெள்ளவது
விட்டான் மனைப்பொருளை மேற்செலுத்திப் பின்புதுண்டு
பட்ட பொருளெல்லாம் பங்குவைக்கு—மட்டவணைப்
பிள்ளைமார் கூடிப் பிரட்டுருட்டி லேயடிக்குங்
கொள்ளையெல்லா நீயாட்டுங் கூத்தன்றோ—மெள்ள

ஸ்தானுபதிகள் இயல்பு

அவரவர்கள் செய்தி|யவரவர்கள் சொல்ல
யெவர்களுஞ்சூ மூச்சிவிகை யேறிப்—பவளக்கா
லாசார வாச லருகாக விட்டிறங்கிக்
கூசா தரண்மனைக்குட் கூர்ந்துசென்று—ராசாங்க
வேளைகிடை யாமல் வெளியில் வரும்போதே
யாளிரண்டு பாலு மடர்பொழுது—நாளையென்று
சொன்னருன் செய்திநன்ருய்ச சொன்னேம்பிள ளாயடப்பஞ்
சின்னனைக் கேளெனவுஞ் செப்பவே—பின்னெருவ
ரென்செய்தி யென்னென் றியம்பவட பாழுறுவாய்
யுன்செய்தி சற்று முரைத்திலேன்—பின்செய்தி
யில்லைப் பொருட்பலத்தா லேபேச வேணுமென்று
சொல்லமட்டு மேயொருவன் ருெட்டுவர—நல்லதுபோ
நாளைக்கா கட்டும் நமக்குச் செலவுக்கிவ்
வேளைக்கில் லாதுவந்து விட்டோமென்—ருளின்

முறிபட்டுப் போகின் முடிப்புள் ளிருந்து
பறிபட்டு நீயவர்கை பாயத்—தெறிபட்டு
மீண்டு திரும்பிவரு மிக்கசா மாசிகளோ
யாண்டு குடிவளர்க்கு மப்பனே—பூண்டிருகை

## இராயசகாரர் இயல்பு

வாரியவெள் ளோலை மடிமேற் சுருள்சேர்த்தோர்
பாரிசஞ்சற் றேதெரியப் பண்ணிவிட்டுக்—காரியத்தி
லோங்கு நிருபத்துக் குததரவா னுலொபபம்
வாங்கட்டும் நாளைக்கு வாருமென் றும்—பாங்காத்
தனிநிருப வர்த்தனையைத் தாருமென் றுஞ் சற்றே
யினியொருத்த ராங்கே ணி யென் றுங்—கனிகரமாய்ச்
சொன்னது பாதிபி ரனுஞ் சொல்லா ததுபாதி
தன்னினைவு பாதி தரங்கண்டு—பின்னுமுன்னு
மெட்டோலை பத்தோலை யெ ா மெழுதியொரு
கட்டோலை முச்சுடுங் கைப்பிடித்து—வட்டறுப்பாய்
பேசா மவுனிகளாய்ப் பின்காட்டிப் போவார்கள்
கூசாது சென்றுற் கொடுகொடென்பா—ராசாரம்
நாடிவா வென்றதட்டும் ராயச காரருடை
மோடி திருத்திவைக்கு முத்தையனே—நீடுலகில்

## தாசில்தார் இயல்பு

தச்ச னடித்த தலைவாயில மதாறுமம்பா
யிசசகஞ் சொல்லி யிதஞ்சொல்லி—வைச்சு
முழுதுஞ் சரீர முறியில் விலபிட்
டெழுதுவர்போற் சாமீ னெழுதித்—தழுவியமல்
உத்தியோ கத் ாங் குறுகிெ ால்லி வாங்கிவந்து
புத்தியோ கங்க ுறப் பூரிதது—ித்தம்
அதிகார டாகையின்மே லார்த ுக் குடிமேற்
பொதிகார மிட்டபுண்போ ற் ெ ாங்கி—நிதமாட்டுப்
பட்டிக்கோ ரைநது பணமென்று மூ ் த்தண்டல்
மட்டிக் கபராதம் வாங்கென்று ்—கெட் டிகெட்டி
காரியமெல் லாமணிய காரன் யகடுத்துவிட்டான்
வாயனைக் கூட்டி வரச்சொல்லு ம்—போரிற்
களவேது நேற்றுக் கடகநெல் ுப் போன
வளவே திருட்டின் மரக்கா—லளவேது
பட்டடைவாய்ச் சீட்டெடுத்துப் பார்கணக்கைச் சோதியுள்ளோர்
வட்டமணி யததை வரவழைகேள்—வெட்டுபுளி
யாக்கையின்மே லாக்கையின்மே லாக்கையின்மேற் போடென்று
கூக்குர லிட்டுக் குதிகொண்டு—தாக்கித்
தலைத்துலுக்கங் கொண்டு தான்விசுவா சம்போற்
பிலுக்கி விருதத்திற் பேசித்—துலக்கமுற
வெள்ளைகண்ட பேரை விபகரித்துக் கைக்கூலி
கொள்ளையிடு மூர்க்கணக்கன் கூடவே—யுள்ளாகிக்

கொல்லைத் தலையிற் குளிக்கையிற்சோ றுண்கையில் வீட்
டெல்லைத் தலையி லிரகசியஞ்— சொல்லி
விடிய விடியவிதே வேலையா யுள்ளூர்க்
குடியைக் கெடுக்குநச்சுக் கோலாய்ப்—படியதனில்
அன்பாய்ச் சுவந்தரத்தி லாசைவைத்துக் கொள்ளைகொண்டே
யொன்பதுகூற் றுக்கு மொருகூற்றாய்ப்—பின்பு
பணம்வேறு நெற்சம் பளம்வேறு பற்றிக்
குணம்வேறு சொல்வேறு கொண்டோர்—மணிவிரற்குக்
கிட்டிநெடு மோதிரமாய்க் கேட்குமிரு காதிற்சாய்ப்
பிட்ட வரச விலைமுருகாய்—நெட்டுடலில்
தீத்துங் குரடாச் சிலம்பம் பழகுவதாய்க்
கோத்திருக்கும் பாராக் கொலுவிருப்பாய்த்—தேய்த்துப்
பொறித்த மிளகுப் பொடிநாசித் தூளாய்
நிறுத்தல் தவசு நிலையாய்—யெறித்தவெயி
லேயு நிலவா யிலந்தைமுட்பூ மெத்தையாய்ப்
பாயுமுப்புத் தண்ணீரும் பன்னீராய்—மாய்பொழுது
தேடக் கிடையாது தேடியநாட் கிட்டாதென்
றோடியும்பின் கொல்ல னுலைவாயிற்—போடு
மிருப்புமுக் காலிதனி லெந்தமுக் காலி
யிருப்புமுக் காலிசொல்லு மென்னக்—கருப்பமுற்றுப்
பெற்றோ ரொருபாற் பிதற்றப் பெருந்துயர
முற்றோர் படும்பா டுனக்கன்றோ—மற்றுளக்கும்

### கருணீகர் இயல்பு

நஞ்சைத் தரம்புஞ்சை ராகிபுள்ளி பார்ப்பதற்கும்
பஞ்சமதி போடாமற் பண்ணுதற்கும்—நஞ்சைசெய்யில்
மாத்தா வொருமாப்பம் மாத்தாய்ச் சொலிப்பள்ளச்
சாத்தா வொருரூபாய் தாவென் றுஞ்—சேர்த்துங்கள்
செய்மேனிக் கேரூபாய் சேகரித்து மொத்தமெங்கள்
கைமேற் கொடுத்துவிட்டாற் கம்மிபுள்ளி—மெய்யெனவே
பார்ப்போம் யாமென்று பணத்தைவசூற் பண்ணினுத்தப்
பேர்ப்போன பேஷ்கார்முன் பின்கணக்கன்—மார்பாடா
யேழுகல மெண்கலமா யெண்கலத்தை யங்குபதி
னேழு கலமா யெழுதவே—மேழிவா
ரங்கூடக் காணு தலறுங் குடிகளுக்குப்
பங்கீடு சொல்லப் பயங்கொண்டு—சங்கனையுங்
கொங்கனையும் வெங்கனையுங் குட்டையுங்கே ளுங்களெனப்
பங்கனைவோ ரும்பணத்தைப் பண்ணியே—யெங்குமுத்து
வெள்ளைசம் பாவும் விளைந்தொப் படியாகி
யள்ளிக்கொட் டாரமதி லம்பாரந்—தள்ளியபின்
அம்பார வாசி யரைவாயி லேகழித்துச்
செம்பாதி யும்பதராய்த் தேய்த்தெழுதிச்—சம்பாவிற்
பட்டடைப்பா டென்றெழுதிப் பச்சரிசி குத்தவிட்ட
கட்டளவிற் பாடுகொஞ்சங் கண்டெழுதிக்—கட்டிவைத்த
சேமரப் பிரித்துச் செலவழித்துக் கொண்டுகுடி
வாரக்க மாய்க்குடிமேல் வைத்தெழுதிப்—பாரில்

நிசக்கட்டா கக்கொடுக்கு நேமுகர்போல் நெல்லை
வசக்கட்டாய் நாடோறும் வாங்கி—மசக்கா
முதலிடுவைத் தம்பார முற்றும் புகலா
யெதிரிகணக் கும்பார்த் தெழுதிச்—சதிர்மேதைப்
புஞ்சை நிலத்தைப் புரவூர்ப் புரவெழுதி
மஞ்சள்வைப்பை யீருள்ளி வைப்பெழுதி—யஞ்சாமற்
பைங்கால் நிலத்தைப் பருமரக்கா டென்றெழுதி
வெங்கருசற் காட்டைவெப்ப லாயெழுதிப்—பொங்குவெப்பற்
காடுபொட்டற் காடாய்க் கரைதடுதெழுதி யெள்விளைந்த
மேடுவெறு மேடாய் மிதித்தெழுதி—நீடறுப்பம்
புல்லாய்ப் படுபாதி போக முளைத்தபுஞ்சை
யெல்லா முளையுருளி யென்றெழுதி—மெல்லமெல்ல
வீட்டுச் செலவுக்கு வேண்டியபோ தெல்லாமுப்
பாட்டனூர் தேடியசம் பாத்தியம்போல்—நோட்டத்தில்
யாசித் தசூர்வாச லட்டவணை யிற்பிர
வேசச்செ லென்னவுங்கேள் விக்கெழுதி—மோசிப்பாய்
ஆனி வரையி லதிகவசூற் றள்ளியதைத்
தானே யெழுதிச் சரிக்கட்டி—மோனரவர்
சாகுபிடிக் குள்ளவரி தன்னைவசக் கட்டியதைப்
போகுடியிற் பாக்கியெனப் போக்கெழுதிச்—சேகரமாய்ச்
சாதல்வா ரிச்செலவு தானும் பொதுச்செலவென்
றோதுசெல வொன்றுபத்தா யொத்தெழுதி மோதுமடை
கட்டுவே லைக்குங் கலுங்குகட்டு வேலைக்கும்
விட்டகருப் புக்கட்டி வெலலமாய்க்—கட்டளைக்கு
வல்ல மரஞ்செம் மரங்கல்லாய்ச் செம்மரங்
கல்லைக் கருங்கல்லாய்க் கண்டெழுதி—நல்லகொத்தாள்
யேழாளை யெட்டாளா யெட்டாளைப் பத்தாளாய்த்
தாழா தெழுதிவெட்டுத் தாககெல்லாஞ்—சூழ
அரைமட் டரைமட்ட தாககிக் குடியைத்
தரைமட்ட மாகத் தணித்தே—யுரைகட்டி
வெள்ளோலை யெல்லாம் விடிய விடியமுழுக்
கள்ளோலை யாய்க்கணக்கைக் கண்டெழுதித்—தெள்ளுதமிழ்ச்
செப்புகவி வாணர்தஞ் செய்தி யறியாத
துப்புரவி லாதகெட்ட சும்பர்சிலர்—கைப்பொருளை
வைத்திருக்கப் புத்தி மதியிழநது வைப்பாட்டி
வைத்திருக்கு மூட மனத்தர்சிலர்—பொய்த்திருக்குஞ்
சூதுமிஞ்சி ராஜ துரோகத்துக் கும்பெரிதா
யோதுங் குடித்துரோக முள்ளர்சிலர்—[1]சாதா
இணக்க மிலாக்குணத்தா ரென்றைக்குஞ் சொந்தக்
கணக்கை யிழநதகடன் காரர்—வணக்கமாய்
ஞாயக் கணக்கெழுதி நாடுஞ் சிலர்சிலர்பொய்
மாயக் கணக்கெழுது வார்கள்சிலர்—மேதயமதி
லுள்ளபொரு ளெல்லா முரிஞ்சு மெழுத்தாணிக்
கள்ளர்பிரட் டெல்லாமுன் காரணமே—மெள்ளத்

(தொடரும்)

(பிரதி)—[1]சாதகமாய்.

# உடம்பின் உயர்வு

[திரு. கி. சுப்பிரமணியனார்]

(பேரறிஞர் வாசுவானி அவர்கள் ' பிரமசரிய ' மாசிகையில் போற்றித்த கட்டுரையின் தமிழாக்கம்)

சிந்து நாட்டிற் றிகழும் ஓர் ஆங்கிலக் கல்லூரியின் ஆண்டு விழாவின் போது நடைபெற்ற விளையாடடுப் போட்டிகளைக கண்ணுற்ற ஆங்கிலேய ரொருவர் என்னிடம், " மாணவருட் பலரும் உடைந்த-ஊறுபட்ட உடலின ராய், குழிந்த விழியினராய், தளர்ந்த நடையினராய்த் தோன்றுகின்றனர் ; " எனக் கூறிய மொழிகளை ஒவ்வொரு வரும் நன்கு கருத்தூன்றி நோக்கல் வேண்டும். நீண்டநாளாகச் சிந்துவின் உடலுரமும் தோள்வலியும் எங்கேயோ மறைந்து விட்டதைக் காண என்னுள் ளம் குழைகின்றது ; கண்ணீர் பெருகு கின்றது.

பண்டைநாளில் சிந்தியர் ஆற்றலி லும் வீரத்திலும் சிறந்தவராய் இனிது வாழ்ந்தனர். சிந்துவின் கடற்கரைப் பிரதேசங்கள் பல நாவாய்களைக் கம் போடியா தேசத்திற்கு அனுப்பியுள் ளன. ஜாவா, சுமாத்திரா முதலிய நாடு களோடு சிந்து வியாபாரத் தொடர்பு கொண்டிருந்தது. அதனுல் ஆரிய நாகரி கமும் ஆண்டுப் பரவலாயிற்று. புராதன ஐக்கிய இந்தியாவில் சிந்துவும் அதியுன் னதபதவியில் திகழ்ந்ததாகலான் யாவ ராலும் அது போற்றப்பட்டது. இவ் வாறுசிறந்தொளிர்ந்த சிந்துவீழ்ச்சியுறு வானேன் ? அதற்குக் காரணம் சிந்திய ரனைவரும் இயற்கை வாழ்வின் சிறப் பினை மறந்து அதனைப் புறக்கணித்த தாலேயே என்க. புத்தமதக் கொள் கைகள் சிந்துவில் பரவிய போது, பலர் புத்தரின் உபதேசங்களுக்குச் செவி சாயாது இறுமாந்திருந்தனர். சம யம், தேசிய முன்னேற்றத்திற்குப் பெரிதும் இடையூறு செய்வதாக அவர் கள் நினைத்தனர். சிந்தியரனைவரும் மஞ் சள் நிற அங்கிகளையே விழைந்தணிந் தனர். ' காசிம் ' என்னும் பெயரிய முகமதிய மன்னன் சிந்துவின் மீது படையெடுதத போது, சிந்தியவரசர் தங்குடிகளை உதவிக்கு வேண்ட, அவர் கள் அதற்கு மனங்கொள்ளாது மௌ னம் சாதித்தனர். எனவே, சிநதியநாடு வேற்றரசன் ஆட்சிக்குட்படலாயிற்று.

ஊறுபட்ட யாக்கையினுல் அதனுள் ளுறையும் ஆன்மாவும் கேடடையும். பழுதுபட்ட இசைக்கருவியி னின்றும் இன்னிசைஎழுங்கொல்! எழாதன்றே! அதுபோன்றே தூய்மையில்லாத - உர மில்லாத உடலினுள்ள ஆன்மாவும் தன் கடமைகளைச் சரிவர ஆற்ருது. அமெ ரிக்கக் கவியான வால்ட் விட்மென் (Walt Wittman) என்பவர் உடலின் மறைபொருளான சிறப்பினைக் குறித்து நன்கு விளக்கி யுள்ளார். மற்றும், ஆரி யர்களும் சுமேரியர்களும் வரைந்துள்ள விவிலிய நூற்கள் யாவும் உடம்பே இறைவனது கோயிலெனப் போதிக் கின்றன. எனவே, ஆன்ம அறிவினை ஊறுபட்ட உடம் பினையுடையவனுக் கும், நோயாளிக்கும் கூறலாகா தெனப் பதஞ்சலி முனிவரும் வரைந்துள்ளார். இநதுமத நூற்களும் உடலினை உறுதி செய்ய வேண்டுமெனப் பெரிதும் வற் புறுத்துகின்றன. யோகநெறியெனப் படுவது யாதெனின் சாதனையே யாகும். சாதனையே சக்தி. பண்டை நூற்களிற் குறித்த ஏழுசாதனைகளுள், உடற்றூய்மை, உடலுரம், உடலமைதி யாகிய வைகளும் அடங்கியுள்ளன. இந்து நூற்களிற் கூறப்பட்டுள்ள நோன்பு, உணவுகொள்ளும் விதிகள், பிராணுயாமம் முதலியவை உடல்நலத் திற்காகவே காணப் பட்டன. இவற் ருலேயே, ஆன்மா சிறந்தொளிருங் கருவியாய் யாக்கை விளங்குவதாகும்.

## பேராற்றல் பெறுக

மேற்குறித்த ஏழுசாதனைகளுக்கும் அடிப்படையா யிருப்பது பிரமசரியமே யாகும். பிரமசரியமே ஜனசமூகப் பெருமைக்கு நிலைக் களன் என யான் அழுத்தமாய்க் கூறுகின்றேன். 'பிரம சரியம்'' என்னும் சொல் சிறந்த உட்பொருளை உடையதாகும். எவனொருவனுக்கு நல்லுடலிருக்கின்றதோ, அவனே ஆக்கும் சக்தியோடு ஒத்துழைக்கின்றவனாகிறான்; அவனே இறையோடு இயங்குகின்றான்; விவிலிய நூற்படி கூறப் புகுந்தால், அவனே ஆண்டவன்றன் தோழனாகிறான். எனவே, உடல் நலமே என்றுமழியாத தத்துவ ஞானத்திற்கு வழிகாட்டுவதாகும். பிரமசரியத்தை மாணவர் மட்டுமன்று, இல்லறத்தானுங்கூட அவசியம் மேற்கொள்ளவேண்டும். இல்வாழ்வோனும் புலனடக்க முடையோனாய்த் திகழ்வானாக. புராதன இந்தியா பிரமசரிய நெறியைக் காரணமில்லாமல் எல்லா ஆசிரமங்களுக்கும் அடிப்படை யாய்க் கொள்ளாது. இற்றைநாள் நமது மாணவரனைவரும் வெளி யாடம்பரத்திலும் சிற்றின்பங்களிலுமே உழல்கின்றனர். தற்கால மணமக்களும வெறும்போக வாழ்வை விழைகின்றார்களே யொழியத் தங்கள் மரபினரின் பிற்கால வாழ்க்கையை உன்னுகின்றார்களில்லை. குழந்தை மணமும், உடலினுக்கிழைக்கும் வேறு பல தீங்குகளும் ஒருங்கே சேர்ந்து இந்தியாவின் சக்தியை - ஆற் [illegible] பிட்டன.

"என்றன் உடலும் இந்திரியங்களும்
உரம் பெற்றுப்பூரண வளர்ச்சியடைவதாக"

என உபநிடத நூற்கள் கூறுகின்றன. எனவே, உங்களது 'உடலின் சக்தியை உன்னி உணருங்கள்' என யான் அடிக்கடி இளைஞர்களுக்கு உரைக்கின்றேன். மனிதனது வாழ்க்கையில் சிறந்த பகுதி அவனது 13முதல் 20வதாட்டை வரையுள்ள பிராயமேயாகும். இக்காலத்திலேயே ஒவ்வொருவனும் தனது பிற்கால வாழ்க்கையை நன்கு நடாத்தத் தகுந்த தேர்ச்சி பெறவேண்டும். தற்கால இந்தியா பயில வேண்டும் பாடம் சக்தி - ஆற்றல் - ஆண்மை - வீரம் - வீரமே எனயான் அறை கூவுகின்றேன். ஒவ்வொருவரும், நல்லுடலும், தூயமனமும், தூய ஆன்மாவும் உடையவராய்த் திகழ்தல் வேண்டும். மக்கட் சமுதாயமாகிய நிலையம் நன்முறையில் கால் கொள்ளப் பெற்று மேனோக்கி உயர்தல் வேண்டும். பிறவயாக்கையரான ஆன்மாக்கள் பலர் இந்தியாவிற்குப் போந்து ஒரு புதிய சமூகத்தைப் படைக்கக் காத்திருக்கின்றனர். ஆனால் அவர்களுடைய ஆக்க வேலைக்காக நீங்களும் உங்களைச் சுற்றியுள்ள மக்களும் சீரியராக ஒளிராதவரை அவர்கள் ஈண்டுவாரார். எனவே, நீங்கள் தூய்மையாளர்களாய்-சிறந்த சக்தியாளர்களாய்த் திகழுங்கள். அதனால் நீங்கள் கண்டறியா இன்பவுலகத்துள்ள பெருமக்கள் அதிவிரைவில் உங்களிடைப் போநது அருந்தொண்டாற்றும் பெரும் பேற்றைப் பெறுவீர்கள்.

# தமிழ் நடை

['கதி']

உலகத் தோற்றத்தின்போது மனிதன் புராணங்கள் கூறுவதுபோல் அறிவும் ஆற்றலும் நிரம்பப் பெற்றவனாக இருநததில்லையென்பது ஆராய்ச்சியாளர் துணிபு. அப்பொழுது அவன் விலங்குகள்போலவே வாழ்ந்துவந்தான்; பிறகு படிப்படியாக உடலோம்பும் செயற்கைச் சாதனங்களையும், உள்ள இன்ப உயிர் இன்பங்களுக்கு ஏதுவான கருவிகளையும் கண்டறிநதான். திருமாலின் தசாவதாரத்தின் கிரமத்தை நன்கு ஆராய்வோமாயின் மனிதனுடைய வளர்ச்சி இத்தகைய தென்பது போதரும்.

மக்கள் விலங்கினங்களாய் வாழுங் காலை அவர்களால் ஒருவித பாஷையும் பேசப்பட்டு வந்ததில்லை. முதன் முதல் சைகைகள் மூலமாகவும் அதன்பின் பொருளற்ற ஒலிகளின் மூலமாகவும் ஒருவரின் கருத்தை மற்றவர்கள் உணர்ந்து கொண்டனர். அதன் பின்னரே பேச்சு வழக்கு ஏற்பட்டது. பேச்சு வழக்கு ஏற்பட்ட சில காலத்தில் வரிவடிவில் எழுத்துக்கள் கண்டறியப்பட்டன.

இவ்விதத்தில் வளர்ந்தோங்கிய மொழிகள் தமிழ், ஆரியம், ஹீப்ரூ, கிரீக், அராபிக் முதலியன. இவைகள் பழைய மொழிகளாகக் கருதப்படுகின்றன. இத்தகைய பழைய மொழிகளிலே தமிழ் மிகவும் பழமையான தொன்றாம்.

ஒரு சமூகத்தாருடன் மற்றொரு சமூகத்தார் பழக நேர்ந்த காலங்களில் ஒருவருடைய பாஷைச் சொற்கள் மற்றொருவருடைய பாஷையோடு கலந்திருக்கின்றன. இவ்விதக் கலப்பை எல்லா மொழிகளிலும காணலாம். பேச்சு வழக்கில் உள்ள எந்த மொழியும் பிற பாஷைச் சொற்கலப் புற்றதாகவே இருககும். இதற்கு விலக்கேகிடையாது. நமது தண்டமிழ் மொழி மிகப் பழைய காலந்தொட்டுப் பேச்சு வழக்கில் இருந்து வருகிறது. தமிழர் பண்டைக் காலத்தில் அநேகமாக உலகமுழுவதும சஞ்சாரம் செய்து வந்தமையைச் சில அறிகுறிகளால் அறியலாகும். புறநாட்டார் தமிழ் நாட்டுடன் வியாபாரத துறையிலே சம்பந்தம் பெற்றிருந்தனர். அக்காலததில் ஒருவர் மொழியிலுள்ள சொற்கள், மற்றொருவரின் மொழியில் ஏறியிருத்தல் வேண்டும்; ஏறியும் இருக்கின்றன. துகி, மாங்காய், அரிசி கருவாப்பட்டை, பரிசு, இஞ்சி, முதலிய தமிழ்ச் சொற்கள் மேனாட்டுப் பழைய பாஷைகளில் புகுந்து விட்டன. இதுபோலவே பிறமொழிகளின் சொற்கள் தமிழில் புகுந்திருக்க வேண்டும். புதன் சனி என்ற வாரப் பெயர்களும் மாதப் பெயர்களில் பலவும் தனித்தமிழ்ப் பெயர்களல்ல.

தமிழிலே புகுந்த பிறபாஷைச் சொற்களில் அதிகமாயுள்ளவை ஆரியச் சொற்களே. ஒரு பாஷைச்சொல் மற்றொன்றில் புகுந்ததென்றால் அங்ஙனம் புகுந்த பாஷைக்கு ஒருவாற்றானும் சிறப்பு குறைந்து விடாது. இதை எவரும் நினைவில் வைத்தல் வேண்டும். ஆங்கிலத்தில் பலபாஷைச் சொற்கள் அபரிமிதமாகக் காணப்படுகின்றன. தனி ஆங்கிலச் சொற்கள் மிகவும் அருகியே காணப்படும். அதனால் அம்மொழிக்கு இழுக்கொன்று மில்லையே! அம்மொழியன்றோ, இன்று உயர்ந்த நிலையில் நாகரிகம் வாய்நது உலகத்திற்கே பொதுமொழி என்று சொல்லக் கூடிய நிலையில் மிளிர்கின்றது!

நிற்க. வடமொழியின் தொடர்பினால் தமிழ் பல துறைகளில் வளர்ந்தோங்கியது. தமிழில் இலக்கண அமைப்பு வடமொழிச் சார்பைப் பின்பற்றியே செய்யப்பட்டிருத்தல் வேண்டும். 'இலக்கணம்' என்ற சொல் 'லக்ஷணம்' என்ற வடமொழியின் திரிபாகும். தமிழிலே அணியென்று ஓரிலக்கணம் விரிவாக

இருந்ததில்லை. வடமொழிப் போக்கை ஒட்டிப் பிற்காலப் புலவர் தமிழ் அணியிலக்கணத்தை வடமொழியினின்றும் மொழி பெயர்த்துக் கொண்டனர். சோதிடம், சமயநூல், கணிதம முதலியவற்றுள் வடமொழிச் சொற்கள் அதிகமாகப் பயின்றிருக் கின்றன. எனவே, அவை யெல்லாம் வடமொழியைக் கண்டு தமிழர் தாமாக அமைத்துக் கொண்டவையாகவோ அல்லது மொழி பெயர்த்துக் கொண்டவையாகவோ இருத்தல்வேண்டுமென்பது புலனுகின்றது.

சங்க காலத்திலே வடமொழிக்கும் தமிழுக்கும் அதிகமான தொடர்பு இருக்கவில்லை. அதனுற்றுன் சங்கநூல்களில் அதிகமாக வடமொழிக் கலப்பு காணப்படவில்லை. ஆனுல் மதவிஷயமாக மட்டும் தமிழ், வடமொழிப் போக்கைச் சங்க காலத்திலேயே ஏற்றுக் கொண்டு விட்டது. மதசம்பந்தமான விஷயங்களைக் கூறும் சங்கநூல்களும் நூற் பகுதிகளும் அதிகமாக வடசொற்களை ஏற்றுக் கொண்டிருக் கின்றன. உதாரணமாக மணிமேகலையில் சமயக் கணக்கர் தந்திறம் உரைத்த காதையையும், பவத்திறம் அறுகெனப் பாவை நோற்ற காதையையும் பரிபாடலையும் நோக்குக. இவற்றிலே வடசொற்கள் அபரிமிதமாகக் காணப்படு கின்றன.

சமணர்களும் பௌத்தர்களும் தங்கள் தங்கள் சமயக் கொள்கைகளைப் புகுத்தத் தமிழைக்கற்றுர்கள். ஆகையால் கி. பி. எட்டாம் நூற்றுண்டுக்குச் சற்று முன்னும் பின்னும் வடமொழிக் கலப்பு, தமிழில் அதிகமாக ஏற்பட்டது. ஜைனர்கள் 'மணிப் பிரவாளம்' என்று புதிதாக ஒருநடையைக் கண்டு பிடித்தனர். இநநடையிலே தமிழ்ச் சொற்களும் சமஸ்கிருத சொற்களும் விரவியே வரும். இந்த நடையிலே 'ஸ்ரீபுராணம்' எற்ற ஜைன நூலும், ஜைன சம்பந்தமான நீலகேசியுரையும் பிறவுரைகளும் எழுதப் பட்டன. வைணவர்களும் தங்கள் உரைநூல்களைச் சமணரைப் பின் பற்றி மணிப் பிரவாளத்திலேயே எழுதத் தொடங் கினர். சாதாரணமான படிப்பும் இல்லாமல் கேள்வி இன்பம் ஒன்றையே உடைய பாமரரும் இவ்வித மதநூல்களைக் கேட்டதன் பயனுகப் பல வட சொற்களை வழககிற் கொண்டு வந்துவிட்டனர். நளடையில் தமிழில் வழங்கும வடசொற்களுக்குத் தமிழ்ப் புலவர் இலக்கணமும வகுக்க ஆரம்பித்து விட்டனர். காலம் செல்லச் செல்ல வடசொற் பிரயோகம், இவ்விலக்கண வரம்பையும் கடந்து ஆளத் தொடங்கப் பட்டுவிட்டது. பிற்காலத்துக் கவிஞராகிய ஒட்டக் கூத்தரும், வில்லிபுத்தூராரும், அருணகிரியாரும் பலவட சொற்களை அப்படியே தங்கள் பாடலில் அமைக்கலானுர்கள். இவ்விதம் வடமொழிக் கலப்பு வளர்ந்து கொண்டே வந்தது.

பிறகு தமிழ் நாட்டிலே இந்துஸ்தானி அரசியல் மொழியாக ஏற்படவே, அக்காலத்தில் அம்மொழிச் சொற்கள் பல தமிழிலே புகுந்தன. உலக வழக்கிலே - தமிழ் மக்கள் பேச்சு வழக்கிலே - இது காலை எத்துணையோ இந்துஸ்தானிச் சொற்கள் கலந்திருக்கின்றன. சலாம், கபாய், பராக் என்ற சொற்களைக் குமாரகுருபர சுவாமிகள் தம் செய்யுட்களில் எடுத்தாண்டுள்ளார். அரசிறையார் இறைக்கு நாட்டு மொழிகளிலே தம் செயல்களை ஆற்றிவரினும், அத்துறையிற் பல இந்துஸ்தானிச் சொற்களே மிகுந்துள்ளன.

இப்பொழுது ஆங்கிலம் தமிழ் நாட்டின் அரசாங்க பாஷையாக இருநது வருகிறது. ஆங்கிலச் சொற்களில் எத்துணை வார்த்தைகள் தமிழிலே புகுந்திருக்கின்றன என்பதை இங்குக் காட்ட வேண்டுவதில்லை; நாம் நேரில் அறிகின்ருே மன்றே! ஏன் நாம் ஆங்கிலச் சொற்களைத் தமிழ் பேசும்போது ஆளவேண்டும்? மோடார், ரயில், ரேடியோ, கோர்ட்டு, கலக்டர் முதலியவற்றிற்குத் தமிழில் பெயர்கள் இல்லையோ!

கற்ேறார் இவற்றிற்குத் தனித் தமிழ்ச சொற்களை ஆக்கிக்கொள்ளலாம். ஆயின் பாமரர் இவர்களைப் பின்பற்றுகின்ற னரா என்பது தான் கடா.

நிற்க. இதுகாலை, தமிழ் நாட்டிலே ஒரு சிறு தொகையினரால் 'தனித்தமிழ் நடை' வேண்டும் என்று ஓரியக்கம் தொடங்கப்பட் டிருககிறது. இவ்வியக் கததார் பல ஆக்கச சொற்களை அமைத் துக் கொண்டிருக் கின்றனர்; பல பத்தி ரிகைகளுக்குத் தனித்தமிழ் நடையிலே கட்டுரைகள் வரைகின்றனர்; தாம் எழு தும் ஆராய்சசி நூல்கள் பலவற்றைத தனித்தமிழ் நடையில் எழுதப் பிரயா சைப் பட்டிருக்கின்றனர். அவர்கள் முயற்சியும் வீண்போக வில்லை. ஆயி னும் பாமரவுலகம் இவர்களைப் பின் பற்றுகின்றதா என்று கேட்கின்றேன். பாமரரையும் தழுவிக் கொண்டல்லவா நாம் செல்ல வேண்டும்? பாமரர் ஒரு வழியிலும், பண்டிதர் மற்ெறாரு வழியி லும் செல்வதானால், இறுதியில் என்ன வாக முடியுமோ? இதற்கொரு சீர்திருத் தம் வேண்டாவோ?

தமிழ்மொழியிலே தற்காலத்திற்கு இன்றியமையாத பல கலைகள் இன்னும ஏற்படவில்லை. பிறபாஷைகளிலிருந்து நாம் அவற்றை மொழிபெயர்த்துக் கொள்ள வேண்டும். அங்ஙனம் மொழி பெயர்க்கத் தமிழிற் போதிய அளவு சொற்கள் உள்ளனவா? இல்லையே! ஆக் கச் சொற்களைக் கண்டறிய அமைப்பு கள் ஏற்பட்டிருக் கின்றனவா? இல்லை யேல் விரைவில் ஏற்படுமா? அவ்வித அமைப்புக்கள் பாமர உலகையும் தழு விக் கொள்ளுமோ? இன்னோன்ன விடயங்களைத தமிழபிமானிகள் ஊன்றி நோக்குவார்களாக; ஆவன செய்ய அவர்கள் முற்படுவார்களாக. அவர் களுடைய முழுப்பலமும் தமிழ் வளர்ச் சிக்கென்றே முகிழ்ப்ப தாக!

பலகலைகளைத் தமிழ்ப் படுத்த வேண்டுமாயின், தமிழ்நடை எளியதா கக் கற்றூர்க்கேயன்றி மற்ேறார்க்கும் விளங்கக் கூடியவாறு இருத்தல் வேண் டும். அந்நடை தனித்தமிழேயாயினும் சரி; மணிப்பிரவாளம் ஆயினும் சரி; நாட்டு வளர்ச்சிக்கு மொழி வளர்சசி யின்றியமையாததாம்; மொழிவளர்ச் சிக்குப் பலப்பல புதிய கலைகள் எளிய நடையில் முகிழ்ப்பது இன்றியமையாத தொன்றும். இததகைய மொழிவளர்ச் சியையே நமது தமிழ் நாடு இது காலை விழைகின்றது. அதற்கு ஆக்கந தேடு வோர் நாட்டின் முன்னேற்றததிற்கு ஆககம தேடியவர்க ளாவார்கள்.

'தனித் தமிழ்நடை' யொன்றையே கண்ணுகக் கொள்வேமெனில், தமிழ் வளர்சசி யுறுவ தெங்கே? ஜப்பானியர் மேனுட்டுக் கலைகளைத் தம்மொழியில ஆககிக் கொண்டனர். அவர்கள் தம் மொழியிலில்லாத புதிய சொற்களைப் பிறமொழிகளில் உள்ளவாறு அப் படியே எடுத்தாண்டு கொண்டனர். நாமோ தனித் தமிழ்நடை நாட்டமாக இருக்கின்ேறாமே ஒழிய தமிழ் மொழி வளத்தை எளியாரும உணருமவகை யில் ஒரு முயற்சியும் செய்து வர வில்லை.

நம் இளைஞரிற் பலருக்குத் தனித் தமிழ்நடைப் பித்தேறி யிருக்கிறது. அவர்கள், பொதுவாகப் பிறமொழிச் சொற்களையும், சிறப்பாக வட சொற் களையும் தமிழ் நூல்களிடத்தே கண்டு காழ்ப்புக் கொள்கின்றனர். "சின்னஞ் சிறு வயதிலே இவர்களுக்கு இந்தப் பித்து ஊசியின் வழியாகக் குருதி நாளங்களிற் செலுத்தப் படுகின்றதே! அந்தோ! தமிழ்மொழி ஆக்கம் பெறுவ தெப்படி?" என்று கவல்வோர் பல ராவர்.

இக்கட்டுரையை எழுது வோனுக் குத் தனித் தமிழினிடத்து ஒருவித வெறுப்புமில்லை. தனித் தமிழ் நடை யினாலே சமயப் பற்றையும் புறநாட்டுக் கலை வளத்தையும் தமிழர்க்குப் புகட் டல் தற்கால நிலையில் இயலுமோ என் பதிற்றான் கவலை.

இதுகாலை கல்வியபிலும் மாணவர்க் குப் பத்தாவது வகுப்பு வரை எல்லாக் கலைகளையும் தமிழ்மொழி வாயிலாகவே புகட்டலாமென்று விதி பிறந்திருக்

கின்றது. இவ்விதி தோன்றிப் பல நாளாகியும் பல பள்ளிகள் இச்சநதர்ப் பத்தை மேற்கொள்ள வில்லை. அதற்குக் காரணம் தமிழிலே இத்தகைய கலைகள் மொழி பெயர்க்கப் படாமையே. "தனித் தமிழ்நடை" யன்பர்கள் இத் தொழிலிற் புகுநது பாட புத்தகங்களை எழுத முன்வரலாமே! அல்லது தமிழிலே இதுகாறு மில்லாத மேனாட்டுக் கலை சமபந்தமான சொறகளுக்குத தமிழிலே ஆக்கச் சொற்களைக் கண்டறிந்து அவற்றை ஒரு குறிப்பிட்ட பத்திரிகை வாயிலாக வெளியிடுதலன்றித் தனிப் புத்தகங்களாகவும் வெளியிடுவார்களே யானால், பலர், பிறகு பாடபுததகங்களை மொழிபெயர்த்தெழுதத் தொடங்கிவிடுவார்கள். அதனால் நாட்டுக்குப் பேருபகாரமாமன்றோ?

அறிஞர்கள் இக்கட்டுரையின் பொருளைக் கூர்ந்து நோக்குவார்களாக. நேற்றுத் தோன்றிய மொழிகள் எல்லாம் நாகரிக உலகிலே முன்னணியிலே நிற்ப, நம் பழந்தமிழ்—பல குழவிகளை யீன்ற பசுந்தமிழ்—பின் நிற்பதா? 'தனித் தமிழ்நடை'யையே கொள்வதா, அன்றி வேறு மொழியின் சொறகளையும் திசைச் சொற்களாக ஆளுதல் செய்வதா என்பதைப் பற்றி ஆயவேண்டிய காலம் நெருங்கிய பின்பும் நாம் உறங்குவது தகாது. எதுசெய்ய வேண்டுமோ அதற்கேற்ற ஆக்கவேலையை ஆராய்ந்து தொடங்குவோமாக. தனித் தமிழபிமானிகள் இவ் விஷயமாகத் தங்கள் அபிப்பிராயத்தை வெளியிடுவார்களென்றெண்ணி இறைவனை வாழ்த்தி இக்கட்டுரையை முடிக்கின்றேன்.

# காதல் ஒரு நோய்

[திரு. நாகை - D. சிங்காரவேலன்]

காதலைக் குறித்துப் பலர் பல்வேறு வண்ணம் விளம்பிப் போந்தனர். காதலையும் காமத்தையும் வேறுபடுத்துக் கூறுபவர் ஒரு சாரார்; காதலுங் காமமுமொன்றே யென்றெண்ணுவோர் ஒரு பகுதியார். ஆனல் இவ்விருவரும் வைத்தியநூலில் வல்லுனர் - உடற்கூற்றை முற்றுமுணரக் கூடியவர்கள் அதைப்பற்றி யாது கூறுகின்றனரென்பதைச் சற்றுங் கவனிப்பதில்லை. ஆதலின் சில மேனாட்டு நல்லறிஞர் இதைப் பற்றிக் கூறுவதை இவண் எழுத முன் வந்தனம்.

காதல் ஒரு நோய் - மாந்தரை மடயராக்கும் ஒரு பிணி என்றுரைத்தலும் அநேகர் திடுக்கிடுவரென்பதில் எத்துணை ஐயமுமில்லை. இருப்பினும் மேல் நாட்டுப் பண்டிதர்களில் சிலர் காதலை வியாதிகளிலேயே வைத் தெண்ணுகின்றனர்.

இந்நோயால் ஒருவரும் மடிவதில்லையெனினும், பெருமபான்மையோர் மூன்றுமாதத்தி லிருந்து ஒரு வருடத்திற்குள் குணமடைகின்றனரெனினும், அந்நோய் கவனிக்கப்படாமல் விடப்படின், உண்மையில் மாநதரை மடயர்களாக்குவதன்றி உடலுக்கும் ஊறு செய்கின்றதென்கின்றனர்.

முற்காலத்து உரோமர்கள், கிரேக்கர்கள் முதலானோர் மணத்தைக் காதலென்னும் பீடிகையுடன் ஆரம்பிக்கவில்லை. இக்காலத்தோர் காதலென்றழைப்பதை, அவர்கள் மன மயக்கமென்றும், கண்டிப்பாய்ச் சட்டதிட்டங்களா லடக்கவேண்டிய அநாவஸ்யமான-அசௌகரியக்களஞ்சியமான ஒரு மடமையென்றே எண்ணிவந்தார்கள். மத்திய காலம்வரை மணமென்பது இரு காரணங்களுக்காகவே செய்யப்பட்டு வந்தது. சொத்துரிமையைக் காத்தல் ஒன்று; யுத்த வீரர்களை உற்பத்தி செய்வது மற்றொன்று. இன்றும் மாறுத

அப்பழக்கம் கடைப்பற்றல் அரசகுடும்பங்களிலிருந்து வருகின்றது. அரச குடும்பங்களில் காதலென்பது கவனிக்கப்படுவதில்லை. சிம்ஹாஸனமும் பாம்பரையுமே முதன்மை ஸ்தானம் பெறுகின்றன.

பண்டைய நாட்களில் திருமணமெனில், ஆண்பெண் இருகுடும்பப் பெரியாரும் முன்கூட்டி நிச்சயிப்பர்; அதன்மேல் இல்லறத்தை மேற்கொள்ளப் போகும் இருசிறுர்களையும் சந்திக்க ஏற்பாடு செய்வர். இருவரில் யாரேனும் அளவுக்கு மீறிய வெறுப்பைக் காட்டினுல் உடன்படிக்கை ரத்து செய்யப்படும். ஆனுல் அஃது அடிக்கடி நிகழும் சம்பவமன்று. ஓர் ஆடவன் தன் முதுகுரவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மணமகளை யுண்மையில் காதலித்தால் அதுவே மிகவும் விசித்ர மென்னலாம். அத்துடன் மணமகளும் மணமகனிடம் முழு விருப்புற்றுளெனில் ஓர் அரிய பெரிய கவி தன் முழு வன்மையையுங் காட்டவேண்டிய சம்பவமே! த்ராய் நகரத்தின் பார்ஸிற்கும் - ஹெலனுக்கும், அத்தோனிக்கும் - கிளியோபாட்ராவிற்கும் நிகழ்ந்ததையொத்த காதல் சம்பவங்கள் எப்பொழுதோ ஒருகால் அதிசயிக்கத் தக்கவாறு நிகழ்ந்ததுண்டு. ஆனுல் அவை பொது ஜனங்களுக்கு அச்சத்தையும் அதிர்ப்தியையும் அளித்தன. அதனுற்ருன் அக்கதைகள் மிக்க ஜாக்கிரதையாக கர்ணபரம்பரையாய் வழங்கப்பெற்று வந்தன என்னலாம். காதல் மணத்திலுள்ள அபாயத்தைக் குறிக்கவே அக்கதைகளை அதிஜாக்கிரதையாய் அவர்கள் போற்றியிருத்தல்வேண்டும். இநநவீன காதல் சம்பவங்களில் பெரும்பான்மை, துன்பியலாகவேமுடிந்தன.ஏனெனில்,அவை தகாவொழுக்கங்களைப் பற்றியே யிருந்தன. ஆயின், தற்காலத்துச் சரித்திரக்காரர்கள் கிரீஸ் தேசத்திற்கும், த்ராய் தேசத்திற்கும் வியாபாரப் போட்டியில் லாவிடான் பாரிஸையாவது ஹெலனை யாவது ஒருவரும் பொருட்படுத்தியிராரென்றும், உண்மையில் தன் வியாபாரப் போட்டியான த்ராயை அழிக்கவே பாரீஸ் ஹெலன் சம்பவத்தை, கிரீஸ் உபயோகிததெதன்றும் நம்புகிருர்கள். கவிகள் தங்களின் இயற்கையின்படி வீரர்களின்வன்மையைமிகைப்படுத்திப் பாடியதுபோல், வனிதையரின் வனப்பை அசாதயமாய்ப் புளுகி வந்தனர். ஆனுல் மத்யகாலத்திற்ருன் அன்னுரின் கூற்றை உண்மையென நம்பி மாந்தர் மனப்பால் குடிக்க வாரம்பித்தனர்.

நாடோடிகளான இசைவல்லோர் கன்னியரின் காமவில்லாம் புருவத்தையும், ஆடவர்களின் ஆற்றலையும்திடகாத்திரத்தையும் கொட்டுக் கூடையாய்ப் புளுகிக் கொட்ட சீமான்களும் சீமாட்டிகளும் அதை உண்மையென நம்பிப் பகற்கனு காணவாரம்பித்தனர். ஆனுல் எளிய மக்கள் தங்களுள் எவ்வித வித்தியாசத்தையும் காணவில்லை. மாரியப்பனுக்கும் மாரியாயிக்கும் தங்களுள் எவ்வித நூதனமுமிருப்பதாகத் தெரியவில்லை. அதனுல் கவிகள் பாடும் இம்மேற் குடிமக்கள் வேறு மண்ணுலாககப் பட்டவர்கள் போலுமென் றெண்ணத் தலைப்பட்டனர். நவீன கர்த்தாக்களும், நாடகக்காரர்களும், தற்காலத்து சினிமாக்காரர்களும் அத்தோற்றம் நழுவி மறையாதவாறு பாதுகாதது வருகிருர்கள். ஆகவே, மணமென்னும் ஒருவினை யாரம்பித்தகாலை காதலென்பது கவனிக்கப் பட்டதன்றென்னு முண்மை நாளடைவில் மாநதரை விட்டகன்றது.

ஆதாமிற்கும் ஈவாளிற்கும் மணமேற்றிவைத்தகாலை, கடவுள் முற்கூட்டியிருவரையும் சந்திக்க வைத்ததாகத் தெரியவில்லை. விவில்லியநூற்காலத்துத் தந்தை யொருவன் போலவே கடவுள் ஆதாமையும்ஈவாளையும் ஒன்றுசேர்த்து வைத்தனர். அங்கு நூதனமும் மனம் நெகிழும்கதையும் ஒன்றுமில்லை. நூதனமேதேனு மிருப்பின் இன்னெரு குடும்பத்தினின்று ஈவாளை மணம் பேசாமல் ஆதாமின் விலாவெலும்பினின்று ஈவாளை சிருஷ்டித்ததொன்றே யாகும்.

பிளேக்கென்னும் கொடிய கொள்ளை நோய்க்கும் காதலுக்கும் அநேக வழி

களில் ஒற்றுமை கூறலாம். மாந்தர் காதலென்னும் நோய்க்கு வசந்த காலத்திலேயே அதிக லயப்படுகின்றார். ஆனால் கேடான வருடங்களு முண்டு. 1830-ம் ஆண்டு பல வயதினர்களான ஆயிரக்கணக்கானவர் காதல் நோயால் பீடிக்கப்பட்டு உருகி மடிந்தனர். சின்னமமைபோன்ற தென்னலாம் காதலை. இதற்கும் பலதிறப்பட்ட காலவரையுண்டு.

இந்நோயின் குணங்குறிக ளனேகம். நோய் கண்டதும் மனதின் தீவிர திருஷ்டி குறைகின்றது. மனிதனால் காதலிக்கப்பட்ட மடந்தையர் அநேகர் குரூபிகளாயிருந் திருக்கின்றனர். இந் நோயால் வருந்துபவன் தன்காதலியை விட்டுப் பிரிந்திருக்க முடியாது. பிரிந்த காலை, அவன் அளவற்ற மனச்சோர் வடைகின்றான்; பின் ஒன்று கூடிலோ முன்னிலும் கேடான நிலைமையே எய்துகின்றான்! இதை அபினிபாஷாண முண்பதற்கு மிகவும் பொருத்தமாய் ஒப்பிடலாம்.

துன்பியலான - சந்தோடமற்ற காதலில் அறிவு சிதறுகின்றது; நரம்புகளின் வன்மை குன்றுகிறது; கண்களின் ஒளி மங்குகின்றது; சர்மத்தின் நிறமும் மேன்மையுங் குறைகின்றன; தேகமே ஒடுங்கிச் சீர்குலைகின்றது; தற்கொலை எண்ணங்க ளுதிக்கின்றன. இளஞ் சிறுமிகள் செடிகளினின்றும் பிரிக்கப்பட்ட அழகிய புட்பங்கள் போல் வாடிவதங்குகிறார்கள். மகாகவி ஷேக்ஸ்பியர் எழுதிய நாடகத்தில் ஒபீலியா - ஓர் உண்மைக் காதலி தண்ணீரில் வீழ்ந்து தற்கொலை புரிந்துகொள்ளு முன் பாடுகிறாள்!

இந்நோயின் குணங்கள் ஆண்பாலாரிடம் வெவ்வேறுவிதந் தோன்றுகின்றன. 'எத்தெயின்ரே' என்னும் பிரஞ்சு மேதாவி, "காதலால் கவரப்பட்டவன் மடையனாகத்தோன்றுகின்றான். ஆனால் ஜன்னி முதலிய நிலைமைகளில் பெண்மணிகள் காதலைப்பற்றியே பிதற்ற, ஆடவர் ஒருபோதும் அதைப்பற்றி உளறுவதில்லை" என்கிறார்.

காதலென்னும் இப்பாழ்நோய் மனிதனின் ஸ்வதந்திர உணர்வை யழிப்பதன்றி, அவனை வெறுநகோற்றங்கட்கும் ஆளாக்குகின்றது. இயற்கை, பிரஜோற்பத்தியை முன்னிட்டு உடலில் கண்ணையும மனதையும் கவரும் ஒருவித பொருளை - காந்த சக்தியை - தேகத்திலுண்டாக்கி யிருக்கின்றது. ஆனால் மனம் முற்றும் கவரப்பட்டு நீடித்த நாளிருந்தால் கொடிய வியாதியே. காதலிக்கப் பட்டபொருளுக்கும் அதைச் சூழ்ந்துள்ளவைகட்கும் இயற்கையிலில்லாப் புது அற்புதங்களை மனம் தோற்றுவிக்கின்றது. உலகை உள்ளதை உள்ளபடி காதலர்கள் உணர்வதில்லை. அதனால் அவர்கள் நித்ய கடனை இயற்ற வியலா நிலை எய்துகிறார்கள். நிபுணர் வில்லி என்பார், காதல்நோய் வாய்ப்பட்ட மனிதனின் மூளை புதிய இரசங்களை உற்பத்தி செய்வதையும், அவை தேகமுற்றும பரவி நரம்பு தளர்ச்சியும் மாறுபட்டமான எண்ணங்களையும் உண்டுபண்ணுவதைப் பற்றி விரிவாக எழுதியுள்ளார்.

இந்நோய் மனிதனின் கண் மூலமாகவே அவனைப்பற்றுகின்றது. மகன், மகளிரின் அழகை மிகவும் அதிகமாக மதிக்கத் தலைப்படுகின்றான். தேகத்தை வெளியில் காட்டுவதினும் தேகமுற்றும் ஆடையால் மறைக்கப்பட் டிருத்தலே அவன் மனதை அதிகமும் ஈர்க்கின்றது. மாதரின் தன்னடக்கம், பிலுக்கு, குலுக்கு இந்நோயை யதிகப்படுத்துகிறது. வாசனைப் பொருள்களாலும் ஆடவன் வசியமாகிறான். இவ்வுண்மை யாற்றான் வாசனைத் திரவ்ய உற்பத்தி சாலைகள் செழித்தோங்குகின்றன. எக்காரணத்தாலோ மனிதன் இவ்வொரு விடயத்தில் அதிகமும் பயந்து அதை உபயோகிப்பதற்காக மாதரிடம் சீற்ற முறுகின்றான்.

மகளிர் கண்வழியே இந்நோய் யடைவதில்லை யென்று தெரிகிறது. பெரிய காமிகளாய் வர்ணிக்கப்பட்டவர்கள் - தேச சரித்திரத்திலேயே காமிகளென சர்வதேசப் பட்டயம்பெற்ற டன்ஜுவா

னைப் போன்றவர்கள் அழகிலிகளே. பிரஞ்சு சரித்திரததிலேயே முதற்றரக் காமியென்று குறிப்பிடப்படும் ரிச்சல்யு அழகனு மல்ல - ஆஜானுபாகு மல்ல. மதயகாலமவரை நாசியே கவற்சிககுக் காரணமா யிருந்திருக்கிறது. பண்டிதா கள் டஞ்ஜுவானிடம் இயற்கையில் ஒரு வாசனை இருந்ததென்றும, அது மகளிர் மனதை போதை வஸ்துக்களைப்போல் மயங்கச் செய்ததென்றுங் கூறுகின்ற னர். ஒரு பெரிய காமி, பெண்களை மயக கத் தன்னுடலில் தேய்தத கைத்துண் டைப்பெண்களின்மேல் வைக்கும் வழக் கத்தை ஓர் அறிஞர் வெளியிட்டுள்ளார்.

ஆனல், அவை வாஸனுதிரவ்யஉற்பத் தியிலிருந்து நீங்கிவிட்டன. சில திறப் பட்ட குரல்களும் மஙகையர் மனதை மருட்டுகின்றன. குரலின் வன்மை யால் வசியமான மாதர் அநேகர்.

இந்நோய்க்கு இதுவரை மருந்தில்லை; ஆனல் உண்டாகலாம். பொறுமை-காதல் சம்பந்தப்பட்ட பொறுமைககு-டாக்டர் மாரீஸ், "நடுநிசி பொறுமை மாத்திரை கள்" என்று ஒன்று கண்டுபிடித்திருக் கின்றனர். அவர் பொறுமைக்காரர்களை நன்குசோதித்து இந்நோய் இரவு பதி ஞெரு மணிக்கும் ப மிடையே யுண்டாகிறதென்று கண்டு பிடித்திருக்கின்றனர். அது காலியா யுள்ள வயிற்றுலு முண்டாகிறதாம்.

கடைசியில் ஆராய்ந்துழி, இந்நோய் மாந்தரின் மடமையாலும கவனிப் பின் மையாலுமே யுண்டாகிற தென்று டாக் டர் வாய்விஞேல் அபிப்பிராயப் படுகின் ருர். கண்டதும காதலென்பது நவீனங் களிற்ருனுண்டு. எப்படி யெனினும் வாழ்க்கையில அதி அபூர்வமான சம்ப வமே. இநநோய்க்கு ஆளாவதெனில் பலமுறை தாக்கப்பட வேண்டும். ஒரு வரையொருவர் அதிகம் காதலிப்பவர் மணம்புரியின், அஃது துன்பியலாகவே முடியும். காதல நோயால் ஒருவரை யொருவர் பல விதததானும மிகப்பட யெண்ணியிருக்கையில அநநோய் சற் றுக்குறைய வாழ்கையில் யாவும் வெட் டா வெளிச்ச மாகையில் பெருதத ஏமா ற்றமே யடைவரென்பது திண்ணம்.

ஆனல் நவநாகரிக நேயர்களே! எம் மேல் ஆத்திரத்துடன் குறுநதடி கொண்டு புறப்பட வேண்டாம். தங்கள் கோபமும் குறுந்தடிகளும் மேல்நாட்டு நல்லறிஞர்களை நோக்கட்டும்.

---

# குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழிற் காணப்படும் சரித்திரச் செய்திகள்

[திரு. சோமசுந்தர தேசிகர்]

கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டுமுதல் ஆண்ட பிறகாலச் சோழர்களிலே புலவர் பெருமக்களாற் பாடல் பெற்றோர், நாமறிந்தவரையில், ஒரு சிலரே யாவர். கங்கை கொண்டானான இராஜேந்திரசோழ தேவனின் இரண்டாம் மகனான இராஜாதிராஜன் (1032-1037) 'கம்பிலிச் சயத்தம்ப நட்ட'[1]போது 'கன்னா டகர்விடு கடகரி புரளத் தன்னுடை யிற்றமிழ்ப் பரணிகொண்டு'[2] புகழ்பெற்றான். இவனது கடைசித் தம்பியாகிய வீரராஜேந்திரன் (1063-1070)சாளுக்கியர்களைத் தோற்கடித்து, கரடிக்கல்லில் சயத்தம்பம் நட்டு, 'காப்பரணக் - கூடலார் சங்கமத்துக் குஞ்சரம் பல்கோடி - பாடலம் பொறப் பரணிக் கட்டான்'[3] இதனைக் கூடல் சங்கமத்துப் பரணி யென்பர். கங்கை கொண்ட சோழன் மகன் வயிற்றுப் பேரனும், வேங்கிநாடாண்ட கீழைச் சாளுக்கிய வமிசத்து ராஜராஜ நரேந்திரனது மகனுமான இராஜேந்திரன் என்னும் முதற்குலோத்துங்கன் (1073-1112) ஏழ்கலிங்கம் வென்று சயங் கொண்டாரால் கலிங்கத்துப் பரணிப் பாட்டுப் பெற்றான்.[4] இவனது மகனான விக்கிரம சோழன் கவிச் சக்கரவர்த்தி கூத்தனால் பரணியும் உலாமாலையும் பெற்றான். அவன் மகனான இரண்டாம் குலோத்துங்கன் (1133-1146) உலாவோடு பிள்ளைத்தமிழ்மாலை பெற்றான். இவனது மகனான இரண்டாம் இராஜராஜன் (1146-1162) உலாப் பெற்றதோடு, கூத்தன் கவிச் சக்கரவர்த்தி, தான் பாடிய ஈட்டியெழுபது, தக்கயாகப் பரணி முதலியவற்றிலும் பெருமையோடு இவனைக் கூறினான். இவனுக்குப் பின் வந்த மூன்றாங் குலோத்துங்கன் கோவை பெற்றான். இவனது இளவலான சங்கரசோழன் உலாப்பெற்றான். மேலே காட்டிய நூல்களுள்ளே இதுபொழுது அச்சுவாகன மேறியவை குலோத்துங்க சோழன்மேல் பாடிய கலிங்கத்துப் பரணியும், மூவருலாவும், குலோத்துங்கன் கோவையுமேயாம். மூவருலா வென்பது ஒட்டக்கூத்தன், சோழ அரசரான விக்கிரமசோழன், குலோத்துங்கசோழன், ராஜராஜ சோழன் இவர்கள்மேற் பாடிய உலாமாலை நூல்களாம். மற்றவற்றுள் கொப்பத்துப்பரணியும் கூடல்சங்கமத்துப்பரணியும் பெயர்மாத்திரையானே கேட்கப்படுவதன்றி, நூல்கள் இறந்தனவாயின. விக்கிரமசோழன் மேற் பாடிய பரணித் தாழிசைகள் இரண்டொன்றே காணப்படுகின்றன. குலோத்துங்க சோழன் பிள்ளைத்தமிழ் என்றநூல இதுபொழுது அச்சுவாகன மேறியுள்ளது. இதனுள் பல கதைகளும் சரித்திரச் செய்திகளும் காணப் படுகின்றன.

இவற்றை விவரிக்குமுன், நாடு இருந்த நிலைமையைச் சுருக்கமாகக் குறிப்பது இன்றியமையாததாகும். பதினொன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இராஜராஜப் பெரியோன், சேர சோழ பாண்டிநாடான தமிழ்நாடு முழுமையையும் - ஈழநாடுள்பட தன்னடிப் படுத்தியதோடு, வடுகவழி மேற்கிலுள்ள வாணகப்பாடி, கங்கவாடி முத

[1] கலிங்கத்துப் பரணி. இராச பாரம்பரியம் 26.

[2] இலங்கைக்கரசையும் அலங்கல் வல்லவனையும், கன்ன குச்சி காவலனையும், பொன்னணி முடித்தலை தடிந்து தன கொடிப்படையொடு கன்னா டகர்விடு கடகரி புரளத் தன்னுடையிற் றமிழ்ப் பரணிகொண்டு. 41 of' 88. s. i, i. iv, 14.

[3] சங்கர சோழனுலா. 22.

[4] கவிகுமுத பண்டிதர் என்பார் குலோத்துங்கன் சரிதை என்று ஒரு நூல் எழுதியிருப்பதாகத் தெரிகிறது.

லாய நாடுகளையும் தன்னரசுக்குட் படுத்தி ஆண்டு வந்தனன்; அதாவது இப்பொழுது நெல்லூர் ஜில்லாவிலோ டும் பாலாற்றின் தென்கரையி லிருந்து நேரே மேல்கடல் வரையிற் கோடு கிழித்தால் ஏற்படும் கோட்டுக்குக் கீழுள்ள நிலப் பரப்பை ஆண்டுவந் தான். இவன்பின் வந்த கங்கைகொண்ட சோழனும், அவன் மகனும் இராஜ ராஜன் அடிப்படுத்திய நாடுகளை ஆண்ட தோடு நில்லாமல், மேலுமுள்ள மண் ணுசையால் கோதாவரி கிருஷ்ணு ஜில் லாக்களாகிய வேங்கி நாட்டையும், இரட்ட அரசர்களிடமிருந்த இராஷ்டிர கூடத்தையும் பெரும் போரிட்டுப் பிடித்துக்கொண்டனர். ஆனால், இராஷ் டிரகூடம இவர்கள் வசமாகவில்லை. இவர் களுக்குப்பின் வந்த கீழைச் சளுக்கி யரான முதற் குலோத்துங்கனும்[1] இந் நாடுகளைப்பற்றி ஏக சக்ராதிபதியாக ஆண்டதோடு, 'திரிபுவன சக்கரவர்த்தி கள்' என்று பட்டமும் சூடிக்கொண் டான். இவனுக்குப்பின் வந்தவர்களும் அந்நாடுகளை விடாதுபற்றி ஆண்டுவந்த னர். ஆதலினுலே முதற் குலோத் துங்கனுக்குப் பின் வந்த விக்கிரம சோழன் இந்நாடுகளைத் தவிர்த்து இதற்குமே லுள்ளதான நாடுகளைக் கவரவேண்டி யிருந்தது. அஃதன்றி, வேங்கிநாடு இவர்க ளுடையதாகவே, அதற்கப்பாலுள்ள கலிங்க நாட்டை வென்று, அந்நாட்டரசனையும் தனக்குக் கீழ்ப்பட்டவனுக்கினுன். ஆகவே, இவன் மகனுன இரண்டாம் குலோத்துங் கன், தன் முன்னோர் கைப்பற்றிய நாடு களைக் கவலையின்றி ஆண்டு வந்தான். அதனுல் இவன் தண்டெடுத்துச் செல்ல வேண்டிய அவசியமின்றி வித் தியா விநோதனுகக் காலங்கழிக்க இட முண்டாயிற்று.

இந்தக் குலோத்துங்க சோழன், கி. பி. 1118-முதல் 1133-வரை ஆண்ட திரிபுவன சக்கரவர்த்திகள் பரகேசரி வர்மன் விக்கிரம சோழனது மகனென்று முன்னர்க் கூறினும். (1, 44, 65) இவனது தாய் அக்காலத் திலிருந்த பாண்டியனுடைய இரண் டாவது மகள் என்று அறிகிறோம். (2,55). 'எழில்விகாதத்தவன் இளையகோற் றெடிசேய்' என்பா கவிசசக்கரவர்த்தி (பிள். 2). இவனுக்கு இவனது பெற் ரோர் இட்ட பிள்ளைப் பெயர் எதிரி லாப் பெருமாள் (2,8,23-26,89,94). இவன் அரசு கட்டிலேறிய காலத்துக் கொண்ட முடிசூட்டுப் பெயர் குலோத் துங்கன் என்பதாகும். (1, 97-103) இவனது தந்தை கி. பி. 1133-ம் ஆண்டு மேமீ 10-ம் தேதிக்கும் சூலைமீ 14-ம் தேதிக்கும் இடையில் அம்பலக் கூத் தனது அழகிய திருவடியடைந்தா னென்பர் சுவெல் ஆசிரியர். இவனது நல்லாசிரியன் கவிச்சக்கரவர்த்தி கூத்த னுவான் என்பது,

> 'ஆடுங் கடைமணி நாவசை
> யாமலகில மெல்லாம்
> நீடுங் குடையிற் றரித்த பிரா
> னென்றும் நித்தநவம்
> பாடுங் கவிப்பெரு மானொட்டக் கூத்தன்
> பதாம் புயத்தைச்
> சூடுங் குலோத்துங்க சோழனென்றே
> யென்னைச் சொல்லுவரே'[1]

என்ற செய்யுளால் பெறுகின்றோமாயி னும், இப்பிள்ளைத் தமிழ் நூலினும் அதற்கான குறிப்புக்கள் இல்லாமற் போகவில்லை. கூத்தரே, 'நாவலனே கிடையா நவமணி மண்டபநின் - பாவலனே கவரப்பண்டு பணித் தவனே' என்பர் (3). இவன் கல்வி கேள்விகளிலே வல்லவனுய் வித்தியா விநோதனுக இருந்ததோடு (78), பெரும் புலவரையும், அறியாது புலவர் என்று வந்த பலரையும் ஆதரித்தான். 'பாயி ரம் புனைதமிட் டென்றிசைப் புலவரும் வடகலைப் புலமை யோரும் பண்படா

---

[1] அக்காலத்தில் கீழைச்சளுக்கியர் வேங்கி நாட்டை யாண்டுவந்தனர். சோழர்களோடு பெண்கொடுக்கல் வாங்கலால் உறவுகொண் டமையால் சளுக்கிய இராஜேந்திரன சோழ சக்கரவர்த்தியானுன். அதற்குப் பின்னர் வேங்கிநாடு சோழ ராஜ்யமாகவே ஆகிவிட் டது.

[1] தமிழ் நாவலர் சரிதை. பக். 46, செய் யுள் 128.

வுடைச் செவிக் கண்படாவுறுகளத தர சர்தம் மடிகடோறும் போயிருந் தொழி வரும் படரொழிந் துவள்வருங் கவிகை யான்' எனவும், "திருடுபொருண்மூகர், பழைய மொழியாளர், வெளியர், இள நீரா இளமையே - திகழுமொழியாத ரிவர்களொரு நால்வர் சிறிது மறியாது சொல்லுவன"(62) எனவும் வரும் அடிகள் சான்றுபகரும். வித்தியாவிநோதனை யிருந்தமே தாடு பெருந் தியாகமாவிநோத னுவா னென்பது, 'அன்று கவிக்கு வியந்து நயந்து தருமபரி சிற்கொருபே ராழியில் வந்து தாரதல நின்று புகாரி லனைத்துலகுஞ் - சென்று கவிகுகு மகத் தது தூண்வயி ரதகினு முத்திஞுமெய் செய்ததோர் பொறறிரு மண்டப நல்கிய செயகுல நாயகம்' (41) எனற அடிகளால் இனிது விளங்கும். இவன இவ்வாறு கல்விச்செல்வமே கொண்டு வாழ்ந்து வந்தனனுயினும, பெரும் போர் வீர னென்பதும் பல தேசங்களும் இவனுக்குத் திறையிட்டு வந்தன வென்பதும் இந்நூலிற் பல விடங்களிலும் காணக்கிடக்கின்றன. இப்பிள்ளைத் தமிழ் 'பூமன்னு' என்ற சீரை முதலாக உடையது போல இவனது மெய்க்கீர்த்திகளி லொன்று பூமன்னு என்று தொடங்குகின்றது. அது வருமாறு:—

பூமனனு பாவை காமுற்று முயங்க
இருநிலக கிழத்தியைத திருமணம் புணர்நது
கலையின் செல்வி தலைமை யோங்கப்
போர்மகள் காப்பச் சீர்மகள் போற்ற
மாதகப் புரவி இரவிகுலம் விளங்கப்
பாற்கடற் றெய்வம் பள்ளி நீங்கி
நாற்கடல் வட்டம் நாடொறுந தாங்கி
எண்டிசை யானை தண்டுவிடை கிற்பக்
காவற் றேவ ரேவல் கேட்பக் [துத்
கலிப்பகை யோட்டிப் புலிக்கொடி யெடுத்
தென்னவர் கேரளர் சிங்களர் தெலுங்கர்
கன்னடர் விலாடா கலிங்கர் முதலாகக்
கொற்றவர் வந்து குடிமை செய்ய
ஒற்றை வெண்குடை யுலகுதனி கவிப்ப
ஊழிபல கோடி யாழி நடாததிச்
செம்பொன் வீர ஸிம்மா சனதநுத்

திரிபுவன முழுதுடை யாளொடும் வீற்றிருந் தருளியகோ இராஜகேசரி பன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள். ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு இரண்டாவது[1].

இவன் தங்கள் குலதனமான கூத்தாடு நாயகர் கோயிலின் 'திருமன்றின் முன்றிற் சிறு தெய்வத்தொல்லைக் குறுமபு நொருக்குத் தெடுத்தும' பலவகை அரதனங்களாலும் கோயிற்பணி குயிற்றியும் 'மூலத்தான் ஆடும் திருப்பெரும் பேரம்பலமும், கோபுரமும், மாடம் பரந்தோங்கு மாளிகையும கூடிப் பொலங் கோட்டு மாமேருப் பூதரமும் போல' செய்தும், தலங்கொள் நிலையேழு கோபுரங்களும்மலையேழுமென்னவும்வகுத்தான் என்று குலோத்துங்க சோழனுலாவும், 'சிற்றம்பலமும், திருப்பேரம்பலமும், மற்றும் பலபல மண்டபமும், சுற்றிய மாளிகையும், பீடிகையும், மாடமும் கோபுரமும சூளிகையும், அத்தெருவும் தோரணமும், ஆளுடையான் கோயிற் றிருக்காமக் கோட்டமும், அக்கோயில் திருச்சுற்று மாளிகையும் தூய செம் பொன்னிற் குயிற்றி'னுனென்று இராச ராச சோழனுலாவும் கூறும். இச்செய்தியை 'அறம்பல அருளிய புறம்பயமத னில்' உள்ள ஒருகல்வெட்டு(350 of 27) சான்றுபகருவதாகக் கல்வெட்டிலாக் காக்காரர் கூறுவர். இந்தப் பிள்ளைத் தமிழில் அந்தச் செய்தி காணப்பட வில்லை. ஆயினும் இவனுக்கு அபயனென்பதே சிறப்புப் பெயராக அமைந்த தென்று தோற்றுகிறது. இச்சிறப்புப் பெயர், பிள்ளைத் தமிழில், இருபத்தைந் திடங்களிலும், உலாவில் மூன்றிடங் களிலும் காணப்படுகிறது. அநபாய னென்ற பட்டமோ, உலாவில் ஓரிடத் திலேதான் - அதுவும் அபயனென்ப தோடு, 'ஆழிப் பெருமா னபயனன பாயன்' என்று காணப்படுகிறது. பிள்ளைத்தமிழில் காணப்படுவதாகததெரிய வில்லை. இனி, திருவாரூரிற் காணப் படும் இவனது கல்வெட்டிலும் [2]உலா

[1]513 of 1893, இவனுக்கு நானகுவித மெய்க்கீர்த்திகள் இருக்கின்றன.

[2]S.I.I ii, 153. செநதமிழ்த தொகுதி 14 பக்கம் 489.

வின் கீழ்க் காணப்படும் வெண்பாவிலும் அநபாய னென்ற பெயர் காணப்படுகின்ற தெனின், அவை பொதுப் பெயரென்றே கொள்ள வேண்டியிருக்கின்ற தென்பது, காய்தல் உவதத லகற்றி நோக்குவார்கருப் புலனுகாமற் போகாது. மேலும் திருவாரூர்க் கலவெட்டில் அநபாயனென்ற பெயர் காணப படவில்லை. கலவெட்டு முடிநதபின்னர்க் காணப்படும் ஒரு தனி வடமொழிச சுலோகம் தில்லைக் கூத்தப் பிரானிடத்து அன்புடையானென்பது குறிகக எழுந்த சுலோகமாகக் காணக்கிடக்கின்றது. [1]உலாவின்கீழ்க் காணக் கிடக்கும் அநபாயனும் அவ்வாறேயாம. அதனுண்மை காணப் பாட்டைக்கீழேகுறிக்கின்றேன் :

எனறினி மீள்வ தரிதி னிரணியனை
யன்றிரு கூறு யடர்த தருளிக்-கன்றுடனே
யாவின்பின் போன வனக னனபாயன்
மாவின்பின் போன மனம்.

இச்செய்யுள் தனியே காணப்படுமாயின், இரண்டாங குலோத்துங்கனைக் குறிக்குமா என்பது கண்டு ஆராயற் பாலது.

கூர்வேல்வல் கோதண்ட
ராமன் **குலோத்துங்கன்**
போரா பணித்தமைக்கும்
பிச்சையம்மன - சேரமான்
வங்கததே துங்க வடகலிங்கங்
கொண்டமைக்குஞ்
சங்கத் தருங்கடலே
சான்று[2].

என்று ஒரு செய்யுள் காணப்படுமாயின், இங்குக் காணப்படும் குலோத்துங்கப் பெயரும் இரண்டாங் குலோத்துங்கனைக் குறிக்கமாட்டாது என்பது தெளிவு. ஆகவே, இது கொண்டு சேக்கிழாரடிகளைப் பெரிய புராணம் பாடச் சொன்னது இவன் தான் என்று கூறுவது தவறேயாகும். மேலும் இராஜேந்திர சோழ தேவன் ஆளுடைய நம்பியான சுநதர மூர்த்தி நாயனர் பாடிய திருத்தொண்டத் தொகையைக் கடவுள் திருமுன் விண்ணப்பஞ்செய்ய நிவந்தங்கள் ஏற்பாடு செய்வானுயின் (S.I.I.iv, 28) அவன் காலததுக்கு முன்னரே பெரிய புராணம் பாடப பட்டிருத்தல் வேண்டுமென்பது நன்கு பெறப்படுகின்றது.

இனி, குலோத்துங்க சோழன் பிள்ளைததமிழில் சரிததிர சமபந்தமானபல செய்திகள் காணப்படுகின்றன. அவற்றை ஈண்டுக்குறிககின்றேன். களவியல் அறுபது சூத்திரமும் சொக்கப்பெருமானே இயற்றியதென்பது, அக்காலத்தே கொணட கொள்கை யென்று 2-வது செய்யுளால் அறியலாகும. பொய்கையார் களவழி பாடிசசேரமான் மாநதரஞ் சேரல் இரும்பொறையை வீடுகொண்ட செய்தி, 102-ல் காணப்படுகிறது. பிரமனது படைப்புத் தொழில உடையவும, இயமனது தொழில் நின்றுபோகவும் மக்கள் நீண்டநாள் வாழவும், முதுமக்கட் சாடியைச் சுரகுரு என்ற சோழ அரசன் வகுததான் என்ற செய்தி, 39-ல் காணப்படுகிறது.[1] நிலவளததிற்குக் காரணமான நீர்வள மிகுந்துவரும் காவிரியாறு கரைகட்ட வாராத முகரியின் ஒரு கண்ணைப் படத்திலெழுதி அழிக்க, அவன் அழிந்த செய்தி, கலிங்கததுப் பரணியிற் கேட்கப்படுதல் போல[2] இதனிலும் (53) காணப்படுகிறது. இராஜராஜப் பெரியோன் மகனை இராஜேந்திர சோழதேவன், முடிகொண்ட சோழன், பண்டித சோழன் என்ற பட்டங்களைத் தரித்தான் என்பது சரித்திரச் செய்தி. இதனை 12,42 வலியுறுத்தும். இவன் சாவகம், கடாரம் முதலியன வென்றது[3] 92-ல் படிக்கிறோம். சோழருககும், மேலைச் சளுக்கியருக்கும் ஒயாப் போரே மணியமாக

[1]S. I. I. ii,P153. செநதமிழ் xivP489
[2]S. I. I. iv 291

[1]மணிமேகலை, vi, 67

[2]தொழுது மன்னரே கரைசெய் பொன்னியிற் றொடர வநதிடா முகரி யைப்படத்-தெழுதுகென்றுகண் டிவைமி கைக்கவென நிங்கழிக்கவே யங்கழிந்ததும் - கலிங்கததுப் பரணி : 184.

[3]இராஜேந்திர சோழதேவன் மெய்க்கீர்ததி காணக.

விருந்தது உலகறிந்ததொரு செய்தியாம். இதனை இப்பிள்ளைத்தமிழ்ச் செய்யுட்கள் பல எடுத்துரைக்கின்றன. செயங்கொண்ட சோழனென்ற பட்டம் இராஜாதிராஜனுக்கு உரியது என்பது கல்வெட்டாராய்ச்சியாளர் துணிபு. இந் நூலின் 13-வது செய்யுள் செயங்கொண்டசோழன் வங்காளரது யானைப்படை முறியவும், மராட்டரான சாளுக்கி முறியவும், வீமாபுரத்திலே அமபு விடவுஞ் செய்ததாகக் கூறுகிறது. 68-வது செய்யுளிலே பல சகோதரர்களுள் செயங்கொண்ட சோழன் பெயர் கேட்கப்படுகிறது.

‘ ஆற்றிய முரசால் வடபுல வேந்தா
அஞ்சினர் நாணுமென றறைநது
சாற்றிய வளவன செயங்கொண்ட சோழன்’

என்று கூறப்படுறகிறது. இவைகள் இராஜேநதிர சோழ தேவன் மகனை இராஜாதி ராஜனையே குறிக்கு மென்பது விளங்குவதோடு, அன்னவனுககுக் குலோத்துங்கன் என்ற பெயரும் (13) வழங்கிவந்தது என்பது புலனும்.

வீர இராஜேந்திரன் கரிகாலனென்ற பெயர்கொண் டிருந்தானென்பது, வீர சோழியத்தால் அறியப்படுஞ் செய்தி.[1] இதனை 59-வது செய்யுள் வெகு அழகாக வர்ணிக்கின்றது. அது வருமாறு:-

தகரமண நாறு தொடையல்வட நாடர்
பொருதுகுட கூட லமரிலே
தாணிதர வேறு முடையகவி ராசா
பரணிதர மீது தனிமைகூர்
சிகரவட மேரு கிரியைமதி யோடு
நளினபதி யோடு மிகலியோர்
திகிரிவர வேவு குரிசில்கரி காலன் மருக.

என்பதாம்.

வீரஇராஜேநதிரன் கூடல் சங்கமத்திலே வெனறமையும், பரணிகொண்ட செய்தியும், இச்செய்யுளிலும் 34-விலும் கூறப்படுதல் காண்க. இப்பிள்ளைத்தமிழுடை யான்பாட்டனை முதற்குலோத்துங்கன் சோழ ராச்சியத்தைக் கைப்பற்றியபோது, அக்காலத்திலே அரசனுக விருநத அதி ராஜேந்திரனது மைத்துனனும், வீரஇராஜேந்திரனது மகள் கணவனுமான மேலைச்சளுக்கி ஆறும் விக்கிரமாதிததன குலோதுங்கனோடு போரிட்டான் என்பது சரித்திரச செய்தி. இதனை 12, 13, 101 கூறுகினறன’. வடகலிங்கரோடு இவன்போர் தொடுத்துப் பரணிகொண்ட செய்தி 14-விலும், மயிராகர மெறிந்தது, 19-லும் காணபபடுகின்றன. கலிங்கத்துப் பரணியிலே இராஜேநதிர சோழ தேவன் மனைவி இவன் பிறந்தவுடனே இவனைத தூக்கிப் பார்த்து, சோழராச்சியம ஆள்வதற்கான அடையாளங்கள் இவன்மேற்காணப்படுவதாகவும்,இவனையும் ஒரு மகனுகக் கொண்டாளென்பதாகவும 223-225 தாழிசைகள்[1] கூறும. இச்செய்தி, இந்நூலில் 1, 42-ல் காணப்படுகின்றது.

முதற் குலோததுங்கன் மகனும், இந்நப் பிள்ளைத்தமிழ் கொண்ட இரண்டாங் குலோத்துங்கனுடைய தந்தையுமான விக்கிரம சோழன் மறுபடியும் கலிங்கம் வென்ற செய்தி 9, 88-லும், அதன் பொருட்டுப் பரணி பெற்ற செய்தி 65, 88-லும் கூறப்பட்டிருக்கின்றன. இவன் பரணிகொண்ட செய்தியை,

‘..........................பூதலங்கள்
ஆற்றுந் திருத்தோ ளாகங்ளகள்—வேற்றோர்

[1]வீரசோழியம் பக். 187.

[1]அலர் மழையும் பொழிந்தனவாங் கவை கண்டு கங்கைகொண்ட சோழன் தேவி - குல மகள்தன் குலமகனைக் கோகனக மலர்க்கையி லெடுத்துக கொண்டே. 223

அவனிவர்க்குப் புரந்தரனு மடையாள மவயவததி னடைவே நோக்கி
இவனெமக்கு மகனுகி இரவிகுலம் பாரிக்கத தகுவ னெனறே. 224

திங்களி னிளங்குழவி செம்மலிவ னென்றுஞ் செய்யபரி திக்குழவி யையனிவ னென்றுந்-தங்களின் மகிழ்ந்திரு குலத்தரசர் தாமுந் தனித்தனி யுவப்பதொர் தவப்பயனு மொத்தே. 225

இசையுட னெடுத்தகொடி யபயனவ னிக்கிவனை இளவரசில் வைத்த பிறகே-திசையளவு முற்றரசர் திருவினை முகப்பதொரு திருவுள மடுத்த ருளியே. 236

விரும்பரணில் வெங்களத்தீ வேட்டுக் கலிங்கப் பெரும்பரணி கொண்ட பெருமான்'

என்ற குலோத்துங்க சோழனுலா 27, 28-ம் கண்ணிகளும்,

' செருத்தந் தரித்துக் கலிங்கரோட்டத்
தென்றமிழ்த் தெய்வப் பரணி கொண்டு
வருத்தந் தவிர்த்துல காண்ட பிரான் '

என்று தக்கயாகப் பரணி 776-வது தாழிசையும், இப்பரணி பாடினார் ஒட்டக் கூத்தரான கவிச்சக்கரவர்த்திகள்; இப்பரணி பாட்டுண்டார் விக்கிரமசோழ தேவர் என்ற அதன் உரைக்குறிப்பும் இச்செய்தியை வலியுறுத்தும்.[1] இவன் தன் குலநாயகம் தாண்டவம் பயிலும் பொன்னம்பலம் பொன்மேய்ந்த செய்தி பிறவும் இந்நூல் 92-வது செய்யுளில் 'பாவக நிரம்பு திருமாலு மலரோனும் பாரப்பதி னெண்கணனும் வந்து பரவத்தஞ் சேவகம் நிரம்பு திருவீதி புலியூரிற்செய்த பெருமான் மதலை' என்று கூறுவது கொண்டு அறிகின்றோம். இது, 'பூமாலை மிடைந்து........ ...... .... மண்முழுதுங் களிப்ப, மநுநெறி வளர்த்துத் தன்கோயிற் கொற்றவாசற் புறத்து-மணிநாவொடுங்கமுரசுகள் (14) முழங்க - விஜயமும் புகழும் மேன்மேலோங்க - வாழிவாழி இமமாநிலங் காக்கத்- திருமேனிபொற்றோ(15)ட்டெழுது பத்தாண்டு-வருதிறை முன்னே மன்னவர் சுமந்து-திறை நிறைத்துச் சொரிந்த செம் (16) பொற்குவையால் தன்குலநாயகம் தாண்டவம் பயிலுஞ்-செம்பொன்னம்பலஞ் சூழ்திருமா(17) ளிகையும் கோபுரவாசல் கூடசாலைகளும் - உலகு வலங் கொண்டொளி நேமிக்-கு (18)ல வரை உதைய குன்றமொடு நின்றெனப்- பசும்பொன்மேய்ந்து இருநிலந்தழைப்ப இமையவர் களிப்ப - பெரிய திருநாள் பெரும (19) பெயர் விழாவெனும - உயர் புரட்டாசி உத்திரட்டாதியில் - அம்பல நிறைந்த அற்புதக் கூத்தர் - இம்(20)பர் வாழவெழுந் தருளுவதற்குத் - திருத் தெற கோயில் செம்பொன் மேய்ந்து- பருத்திரள் முத்தின் (21) பயில் வடம் பரப்பி - நிறைமணி மாளிகை நெடுந்திரு வீதிதந் திருவளர் பெயராற்(22)செய்து சமைத்தருளி - பைம்பொழிற்றெழித்த பரிகல முதலாச் - செம்பொற் கற்பகத் தொடுபரிச்சின் (23) னமும்-அளவில்லாதன வொளிபெற வமைத்துப் - பத்தாமாண்டில் சித்திரைத் திங்கள் - அத்த (24)ம் பெற்றஆதித்தியவாரத்துத-திருவளர் மதியின் திரயோதசிப் பக்கத்து- இன்னபலவும்இனிது(25) சமைத்தருளி ....................திரிபுவன சக்கரவர்த்திகள் விக்கிரம சோழதேவற்கு யாண்டு கரு-வது' என்று கூறும் திருமழுவாடிக் கல்வெட்டால்[1] இனிது விளங்கும். இவ்வாறு பல சரித்திரச் செய்திகளும், கற்பனை யலங்காரங்களும் நிறைந்த இந்த நூலைத் தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் வாங்கி வாசிக்க வேண்டியது அவசியமாகும்.

[1] இராசராச சோழனுலா 27-வது கண்ணியும் பார்க்க.

[1] S. I. I. iv, 22.

# சுந்தர சுலோசனை

[திரு. தி. ர. சாரங்கபாணி, எம். ஏ.]

(தொடர்ச்சி)

பிறகு அக்கரிய உருவத்திற்குத் திடீரென ஓர் எண்ணம் உதித்தது. உடனே தரையை முழங்கால்மீதமர்ந்து மெதுவாகத் தட்டிப் பார்த்து வர, சரியாக அப்பூஜை அறைக்கு மத்தியில் ஒருவகை சப்தம் கேட்டது; ஒரு முறைக்குப் பன்முறை தட்டி உண்மையுணர்ந்து, அவ்வறையில் சுவரோரமாகத் தடவிப் பார்த்துக் கொண்டே வந்து, முன்னேதிய அறுமுகத்தண்ணவின் உருவப்படத்தின் பின் இருந்த ஒரு விசையை அழுத்த, அறையின் மத்தியில், தான் சந்தேகித்த இடத்தில் ஒரு கதவு திறந்தது. சிறிது நேரம் தயங்கி நின்ற உருவம், பிறகு மெதுவாக அத்துவாரத்தை யணுகி உள் நோக்க, ஒரே இருட்டாகவே இருந்ததெனினும், அப்பேரிருளினின்றும் எழும் பேச்சரவம் அதன் செவியில்பட்டது. உடனே நமது கரிய உருவம் தன்னுடைய மின்சார விளக்கி னுதவியால் நோக்க, அவ்வாயிலிலிருந்து பல படிகள் உள்ளிருளில் செல்வது கண்டு சிறிதுந் தயங்காது அப்படிகளின் வாயிலாக இருளில் இறங்கியது. சுமார் ஏழுபடிகள் இறங்கியதும், அகஸ்மாத்தாய்ச் சுவரிலிருந்த ஒருவிசை அதனுடைய கரத்தில்பட, அதை நின்று தன்னுடைய கைவிளக்கால் சோதிக்க அது அறையுள்ளிருந்த இரகசியக் கதவை மூடும் விசையாயிருக்குமென வுன்னி அதனை அழுத்த, அக்கதவு மூடிக் கொண்டது. மூடிய கதவைத் திறப்பதற்கு வேறு விசையுண்டோ, இன்றேல் மூடுவதற்கும் திறப்பதற்கும் ஒரே விசையே உபயோகிக்கப் படுகின்றதோ என்று அறிய அவ்விசையை மீண்டும் அழுத்த, மேற்கதவு சிறிதுஞ் சந்தடியில்லாது திறந்தது கண்டு மனமகிழ்ந்து விசையை அழுத்திக் கதவை மூடி விட்டுப் படிகளின் வாயிலாக இறங்கிச் செல்ல, பதினுப்படிகளுக் கப்பால் படிகளில்லா திருப்பது கண்டு விளக்கினொளியில் நோக்க, ஒரு கதவு தெரிந்தது. அங்குஇருவர்பேச்சரவமுஞ் செவியிற்பட்டது. மேலிருந்து கேட்ட பேச்சரவம், அக் கதவினுள் இருக்கும் அறையிலிருந்தே வந்ததெனத் தனி விளங்கியது.

உடனே மெதுவாக அக்கதவை யணுகி, கதவின் துவாரத்தின் வாயிலாக உள்நோக்க, ஓர் உயர் நடையாடை யணிந்த வாலிபனையும், பட்டுப் பீதாம்பரத்துடன் விளங்கிய சாமியாரையும் நமது காருருவங் கண்டது. சுவாமிகளை உற்று நோக்கியது அவருடைய பேசும் முறையிலிருந்தும், அவருடைய குரலோசையிலிருந்தும் ஸ்ரீலஸ்ரீ சச்சிதாநந்த சுவாமிகளே தயாநந்தலால் என நம்முடைய உருவம் தெளிந்தது. பிறகு, உள்ளிருந்த வாலிபனுடைய வாடிய வதனத்தைக் கவனித்தது. அவ்வாலிபன் யாரென நமது உருவத்திற்கு விளங்கவில்லை. அதுசமயம்,

"மோகனசுந்தரப் பிரபுவே! நான் இங்கு அழைத்த முறை நியாய வரம்பற்ற முறை என்பது உண்மைதான். ஆனல்........"

"அடே போலிவேடப்பதரே! நீயும் ஒரு துறவியா? உனக்கும் ஒரு மடமா? உன்னலன்றோ என் அண்ணு வீண்பழிகளைத் தாங்கி நிற்கின்றார்."

"பிரபுவே! நீர் என்னை உண்மையை உணராது, அறிவின்மையால் பழிக்கின்றீர்."

"உலகைப் புறவேடத்தால் ஏமாற்றிப் பொருள்பறிக்கும் அறிவு எனக்கில்லையென்பது மெய்ம்மையே. ஆனல் உம்மைப்போன்ற போலி வேடதாரிகளா னன்றோ ஒப்புயர்வற்ற நமது

மதம் மாண்பை யிழக்கின்றது. அடே பாதகா !''

"பிரபுவே! நாவில் நரம்பில்லாது நீர் என்னைப் பழிக்கின்றீர். நான் களவாடினேன் என்பது உண்மையே. ஆனால் நான் களவாடுவதை உலகம் அறியாது; இப்பொழுது உலகம் உம்மைக் கள்வனென எண்ணுகிறதை நீர் அறியீர் போலும் !''

"அடே பேயே ! என்னையா உலகம் கள்வனெனக் கருதுகின்றது? அஃதும் உன்னுடைய சூழ்ச்சியோ ?''

"பிரபுவே நீர் இங்கு என்னுடைய ரக வந்தவன்று....''

"ஆ! பழியஞ்சாப் பாதகனுகிய உன்னுடைய சேட்டைகளா? என்னுடைய கரத்தில் விலங்கு மாத்திரம் இடப்படாமலிருந்தால் உன்னை யான் கொன்றுவிடுவேன்.''

"ஆம் பிரபுவே! நீர் அத்தகை மிருக நீர்மை மலிந்தவரென்றுணர்ந்தே யான் உம்முடைய கரங்களுக்குக் காப்பிட்டேன். இன்றேல் சாது சண்முகசுந்தரத்தைப்போல் உரிமையுடன் நீரும் இருப்பீர். பிரபுவே ! கள்ளன் என்ற மகுடந் தாங்கியதுடன் கொலைப்பாதகன் என்ற பழியும் உம்மை யணுக உமக்கிச்சை போலும்.''

" அமலன்மாட்டு மெய்யன்புடைய என்னுடைய அண்ணனை மயக்கி, உம முடைய அடிமையைப்போலும் தெய்வப் பித்தேற உன்னுடைய பூஜை அறைக்கடுத்த அறையில் வைத்திருப்பதைப்போலும் என்னையும் மயக்க எண்ணினையோ. என் அண்ணனின் மீது சுமத்தியது போலும் என்மீதும் வீண் பழிகளைச் சுமத்தி வஞ்சிக்க எண்ணினையோ ? ஆ ! ஈசா !''

"பிரபுவே ! நீர் "உரிமை யுறையுளை நீத்த அன்று சந்திரசேகரப் பிரபுவின் இருப்புப்பெட்டியிலிருந்து 5000 ரூபாய் களும், 5000 ரூபாய் விலை மதிப்புள்ள நகைகளும், "தஞ்சை மன்னன் அளித்தது'' எனப் பதிவுசெய்யப்பட்டிருந்த வைர மாலையும், வெள்ளி யுறையிட்ட வாளும் களவாடப்பட்டதையும், நீரே அவைகளைக் களவாடியவரென்று உலகம் எண்ணுவதையும் நீரறியீர் போலும் !''

" ஆ! முருக !''

இவ்வுரைகளை யெல்லாம் செவிமடுத்த கரிய உருவம், உடனே அறையுள் சென்று போலி வேடதாரியைப் புடைத்து மோகன சுந்தரத்தை விடுவிக்க எண்ணிய தெனினும் பொறுமையே கடலினும் பெரிதென்னும்,மூதுரைக் கிணங்கத் தன்னிச்சையை யடக்கிக்கொண்டு, வந்த வழியே திரும்பிச் சென்று,படிகளேறிவிசையை அழுத்த, மேற்கதவு திறந்தது. பூஜை அறைக்கு வந்து,அக்கள்ளஅறையின் கதவை மீண்டும் மூடிவிட்டு, அறையைத் துறந்து வெளிப்போந்து, தன் கரத்திருந்த ஆயுதத்தினுதவியால் அதனை உட்புறந் தாளிட்டு விட்டு, தான் இல்லத்துள் இறங்கப் பேருதவியாற்றிய இருப்புக் கம்பியின் வழியாகவே தளத்தின்மேலேறி, இருப்புக் குழாயின் வாயிலாக வீதியிலிறங்கி, வீதியினிருபுறமும் உற்று நோக்கி, ஒருவரையுங் காணாது, மனமகிழ்ந்தோடி தன்னுடைய மோட்டார் வண்டியிலேறி, தன் வண்டியிலிருந்த கடிகாரத்தை நோக்க, 2 அடிக்க 4 நிமிடங்கள் இருப்பதுணர்ந்து, அந்த நான்கு நிமிடங்களுக்குள் இல்லம் சேர்தல் வேண்டும் என்ற தீர்மானத்துடன் வண்டியை வாயு வேகமாக ஓட்டி "ரங்கவிலாச''த்தின் முன் நின்றது. அதே சமயம் சத்தியநாதன் வாடியமுகமும்மனமும் தாங்கி,ஜயகுமாரன் எழுதிய கடிதத்தைக் கரத்தில் பற்றி மோட்டார் வண்டியிருக்கும் இடத்தை யடைந்தான். வண்டியுள்ளிருந்து நம்முடைய கருவுருவம் கீழிறங்க, அதனைக்கண்டதும் சத்தியநாதன் எல்லையிலாஆநந்தத்தான் செய்வதின்னதென உணராது அக்கரிய உருவத்தைக் கட்டியணைத்து "ஐயா !............''

என்றான் அதற்குமேல் அவனால் பேச இயலவில்லை. "சத்தியநாத! வண்டியை லாயத்தில் விட்டுவிட்டு என்னறைக குவா" எனக்கூறி அககருவுருவம் இல்லத்துள் சென்றது.

இறைவனைப் போற்றிக் கொண்டே சத்தியநாதன் வண்டியை லாயத்தில் விட்டுப் பூட்டி விட்டு இல்லத்துள் சென்றான்.

திடீரென "ஆ" என்ற சப்தம் நள்ளிரவில் எழுநதது. உள்ளிருந்த ஜயகுமாரன், சப்தம் எழுந்த திசைநோக்கி ஓடினான். சப்தத்திலிருந்து, அது சத்தியநாதனுடைய குரலோசையே என்று ஜயகுமாரன் உணர்ந்தான். இல்லத்தின் வெளிவாயலுக கருகில் சத்தியநாதன் பிணம் போலும் விழுந்து கிடப்பது கண்டான். தன்னுடைய உண்மைப் பிணியாளன் இறந்துவிட்டானே என்ற அச்சம் அவனகத் தெழுந்தது; ஒன்றுஞ் செய்யத் தோன்றாது சிறிது நேரம் மயங்கி நின்றான்; அவனையு மறியாது அவனுடைய கண்கள் நீரைப் பெருக்கின. தன்னுயிர்த்தோழனாகிய சத்தியநாதனை மீண்டும் நோக்கினான். அவனருகிலமர்ந்து அவனுடைய மார்பில் கரம்வைத்து சோதித்தான். ஆங்கு இருதயத்துடிப்பை யுணர்ந்ததும்சிறிது தைரியங் கொண்டான். சத்தியநாதனுடையஉடலெங்கும்பரிசோதித்தான். காயமொன்றுங் காணாது தலையைத் தடவிப் பார்த்தான். தலையில் ஒரு பெரிய வீக்கமிருந்தது. தலையின் பின்புறமே அவ்வீக்கம் இருப்பது கண்டு, சத்தியநாதன் இல்லத்துள் நுழையுங்கால், தம்முடைய விரோதியரால் ஏவப்பட்ட ஒருவன் ஒரு தடியால் அவனுடைய தலையின் பின்புற மிருந்து ஓங்கியடித்திருத்தல்வேண்டுமெனத் தெளிந்தான். அடியின் அதிர்ச்சியால் மதி மயங்கியே சத்தியநாதன் வீழ்ந்துள்ளானென்ப துணர்ந்ததும், சிறிதுந் தாமதியாதுசத்தியநாதனை-பிணமெனக் கீழ் வீழ்ந்து கிடந்த சத்தியநாதனை - யென இருகரங்களிற் றூங்கித் தன்னுடைய அறைக்கு எடுத்துச் சென்று ஆங்கு ஒரு பஞ்சணையின் மீது கிடத்திச் சிறிது சிகிட்சை செய்ய எண்ணி, அவ்வறையை நீத்துச சென்று, வேறறையிலிருந்த சில ஔடதங்களையும் நீரையுங் கொண்டு சத்தியநாதன் பிணம்போல் கிடநத அறையுள் நுழைந்தான. நுழைந்து, சில நிமிடங்களுள் அறையுள் எரிநதுகொண்டிருந்த மின்சார விளக்குத் திடீரென அணைந்தது. பேரிருள் எங்குஞ் சூழ்நதது. அறையின் கதவுகள் தாளிடப்படும் அரவம் ஜயகுமாரனுடைய செவியில் பட்டது. ஜயகுமாரனுடைய கரங்கள் அவனுடைய அறையி லமைந்திருந்த கைத்துப்பாககியை நாடியது. உடனே அவன் மீது ஒரு மின்சாரக் கைவிளககின் ஒளிவிழுந்தது. "ஜயகுமாரரே! உடனே உம்முடைய கரங்களை உயர்த்தும்; இன்றேல் என்கரத் திலங்குந் துப்பாக்கிக்கு இரையாவீர்" என்ற கம்பீர வார்த்தைகள் எழுந்தன. ஜயகுமாரன் கரங்களை மேலே உயர்த்தினான். ஜயகுமாரனுடைய கரங்கள் கோபத்தினால் பதறின; கண்கள் சிவந்தன. எனினும் என் செய்வது. விளக்கின் ஒளி தோன்றிய புறததிலிருநது தோன்றிய ஒருமுரடன் ஜயகுமாரனை அணுகி, அவனுடைய இருகரங்களையும் பின்புறமாகக் கட்டினான். உடனே அவனுடைய வாயிலுந் துணி யடைக்கபபட்டது. அதே சமயம் வேறொருவன் சத்தியநாதனுடைய கரங்களையுங் கட்டுவது கண்டான் கட்டுண்ட ஜயகுமாரன். சத்தியநாதன் இருக்கும் நிலைமையை எண்ணுந் தோறும் எண்ணுந் தோறும் வெகுளி விம்மி எழுந்தது. காலததின் கோலம் துப்பறிவீர சிங்கம - கள்ளர்களைக் கலக்கிய ஜயகுமாரன் - அந்தோ!—தன்னுடையஇல்லத்தில் தன்னுடைய அறையிலேயே கட்டுண்டு என்னசெய்வதெனத் தோன்றாது தவித்தல் காலத்தின் கோலமல்லால் மற்றென்னென்றறைவது? இறைவனை எண்ணினான்; அவனருளை வேண்டினான். அறையுள் எத்தனை பேரிருக்கின்றார்க ளென்பதை

அறியவும, அறையுள் நிறைந்திருநத இருளான் இயலவில்லை. சநதியநாத ளைக்கட்டியவனுஞ்சென்று தன்தோழர் களுடன் சேர்ந்தான். உடனே ஜய குமாரன் "நீங்கள் யார்?" என வினவி ஞன்.

"ஜயகுமாரரே! எங்களை யாரென் பதை நீங்கள் அறியவேண்டிய அவசிய மிருப்பதாக எனககு விளங்கவில்லை."

"நண்பரே! நான் அறியவேண்டிய அவசியமில்லை யெனினும் நீங்கள் என் னுடைய இல்லத்துள் நுழைந்து என்னை இப்படி நடத்துவதற்குக் காரணத் தை யேனும நான் அறியலாமா?"

"அந்தச் சநதேகத்தையும் நீர்விலக்க வேண்டிய அவசிய மிருப்பதாக எனக்கு விளங்கவில்லை."

இவ்வாறு ஜயகுமாரனும் மற்ற வனும் பேசிக் கொண்டிருக்கையில், சத் தியநாதன் மயக்கந தெளிந்து கண் விழிக்கலானுன்; கைவிளக்கி ஞெளி யில் ஜயகுமாரன் இரு கரங்களும் கட்டுண்டு கிடக்கும் நிலைமையை நோக்கி ஞன். தன் கரங்களுங் கட்டப்பட்டி ருப்பதும், தான் ஜயகுமாரனுடைய பஞ்சணையில் துயில் கொண்டிருப்பது முணர்நதான். ஜயகுமாரன் கேட்ட கேள்விகளுக்கு பதிலிறுத்தவர் நிற்கும் இட மறிநது கொண்டு, தன்னுடைய கரங்களைப் பிணித்து நின்ற கயிற்றைக் களைய மெதுவாக முயன்றுன். ஆண்ட வன் அருளால் அவன் கரத்தில் கட்டப் பட்ட கட்டு சிறிது தளர்த்தியாக இருப்பதுணர்நது, சப்தஞ் செய்யாது கைகளை விடுவித்துக் கொண்டு தன்னு டைய அறையிலிருந்த துப்பாக்கியை யும் மின்சார விளக்கையும் எடுதது க் கொண்டு, ஜயகுமாரன் மீது ஒளிவீசிய புறம் தன்னுடைய விளக்கை யடித்து, "அசையாதீர்கள்; அசைந்தால் என் கரத்திலிலங்குந் துடபாக்கிக் கிரையா வீர்கள்" என்றுன். ஜயகுமாரனுக் கெதிரில் அறையுள் நின்றிருந்த நால் வரும் திடுக்கிட்டு சத்தியநாதன் இருந்த பக்கம் நோக்கினர்.

"அறையின் மின்சார விளக்கின் விசையை உங்களுள் முதலில் நிற்கும் நண்பர் தயவு செய்து அழுத்தட்டும்; இன்றேல்........

அறையின் மின்சார விளக்கும் எரிந் தது. ஜயகுமாரனுக் கெதிரில் நின்றி ருநதவர்களை ஜயகுமாரனும் சத்திய நாதனுங் கண்டனர்.

"நடராஜரே! தயவு செய்து என்னு டைய ஜயகுமாரனுடைய கரங்களைப் பிணித்து நிறகும் பிணிப்புகளை யறுத் தெறியும்"

நடராஜன் விதியில்லாது ஜயகுமார னுடைய கரங்களைப் பிணிததுநின்ற பிணிப்புகளை யறுத்தெறிய, உடனே ஜய குமாரன் தன் கரததில துப்பாககியேந் தினுன். உடனே சத்தியநாதன்,

"ஐயா! நான் சென்று வருமளவும் இவர்களைக் கவனித்துக்கொள்ளுங்கள்" என்று கூறிவிட்டு அறையை விட்டுச் சென்று நான்கு ஜதை இருப்புக் காப்பு களுடன் திரும்பிவந்து, நால்வர் கரங் களுக்குங் காப்பிட்டான். பின்பு ஜய குமாரன், புன் முறுவலுடன் நால்வரை யும நோக்கினுன்; கோபமும் மானமும் சேர்நதொளிர அவர்கள் அறையின் வாயிலை நோக்க, ஆங்குச் சத்தியநாதன் நிற்பது கண்டு தப்பியோட இயலா தெனத் தெளிந்தனர்.

"நண்பர்களே! நீங்கள் யாவரால் ஏவப்பட்டவர்களென இப்பொழுதுணர் வேன். இப்பொழுது நீங்கள் நால்வரும் என்னுடைய கைதிகளாக இருக்கிறீர் கள். இந்த அறைக்குச் சென்று ஆங்கு இளைப்பாருங்கள்" என்றுன்.

வேறு வழியின்றி நால்வரும் அறை யுள் நுழைய அறையும், வெளிப்புறம் பூட்டப் பட்டது. ஜயகுமாரனையும் சத் தியநாதனையுங் கைதிகளாக்க எண் ணிய நால்வருங் கைதிகளாயினர். நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்குமெனும் மெய்யுரை அவர்கள்

பால் மெய்த்தது. இன்பத்திலுந் துன்பத்திலும் அடியாரை அமலன் கைவிடான் என்னும் பொய்யா மொழியும் மெய்த்தது.

"சத்தியநாத! இறைவன் தன் பேரருளை என்னென்பது?"

"ஐயா! மாறு பக்தியுடைய உமக்கு இன்னலும் நேர்ந்திடுமோ?"

"சத்தியநாத! நீ மிகவுங் களைத்திருக்கிறாய் சென்று உறங்கு. பேச வேண்டுவனவற்றைக் காலையில் பேசிக் கொள்ளலாம்."

# திருக்கோயில் வழிபாடும் சீர்திருத்தமும்

[திரு. பொன்னம்மாள, பி. ஏ., எல். டி.]

## VII

பல்வேறு மதக்கொள்கைகள், கோயில் வழிபாட்டு முறைகள், குருக்கள் ஆசாரிய ஏற்பாடுகள் முதலியன அடங்கிய பலஅரிய நூல்களையுடைய உயர்ந்த புஸ்தக சாலைகள் ஒவ்வொரு கோயிலோடும் சம்பந்தப்பட்டிருக்க வேண்டும். அன்றியும் ஆடவரும், பெண்டிரும், முதியோரும், ஒழிவுடையோரும் ஆங்குச் சென்று நற்பயனளிக்கத் தக்க பல நூல்களையும் கொள்கைகளையும் படித்தாராயத்தக்க வாசகசாலையும் (Reading room)ஸ்தாபிக்கப்பட வேண்டும். இதில் அவரவர் தம்மதக் கொள்கை முறை வழிபாடுகளே யன்றிப் பிறமத நூல்களையும் தடையின்றித் தாராளமாய் வாசித்து அறிவினைப் பெருக்கிக் கொள்ளும் உரிமை எல்லாருக்கும் அளிக்கப் படவேண்டும். இதில் அங்கத்தினராக வேண்டும் பல மதத்தினருக்கும் வித்தியாசமின்றி வந்து வாசித்துப் பயனடையும் சுதந்திரம் கொடுக்கப்படலாம். இத்தகைய உரிமையும் நல்ல சந்தர்ப்பங்களும் கொடுக்கப்படாவிடின், நம் இளைஞர்.

"சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு"

என்றும்,

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும்
அப்பொருள், மெய்ப்பொருள்காண்பதறிவு"

என்றும்,

"எத்துணையும் பேதமுறா தெவ்வுயிரும்
தம்முயிர்போல் எண்ணியுள்ளே
ஒத்துரிமை உடையார் உவக்கின்றா
யாவர் அவா உயர்ந்தார்"

என்றும் பதிந்துப்போந்த நம் ஞானிகளின் கூற்றின் சிறப்பை எவ்வாறுணர்வர்? நமமதத்தின் சிறப்புமிளிர்ந்தோங்க வேண்டுமானாலும், பிறமத உண்மையினை உள்ளபடி அறியவேண்டுமானாலும் பல நூல்களை ஆராயாமல் எப்படியடையலாம்? பல மதங்களையும் ஒருங்குபடவைத்து ஆராய்வோர்க்கன்றி இம்மை மறுமையின் இரகசியங்கள் ஒருபோதும் விளக்கமாகா தெனறும் இத்தகைய ஆராய்ச்சி அறிவற்றோர்,

"கொடிரும் பேதையுங் கொண்டது விடா"

என்று தெய்வ நாயனார் கூற்றின்படி ஒருதலைக் கொள்ளிகளாகவே யிருந்து தேசத்தின் ஒற்றுமையையும் சமாதானத்தையும் ஆன்மாக்களுக்கு இறைவனளித்திருக்கும உரிமையையும் உயரிய சுயேச்சையான சுதந்திரத்தையும் சிதைப்போராவர் என்றும் நம் பெரியாரே பலமுறை உணர்த்திப் போந்தார்.

"இருவிழிகள் வாண்முகத்தி லிருந்தாலும்
வானிரவி யெழுந்தா லன்றிக
கருதுநிலப் பல் பொருளும் காண்டலறி
தாம் உலகிற் கண்போல் யாரும்
பெருகிய செல்வமுமறிவும் பெற்றாலும்
நூற்கேள்வி பெறுவார்க் கன்றித்
திருவருள் புண்ணிய பாவம் இம்மைமறு
மையும் வீடும் தெரியா வன்றே"

என்பனபோன்ற ஆன்றோர் கூற்று,

மேற்கூறிய சத்தியத்தை நன்கு வலியுறுத்தும். இவ்வாறு வேத மென்னப் பட்டவைகளில் எல்லாருக்கும் ஒத்ததாயிருக்கிற அறிவேயன்றி ஒருதலையறிவு ஒடுங்கி மறையும் என்பதிற் சிறிதும் ஐயமிலது.

கடைசியாகப் பறபல கோயில்களிற் காணப்படும் காலஞ் சென்றதும் உருவழிந்து போனதுமான பண்டைப் புராணக் கதைகளை விவரிக்கும் சித்திரங்களையும் பொய்க் கதைகளின் உருவப் படங்களையும் அறவே நீககிவிட்டு, அவ்விடத்தில் அநதந்த மதத்தின் நிலையான கொள்கைகளையோ, இயற்கைக்கும் இறைவனது லட்சணத்திற்கும் மானிடம் காட்சியிடும் அனுபவத்திற்கும் மாறுகாத சத்தியங்களையோ சித்திரித்தல் நலம். அன்றியும் பிறமதத்தில் காணப்படும் சிறந்த கொள்கைகளையோ, புறமதத்தினராயினும், மனுக்குலத்தின் ஆன்ம ஈடேற்றத்திற்கெனத் தமஉடல் பொருள் ஆவியைத் தத்தம் செய்திருக்கும் சீரிய பக்தரின் சரித்திரங்களையோ, சித்திரப் பட ரூபமாகவோ, அன்றிப் புகைப்பட ரூபமாகவோ கோயில்களில் வைத்தலும் இளைஞருக்கு அறிவும் ஆண்மையும் அளிக்கும் வழிகளில் ஒன்றாகும்.

இவ்வாறாக நம் இளைஞரும் நாகரிகத்தில் தேர்ந்தோரும் நம்·கோயில்களையும் வழிபாடுகளையும் எள்ளி நகையாடாமல் மேன்மேலும் பெருமைப் படுத்த நாம் விரும்பின், கோயில்களையும் கொள்கைகளையும் பற்றி உயரிய அறிவைப் பரப்பல் வேண்டும். ஒரு காலத்தில் பயனுடையதேனும் தற்கால அறிவு வளர்ச்சிக்கு முற்றும் மாறாய்க் காணப்படுவதும், உருவழிந்து பயன்கொடாத நிலையை யடைந்ததும், அறிவு முதிர்ச்சிக்குத் தடைகள்போற் காணப்படுவதுமான உருவங்கள், கதைகள், பாரம்பரியக் கொள்கைகள் சடங்காசாரங்கள் முதலியவற்றை அறவே யொழித்தல் அவசியம். "இந்தக் கலியுகத்தில் ஈசுவரனுடைய கிருபையைப் பெறுவதற்கு மூன்று நாள் தீவிரமான பக்தி செய்தாற் போதுமானது" என்று இராம கிருஷ்ண பரமஹம்சரின் உபதேசம் கூறுநிற்கின்றது. இதன் உண்மை, எவ்வாறாயினும் இறைவனுடைய வைதிக வுண்மைகளை மாத்திரமன்று இறைவனையே தம் ஜீவியத்தில் உண்மையாய்ப் பெற்றுத் தம் அனுபவத்தில் அவரோடு நெருங்கிப் பழகுவதாலும் அவரில் இடைவிடாது தரித்திருப்பதாலும் தம்மிலே உண்டாகும் ஆவியின் கனிகளைக் கொடுப்பது, தற்கால இளைஞருககு ஒரு பெருங்காரியமன்று. அவர்களை மாத்திரம் நாம் இறைவனையும் இம்மை மறுமைகளையும் பற்றிய தப்பிதமான புராணக் கதைகளாலும், நூல்களாலும் உபதேசத்தாலும் தடை செய்யா திருப்போமாயின், எத்தனையாக நம்மக்களுடைய ஆகம அறிவு பெருகி விளக்கமடையும்! இறைவனை எவ்விததததிலும் அனுபவத்திற் கண்டார், அவரைப்பற்றிபபேசவோ, நூலெழுதி உண்மை யறிவைப் பெருக்கவோ ஓயாது முன்வருவர். அப்போது அறிவு பெருகும்; தேசமும் தழைத்தோங்கும். கடவுளைப் பற்றிய அறிவை யன்று-கடவுளையே நம் இளைஞருக்கு முன் வைக்க வேண்டும். அப்போது இறைவனை வெகு சீககிரததில் அனுபவததிற்குக் கொண்டு வருவார்கள். அனுபவத்தில் காட்டப்படும் தெய்வம் பிறருக்குப் பல விதத்திலும் ஜீவனைக் கொடுக்கும் ஜீவாதிபதியாய் விளங்குவார். அப்போது மக்கள் அவரை நேசிப்பார்கள். நேசித்த மாத்திரததில் அவரையும் அவரது திருநாமத்தையும் நினைவூட்டும் கோயிலானுலும், பிற ஏதுக்களானுலும உள்ளான பூரிப்போடும ஆனந்தத்தோடும நோக்குவர்; தழுவர்; சிறப்பிப்பர். இவ் வுண்மையையே,

"கொற்றவன் தன்னைக் கண்டுகண் டுள்ளங்
குளிரஎன கண்குளிர்ந் தனவே"

என்றார் பெரியாரும். இத்தகைய அனுபவத்திற்கு நம்மக்களை வழிநடத்தக் கூடாத எத்துணை உயரிய ஞானபோத

மாளுலும், வைதிக உபதேசங்களாளுலும் அவற்ருல் யாது பயன்? அப்பருமு,

"வேதம் ஓதில்என வேள்விகள் செய்யில்என
நீதி நூல்பல நிதநல் பயிற்றில்என [ன
ஓதி அங்கம் ஓர் ஆறும் உணரில்என
ஈசனை உள்குவார்க் கன்றி இல்லையே"

என்ருர்.

இது காரும கூறிப்போந்தவற்ருல் நமபாரத மக்கள் தம் ஆன்ம வளர்ச்சி யிற்றேறி இறைவனைப் பெற்ற பிதாவினும உற்றபிதாவாகத் தம் அநுபவத்தில ருசித்து அதனுல் நம் பெரியார் கூறுமாப் போல் "அன்பே சிவம்" என்பதனைக் கண்ணுரக் காணும்படி செய்வது பெரியாரின் கடமை யென்று பார்த்தோம். கோயில்களானுலும குருக்களானுலும் மதத்தைப் பற்றிய வேறெவ்விதக் கூறுகளானுலும் நாகரிக வளர்ச்சிக்கும், அறிவு முதிர்ச்சிக்கும் ஏற்றவாறு இறைவனுடைய திருச்சன்னிதிக்கருகில் மக்களைக் கொண்டு செலுத்தாவிடின் அவைகளால் யாது பயன்? அன்பு எங்குளதோ, அங்கேதான் போற்றலும், புகழுமுண்டாகும். அன்பின் திறத்தை எவ்வாறறிவது? இவ்வுலகில் எத்துறையிலும், எச்சீவ வகையிலும் எத்தனைக் கெத்தனை கொடுததல், அதிலும் கைம்மாறு கருதாது அன்பினுற் கொடுத்தலுண்டோ அங்கேதான் அன்பு பொங்கும். 'குழந்தையும் தெய்வமும் கொண்டாடின விடத்தி' லன்றே? இறைவன் தனக்கான யாவற்றையும் கால மறிந்து கொடுக்கின்றுனெனத் தன் அநுபவததில் காணுத ஒருவன் எப்படிக் கடவுளை நேசிக்கத் தூண்டப்படுவான்? கடவுளை நேசியாத மனம், இறைவனுறையும் கோயிலைக் கண்ட மாத்திரத்தில் இருதயம் கரைந்துருகுவ தெங்ஙனம? 'கடவுள் என்னை நேசிக்கிருர்; எனக்கு வேண்டிய வற்றை யெல்லாம் அவரே தருகிருர்' எனப் பொதுப்படக் கூறி வீண் வார்த்தை யிற்ருனே இறைவனின் அன்பை நிறுத்திவிடல்கூடாது. நாம் சிறு குழவிகளாயிருக்குங்கால் நம் மிருங்குரவர் நமக்களிக்கும் சகல நன்மைகளையும், அன்பின் சின்னங்களையும அறியாமலே பெற்றநுபவிக்கின்ருேம. ஆயினும் பிராயம் முதிர முதிர நம் பெறறேர் நமக்களிக்கும் ஒவ்வொரு நன்மையின் தாரதம்மியத்தையும் நோக்கத்தையும் நன்குணர்நது அவற்றைச சந்தோஷமாய்ப்பெற்றநுபவிப்பதோடு, அவரது அன்பினுக்கு யாதொரு பங்கமும் நேராவண்ணம் நாமும் அன்னேரிடத்தில் நமக்கிருக்கும் பிள்ளைகளுக்கேற்ற அன்பினையும எண்ணிக்கையையும் வெளிக்காட்டச் சாவதானமாயிருக்கிருேம்.

ஒரு நாள், ஒரு சாது, ஒரு குடும்பத்தைச சந்திக்கச் சென்ருர். வீட்டிலுள்ள யாவரும் ஒருங்கே கூடியிருக்கும அமையத்தில் அகருழுவிலுள்ள மூன்ருட்டைப் பிராயததனை ஒரு குழநதையைப் பார்த்து 'குழநதாய்! உன் அப்பா உனக்கு என்ன கொடுக்கிருர்?' என்று வினவினுர். அத்தருணம் தந்தையின் மடியில் உட்கார்ந்து கொண்டு ஏதோ பட்சணம் அருந்திக் கொண்டிருநத அக்குழந்தை 'எங்கப்பா மிட்டாய் கொடுக்கிருர். முத்தம் கொடுக்கிருர்' என்றது. பின் எட்டு, பதினுறு, இருபத்தொரு பிராயமுள்ள புதல்வரை முறையே பார்த்து 'உன் தநதை உனக்காகச் செய்வது என்ன?' எனக் கேட்டார். அப்புத்திரரும் முறையே 'எனக்குப் படங்களும் புஸ்தகங்களும் வாங்கித் தருகிருர்' என்றும், 'என் கல்விக்கான யாவையும் தருவதோடு சைக்கிள் முதலியவை வாங்கித தநதார்' என்றும், 'எனக்கும் என் சகோதரருக்கும் வேண்டிய சகலமும் அளிப்பதோடு பிற்காலத்திற்குதவுமபடி எங்களுக்கு வீடு கட்டுகிருர்; என் பேருக்கு ஆஸ்தியும் சேர்க்கிருர்' என்று விடையிறுத்தனர். முடிவில் அக்கூட்டத்திலிருந்த அவ்வில்லக் கிழத்தியை நோக்கி, 'அம்மா 'உங்களுக்காக உங்கள் கணவன் செய்வது யாது?' எனக்கேட்டனர். அம்மையாள் அதற்குத்தரமாக, 'என் இன்பதுன்பத்திலும், வாழ்வு தாழ்விலும் என் கண

வரே எனக்குச் சகல உதவியும், ஆறு தலும் பெலனும் அளிப்பதோடு, இங் கே கூடியிருக்கும அன்பின் கனிகளாகிய அரும் புதல்வரை யடைந்து ஆனந் திக்கக் காரணமா யிருந்தவரும் என் ஆருயிர்த் தலைவரே' என்றனள.

இத்தகையதே நம் பரம பிதாவாகிய இறைவனும், தலைவனும, துணைவனு மான முழுமுதற் பொருளோடு நமக் கிருக்கும் ஆனம அறிவும் தொடர்பும். இவ்வாறு அவரவர் அறிவாற்றலுக்கும், ஆன்மவளர்ச்சிக்கும் ஏற்றவாறு கட வுளின் அன்பை ருசித்துக கண்ணாரக் கண்டு மனமார உணர்ந்தா லொழியக் கோயிலையும் அதிலுறையும் பதியையும் பற்றிய நல்லெண்ணமோ, நல்லெண் ணிக்கையோ, நல் நம்பிக்கையும் அன புமோ உதிப்பது முற்றிலும அசாத் தியமாகும். ஆயினும் கண்ணிருந்துங் காணாமலும், காதிருந்துங் கேளாமலும், காலிருந்தும் நடவாமலும் உணர்ந்தறிய இதயமில்லாமலுமிருக்கிற வீண் கல்லு களின் மூலமாயும், கட்டைகளின் வாயி லாயும் கடவுளின் அருங்கருணையையும், ஆருயிர் ஓம்பும் திறத்தினையும பார்க்க முயற்சிக்கும் வரை, நம்பாலரும், படிப் பாளிகளும் ஒருபோதும் அன்பில் தொழவே முடியாது. அவ்வாறு,

"அன்பே சிவமயமா யிருந்தமை அறிந்தவர்
இறையருள் பெற்று"

"அன்பதாம் அமுதினை முழுநதிட உண்"டவர் இறைவனுக்கு "அயலவ" ரேயாவர். இவ்வயலார் இறைவனை நினைத்த மாத்திரததானே 'அப்பனே', அம்மையே', 'சோதியே' 'என்னுயிர்த் துணையே' என்றிவ்வாறு நெஞ்சுருகி எவ்வாறு அஞ்சல் கேட்டு அவரை யணைகுவர். அணையாராயின், எவ்வாறு சைவ நாற்பாதத்தினும சீர்ப்பாதமா கிய ஞானத்தை யடைவர்? முறையே "தாசமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம்" இவற்றின் தாற்பரியத் தை யறிந்தநுபவித்தாலொழிய இறை வனோடு ஒன்றுகி யுறவாடுவதெங்ஙனம? இத்தகைய உறவிருந்தாலொழிய எப் படி "அன்பெனும்ஆறு கரையது புர ளப்"போற்றிப் புகழ்ந்து பிறருக்கும் புகட்டுவர்? இப்படி இறைவனோடு கூடி ஒப்புரவாக நமக்குதவும் கோயில், குரு வழிபாடு, கொள்கை முறைகளையே "அபயியாசமார்க்கம்" என்று நம் பக்தா கழறுவதை உண்மையெனக் கொள்ளலாகும்.

அன்றி நமக்குமுன்சென்ற பக்தரு மாம் இறைவனோடு தமக்கிருந்த தாகப் பொறித்து வைத்திருக்கும் அவரது அநுபவங்களைக் காட்டும் திருவாசகத் தையோ, தேவாரத்தையோ, பிறதெய் வீக ரசம நிறைந்த பாடல்களையோ எடுத்து நாளெல்லாம் படித்துக் கொண் டிருந்தால் மட்டும் அன்னோரடைந்த அநுபவத்தை யடைதல் கூடாது. ஒரு வாறுன பக்தியுணர்ச்சியையும், நம்பிக் கையையும் சிறிது பொழுதளித்தாலும் இவை நம்மை இறைவனுடைய பாதார விந்தத்திற் கொண்டு சேர்க்கவேமாட் டாவென்பது திண்ணம். இவ்வாறுண் டாகும் சுயாநுபவமற்ற அன்பு புகை யைப்போல் கழியும்; கனவைப்போல் ஒழியும். அன்றியும் அவ்வித வுண்மை யும் உறுதியுமில்லாப் பக்தியும் அன் பும்,

"ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை
கடைமுறை தான்சாந் துயரம் தரும்"

என்று நாயனர் கூறியபடி, துன்பக்கட லில் அன்பற்ற ஆன்மாக்களை யழுத்தி இறைவனைப் பற்றிய பலவித ஐயந்திரி புகளைக் கிளப்பி அவரை முடிவில் அறவே மறந்து திரியும நிர்விசாரிகளா கவும் தம் இறைவனை அநுபவார்த்தமா கக் கண்டு பின் "அன்பில தொழா"த போலிச் சைவராகவும ஆக்கிவிடும் என் பதற்குச் சந்தேகமே யில்லை.

முடிவாக நேயர்களுக்கொரு விண்ணப் பம். நம் கோயில்களை ஒழுக்கத்துக் குரிய நற்களன்க ளாக்குவதற்கான ஏதுக்களை எடுத்துக் கூறு முகத்தால் அவைகளையும் அவற்றைச் சார்ந்த பல முறைமைகளையும் செவ்வனே ஆராய்ந் துழி, ஆங்காங்கே காணப்பட்ட குறைவு களையும் உள்ளவா றெடுத்துக் காட்டி யது உண்மையே. ஆயினும் இவ்

வாறு செய்ய நேர்ந்தமை பற்றி, யாம் தாங்கொணுத்துயர மடையினும், அப் படிச் செய்தது எம்முடன்பிறப் பாள ராகிய பாரத சகோதரரின் மேலுள்ள உண்மைப் பற்றுலேயே என்பதை அன்பர் அறிவாராக. அந்தோ! அன்னி யர் ஆட்சி முறையால் உண்டாகும் அடிமைத் தனத்தைவிட, நம்மைக் கட்டியிருக்கும் அஞ்ஞானம, இருள், மூடபக்தி, குருட்டு வழிபாடு, கோண லும் மாறுபாடுமான பல தீக்கொள்கை கள் இவைகளாகிய இருப்புத்தளேயே நம் தேச முன்னேற்றத்துக்குத் தடை யாயிருக்கின்றன வென்பதை நாம் ஏற் றுக்கொள்ளல் நலம். "குணவான் தன் குற்றம் உணர்வானன்றே!" பெரி யோரென்னப்பட்டோர், சான்றோர்என் னப் பட்டோர், சாதுக்களெனப் பட் டோர், "சாமிகள்" எனப்பட்டோர் ஆதியவர் ஏதோ 'கொஞ்சம் நலமான வழியை' யன்று, நடுத்தரமானதையு மன்று, முதற்றரமான உயிரோம்பும் உயரிய நோக்கத்திஜனயும், கொள்கை களையும் ஒப்பில்லா உன்னத மார்க்கத் திஜனயுமே நம் இளைஞருக்கு முன் வைக்க வேண்டும் என்று கருதிய எம் மட்டற்ற ஆசையாலேயே குறைகளைக் குறித்துக் காட்டியது.

"நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்க
மேறசென் றிடித்தற் பொருட்டு" [ண்

என்ற நந்தமிழ் மறையார் கூற்றின் உட்கருத்தையறிந்தார் யாம் பிற மதத் தைச் சார்ந்தேமாயினும் எமதுரையை அல்லதகட்டார் என்பது எமதுதுணிபு. அப்படியே அவர் எம்மை வெறுத்துப் பொய்யராக் கொள்வரேனும்,

"மண்ணுலகதிலே உயிர்கள்தாம் வருநதும்
வருததத்தை யொருசிறி தேனும
கணணுறப் பார்த்தும் செவியுறக் கேட்டும்
கணமும் நான சகிததிட மாட்டேன
எண்ணுறு மெனக்கே நின்னருள் வாய்த்தால்
இசைததபோ திசைததபோ தெல்லாம்
நண்ணும் அவ்வருத்தம் தவிர்க்கநல்வரந்தான்
நல்குதல் எனக்கிச்சை எந்தாய்"

என்றுயாம் இடையரு ஓலமிட்டு நிற் கும் எம்பிதாவாகிய தேவன் எம்மை ஆளத் தட்டார் என்பது திண்ணம்.

"நீ தீழ்ப்பானதினின்று விலேயேறப் பெற்றதைப் பிரித்தெடுததால் என் வாய் போலிருப்பாய்; நீ அவர்களிடத்தில் திரும்பாமல் அவர்கள் உன்னிடமாய்த் திரும்புவார்களாகஎன்று கர்த்தர் சொல்லு கிறுர்"—எரேமியா 15 : 19.

# *தமிழ் நாட்டுச் சங்கீதம்

[காயகசிகாமணி, ஹரிகேசவநல்லூர் திரு. முத்தையா பாகவதர்]

இங்கேகூடியிருக்கும்அன்பர்களுக்குச் சங்கீத சம்பந்தமான சில சங்கதி கள் தெரிவித்துக்கொள்ள விரும்பு கிறேன். அவைகளில் தவறு இருக்க லாம். தமிழினிடத்தில் எனக்கும் அன்பு இருப்பதால் உங்களுடைய முழு அன்பும் ஏற்பட்டு நான் சொல்பவை களில் உள்ள குணங்களைக் கொள்ளும் படி கேட்டுக் கொள்கிறேன்.

தமிழ்நாடு எத்தகைய கலைவளத் தைத் தான் பெருமல் இருந்தது? எந் தக் கலைகளிலும் இந்த நாடு முதன்மை யாக இருந்தது; சங்கீதத்தில் மிகச் சிறப்புவாய்ந்திருநதது. அநேக சங்கீத வித்துவான்கள் இந்த நாட்டில் இருந் திருக்கிறுர்கள்.

## சங்கீதத்தின் சிறப்பு

எல்லோருக்கும் ஆனந்தந்தருவது சங்கீதம். சங்கீதத்தை வேண்டாதவர் இல்லை. புல் பூண்டுகள் கூடக் கான ருசியை அறிந்து அநுபவிக்கின்றன என்றுல், அது மனிதர்களுக்கு ஆனந்

*இது, தமிழன்பர் மகா நாட்டில் (22-12-33) ஸ்ரீமான் பாகவதரவர்கள் கச்சேரி செய் வதற்கு முன் செய்த பிரசங்கம்.

தந் தருவதைப்பற்றிச் சந்தேகம் உண்டோ? உடல்வளர்ச்சி அடைவதற்கு ஆகாராதிகள் உபயோகப் படுவது போல் உயிர்வளர்ச்சிக்குச் சங்கீதம் அவசியமானது. கானத்தைக் கேட்டவுடன் நமக்குள்ள கவலை நீங்கிவிடுகின்றது; திரிகரணங்களும் அசைவற்று நிற்கின்றன; வேலையை நிறுத்திவிட்டுக் கவலைகளை மறந்து கேட்கிறோம். சங்கீதம் நின்றபிறகு கவலைப்படுகிறோம்.

அந்தச் சங்கீதம் எப்பொழுது உண்டாயிற்று? யார் மூலம் வந்தது? உலகம் உண்டாவதற்குமுன் கானம் உண்டாயிற்று. கானத்துக்கு ஆதியானது நாதம். நாதத்திலிருந்தே ஸ்வரம் உண்டாயிற்று. ஆகாசம் ஸப்த வடிவமுடையது. ஆகாசத்திலிருந்தே மற்றப் பூதங்கள் உண்டாயின. ஆகாசத்துக்குச் சொந்தமான நாதத்திலிருந்தே எல்லாப் பூதங்களும் உண்டாயின. ஜீவராசிகள் எல்லாம் தங்கள் தங்கள் கருத்தை வெளியிடுவதற்கு நாதம் வேண்டும். பாஷைக்கு ஆதியாயிருப்பது நாதம். அந்த பாஷை ஒலி வடிவாகவும் வரிவடிவாகவும் இருக்கிறது. அந்த நாதத்திலிருந்தே வேதம் சாஸ்திரம் மந்திரம் முதலியவைகள் உண்டாயின.

மகரிஷிகளெல்லாம் மந்திரங்களைச் சொல்லி வைத்திருக்கிறார்கள். அந்த மந்திரங்களை ஜபம்செய்து மந்திரத்துக்குரிய தேவதைகளைத் தரிசனம் செய்தார்கள். அந்தத் தெய்வங்களைக் காண்பதற்கு மந்திரங்கள் உதவியாக இருக்கின்றன. தெய்வபேதங்களுக்கு முன்பு நாதம் உண்டாயிற்று.

## பரிபாடல்

கீதமானது எவ்வளவு காலத்துக்கு முன்பு ஏற்பட்டதென்பதை அறிவது மிகவும் துர்லபம். லக்ஷக்கணக்கான வருஷங்களாகக் கீதங்கள் இருந்து வந்திருக்கலாம்; அநேகம் பெரியோர்களால் கானம்செய்யப்பட்டு வந்திருக்கலாம். தமிழில் மிகவும் பழைய சங்கீத சாஸ்திரங்கள் பல இருந்தன. சுமார் 2000 வருஷங்களுக்கு முன்புஉண்டான பரிபாடல் என்ற பழையதமிழ் நூலில் உள்ள பாட்டுக்களுக்கு இசை வகுக்கப்பட்டிருக்கிறது. அதில் பாட்டுப் பாடினவர் இன்னார், இசைவகுத்தவர் இன்னார் என்ற விஷயங்கள் ஒவ்வொரு பாட்டுக்கும்குறிக்கப்பட்டிருக்கின்றன. ஒருவர் சாஹித்யம் செய்வதும், வேறு ஒருவர் அதற்கு இராகதாளம் அமைப்பதுமாகிய வழக்கம் இப்பொழுதும் இருக்கிறது. "இதோ நான் எனக்கு மனோபாவமாகத் தோற்றியதைப் பாட்டாகப் பாடியிருக்கிறேன்; தயவுசெய்து வர்ணமெட்டுப் போட்டு விடுங்கள்" என்று பலர் இப்பொழுதும் சொல்லுகிறார்கள். அதைப்போல அந்தக் காலத்திலும் கவிகள் மிகவும் அழகான பாட்டுக்களைப்பாடி இசைவாணர்களோடு கலந்து அப்பாட்டுக்களுக்கு இசை அமைத்துப் பாடச்செய்திருக்கிறார்கள். பரிபாடலில் ஒரு பாட்டுக்கடியில், 'பாடினவர் கீரந்தையார், இசைவகுத்தவர் நன்னாகனார்' என்று குறிப்பிக்கப் பட்டிருக்கிறது. இப்படியே ஒவ்வொரு பாட்டையும் பாடினவர், இசைவகுத்தவர் என்பவர்களின் பெயர்கள் காணப்படுகின்றன. இவைகளைப் பார்க்கும்பொழுது சங்கீதசாஹித்யவித்வான்கள் எவ்வளவு தூரம் ஒருமைப்பட்டிருந்திருக்கிறார்களென்பது தெரியவரும். உடலும் உயிரும்போல சாஹித்யமும் சங்கீதமும் இருக்கின்றன. இந்த உண்மையைப் பழைய தமிழ் வித்வான்கள் அறிந்திருந்தார்களென்றும், இயலும் இசையும் பிரியாமல் ஒற்றுமையாக வைத்துக் கௌரவிக்கப்பட்டனவென்றும் பரிபாடலினால் அறிகிறோம். இசையை இயலோடு அவர்கள்சேர்த்து அநுபவித்திருக்கிறார்கள்.

## சிலப்பதிகாரம்

சுமார் ஏறக்குறைய 1500 வருஷங்களுக்குமுன் சிலப்பதிகாரம் என்ற அருமையான நூல் இளங்கோவடிகள் என்பவரால் செய்யப்பட்டது. அது சங்கீத * சாஹித்தியங்களில் மிகவும் தேர்ச்சிபெற்று உலகத்திற்கு நன்மை

பயக்கும்படி அவரால் இயற்றப்பட்டது. அந்த நூலில் சங்கீததுக்கு உபயோகமான பல அருமையான பாகங்கள் இருக்கின்றன. சங்கீதம், வடமொழியில் நிருத்தம், கீதம, வாத்யம என்று மூன்றுவகையாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அந்த மூன்றைப்பற்றிய பல அருமையான விஷயங்கள் சிலப்பதிகாரததில் நிறைந்து கிடக்கின்றன.

## வீணையும் சரீரமும்

வாத்தியங்களில் சிறந்தது வீணை ஒன்று தான் என்பதை அந்தச் சிலப்பதிகாரம் மிக நன்றாகச் சொல்கிறது. மனுஷ்யனைப்போலப் பாடுவது வீணை ஒன்றுதான். சரீரத்தைக் காத்ரவீணையென்றும், வீணையைத் தாருவீணையென்றும் சொல்வதுண்டு. இரண்டுக்கும் சாம்யம் இருக்கிறது. உடம்பே வீணை போல அமைந்திருக்கிறது. மனுஷ்யனுடைய தலையிலிருநது இடுப்பு வரையிலுள்ள பாகம் வீணையை ஒத்ததாக இருக்கிறது. வீணையின் குடம் போன்றது தலை. கண்ணிருக்கும் ஸ்தானத்தில் வீணையிலும் இரண்டு கண்கள் இருக்கின்றன. வாய், தநதி மீட்டும் இடம். உடம்பிலுள்ள முதுகெலும்பை வீணுதண்ட மென்பார்கள். அந்த எலும்பு சிரசிலிருந்து பின்புறம் வரையில் வந்து வளைந்து இருக்கிறது. அது இருபததுநாலு எலும்புகளின் சேர்க்கை என்பார்சள். வீணையிலும் இருபத்துநாலு மெட்டுக்கள் இருக்கின்றன. வாதம் பித்தம சிலேஷ்மம் என்ற மூன்றுநாடிகள் உடம்பில் இருக்கின்றன. வீணையிலும் பஞ்சமம் மத்யமம் சாரணி என மூன்று தந்திகள் இருக்கின்றன. இநத மூன்ருேடு மநத்ரத்துக்காக ஒரு தந்தியும், தாளத்துக்காக மூன்று தந்திகளும் சேர்ந்து ஏழு தந்திகள இருக்கின்றன. இந்த ஏழு தநதிகளும் தேகத்திலுள்ள சப்த தாதுக்களைப்போல அமைநதிருக்கின்றன.

மந்திரத்துக்காக ஒரு தநதி ஏன் ஏற்பட்டிருக்கின்றது? நான்கு வேதங்களுக்கு நாலு தந்திகள் ஏற்பட்டிருக்கின்றன. ரிக்வேதத்துக்காகப பஞ்சமம் ஏற்பட்டிருக்கிறது. யஜுர் வேதத்துக்காக சாரணியும் சாமவேதத்துக்கு மத்தியமமும ஏற்பட்டிருக்கின்றன. பாககி உள்ள அதர்வணத்திற்கு ஒன்று வேண்டுமல்லவா? அதர்வண மநதிரங்களுக்காக மந்த்ரம் என்ற தந்தி ஏற்பட்டது. அது மிகவும கீழே உள்ள ஸ்வரங்களைப் பேசும்.

## சிலப்பதிகாரமும் சுருதி லக்ஷணமும்

சிலப்பதிகாரத்தில் வீணையின் லக்ஷணம், வீணை வாசிக்கவேண்டிய முறை, வைணிகனுடைய லக்ஷணம்முதலியவை நன்ருகச சொல்லப்பட்டிருக்கின்றன. அந்த அருமையான புஸ்தகத்தில்'ஆய்ச்சியர் குரவை' என்ற ஒருபாகம் இருக்கிறது. சுருதி லக்ஷணத்தை நன்ருக அறிநதுகொள்ள வேண்டுமானல், அநதப் பாகததை ஆராய்ந்து அறியவேண்டும். இப்பொழுது நடைபெறும் சங்கீதமகாநாடுகளில் அடிபிடிக்குக் காரணமாக இருக்கும் அதனுடைய நிர்த்தாரணம் அநத இடத்தில் வேறு எங்கும் இல்லாத சிறப்போடு காணப்படுகிறது. சங்கீத வித்வான்கள் சிலப்பதிகாரத்தை நன்ருக ஆராய்ச்சி பண்ணவில்லை. ஆராய்ச்சி பண்ணினவர்களுக்கு அதில் எவ்வளவோ அருமையான இரத்னங்கள் புதைந்து கிடக்கின்றன வென்பது தெரிகிறது. யாராவது ஆராய்ச்சி செய்து சொல்லவந்தால், அதற்கு மதிப்புக் கொடுப்பதில்லை. பண்டிதர்களும் சங்கீத வித்வான்களும் சேர்நது பழகுவதில்லை. தமிழ்ப் புஸ்தகததில் இவ்வளவு அருமையான சங்கதிகள் இருக்கின்றனவென்பதை சங்கீத விதவான்கள நமபுவதில்லை; தாஙகளாக ஆராயச்சிசெய்து அறிவதுமில்லை. ஆராய்ந்து அறிந்தவர்கள் அடங்கி யிருக்கிறுர்கள்.

## ஸ்வரங்களின் அமைப்பு

ஸ்வரம் என்பது எப்படி உண்டாயிற்று? ஈச்வரனுடைய ஐந்து முகங்களிலிருந்து ஸ்வரங்கள் உற்பத்தியாயின. 'அப்பயாலுல் ஐந்து ஸ்வரங்

கள் தாமே யுண்டாகும்?' என்று நீங்கள் கேட்கலாம். முதலில் ஐந்து ஸ்வரங்களே உண்டாயின. ஸ்வரங்கள் க்ரகங்களைப் போன்றவை என்று சிலப்பதிகாரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. வேறு எந்தப் புஸ்தகத்திலும் இந்த அருமையான விஷயம் சொல்லப்படவே யில்லை. இப்பொழுது நவக்ரகங்கள் என்று சொல்லப்படும் க்ரகங்களில் முதலில் இருந்தவை ஐந்தே. சூரியன், சந்திரன், செவ்வாய், குரு, சுக்கிரன் என்ற ஐந்துமே முன்பு உற்பத்தியானவை. 'சாயாக்கிரகங்களாகிய இராகு கேதுக்களைத் தள்ளிவிட்டால், வாஸ்தவத்தில் ஏழு க்ரகங்கள் இருக்கின்றனவே'? என்று நீங்கள் கேட்கலாம். இந்த ஐந்தில் சேராத க்ரகங்கள் சனியும் புதனும். சூரியன் பிள்ளை சனி; சந்திரன் பிள்ளை புதன். ஆகையால் முதலில் உண்டானவை ஐந்தென்றே ஏற்படுகிறது. அதைப்போலவே சப்த ஸ்வரங்களில் சட்ஜத்திலிருந்து காந்தாரமும் பஞ்சமத்திலிருந்து ரிஷபமும் ஏற்பட்டன. முதல் ஸ்வரங்கள் ஸமபதநி என்ற ஐந்தே. இதற்கு அறிகுறியாக யஜுர் வேதத்தில் மந்திரங்களில் மத்தியமத்திலிருந்து நிடமென்று பஞ்சமத்துக்கு ஸ்வரம் இறங்குகிறதைப் பார்க்கலாம்.

க்ரகங்கள் ஒன்பது என்றல்லவா நாம் கொள்கிறோம்? அதுபோல ஸ்வரங்களில் ஒன்பது உண்டா என்றால், உண்டென்றே சொல்லலாம். சப்தஸ்வரங்களில் ஒன்றாகிய நிஷாதமென்பது கைசிகி நிஷாதந்தான். மத்தியமமென்பது சுத்தமத்தியமந்தான். இந்த இரண்டிலிருந்து இராகு கேதுக்களைப் போலக் காகலிநிஷாதமும் பிரதிமத்திமமும் ஏற்பட்டன. இவ்வாறு ஸ்வரங்களின் அமைப்பானது நவக்ரகத்தின் சேர்க்கையைப் போல இருக்கிறது. நவக்ரகங்கள் பன்னிரண்டு இராசிகளில் சஞ்சாரம் செய்வதைப்போல இந்த ஸ்வரங்களும் பன்னிரண்டு ஸ்தானங்களில் சஞ்சாரம் செய்கின்றன. சிலப்பதிகாரத்தைப் போல சங்கீதத்துக்கென்று அமைந்த அருமையான நூலை எந்த பாஷையிலும் பார்க்கமுடியாது. அதில் சொல்லப்பட்ட எவ்வளவோ விஷயங்களை நாம் இன்னும் நன்றாக அறிந்துகொள்ள முடியவில்லை.

## தேவாரம்

வெகு காலத்துக்குப் பிறகு சற்றேறக்குறைய ஆயிரம வருஷங்களுக்கு முன்பு இருந்த மகா பக்தர்களாகிய பெரியவர்கள்—தேவார திருவாசகத்தின் காரணபூதர்களாகிய பெரியவர்கள்—தோன்றித் தமிழ்ப்பாட்டுகளைத் தாளத்தோடும் இராகத்தோடும் பாடியிருக்கிறார்கள். அவற்றிற்குப் பண் வகுக்கப்பட்டிருக்கிறது. பண் என்பது மேளகர்த்தா இராகம். திறமென்பது ஜன்ய ராகம். தேவாரங்களில் சொல்லப்பட்டுள்ள பண்களின் பெயர் மிகவும் அபூர்வமாக இருக்கும். 'பழம்பஞ்சுரம் தெரியுமா?' என்றால் பரிகாசம் செய்வார்கள். இப்பொழுது வடமொழிப்பேருள்ள ராகங்களே வழக்கத்தில் இருக்கின்றன. பண்களுக்கு அந்த இராகங்களிற் சிலவற்றைப்பாடுகிறார்கள். நட்டராகத்துக்கு நாட்டையே பாடுகிறார்கள். தக்கேசிப் பண்ணைக் காம்போதியில் பாடுகிறார்கள். அந்த அந்தப் பண்ணுக்கு ஏற்பட்ட பழைய கட்டுப்பாடுகள் வேறு இருக்கவேண்டும். அவை இப்பொழுது தெரியவில்லை. ஆனாலும் பழையகால முதற்கொண்டு தேவாரங்களைப் பாடிவரும் முறை ஒன்று இருக்கிறது. அதை நான் கேட்டிருக்கின்றேன்.—"கலைமகள்"

# இடியேறு

## பூகம்பம்

வட இந்தியாவில் நேர்ந்த பூகம்பத்தின் பயனாக ஆயிரக் கணக்கான மக்கள் உயிர்துறந்தார்கள்; ஆயிரக்கணக்கான வீடுகள் குலைந்தன; சில கிராமங்கள் பாழாயின. முசபாபூர், மாங்கிர் முதலிய பதிகளின் நிலை, மிக இரங்கத்தக்கதாயிருக்கிறது. நாளுக்கு நாள் மரணத் தொகை பெருகியே வருகிறது. இது காறும் இறந்தவர் தொகை பதினாயிரம் என்று தெரிகிறது. இன்னும் நாள் ஏற ஏற மரணத் தொகை, கணக்கில் எவ்வளவு பெருகுமோ தெரியவில்லை. மாண்டவா போக, மற்றவர் நிலை எப்படியிருக்கும் என்பதை விரித்துரைக்க வேண்டுவதில்லை. வீடின்றி, வாசலின்றி, உடையின்றி, உணவின்றி, வெயிலால் உலர்ந்து, மழையால் நனைந்து வாட்டமுற்றுத் தவிக்கின்ற மக்களின் தொகை இலட்சக் கணக்கிற்கு அதிகமாக இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. இந்நிலையிலுள்ள மக்களுக்கு உதவி செய்வது சிறந்த ஜீவகாருண்ய மாகும். தேசபக்தர் இராஜேந்திர பிரசாத், துன்பக் கடலில் மூழ்கியுள்ள மக்களுக்கு உதவி புரியுமாறு விண்ணப்பஞ் செய்துள்ளார். அவ்விண்ணப்பத்துக் கிணங்கிச் சென்னை "ஹிந்து" பத்திராதிபர் உழைக்க முன்வந்திருப்பது போற்றத்தக்கது. அன்பர்கள் தங்கள் தங்களாலியன்ற பொருளுதவியை "ஹிந்து" பத்திராதிபர் வாயிலாக வட இந்திய மக்களுக்கு உதவி செய்யுமாறு வேண்டுகிறோம்.

## எஸ். ஜி. கிட்டப்பா சரித்திரம்

திரு. எஸ். ஜி. கிட்டப்பாவைப் பற்றி அறியாத தமிழர் அரியராகவே இருப்பர். நாடக உலகில் இளமை வயதிலேயே பெரும்புகழை நிறுத்தியவர் திரு. கிட்டப்பா ஆவர். அவர் தமிழுலகத்தின் உள்ளத்தையே கவர்ந்தவர் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அத்தகைய ஒருவா, தமது இருபத்தெட்டாம் வயதில் இவ்வுலக வாழ்வை நீக்க நேர்ந்தது நாடகத் தமிழுலகின் தவக்குறைவே என்று கூறல் மிகையாகாது. காலஞ்சென்ற கிட்டப்பாவின் சரித்திரம் பொதுவாகத் தமிழிளைஞர்கட்கும், சிறப்பாக இசையிலும் நாடகத்திலும் ஈடுபட்டுள்ளோர்க்கும் ஒரு பெரும் எடுத்துக்காட்டாக விளங்கும் என்பதற்கு விரிவுரை வேண்டுவதில்லை. இப்பெருநலனை உலகம் துய்க்கக் கிட்டப்பாவின் கெழுதகை நண்பருள் ஒருவராய ஆக்கூர் திரு. அனந்தாச்சாரியார் செய்தமை குறித்து அவரைப் பாராட்டுகிறோம். திரு. அனந்தாச்சாரியார் தேசபக்தர்; காங்கரஸ் ஊழியர்; இளைஞருலகில் ஒரு மணி எனத் திகழ்பவர். இவர், கிட்டப்பாவின் சரித்திரத்தைத் தமிழுலகிற்கு நன்முறையில் வழங்கியுள்ளார். சரித்திரம் சீரிய முறையில் எளிய நடையில் எழுதப்பட்டிருக்கிறது. தமிழுலகம இந்நூலை ஆதரிப்பதாக. விலை அணா 2. கிடைக்குமிடம்:— ஆக்கூர் அனந்தாச்சாரியார், 4, ஆரிமுத்து மேஸ்திரி தெரு, திருவல்லிக்கேணி, சென்னை.

## குலோத்துங்க சோழன் பிள்ளைத்தமிழ்

இந்நூலாசிரியர், கவிச் சக்ரவர்த்தி ஒட்டக் கூத்தராவார். இதனை, திருவையாறு அரசினர் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் திரு. எல். உலகநாதபிள்ளை அவர்கள் நன்முறையில் செப்பஞ் செய்து வெளியிட்டுள்ளார். முன்னுரையில் இப்பிள்ளைத் தமிழ்க் குலோத்துங்கன் எவன் என்பது விளக்கஞ் செய்யப்பட்டிருக்கிறது. நூலிறுதியில் பாட்டு முதற்குறிப்பும், சொல்லகராதியும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இப்பிள்ளைத் தமிழ்க்கண் சரித்திரக் குறிப்புக்கள் சில இருத்தல் சிறப்பாகக் குறிக்கத்தக்கது. விலை அணா 8. விலாசம்:— சதாசிவம் பிரதர்ஸ், மயிலாப்பூர், சென்னை.

Registered No. M. 1500.

# நவசக்தி

‘ எவ்வுயிர்க்கும் அன்பாயிரு ’ ‘ என்கடன் பணிசெய்து கிடப்பதே ’

சிலம்பு கச ஸ்ரீமுக௵ மாசி௴ பரல் ச

## பணவிடு தூது

(தொடர்ச்சி)

### சுங்கத்தார் இயல்பு

தனிப்பாதை போவாரைச் சாடையிலே பார்த்து
முனிப்பாய்ச்ச லாய்ப்பாய்ந்து மோதி—யினிக்குங்
கருப்பட்டி யென்னக் கலங்கி வயிற்றில்
நெருப்பிட்டாற் போலவர்கள் நிற்கக்—கருப்பட்டி
கொண்டதெங்கே சீட்டுக் கொடுத்ததெங்கே யாவணங்கள்
கண்டதெங்கே யென்றுசரக் கைத்திறந்து—விண்டதனைக்
கண்டால் விதாயமென்றுங் காணாட்டால் மாயமென்றுங்
கொண்டதவ னைக்கணக்கைக் கூர்ந்தெழுதி—யண்டிவரு
முண்வடிவை யுண்மடிவா யொட்டி வரும்பொருளை
யுண்மடியி லேபோட் டொதுக்கிவைத்து—வெண்மைநிறப்
பஞ்சுப் பொதியைப் பருத்திப் பொதியென்றும்
மஞ்சட் பொதிதுவரை வர்க்கமென்று—மஞ்சாமல்
ஓங்குசம் பைப்பொதியை யுப்புப் பொதியென்றும்
பாங்கா மிளகுபொதி பாக்கென்றுந்—தாங்குகருப்
பட்டிப் பொதியைப் பருந்தேங்கா யென்றுவெல்லக்
கட்டிப் பொதியைக் கடலையென்று—மொட்டிவைத்துக்
கூர்ந்த பொதியைக் குறைந்தகச் சந்தியென்றுஞ்
சேர்ந்தகச் சந்திதனைச் சிற்பமென்று—நேர்ந்ததுறைத்
தாட்டார் கணக்கும்வழிச் சாரிக் கணக்குமற்றைப்
பேட்டைக் கணக்குமொன்றாய்ப் பேர்த்தெழுதிச்—சீட்டுச்சோ
திப்பவரு மெத்துவழித் திண்டரொடு கைக்கூலி
யப்புகரை வாசலம லாளிகளு—மொப்பேறத்
தேடிப் புதைத்துவைக்குஞ் செய்யசுங்கத் தார்தொழிலும்
வேடிக்கை யல்லாற்பின் வேறுமுண்டோ—மாடுவிட்டுச்

### எத்துவழிகள் இயல்பு

சூடடித்த வைக்கலெல்லாந் தூற்றினா லைந்துநெல்லைத்
தேடியெடுத் துக்களவு செய்ததென்றுங்—கூடிக்
கதிரறுத்த செய்யிலே கட்டெடுக்கு முன்னே
யெதிரே யரியெடுத்தா ரென்றும்—முதல்வயலில்

175 ஆடுதின்று வாழை யழிவென்று நெற்கதிரில்
மாடுதின்ற பஞ்சமதி யென்றும்—பாடி
அளந்தபொலி யையள வாப்பொலி யென்றுங்
களங்களிற்போ ரிற்கள வென்றும்—வளர்ந்தகதிர்
மாடுதின்ற தென்று மணியகா ரன்றுடர்ந்துந்
தேடவில்லை யென்றுஞ் செழித்தபயிர்—வாடுதென்றுஞ்
சம்பளநெற் பற்றுந தருணத்திற் கட்டளவாய்
நம்புமம லாளிபற்றி னானென்றுஞ்—சம்பிரிதி
கைச்சீட் டிலாமலதி காரி யுழவடைநில்
வைச்சிட்டுக் கீடாக வாங்கவென்று—முச்சிதங்கள்
180 ஆகுந் தயன்களத்தில் லாமற் கதிரறுப்ப
னேகமாய் விட்டார்கர் ணீகரென்றும்—மாகாணம்
மெங்கும்போய்ப பேஷ்கா ரனுமாய்க் குடிவழியில்
அங்கமொடு நல்விருந்துண் டாரெனவு—மிங்கே
தனிமணிய காரனார்ச் சம்பிருதி யெல்லா
மினியபிரி வுககளந்தா ரென்றுங—கனபிணையற்
பம்பரம்போற் சூடொடாப் படிவிட் டடித்தநெல்லைச்
சமபிருதி மட்டுமளந் தாரென்றும்—அம்பார
வாசியொன்று கண்டதுவே மற்றுமொரு வாசியில்லை
காசலையாய்க் காவற் களவென்றும்—பேசுங்
185 குடிகள் நிலத்தைவலுக் கொண்டம் பலத்தா
ரெடுத்துழுது கொண் டார்க ளென்று—மடுத்தகுடி
யம்பலத்தா ரும்பளச்செய் யவ்வளவுந் தானாகாச்
சம்பிருதி கூட்டியுழு தானென்றுங்—கம்புள்ளி
பார்த்தபுஞ்சை மீது பாராத புஞ்சையெல்லாஞ்
சேர்த்துநாட் டுக்கணக்கன் றின்றதென்றும்—பாத்திரக்கைப்
பண்டாரங் கள்செலவைப் பார்ப்பார் செலவென்றுங்
கொண்டார்கள் சத்திரத்துக் குள்ளரென்றுந்—துண்டரிக
அட்டவணைப் பிள்ளைமார்க் காயமில்லா மற்சரக்கை
விட்டார்கள் சுங்கத்து வீணரென்றும்—மட்டுமிஞ்சி
190 வாயமட்டாய்ப் பேட்டை மணியகா ரன்சரக்கை
ஆயமின்றிக் கொண்டுபோ னானென்றுங்—கோயில்
மணியக் குறும்பனித மண்டபத்தோர் தாசிக்
கிணைசோடாய்ப் பேசினா னென்றும்—பணியும்
குருக்களொரு நாட்கோயிற் கொத்தடிமைத் தாசி
யிருக்குமனை யிற்புகுந்தா ரென்றுங்—கருக்கியெதிர்
பல்லைக் கடித்துப் பருத்தவிழிப் பார்வைகொண்டு
சொல்லையிலே மீசை துடிதுடிக்க—வல்லமையா
யோலை யெழுதுவா ரோடிப்போய்க் கெஞ்சியிரு
காலைப் பிடித்தாலுங் கண்பாரார்—வேலைசூழ்
195 அம்புவியைக் காற்றாடி யாய்ச்சுழற்று மெத்துவழி
வம்பர்பிரட் டெல்லாமுன் மாயமே—செம்புபெறத்

## தட்டார்கள் இயல்பு

தெள்ளுமுய ராபரணஞ் செய்யு முயர்கடுக்கன்
வெள்ளி நகைகளைப்பால் வெள்ளியென்று—முள்ள

சருகுபித் தளைப்பணியைத் தங்கநகை யென்றும்
பெருகியபொன் மாற்றைப் பெருக்கி—யுருகுபொன்னிற்
றுமபிரத்தைக் கூட்டி தணிந்தமாற் றுக்குமுற்றும
மாம்பழத்தைப் போற்பழுக்க வைத்தெடுத்துத்—தாம்புவியிற
சாற்பணமா கத்தேடித தானிருந்தா லுந்திருமபக்
காற்பொன்னின் மாப்பொன் களவாண்டு—மேற்பிரிக்குங்
கள்ளமனத் தட்டான் பசுவென்றுற் காதறுத்துக்
கொள்ளென்பான் காதறுத்துக் கொண்டாலு—முள்ளாகச்
செவ்வரக்குப் பாய்ச்சுந் திருடர் திருடரென
விவ்வுலகந் தூற்றவைக்கு மெங்கோவே—யொவ்வுவிலைப்

## வணிகர் இயல்பு

பொக்குமுததை யாணிமுத்தாய் யாணிமுத்தைப் பொக்குமுத்தாய்
விற்கவிலை கொள்ளவிலை மேவுவதுந்—தககரத்னக்
கல்சாயக் கல்லிரதனக் கல்லாக வெல்லமையாய்
சொல்சாடை கண்டுவிலை தோற்றுவதுஞ்—சொலசாய
மண்பவ ளத்தை மணிப்பவள மென்றுமணித்
திண்பவள மண்பவளச் சேர்க்கையென்றுங்—கண்பார்க்கும்
வச்சிரத்தை யேதரிப்பாய் மாதரிப்பை வச்சிரமாய்ப்
பச்சைகறுப பூனமாய்ப் பார்த்தகற்றி—மிச்சமாக்
கொள்ளும் வராகனிலே குற்றென்றும் நீள்பரங்கிக்
கள்ளவரா கன்மாற்றுக் கட்டையென்றும்—வெள்ளைக்
கலியைச் சுழியாய்ச் சுழியைக் கலியாய்
மலியத் துறைதோறும் வாங்கி—நலியாமல்
வட்டமே கட்டி வணிகர் குடிவளரச்
செட்டு நடத்திவைக்குஞ் சீமானே—நெட்டுலகில்

## வாதிகள் இயல்பு

சரக்கோ ரறுபத்து நான்கதனில்
சரக்கறிந்து தேடிவந்து—நீடுபுகைக்
கட்டினு லுண்டாகுங் காரிய மென்றுகள்ள
மட்டிகள்சொல் வார்த்தைவிசு வாசமென்று—பெட்டையாங்
கன்னங் கரிய கருங்கோழி வாய்பிளந்து
பொன்னரிதா ரத்தைப் புகட்டியே—பின்னுமதன்
எச்சத் துடனே யெலுமிச்சங் காய்ச்சாறு
பச்சிலையின் சாறூர் படிவிட்டுக்—குச்சிலாற்
கிண்டிவெயி லில்வைத்துக் கிட்டத் துடனரைத்துக்
கொண்டுவில்லை தட்டிக் குகையில்வைத்து—மண்டுதழல்
மூட்டி யுலைமுகத்தில் மூன்றுசா மஞ்செயநீ
ரூட்டி வயிறாத வூதியே—மீட்டெடுத்துக்
கட்டியாய் நின்றதைக்கண் கண்டுகுரு வென்றுமெல்லத்
தட்டிப் பணவிடையுந் தானெடுதது—திட்டமாய்ச்
செம்புருக்கிப் பத்திலொன்று சேர்த்துக் கொடுத்திடவு
மெம்பெருமான் நீயங் கெழுநததுபோல்—நம்பியெதிர்
கண்டுருகி யானந்தக் கண்ணீர் கரைபுரளக்
கொண்ட பரவசத்திற் கூத்தாடித்—தெண்டனிட்டுக்

கைகட்டி வாய்புதைத்துக் காணக்கா ணப்புளக
மெய்கொட்டு ரோம மிகச்சிலிர்த்து—வையகத்தில்
பொய்க்குருவை நமபிவீண்போ னேனென்று சற்குருவாம்
மெய்க்குருவை நீயென்று வீழ்நதிறைஞ்சிக—கைக்கு
ளெடுத்திரண்டு பஙகி லிணக்கொருபங் குத்தாய்
கொடுததுத் தகடடித்துக கொண்டு—புடத்தில்
அழுததமாய்ப் போடவுமென் னையனிறம் போலே
பழுத்தமாற் றெல்லாம் பம்மாத்தா—யொழிததுவிட
மெய்முறையே செய்துவநதான் வீண்போகு மோநமது
கைமுறையே தப்பினது காணென்றுஞ்—செய்முறைபின்
பண்ணுவதே வேலையாய்ப் பாஷாண வெம்புகையிற்
கண்ணும் புகைநது கரிவடிவாய்—மண்ணுலகில்
வாதமுனக கேகாட்டு மாநதர் படும்பாடு
சொ ... யாட்டிவைக்குஞ் சூட்சி யன்றோ—ஓதுதிரி

## வைத்தியர் இயல்பு

நாடிகுண வாகடமும நாடி முனிவரெல்லாம்
பாடிய நூன்முழுதும் பார்த்தறிநது—நீடுசாரக்
கத்தனைக்கு மூலிவகை யத்தனைக்கும் பேருரைக்குந்
தத்தமக ராதி தனையோர்ந்து—சித்தர்சொன்ன
சாத்திரமும் பார்த்துத் தயிலமுறை செந்தூரித்தல்
மாத்திரைக் கட்டுவகை வைப்புவகை—நேர்த்தியுள்ள
பற்பவகை யெல்லாம் பழகினவர் போறபேசிக்
கற்பமுறை யிற்கொஞ்சங் கைகாட்டி—யற்பகலா
மாத்திரைப்பை யுங்கையு மாக மனைதொறுஞ்சென்
றுத்திரமுள் ளோரெவரென் றாராய்ந்து—வார்த்தையினல்
கண்டுவியா திக்குணத்தை கைத்தாது வாலறிந்து
கொண்டது போற்குணத்தைக் கூறியே—கண்டநோ
யற்பமிது சொற்பமருந் தாற்றீரு மென்றுசொல்லிப்
பற்பலக ஷாயமுறை பண்ணியே—சற்பனையாய்
நோயை வளர்த்துவிட்டு நோக்கந் தெரிந்தினிக்க
ஷாயமுறை யாற்றீரத் தக்கதில்லைத்—தூயலிங்கக்
கட்டடனே மாத்திரையிற் கைவைக்க வேணுமுமக்
கிட்டமென்ன சொல்லுமென வேங்கியே—மட்டுமிஞ்சிப்
போனல் வராதுநீர் போடுமருந் தெத்தனைபொன்
னுனலுந் தாரோமென் றுற்சரிதா—னனேநோய்
தீர்த்தபின்பு சன்மானஞ் செய்யலாங் கைமருந்தைப்
பார்த்துவிலை தாருமென்று பற்றியே—சேர்த்துவைத்த
மாததிரையெ லாமுரைத்தும் வந்தநோய் தீராம
லாத்திரப்பட் டாலிதென்ன வாச்சரியம்—நேர்த்தியையோ
பத்தியத்தி லேதாழ்வு பண்ணிவிட்டீ ரில்லையென்றுற்
சத்தியஞ்செய் வோமருந்திற் றாழ்வுண்டோ—எத்தனையோ
பாடுபட்டும் வீணுச்சே பாவிகளா வென்றந்த
வீடுவிட்டு மெள்ள வெளியேறி—நாடிநாஞ்
செய்தபா வத்தினுக்குச் செப்புகர்ம காண்டத்தா
லுய்வுளதென் றுன்னிமற்று மோரிடத்திற்—பையப்போய்க்

கைததாது பார்த்துக் கருத்துரைக்கு முன்னமவர்
பைத்தாதை யெல்லாம் பறிமுதல்செய்—தெய்ததோர்
வருந்தியழைத் தாலுமவர் வாசலுக்குப் போகார்
பொருந்தினசெல் வததினர்பாற போய்ப்போ—யிருநதுநயஞ்
செய்யா வயித்தியர்தஞ் செய்கைமுறை யெல்லாமென்
னையாநீர் செய்யும்வினை யாட்டன்றோ—துய்ய

## வித்வான்கள் இயல்பு

இடைவல் லினமெல் லினமாய்தம் புள்ளி
யடிதொடைசீர் மோனை யளபு—முடிவெதுகை
யொற்றெழுதது மெய்யோ டுயிரெழுத்து நெட்டெழுததுக்
குற்றெழுத்தை காரக் குறுக்கமென று—மற்றும்
நகார ணகார னகார ரகார
றகார ளகார ழகார—விகார
வகைபார்த்து நல்ல மதுரம் புகட்டித்
தொகைபார்ததுக் கற்பனையைச் சூட்டி—மிகவு
மிலக்கணத்துக் கொவ்வி யிருந்தாலு முன்றோ
ரிலக்கியமு மொவ்வி யிருப்ப—விலககறியா
மூடரையே கும்ப முனியென்றும் பாழ்த்தகுணக்
கேடரையே வில்லிற் கிரீடியென றுந்—தேடியொரு
காசுங் கொடாதாரைக் கன்னனென்றும் பொய்சொலும்பி
சாசரையே சொல்லிலரிச் சந்த்ரனென்றும்—வீசு
மெழுத்தாணி தேய வெழுதிப் பனையுங்
கழுத்தா னெனச்சாய் கழுத்தா—யழுததமிட்ட
செநதமிழைக் கொண்டு தெருக்க டெருக்கடொறு
மங்கைதக டோறு மனைகடொறு—மந்திசந்தி
கொண்டுசெல்லும் போதொளிததுக கொண்டிருநத லுத்தரையுங்
கண்டுமுகம் பாராக் கருத்தறிநது—பண்டை
வசைப்பாடல் சற்றே வருவித தவர்மே
லிசைப்பாட லிற்சற் றியம்பிப்—பசப்பி
இணக்க முறத்துவளு மீயக் கதிரைக்
குணக்கெடுத்தாற் போற்றிருத்திக் கொண்டு—மணக்கப்
படிக்கும பொழுதுமது பாட்டை நிறுத்தும்
படிச்செலவுக் காயினும் பத்தஞ்சு—கொடுக்க
வகையில்லை யிவ்வேளை வாயாது போம்போங்
துகைபலனில் வாருமென்று சொல்லத்—திகிரென்று
நாளைவா வென்றகொடை நன்றல காணிதுவே
வேளைநமக் கென்றுமெத்த மேல்விழுந்து—மீளத்
திரும்புந் திரும்புந் திசைபாடிக் கன்னெஞ்
சிரும்புங் கரும்பாவி ணக்கிப்—பெரும்புவியைச்
சுற்றிப் புலவர் சுழல்வதெல்லா முன்னைமெள்ளச்
சுற்றுதற்குக் கற்ற தொழிலன்றோ—வெற்றிபெற

## மடாதிபதிகள் இயல்பு

உத்தியோ கத்தி லொருமிக்கக் கொள்ளைகொண்டு
மெததவடி பட்டுவிடு பட்டவரும்—மெத்தப்

பெருநதீன் கிடையாத பேரு மினிநா
மிருநதால் முழுமோச மென்று—தெரிந்துமண்ணில்
ஓடும்பொன் னுமகருத்தி லொருகக் கண்டவர்போற்
றேடிப் பதினாறு தீகைஷபெற்று—நாடித்
திருவா சகம்படித்துத் தேவார மோதிப
பெரிதான காஷாயம் பெற்றுச— சரியாய்ப்
புலியா தனமவிரித்துப் புத்தகங்கை யேந்தி
நலியாமல் நாசிநுனி நாடிப்—பலகைபோட்
265 டேறி யொருபலகை யிற்சாய்ந்து சொர்க்கமுத்திப
பேறுதரு வாரைப்போற் பேச்சிட்டு—நூறு
செபமணிகைக் கொண்டு திருநீறு பூசிக்
கௌபினமைந தாறேழு கட்டித்—தவறாமல்
அந்திசந்தி மூழ்கி யனுஷ்டானம் பண்ணியொளி
முந்தியகண் மூடி முணுமுணுத்து—வந்து
சிறிய வரைபெரியோர் தெண்டனிட்டு மன்னே
யிறுகருத்தி ராக்கமணி யிட்டு—முறையாய்
இலக்கண சாமி யிலக்கிய சாமி
மலைச்சாமி வாய்மவுன சாமி—பிலத்தகர
270 பாத்திர சாமி பலகாரச் சாமிசா
சாத்திர சாமி சடைச்சாமி—மாத்தின்னு
மொட்டைத் தலைச்சாமி முண்ட விழிச்சாமி
பட்டத்துச் சாமிவற்றுப் பாற்சாமி—குட்டைக்
கருஞ்சாமி செஞ்சாமி கற்பமுறைச் சாமி
பருஞ்சாமி யென்றுபல பேரா—யிருந்து
மறுவிலா நீண்டதலை வாழையிலை போட்டுக்
குறுணியரி சிச்சோறு கொட்டிக்—கறியின்
பொரியல் குழம்பு புளிக்கறிநெய் பால்மோர்
கரியல் பொடித்தூவல் கைதுதல்—பெருகுதயிர்
275 பச்சடி கூட்டுக் கறிபருப்பு மீளநீர்
வச்ச குளகறிது வட்டலெல்லா—முச்சூடும்
மொத்தை யடித்து முழுப்பூ சணிக்காய்போ
லத்தாள மென்றதற்குப் பேரிட்டு—மெத்தக்
குரல்வளைகூத் தாடக் குலுக்கி நெளித்துப்
பொருமிவயிர் வில்லேற்றம் போலப்—பருமுரட்டுத்
திண்டுபோல் வாய்நிறையத் தின்ற கழுகுபோல்
விண்டிரையெ டுதத விரியன்போ—லுண்டு
பலகாரத் தம்பிரான் பக்ஷணம்நெய் நாழி
யலகாரத் தின்னுமவற் றாணி—குலைவாழைத்
280 தீங்கனி நூறுபத்துத் தேங்கா யிருநூறு
மாங்கனி முக்குறுணி மாப்பிட்டுத்—தேங்குழலே
ழுப்ப மெழுவ ததிரசங்கள் முந்நூறு
முப்பதுமூந் தந்தோசை மொக்கிமொக்கி—யப்பப்பா
இங்கித்தி பட்டினியு மிப்படியே யத்தாளத்
தங்கித்தி பட்டினியு மப்படியே—யெங்குமிந்தக்
கீர்த்திவிர தம்போற் கிடையாதென் றோதுவா
மூர்த்திகள்கும் பிட்டு முழங்கவே—பார்த்துச்

செவிக்கடிக டித்துத் திருகுதா ளஞ்செய்
தெவர்க்கும் பொடிப்போட் டிணக்குஞ்—சிவத்த
உடையா ரிறுமாப் புடையார்சோ றுண்ணச்
சடையாரோர் கூடைச் சடையார்—இடைவழியில்
நேர்ந்துகும்பிட் டார்க்கொன்று நின்றுகும்பிட் டார்க்கொன்று
வீழ்ந்துகும்பிட் டார்க்கோர் விதமுமாய்—வாழ்நது
மணத்தா லுயர்நத மடபதிக ளெல்லாம
பணத்தாசைக் கான பயிலே—மணத்தநறுங்

## தாசிகள் இயல்பு

கெந்தபொடி பூசிக் கிளிப்பிள்ளை போற்பேசி
மந்தநடை காட்டி மதிமயக்கி—விந்தைச்
சரிகை ரவிக்கையிலே தானே பிதுங்கி
வருமுலையி லொன்றை மறைத்து—மருக
வொருமுலையைக் காட்டி யுடைநெகிழ விட்டு
நிரைநிரைபொன் மோதிரக்கை நீட்டித்—தெருவீதி
அந்திசந்தி போய்ப்பிலிக்கி யாடவரை யுள்ளாக்கி
வந்து கலவி வகைதொடுத்து—முந்தத்
தனித்திரையும் போட்டுக் தனியிரா முற்றுந்
தனித்திரையும் போட்டிருகை தாங்கி—மனதிரமாய்க்
கோல்பிடித்த பேர்க்குங் குணம்பிடித்துக் கால்பிடித்து
மேல்பிடித்துக் காம வெறிபிடித்து—மால்பிடித்து
மோட்டாள் பிடித்து முலையைக் கசக்கியடி
போட்டாலுங் கூடப் பொறுத்திருந்து—காட்டானை
யுண்ட கனிபோ லுடல்வெளுத்துக் கண்சிவந்து
வண்டு சுவைத்த மலராகி—மண்டி
விளக்கமட்டில் வேர்வை வடிவடிய வெள்ளி
முளைக்குமட்டுங் காமவெள்ள மூழ்கி—வளப்பணமென்
பாஷாண மென்றுபல பாசாங்கு சொல்லியப்பாற்
காசலையாய்க் கூலிக்குங் கைகாட்டிப்—பேசிமெத்தத்
தாயு மகளுந் தனித்துக் கவுத்துவமாய்
மாயவலை பூட்டி மருந்திட்டுப்—பேய்பிடித்த
கோட்டாலை யென்றுமிகக் கோடங்கி யென்றுமவள்
பாட்டன் குடைவாட் படையென்று—மாட்டிவைத்த
நட்டுவனார் கூலியென்றும் நல்லகொச்சி மஞ்சளென்றும்
பட்டுப் புடவையென்றும் பாக்கென்றுங்—சட்டையாய்க்
கேட்பதுவுங் கட்டிலுக்குக் கீழே யொருவனைவைத்
தாட்பார்த்துப் பின்னே யழைப்பதுவும்—நாட்குநாட்
சாமத்தி லேசிலபேர் சாயங்கா லஞ்சிலபேர்
மாமத்தி யானம்வரு வார்சிலபேர்—தாமருவ
லுன்னி யவரவருக் குத்தரிக்குந் தாசிகடான்
பொன்னுக்கோ வந்தூதும் பொக்குக்கோ—இந்நிலத்தில்

## உலோபியர்கள் இயல்பு

வாய்க்கிலையுஞ் சோறும் மருந்தாகி வாய்விளங்கப்
பாக்கிலையுஞ் சென்மப் பகையாகிச்—சேர்க்கையால்

வேறுகூ றானதுணி மேலுடுத்தித் தந்தலையில்
தாறுமா றானதுணி தான்சுற்றிக்—கூறும்
புலவர்செல வென்றுவந்தாற் போம்போ மெலிக்கே
செலவுநமக் கேது சிலவே—கலகலெனச்
சள்ளிட்டுச் சண்டையிட்டுத் தர்க்கமிட்டோ ராணையிட்டுத்
தள்ளிக் கதவடைத்துத் தாழிட்டு—மெள்ளப்
பரணின்மே லேறிப் படுத்துவரும் பாதை
யுறவணைவிட் டுப்பார்த் துசாவி—யறத்தவிக்கும்
பொய்விடா லுத்தர்படும் புண்பாடெல் லாமுனைத்தான்
கைவிடவு மாட்டாக் கருத்தன்றோ—செய்முறையா[ற்]

## பட்டாளஞ் சிப்பாய்கள் இயல்பு

கான்மாறி வைக்குமுறை கற்பித்தான் கைப்பிரப்பங்
கோல்மாறி முன்னே குறிகாட்ட—மேன்மைத்
தரங்காட்டி வார்வெடிகை தாங்கிமுறை காட்டிக்
குரங்காட்டம் போலாட்டங் கொண்டு—பருங்கை
வெடிகள் பளபளென மின்னப்பி ரங்கி
யிடிக ளெனவேட் டெழும்பத்—துடியா
நெருச்சேறும் போது நிறைந்தபுகைக் காட்டிற்
பெருச்சாளி போற்கண் பிதுங்கி—நெருப்பாறு
தன்னில் மயிர்ப்பாலந் தான்போட்ட தென்னவுடல்
வின்னமிட்ட பேரை மிதித்தேறி—முன்னே
அகழியிற் றள்ளாடி யமிழ முடிக
டகரவைத்த வேணிதலை சாயத்—திகைதிகையிற்
கோட்டையின்மே லேறிநெடுங் கொத்தளத்தின் மேலேகை
போட்டபொழு தொன்னார் புரட்டிவிட—நீட்டு
தலையுடன் கைவீழத் தானே யுடலும்
விலகுமலை போற்புரத்தில் வீழ—வுலகிலிந்தப்
பாடெல்லா மார்க்காகப் பட்டுக் கொடுப்பதின்பத்
தாடாளா நின்னாலே தானன்றோ—ஓடியே

## பலமுறை இயல்பு

நஞ்சுகக்கிக் கொத்தவரும் நல்லபாம் பைப்பிடித்துக்
கொஞ்சியொரு முத்தமிட்டுக் கொள்வதுவும்—வெஞ்சினத்தாற்
போராடும் வேங்கைப் புலியை யிணக்குவதுங்
காரார் கரடியைமற் கட்டுவதும்—பாரறியக்
காமகண்டம் நீங்கக் கருதுந் தவத்தினர்போ
லோமகுண்ட மூழ்கி யுலவுவது—நேமுகத்தார்
தண்ணீர்மேற் பாதுகையிற் றானே நடப்பதுவுந்
தண்ணீரிற் சோறு சமைப்பதுவுங்—கண்ணைப்
பிடுங்குவதும் வாயைப் பிளந்துசீத் தென்னக்
கடுங்கொடிய பாம்புகளைக் க்க்கி—யொடுங்க
விரதமுளங் கைக்கு ளிறுக்கியே செப்பில்
அரியமணிப் பந்துபல வாடி—யெருமைக்
கடாவை விழுங்கிக் கடப்பாரை தொண்டை
படாமல் விழுங்கிப் படுத்துத்—தொடாமல்

எழுதா யிரத்தெட் டடிக்கம்ப மேறிச்
செழுங்கதிர்வாள் கவ்வித் திருகி—விழுந்திடா
லாகுகொண்டு சுற்றியக லாதுபாராக் கென்றுவான்
மேகமொன்று கீழாக வீ[ழ்]ந்ததுபோல்—வாகொடுசெய்
யாரியக்கூத் தாடு மனந்தவித்தை யெல்லாமுன்
காரியத்தி லல்லாற்பின் கண்ணுண்டோ—நேருக்குங்
கண்ணில்லா மற்பார்த்துங் காதில்லா மற்கேட்டும்
வண்ணமணி கையில்லா மற்கொடுத்து—நண்ணியநா
வில்லா துரைத்திருகா லில்லா நடந்துலக
மெல்லாந்தா னாகி யிருக்கின்றாய்—சொல்லுங்
குருவில்லா வித்தையிலே கோமானே யுன்னால்
இருநிலத்தி லாகாதொன் றில்லை—தரையிற்
பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லைபொரு ளென்ற—உரைபோல்
யோகசம்ப்ர தாய உபாயசமா தானிநீ
யாகையினால் யானொன் றறையக்கேள்—வாகாய்

## பாட்டுத் தலைவன்

இணங்குங் கனகமலை ஏந்துரகக் கோவும்
வணங்குங் கனகமலை வள்ளல்—அணங்கனையார்
மின்னே ரரசர் விருந்தேற வீடெல்லாம்
பொன்னேறத் தென்னன் புகழேற—மன்னுசுரம்
தாழ்வேறப் புத்தர்கழுத் தானேறச் சைவமதம்
வாழ்வேற வேடேறும் வைகையான்—தாழ்விலா
அன்ன மடைகிடக்கு மாரன் கருவெனக்கொண்
டன்ன மடைகிடக்கு மார்ப்பிலங்க—மின்னுமணி
வீசவய லெல்லாம் விளங்குகுமு தங்கமலை
வாசவய லெல்லாஞ்செவ் வாய்விள்ளத்—தேசமெங்குஞ்
செந்நெற் கதிரினுற்ற தேன்கூட்டி னாலதனைப்
பின்னுமுன்னு மூன்றும் பிறைகிழிக்கச்—சொன்னயத்துப்
பன்னு தமிழ்மணக்கப் பாரோர் புகழ்மணக்க
நன்னெறிசேர் பாண்டிவள நாட்டினான்—பொன்னனையார்
ஆடிய மஞ்சணீர் ஆற்றாற் கரியகடல்
நீடிய சொர்ன நிறங்காட்ட—மாடமெல்லாம்
தண்ணார் சுதையொளியாற் றந்த வளங்களெல்லாங்
கண்ணா யிரத்தான் களிறொப்பப்—பண்ணாறும்
வெண்டா மரைமீது வெள்ளோதி மம்பயிறல்
வண்டா ரணிந்தகலை வாணியொப்ப—விண்டமலர்ச்
செந்தா மரைமீது செங்கா லனம்பயிறல்
சந்தான மானதிருத் தையலொப்பக்—கொந்தாரும்
பைங்குவளை மேலே பயிலோ திமங்களெலா
மங்களஞ் சேரிமைய மாதையொப்ப—வங்கரையில்
தானா டிலங்குசங்கந் தண்வருண னோடுகங்கை
மானாடி வீசும் வளையொப்ப—மீனலம்பத்
தம்மா லொருங்கு தரளவாய்க் காகமெல்லாம்
அம்மா னதவாவி யன்னமொப்பச்—செம்மணிகள்

மேல்கடல்போய் வீழ்ந்த வெகுநாட் கதிர்களெல்லாஞ்
சாலுமலை யாலொதுங்குந் தன்மையொப்பக்—கோலப்
பருஞ்சிகர மேலே பதித்தமா ணிக்கங்
கருங்கடலைக் செங்கடலாய்க் காட்ட—அருந்தவஞ்செய்
வேதமுனி யோர்களெல்லாம மேன்மை செயராம
நாதமுனி பால்வந்து நட்பிருக்க—நீதியுள்ள
புண்ணியதீர்த் தங்களுடன் பொல்லாத பாவமறப்
பண்ணிய தீர்த்தங்கள் பலவிளங்க—விண்ணிலுற
உன்னுகநத மாதனவெற் புச்சிமிசை கந்தருவ
மன்ன னெடுநாளும் வந்துநிற்கத—தன்னொருநின்
பின்னூச லாடிப் பெருங்குழைக ளாடிவரப்
பொன்னூச லாடிமின்னார் பூரிக்க—உன்னி
யுதயவரை மட்டு முதைந்தோடி மின்னார்க்
குதயவரை யீதெனவே யோங்க—நிதமும்
பருநதூச வெங்கலையைப் பத்துருவாய்த் தந்த
விருந்துவசஞ் செய்வமென வீசத்—திருந்தவருஞ்
சீர்நடததச் சேதுபதி செங்கோல நடத்தவென்று
பேர்நடத்துந் தேவைப் பெருநகரார்—வார்நடத்தித்
தண்டைகள்கு லுங்கவொளி தங்குதரி சுங்கமுற
வெண்டய முழங்கநெடு விண்டலமும்—மண்டலமும்
அண்டமுக டும்படிய டங்கலும்ந டுங்கவெழு
கொண்டனிகர் கொண்டுவிசை கொண்டுமுனை—மண்டிவர
இந்திர னிருந்தனத னின்பவரு ணன்சமனும்
வந்திடுத னஞ்சயன்வ ரும்பவன—னுந்திடமும்
ஒன்றுபட மந்திரமு மூன்றிடவெ ழுந்தகதிர்
நின்றிடவெ ழுந்தலைநெ டுங்கடல—கன்றுசம
னுந்தனத னும்பிரம னுந்துளப னும்பரம
னுந்துருவ னுங்கனக னும்பனக—னுந்திருகு
பம்பரமெ னும்படிசு ழன்றிட நடம்புரிகு
சும்புமிகு வேகத் துரகத்தார்—பம்பறிவு
சாரும் புனிதத் தவர்பாற் பெருங்கருணை
வாரிபொழி யுந்தவள வாரணத்தார்—நேராக
வந்திரைக்கு நாளு மருகா மடைதிறக்க
வந்திரைக்குந் தேன்கொன்றை மாலிகையார்—முந்துவெற்றி
விம்மு தியாகம் விவாகந தழைத்தோங்க
மும்முர சங்குமுறு மூன்றிலார்—செம்மையார்
மாவிக் கொடிய மகரக் கொடிவணங்குங்
காவிக் கொடிபடைத்த கண்ணுதலார்—பாவனையார்
சேணிலத்து மீதுதவஞ் செய்யுமன்பர் மீதுதினம்
ஆணை கடவா வருள்பரமர்—பூணும்
ஒருகொம்பா னைப்புடைகொண் டோங்கி வளரும்
இருகொம்பா னைப்பயின்ற வெங்கோன்—வருமதுரச்
செந்தமிழைப் பாடிச் செழுஞ்சங்கத் தேறியிசை
சந்தமிழை யாதிருக்கத் தான்படித்தோர்—முந்தொருநாள்
நாடியபைந் தாமரைக்கண் ணாரணனும் ஆரணனும்
தேடியறி யாத திருவுருவங்—கூடிமனங்

கூரின்ப வாதவூர்க் கோமான் தினம்பணியும்
பேரின்ப ஞானப் பெருவெள்ளம்—பாரமுலை
வம்பிடுமின் னூர்மயலை மாற்றுவிக்க வேணுமென்று
கும்பிடுவோ ருக்குங் குலதெய்வம்—நம்புமன்பில்
எத்திகரும் போற்றிசெயும் என்னப்பன் கண்ணப்பன்
புத்திக்குட் டித்திக்கும் புததமுதம—நிததம்
உருக்கருக்கும் ராகவன்பால உட்பிரம கத்தித்
திருக்கருக்கு மெய்ஞ்ஞான தீபம—கருத்திற்
பலன்பெருமா றண்ட பகிரண்ட மெல்லாம்
புலன்பொறியாய் மேவுபஞ்ச பூதம்—இலங்குதனுக்
கோடிக் கரையிலுள கோடிசீ வன்களுக்கும்
நாடிப் பலன்கொடுக்கும் ராமலிங்கம்—பாடியனறு
பொற்சங்கத் தேறும் புலவர் குழாஞ்சூழ்ந்த
நற்சங்கத் தேறுகின்ற ராமலிங்கம்—விற்குழைதயால்
மோதும் விசையனுக்கு முன்னாள் வரங்கொடுதத
நாதன் தனுக்கோடி ராமலிங்கம்—வேதமுணர்
பாவுறைபிள் ளைக்கறியைப் பண்டுண்ட பாவாணர்
நாவுறையுந் தேவைவர ராமலிங்கம—பூவுறையும்
பானன் மணிக்கண்டன் பவளத திருசசடையான்
ஞானமணி கொண்டதிரு ராமலிங்கம்—பானவிசை
பாடினன் மாரன் படைத்தவமு துண்ணமனம்
நாடினன் தேவைவர ராமலிங்கம்—தேடியே
அந்நாள் இலங்கையிற்சென் றம்மனையுங் கண்டுமணிப்
பொன்மோதிர மீந்த புகழனுமார்—முன்னாளிற்
காலனையும் வேதனையுங் கண்ணா யிரத்தனையும்
வாலிலே கட்டிவரும் வல்லனுமார்—நீலநிற
மாயத் துடியரக்கர் மாளலங்கை யூர்முழுதுந்
தீயைக் கொளுத்துந் திறலனுமார்—நேயமுள்ள
தாய்போல் இறந்ததளந் தான்பிழைக்க வோர்கணத்திற்
போய்மருந்து கொண்டுவந்த பொன்னனுமார்—வாசமலர்
வேண்டிவந்த வீமன் விரும்பிவிசை யன்தனக்குப்
பூண்டதுவ சங்கொடுத்த பொன்னனுமார்—நீண்டதுளை
யீயாட ராக்ஷதனெஞ் செட்டானைக் கொம்புபுறம்
போயோடக் குத்தியகைப் பொன்னனுமார்—ஓயாமற்
கோசலைபா லன்பிரமை கொண்டநாட் காசிலிங்கம்
பூசனைக்காக் கொண்டுவந்த பொன்னனுமார்—வீசித்
தடுத்தரக்க ரெல்லாந் தலைகீழாய் வாரி
யடித்துத் துரத்து மனுமார்—திடத்துடனே
நின்றுமணி வாசலிலே நேயமுடன் தான்வணங்கும்
என்றும் பரம மிராமீசர்—மன்றலூர்
முன்பம் பெருக்கு முடிததுப் புவித்தலத்திற்
கின்பம் பெருக்கு மிராமீசர்—அன்பாகச்
சொக்கரைக்கா யும்புலித்தோற் சோதியளி நாணிருக்கு
மிக்கரைக் காயு மிராமீசர்—மிக்க
நலங்கமழுந் தேவரொடு நாற்றிசையும் போற்று
மிலங்கமழு வேந்துமிரா மீசர்—பலன்கொடுக்கும்

நல்லவரும் போற்றுதிக்கு நாட்டிலுண்டோ வென்றுலகில்
எல்லவரும போற்று மிராமீசர்—சொல்லுங்
கலவிதழை யத்தழையக் கன்மகடன் செவ்வா
யிலவிதழை யுண்ணுமிரா மீசர்—சிலதாவி
வம்பரும்பூ சிக்குளடி வைததேத தவருடன்மற்
றிம்பரும்பூ சிக்கு மிராமீசர்—பம்பு
மருக்கும்பணியு மலர்க்கொன்றை யாயென்
றிருக்கும் பணியுமிரா மீசர்—திருச்சிபெடத
தாடேறப் பார்க்கு ளருளேற வையையிற்சொல்
ஏடேறப் பார்க்கு மிராமீசர்—காடுதிரை
ஆரேறும் வேணி அழகேரும் முன்றொருநாட்
டேரேரும் ஏறும் இராமீசர்—பேருருவாய்
இம்மா னிலத்தி னிலங்குநவ ரத்னமணிச்
சிம்மா சனத்திற் றிகழ்வாகி—விம்மு
மருத்தும்பை கொன்றைவில்லை மாலையொடு சூட்டித்
திருத்தும்பை நாகமணி சேர்த்துக்—கருத்துடனே
ஆணிப் பசும்பொன் னரைநாண் அரையிலிட்டு
மாணிக்கக் கொத்துமுத்து மாலையிட்டுப்—பூணுமணி
மோகனக மாலையிட்டு முத்துக் கடுக்கனிட்டு
மாகனக மாலமட வார்க்கிட்டு—வாகார்
நிலவெனவே தோற்றிடவெண் ணீறிட்டு நெற்றித்
திலகவட்டச் சிந்தூரந் தீட்டிப்—பலவிதமாக்
குஞ்ச நிழற்றக் குலவியபா வாடை மொய்க்க
வஞ்சியர்கள் வெண்சா மரையிரட்டச்—செஞ்சொல்
மறைமுழங்க மேள வகைமுழங்கக் கீத
முறைமுழங்கக் கீர்த்தி முழங்க—நிறையாய்
அனுமானுங் கஞ்சத் தயனுந் துழாய்த்தா
மனுமானை வாகனனும் வாழ்த்தப்—புனிதமன
முள்ளவருந் தேவருடன் உற்றகண நாதனுமான்
வள்ளிமண வாளனொடு வாழ்த்திநிற்கத்— தள்ளிப்
பிரம்படிக டாவப் பெருநந்தி தேவன்
வரம்படிவா ரங்கள் வகுக்கத்—தரந்தரமாச்
சீராடக் கொங்கைச் சிமிழாடக் கோதைப்பூந்
தாராட நாட்டியங்கள் தானடச்—சாரும்
உரகா பரணு வுமையொருபா காசங்
கரகாம நாச கறைக்கண்டா—அரகரம
கேசசர் வேசபர மேசந டேசசந்த்ர
கேசசுந்த ரேச விராமேச—நேச
சர்வசன ரக்ஷகா சாம்பசிவா வென்று
வரிசையாய்க் கட்டியங்கள் வாழ்த்த—வரதமழு
வாமா னணியும் வராம விங்கமெனுங்
கோமா னிருக்குங் கொலுமுகத்தில்—நேமக்
கரும்புருவங் கொண்டிரண்டு கண்ணம்பு தீட்டி
வரும்புருவ வில்லை வளைத்துக்—குரும்பை
முலையானை சற்றசைந்து முன்னடக்க வோர்செம்
மலையார் கதலி வனத்தில்—நிலையாகச்

செய்யு மணிநிதம்பத் தேர்மேற் கொடிதுவள
மொய்கொள் சதங்கை முரசொலிப்ப—வையங்
கழிப்பின்றி நின்றுபண் ணுங் கைம்முறை தப்பா
மொழிச்சங்கீ தந்தான் முழங்க—வொழுக்க
மதன்கலையி னூலெழுதி வைத்தபுத்த கதநுப்
பதமொழி கொண்டு படித்தாங்—கிதமாகி
மெச்சநெஞ்சிற் போட்டகலை மேல்விளங்கக் கொமமைபெறு
கச்சையுறத் தோடிறுக்கிக் கட்டியே—விச்சைமனம்
பூண்டுதனத் தாசைவலை போட்டுளுடை வாவிலங்கை
வேண்டுமிரு சாமிருக வேட்டைக்குத்—தாண்டி
வருவார்போற் செவ்வாய் மயில்போல்மின ணுசைக்
குருவாய் மழலைக் குயில்போல்—மருவியசங்
கீதம் வழுவாக் கிளிபோற் பறந்துதிரி
யாதுமன வாழ்க்கைவிடா வன்னமபோல்—கோதுபடா
மான்போற் றிருத்தா மணிபோல் வழிநதோடாத்
தேன்போ லெழுந்துலவு சித்திரம்போல்—வான்பால்
அடர்ந்து கடையா வமுதமபோற் கொங்கைக்
குடஞ்சுமக்குஞ் சொர்னக் கொடிபோற்—றொடர்நதகலை
வாணிபோற் றாமரைபபொன் மாதுபோற் காதலிநதி
ராணிபோற் காம ரதிப்பெண்போற்—பூணுமலர்
மாலை நிலவெறிப்ப மஞ்சள்வீ சச்சிலம்புக்
காலொலிப்ப மேகலைக வீரென்ன—நீலமுகில்
நட்சத் திரம்போல நாரியர்கள் சூழநடு
உட்சத்தி யான்மிக் கொளிமதிபோல்—பட்சத்
திருகைமுகில் போற்றும இராமீச ரென்னும்
நிருமலனைக் கைகுவித்து நின்றாள்—விரைவிலெதிர்
வந்தாள் விழியால் மருட்டினுள் கையினிற்பூம்
பந்தாடி னுள்பதமும் பாடினுள்—முந்தக்
கரலாகு கொண்டாளோர் கையினில்வாள் வீசித
திரமா யொருலாகு சென்றாள்—அரிவை
யருமா னிதானமா யாடினுள் தேவைப்
பெருமா னிசைவரிசை பெற்றாள்—மருவும்
உமையொருபா கப்பரமா வோங்கார வட்டத்
தமையுருவாய் நின்றருளென் னையா—இமயவரை
மன்னுவென் றேத்திவிடை வாங்கியொரு பாங்கில்வரு
மன்னநடை மங்கையைக்கண் டாசை கொண்டேன்—பின்னுலே
சென்றேன் கனியதரச் செந்தேன் தனக்கிரங்கி
நின்றேனென் யோக நிலைதளர்ந்தேன்—குன்றுமுலைத்
தொய்யுடையாய்ப் பாம்பன் துறையைநீ காட்டிவிட்டாற்
கைவளங்கொண் டக்கரையைக் காணேனே—வெய்யமதன்
பிக்குவராமற் பெரியகண்கள் காட்டிவிட்டாற்
சக்கரைக் கோட்டையின்மேற் சாரேனே—மிக்கவெழின்
மங்காயு ரோமபுர வாழைநடப் பொய்கைகண்டால்
அங்கே யொளித்துவிளை யாடேனே—சிங்கார
வண்டுகொண்ட சோலை மலையும் அழகரையுங்
கண்டுகொண்டால் மோக்ஷநிலை காணேனே—ஒண்டொடியே

நீநிதம்பத் துப்பணத்தை நேராய்த் தரினுனக்கு
நானிதம்பத துப்பணத்தை நல்கேனோ—மானரசே
என்றேன் அவனொரு சிரங்கவில்லை யேமாறி
நின்றேன் மனைபுகுந்தாள் நேரிழையாள்—நன்றாய்த்
திருமாது பாற்றாது சென்றிங்கே கூட்டி
வருவார் ஒருவரிலை மன்னா—அரிவையிடஞ்
சொற்றவரு வன்னதனை தூதுவிட லாமதுபோய்
உற்றவய னித்தை யொதுக்கியே—மற்றுமெழில்
வாகுபெறுந தோகை மயிலைத்தூ தேவிலது
மேகநோக காட்டால் மெலிந்ததுவே—பாகனசொல்
மிஞ்சுபசுங் கிள்ளைதனை விட்டாற்போய் மீண்டுவர
வஞ்சுகஞ் செல்லுமது வாரறிவார்—துஞ்சுங்
கரியமுகி லைததூது கன்னியிட மேவிற்
கிரியிருப்பார் வார்த்தையெவர் கேட்பார்—பெருமை
வடிவில்லாப் பாங்கியைப்போய் வாவென்றாற் சற்றும்
பிடிவாதப் பேசசிணக் [கும்பே]ச்சோ—மடவார்பால்
றெள்ளுண்ட வண்டைப்போய்ச் செப்பென் றனுப்பலாங்
கள்ளுண்டார் பேச்சுநிசங் காணுமோ—தெள்ளியசெம்
பொன்னே அருமைப் பொருளேயென் தெய்வமே
அன்னே அமுதேயென் னாருயிரே—வன்னமணித்
துங்கத் தரளமே சோதிரதன மேயெனது
தங்கத் துரையேயென் சாமியே—இங்கு
மடிச்சேலைப் போற்றிமலர் மாலையிட்டுத் தாங்கி
எடுக்குநர வாகனத்தி லேறி—நடத்திவர
நேருடனே கண்டோர்கள் நின்றெதிரே கும்பிட்டு
வாருமிரு மென்று வரிசையிடப்—பாரில்
நடந்தெவருந் தான்போற்ற நாடுதெரு வீதி
கடந்துமங்கை வாழ்மனையைக் கண்டு—தொடர்நது
பொருமயிற்கட் பாங்கியர்வாய் பூசி யுனது
பெரியதனப் பேச்சினுறப் பேசி—அருமை
தொகச்சொலவித தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாந் தூதென்ற—[முன்]மொழிபோல்
நாதனுயர் தேவைவர ராமலிங்கன் மெய்யருளால்
மாதை மனந்திருத்தி வா.

---

## முன்னுரை

**மா**தைத் - திருவேங்கடநாதர் மீது இயற்றிய பணவிடுதூது பிரசித்தமாய் வழங்குகின்றது. இப்போது வெளியிடப்பெறும் **இப்பணவிடுதூது** இராமநாதபுரம் சேது ஸமஸ்தான வித்துவானாய் விளங்கிய அஷ்டாவதானம் சரவணப்பெருமான் கவிராயரால் இயற்றப் பெற்றது. இவரது காலம் இற்றைக்கு நூற்றைம்பது வருஷங்களுக்கு முன்பாகும்.

இந்நூலின் கடிதப் பிரதி யொன்றை எனது நண்பர் ஸ்ரீ. மு. இராகவையங்காரவர்கள் அன்புடன் உதவினார்கள். அவர்களுக்கு எனது நன்றி உரியதாகின்றது.

S. வையாபுரிப் பிள்ளை.

20—2—34.

# ஐ ய வி

[திரு. சோமசுந்தர தேசிகர்]

நாட்டுப் பண்டங்களிலே ஐயவி என்ெருரு பொருள் உண்டு. இதனை வெண் கடுகு என்றும் சொல்வர். இது கறியில் உபயோகப்படும் கடுகு வகையைச் சார்ந்ததேயாயினும், உணவுவகையிற் சேர்க்கப்படுங் கடுகு சிவப்பு நிறமுடையதா யிருக்க, இதுவோ வெண்மை நிறமுடையது. இது மலைபடு திரவியங்களிலொன்று; சிறு செடிகளாகிக் காய்ப்பது.

"நெடுங்கால் ஐயவி"—மதுரைக்காஞ்சி, 287.

"ஐயவி யமன்ற வெண்காற் செருவில்"
—மலைபடுகடாம், 123.

என்ற அடிகள் இதனை வலியுறுத்தும்.

நாட்டுக்கடுகு, கறிகளில் உபயோகப்பட்டு நறுமணந் தருவதுடன், அது உண்ட உணவைச் செரிக்கச் செய்யுமென்பர் மருத்துவநூலார். 'செய்கை-க்ஷோணகாரி. நேரப்பட வைத்திருந்தால் பொள்ளும், கொஞ்சமாய்ப் போசனத்தோடு சேர்த்துக்கொண்டால் ஜீரணகாரியாகும். 1—3 உத்திரணி அளவுக்கு ஒரு டம்ளர் ஜலத்தில் கலந்து கொடுத்தால் சீக்கிரத்தில் சுகவாந்தியை உண்டாக்கும். வெறிக்கும சாராயம் குடித்ததற்கும், தளர்ச்சியில்லாமல் வாந்தியாகவேண்டியபோதும் இதை வாந்திக்குக் கொடுக்கலாம்' என்பர். இதனை ஆங்கிலத்தில் மஸ்டார்டு (Mustard) என்றும், ஸைநாபிஸ் (Sinapis) என்றும் சொல்லுவர். இனி, வெண்கடுகோ, நாட்டுக் கடுகைப் போல் கறிக்கு உபயோகப்படுவதில்லை. அது 'நெய்யோ டையவி அப்பி' என்ற திருமுருகாற்றுப்படை 228-வது அடியாலும், 'ஐயவி அப்பிய நெய்யணிநெடுநிலை' என்ற நெடுநல்வாடை 86-வது அடியாலும், தெய்வம், வாள் முதலியவற்றின் மேல் பூசப்பட்டு வந்தது தெரிகிறோம். இஃதன்றி 'ஐயவி புகைப்பவும்' (புறம்: 98), 'ஐயவி சிதறி' (புறம்: 281) என்று காணப்படும் அடிகளால் இவை தூபங்களாகவும் உபயோகப்பட்டு வந்தன என்பது தெளிவு.

அதர்வண வேதத்திலும் [viii, 6] கௌஷிதகி முதலாய உபநிஷத்துக்களிலும் இது காப்புப் பண்டமாக உபயோகப் பட்டு வந்ததாக அறிகிறோம். பெண்டிர் முதற்றடவையாகக் கருவுறும்பொழுது அக் கருவினைக் காத்தற் பொருட்டுச் சீமந்தம் என்று ஒரு சடங்கு நடந்து வருகிறது. அதுபொழுது இக்கடுகின்செடிகளில் இரண்டைக் கருவுற்ற பெண்ணின் இடுப்பில் கட்டுவது மரபாக இருந்திருக்கிறது. இதுபொழுது இக்கடுகு ஓமத் திரவியமாக உபயோகப்பட்டு வருகின்றது.

வங்காளத்திலே குழந்தை பிறந்தவுடனே வங்காளியர் அக்குழநதையைப் பூத பிசாசங்கள் அணுகாவண்ணமும், கண் என்ற திருட்டியுண்டாகாமற் பொருட்டும் கடுகைடதத தலையணையைக் குழந்தைக்கு இடுகின்றனர். ஆயினும் இது வெண்கடுகாக இருக்கவேண்டிய நியதி இல்லையாம் இதனை ஆங்கிலத்தில் சார்லக் மஸ்டார்டு (Charlock mustard) என்றும், சகலாத மஸ்டார்டு என்றுங் கூறுவர். இவ்வாறு பலவகையில் உபயோகப்பட்டு வநத வெண்கடுகு இதுபொழுது வழக்காறு அற்று நிற்கிறது.



ஸ்ரீமான் ஏ. அரங்கசாமி ஐயங்கார் அவர்கள்

# பிரிவாற்றாமை

[ஸ்ரீமத் - சிவத்தியானந்த மஹர்ஷி]

பத்திரிகா சங்கமதின் தலைவனாப் பலரோடும் பழகும பண்பின்
இத்தகையர் யாருளரென் றெல்லாரும இயம்பும்வகை யிருந்த நேயன்
ஒத்துழையா மையைவெறுத்தும இந்தியர்க ளொற்றுமையை யுணர்ந்தே நாட்டிற்
குத்தமமா முறையமைக்க ஒன்றல்பல உபாயங்கள் உரைத்த சீலன், ௧

தாஸ்நேரு காநதியிவ ரடியமர்ந்தே அரசியலைச் சரியாய் வைக்கக்
கூசாமற் சுயவாட்சிக் கட்சியினைக் கூர்மதியிற் கொண்டு தந்தோன்,
மாசேது மில்லாத குணமுடையோன், பிற்போக்கை மாற்றும் பண்பன்,
தேசாரும் அரங்கசா மிப்பெயரோன், தமிழ்நாட்டின் சிறந்த செம்மல், ௨

'நேற்றிருந்தான் இன்றகன்றான்' என்றவொரு தன்மையினை நினைக்குங் காலை
ஏற்றிருந்த கடவுளருள் இவ்வகைதா னோவுறுமென் றெண்ணத் தோன்றும்;
கூற்றிருநத பக்கத்தைக் குலைத்தநா ராயணன்பார் கூடி நின்ற
தேற்றரவா ளர்களெலாம் வைகுந்தம் புத்தொளியிற் சிறக்கக் கண்டார். ௩

நித்தியசூ ரிகளென்றுங் காணாத மீனொன்று நிமிர்ந்த வானின்
நித்தியமா ரொளிகால நிற்பதனைக் கண்டவுடன் நிரந்த ரததே
பொத்தியவாய் கரங்களுடன் வைணவம்புத் துயிர்பெற்றுப் பொலியக் கண்டார்
சித்தமதி லடங்காத ஆநந்தம் அவருணர்வைச் சேர்ந்த தன்றே. ௪

"பொருளில்லாச் சிறுகட்டுப் பாட்டுற்றுச் சிதைவுறுதன் பொருவில் பட்டாங்
கொருகறையு மில்லாது பெருமதமாய்த், தழையாலின், ஓங்கி நிற்கத
திருவரங்கப் பெருமானே அரங்கசா மிப்பெயரிற் செனித்தான்; உண்மைக்
குரியபல ரகசியந்தன் வாழ்க்கையமை திக்குள்ளா உணாற்றி நின்றான்." ௫

என்றுபெரி யோர்பலரும், சமரசமார் பெருஞானம் இயைந்த பேரும்,
நன்றுபல புரிவதற்காம் ஊக்கமதை வெளிக்காட்டும் ஞானத் தோரும்
துன்றுதம தரும்போக்குக் கொருசுட்டா மனத்துணர்ந்து தூய வாழ்க்கை
மன்றவிழைத் திடுமுயற்சி கைக்கொண்டார் என்னின்இவன் மகிமை என்னே! ௬

வான்தோன்றும் நாளாகக் கலநதுவிளங் கரங்கனெனும் மதிவல் லோய்!நீ,
ஊன்தோன்றும் உடலெடுத்த பயனதனைப் பூரணமாய் உற்றாய், பின்னர்த்
தேன்தோன்றும் உன்மொழியை உன்நடையைப் பிறர்கண்டு சிறக்க ஆற்றி
மான்தோன்றும் கரத்தணலின் அருள்பெறுவான் வகைபுகன்றாய், மாற்றம் என்னே!



# சுந்தர சுலோசனா

[திரு. தி. ர. சாரங்கபாணி, எம். ஏ.]

(தொடர்ச்சி)

## இதழ் 13

### உலகின் இழிமொழிக்கும் பழிமொழிக்கும் யான் கலங்கவில்லை

"சத்தியநாத! உறங்கி விட்டனையா?

"ஐயா! இல்லை"

"எனக்கு உறக்கம் வரவில்லை. இன்றிரவே சென்று மாயவேடம் பூண்டு உலகை வஞ்சிக்கும் அக் கள்வனைக்கைதி செய்து, அநியாயமாக வீண் பழிகளைத் தாங்கி வதங்கும் சண்முக சுந்தரத்தையும் மோகன சுந்தரத்தையும் அப்பாதகன் காதகினின்றும் மீட்டு, அவர்கள் மீது சுமத்தப்பட்டுள்ள வீண்பழிகளை நீக்கி, சாரதாவுக்கும் சுலோசனைக்கும், சந்திரசேகரப் பிரபுவுக்கும் பேரின்பத்தையூட்டலே சாலவும்அமைவுடைத்தென எனக்குத் தோன்றுகின்றது."

"அப்பொழுது வாருங்கள் உடனே செல்வோம்; மேலும் நடராஜனும் அவனுடைய தோழர்களும் நம் இல்லத்தில் அடைப்புண்டிருத்தலையும் நாம்கவனிக்க வேண்டியவர்களாகவே இருக்கின்றோம். அவர்களை ஏவிய அவ்வாஷாடபூதி, அவர்கள் திரும்பி வாராமையான் வேறு பல சூழ்ச்சிகள் செய்யினுஞ் செய்திடுவான். ஆகையால் நாம் முன்ஜாக்கிரதையாக அவனை ஒடுக்கலே முறைமையாகும்."

சத்தியநாத! தயாநந்தலாலாகவும், ஸ்ரீலஸ்ரீ சச்சிதாநந்த சுவாமிகளாகவும் விளங்கி உலகை வஞ்சித்து வரும் இச் சண்டாளனை - இந்துமதத்திற்கே ஓர் இழிவைத் தேடும் இப்பாதகனை - புறவேடம் பூண்டு உலகை மயக்கும் இக் கள்ளனை - குற்றமற்றவர்களின் மீதெல்லாம் வீண் குற்றங்களையும் பழிகளையுஞ் சுமத்திப் பொருள் பறிக்கும் இப் பேயனை இன்றிரவே கைதிசெய்தல் வேண்டும். இன்றிரவு அவனுடைய இல்லத்திற்குச் சென்றவுடன் அவனுடைய புல்லொழுக்கம் இனிது விளங்கியது. சத்தியநாத! யான் ஆங்குக் கண்டறிந்த உண்மைகளை யெல்லாம் நிதானமாகக் கூறுகின்றேன். நீ உடனே புறப்படு. உன்னிடம் நான் செல்வதன் முன்னர் அளித்த கடிதங்களை நீ ஜாக்கிரதையாக வைத்துக் கொண்டிருக்கிறாயா?"

"ஐயா! அவைகள் மிகவும் ஜாக்கிரதையாகவே இருக்கின்றன; அம்மாயப் புறவேடனால் ஏவப்பட்டவர்கள் என்னைப் பின்புறமிருந்து தாக்கிய வமயத்திலும், அக்கடிதங்கள் என்னுடைய சட்டைப் பையில் இருந்தனவெனினும் அவர்கள் அவைகளை கவனிக்கவில்லை."

"சரி சத்தியநாத! நாம் இப்பொழுது முதலில் கேசவனிடஞ் சென்று, அவனிடம் இப்போலித் துறவியைக் கைதி செய்வதற்குரிய அதிகாரப் பத்திரங்களைப் பெற்றுக் கொண்டு, கேசவனையும் சில போலீஸ் ஜவான்களையும் உடனழைத்துக் கொண்டு ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளின் மடத்திற்கு எழுந்தருளலே மிகவும் நன்றாகும்."

"ஐயா! நாம் செல்வதுடன், சில ஜவானகளை இங்கேவி, அடைபட்டிருக்கும் அன்பர்கள் நால்வரையும், ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்று அறையும் அடைப்பும் உண்டு மகிழுமாறு செய்தல் நன்றென எனக்குத் தோன்றுகின்றது."

"ஆம்! சத்தியநாத, நீகூறுவதே சாலவும் நன்று; அவ்வாறே செய்யலாம்."

* * * *

"அண்ணுவே நின்னடியை அன்றி வேறோர்
ஆதார மிங்கறியேன் நெஞ்சழிந்துதுன்பால்
புண்ணுவேன் தன்னை இன்னும் வஞ்சர்பால்
[போய்ப்
புலர்ந்துமுக வாட்டமுடன் புலம்பி நிற்கப்

பண்ணுதே யாவனிவன் பாவிக்குள்ளும்
படும்பாவிஎன் றெனனைப் பரிகரித்தன்ள
எண்ணுதே யானமிகவும் ஏழைகண்டாய்
இசைககரிய தணிகையில்வீற் றிருககுங்
[கோவே''

—இராமலிங்கசுவாமிகள்.

"உருகா மனமுஞ் சிவஞானம்
உணரா அறிவும் உனதுபுகழ்
ஓதாநாவும் ஓதக்கேட்டு
உவந்தே இனிய நதிபோலப்
பெருகா விழியும் உடையேனைப்
பிறவிக் கடலில் வீழாமல்
பேணி எடுததிங் கெனதுள்ளம்
பிரியா விரிஞ்சைப் பதிவாழும்
முருகா வருக சதுர்வேத
முதல்வா வருக
வினைதீர்க்கும் முனைவா வருக
மலரா றுமுகவா வருக திருமாலின்
மருகா வருக மயிலேறும்
மன்னு வருக அடியார்கள்
வாழ்வே வருக தெய்வசிகா
மணியே வருக வருகவே"

—மார்க்கசகாய தேவர்.

எனக் கண்களினின்றுங் கண் நீர் ஊற்று என வெதும்பியூற்ற, வாடிய முகத்துடன் தன தறையிலமர்ந்து மன முருக சண்முககுந்தரம் பாடிக் கொண்டிருக்க, அவனுடைய தூய அகத்தினின்றும், மெய்யன்புடன் மிளிர்ந்து பக்தி மணம் வீச எழுந்த இன்னிசையைச் செவிமடுத்து, செயலற்றுப் பல வுருவங்கள் அப்பேரிருளில் மரம்போல் மதிமயங்கி நின்றன. சில நிமிடங்கள் கழிநததும், ஓருருவம் ஸ்ரீலஸ்ரீ சச்சிதாநந்த சுவாமிகளின் பூஜை அறையைத் திறந்து கொண்டு சப்தஞ் செய்யாது உள்நுழைய, மற்றும் நான்கு உருவங்கள் முதல் சென்ற உருவத்தைப் பின் தொடர்ந்து உள்நுழைந்தன. ஓர் உருவம் அப்பூஜையறையின் வாயிலண்டைக் கரத்தில் ஆட்கொல்லியைத் திறமையுடன் தாங்கி நின்று கொண்டிருந்தது.

பூஜை யறையின் மின்சார விளக்கின் விசையும அழுத்தப்பட, அறை காலியாகவே இருந்தது. பூஜை அறையையும் தாயாநந்தலாவின் இல்லததையும் பிணித்து நின்ற கதவம தயாநந்தலாவின் இலலத்தின் புறநதாளிடப் பட்டிருந்தது. உடனே முதல் சென்ற உருவம் அக்கதவை பூஜை அறையின் புறநதாளிட்டு விட்டுச சந்தடி செய்யாது அறையை விட்டு வெளிப் போந்து, அம்மடததின் மாடியின் மேல் சிறிது அரவமுஞ் செய்யாது வாசலில் இருந்த இருப்புத தூணைப்பற்றி ஏற,மற்ற உருவங்களும் அவ்வாறே செய்தன.

மடத்தின் மாடியைக் கடந்து தயாநந்தலாவின் மாடியை யடைந்து பூனையைப் போலும் பதுங்கிச் சென்று இருப்புத் தூணின் வழியாக வாசலில் இறங்கி இருட்டில் பதுங்கி நின்றது. அதனைப் பின்பற்றிய மற்ற உருவங்களும் ஒவ்வொன்றாகக் கீழிறங்கி சப்தஞ் செய்யாது முதல் நின்ற உருவத்தின் அருகில் கரத்தில் துப்பாக்கியுடன் நின்றன.

சிலநிமிடங்கள் கழிந்தன. எங்கும் நிசப்தமே குடிகொண்டிருந்தது. மடத்தில் இருந்த பூஜையறைக்கு நேராக தயாநந்தலாவின் இல்லத்தில் இருந்த அறையின் சாரளத்தின் வாயிலாக, ஒரு சிறு மின்சாரவிளக்கின் ஒளியைப் பதுங்கியிருந்த உருவங் கண்டு மிரண்டு பதுங்கின.

"மணி மூன்றாகிவிட்டதே! நடராஜன் இதுகாறும் வராததன் காரணம் என்ன?" என்ற பேச்சரவம் உருவங்களின் செவிகளில்பட்டன. உருவங்களின் கரங்கள் துப்பாக்கியை இறுக்கிப் பிடித்தன. அறையின் கதவநதிறக்கப்படும் ஓசை கேட்டது. உருவங்கள் அவ்வாயிலையே நோக்கி நின்றன.

கதவுந் திறக்கப்பட்டது. அதே நிமிடம் ஒரு மின்சாரக் கைவிளக்கின் ஒளி கதவின் மீது விழுநதது "சுவாமிகளே! தயவு செய்து உம்முடைய திருக்கரங்களை உயர்த்துங்கள்; இன்றேல் என்

கரத்திலிருக்கும் கைத் துப்பாக்கிக்கு இரையாவீர்.'' என்ற வார்த்தைகள் கேட்டன. சுவாமிகளின் திருமேனி நடுக்குற்றது. அவருடைய கரங்கள் உதறலுடன் மேலெழுந்தன. அவருடைய முகத்தில் ஒரு புன் சிறிப்பு நடித்தது. "நீயார்? உனக்கென்ன வேண்டும்?" என்ற கெம்பீர ஓசையுடன் வார்த்தைகளெழுந்தன. அவருடைய நடுக்கம் அவரை நீத்தோடியது.

"சுவாமிகளே! உமமுடைய பேரருளைப் பெற்றுய்யவும உம திருவிளையாடலைக் கண்ணாரக் கண்டு களிக்கவுமே மீண்டுப் போந்தேன்."

"என்னுடைய திருவிளையாடலா?" அவருடைய முகத்தில் தவழ்ந்து நின்ற புன்முறுவல் மறைந்தது அவருடைய வதனம் வதங்கியது.

"என்னுடைய திரு-வி-ளை-யா-ட-லா.

"ஆம் ஆண்டவரே உம்முடைய நெடுநாள் திருவிளையாடலே"

"ஈச! என் அன்பனே! நீயார்?"

"சுவாமிகளே! யானொரு தெய்வப் பித்தேறியவன். ஆண்டவன் திருவுருவைக் காணும் பேரவா பிடர் பிடித்துந்த உம்மையணுகினேன். சண்முக சுந்தரப்பிரபுவுக்கு அறுமுகத் தண்ணலைக் காட்டின விதத்தையைப் போலும் எனக்கும் அருள் புரியுமாறு வேண்டவே உம்மடியடைந்தேன். பேரருள் புரிதல் வேண்டும்."

"அன்பனே! நீ பேசுவதொன்றும் எனக்கு விளங்கவில்லை - உன்னுடைய பெயரென்ன?"

"உம்முடைய அடியனாகிய இந்த நாயின் பெயர் ஜயகுமார...."

"ஆ" என்ற ஒரு பெருஞ் சப்தங் கேட்டது. அடியற்ற பனையென சுவாமிகள் தரையிற் சாய்ந்தார். அடுத்த நிமிடம் அவருடைய கரங்களுக்குக் காப்பிடப் பட்டது.

பிறப்பிறப் பெனும் பெரும் விலங்கையொழிக்க வழி காட்டியாக இருந்த ஸ்ரீலஸ்ரீ சச்சிதானந்த சுவாமிகளுங் கைதியாயினர்.

* * * *

ஜயகுமாரரே! மெச்சினேன உமமுடைய துப்பறிந்திறனை. என்னை நீர் கேவலங்கள்ளனென மதிக்கின்றீர்.என்னுடைய அறிவிக்கு எட்டிய வரையில் நான் ஏழை மக்களுக்குப் பசியால் மெலிந்து, வியாதியால் வதங்கி வறுமையால் வாடும ஏழை மக்களுக்கு - பெருந் தொண்டாற்றியவன் - எனவே படுகின்றது. உலகம் என்னைக் கள்வனென மதிக்கும் என்பதற் கோரையமுமில்லை. ஆனல் என் அன்பரே! ஏழைகளின் துயரை உடனிருந்து உய்த்துணர்ந்த யான், அவர்களுடைய துயரைத் தீய வழியானும் இயன்ற வரையில் களைதலே கடவுள் தொண்டெனக் கருதினேன்; கருதுகின்றேன்; இனியுங் கருதுவேன் என்பது திண்ணம். செல்வந்தன் வேலை தவருது அறுசுவையுண்டியுண்டு குதிரைப் பந்தயங்களிலும் சூதாட்டத்திலேயும், ராவ்பகதூர் திவான்பகதூர் பட்டங்களிலேயும், நகர பரிபாலன சபை ஓட்டுகளிலேயும் பணத்தைச் சூரையிட்டு, அசமகிழ, ஒரு வேலை யுணவு மின்றி என் அருமை ஏழைச் சோதரர் வதங்கக் கண்டு மனங் கரைந்த நான் கள்வனுகி, செல்வந்தர்களின் செல்வத்தைத் திருடி, ஏழைகளுக்கு கன்னமிட்டதால் கைமாறு கருதாது, அத்தொண்டையே கடவுள் தொண்டாகக் கருதி, செய்ததால் எப்பாவமும் என்னை யணுகாதென்பது சத்தியம். வீண் பழிகளைப் பலர் மீது சுமத்தினேன் என்று நீர் எண்ணலாகும். பழிகளை சுமத்திய துண்மையெனினும் அவர்களுக்கு ஓர் இன்னலையும யான் கனவிலுங் கருதியறியேன். எனினும, உலகம்-பாழும் உலகம்-செல்வத்தையே தெய்வமெனப போற்றுந் தற்கால நவீன நாகரிக உலகம் - என் தொண்டின் மாண்பை ஓர்ந்துணரும் வன்மையற்று என்னை ஒரு கள்ளனுகவே மதிக்கும். ஆனல் உலகின் இழிமொழிக்கும் பழிமொழிக்கும் யான்

கலங்கவில்லே. பக்தியின் மாண்பை இனி தெடுத்தோதும் தூய பாமாலே களைப் புறக்கணித்து, தமிழெனில்தலே திருப்பும இத்தமிழுலகம், என்ஜேக் கள்வனெனக் கருதின் என்?

"சுவாமிகளே! கருத்து வேற்றுமை மலிநத தற்காலததில் உம்முடைய கடவுள் தொண்டு கள்ளத் தொண்டா கவே கருதப்படும்.

"என்தொண்டை, தேவாரத்தையுந் திருவாசகத்தையும சௌளுக்கிரையாக் கிய இந்தத தமிழ் மக்கள் எததகைய தொண்டாகக் கருதிஞலென்? பிறப்பு வேற்றுமையையும், மதவேற்றுமையை யும, போலி வெளிவேடக் கோலத்தை யுமே பெரிதும் நாடும் புல்லியர் என் ஜேக்கள்வளுக மதித்தாலென்? தூயளுக மதித்தாலென்? அன்பர் இலங்கும ஆண்டவஜே அன்பு நெறி நீதது அற நெறித் துறந்து, பிறப்புரிமை நெறியில் நெருங்க உன்னுங் கல்லாக் கயவரின் மொழிக்கும் ஒரு மதிப்புண்டோ?

ஜயகுமாரரே! என்னுடைய காலம் நெருங்கி விட்டது. இப்பாழுலகை நீத் துச் செல்லலே நன்றென என் மனம் நாடுகின்றது. உமக்கு வேண்டிய விஷ யங்களெல்லாம் அந்த இருப்புப் பெட் டிக்குள் இருக்கும் குறிப்புப் புத்தகத் திலிருந்து இனிது விளங்கும். என்ஜே நீர் கைதியாக்கிநியாயஸ்தலத்தில்நியாய வரம்புபற்றி கள்ளனுக்க என் மனம் இசையவில்லே. என்ஜே நீர் கையை உயர்த்துமாறு வேண்டிய போது என் னுடைய வாயில் யானிட்ட வஸ்துவை நீர் கவனிக்க வில்லே. அது ஒரு சிறு தோல் பை. அதில் நல்ல பாம்பின் விஷம் இருக்கிறது. உம்மிடம் என் னுடைய கருததை வெளியிட்டு உயிர் நீத்திடவே யான் இதுகாறும் அப்பை யை வாளா வாயில் அடக்கி நின்றேன். இனி என் வேலே முடிந்தது. உமக்கு நீண்ட ஆயுளே ஆண்டவன் அருள்க. அறுமுகஅப்பனே என்ஜே ஆட்கொண் டருள்."

அடுத்த நிமிடம் சுவாமிகளின் பற் கள் ஒன்ருெடொன்று அறுக்கப்படும் அரவங் கேட்டது. ஜயகுமாரன் தன்னு லியன்ற வரையில் அவருடைய பற் களேப் பிரிக்கமுயன்ருன்.காரியம் மிஞ்சி விட்டது. சுவாமிகளின் முகத்தில் புன் முறுவல் தாண்டவ மாடியது. அவரு டைய ஒளிபொருந்திய கண்கள் வெற்றி யொளியை வீசின. இரண்டு நிமிடங் கள் கழிந்தன. வதனம் மாறியது. பெரும் வேதஜேயை அவருடைய அழகிய வதனம் விளக்கியது. அவரு டைய கண்களின் ஒளிமங்கியது. உட லின் நிறம் நீல மெய்தியது. அடுத்த நிமிடம் ஸ்ரீலஸ்ரீ சச்சிதாநந்த சுவாமி கள் பிணமாளுர். என்னே! உலக வாழ்க்கையின் இயல்பு!

# நூதன வாழ்க்கை

[ஸ்ரீமத் - சிவத்தியானாநந்த மஹர்ஷி]

## முதலத்தியாயம்

உலகத்து வித்வான்கள் பலர் நவரஸம் நிரம்பிய காவியங்களும் வசன நூல்களும் இயற்றியுளர். யோகிகள் யோக சாஸ்திரங்கள் எழுதியுள்ளார்கள். கர்மடாகள் கருமங்களாற்றும் விதங்களைப் பல மதாநுசாரமாக வரைநதுள்ளார்கள். வேடிக்கைக் கதைகள் இந்தக் காலத்துக்கு ஓர் அழகுபோல் விளங்குகின்றன. இவருள் எவராவது மனிதனது ஜீவிய நெறியைப்பற்றி எல்லார்கும பயன்படுமாறு எழுதினவர்களில்லை. மதமென்றால் ஒரு சார்பாக நிற்கும நூல்கள் எண்ணிறந்தன. சரீரமென்றால் அது வைத்திய சாஸ்திரிகளின் வேலை என்பர். புத்தி என்றால் அது தத்துவ சாஸ்திரிகளின் சிறப்புக்காரணம் என்பர். எல்லார்க்கும் பயன்படக்கூடியதாய்-எல்லாரும் இலகுவில் உணர்ந்து அநுஷ்டிக்கவல்லதாய்-ஓரு சிலருக்குப் பயன்படாமற் போயினும ஒருவருக்கும் தீங்கு விளைவியாததாய் உள்ள ஒரு நூல் இயற்றவேண்டுமென்னும்நோக்கம் எனக்குநெடுநாளாக உண்டு. அத்தகைய நூல் சாதாரண அறிவாளிகளுக்கும பொது ஜனங்களுக்குமே உபயோகமாகவேண்டியதாய் அமையவேண்டுமென்பதும் என் எண்ணம். என்றாலும், சிறப்புக் கல்வியாளர்கள் பலர் தமது ஆயுட்காலம் முழுவதையும் கழித்துக் கண்ட உண்மைகளும் அந்நூலில் அமைந்திருக்கவேண்டுமென்பதும் என் கருத்தாகும். ஆனதுபற்றி இநநூலை லோகோபகாரமாக வெளியிடுகிறேன். இந்நூலைப் படிப்போர் தங்கள் அநுபவத்தில்பெற்ற வேறு சில உண்மைகளையும் இந்நூலில் உள்ளவைகளோடு கண்டுணரக்கூடும். அத்தகையோர் இந்நூலுக்கிடையிடையே வெற்றுத் தாள்களைக் கூட்டித் தங்கள் புத்தகங்களைக் கட்டிக்கொள்வார்களாயின், அவர்களுடைய அநுபவங்களையும் அவ்வெற்றுத் தாள்களில எழுதி ஞாபகப்படுததிககொள்ளல் கூடும. அதனால் அவாகள் தங்கள் வாழ்ககையை விருத்தி செய்துகொள்வதோடு, தமமோடு குணததிலும் இயற்கையிலும ஒதத பிறருக்கும் அவற்றைக காட்டிப் பயன்படுததல் கூடும். அத்தகையோர் தாங்களே அவற்றையும சேர்த்து ஒரு புத்தகமாக அசசிட்டு உதவலாம். அல்லது எனக்கு அனுப்பினும், யான் அவறறையும் அவரநுபவமாகக்கூட்டி அச்சிட்டு மனிதவாழ்க்கை, பின்னும் பிறழ்வின்றி நடககுமாறு உதவுவேன்.

மனிதன், பெரும்பாலும் மாதாபிதாக்களுடைய அறியாமையினாலும், தான் இருக்கும் சமூகக் கட்டுப்பாட்டினாலும், மதக் கட்டுப்பாட்டினாலும அநேக உண்மைகளை அறியமுடியாதவனாகிறான். பிதா, பிள்ளையைப் பெறறதும், அப்பிள்ளை 'தன் சொத்து' என்று பாவிககும் எண்ணத்தை முதலில் ஒழிககவேண்டும். ஏதோ சில ஸம்ஸ்காரங்களை (பூர்வ வாஸனைகளை) அடைநது ஓர் உயிர் உலகில் உடலெடுக்கிறது. அப்படிப் பிறககும் இடம் புண்ணிய விசேடமாகவும் இருக்கலாம்; பாப விசேடமாகவும் இருககலாம். புண்ணிய விசேடமாக விருநதால் பிதா மாதாக்களுடைய சுகாநுபவங்களுக்கு மட்டும் இப்பிள்ளை உரியவனேயன்றி அவர்களுடைய மற்ற அறிவுக்கும் பழக்க வழக்கங்களுக்கும் உரியன் ஆகான். பாப விசேடததாலெனின், அப் பிதா மாதாக்களது கஷ்டங்களைத் தானும் சிறிது காலம உடனிருந்து அநுபவிப்பதற்கேயன்றி அவர்களுடைய மூட நமபிக்கைகள், இழி செயல்கள் இவற்றிற்கு இப்புத்திரன் உரியனாகான். அதனால் அறிவாளிகளான தாய் தந்தையர் தமது

குழந்தைகளைச் சர்வாதிகாரத்தோடும் ஆளும் அடிமைகளாகவோ சொத்துக்களாகவோ மதிக்கமாட்டார்கள்; தங்களைப்போற் சேதனனாய்த் தமதுகுடியை விளக்கவந்த புத்திரனுக்கு, அல்லது புத்திரிக்கு உலக அறிவு ஞானம் முதலிய பல அநுபவங்களும் உண்டாகுமாறு பார்ப்பார்கள். அதனால், உலகம் விசால அறிவைப்படைத்து, மதமென்றும் ஜாதியென்றும் தேசவரம்பென்றும் கூறப்படும் பலவித உன்மத்தம் ஒழிந்த இக்காலத்திலாவது தாய் தந்தையர் தங்கள் மக்களை வளர்க்கும்போது தங்கள் வீட்டுத் தோட்டங்களில் பயிர்களை வளர்க்கும்போது தரும் சுவதந்திரத்தைக்கூடக் கொடாமல் ஒழிந்து நிற்பதை நிறுத்திக் கொள்வார்களாக. மரத்தை வளர்ப்பவன், அதற்கு வேண்டிய உணவையும் நீரையும் அளித்து அஃது வளரும் பூமியைப் பண்படுத்தி வைக்கிறானேயல்லது, அம்மரத்தின் தன்மையை மாற்ற முயல்வதில்லை. ஒரு சிலர் பீச்சஸை (Peaches) பிளமஸ் (Plums) ஆக்குவதுபோலச் செடிகளின் தன்மைகளையே மாற்றுகிறார்களே எனின், அது அச்செடிக்குச் செய்யும் துரோகமேயன்றி வேறல்ல. அதனால் அச்செடியின் உபயோகத்தையும், பலனையும் பெருக்குகிறார்களென்னில், அவர்கள் செய்யும் தொழில் அவர்களுடைய சுயலாபத்தைக் கருதிச் செய்வதேயொழிய செடியினது ஆத்மலாபத்தைக் கருதிச் செய்வதாகாது. அதனால் அவர்கள் செடிகளுக்கு விரோதிகளேயாகிறார்கள்.

உலகில் பிறக்கும் ஒவ்வொரு குழந்தையும் இளமை என்னும் ஐந்து வயது வரைத் தன் தாயினது கரத்தில் ஒப்புவிக்கப்படுகிறது. அக்குழந்தை, தன் தாயினது பாசமென்னும் உணர்ச்சியால் தூண்டப்பட்டு வளர்கிறது. அந்தக் காலத்து அது யாதும் செயலின்றி நிற்கிறதாயினும், அதற்குள்ள உயிரைக் காக்குமுணர்ச்சி அதனிடத்தினின்றும் விலகாமல் நிற்பதை யுணர்கிறோம். சர்க் முதலில் ஒருவர் ஒரு குழந்தைக்கு அளிப்பாராயின், அது அதனைத் தின்ன அஞ்சும்; பிறர் செய்வதைப் பார்த்து அவர்களுடைய அப்போதைய முகக் குறிகளையும் ஆய்ந்து தனக்குச் சரியெனப்பட்டாலன்றி எந்தப் புதுத்தொழிலையும் செய்யத் துணியாது. இவ்வளவு முன்ஜாக்கிரதையுள்ள குழந்தைக்கும் சுற்றுப்பக்கத்திலுள்ளவர்கள் காட்டும் சில தீய ஒழுக்கங்கள் பற்றிக் கொள்வதுண்டு. அதனாலேயே பெற்றோர்கள் குழந்தைகளைத் தெய்வங்களாக மதித்து, அதிக்கிரம நடையுள்ளவர்களை அக்குழந்தைகளின் கண்ணிற் படவொட்டாதபடி தடுக்கவேண்டும்; தாங்களே அதிக்கிரம நடையுள்ளவர்களாக விருந்தால் அவர்களது கண்ணினின்றும் அவற்றை மறைத்தே வைக்கவேண்டும். தற்காலம் தகப்பனார் குழந்தைகளுக் கெதிரில் சுருட்டு, சிகரெட், பீடி, முதலிய உபயோகித்தல், பொடி போடுதல், கள், சாராயம், வைன், விஸ்கி முதலிய லாகிரிப் பானங்களை அருந்துதல், அபின் கஞ்சா முதலிய மயக்க வஸ்துக்களை உண்ணுதல் முதலிய சில பல தகாத காரியங்களை மறைவாகச் செய்ய வேண்டுமென்பதை அறியாதிருப்பது எவ்வளவு மதியீனம்! இதுமட்டுமா? பலர் ஒருங்குகூடி நிற்கும் தெருக்களிலும், வண்டிகளிலும், மற்றுமஜனக்கூட்டமுள்ள விடங்களிலும் எவ்வளவு மனிதர்கள் தாங்கள்கெடுவதுமன்றிப்பிறரையும் கெடுக்கிறோமென்கிற எண்ணம் சற்றுமில்லாமல் இரண்டுகால் மாடுகளாக நடந்துகொள்ளுகிறார்கள். மேல் நாட்டாரது அறிவையும் ஆற்றலையும் படைக்க அறியாத ஒரு மகன், பன்னாடையைப்போல அவர்களது கெடுதல்களைக்கைக்கொண்டு நடப்பதுஎவ்வளவு பேதைமை! நிற்க, பெற்றோர்கள் எப்போதும் தாங்களேனும் பிறரேனும் செய்யும் அதிக்கிரமச் செயல்களைக் குழந்தைகள் கண்ணில் படாதபடி காக்கவேண்டியது முக்கிய தர்மமாகும். இப்படியிருக்கச், சில சமூகங்களிலும், குடும்பங்களிலும் இக்கெட்ட பழக்கங்

களைச் சிறு வயதிலேயே ஊட்டிப் பழக்குவதையே தர்மமாகக் கொண்டுள்ளாரென்றால், இவர்களை அசுரர், இராககதர், பேய்கள், மிருகங்களென்று கூறுவதில் வந்த பிசகு என்னே!

இனிக் குழந்தைப் பருவத்தில் கற்க முடியாமலிருந்த பல நற்பழக்கங்களைக் கற்பதற்காகவே அக்ஷராப்பியாசம்செய்து கொள்வது. ஒருசிலர் கல்வி கற்பது பொருள்சம்பாதிப்பதற்கென்றே கருதி ஒரு பட்சமான கல்வியையே கற்று உடற்பாதுகாப்பு முறைகளை யறியாமல் விடுகின்றனர். அதனால் அவர்கள் போலி வைத்தியர்கள் பலர் கையிற் சிக்குண்டு சுபாவமாக நோயை எதிர்த்துச் சுகத்தையே அமைத்துக்கொள்ளும் சக்தி வாய்ந்த தங்கள் தேக பலத்தையும் இழக்க நேருகிறது. ஒரு பெண், பரீட்சையில் முதலாகத் தேறிச் சில மாணவ ஊதியத்தை (Scholarship) யும் பெற்று வாழ்பவள் தன் தலை எல்லாம் எரும்பேனுமாக வைத்துக்கொண்டிருப்பாளாயின், அவளுடைய கல்வி எதற்காவது பயன்படுமா என்பதை யோசித்துப் பாருங்கள்! "இருவேறு உலகத்து இயற்கை; திருவேறு; தெள்ளியர் ஆதலும் வேறு" என்றார் திருவள்ளுவரும். அதனால் படிப்பின் முதற்பயன் பணமீட்டுதல் அல்லவென்றுணர்க. படிப்பின் பயன் தன் வாழ்க்கைக் காலத்து தேகம், மனம், ஆத்மா என்னும் மூன்றையும் சீர்பெற அமைத்துக்கொள்வதற்கான வழிகளைக் காட்டும் நூல்களைக் கற்றறிவதேயாம். அத்தகைய நூல்கள் சமுத்திரம்போல் பரந்து கிடப்பதால் அவற்றின் சாராம்சத்தை இந்நூலில் எனது அநுபவத்திற்கொத்த வழியில் தருவதோடு அத்தகைய நூல்களின் பெயரையும் தந்து அவற்றை இந்நூல் கற்போர் கற்குமாறும் தூண்டுவேன்.

---

# கிராம ஊழியம்

[திரு. ஸி. ஏ. பெருமாள்]

## உதவிகளும் கருத்துக்களும் உடன் தேவை

"கிராமங்களில் வேலை செய்யுங்கள்; கிராமத்தார்களுக்கு உதவி தேடுங்கள்" எனத் தேசத்தலைவர்களும் அறிஞர் பெருமக்களும் அவ்வப்போது தொண்டை வெடிக்க முழங்கினார்கள். மகாநாடுகளிலும் சங்கங்களிலும் கிராம வேலையைப் பற்றி ஒவ்வோர் காலத்தும் பேசப்பட்டது. பத்திரிகைகளும் புத்தகப் பிரசுரங்களும் கிராமங்களின் எளிய நிலையைப் பற்றி மிக விரிவாக விளக்கி வந்தன. என்றாலும், இந்தியக் கிராமங்களின் நிலை ஓரளவு கூடச் சீர்திருந்தி யிருப்பதாகத் தெரியவில்லை. எத்தனையோ ஆயிரக்கணக்கான கிராமங்கள் அருவருப்பும் ஆபாசமும் நிறைந்து விளங்குகின்றன. மிருகங்கள் கூட வசிக்கத்தகாத குடில்களில் இலட்சம் இலட்சமாக மக்கள் கிடந்துழல்கின்றனர். வறுமையும் பிணியும் அம்மக்களை வாட்டிவதைக்கின்றது; குடியும் கூத்தும் அவர்களை அறிவற்ற பேதையர்களாக்கி வருகின்றன; வேலையின்றி வீண்பொழுது போக்கி, அற்பவிஷயங்களிற் கூட ஒற்றுமையின்றி ஓயாத சண்டை சச்சரவுக்காளாகித் தவிக்கின்றனர். அந்தோ! அவர்களது வறுமைத் துன்பம், வன் துயர்வாழ்வு, அறிவில்லாக் கொடுமை கொடிது! கொடிது!!

இந்நிலைமைக் குள்ளாகித் தவிப்போரிலும் தென்னிந்தியாவிலுள்ள கிராமவாசிகள்பால், 'உயர்வகுப்பார்கள்' எனக்

கருதப்படுகிறவர்கள் அணுவளவு இரக்கமோ, அநுதாபமோ கொள்ளாது, அவர்களை மிருகங்களினும் இழிவுபடுத்திப் பலவாறு இம்சித்து வந்ததன் பலனால், அவ்வேழை மக்கள் தற்கால உலகில் அரைவயிறறுக் கஞ்சியையே தமது குறிக்கோளாகக் கொண்டு மனம் போன போக்கில் வாழ்ந்து வருகின்றனர். இவர்களை அடுத்து இவர்களுக்குப் போதிய கல்வியும் உயரிய கருத்தும, உண்மை நெறியும், ஆக்கவுணர்வும அளித்து கைதூக்கி விடுவதற்குப் போதுமான சமாஜங்களோ சங்கங்களோ தொண்டர் கூட்டங்களோ நம்மிடையில் காணப்படுவதேயில்லை. உண்மையான உதவி கிடைக்க மார்க்கமின்றி, ஊக்கம பெறவும வழியின்றி எத்தனையோ கிராமங்கள் விவரிக்க முடியாத அவ்வளவு கேவல நிலையில் ஆயிரமாயிரமாக நம்மத்தியில் கிடக்கின்றன.

இவைகளில் இந்தியாவின் தென்கோடியிலிருக்கும் நூற்றுக் கணக்கான குக்கிராமங்களில் வேலை செய்து ஆம் மக்களுக்குத் தம்மாலியன்ற உதவி செய்வதின் பொருட்டு அன்பர்கள் சிலர் மிகுந்த ஆர்வத்தோடு காத்திருக்கின்றனர். சமூகத்தினின்றும் ஒதுக்கப்பட்டுச் சகல விதமான வாழ்க்கை இன்பங்களையும் இழந்து தவிக்கும் இவர்களுக்குப் பொது அறிவு அளிக்கவும் சுகாதாரககல்வி ஊட்டவும், கூட்டுறவின் பெருமையை விளக்கவும், குடிசைக் கைத்தொழிலைப் போதிக்கவும் சுதேசியத்தைப் போதியவாறு எடுத்துரைக்கவும் செய்யவேண்டு மென்பது இந்நண்பர்களின் எண்ணமாகும். பொருளுதவியும் போதிய சாவகாசமும் தகுந்த விதம் கிடைக்கப் பெறுமாயின் கிராமங்கள்தோறும் சிறுசிறு சங்கங்களையும் வாசிபபுச்சாலைகளையும் அமைத்துப் பஞ்சாயத் மூலமாக அவர்களின் கூட்டுறவையும் வளர்த்து, சாதி சமய பேத மற்று, சுத்த சன்மார்க்க சமத்துவ சகோதரர்களாய்ச் சுதந்திர வாழ்வு நடத்தி இனிது வாழ்ந்து வருவதற்குக் கற்றதான பற்பல வழிகளையும் அவ்வப்போது எடுத்துரைக்க வேண்டுமென்பதும் இந்நண்பர்களது பெருநோக்கமாகும்.

ஆதலால், இப்பே ரெண்ணங்களை நடைமுறையில் நடத்திக் காண்பிக்கும் பொருட்டு அவாவுடன் காத்திருக்கும் அன்பர்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் அளித்து உதவி செய்ய வேண்டுவது தேசப்பற்றிலும் நாட்டுப் பற்றிலும் ஆர்வமுடைய ஒவ்வோர் இந்தியரின் கடமை யாகுமெனத் தெரிவித்துக் கொள்கிறோம. எனவே, கிராமத் தொண்டில் ஆர்வமுடைய பெரியோர்களே! தலைவர்களே! அறிஞர்களே! ஆசிரியர்களே! செல்வந்தர்களே! பரோபகாரிகளே! தேசாபிமானிகளே! வாலிபர்களே! உங்களை நாம் இவ்வறிக்கையின் மூலம் வேண்டுவது யாதெனில், இவ்வரிய சந்தர்ப்பத்தை இழந்து விடாது நீங்கள் ஒவ்வொருவரும் கிராமத் தொண்டு பற்றிக் கொண்டிருக்கும் அரிய நோக்கங்களையும் உயரிய கருத்துக்களையும் கடிதங்கள் மூலமாக அடியில் குறிப்பிட்டிருக்கும் விலாசத்தாருக்குத்தெரிவித்துக் கூடியவிரைவில் ஒரு மகத்தான கிராம புனருத்தாரண சங்கத்தை அமைப்பதற்கு உதவி புரிய முன் வருவீர்களென நம்புகிறோம். ஏற்கனவே நாட்டின் பல பாகங்களில் கிராம வேலையிலீடுபட்டுள்ள சங்கத்தார்களும் தங்கள் வேலையின் அளவையும் இனிச் செய்ய விருக்கும் தொண்டுகளையும் பற்றி அறிவிப்பார்களென ஆவலோடு எதிர் பார்க்கிறோம். தங்கள் உயரிய கருத்துக்களை அடியில் காணும் விலாசத்தாருக்கு எழுதி அறிவிப்பீர்களாக.

**"சமத்துவ சகோதர சங்கம்,"**
கிருஷ்ணன் கோவில், நாகர்கோவில்.

# தொல்காப்பியர்

[வித்வசிகாமணி. ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளையவர்கள்]

காப்பியக்குடி யென்பது சிலப்பதிகாரம் முதலிய சங்கம் மருவிய நூல்களுள்ளும் இளம்பூரணர் முதலிய ஆசிரியர் இயற்றிய உரைகளுள்ளும் காணப்படுமோர் பழம்பதி; பழைய புகார் நகரத்திற்கு ஏறக்குறைய ஒரு காவத தூரத்தில் அஃது இருத்தல் வேண்டும் என்பதைச் சங்கநூல்களால் யலாம். அந்நூல்களால் இககாப்பியக்குடி தெய்வத்தன்மை பொருந்தியது என்று ஏத்திக் கூறப்படுகின்றது. சீகாழி தாலுகா அரசூர் (S.I.R) வட்டம் மதுராவைச் சேர்ந்த பிடாகையாய் இருப்பது இந்தக் காப்பியக்குடி. இந்தப் பிடாகையின் நததமும் நன்செய் புன்செய் நிலங்களும் பண்டைக் கோவிலும் அதைச் சேர்ந்த திருக்குளம் முதலியனவும், காழிப் பெருநிலக்கிழவர் திரு. கி. சிதம்பரநாத முதலியார் அவர்கட்குச் சொந்தமானவை. இப்பழைய கோவில் தற்போது பாழாகி இருந்த இடம் தெரியாம லிருக்கின்றதாயினும் இதன்கண் மூன்று சிவலிங்கங்கள் இன்றும் காணப்படுகின்றன. இக்கோவிலைப் புதுப்பிக்கத திரு. முதலியார் அவர்கள் நோக்கங் கொண்டிருப்பது பெரிதும போற்றற் குரியதாம.

இற்றைக்கு ஐம்பது ஆண்டுகட்கு முன் இத்தலத்தைத் தரிசிக்க எண்ணங் கொண்டு, சிலர் அங்குச் சென்றிருக்கையில், அவ்வாலயத்திற்கு மேற்றிசையில், எக்கல் முதலியார் குடும்பத்திரான வயது முதிர்ந்த அண்ணியார் ஒருவர் அக்கோவிலைப் பற்றிய இரண்டொரு சிறப்பியல்புகளை அவர்களுக்குத் தெரிவித்தனர். அக்கோவிலின் தென்புறத்தில் இப்போதுள்ள சிவலிங்கத்தின் பக்கலில் "தொல்காப்பியர்" திருவுருவின் கற்சிலை யிருந்தது. இச்சிலை சின்ன முனிவர் என்றும், இவர்தம் குருவாகிய பெரிய முனிவர் சீகாழியில் இருக்கிறார் என்றும், இந்தச் சின்ன முனிவர் பெரிய முனிவரின் மனைவியாரை அழைத்து வருங்காலததுக் குருவின் ஆணையை மீறி ஒரு கோலைப் பற்றச் செய்து அழைத்து வந்த படியால் பெரிய முனிவரின் ஆணையால் இங்கேயே (காப்பியக் குடியிலேயே) தடைபட்டு நின்று இப்பழைய ஆச்சிரமத்தில் சிவலிங்கத்தைத் தாபித்துப் பூசதது வருகனறா எனறும அவ்வண்ணியார் கூறினார்கள். இக்கூற்றை ஆராய்ந்தால் இந்தச் சிறு முனியே திரணபிந்து எனனும் தொல்காப்பியனார் என்றும், பெருமுனிவர் அகத்தியர் என்றும், அண்ணியார் கூறிய வரலாறு ஆக்கிநேயம் முதலிய புராணங்களிலும், நச்சினார்க்கினியார் உரையிலும் கண்ட வரலாற்றுடன் ஒத்து நடப்ப தொன்றென்று விளங்குமன்றோ?

சோழநாட்டில் கொள்ளிடநதி முதல் அரிசிலாறு வரை உள்ள கீழ்ப்பக்கத்துப் பெரு வெளிகளில் எங்கு நோக்கினும் வைதிக முனிவர் திருவுருவங்களும, பௌதத சமண முனிவர்களின் திருப்பள்ளிகளும் எண்ணிறந்தவை காணப்படுகின்றன. இந்நாட்டில் இவ்வைதிக முனிவர் வைதிக சமயங்களையும், பௌத்த சமண முனிவர் அவ்வச் சமயங்களையும் நிறுவியவர்கள் ஆவார்கள். இந்நாட்டுச் சைவத்திருக்கோயிற் புராணங்களை நோக்குங்கால் அவர்கள் அகததியர், துருவசு, ததீசி, கண்ணுவர், பார்க்கவர், திரணபிந்து, காச்யபர் முதலியோர் ஆவர். காச்யபர் என்றவர் வைதிக முனிவர். பார்க்கவர் என்பவரும் அன்னரே. அவர் குடியிற் பிறநதவர் வாழ்ந்த இடமே காப்பியக்குடி. மற்றொரு காச்யபர் பௌத்த மதாசாரியார். இவர் தெளிச்சேரி, பொன்பற்றி முதலிய இடங்களில்

வாழ்ந்து காச்யபக் குடியில் (காசாக்குடி) பெரிய மடங்களை அமைத்திருந்தார். அம்மடங்கள் வீரசோழன் காலம் வரை இருந்து பின்னர்ச் சைவாதீனத்திற் குட்பட்டு, இப்பொழுது க்ஷீண தசையில் இருக்கின்றன. ஜமதக்கினி, ரேணுகை இவரால் தோன்றின ஜாம தங்கிகளாகிய தன்னுவர், அநுமர், விச்சுவாவசு, பரசுராமர், திரணபிந்து என்பாரும், பிருகுவிற்கும் கியாதிக்கும் பிறந்த பார்க்கவி (லக்ஷ்மி) பார்க்கவர் (காவ்விய கோத்திரத்தார்) என்பாரும் இப்பதிகளில் சிறப்புற்றிருந்தனர் என்பதற்குப் பல புராணவரலாறுகள் உள. காழித் திருப்பிரமபுரக் கோவிலில் நின்ற திருக்கோலமாக, பெரிய திருவுருவத்தோடு சிறு முனிவரான திரணதூமாக்நியான தொல் காப்பியருங் காணப்பட்டனர். இவர் திருமேனிகளுள் மேற் காட்டிய தொல்காப்பியர் திருவுருவமும் சீகாழியில் சண்பைப் பதியில் (அதாவது திருஞான சம்பந்தராலயத்தில்) அமைக்கப் பட்டிருந்த கிருட்டினர் சிலையும் மங்கையர்க்கரசியார் திருவுருவமும், சாஸனங்கள், புராணங்கள், ஐதிகங்கள் வாயிலாக இப்போது காணப்படுகின்றனவே யன்றி சிலையுருவங்களாக மறைந்திருக்கின்றன. பெருந் திருவினராய சைவமடாதிபதிகளும், சீகாழி முதலியார் அவர்களும், கடக்கைவிநாயகநல்லூர்ப் பிள்ளையவர்களும், பிறரும் நன்முயற்சி செய்து, இப்பழைய ஆலயங்களையும், இவற்றிற்குரிய திருவுருவச் சிலைகளையும் புதுப்பித்துத் திருமயிலாடி, வைணவபுரி, காப்பியக்குடி, திருச்சிற்றம்பலம் முதலிய திருத்தலங்களின் மான்மியங்களையும் வெளியிட்டருள்வார்களாக.

—“சே - வி”

# இடியேறு

## அரங்கசாமி ஐயங்கார் பிரிவு

“ஹிந்து” ஆசிரியர் ஏ. அரங்கசாமி ஐயங்கார் அகாலமரண மடைந்தமை குறித்து வருந்துகிறோம். தமிழ்நாட்டில் பிறந்து, பொதுவாக உலகிலும், சிறப்பாக இந்தியாவிலும் மணிவிளக்காக ஒளிசெய்தவருள் திரு-ஐயங்காரும் ஒருவர். அவர், “ஹிந்து”, “சுதேசமித்திரன்” என்னும் இரண்டு பத்திரிகைகளின் செவிலித்தாயென விளங்கியவர். ஏ. அரங்கசாமி ஐயங்கார் பத்திரிகாசிரியருலகில் மணியெனத் திகழ்ந்தவர்; சிறந்த அரசியல் ஞானி; தேசபக்தர். திரு-ஐயங்கார் நியாயவரம்புக் கிளர்ச்சியிலேயே பற்றுக்கொண்டவர். இதனால் அவர் அடிக்கடி ஒத்துழையா இயக்கத்துடன் மாறுபட்டதுண்டு. இதற்குக் காரணமாக நின்றது அவர்தம சிறந்த அரசியல் ஞானமேயாகும். திரு-ஐயங்கார், தேசபந்து தாசருக்கும் பண்டிதமோதிலால் நேருவுக்கும் தக்க சமயத்தில ஆலோசனைகூறும் அமைச்சராகவும் இருநதார். அவர், இந்திய சட்டசபையில் அரசியல் ஞானிகள் வியக்கு முறையில் வாதஞ் செய்தவர். பலதிற ஆற்றல் வாய்க்கப்பெற்ற ஒருவர் அகால மரணமடைந்ததால், உலகுக்கும் நாட்டுக்கும் பெருநஷ்டம் விளைந்துவிட்டது. உலகம் ஒரு பத்திரிகாசிரியரை இழந்தது; இந்தியா ஓர் அரசியல் ஞானியை இழந்தது; தமிழ்த் தாய் ஓர் இனிய தேசபக்தரை இழந்தாள். பலதிற வாய்ப்புக்கள் நிரம்பப்பெற்ற அரங்கசாமி ஐயங்கார் போன்றாரைத் தமிழ்நாடு எளிதில் பெறுதல் அரிது; அரிது. இத்தகைய ஒருவரை இழந்து துயருறும் அவர்தங் குடும்பத்தார்க்கு நமது அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம். அரங்கசாமி ஐயங்காரின் ஆருயிர், ஆண்டவன் அருளொளியில் மூழ்கி அமைதியுறுவதாக.

### " சிவநேசன் "

இப்பெயர் வாய்ந்த மாதத்தமிழ்ப் பத்திரிகை ஒன்று நமது பார்வைக்கு வந்தது. இது, யாழ்ப் பாணம் தெல் லிப்பழை கிழக்குச் சைவ வாலிபர் சங்கத்தின் வெளியீடு. "சிவநேச"னில் அரிய தமிழ்க் கட்டுரைகளும ஆங்கிலக் கட்டுரைகளும் மலிந்து கிடத்தல் மகிழ்ச்சி யூட்டுகிறது. தமிழுலகிற்கும் சைவ உலகிற்கும் நலம் செய்யுங் கருத் துடன் வெளிவரும் ஈழைச் "சிவநேச" னுக்கு நமது வாழ்த்து உரியதாக.

### மண்ணியல் சிறு தேர்

இசசிரிய நூல் "மிருச்சகடிகம்" என் னும் வடமொழி நாடக நூலின் மொழி பெயர்ப்பாகும. இதன் மொழிபெயர்ப் பாளர் பண்டிதமணி - மு. கதிரேசச் செட்டியார் அவர்கள். வடமொழியி னின்றும் நூல்களைத் தமிழில் பெயர்த் தெழுதுவதில் திரு. செட்டியார் பேர் பெற்றவர் என்பது தமிழுலகம் அறிந்த தொன்று. ஆகவே, திரு.செட்டியாரின் மொழிபெயர்ப்புத் திறத்தைப் பற்றி விரித்துக் கூறுவது மிகையாகும். பண் டிதமணியின் வடமொழிப் புலமைக் கும்,தென்மொழிப் புலமைக்கும் "மண் ணியல் சிறுதேர்" ஓர் எடுத்துக் காட் டாக இலங்குகிறது. ஒரு மொழியி னின்றும் மற்றொரு மொழியில் நூல் களைப் பெயர்த்தெழுதலின் அருமைப் பாடு அத்துறையில ஈடுபட்டார்க்கே தெரியும். அதினும் "மிருச்சகடிகம்" போன்ற நூலை மொழிபெயர்த்தல் அருமை; மிக அருமை. திரு. செட்டி யார் தமிழ்த்தாய்க்குச் சிறந்த தொண் டாற்றியது போற்றற்குரியது. மொழி பெயர்ப்பில் ஈடுபட்ட வேளையில் திரு. செட்டியார் வடமொழித் தந்தைக்கும் தென்மொழித் தாய்க்கும் உகந்த சேயாக வேண்டி முயன்றிருத்தல் நூல் வாயிலாகத் தெரிகிறது. அம்முயற்சி யில் ஆசிரியர் ஒல்லும்வகை வெற்றி பெற்றே யிருக்கிறார். நூன்முகப்பில் ஐவர் சிறப்புப் பாயிரமும், ஒருவர் அணிந்துரையும, இருவர் மதிப்புரை யும், இன்னொருவர் ஆராய்ச்சி மதிப் புரையும் உடலுறுப்பென நின்று அழகு செய்கின்றன. "மண்ணியல் சிறுதேர்" வாயிலாகப் பண்டித மணியார் தமிழ் நாடகக் காவிய உலகுக்கு ஒருவிதப் புத துயிர் அளித்தார் என்றே கூறலாம. திரு. செட்டியார் முயற்சிக்கு நமது நன்றி உரியதாக. விலை ரூபா இரண்டே கால்; கிடைக்குமிடம:—தலைவர், சன் மார்கக சபை, மேலைச்சிவபுரி.

### எனது நிலையும் "நவசக்தி"யும்

" நவசக்தி " வாரப்பதிப்பு, ஏறக் குறைய பத்தாண்டு, நேரிய முறையில் நடந்துவந்ததைநேயர்கள் அறிவார்கள். உப்புச் சத்தியாக்கிரகத்தின்போது,ஈடு காணங் கேட்கப்பட்ட காரணததால், "நவசக்தி" வெளியீட்டை நிறுத்தல் நேர்ந்தது. அதனல் விளைந்த கஷ்டநஷ் டங்கள்பல. அவை,முன்னர் இருமுறை விளக்கப்பட்டன.

" நவசக்தி " வாரப்பதிப்பு நிறுத் தப் பட்ட நேரத்தில், பெரியபுராணச் சஞ்சிகை வெளியீடு தொடங்கப் பட் டது. பின்னே "நவசக்தி" மாதப் பதிப்பாக மாறறப்பட்டு ஒருவாறு நடத்தப்பட்டு வந்தது. "பெரிய புராண வேலை முற்றுப்பெற்றதும் 'நவ சக்தி',யைப பழையபடி நடாத்த முயற் சிசெய்யப்படும்"என்று சென்ற ஆண்டு முடிவில் அறிக்கை செய்யப்பட்டது. பெரியபுராண வேலை ஏறக்குறைய முற் றுப்பெற்று வருகிறது.

இசசமயத்தில் - " நவசக்தி "யைப் பழையபடி நடாத்த எண்ணிக்கொண் டிருந்த வேளையில் - எனது உடலின் மெலிவும நலிவும் என்னைத் திடீரெனப் படுக்கையில் கிடத்திவிட்டன.

ஏறக்குறைய ஐந்தாண்டுகளாக எனது உடல் நலன் குலைந்து கொண்டே வந்தது நண்பர்கட்குத் தெரியும். 'பெருங்கூட்டங்களில் பேசு வதை முற்றிலும் நிறுத்திக் கொள்

ளவேண்டும்' என்று மருத்துவ நிபுணர்கள் கூறினார்கள். அவர்கள் கட்டளைப்படி பிரசாரத் தொண்டை நிறுத்திக்கொள்ள யான் முயன்றதுண்டு. அம்முயற்சிக்கு, அன்பர் திருக்கூட்டங்களால் - பெரிதும் சமயச் சபைகளால் - இடையூறு நிகழ்ந்தே வந்தது. படுக்கையிலுள்ள இவ்வேளையிலும் அழைப்புக் கடிதங்கள் வந்து குவிந்து கொண்டே இருக்கின்றன.

இப்பொழுது யான் மானத உலகில் வாழும் நிலையிலிருக்கிறேன். உடல் நலனுற இன்னுஞ் சிலகாலமாகும். 'பின்னரும் சிலகாலம் ஓய்வுபெற்று அமைதியில இருப்பதே நல்லது' என்று மருத்துவ நிபுணர்கள் கூறுகின்றார்கள்.

இந்நிலையில் "நவசக்தி"யைப் பழைய படி தொடங்கி நடாத்த முனைதல் நலமா என்னுஞ் சிந்தனை தோன்றியிருக்கிறது. "நவசக்தி"யின் தற்கால நடைமுறையும எனக்குப்பிடிக்கவில்லை. தமிழ் நாட்டைப் புதிய முறையில் தட்டி எழுப்பவேண்டுமென்றே எனது உள்ளங் கிளர்ந்தெழுகிறது. அவ்வுள்ளக் கிளர்ச்சிக்கு ஏற்ற உடல் வளந்தேவை. "உடல் வளமுறும்; சேவை செய்யலாம்" என்னும நம்பிக்கை மட்டும இன்னும் என்னைவிட்டகலவில்லை. சிலகாலம் அமைதிமிகுந்த ஓரிடத்தில் தங்கிக் காடு மலைகளுடன் உறவு கொண்டால், எனது உடல் நிலை 'ம எனனும் உறு எனக்கு உண்டு.

அமைதியில் புகுதற்கு யான் அடிக்கடி முயல்வதுண்டு. அம்முயற்சி நேயர்களால் குலைந்து விடுவது வழக்கம். தயை தாட்சண்யம் எனக்கு அதிகம். தற்போது படுக்கையில் கிடக்க நேர்ந்துள்ளமையால், எவர் அழைப்புக்கும் இணங்க இயலாமை இயற்கையாகவே ஏற்பட்டுவிட்டது. இத் தருணத்தில் எனது நீண்டகால நோக்கம் நிறைவேறுதல் கூடும் என்று எண்ணுகிறேன். இஃது எனது எண்ணம். ஆண்டவன் திருவுள்ளம் எப்படியோ அறிகிலேன்.

"அன்றே என்றன் ஆவியும்
உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னை
ஆட்கொண்டபோதேகொண்டிலையோ
இன்றோர் இடையூறு எனக்குண்டோ
எண்டோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழை செய்வாய்
நானோ இதற்கு நாயகமே"

"நவசக்தி"யின் எதிர்கால நிலையைப் பற்றி இப்பொழுது ஒன்றுஞ் சொல்வதற்கில்லை. இரண்டொரு மாதம் "நவசக்தி" வெளியீட்டை நிறுத்த உத்தேசித்திருக்கிறேன். பின்னை நிலைமையை யொட்டி, எவ்வழியிலாதல் ஒருவித முடிவுசெய்யத் துணிவுகொண்டுள்ளேன். சந்தா நேயர்கள் மன்னிப்பார்களாக.

திரு. வி. க.

நவசக்தி

# பெரிய புராணம்

## மூலமும்

## அரும்பத விசேட ஆராய்ச்சிக் குறிப்புரையும்

## வசனமும்

**சஞ்சிகை சஞ்சிகையாக வெளிவருகின்றன**

**ஏழை மக்கட்கு நல்ல சந்தர்ப்பம் !**

*சேக்கிழார் பெருமான் திருவாய் மலர்ந்தருளிய திருத்தொண்டர் புராண மென்னும் பெரிய புராணத்தைப் பற்றித் தமிழ் மக்கட்கு விரித்துக் கூற வேண்டுவதில்லை. பெரியபுராண மெங்கும் பத்திச் சுவை நனி சொட்டிக் கொண் டிருத்தல வெள்ளிடைமலை. தன்னை ஓதுவோரையும கேட்போரை யும் அன்புக் கடலில் திளைப்பிக்கும் பேராற்றல் வாய்ந்தது பெரிய புராணம். கடவுள் அன்பு, ஆன்ம நேயம், திருத்தொண்டு, சீர்திருத்தம, சொல் நயம், பொருள் நயம், தமிழின்பம் முதலியவற்றிற்குப் பெரிய புராணம் ஒரு வைப்பு என்று கூறல் மிகையாகாது. சிறந்த தமிழ்க் காவியங்களுள் பெரிய புராணமும் ஒன்று என்று சுருங்கச் சொல்லலாம்.*

*இத்தகைய அரும்பெரு நூலின்* **மூலமும்,** *"நவசக்தி" ஆசிரியர் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் எழுதிய* **அரும்பத விசேட ஆராய்ச்சிக் குறிப்புரை யும் வசனமும்,** *அன்பர்கள் எளிதில் வாங்கிப் பயன்பெறும் பொருட்டு மாதந்தோறும் சஞ்சிகை உருவில் வெளிப்படுத்தப் படுகின்றன.*

*ஓலைப் பிரதிகளைக்கொண்டு மூலம ஒப்பு நோக்கப்படுகிறது. பொருந் திய பாடபேதங்கள் குறிக்கப்படுகின்றன. 25 ஆண்டுகளுக்குமுன் வெளி வந்த பதிப்புக்கும் இப்பதிப்புக்கும் பலதிற வேற்றுமைகளுண்டு. குறிப் புரை, பதவுரை போலத் துணைசெய்யும். இக்காலத்துக்கு இன்றியமையாத ஆராய்ச்சி விசேடங்களும் பொறிககப்படுகின்றன.*

*சுமார் 25 சஞ்சிகையில் புத்தகம் முடிவு பெறலாம். பின் விலை புத்த கம் ஒன்று 7 ரூபாய்க்கு மேலாகும்.*

**அன்பர்கள் உடனே சந்தாதாரர்களாகச் சேர்வார்களாக.**

*சந்தா விவரம்*

| | | |
|---|---|---|
| புத்தக முழுவதற்கும் முன்பணம்—சென்னை | | ரூபா 5. |
| ,, ,, ,, | வெளியூர்—தபாற் செலவுடன் | ,, 6. |

மாதச் சஞ்சிகை ஒன்றன் விலை அணா 4—சென்னைக்குமட்டும்.

6 *சந்தாதாரர்களைச் சேர்த்தனுப்புவோருக்கு ஒரு சஞ்சிகை அதிகமாக அனுப்பப்படும்.*

*காரியஸ்தர்* :—முருகவேள் புத்தகசாலை,
12, *கணபதி முதலி தெரு, இராயப்பேட்டை, சென்னை.*